ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

தெய்வீகம் பொருந்திய
கவிச்சக்ரவர்த்தியாகிய

## கம்பநாட்டாழ்வாரருளிச்செய்தது.

முதலாவது

# பாலகாண்டம்.

இது
சென்னை இராஜதானி வித்தியாசாலை
தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய
இயற்றமிழாசிரியர்
கோ - இராஜகோபால பிள்ளையவர்கள்
மாணாக்கரான, மஹாவித்துவான்

## திருமயிலை - சண்முகம் பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டதை

இரண்டாம் பதிப்பு.




பிருங்கிமாநகரம்.
வேம்புலிமுதலியாரவர்கள் குமாரர்

## நமசிவாயமுதலியாரவர்களால்

தமது
சென்னை - சூளை,
நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையில்
பதிப்பிக்கப்பட்டது.

1913.



ஸ்ரீ

ஸ்ரீமதேராமாநுஜாயநம:

    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

# ஸ்ரீ மத் கம் ப ரா மா ய ண ம்.

# பா ல கா ண் ட ம்.

அபியுக்தர் செய்தருளிய

## த னி ய ன் க ள்.

நேரிசைவெண்பா.

நாராதத்தினுள்ள தமிழ்க் * குற்றமெல்லாம்
அராவுமரமாயிற்றன்றே இராவணன்மேல்
அம்புநாட்டாழ்வா னடிபணியுமாதித்தன்
கம்பநாட்டாழ்வான் கவி. (௧)

நேரிசைக் கட்டளைக்கலித்துறை.

வாழ்வார்திருவெண்ணெய்நல்லூர்ச்சடையப்பன்வாழ்த்துபெறத்
தாழ்வாருயரப்புலவோரகவிருடானகலப்
போழ்வார்கதிரினுதித்ததெய்வப்புலமைக்கம்பநாட்
டாழ்வார்பதத்தைச்சிந்திப்பவர்க்கியாதுமரியதன்றே. (௨)

விருத்தங்கள்.

அம்பரவணிசடையானயன்முதல்
உம்பரான்முனிவரால்யோகராலுயர்
இம்பராற்பிணிக்கருமிராமவேழஞ்சேர்
கம்பராம்புலவரைக்கருத்திருத்துவாம். (௩)

வேறு.

சம்பநாடன்னுமைசெவிசாற்றுபூங்
கொம்பனுடன்கொழுநனிராமப்பேர்
பம்பநாடழைக்குங்கதைபாச்செய்த
கம்பநாடன்கழறலையிற்கொள்வாம். (௪)

* குற்றம்ஈண்டு சொற்சோர்வு பொருட்சோர்வு.

வேறு.

நாரணன்விளையாட்டெல்லாநாரதமுனிவன்கூற
ஆரணக்கவிதைசெய்தானறிந்த * வான்மீகியென்பான்
சீரணிசோழநாட்டுத்திருவழுந்தூருள்வாழ்வோன்
காரணக்கொடையான்கம்பன் தமிழினாற்கவிசெய்தானே. (ரு)

⁑ அம்பிலே ¶ சிலையைநாட்டியமரர்க்கன்றமுதமீந்த
தம்பிரானென்னத்தானுந்தமிழிலேதாலைநாட்டிக்
கம்பநாடுடையவள்ளல்கவிச்சக்கிரவர்த்திபார்மேல்
நம்புபாமாலையாலேநாருக்கின்றமுதமீந்தான். (சு)

எண்ணியசகாத்தமெண்ணூற்றேழின்மேற்சடையன்வாழ்வு
நண்ணியவெண்ணெய்நல்லூர் தன்னிலேகம்பநாடன்
பண்ணியவிராமகாதைபங்குனியத்தநாளிற்
கண்ணியவரங்கர்முன்னேகவியரங்கேற்றினனே. (எ)

வேறு.

இம்பர்நாட்டிற்செல்வமெல்லாமெய்தியரசாண்டிருந்தாலும்
உம்பர்நாட்டிற்கற்பகக்காவோங்குநீழலிருந்தாலும்
செம்பொன்மேருவனையபுயத்திறல்சேரிராமன்றிருக்கதையிற்
கம்பநாடன்கவிதையிற்போற்கற்றோர்க்கிதயங்களியாதே. (அ)

வேறு.

o கழுந்தராயுனகழல்பணியாதவர்கதிர்மணிமுடிமீதே
அழுந்தவாளிகள்தொடுசிலைராகவவபிநவகவிநாதன்
விழுந்தநாயிறுவெழுவதன்முன்மறைவேதியருடனாய்ந்
தெழுந்தநாயிறுவிழுவதன்முன்கவிபாடினனெழுநூறே. (கூ)

பயன்.

‡ நாடியபொருள்கைகூடும்ஞானமும்புகழுமுண்டாம்
வீடியல்வழியதாக்கும்வேரியங்கமலைநோக்கும்
நீடியவரக்கர்சேனைநீறுபட்டழியவாகை
சூடியசிலையிராமன்றோள்வலிகூறுவோர்க்கே. (க)

வேறு.

நன்மையுஞ்செல்வமுநாளுநல்குமே
தின்மையும்பாவமுஞ்சிதைந்துதேயுமே

---

* வல்மீகம் - புற்று புற்றிலிருந்து கேட்டிருந்தனன் ஆதலானும் புற்றிலிருந்து வெளிப்பட்டானாகலானும் வால்மீகியெனக் காரணக்குறியாயிற்று.

⁑ அம்பு-நீர். ¶ சிலை-கல்-மலை-மந்தரமலை. o கழுந்து-படைக்கலங்களிற் கைப்பிடியாற்றேய்ந்த இடம் இவ்வுவமையால் அறிவு தேய்ந்தவர் என்றவாறாயிற்று.

‡ நாடியபொருள்-கல்வி-செல்வங்கள்.

சென்மமுமரணமுமின்றித்தீருமே
இம்மையே * ராமவென்றிரண்டெழுத்தினால். (௨)

வடதலைதென்கலைவடுகுகன்னடம்
இடமுளபாடையாதொன்றினாயினும்
திடமுளரகுகுலத்திராமன்றன்கதை
அடைவுடன்கேட்பவ ‡ ரமராவரே. (௩)

வென்றிசேரிலங்கையானைவென்றமால்வீரமோத
நின்றராமாயணத்தினிகழ்ந்திடுகதைசுடம்மில்
ஒன்றினைப்படித்தோர்தாமுமுரைத்திடக்கேட்டோர்தாமும்
நன்றிதுவென்றோர்தாமுநரகமெய்திடாரே. (௪)

இராகவன்கதையிலொருகவிதன்னிலேகபாதத்தினையுரைப்போர்
பராவருமலரோனுலகினில்வனும்பன்முறைவழுத்தவீற்றிருந்து
புராதனமறையுமண்டர்பொற்பதமும்பொன்றுநாளதனினும்பொன்றா
அராவணையமலனுலகெனும்பரமபதத்தினையணுகுவான்றே. (௫)

வேறு.

o இறுவாம்பினிராமவென்றோரும்பர்
நிறுவவென்பதுநிச்சயமாதலான்
மறுவின்மாக்கதைகேட்பவர்வைகுந்தம்
பெறுவரென்பதுபேசவும்வேண்டுமோ. (௬)

அன்னதானமகிலநற்றானங்கள்
கன்னிதானங்கபிலையின்றானமே
சொன்னதானப்பலனெனச்சொல்லுவர்
மன்னிராமகதைமறவார்க்கரோ. (௭)

ஆதியரியோகமனாராயணர்திருக்கதையறிந்தனுதினம்பரவுவோர்
நீதியனுபோகநெறிநின்றுநெடுநாளதினிறந்துசெகதண்டமுழுதுக்
காதிபர்களாயரசுசெய்துளநினைத்ததுகிடைத்தருள்பொறுத்துமுடிவில்
சோதிவடிவாயழிவில்முத்திபெறுவாரெனவுரைத்தசுருதித்தொகைகளே. (௮)

வேறு.

இனையநற்காதைமுற்றுமெழுதினோர்வியந்தோர்கற்றோர்
அனையதுதன்னைச்சொல்வோர்க்கரும்பொருள்கொடுத்துக்கேட்போர்
கனைகடற்புடவிமீதேகாவலர்க்கரசாய்வாழ்ந்து
வினையமதறுத்துமேலாம்விண்ணவன்பதத்திற்சேர்வார். (௯)

கரைசெறிகாண்டமேழுகதைகளாயிரத்தெண்ணூறு
பரவுறுசமரம்பத்துப்படலநூற்றிருபத்தெட்டே
யுரைசெயும்விருத்தம்பன்னீராயிரத்தொருபத்தாறு
வரமிகுகம்பன்சொன்னவண்ணமுந்தொண்ணூற்றாறே. (௧௦)

---

* ராமஎன்னுமிரண்டெழுத்தின் உச்சாரணத்தால் சகல துன்பமும்போய் நன்மையுண்டாகும், என்பதை கூறியவாறாயிற்று.

‡ அமரர் - (௧) இறவாதவர் என்னும் பொருள்படுவதோர் சொல்லாதலால் அதற்கு நித்தியசூரிகளென்று பொருள்கூறலாம். (௨) தேவர்கள்.

o இறுவாம்பின் - மரணகாலத்தில்.





நம்மாழ்வார்திருவடிகளேசரணம்.

# காப்புகள்.

## ஆழ்வார்துதி.

தருகைநீண்ட * தயரதன்றன்றரும்
இருகைவேழத்திராகவன்றன்கதை
திருகைவேலைத்தரைமிசைச்செப்பிடக்
குருகைநாதன்குரைகழல்காப்பதே. (௧)

## அநுமான்துதி.

### வேறு.

† அஞ்சிலேயொன்றுபெற்ற 0 னஞ்சிலேயொன்றைத்தாவி
$ அஞ்சிலேயொன்றாறாகவாரியற்காகவேகி
¶ அஞ்சிலேயொன்றுபெற்றவணங்கைக்கண்டயலாரூரில்
|| அஞ்சிலேயொன்றைவைத்தானவனெம்மையளித்துக்காப்பான். (௨)

## சரசுவதிதுதி.

பொத்தகம்படிகமாலைகுண்டிகைபொருள்சேர்ஞான
வித்தகந்தரித்தசெங்கைவிமலையையமலைதன்னை
மய்த்தகொந்தளகபாரமுகின்முலைத்தவளமேனி
ய்த்தகுகருங்கட்செவ்வாயணங்கினைவணங்கல்செய்வாம். (௩)

---

தசரதன் பத்துத்திக்கினும் தன்னிரதத்தைச்செலுத்தும் ஆற்றலுள்ளோன்.
அஞ்சிலேயொன்று (பஞ்சபூதங்களிலொன்று) வாயு. 0 சமுத்திரம். $ ஆகாயம். ¶ பூமி. || நெருப்பு. 0 புத்தகம், படிகமாலை, குண்டிகை, ஞானவித்தகம், என்பவற்றிற்கு முறையே, இடப்பாற் கீழ்க்கரம், வலப்பாற் கீழ்க்கரம், இடப்பால்மேற்கரம், வலப்பான் மேற்கரம் என்பன இடங்களாம்.



ஹரிஓம்.







ஆழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.



முதலாவது

# பாலகாண்டம்.



முதலாவது

## சிறப்புப்பாயிரம்.

உலகம்யாவையுந்தாமுளவாக்கலும்
நிலைபெறுத்தலுநீக்கலுநீங்கலா
* அலகிலாவிளையாட்டுடையாரவர்
தலைவரன்னவர்க்கேசரணங்களே. (௧)

சிற்குணத்தர்தெரிவருநன்னிலை
எற்குணத்தரிதெண்ணியமூன்றனுள்
முற்குணத்தவரேமுதலோரவர்
நற்குணக்கடலாடுதனன்றரோ. (௨)

ஆதியந்த || மரீயெனயாவையும்
ஓதினாலகில்லனவுள்ளன
வேதமென்பனமெய்ந்நெறிநன்மையன்
பாதமல்லதுபற்றிலர்பற்றிலார். (௩)

ஓசைபெற்றுயர்பாற்கடலுற்றொரு
பூசைமுற்றவுநக்குபுக்கென

* அலகிலா-அளவில்லாத. || அரியன எனப்பாடங் கூறுவாருமுளர்.

ஆசைபற்றியறையலுற்றேன்மற் * றிக்
காசில்கொற்றத்திராமன்கதையரோ. (ரு)

நொய்திஞெய்யசொன்னூற்கலுற்றேனெனை
வய்தவைவின்மராமரமேழ்தொளை
எய்தவெய்தவற்கெய்தியமாக்கதை
செய்தசெய்தவன்சொனின்றதேயத்தே. (கு)

வய்யமென்னையிகழவுமாசெனக்
கெய்தவும்மிதியம்புவதியாதெனிற்
பொய்யில்கேள்விப்புலமையினோர்புகல்
தெய்வமாக்கவிமாட்சிதெரிக்கவே. (சு)

தேவபாடையினிக்கதைசெய்தவர்
மூவரானவர்தம்முளுமுந்திய
காவினுருரையின்படிநான்றமிழ்ப்
பாவினுலிதுணர்த்தியபண்பரோ. (எ)

துறையடுத்தவிருத்தத்தொகைக்கவிக்
குறையடுத்தசெவிகளுக்கோதில்யாழ்
கறையடுத்தவசுணநன்மாச்செவிப்
பறையடுத்ததுபோலுமென்பாவரோ. (அ)

முத்தமிழ்த்துறையின்முறைபோகிய
† உத்தமக்கவிகட்கொன்றுணர்த்துவென்
பித்தர்சொன்னவும்பேதையர்சொன்னவும்
பத்தர்சொன்னவும்பன்னப்பெறுபவோ. (கூ)

அறையுமாடரங்கும்மடப்பிள்ளைகள்
தறையிற்கீறிடிற்றச்சருங்காய்வரோ
‡ இறையுஞானமிலாதவென்புன்கவி
முறையினூலுணர்ந்தாருமுனிவரோ. (க0)

---

* "இக்காசில் கொற்றத்திராமன்-இலங்கையர் வேந்தன் போரிடைத்த ன்றூனைமுழுதும் படைத்தமியனுய்ப்பட்டானது நிலைமைநோக்கி அயோத்திய ரிறை மேற்செல்லாது இன்றுபோய் நாளை நின்றூனையொடு வாவென விட் டாற்போல்வது" இதனைப் "போராண்மை" யென்றதற்குப் பரிமேலழகருரை யானுமுணர்க.

† உத்தமக்கவிகள்-சிறப்பினையுடைய கவிகளுக்கென்பதன்றி அறியாமை யாகிய இருளையொழிந்த கவிகளுக்கென்றுரைப்பினுமமையும்.

‡ இறையு ஞானமிலாத - சிறிதேனு மெய்யுணர்ச்சியில்லாத எனக்கொள்க. உம்மை, இழிவு சிறப்பு.

கடையினின் றுயர்நாயகன்றோற்றத்தி
னிடைநிகழ்ந்தவிராமாவதாரப்பேர்த்
தொடைநிரம்பியதோமறுமாக்கதை
சடையன்வெண்ணெய்நல்லூர்வயிற்றந்ததே. (கக)

சிறப்புப்பாயிரம் - முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கக.

## உ-வது, ஆற்றுப்படலம்.

ஆசலம்புரியைம்பொறிவாளியும்
காசலம்புமுலையவர்கண்ணெனும்
பூசலம்புநெறியின்புறஞ்செலாக்
கோசலம்புனையாற்றணிகூறுவாம். (க)

† நீறணிந்தகடவுணிறத்தவான்
ஆறணிந்துசென்றார்கலிமேய்ந்தகிற்
சேறணிந்தமுலைத்திருமங்கைதன்
வீறணிந்தவன்மேனியின்மீண்டவே. (உ)

பம்பிமேகம்பரந்ததுபானுவால்
‡ நம்பன்மாதுலன்வெம்மையைநண்ணினன்
அம்பினாட்டுமென்றகன்குன்றின்மேல்
இம்பர்வாரியெழுந்ததுபோன்றதே. (ங)

புள்ளிமால்வரைபொன்னெனநோக்கிவான்
வெள்ளிவீழிடைவீழ்த்தெனத்தாரைகள்
§ உள்ளியுள்ளவெல்லாமுவந்தீயுமவ்
வள்ளியோரின்வழங்கினமேகமே. (ச)

மானநேர்ந்தறநோக்கிமனுநெறி
போனதண்குடைவேந்தன்புகழென

* நடையினின்றுயர் இராமாவதாரமெனவும், நாயகன்தோற்றத்தினிடை நிகழ்ந்த இராமாவதார மெனவுமொட்டுக.

† நீறணிந்த கடவுணிறத்த என்பது நீற்றினைப்புனைந்த கடவுள்நிறத்தை யுடையனவாகிய மேகங்களை, நிறத்த வினையாலணையும் பெயர், நிறத்தவானெனக்கொண்டு வேறு விரிப்பாருமுளர். மேகங்கள் சிவனைப்போலப்போய் திருமாலைப்போலத்திரும்பின வென்பது கருத்து.

‡ நம்பன்மாதுலன்-சிவபெருமான் மாமனாகிய பருவதராசன். நம்பன் மாதுலன்-நம்புதற்குரியமாமன். § உள்ளியென்றது:இளமை, யாக்கை, செல்வ மென்னுமிவை நிலையாமையுடையவென நினைத்தென்பதாம்.

ஞானமுன்னியநான்மறையாளர்கைத்
தானமென்னத்தழைத்ததுநீத்தமே. (௫)

தலையுமாகமுந்தாளுந்தழீஇயதன்
நிலைநிலாதிறைநின்றதுபோலவே
மலையினுள்ளவெலாங்கொண்டுமண்டலால்
விலையின்மாதரையொத்ததவ்வெள்ளமே. (௬)

மணியும்பொன்னுமயிற்றழைப்பீலியும்
அணியுமானைவெண்கோடுமகிலுந்தன்
இணையிலாரமுமின்னகொண்டேகலான்
வணிகமாக்களையொத்ததவ்வாரியே. (௭)

பூநிரைத்துமென்றுதுபொருந்தியும்
தேன்வளாவியுஞ்செம்பொன்விராவியும்
ஆனைமாமதவாற்றொடளாவியும்
வானவில்லைநிகர்த்ததுவாரியே. (௮)

மலையெடுத்துமரங்கள்பறித்துமா
டிலைமுதற்பொருள்யாவையுமேந்தலான்
அலைகடற்றலையன்றணைவேண்டிய
நிலையுடைக்கவிநீத்தமந்நீத்தமே. (௯)

ஈக்கள்வண்டொடுமொய்ப்பவரம்பிகந்
தூக்கமேமிகுந்துட்டெளிவின்றியே
* தேக்கெறிந்துவருதலிற்றீம்புனல்
வாக்குதேனுகர்மாக்களைமானுமே. (௰)

பணைமுகக்களியானைபன்மாக்களோ
டணிவகுத்தெனவீர்த்திரைத்தார்த்தலின்
மணியுடைக்கொடிதோன்றவந்தூன்றலாற்
புணரிமேற்பொராப்போவதுபோன்றதே. (௧௧)

இரவிதன்குலத்தெண்ணில்பல்வேந்தர்தம்
பரவுநல்லொழுக்கின்படிபூண்டது.
சரயுவென்பதுதாய்முலையன்னதிவ்
வுரவுநீர்நிலத்தோங்குமுயிர்க்கெலாம். (௧௨)

வேறு.

கொடிச்சியரிடித்தசுண்ணங்குங்குமங்கோட்டமேலம்
நடுக்குறுசந்தஞ்சிந்தூரத்தொடுநரந்தநாகம்

---

* தேக்கெறிந்து என்பதனைத் தேக்கமரமெறிந்து எனவும், தேக்கெறிந்தெனவும் பொருள்கூறுக.

கடுக்கையார்வேங்கைகோங்குபச்சிலைகண்டில்வெண்ணெய்
அடுக்கலினடுத்தநீங்தேனகிலொடொறுமன்றே. (௧௩)

எயினர்வாழ்சீறூரப்புமாரியினிரியல்போக்கி
வயின்வயினெயிற்றிமாதர்வயிறலைத்தோடவோடி
அயின்முகக்கணையும்வில்லும்வாரிக்கொண்டலைக்குநீராற்
செயிர்தருங்கொற்றமன்னர்சேனையைமானுமன்றே. (௧௪)

செறிநறுந்தயிரும்பாலும்வெண்ணெயுஞ்சேர்ந்தநெய்யு
முறியொடுவாரியுண்டுகுருந்தொடுமருதமுந்தி
மறியுடையாயர்மாதர்வனைதுகில்வாருநீராற்
பொறிவரியரவினுடும்புனிதனும்போலுமன்றே. (௧௫)

கதவினைமுட்டிமள்ளர்கையெடுத்தார்ப்பவெய்தி
நுதலணியோடைபொங்கநுகர்வரிவண்டுகிண்டத்
ததைமணிசிந்தவுந்தித்தறியிறத்தடக்கைசாய்த்து
மதமழையானையென்னமருதஞ்சென்றடைந்ததன்றே. (௧௬)

முல்லையைக்குறிஞ்சியாக்கிமருதத்தைமுல்லையாக்கிப்
புல்லியநெய்தறன்னைப்பொருவருமருதமாக்கி
எல்லையிற்பொருள்களெல்லாமிடைதடுமாறுநீராற்
செல்லுறு * கதியிற்செல்லும்வினையெனச்சென்றதன்றே. (௧௭)

காத்தகான்மள்ளர்வெள்ளக்கலிப்பறைகறங்கக்கைபோய்ச்
சேர்த்தநீர்த்திவலைபொன்னுமுத்தொடுதிரையின்வீசி
நீத்தமாந்தலையவாகிநிமிர்ந்துபார்கிழியநீண்டு
கோத்தகாலொன்றினொன்றுகுலமெனப்பிரிந்தவன்றே. (௧௮)

கல்லிடைப்பிறந்துபோந்துகடலிடைக்கலந்தநீத்தம்
எல்லையின்மறைகளாலுமியம்பரும்பொருளீதென்னத்
தொல்லையிலொன்றேயாகித்துறைதொறும்பரந்தசூழ்ச்சி
† பல்பெருஞ்சமயஞ்சொல்லும்பொருளும்போற்பரந்ததன்றே. (௧௯)

தாதுகுசோலைதோறுஞ்சண்பகக்காடுதோறும்
போதவிழ்பொய்கைதோறும்புதுமணற்றடங்கடோறும்
மாதவிவேலிப்பூகவனந்தொறும்வயல்கடோறும்
ஓதியவுடம்புதோறுமுயிரெனவுலாயதன்றே. (௨௦)

உ-வது, ஆற்றுப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௩௧.



* கதியென்றது பிறப்பினை; அது தேவகதி மனிதகதி விலங்கின்கதி நாககதி யென்பனவற்றை. உயிரெடுத்த கதியின்வழி வினைசேறலின் அதனை யே யுவமைகூறினர்.

† பல் பெருஞ்சமயம் சொல்லும்பொருளும்போல் என்பதனைப் பல்பெருஞ்சமயஞ் சொல்லும்பொருள் போலுமென்றியைக்க. எவ்வகைச் சமயங்களும் துவிதம் அத்துவிதம் விசிட்டாத்துவிதமென்னு மூன்றனுளடங்கலின் பல்பெருஞ் சமயமென்றார்.

2

## ௩-வது, நாட்டுப்படலம்.

* வாங்கரும்பாதநான்கும்வகுத்தவான்மீகியென்பான்
தீங்கவிசெவிகளாரத்தேவரும்பருகச்செய்தான்
ஆங்கவன்புகழ்ந்தநாட்டையன்பெனுநறவமாந்தி
மூங்கையான்பேசலுற்றானென்னயான்மொழியலுற்றேன். (௧)

வரம்பெலாமுத்தந்தத்துமடையெலாம்பணிலமாநீர்க்
குரம்பெலாஞ்செம்பொன்மேதிக்குழியெலாங்கழுநீர்க்கொள்ளை
பரம்பெலாம்பவளஞ்சாவிப்பரப்பெலாமன்னம்பாங்கர்க்
கரம்பெலாஞ்செந்தேன்சந்தக்காவெலாங்களிவண்டீட்டம். (௨)

ஆறுபாயரவமள்ளராலைபாயமலையாலைச்
சாறுபாயோசைவேலைச்சங்குவாய்பொங்குமோதை
ஏறுபாய்தமரநீரிலெருமைபாய்துழனியின்ன
மாறுமாறாகித்தம்மின்மயங்குமாமருதவேலி. (௩)

தண்டலைமயில்களாடத்தாமரைவிளக்கந்தாங்கக்
கொண்டல்கண்முழவினேங்கக்குவளைகண்விழித்துநோக்கத்
தெண்டிரையெழினிகாட்டத்தேம்பிழிமகரயாழின்
வண்டுகளினிதுபாடமருதம்வீற்றிருக்குமாதோ. (௪)

தாமரைப்படுவவண்டுந்தைவருந்திருவுந்தாண்டார்க்
காமுகர்ப்படுவமாதர்கண்களுங்காமனம்பும்
† மாமுகிற்படுவவாரிப்பவளமும்வயங்குமுத்தும்
‡ காமுதற்படுவமெய்யுநாமநூற்பொருளுமன்னே. (௫)

நீரிடையுறங்குஞ்சங்கநிழலிடையுறங்குமேதி
¶ தாரிடையுறங்கும்வண்டுதாமரையுறங்குஞ்செய்யாள்
தூரிடையுறங்குமாமைதுறையிடையுறங்குமிப்பி
போரிடையுறங்குமன்னம்பொழிலிடையுறங்குந்தோகை. (௬)

படையுழுவெழுந்தபொன்னும்பணிலக்களுயிர்த்தமுத்தும்
இடறியபரம்பிற்காந்தும்மினமணித்தொகையுநெல்லும்
மிடைபசுங்கதிருமீனுமென்றழைக்கரும்புவண்டுங்
கடைசியர்முகமும்போதுங்கண்மலர்ந்தொளிருமாதோ. (௭)

---

* எட்டெழுத்தாணயவடிகள் நான்கமைந்துள்ளனவாக வகுத்தபெருமை தோன்ற 'வாங்கரும்பாத நான்கும்வகுத்த' வென்றார்.

† மூ-கருமை. இதனை 'மைத்தழையாநின்ற மாமிடற்றம்பலவன்' என்றதற்குப் பேராசிரியர் கூறலானுமறிக.

‡ முதல் ஏழனுருபு. ஈரம்-அச்சம்; இவ்வுரிச்சொல் ஈறுதிரிந்துநின்றது; 'நா நீர்வையக்கணி' என்புழிப்பரிமேலழகர் கூறலானுமறிக. ¶ தார்-பூ.

தெள்விளிசிறியாழ்ப்பாணர்தேம்பிழிநறவமாந்தி
வள்விசிகருவிபம்பவயின்வயின்வழங்குபாடல்
வெள்ளிவெண்மாடத்தும்பர்வெயில்விரிபசும்பொற்பள்ளி
எள்ளருங்கருங்கட்டோகையின்றுயிலெழுப்புமன்றே. (அ)

ஆலைவாய்க்கரும்பின்றேனுமரிதலைப்பாளைத்தேனுஞ்
சோலைவாய்க்கனியின்றேனுந்தொடைமிழியிருலின்றேனும்
மாலைவாயுகுத்ததேனும்வரம்பிகந்தோடிவங்க
வேலைவாய்மடுப்பவுண்டுமீனெலாங்களிக்குமாதோ. (கூ)

பண்கள்வாய்மிழற்றுமின்சொற்கடைசியர்பரந்துநீண்ட
கண்கைகான்முகம்வாயொக்குங்களையலாற்களையிலாமை
உண்கள்வார்கடைவாய்மள்ளர்களைகலாதுலாவிநிற்பார்
பெண்கள்பால்வைத்தநேயம்பிழைப்பரோசிறியோர்பெற்றால். (கo)

புதுப்புனல்குடையுமாதர்பூவொடுநாவிபூத்த
கதுப்புறுவெறியேநாறுங்கருங்கடற்றரங்கமென்றான்
மதுப்பொதிமழலைச்செவ்வாய்வாட்கடைக்கண்ணின்மைந்தர்
விதுப்புறநோக்குமன்னூர்மிகுதியைவிளம்பலாமே. (கக)

வெண்டளக்கலவைச்சேறுங்குங்குமவிரைமென்சாந்துங்
குண்டலக்கோலமைந்தர்குடைந்தநீர்க்கொள்ளைச்சாற்றில்
தண்டலைப்பரப்புஞ்சாலிவேலியுந்தழீஇயவைப்பும்
வண்டலிட்டோமெண்ணுமதுகரமொய்க்குமாதோ. (கஉ)

சேலுண்டவொண்கணாரிற்றிரிகின்றசெங்காலன்னம்
மாலுண்டநளினப்பள்ளிவளர்த்தியமழலைப்பிள்ளை
காலுண்டசேற்றுமேதிகன்றுள்ளிக்கனைப்பச்சோர்ந்த
பாலுண்டுதுயிலப்பச்சைத்தேரைதாராட்டும்பண்ணை. (கங)

குயிலினம்வதுவைசெய்யக்கொம்பிடைக்குனிக்குமஞ்ஞை
அயில்விழிமகளிராடுமரங்கினுக்கழகுசெய்யப்
பயில்சிறையரசவன்னம்பன்மலர்ப்பள்ளிநின்றும்
துயிலெழத்தும்பிகாலைச்செவ்வழிமுரல்வசோலை. (கச)

பொருந்தியமகளிரோடுவதுவையிற்பொருந்துவாரும்
பருந்தொடுநிழல்சென்றன்னவியலிசைப்பயன்றுய்ப்பாரும்
மருந்தினுமினியகேள்விசெவியுறமாந்துவாரும்
* விருந்தினர்முகங்கண்டன்னவிழாவணிவிரும்புவாரும். (கரு)

---

* தென்புலத்தார் முதலிய ஐம்புலத்துள் முன்னைய இரண்டும் கட்புலனாகாரை நினைந்துசெய்வள வாகலானும், பின்னைய இரண்டும் பிறர்க்கீதலன்மையானும், இடைநின்ற விருந்தோம்பல் சிறப்புடைத்தாய் இல்லறங்கட்கு முதலாதலின், 'விருந்தினர் முகங்கண்டன்ன' என்றார். இவ்வாறே பரிமேலழகர் கூறுவதுங்காண்க.

களிப்புறுமனமுங்கண்ணிற்சிவப்புறுசூட்டுங்காட்டி
உறுப்புறுபடையிற்றாக்கியுறுபகையின்றிச்சீறி
வெறுப்பிலகளிப்பின்வெம்போர்மதுக்கையவீரவாழ்க்கை
மறுப்படவாவிபேணுவாரணம்பொருத்துவாரும். (கசு)

ஏறுமைநாகின்றசெங்கணேற்றையோடேற்றைசீற்றத்
தாறுமிவையென்னத்தாக்கியூழறநெருக்கியொன்றாய்
விரியிருளிரண்டுகூறாய்வெகுண்டனவனையநோக்கி
அரியினங்குஞ்சியார்ப்பமஞ்சுறவார்க்கின்றாரும். (கஎ)

முள்ளரைமுளரிவெள்ளிமுளையிறமுத்தும்பொன்னும்
தள்ளுறமணிகள்சிந்தச்சலஞ்சலம்புலம்பச்சாலில்
துள்ளிமீன்றுடிப்பவாமைதலைபுடைசுரிப்பத்தூம்பி
னுள்வராலொளிப்பமள்ளருழுபகடுரப்புவாரும். (கஅ)

முந்துமுக்கனியினானைமுதிரையின்முழுத்தநெய்யில்
செந்தயிர்க்கண்டங்கண்டமிடையிடைசெறிந்தசோற்றில்
தந்தமிலிருந்துதாமும்விருந்தொடுந்தமரினோடும்
அந்தணரமுதகுண்டியயில்வுறுமமலைத்தெங்கும். (ககூ)

முறையறிந்தவாவைநீக்கிமுனிவுழிமுனிந்துவெஃகும்
இறையறிந்துயிர்க்குநல்குமிசைகெழுவேந்தன்காக்கப்
பொறைதவிர்ந்துயிர்க்குந்தெய்வப்பூதலந்தன்னிற்பொன்னின்
நிறைபரஞ்சொரிந்துவங்கநெடுமுதுகாற்றுநெய்தல். (உ௦)

எறிதருமரியின்சும்மையெடுத்துவானிட்டபோர்கள்
குறிகளும்போற்றிக்கொள்வார்கொன்றநெற்குவைகள்செய்வார்
வறியவர்க்குதவிமிக்கவிருந்துணமனையினுய்ப்பான்
நெறிகளும்புதையப்பண்டிநிரைத்துமண்ணெளியவூர்வார். (உக)

கதிர்படுவயலினுள்ளகடிகமழ்பொழிலினுள்ள
முதிர்பலமரத்தினுள்ளமுதிரைகள்புறவினுள்ள
பதிபடுகொடியினுள்ளபடிவளர்குழியினுள்ள
மதுவனமலரிற்கொள்ளும்வண்டெனமள்ளர்கொள்வார். (உஉ)

வேறு.

* பருவமங்கையர்பங்கயவாண்முகத்
தொருவவுண்கணையொண்பெடையாமெனக்
கருதியன்பொடுகாமுற்றுவைகலும்
மருதவேலியின்வைகினவண்டரோ. (உ௩)

மங்கைப் பருவத்தவரை நோக்கிப் பருவமங்கையர் என்றார்தன்க.

வேலைவென் றமுகத்தியர்வெம்முலை
ஆலைநின் றுமுனிந்திடுமங்கொர்பால்
பாலைதந்தமதுப்பருகிப்பரு
வாலைநின் றுமதர்க்குமருங்கெலாம். (உச)

ஈரநீர்படிந்திந்நிலத்தேசில
கார்களென்னவருங்கருமேதிகள்
ஊரினின் றகன் றுள்ளிடவுண்முலை
தாரைகொள்ளத்தழைப்பனசாலியே. (உரு)

மூட்டிலட்டின் முழங்குறவாக்கிய
நெட்டுலைக்கழுநீர்நெடுநீத்தந்தான்
* பட்டமென்கமுகோங்கு † மடப்பைபோய்
நட்டசெந்நெலினூறுவளர்க்குமே. (உசு)

சூட்டுடைத்துணைத்தூநிறவாரணம்
தாட்டுணைக்குடையுந்தலைசான் மணி
மேட்டிமைப்பனமின்மினியாமெனக்
கூட்டினுய்க்கும் ‡ குரீஇக்குழாமரோ. (உஎ)

தோயும்வெண்டயிர்மத்தொலிதுள்ளவும்
§ ஆயவெள்வளைவாய்விட்டரற்றவும்
தேயுநுண்ணிடைசென் றுவணங்கவும்
ஆயமங்கையரங்கைவருந்துவார். (உஅ)

குற்றபாகு ¶ கொழிப்பவர்கோணெறி
கற்றிலாதகருங்கணுலைச்சியர்
முற்றிலாரமுகந்துதம்முன்றிலிற்
சிற்றில்கோலிச்சிதறியமுத்தமே. (உகூ)

துருவைமென்பிணையீன் றதுளக்கிலா
வரிமருப்பினவன் றலையேற்றைவான்
○ உருமிடித்தெனத்தாக்குறமொல்லொலி
வெருவிமால்வரைச்சூன்மழைமின்னுமே. (௩0)

---

* பட்டம்-குளங்கள். † படப்பை-மருதநிலச்சோலைகள். ‡ குரீ-தூக்கணங்குருவிகள். § அங்கைவருந்தலால் வளைவாய் விட்டரற்றலைவாய் விட்டுக்கதறவுமெனவும், இடைசென்று வணங்கலை இடைசென்று தாழவுமெனவுமுரைத்துக்கொள்க

¶ கொழிப்பவர் என்புழிக்கொழிப்பன என்பது சொல்லெச்சம்.

○ ஆட்டின மொன்றோடொன்று தாக்குமொல்லொலி கேட்டுப்பயந்து சூன்மழை வாயங்காப்ப மின்னுக்கான் றலின் 'சூன்மழை மின்னுமே' என்றார். இதனைக் 'கருங்கொண் மூவாய் திறந்த மின்னுப்போற்றோன்றி' எனப் பிறருங் கூறலானுமுணர்க மால்வரை என்றார். 'மால்போலுங் குவடுகளையுடைய மலைஎனப்படுதலின். இதனை 'மால்வரை' யென்பதற்கு நச்சினார்க்கினியர் கூறியதனாலு முணர்க. இனிப்பெரிய மலையென்பது மொன்று-வரை-ஆகுபெயர்.

திணைச்சிலம்புனதீஞ்சொலிளங்கிளி
நனைச்சிலம்புவநாகிளவண்டூம்
* புனைச்சிலம்புவபுள்ளினம்வள்ளியோர்
மனைச்சிலம்புவமங்கலவள்ளையே. (கக)

கன்றுடைப்பிடிநீக்கிக்களிற்றினம்
வன்றொடர்ப்படுக்கும்வன்வாரிசூழ்
குன்றுடைக்குலமள்ளர்குழுக்குரல்
இன்றுணைக்களியன்னமிரிக்குமே. (கஉ)

வள்ளிகொள்பவர்கொள்வனமாமணி
|| துள்ளிகொள்வனதூங்கியமாங்கனி
புள்ளிகொள்வனபொன்விரிபுன்னைகள்
பள்ளிகொள்வனபங்கயத்தன்னமே. (கங)

‡ கொன்றைவேய்ங்குழற்கோவலர்முன்றிலிற்
கன்றுறக்குங்குரவைகடைசியர்
புன்றலைப்புனங்காப்புடைபோதரச்
சென்றிசைக்குநுளைச்சியர்செல்வழி. (கச)

சேம்புகால்பொரச்செங்கழுநீக்குளத்
$ தூம்புகாலச்சுரிவளைமேய்வன
காம்புகால்பொரக்கண்ணகன்மால்வரைப்
பாம்புநான்றெனப்பாய்பசுந்தேறலே. (கரு)

பெருந்தடங்கட்பிறைநுதலார்க்கெலாம்
பொருந்துசெல்வமுங்கல்வியும்பூத்தலால்
வருந்திவந்தவர்க்கீதலும்வைகலும்
விருந்துமன்றிவிளைவனயாவையே. (கசு)

o பிறைமுகத்தலைப்பெட்பினிரும்போழ்
குறைகறித்திரள்குப்பைபருப்பொடு
நிறைவெண்முத்தினிறத்தரிசிக்குவை
உறைவகொட்டினவூட்டிடந்தோறெலாம். (கஎ)

கலஞ்சுரக்குநிதியங்கணக்கிலா
நிலஞ்சுரக்குநிறைவளநன்மணி

* புனலென்பது-புனையெனப் போலியாய் வந்தது.
|| துள்ளிஎன்பது-விரிக்கும் விழிவிரித்தல்.
‡ கொன்றைக்காயானும் வேயானுஞ்செய்தகுழல் 'இதனைக்' கொன்றையந்தீங்குழல் கேளாமோதோழி' எனப் பிறருங் கூறலானுமறிக.
$ அரிவளைமேய்வன பசுந்தேறலை என்றொட்டுக.
o பிறைமுகத்தலைப் பெட்பினிரும்பு கோடாரி.

பிலஞ்சுரக்கும்பெறுதற்கரியதங்
குலஞ்சுரக்குமொழுக்கங்குடிக்கெலாம். (௩அ)

கூற்றமில்லையோர்குற்றமிலாமையாற்
சீற்றமில்லைதஞ்சிந்தையிற்செய்கையாற்
* ஆற்றனல்லறமல்லதிலாமையால்
ஏற்றமல்லதிழிதகவில்லையே. (௩௯)

நெறிகடந்துபரந்தனநீத்தமே
குறியழிந்தனகுங்குமத்தோள்களே
சிறியமங்கையர்தேயுமருங்குலே
வெறியவும்மவர்மென்மலர்க்கூந்தலே. (௪0)

அகிலிடும்புகையட்டிலிடும்புகை
நகிலினுலைநறும்புகைநான்மறை
புகலும்வேள்வியிற்பூம்புகையோடளாய்
முகிலின்விம்மிமுழங்கினவெங்கணும். (௪௧)

வேறு.

இயல்புடைபெயர்வனமயின்மணியிழையின்
வெயில்புடைபெயர்வனமுலையவர்குழல்போற்
புயல்புடைபெயர்வனபொழிலவர்விழிபோற்
கயல்புடைபெயர்வனகடிசமழ்கழனி. (௪௨)

இடையிறமகளிர்களெறிபுனன்மறுகக்
குடைபவர்துவரிதழலர்வனகுமுதம்
‡ மடைபெயரனமெனமடநடையளகக்
கடைசியர்முகமெனமலர்வனகமலம். (௪௩)

|| விதியினைநகுவனவயில்விழிபிடியின்
கதியினைநகுவனவவர்நடைகமலப்
பொதியினைநகுவனபுணர்முலைகலைவாழ்
மதியினைநகுவனவனிதையர்வதனம் (௪௪)

பகலினொடிகலுவபடர்மணிமடவார்
¶ நகிலினொடிகலுவநளிவளரிளநீர்
துகிலினொடிகலுவசுதைபுரைநுரைகார்
முகிலினொடிகலுவகடிமணமுரசும். (௪௫)

---

* ஆற்றனல்லற மல்லதிலாமையாலெனற்கு நல்லறமே ஆற்றல் அல்லதாகிய பாவமில்லாமையா லெனக்கொள்க. ‡ மடநடையிளகக்கடைசியர் என்பதற்கு இளநடையிளகுகின்ற அக்கடைசியரெனவிரிக்க. || விதியினை நகுவனவென்பதற்கு விதித்தற்றொழிலைச் சிரிப்பன என்பதன்றிப் பிரமசரிய வொழுக்கத்தைநோக்கிச் சிரிப்பனவென்று விரிக்கினுமமையும். ¶ நகிலும் நகில்எனஅம்முச்சாரியை குறைந்தது.

காரொடுநிகர்வனகடிபொழில்கழனிப்
போரொடுநிகர்வனபுணர்முலையணைசூழ்
நீரொடுநிகர்வனநிறைகடனிதிசால்
ஊரொடுநிகர்வனவிமையவருலகம். (சசு)

நென்மலையல்லனநிரைவருதாளம்
சொன்மலையல்லனதொடுகடலமிர்தம்
நன்மலையல்லனநதிதருநிதியம்
பொன்மலையல்லனமணிபடுபுளினம். (சஎ)

பந்தினையிளையவர்பயில்விடமயிலூர்
கந்தனையனையவர்கலைதெரிகழகம்
சந்தனவனமலசண்பகவனமாம்
நந்தனவனமலநறைவிரிபுறவம். (சஅ)

கோகிலநவில்வனவிளையவர்குதலைப்
பாகியல்கிளவிகளவர்பயினடமே
கேகயநவில்வனகிளரிளவளையின்
நாகுகளுமிழ்வனநகைபுரைதாளம். (சகூ)

பழையர்தமனையனபழநறைநுகரும்
உழவர்தமனையனவுழுதொழில்புரியும்
மழவர்தமனையனமணவொலியிசையின்
கிழவர்தமனையனகிளைபயில்வளையாழ். (ருo)

கோதைகள்சொரிவனகுளிரிளநறவம்
பாதைகள்சொரிவனபருமணிகனகம்
ஊதைகள்சொரிவனவுறையுறுமமுதம்
காதைகள்சொரிவனசெவிநுகர்கவிகள். (ருக)

வேறு.

இடங்கொள்சாயல்கண்டிளைஞர்சிந்தைபோல்
தடங்கொள்சோலைவாய்மலர்பெய்தாழ்குழல்
வடங்கொள்பூண்முலைமடந்தைமாரொடும்
தொடர்ந்துபோவனதோகைமஞ்ஞைகள். (ருஉ)

வண்மையில்லையோர்வறுமையின்மையால்
திண்மையில்லைநேர்செறுநரின்மையால்
உண்மையில்லைபொய்யுரையிலாமையால்
* வெண்மையில்லைபல்கேள்விமேவலால். (ருங)

வெண்மை-வெளிறுத்தன்மை, அறியாமை

எள்ளுமேனலுமிறுங்குஞ்சாமையும்
கொள்ளுங்கொள்ளையிற்கொணரும்பண்டியும்
அள்ளலோங்களத்தமுதின்பண்டியும்
தள்ளுநீர்மையிற்றலைமயங்குமே. (ருச)

*உயருஞ்சார்விலாவுயிர்கள்செய்வினைப்
பெயரும்பல்கதிபிறக்குமாறுபோல்
அயிருந்தேனுமின்பாகுமாயரூர்த்
தயிரும்வேரியுந்தலைமயங்குமே. (ருரு)

கூறுபாடலுங்குழலின்பாடலும்
வேறுவேறுநின்றிசைக்கும்வீதிவாய்
ஆறுமாறுவந்தெதிர்ந்தவாமெனச்
† சாறும்வேள்வியுந்தலைமயங்குமே. (ருசு)

‡ மூக்கிற்றூக்குறுமூரிநந்துநேர்
தாக்கிற்றூக்குறும்பறையுந்தண்ணுமை
வீக்கிற்றூக்குறும்விளியுமள்ளர்தம்
வாக்கிற்றூக்குறுமொலியின்மாயுமே. (ருஎ)

$ தாலியைம்படைதழுவுமார்பிடை
மாலைவாயமுதொழுகுமக்கலைப்
பாலினூட்டுவார்செங்கைப்பங்கயம்
வால்நிலாவுறக்குவிவமானுமே. (ருஅ)

பொற்பினின்றனபொலிவுபொய்யிலா
நிற்பினின்றனநீதிமாதரார்
அற்பினின்றனவறங்களன்னவர்
|| கற்பினின்றனகாலமாரியே. (ருகூ)

சோலைமாநிலந்துருவியாவரே
வேலைகண்டுதாமீளவல்லவர்
சாலும்வார்புனற்சரயுவும் ० பல
காவிஞேடியுங்கண்டதில்லையே. (சுo)

---

* இருவகைப்பற்றையுந் துறத்தலை 'உயருஞ்சார்விலாவுயிர்கள்' என்றார்.
† சாறு-திருவிழா. ‡ வலியநந்துமூக்கி ஞெலிக்குமொலியு மென்பதற்கு "மூக்கிற்றூக்குமூரிநந்தும்" என்றார் மூக்கிஞலென்பாருமுளர். அதுபொருந்தாமையறிக.

$ தாலியைம்படை தழுவுமார்பினில் என்பதற்கு தாலியும் ஐம்படையும் தழுவப்பட்ட மார்பினிடத்து என்க. தாலியாகிய ஐம்படை என்பாருமுளர். திருமகளே அவ்வடிவமாகலின் அவட்கு மெய்க்காப்பாளர்போற் பஞ்சாயுதங் களைக்கூறவேண்டு மாகலானங்ஙனங்கூறல் பொருந்தாமையறிக. || மாதரார் கற்புடைமையான் மாரிநிற்பது என்பது ० பலகாவிஞேடியும் - பலகால்களர் ஞேடியுமெனவும், பலமுறையிஞேடியுமெனவுஞ் சிலேடைப்பொருள் பயப்பதுங்காண்க.

வீடுசேரநீர்வேலைகான்மடுத்
தூடுபேரினுமுலைவிலாநலம்
கூடுகோசலமென்னுங்கோதிலா
நாடுகூறினநகரங்கூறுவாம். (சுக)

௩-வது, நாட்டுப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-கஉ.

## ச-வது, நகரப்படலம்.

செவ்வியமதுரஞ்சேர்ந்தநற்பொருளிற்சீரியகூரியதீஞ் * சொல்
வவ்வியகவிஞரனைவரும் || வடநூன்முனிவரும்புகழ்ந்ததுவரம்பில்
எவ்வுலகத்தோர்யாவருந்தவஞ்செய்தேறுவானதரிக்கின்ற
அவ்வுலகத்தோரிழிவதற்கருத்திபுரிகின்றதயோத்திமாநகரம். (க)

நிலமகண்முகமோதிலகமோகண்ணோநிறைநெடுமங்கலநாணோ
இலகுபூண்முலைமேலாரமோவுயிரினிருக்கையோதிருமகட்கினிய
மலர்கொலோமாயோன்மார்பினன்மணிகள்வைத்தபொற்பெட்டியோவானோர்
உலகின்மேலுலகோவூழியினிறுதியுறையுளோயாதெனவுரைப்பாம். (உ)

உமைக்கொருபாகத்தொருவனு ‡ மிருவர்க்கொருதனிக்கொழுநனுமலர்மேல்
கமைப்பெருஞ்செல்வக்கடவுளுமுதலோர்கண்டிலாநகரதுகாண்பான்
அமைப்பருங்காதன்முன்பிடித்துந்தவந்தரஞ்சந்திராதித்தர்
இமைப்பிலர்திரிவரிதுவலாலதனுக்கியம்பலாமுவமைமற்றியாதோ. (௩)

அயின்முகக்குலிசத்தமரர்கோனகருமளகையுமென்றிவையயனார்
பயிலுறவுற்றபடிபெரும்பாலுமிப்பெருந்திருநகர்படைப்பான்
மயன்முதற்றெய்வத்தச்சருந்தத்தமனத்தொழிஞணினர்மறந்தூர்
புயறொடுகுடுமிநெடுநிலைமாடத்திந்நகர்புகலுமாறெவனோ. (ச)

புண்ணியம்புரிந்தோர்புகுவதுதுறக்கமென்னுமீதருமறைப்பொருளே
மண்ணிடையாவரிராகவனன்றிமாதவமறத்தொடும்வளர்த்தார்
§ எண்ணருங்குணத்தினவனினிதிருந்திவ்வேழுலகாள்விடமென்றால்
‡ ஒண்ணுமோவதனின்வேறொருபோகமுறைவிடமுண்டெனவுரைத்தல்.

---

* சொல்வவ்விய கவிஞரனைவரும்-ஆழ்வார் தொடக்கமானவரை.

|| வடநூன்முனிவரும்-வான்மிகபகவான் தொடக்கமானவரை.

‡ இருவர்க்கொருதனிக்கொழுநன்-உபேந்திரனை, இவ்வாறுகூறுது வேறுகூறுவாருமுளர். § எண்ணருங்குணம்-எட்டாகிய அருங்குணமென்க, அவை தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என எண்ணுதற்கரியகுணமெனினுமாமென்க. ‡ ஒண்ணுமோமரீஇயது.

தங்குமாபொருளுந்தருமமுந்துணையாத்தம்பகைப்புலன்களைத்தவிர்க்கும்
பொங்குமாதவமும்ஞானமும்புணர்ந்தோர்யாவர்க்கும்புகலிடமான
செங்கண்மால்பிறந்தாண்டளப்பருங்காலந்திருவின்வீற்றிருந்தமைதெரிந்தால்
அங்கண்மாஞாலத்தங்ககரொக்கும்பொன்னகரமரர்நாட்டியாதோ. (௬)

அரைசெலாமவணவணியெலாமவணவரும்பெறன்மணியெலாமவண
புரைசைமால்களிறும்புரவியுந்தேரும்பூதலத்தியாவையுமவண
விரைசுவார்முனிவர்விண்ணவரியக்கர்விஞ்சையர்முதலினோரெவரும்
உரைசெய்வாராஞானபோததனுக்குவமைதானரிதரோவுளதோ. (௭)

நால்வகைச்சதுரம்விதிமுறைநாட்டிநனிதவவுயர்ந்தனபணிதோய்
மால்வரைக்குலத்தின்யாவையுமில்லையாதலாலுவமைமற்றில்லை
நூல்வரைத்தொடாந்துபயத்தொடும்பழகிநுணங்கியநுவலருமுணர்வே
போல்வகைத்தல்லாலுயர்வினோடுயர்ந்தவென்னலாம்பொன்மதினிலையே. (௮)

மேவருமுணர்வுமுடிவிலாமையினால்வேதமுமொக்கும்விண்புகலால்
தேவருமொக்குமுனிவருமொக்குந்திண்பொறியடக்கியசெயலால்
காவலிற் * கலையூர்கன்னியையொக்குஞ்சூலத்தாற்காளியையொக்கும்
யாவையுமொக்கும்பெருமையாலெய்தற்கருமையாலீசனையொக்கும். (௯)

பஞ்சிவான்மதியையூட்டியவனையபடருகிர்பங்கயச்செங்கால் [ணைத்தோள்
வஞ்சிபோன்மருங்குல்குரும்பைபோற்கொங்கை வாங்குவேய் வைத்தமென்ப
அஞ்சொலார்பயிலுமயோத்திமாநகரினழகுடைத்தன்றெனவறிவான்
இஞ்சிவானோக்கியிமையவருலகங்காணியவெழுந்ததொத்துளதே. (௧௦)

கோலிடையுலகமளத்தலிற்பகைஞர்முடித்தலைகோடலின்மனுவின்
நூல்நெறிநடக்குஞ்செவ்வையின்யார்க்குநோக்கருங்காவலின்வலியின்
வேலொடுவாள்விற்பயிற்றலின்வெய்யசூழ்ச்சியின்வெலற்கருவலத்திற்
சால்புடையுயர்விற்சக்கரநடத்துந்தன்மையிற்றலைவரொத்துளதே. (௧௧)

சினத்தயில்கொலைவாள்சிலைமழுத்தண்டுசக்கரந்தோமரமுலக்கை
கனத்திடையுருமின்வெருவருங்கவண்கல்லென்றிவைகணிப்பிலகொதுகின்
இனத்தையுமுவணத்திறையையுமியங்குங்காலையுமிதமலநினைவார்
மனத்தையுமெறியும்பொறியுளவென்றான்மற்றினியுணர்த்துவதெவனோ. (௧௨)

பூணினும்புகழேயமையுமென்றினையபொற்பினின்றுயிர்நனிபுரக்கும்
யாணரெண்டிசைக்குமிருளறவிமைக்குமிரவிதன்குலமுதனிருபர்
சேனையுங்கடந்துதிசையையுங்கடந்துதிகிரியுஞ்செந்தனிக்கோலும்
‡ ஆணையுங்கடக்குமாயினுநகருக்கணியெனவியற்றியதன்றே. (௧௩)

---

* கலையூர்கன்னி- துர்க்கை.

‡ ஆணை பாகதச்சிதைவு, வட்டம், கண்ணன் என்றாற்போல.

அன்னமாமதிலுங்காழிமால்வரையையலைகடல்சூழ்ந்தனவகழி
பொன்விலைமகளிர்மனமெனக்கீழ்போய்ப்புன்கவியெனத்தெளிவின்றிக்
கன்னியரல்குற்றடமெனயார்க்கும்படிவருங்காப்பினதாகி
நன்னெறிவிலக்கும்பொறியெனவெறியுங்காத்ததுநவிலலுற்றதுநாம். (கச)

## வேறு.

ஏகுகின்றதங்கணங்களோடுமெல்லைகாண்கிலா
நாகமொன்றகன்கிடங்கைநாமவேலையாமெனு
மேகமொண்டுகொண்டெழுந்துவிண்டொடர்ந்தகுன்றமென்
றூகநொந்துநின்றுதாரையம்மதிற்கண்வீசுமே. (கரு)

அந்தமாமதிற்புறத்தகத்தெழுந்தலர்ந்தநீள்
கந்தநாறுபங்கயத்தகானமானமாதரார்
முந்துவாண்முகங்களுக்குடைந்துபோனமொய்ம்பெலாம்
வந்துபோர்மலைக்குமாமதில்வளைத்தன்மானுமே. (கசு)

சூழ்ந்த * நாஞ்சில்சூழ்ந்தவாரைசுற்றுமுற்றுபாரெலாம்
போழ்ந்தமாகிடங்கிடைக்கிடந்துபொங்கிடங்கர்மா
தாழ்ந்தவங்கவாரியிற்றடுப்பொணுமதத்தினல்
ஆழ்ந்தயானைமீதெழுந்தழுந்துகின்றபோலுமே. (கஎ)

ஈரும்வாளின்வாள்விதிர்த்தெயிற்றிளம்பிறைக்குலம்
பேரமின்னிவாய்விரித்தெதிர்ந்தகட்பிறவகுதீ
சோரவொன்றையொன்றுமுன்றொடர்ந்துசீறிடங்கர்மா
போரில்வந்துசீறுகின்றபோரரக்கர்போலுமே. (கஅ)

ஆளுமன்னம்வெண்குடைக்குலங்களாவருங்கரா
கோளெலாமுலாவுகின்றகுன்றமன்னயானையாத்
தாளுலாவுபங்கயத்தரங்கமுந்துரங்கமா
வாளும்வேலுமீனமாகமன்னர்சேனைமானுமே. (ககூ)

விளிம்புதெற்றிமுற்றுவித்துவெள்ளிகட்டியுள்ளுறப்
பளிங்குபொற்றலத்தகட்டடுத்துறப்படுத்தலின்
தளிந்தகற்றலத்தொடச்சலத்தினைத்தனித்துறந்
தெளிந்துணர்த்துகிற்றுமென்றறேவராலுமாவதே. (உ0)

அன்னநீரகன்கிடங்குசூழ்கிடந்தவாழியைத்
துன்னிவேறுசூழ்கிடந்ததுங்குவீங்கிருட்பிழம்
பென்னலாமிரும்புசூழ்கிடந்தசோலையெண்ணிலப்
பொன்னின்மாமதிற்குடுத்தநீலவாடைபோலுமே. (உக)

* நாஞ்சில் - மதிலுறுப்பு.

எல்லைநின்றவென்றியானையென்னநின்றமுன்னமால்
ஒல்லையும்பர்நாடளக்கதாளின்மீதுயர்ந்தவால்
மல்லன்ஞாலம்யாவுநீதிமாறுமுவழக்கினல்
நல்லவாறுசொல்லும்வேதநான்குமன்னவாயிலே. (உஉ)

தாவில்பொற்றலத்தினற்றவத்தினோர்கடங்குதாட்
பூவுயிர்த்தகற்பகப்பொதும்பர்புக்கொதுங்குமால்
ஆவியொத்தவன்புசேவல்கூவவந்தணைந்திடா
ஓவியப்புறாவின்மாடிருக்கவூடுபேடையே. (உ௩)

கல்லடித்தடுக்கிவாய்பளிங்கரிந்துகட்டிமீ
எல்விடப்பசும்பொன்வைத்திலங்குபன்மணிக்குலம்
வில்விடக்குயிற்றிவாள்விரிக்கும்வெள்ளிமாமரம்
புல்விடக்கிடத்திவச்சிரத்தகால்பொருத்தியே. (உ௪)

மரகதத்திலங்குபோதிகைத்தலத்துவச்சிரம்
புரைதபுத்தடுக்கிமீதுபொன்குயிற்றிமின்குலா
நிரைமணிக்குலத்தினுளிநீள்வகுத்தவோளிமேல்
விரவுகைதலத்திலுய்த்தமேதகத்தின்மீசரோ. (உ௫)

ஏழ் * பொழிற்குமேழ்நிலத்தலஞ்சமைத்தென்னநூல்
ஊழுறக்குவித்தமைத்தவும்பர்செம்பொன்வேய்ந்துமீச்
சூழ்சுடர்ச்சிரத்துநண்மணித்தசும்புதோன்றலால்
வாழ்நிலக்குலக்கொழுந்தைமௌவிசூட்டியன்னவே. (உ௬)

வேறு.

திங்களுங்கரிதெனவெண்மைதீற்றிய
சங்கவெண்சுதையுடைத்தவளமாளிகை
வெங்கடுங்கால்பொரமேக்குநோக்கிய
பொங்கிரும்பாற்கடற்றரங்கம்போலுமே. (உ௭)

புள்ளியம்புறவிறைபொருந்துமாளிகை
தள்ளருந்தமனியத்தகடுவேய்ந்தன
எள்ளருங்கதிரவனிளவெயிற்குழாம்
வெள்ளியங்கிரிமிசைவிரிந்தபோலுமே. (உ௮)

வயிரநற்கான்மிசைமரகதத்துலாம்
செயிரறப்போதிகைகிடத்திச்சித்திரம்
உயிர்பெறக்குயிற்றியவும்பர்நாட்டவர்
அயிருறவிமைப்பனவளவில்கோடியே. (உ௯)

---

* பொழில் - உலகம்.

சந்திரகாந்தத்தின்றலத்தசந்தனப்
பந்திசெய்தூணின்மேற்பவளப்போதிகைச்
செந்தனிமணித்துலாஞ்செறிந்ததிண்சுவர்
இந்திரநீலத்தவெண்ணில்கோடியே. (௯0)

பாடகக்காலடிபதுமத்தொப்பன
சேடரைத்தழீஇயனசெய்யவாயன
நாடகத்தொழிலனநடுவுதுய்யன
ஆடகத்தோற்றத்தவளவிலாதன. (௯௧)

புக்கவர்கண்ணிணைபொருந்துருதொளி
தொக்குடன்றயங்கிவிண்ணவரிற்றேன்றலால்
திக்குறநினைப்பினிற்செல்லுந்தெய்வவீ
டொக்கின்றிமைப்பன * வும்பர்நாட்டினும். (௯௨)

அணியிழைமகளிருமலங்கல்வீரரும்
தணிவனவறநெறிதணிவிலாதன
மணியினும்பொன்னினும்வினைந்தவல்லது
பணிபிறிதியன்றனபாங்குமில்லையே. (௯௩)

வானுறநிமிர்ந்தனவாம்பில்செல்வத்தோர்
தானுயர்புகழெனத்தயங்குசோதிய
ஊனமிலறநெறியுற்றவெண்ணிலாக்
கோனிகர்குடிகடங்கொள்ளைசான்றன. (௯௪)

அருவியிற்றுயந்துமுத்தலங்குசாமரத்த
விரிமுகிற்குலமெனக்கொடிவிராயின
பருமணிக்குவையன † பசும்பொற்கோடிய
பொருமயிற்கணத்தனமலையும்போன்றன. (௯௫)

அகிலிடுகொழும்புகையளாய்மயங்கின
முகிலொடுவேற்றுமைதெரிகலாமுழுத்
துகிலொடுநெடுங்கொடிச்சூலமின்னுவ
பகலிடுமின்னனிப்பரப்புப்போன்றவே. (௯௬)

துடியிடைப்பிணைமுலைத்தோகையன்னவர்
அடியிணைச்சிலம்புபூண்டரற்றுமாளிகைக்
கொடியிடைத்தாளவெண்கோவைசூழ்தன
கடிபுடைக்கற்பகக்கான்றமாலைமே. (௯௭)

* உம்பர்நாட்டினுமென்புழி உம்பர்கள் நிச்சயிக்கினுமென்றும், உம்பருலகைப்பார்க்கினுமென்று முரைப்பினும்மையும்.

† பசும்பொன்-மாற்றுயர்ந்தபொன்.

காண்வருநெடுவரைக்கதலிக்கானம்போல்
கோணிமிர்பதாகையின் குழாந்தழைத்தண்
வாணனிமழுங்கிடமடங்கிவைகலும்
சேண்மதிதேய்வதக்கொடிகடேய்க்கவே. (ருஅ)

பொன்றிணிமண்டபமல்லபூத்தொடர்
மன்றுகளல்லனமாடமாளிகை
குன்றுகளல்லனமணிசெய்குட்டிம
முன்றில்களல்லனமுத்தின்பந்தரே. (ருகூ)

மின்னெனவிளக்கெனவெயிற்பிழம்பெனத்
துன்னியதமனியத்தொழிற்றழைத்தவக்
கன்னிநன்னகர்நிழல்கதுவாலரோ
பொன்னுலகாயதப்புலவர்வானமே. (சூ0)

எழுமிடத்தகன்றிடையொன்றியெற்படு
பொழுதிடைப்போதலிற்புரிசைப்பொன்மதில்
அழன்மணிதிருத்தியவயோத்தியாளுடை
நிழலெனப்பொலியுமானேமிவான்சுடர். (சூக)

ஆய்ந்தமேகலையவாம்பொன்மாளிகை
வேய்ந்தகாரகிற்புகையுண்டமேகம்போய்த்
தோய்ந்தமாகடனறுந்துபநாறுமேல்
பாய்ந்ததாரையினிலைபகரல்வேண்டுமோ. (சூஉ)

* குழலிசைமடந்தையர்குதலைக்கோதையர்
மழலையங்குழலிசைமகரயாழிசை
எழிலிசைமடந்தையரின்சொலின்னிசை
பழையர்தஞ்சேரியிற்பொருநர்பாட்டிசை. (சூரு)

கண்ணிடைக்கனல்சொரிகளிறுகால்கொடு
மண்ணிடைவெட்டுவவேட்குமைந்தர்கள்
பண்ணைகள்பயிலிடங்குழிபுடைப்பன
சுண்ணமக்குழிகளைத்தொடர்ந்துதூர்ப்பன. (சூசு)

பந்துகண்மடைந்தையர்பயிற்றுவாரிடை
சிந்துவமுத்தினமவைதிரட்டுவார்
அந்தமில்சிலதிய † ராற்றருப்பைகள்
சந்திரனொளிகெடத்தழைப்பதண்ணிலா. (சூரு)

---

* குழலிசைமடந்தையர் - மழலையங்குழலிசை எழிலிசைமடந்தையரின் சொலின்னிசையெனவும், குதலையங்கோதையர் மகரயாழிசைபழையர்தஞ் சேரியிற் பொருநர் பாட்டிசையெனவும் நிரனிறையாகவைத்துப் பொருள் கொள்க.

† ஆற்றஎன்பதில்-இன் இடைநிலை தொகுத்தல்பெற்றது.

அரங்கிடைமடந்தையராவாரவர்
கருங்கடைக்கண்ணயில்காமர்நெஞ்சினை
உருங்குவமற்றவருயிர்களன்னவர்
மருங்குல்போற்றேய்வனவளர்வதாசையே (௬௬)

பொழிவனசோலைகள்புதியதேன்சில
விழைவனதென்றலுமிஞிறுமெல்லென
நுழைவனவன்னவைநுழையநோவொடு
குழைவனபிரிந்தவர்கொதிக்குங்கொங்கையே. (௬௭)

இறங்குவமகரயாழெடுத்தவின்னிசை
நிறங்கிளர்பாடலாளிமிர்வவவ்வழி
கறங்குவவள்விசிகருவிகண்முகிழ்த்
துறங்குவமகளிரோடோதுங்கிள்ளையே. (௬௮)

குதைவரிச்சிலைநுதற்கொவ்வைவாய்ச்சியர்
பதயுகத்தொழில்கொடுபழிப்பிலாதன
ததைமலர்த்தாமரையன்னதாளினால்
உதைபடச்சிவப்பனவுரவுத்தோள்களே. (௬௯)

பொழுதுணர்வரியவப்பொருவின்மாநகர்த்
தொழுதகைமடந்தையர்சுடர்விளக்கெனப்
பழுதருமேனியைப்பார்க்குமாசைகொல்
எழுதுசித்திரங்களுமிமைப்பிலாதவே. (௭௦)

தணிமலர்த்திருமகடயங்குமாளிகை
இணரொளிபரப்பிநின்றிருடுரப்பன
திணிசுடர்நெய்யுடைத்தீவிளக்கமோ
மணிவிளக்கல்லனமகளிர்மேனியே (௭௧)

பதங்களிற்றண்ணுமைபாணிபண்ணுற
விதங்களின்விதிமுறைசதிமிதிப்பவர்
மதங்கியரச்சதிவருத்துக்காட்டுவ
சதங்கைகளல்லனபுரவித்தார்களே. (௭௨)

முளைப்பனமுறுவலம்முறுவல்வெந்துயர்
விளைப்பனவன்றியுமெலிந்துநாடொறும்
இளைப்பனநுண்ணிடையிளைப்பமென்முலை
திளைப்பனமுத்தொடுசெம்பொனாரமே. (௭௩)

இடையிடையெங்கணுங்களியருந்தன
நடையிளவன்னங்கணனினீர்க்கயல்

பெடையிளவண்டுகள்பிரசமாந்திடுங்
கடகரியல்லனமகளிர்கண்களே. (ருச)

தழல்விழியாளியுந்துணையுந்தாழ்வரை
முழைவிழைகிரிகிர்களிற்றின்மும்மத
மழைவிழும்விழுந்தொறுமண்ணுங்கீழுறக்
குழைவிழு * மவில்விழுங்கொடித்திண்டேர்களே. (ருரு)

ஆடுவார்புரவியின்குரத்தையார்ப்பன
சூடுவாரிகழ்ந்தவத்தொங்கன்மாலைகள்
ஓடுவாரிழுக்குவவூடலூடுறக்
கூடுவார்வனமுலைகொழித்தசாந்தமே. (ருசு)

இளைப்பருங்குரங்களாலிவுளிபாரினைக்
கிளைப்பனவவ்வழிகிளர்ந்ததூளியின்
ஒளிப்பனமணியவையொளிரமீதுதேன்
துளிப்பனகுமரர்தந்தோளின்மாலையே. (ருஎ)

விலக்கருங்கரிமதம்வேங்கைநாறுவ
குலக்கொடிமாதர்வாய்குமுதநாறுவ
† கலக்கடைகணிப்பருங்கதிர்கணுறுவ
மலர்க்கடிநாறுவமகளிர்கூந்தலே. (ருஅ)

‡ கோவையிந்நகரொடெண்குறிக்கலாதவத்
தேவர்தந்நகரியைச்செப்புகின்றதென்
யாவையும்வழங்கிடத்திகலியிந்நகர்
ஆவணங்கண்டபினளகைதோற்றதே. (ருகூ)

அதிர்கழலொலிப்பனவயிலிமைப்பன
கதிர்மணியணிவெயில்கால்வமான்மதம்
முதிர்வுறக்கமழ்வனமுத்தமின்னுவ
மதுகரமிசைப்பனமைந்தரீட்டமே. (கூ0)

வளையொலிவயிரொலிமகரவீணையின்
கிளையொலிமுழவொலிகின்னரத்தொலி

---

* அவற்றில் என்பது அவில்எனச்சாரியையுள்வழி அற்றுச்சாரியை தவிர்ந்துநின்றது, இவ்வாறு பலவின்படர்க்கை, பலவினீட்டமெனவருத லிற்காண்க. இதற்குவேறுகூறுவாருமுளர்.

† கலங்கடை-கலக்கடை என வலிக்கும் வழிவலித்தல்.

‡ கோவையிந்நகரொடெண் குறிக்கலாத என்பது எழுநகரமென்னும் கொவையினின்ற இந்நகரத்தொடு எண்ணிக்கூறாத எனக்கொள்க, இவ் வாறு கூறாதுகோ இந்நகரரெனவும் ஐசாரியையெனவுங்கொண்டு கூறுவா ருமுளர். அவர் எழுநகரத்தொடிதனையுமொன்றெனக்கொள்ளும் பெற்றி மையறியார்போலுமெனக்கடாவியொழிக.

தொளையொலிபல்லியந்துவைக்குஞ்சும்மையின்
விளையொலிகடலொலிமெலியவிம்முமே. (சுக)

மன்னவர்தருதிறையளக்குமண்டபம்
அன்னமென்னடையவராமெண்டபம்
உன்னருமருமறையோதுமண்டபம்
பன்னருங் * கலைதெரி † பட்டிமண்டபம். (சுஉ)

இரவியிற்சுடர்மணியிமைக்குந்தோரணத்
தெருவினிற்சிறியனதிசைகள்சேண்விளங்
கருவியிற்பெரியனவானைத்தானங்கள்
பரவையிற்பெரியனபுரவிப்பந்தியே. (சுங)

‡ சூளிகைமழைமுகில்தொடக்குந்தோரண
$ மாளிகைமலர்வனமகளிர்வாண்முகம்
வாளிகளன்னவைமலர்வமற்றவை
ஆளிகளன்னவர்நிறத்திளுழ்பவே. (சுச)

மன்னவர்கழலொடமொறுகொள்வன
பொன்னணித்தேரொலிபுரவித்தாரொலி
இன்னகையவர்சிலம்பேங்கவேங்குவ
கன்னியர்குடைதுறைக்கமலவன்னமே. (சுரு)

ஊடவுங்கூடவுமுயிரினின்னிசை
பாடவும்விறலியர்பாடல்கேட்கவும்
ஆடவுமகன்புனலாடியம்மலர்
சூடவும்பொழுதுபோஞ்சிலர்க்கத்தொன்னகர். (சுசு)

முழங்குதிண்கடகரிமுன்பினூரவும்
எழுங்குரத்திவுளியோடிரதமேறவும்
பழங்கணோடிரந்தவர்பரிவுதீர்தர
வழங்கவும்பொழுதுபோஞ்சிலர்க்கம்மாநகர். (சுஎ)

கரியொடுகரியெதிர்பொருத்திக்கைப்படை
வரிசிலைமுதலியவழங்கிவாளுளைப்
புரவியிற்பொருவில் ○ செண்டாடிப்போர்க்கலை
தெரிதலிற்பொழுதுபோஞ்சிலர்க்கச்சேணகர். (சுஅ)

---

* கலைகளாவன-வியாகரணம்,போர்நூல், கணிதநூல்,மனுநூல் இதிகாசம்முதலியவை. † பட்டிமண்டபம்-கல்விதெரியுமண்டபம், இதனைப் 'பட்டிமண்டபமேற்றினை, எனப்பிறருங் கூறுதல் காண்க.

‡ சூளிகை-சிகரம். $ பெண்கள் முகங்களை மாளிகைமலர்வன எனவும், அன்னவைவாளிகளை மலர்வன சிங்கவேறு போல்வார்மார்பிற்றைப் பனவெனவும் பொருளமைத்துக்கொள்க. வாளிகள்கண்களுக்குருவகம்.

○ செண்டாடி என்றது வையாளிவீதியில் விளையாடியென்க.

நந்தனவனத்தலர்கொய்துநவ்விபோல்
வந்திளையவரோடுவாவியாடிவாய்ச்
செந்துவரழிதரத்தேறன்மாந்திச்சூ
துந்தலிற்பொழுதுபோஞ்சிலர்க்கவ்வொண்ணகர் (சுகூ)

வேறு.

நானுவிதமாநளிமாதிரவீதியோடி
மீனூறுவேலைப்புனல்வெண்முகிலுண்ணுமாப்போல்
ஆனாதமாடத்திடையாடுகொடிக்கண்மீப்போய்
* வானாறுநண்ணிப்புனல்வற்றிடநக்குமன்றே. (எ௦)

† வன்றோரணங்கள்புணர்வாயிலும்வானினும்பர்
சென்றோங்கிமேலோரிடமில்லெனச்செம்பொனிஞ்சி
குன்றோங்குதோளார்குணங்கூட்டிசைக்குப்பையென்ன
ஒன்றோடிரண்டுமுயர்ந்தோங்கினவும்பர்நாண. (எக)

காடும்புனமுங்கடலன்னகிடங்குமாதர்
ஆடுங்குளனும்மருவிச்சுனைக்குன்றமும்பர்
வீடும்விரவும்மணிப்பந்தரும் ‡ வீணைவண்டு
பாடும்பொழிலும்மலர்ப்பல்லவப்பள்ளிமன்னே. (எஉ)

தெள்வார்மழையுந்திரையாழியுமுட்கநாளும்
வள்வார்முரசம்மதிர்மாநகர்வாழுமாக்கள்
கள்வாரிலாமைப்பொருள்காவலுமில்லையாதுங்
கொள்வாரிலாமைக்கொடுப்பார்களுமில்லைமாதோ. (எ௩)

கல்லாதுநிற்பார்பிறரின்மையிற்கல்விமுற்ற
வல்லாருமில்லையவைவல்லரல்லாருமில்லை
எல்லாருமெல்லாப்பெருஞ்செல்வமுமெய்தலாலே
இல்லாருமில்லையுடையார்களுமில்லைமாதோ. (எச)

$ ஏகம்முதற்கல்விமுளைத்தெழுந்தெண்ணில்கேள்வி
ஆகம்முதற்றிண்பணைபோக்கியருந்தவத்தின்
சாகந்தழைத்தன்பரும்பித்தருமம்மலர்ந்து
போககனியொன்றுபழுத்ததுபோலுமன்றே. (எ௫)

௩-வது நகரப்படலம் முற்றிற்று.

ஆ- திருவிருத்தம். கசுஎ.

---

* வானாறு-ஆகாயகங்கை. †தோரணவாயிலு மதிலும் தோளார் இசைக்குப்பையென்னு மவ்வொன்றோடு கோபுரமுமதிலுந் தேவர் நாணமிக வோங்கினவென்றுரைத்துக் கொள்க. ‡ வீணைவண்டு-வீணைபோல வண்டென்றியைக்க $ கல்வியாகிய ஒரு முதல் முளைத்து வேற்போந்து எண்ணிறந்த கேள்வியாகிய அம்முதன்மையும் வன்மையுமுடைய கவடுகளைப் போக்கி அருந்தவமாகிய இலைகள் தழைத்து அன்பரும் பித்தருமமாகிய மலர்மலர்ந்து போகமாகியகனியொன்று பழுத்ததுபோலுமெனக்கொள்க. அன்பினை மலராகக் கூறுமை ஏகதேசவுருவகம்.

## ரு-வது. அரசியற்படலம்.

அம்மாணகருக்கரசன்னரசர்க்கரசன்
செம்மாண்டனிக்கோலுலகேழினுஞ்செல்லநின்றான்
இம்மாண்கதைக்கோரிறையாயவிராமனென்னும்
மொய்ம்மாண்கழலோற்றருநல்லறமூர்த்தியன்னான். (க)

ஆதிம்மதியும்மருளும்மறனும்மமைவும்
* ஏதின்மிடல்வீரமுமீகையுமெண்ணில்யாவும்
நீதிந்நிலையும்மிவைநேமியினோர்க்குநின்ற
பாதிம்முழுதும்மிவற்கேபணிகேட்பமன்னோ. (உ)

† மொய்யார்கலிசூழ்முதுபாரின்முகந்துதானக்
கய்யார்புனலானனையாதனகையுமில்லை
மெய்யாயவேதத்துறைவேந்தருக்கேய்ந்தயாரும்
செய்யாதயாகமிவன்செய்துமறந்தமாதோ. (ங)

தாயொக்குமன்பிற்றவமொக்குநலம்பயப்பின்
சேயொக்குமுன்னின்றொருசெல்கதியுய்க்குநீரால்
நோயொக்குமென்னின்மருந்தொக்குநுணங்குகேள்வி
ஆயப்புகுங்காலறிவொக்குமெவர்க்குமன்னான். (ச)

ஈய்ந்தேகடந்தானிரப்போர்கடலெண்ணினுண்ணூல்
ஆய்ந்தேகடந்தானறிவென்னுமளக்கர்வாளால்
காய்ந்தேகடந்தான்பகைவேலைகருத்துமுற்றத்
தோய்ந்தேகடந்தான்றிருவிற்றொடர்போகபௌவம். (ரு)

வேறு.

‡ வெள்ளமும்பறவையும்விலங்கும்வேசியர்
உள்ளமுமொருவழியோடநின்றவன்
தள்ளரும்பெரும்புகழ்த்தயரதப்பெயர்
வள்ளல்வள்ளுறையயின்மன்னர்மன்னனே. (சு)

¶ நேமிமால்வரைமதிலாகநீள்புறப்
பாவமாகடல்கிடங்காகப்பன்மணி

---

* ஏதமென்றது-கடைகுறைந்து நின்றது. † மொய்-வலிமை, ‡மிக்க மழையும் பெயலின்மையு மின்மையான் வெள்ளமுமொரு வழியோடவெனவும்; பறவையும் விலங்கும் தத்தமக்குவேண்டு மூணவுந் தாஞ்சென்றுழிப் பெறுதலின் அவையொருவழியோட வென்வும், தாமடைந்த தலைவனையன்றிப் பிறரெவ்வளவு நிதியமீட்டினும் விழையாமையின் வேசியருள்ளமு மொருவழியோட வெனவுங்கொள்க. மிக்கமழையை அதிவிருட்டியெனவும், பெயலின்மையை அனாவிருட்டி யெனவுங்கூறுவர் வடநூலார். ¶ நேமிமால்வரையே மதிலாகவும், கடலே* யகழியாக்வும்,மலையே மாளிகையாகவும் அரசனுக்கிவ்வுலகம் அயோத்திபோலுமென்றியைக்க

வாமமாளிகைமலையாகமன்னற்குப்
பூமியுமயோத்திமாநகரம்போலுமே. (எ)

* ஆவரும்வன்மைநேரறிந்துதீட்டலால்
மேவருங்கையடைவேலுந்தேயுமால்
கோவுடைநெடுமணிமகுடகோடியால்
சேவடியடைந்தபொற்கழலுந்தேயுமால். (அ)

மண்ணிடையுயிர்தொறும்வளர்ந்துதேய்வின்றி
தண்ணிழல்பரப்பவுமிருளைத்தள்ளவும்
அண்ணறன்குடைமதியமையுமாதலான்
விண்ணிடைமதியினைமிகையிதென்னவே. (கூ)

வயிரவான்பூணணிமடங்கன்மொய்ம்பினான்
உயிரெலாந்தன்னுயிரொப்பவோம்பலாற்
செயிரிலாவுலகினிற் † சென்றுநின்றுவாழ்
உயிரெலாமுறைவதோருடம்புமாயினான். (க0)

குன்றெனவுயரியகுவவுத்தோளினான்
வென்றியந்திகிரிவெம்பரிதியாமென
ஒன்றெனவுலகிடையுலாவிமீமிசை
நின்றுநின்றுயிர்தொறுநெடிதுகாக்குமே. (கக)

எய்யெனவெழுபகையெங்குமின்மையான்
மொய்பொருதினவுறுமுழவுத்தோளினான்
வய்யகமுழுவதும்வறிஞனோம்புமோர்
செய்யெனக்காத்தினிதரசுசெய்கின்றான். (கஉ.)

ரு-வது. அரசியற்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-களஎ.



---

* ஆவர் வன்மையுநேரறிந்து தீட்டலால் என உம்மையை வன்மையி னிடத்திற்கூட்டுக. யாவருமென்றது மரீஇயது.

† சென்று நின்று வாழுயிரெலாம்-இயங்குதிணைநிலைத்திணைகள்.

## ௬-வது, திருவவதாரப்படலம்.



ஆயவனொருபகவயனையேகிகர்
தூயமாமுனிவரற்றொழுதுதொல்குலத்
தாயருந்தந்தையுந்தறமுமன்பினால்
மேயவான்கடவுளும்பிறவும்வேறுநீ. (௧)

எங்குலத்தலைவர்களிரவிதன்னினும்
தங்குலம்விளங்குறத்தரணிதாங்கினார்
மங்குறரில்லெனவரம்பில்வையகம்
இங்குனதருளினாவினிதினோம்பினேன். (௨)

அறுபதினாயிரமாண்டுமாண்டுற
உறுபகையொடுக்கியிவ்வுலகையோம்பினேன்
பிறிதொருகுறையிலையெற்பின்வையகம்
மறுகுறுமென்பதோர்மறுக்கமுண்டரோ. (௩)

அருந்தவமுனிவருமந்தணாளரும்
வருந்துதலின்றியேவாழ்வின்வைகினார்
இருந்துயருழக்குநரெற்பினென்பதோர்
அருந்துயர்வருத்துமென்னகத்தையென்றனன். (௪)

முரசறைசெழுங்கடைமுத்தமாமுடி
அரசர்தங்கோமகனனையகூறலும்
விரைசெறிகமலமென்பொகுட்டுமேவிய
வரசரோருகன்மகன்மனத்தினெண்ணினான். (௫)

அலைகடனடுவணோரநந்தன்மீமிசை
மலையெனவிழிதுயில்வளருமாமுகில்
கொலைதொழிலரக்கர்தங்கொடுமைதீர்ப்பெனென்
றுலைவுறுமமரருக்குரைத்தவாய்மையை. (௬)

சுடுதொழிலரக்கராற்றொலைந்துவானுளோர்
கடுவமர்களனடிகலந்துகூறலும்
படுபொருளுணர்ந்தவப்பரமன்யாமினி
அடுவதில்லெனமறுத்தவரோடேகினான். (௭)

கறைமிடற்றிறைவனுங்கடவுளோர்களும்
மறைமுதற்கிழவனைவந்துநண்ணலும்
முறைமையிற்கடன்முறைமுற்றிமுண்டகத்
திறைவனுமவரொடுமினிதினேகினான். (அ

வடவரைக்குடுமியினடுவெண்மாசறு
சுடர்மணிமண்டபந்துன்னிநான்முகக்
கடவுளையடிதொழுதடிரகண்டகர்
இடிநிகர்வினையமதியம்பினனரோ (௯)

* பாகசாதனன்றனைப்பாசத்தார்த்தடல்
† மேகநாதன்புகுந்திலங்கைமேயநாள்
போகமாமலருறைபுனிதன்மீட்டமை
தோகைபாகற்குறச்சொல்லினனரோ. (௧௦)

இருபதுகரந்தலையீரைந்தென்னுமத்
திருவிலிவலிக்கொருசெயலின்றெங்களால்
கருமுகிலெனவளர்கருணையங்கடல்
பொருதிடர்தணிக்கினுண்டெனும்புணர்ப்பினர். (௧௧)

திரைகெழுபயோததிதுயிலுந்தெய்வவான்
மரகதமலையினைவழுத்திநெஞ்சினுற்
கரகமலங்குவித்திருந்தகாலையிற்
‡பரகதியுணர்ந்தவர்க்குதவுபண்ணவன். (௧௨)

$ கருமுகிறாமரைக்காடுபூத்துநீ
டிருசுடரிருபுறத்தேந்தியேடவிழ்
திருவொடும்பொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவபோற்கலுழன்மேல்வந்துதோன்றினன். (௧௩)

எழுந்தனர்கறைமிடற்றிறையுந்தாமரைச்
செழுந்தவிசுகந்தவத்தேவுஞ்சென்றெதிர்
விழுந்தனரடிமிசைவிண்ணுளோரொடுந்
தொழுந்தொறுந்தொழுந்தொறுங்களிதுளங்குவார். (௧௪)

ஆடினர்பாடினரங்குமிங்குமா
ஓடினருவகைமாநறவுண்டோர்கிலார்
வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
சூடினர்முறைமுறைதுளவத்தாண்மலர். (௧௫)

பொன்வரையிழிவதோர்புயலின்பொற்புற
என்னையாளுடையவன்றோணின்றெம்பிரான்

* பாகசாதனன்-இந்திரன். †மேகநாதன்பிறப்புக்காலத்தில் மேககர்ச்சனைபோல் ஒலித்தமையால் இந்திரஜித்துக்கு மேகநாதனென்னும் பெயர் உண்டாயிற்று.

‡ பரகதிஎன்றது நலமந்தமில்லதோர்நாடாகியபரமபதத்தை. $ இறைவனைமுகிலாகவும், அவரவயவங்களைத் தாமரைமலராகவும், ஆழியையுஞ் சங்கையும் இருசுடராகவும், கருளனைப் பொற்குன்றாகவும் கூறினர். முகிலிடத்துத்தாமரை கூறினமையான் ஈ இல்பொருளுவமை.

சென்னிவான்றடவுமண்டபத்துச்சேர்ந்தரி
துன்னிபொற்பீடமேற்பொலிந்துதோன்றினன், (௧௬)

விதியொடுமுனிவரும்விண்ணுளோர்களும்
மதிவளர்சடைமுடிமழுவலாளனும்
அதிசயமுடனுவந்தயலிருந்துழி
கொதிகொள்வேலரக்கர்தங்கொடுமைகூறினர். (௧௭)

ஐயிருதலையினனனுசராதியாம்
மெய்வலியரக்கரால்விண்ணுமண்ணுமே
செய்தவமிழந்தனதிருவினாயக
உய்திறமில்லையென்றுயிர்ப்புவீங்கினர். (௧௮)

எங்கணீள்வரங்களாலரக்கரென்றுளார்
பொங்குமூவுலகையும்புடைத்தழித்தனர்
செங்கணாயகவினித்தீர்த்தலில்லையேல்
நுங்குவருலகையோர்நொடியினென்றனர். (௧௯)

என்றனரிடருழந்திறைஞ்சியேத்தலும்
மன்றலர்துளவினன்வருந்தல்வஞ்சகர்
தந்தலையறுத்திடர்தணிப்பொன்றூரணிக்
கொன்றுநீர் * கேண்மெனவுரைத்தன்மேயினன். (௨௦)

வானுளோரனைவரும்வானரங்களாக்
கானினும்வரையினுங்கடிதடத்தினும்
சேனையோடவதரித்திமின்சென்றெனு
ஆனனமலர்ந்தனனருளினாழியான். (௨௧)

† மசரதமனையவர்வரமும்வாழ்வுமோர்
நிசரதகனைகளானீறுசெய்யயாம்
கசரதுரகமாக்கடல்கொள்காவலன்
தசரதன்மதலையாவருதுந்தாரணி. (௨௨)

வளையொடுதிகிரியும்வடவைதீதர
விளைதருகவுடைவிரிகொள்பாயலும்
இளைஞர்களெனவடிபரவவேகிநாம்
வளமதிலயோத்தியில்வருதுமென்றனன். (௨௩)

என்றவனுரைத்தபோதெழுந்துதுள்ளினர்
நன்றிகொண்மங்கலநாதம்பாடினர்
மன்றலர்செழுந்திளவனியுமாயனூர்
இன்றெமையளித்தனரென்னுமேம்பலால். (௨௪)

* கேளும் என்பது கேண்மென நின்றது. இது மகரக்குறுக்கம்.
† மசரதனைமனையவர்-பேய்த்தேரன்னவர்.

வேறு.

போயதெம்பொருமலென்னுவிந்திரனுவகைபூத்தான்
தூயமாமலருளோனுஞ்சுடர்மதிசூடினோனும்
சேயுயர்விசும்புளோருந்தீர்ந்ததெஞ்சிறுமையென்றார்
மாயிருஞாலமுண்டோன்கலுழன்மேற்சரணம்வைத்தான். (உ௫)

என்னையாளுடையவையன்கலுழன்மீதெழுந்துபோய
பின்னர்வானவரைநோக்கிப்பிதாமகன்பேசுகின்றான்
முன்னரே * யெண்கின்வேந்தன்யானெனமொழிகின்றான்மற்
றன்னவாறெவருநீர்போயவதரித்திடுமினென்றான். (உ௬)

தருவுடைக்கடவுள்வேந்தன்சாற்றுவானெனதுகூறு
மருவலர்க்கசனியன்னவாலியுமகனுமென்ன
இரவிமற்றெனதுகூறங்கவற்கிளையவனென்றோத
அரியுமற்றெனதுகூறுநீலனென்றறைந்திட்டானால். (உ௭)

வாயுமற்றெனதுகூறுமாருதியெனலுமற்றோர்
காயுமற்கடங்களாகிக்காசினியதனின்மீது
போயிடத்துணிந்தோமென்றார்புராரிமற்றியானேவாத
சேயெனப்புகன்றான்மற்றைத்திசையுளோர்க்கவதியுண்டோ. (உ௮)

அருடருகமலக்கண்ணனருண்முறையலருளோனும்
இருடருமிடற்றினோனுமமருமினையராகி
மருடருவனத்தின்மண்ணின்வானரராகிவந்தார்
பொருடருமிருவர்தத்தமுறைவிடஞ்சென்றுபுக்கார். (உ௯)

ஈதுமுன்னிகழ்ந்தவண்ணமெனமுனியிதயத்தெண்ணி
† மாதிரம்பொருததிண்டோள்மன்னநீவருந்தலேழ்
பூதலமுழுதுங்காக்கும்புதல்வரையளிக்கும்வேள்வி
தீதறமுயலினையசிந்தைநோய்தீருமென்றான். (௩0)

என்னமாமுனிவன்கூறவெழுந்தபேருவகைபொங்க
மன்னவர்மன்னனந்தமாமுனிசரணஞ்சூடி
உன்னையபுகல்புக்கேனுக்குறுகண்வந்தடைவதுண்டோ
அன்னதற்கடியேன்செய்யும்பணியினிதளித்தியென்றான். (௩க)

மாசறுசுரர்களோடுமற்றுளோர்தமையுமீன்ற
காசிபனருளுமைந்தன்விபாண்டகன்கங்கைசூடும்
ஈசனும்புகழ்தற்கொத்தோனிருங்கலைபிறவுமெண்ணில்
தேசுடைத்தந்தையொப்பான்றிருவருள்புனைந்தமைந்தன். (௩உ)

* எண்கு-கரடி. † மாதிரம்-மலை, திக்குமென்பாருமுளர்.

வருக்கலைபிறவுநீதிமனுநெறிவரம்பில்வாய்மை
தருகலைமறையுமெண்ணிற்சதுமுகற்குவமைசான்றோன்
இருகலையுடையவிந்தச்செகத்துளோர்தன்மைதேரா
ஒருகலைமுகச் * சிருங்கமுயர்தவன்வருதல்வேண்டும். (௩௩)

பாந்தளின்மகுடகோடிபரித்தபாரதனில்வைகும்
மாந்தர்கள்விலங்கென்றுன்னுமனத்தன்மாதவத்தனெண்ணில்
பூந்தவிசுகந்துளோனும்புராரியும்புகழ்தற்கொத்த
சாந்தனல்வேள்விமுற்றிற்றனையர்களுளராமென்றான். (௩௪)

ஆங்குரையினையகூறுமருந்தவர்க்கரசன்செய்ய
பூங்கழற்றொழுதுவாழ்த்திப்பூதலமன்னர்மன்னன்
தீங்கறுகுணத்தான்மிக்கசெழுந்தவன்யாண்டையுள்ளான்
ஈங்கியான்புரியுந்தன்மையருளுதியிறைவவென்றான். (௩௫)

வேறு.

† புத்தானகொடுவினையோடருந்துயரம்போயொளிப்பப்புவனந்தாங்கும், சத்தானகுணமுடையோன்றயையினொடுந் தண்ணளியின்சாலைபோல்வான், எத்தானும்வெலற்கரியான் மனுகுலத்தேவந்துதித்தோ னிலங்குமௌலி, உத்தானபாதனருளுரோமபதனென்றுளனிவ்வுலகையாள்வான்.

அன்னவன்றன்புரந்தளிக்குந்திருநாட்டினெடுங்காலமளவதாக,மின்னியெழுமுகிலின்றிவெந்துயரம்பெருகுதலும்வேதனன்னூல், மன்னுமுனிவரையழைத்துமாதானங்கொடுக்கினும்வான்வழங்காதாகப், பின்னுமுனிவரர்க்கேட்பக்கலைக்கோட்டுமுனிவரின்வான் ‡ பிலிற்றுமென்றார். (௩௭)

ஓதநெடுங்கடலாடையுலகினில்வாழ்மனிதர்விலங்கெனவேயுன்னும், கோதில்குணத்தருந்தவனைக் கொணரும்வகையாவதெனக் குனிக்கும்வேலை, சோதிநுதற்கருநெடுங்கட்டுவரிதழ்வாய்த்தரளநகைத்துணைமென்கொங்கை, மாதரெழுந்தியாமேகியருந்தவனைக்கொணர்துமெனவணக்கஞ்செய்தார். (௩௮)

ஆங்கவரம்மொழியுரைப்பவரசன்மகிழ்ந்தவர்க்கணிதூசாதியாய [தோள்
பாங்குளமற்றவையருளிப்பனிப்பிறையைப்பழித்தநுதற்பணைத்தவேய்த்
எங்குமிடைதடித்தமுலையிருண்டகுழன்மருண்டவிழியிலவச்செவ்வாய்ப்
பூங்கொடியீரேகுவெனத்தொழுதிறைஞ்சியிரதமிசைப்போயினரே. (௩௯)

வேறு.

ஓசனைபலகடந்தினியொரோசனை
ஏசறுதவனுறையிடமிதென்றுழி
பாசிழைமடந்தையர்பன்னசாலைசெய்
தாசறுமருந்தவத்தவரின்வைகினார். (௪௦)

* சிருங்கம்—கொம்பு. † புத்-ஓர் நரகவிசேடம். ‡ பிலிற்றல்—துளித்தல்.

அருந்தவன் றந்தையையற்றநோக்கியே
கருந்தடங்கண்ணியர்கலைவலாளனிற்
பொருந்தினர்பொருந்துபுவிலங்கெனுப்புரிச்
திருந்தவரிவரெனவினையசெய்தனன். (சக)

* அருக்கியமுதலினேடாசனங்கொடுத்
திருக்கெனவிருந்தபின்னினியகூறலும்
முருக்கிதழ்மடந்தையர்முனிவனைத்தொழாப்
பொருக்கெனவெழுந்துபோய்ப்புரையுட்புக்கனர். (சஉ)

திருந்திழையவர்சிலதினங்கடேர்ந்தழி
மருந்தினுமினியனவருக்கைவாழைமாத்
† தருந்தருங்கனியொடுதாழையின்பலம்
அருந்தவருந்தெனவருளினரரோ. (சங)

இன்னனபல்பகலிறந்தபின்றிரு
நன்னுதன்மடந்தையர்நவையின்மாதவன்
றன்னையெம்மிடத்தினுஞ்சார்தல்வேண்டுமென்
றன்னவர்தொழுதலுமவரொடேகினன். (சச)

விம்முறுமுவகையர்வியந்தநெஞ்சினர்
அம்மவிதிதுவெனவகலுநீணெறி
செம்மையின்முனிவரன்றெடரச்சென்றனர்
தம்மனமெனமருட்டையலார்களே. (சரு)

‡ வளநகர்முனிவரன்வருமுன் § வானவன்
களனமர்கடுவெனக்கருகிவான்மிசைச்
சளசளவெனமழைத்தாரைகான்றன
குளனொடுநதிகடங்குறைகடீரவே. (சசா)

பெரும்புனனதிகளுங்குளனும்பெட்பறக்
கரும்பொடுசெந்நெலுங்கவின்கொண்டோங்கிட
இரும்புயல்ககனமீதிடைவிடாதெழுந்
0 தரும்புனல்சொரிந்தபோதரசுணர்ந்தனன். (சஎ)

---

* அருக்கியமுதலினேடென்றமையால் அருக்கியம், பாத்யம் ஆசமனம் என்னும் மூன்றுங்கொள்ளப்படும். அருக்கியம் கலையில் தெளித்துக்கொள்ளுதற்குரிய நீர். பாத்யம்—கால்கழுவுதற்குரிய நீர், ஆசமநம்-உட்கொள்ளுதற்குரிய நீர், இவற்றை கைந்நீர், அடிநீர் முக்குடிநீரெனவும் பொருந்தும்.

† தருந்தருங்கனி-மெலிந்தநின்றது, ‡ வளநகரென்றார். இதுகாறுமிந்நகர் வளமில்லாததாக முனியன் போந்தமையான் வளனெய்தலின். § வானவன்நண்டு-மூக்கட்கடவுளை புணர்த்திற்று. 0 அரும்புனலென்றார் இதுகாறும் வான்பிலிற்றாதபெய்தலின்.

காமமும்வெகுளியும் * களிப்புங்கைத்தெழு
கோமுனியிவணடைந்தனன்கொல்கொவ்வைவாய்த்
தாமரைமலர்முகத்தரளவாணகைத்
தூமமென்குழலியர்புணர்த்தசூழ்ச்சியால். (௪௮)

என்றெழுந்தருமறைநமுனிவர்யாரொடும்
சென்றிரண்டியோசனைசேனைசூழ்ந்தர
மன்றலங்குழலியர்நவெண்மாதவக்
குன்றினையெதிர்ந்தனன்குவவுத்தோளினான். (௪௯)

வீழ்ந்தனனடிமிசைவிழிகணீர்தர
வாழ்ந்தனெமினியெனமகிழுஞ்சிந்தையான்
தாழ்ந்தெழுமாதரார்தம்மைநோக்கிநீர்
† போழ்ந்தனிரெனதிடர்புணர்ப்பினாலென்றான். (௫௦)

அரசருமுனிவருமடைந்தவாயிடை
வரமுனிவஞ்சமென்றுணர்ந்தமாலைவாய்
வெருவினர்விண்ணவர்வேந்தன்வேண்டலால்
‡ கரையெறியாதலைகடலும்போன்றனன். (௫௧)

வள்ளுறுவயிரவாண்மன்னன்பன்முறை
எள்ளருமுனிவனையிறைஞ்சியாரினும்
தள்ளருந்துயரமுஞ்சமைவுஞ்சாற்றலும்
உள்ளுறுவெகுளிபோயொளித்ததாமரோ. (௫௨)

அருள்சுரந்தரசனுக்காசியுங்கொடுத்
தருடருதேரின்மீதொல்லையேறினன்
¶ பொருடருமுனிவருந்தொடரப்போயினன்
மருளொழியுணர்வுடைவரதமாதவன். (௫௩)

அடைந்தனன்வளநகரலங்ககரித்தெதிர்
மிடைந்திடமுனியொடுவேந்தன்சோயில்புக்
கொடுங்கவில்பொற்குழாத்துறையுளெய்தியோர்
மடங்கலாதனத்திடைமுனியைவைத்தனன். (௫௪)

அருக்கியமுதலியகடன்களாற்றிவே
றுரைக்குவதிலதெனவுவந்துதானருள்
முருக்கிதழிளமுலை § முகநலாடனை
§ இருக்கொடுவிதிமுறையினிதினீந்தனன். (௫௫)

---

* களிப்பு-மயக்கம், போழ்தல்-பிளத்தல். ‡ கரையெறியாத-ஈறுதொகுத்தல்-பெற்றது. ¶ பொருடருமுனிவர்-மெய்ம்மைப்பொருளையுபதேசிக்கு முற்றத்துறந்தமுனிவர். முகநலாள்-அழகான முகத்தையுடையபெண், பெண்ணின் பெயரெனக்கூறுவாருமுளர். § இருக்கொடுவிதிமுறை என்புழி ஒடு உருபு ஆனுருபின்பொருளது.

வறுமைநோய்தணிதரவான்வழங்கவே
உறுதுயர்தணிந்தவ்வுலகம்வேந்தருள்
செறிகுழல்போற்றிடத்திருந்துமாதவத்
தறிஞன் * டிருக்குநனரசவென்றனன். (௫௬)

வேறு.

என்றலுமேமுனிவரன்றன்னடியிறைஞ்சியீண்டேகிக்கொணர்வெனென்
றுன்றுகழன்முடிவேந்தரடிபோற்றச்சுமந்திரனேமுதல்வராய [ஞ
வன்றிறல்சேரமைச்சரொடுமாமணித்தேரேறுதலும்வானோர்வாழ்த்தி
இன்றெம்துவினைமுடிந்ததெனச்சொரிந்தார்மலர்மாரியிடைவிடாமல். ()

காகளமும்பல்லியமுங்கனைகடலின்மேன்முழங்கக்கானம்பாட
மாகதர்களருமறைநூல்வேதியர்கள்வாழ்த்தெடுப்பமதுரச்செவ்வாய்த்
தோகையர்பல்லாண்டிசைப்பக்கடற்றானைபுடைசூழச்சுடரோனென்ன
ஏகியருநெறிநீங்கியுரோமபதன்றிருநாட்டையெதிர்ந்தானன்றே. (௫௮)

கொழுந்தோடிப்படர்கீர்த்திக்கோவேந்தனடைந்தமைசென்றொற்றர்கூற
கழுந்தொடும்வரிசிலைக்கைக்கடற்றானைபுடைசூழக்கழற்கால்வேந்தன்
செழுந்தோடும்பல்கலனும்வில்வீச † மாகதர்கள்திரண்டுபாட
எழுந்தோடுமூவகையுடன்யோசனைசென்றானரசையெதிர்கொளெண்ணி.

எதிர்கொள்வான்வருகின்றவயவேந்தன்றனைக்கண்ணுற்றெழிலிநாண
அதிர்கின்றபொலந்தேர்நின்றரசர்பிரானிழிந்துழிச்சென்றடியின்வீழ
முதிர்கின்றபெருங்காதறழைத்தோங்கவெடுத்திறுகமுயங்கலோடும்[கான்
கதிர்கொண்டசுடர்வேலான்றனைநோக்கியிவையுரைத்தான்களிப்பின்மிக்

யான்செய்தமாதவமோவிவ்வுலகஞ்செய்தவமோயாதோவிங்கண்
‡ வான்செய்தசுடர்வேலோயடைந்ததெனமனமகிழமணித்தேரேற்றித்[வர்
தேன்செய்ததார்மௌலித்தேர்வேந்தைச்செழுநகரிற்கொணர்ந்தான்றெவ்
ஊன்செய்தசுடர்வடிவேலுரோமபதனென்றுரைக்குமுரவுத்தோளான். ()

ஆடகப்பொற்சுடரிமைக்குமணிமாடத்திடையொருமண்டபத்தையண்மி
பாடகச்செம்பதுமமலர்ப்பாவையர்பல்லாண்டிசைப்பப்பைம்பொற்பீடத்
¶ தேடுதுற்றவடிவேலோன்றனையிருத்திக்கடன்முறைகள்யாவுமீந்து
தோடுதுற்றமலர்த்தாரான்விருந்தளிப்பவினிதுகந்தான் § சுரர்நாடீந்தான்.

---

* இருக்குநனென்றதில் நகரம் நிகழ்காலம் காட்டிற்று.

† மாகதர்-நின்று புகழ்வோர். ‡ இந்திரனுக்குச் சம்பரனைவெற்றிகொண்டு இந்திர பதமளித்த பெருமிதந்தோன்றி வான்செய்த சுடர்வேலோய் என்றார். வான்செய்த சுடர்வேல்-ஆகாயத்தில் விளங்குகின்ற சூரியனையொத்த வேல் அல்லது மேலான காந்தியையுடைய வேல் என்றும் பொருளுரைத்தலுமாம்.

¶ எடுதுற்றவடிவேல்-இலைவடிவாகச் செய்யப்பட்டவேல். § சுரர்நாடீந்தானென்பதற்கு 'வான்செய்த சுடர்வேலோய்' என்றதற்குரைத்தாங்குரைக்க.

செவ்விநறுஞ்சாந்தளித்துத்தேர்வேந்தன் றனைநோக்கியிவணீசேர்ந்த
கவ்வையுரைத்தருள்கவெனநிகழ்ந்தபரிசரசர்பிரான்கழறலோடும்
*அவ்வியநீத்துயர்ந்தமனத்தருந்தவனைக்கொணர்ந்தாங்கண்விடுப்பனுன்ற
செவ்விமுடியோயெனலுந்தேரேறிச்சேனையொடயோத்திசேர்ந்தான். ()

மன்னர்பிரானகன்றதற்பின்வயவேந்தனருமறைநூல்வடிவங்கொண்ட
தன்னமுனிவரனுறையுடனையனுகியிணையடித்தாமரைகளம்பொன்
மன்னுமணிமுடியணிந்தவரன்முறைசெய்திடவிவணீவருதற்கொத்த
தென்னையெனவடியேற்கோர்வரமருளுமடிகளெனயாவதென்றான். (௬௪)

† புறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்கபெருந்தகைதன்புகழிற்பூத்த
அறனென்றுதிருமனத்தானமரர்களுக்கிடரிழைக்குமவுணராயோர்
திறலுண்டவடிவேலான்றசரதனென்றுயர்கீர்த்திச்செங்கோல்வேந்தன்
விறல்கொண்டமணிமாடயோத்திநகரடைந்திவணீமீடலென்றான். (௬௫)

அவ்வரந்தந்தன மினித்தேர்கொணர்தியென வருந்தவத்தோனறைதலோடும், வெவ்வரந்தின்றயில்படைக்குஞ் சுடர்வேலோ னடிமிறைஞ்சி வேந்தர்வேந்தன், கவ்வையொழிந்துயர்ந்தனனென்றதிர்குரற்றேர் கொணர்ந்த தனிற்கலைவலாளன், செவ்விநுதற்றிருவினொடும் போந்தேறுகெனவேறிச் சிறந்தான்மன்னோ. (௬௬)

வேறு.

குனிசிலைவயவனுங்கரங்கள்கூப்பிடத்
துனியறுமுனிவரர்தொடர்ந்துசூழ்வர
வனிதையு ‡ மருமறைவடிவுபோன்றொளிர்
முனிவனும்பொறிமிசைநெறியைமுன்னினார். (௬௭)

அந்தரதுந்துமிமுழக்கியாய்மலர்
சிந்தினர்களித்தனரமுந்தேவரும்
வெந்தெழுகொடுவினைவீழ்க்குமெய்ம்முதல்
வந்தெழவருடருவானென்றெண்ணியே. (௬௮)

தூதுவரவ்வழியயோத்திதுன்னினார்
மாதிரம்பொருததோண்மன்னர்மன்னன்முன்
ஓதினார்முனிவரவோதவேந்தனும்
காதலென்றளவறுகடலுளாழ்ந்தனன். (௬௯)

எழுந்தனன்பொருக்கென விரதமேறினன்
பொழிந்தனமலர்மழையாசிபூத்தன

* அவ்வியநீத்துயர்ந்தமனத்தருந்தவன்—கலைக்கோட்டுமுனிவன்.

† புறவொன்றின்பொருட்டாகத்துலைபுக்க பெருந்தகையென்றது சிபியரசனை. இதனை 'அன்பிலவொல்லா' மென்புழிப்பரிமேலழகர் கூறலானுமுணர்க.

‡ அருமறைவடிவுபோன்றொளிர்முனிவரன்-கலைக்கோட்டு முனிவன்.

மொழிந்தனபல்லியமுரசமார்த்தன
விழுந்தனதீவினைவேரினோடுமே. (எ0)

பிதிர்ந்ததெம்மனத்துயர்ப்பிறங்கலென்றுகொண்
டதிர்ந்தெழுமுரசுடையரசர்கோமகன்
* முதிர்ந்தமாதவமுடைமுனியைக்கண்களால்
எதிர்ந்தனன்யோசனையிரண்டொடொன்றினே. (எக)

நற்றவமனைத்துமோர்நவையிலாவுருப்
பெற்றிவணடைந்தெனப்பிறங்குவான்றனைச்
சுற்றியசீரையுமுழையின்றோற்றமும்
முற்றுறப்பொலிதருமூர்த்தியான்றனை. (எஉ)

அண்டர்கயெரமுமரக்கராற்றலும்
விண்டிடப்பொலிதரும்வினைவலாளனைக்
குண்டிகைகுடையொடுகுலவுநூன்முறைத்
தண்டொடுபொலிதருதடக்கையான்றனை. (எ௩)

இழிந்துபோயிரதமாண்டிணைகொடாண்மலர்
விழுந்தனன்வேந்தர்தம்வேந்தன்மெய்ம்மையான்
மொழிந்தனஞசிகண்முதியநான்மறைக்
கொழுந்துமேற்படர்தரக்கொள்கொம்பாயினான். (எச)

அயல்வருமுனிவருமாசிகூறிடப்
புயல்பொழிதடக்கையாற்றொழுதுபொங்குநீர்க்
கயல்பொருவிழியொடுகலைவலாளனை
இயல்பொடுகொணர்ந்தனனிரதமேற்றியே. (எரு)

அடிகுரன்முரசதிரயோத்திமாநகர்
முடியுடைவேந்தனம்முனிவனோடுமோர்
கடிகையினடைந்தனன்கமலவாண்முக
வடிவுடைமடைந்தையர்வாழ்த்தெடுப்பவே. (எசு)

கசட்டுறு † வினைத்தொழிற்கள்வராயுழல்
அசட்டர்களைவரையறுவராக்கிய
வசிட்டனுமருமறைவடிவுபோன்றொளிர்
விசிட்டனும்வேந்தவைபொலியமேவினர். (எஎ)

---

* முதிர்ந்த மாதவமுடை முனியை, பிறங்குவான்றனை, மூர்த்தியான்றனை, வினைவலாளனை, தடக்கையான்றனைக் கண்களால் யோசனையிரண்டோடொன்றின் எதிர்ந்தனனெனக் கூட்டி முடிக்க.

† வினைத்தொழில் ஒருபொருட்பன்மொழி, ஈண்டுத் தீவினையை யுணர்த்திற்று

மாமணிமண்டபமன்னிமாசறு
தூமணித்தவிசிடைச்சுருதியேநிகர்
கோமுனிக்கரசனையிருத்திக்கோள்கடன்
ஏமுறத்திருத்திவேறினையசெப்பினான். (எஅ)

சான்றவர்சான்றவதருமமாதவம்
போன்றொளிர்புனிதநின்னருளிற்பூத்தவென்
* ஆன்றதொல்குலமினியரசின்வைகுமால்
யான்றவமுடைமையுமிழப்பின்றாமரோ. (எகூ)

என்னலுமுனிவரனினிதுநோக்குறா
† மன்னவர்மன்னகேள்வசிட்டனென்றெனும்
நன்னெடுந்தவன்றுணைநவையில்செய்கைநீ
நின்னையிவ்வுலகினினிருபர்நேர்வரோ. (அ0)

என்றனபற்பலவினிமைகூறிநற்
குன்றுறழ் ‡ வரிசிலைக்குவவுத்தோளினாய்
நன்றிகொளரிமகநடத்தவெண்ணியோ
இன்றெனையழைத்ததிங்கியம்புவாயென்றான். (அக)

உலப்பில்பல்லாண்டெலாமுறுகணின்றியே
தலப்பொறையாற்றினன்றனையர்வந்திலர்
§ அலப்புநீருடுத்தபாரளிக்குமைந்தரை
நலப்புகழ்பெறலினிநல்கல்வேண்டுமால். (அஉ)

என்றலுமரசநீயிரங்கலிவ்வுல
கொன்றுமோவுலகமீரேழுமோம்பிடும்
வன்றிறன் ¶ மைந்தரையளிக்குமாமகம்
இன்றுநீயியற்றுதற்கெழுகவீண்டென்றான். (அங)

ஆயதற்குரியனகலப்பையாவையும்
ஏயெனக்கொணர்ந்தனர்நிருபர்க்கேந்தலும்
தூயநற்புனல்படிஇச்சுருதிநூன்முறை
சாய்வறத்திருத்தியசாலைபுக்கனன். (அச)

முழங் ٥ கழன் மும்மையுமுடுகியாகுதி
வழங்கியேயீராறுதிங்கள்வாய்த்தபின்

* இட்சுவாகுதொட்டுவந்த அரசர் பரம்பரையாதலின் ஆன்ற தொல்குலமென்றார். † மன்னவர் மன்ன-சக்கரவர்த்தியே. ‡ அரிமகம்-பரிமேதம், § அலப்புநீர்-கடல். ¶ மைந்தரையளிக்குமாமகம்-புத்திரகாமேஷ்டியாகம்,

٥ அழன் - மும்மையுமென்றது ஆகவானீயம், தக்ஷிணாக்கினி காருகபத்தியம் என்பவற்றை. இதனை 'முத்தீச்செல்வத திருபிறப்பாளர்' என்புழி நச்சினார்க்கினியர் கூறலானுமறிக. † உரியமாதர்மூண்டு-பட்டமகிஷிகள் மூவர்.

தழங்கின துந்துபிதாவில்வானகம்
விழுங்கினர்விண்ணவர்வெளியின்றென்னவே. (அரு)

முக்மலரொளிதரமொய்த்துவானுளோர்
அகவிரைநறுமலர்தூவியார்த்தெழத்
தகவுடைமுனியுமத்தழலினுப்பணே
மகவருளாகுதிவழங்கினானரோ. (அசு)

ஆயிடைக்கனலினின்றம்பொற்றட்டமீ
தூயநற்சுதைரிகர்பிண்டமொன்றுசூழ்
தீயெரிப்பங்கியுஞ்சிவந்தகண்ணுமா
ஏயெனப்பூதமொன்றெழுந்ததேந்தியே. (அஎ)

வைத்தது தரைமிசைமறித்துமவ்வழி
தைத்ததுபூதமத்தவனும்வேந்தனை
உய்த்தநல்லமிர்தினை * யுரியமாதர்கட்
கத்தகுமரபினாலளித்தியாலென்றான். (அஅ)

மாமுனியருள்வழிமன்னர்மன்னவன்
தூமமென்சுரிகுழற்றொண்டைத்தூயவாய்க்
காமரொண்கௌசலைகரத்தினோர்பகிர்
தாமுறவளித்தனன்சங்கமார்த்தெழ. (அகூ)

கைகயன்றனையைதன்கரத்துமம்முறைச்
செய்கையினளித்தனன்தேவரார்த்தெழப்
பொய்கையுநதிகளும்பொழிலுமோதிமம்
வைகுறுகோசலைமன்னர்மன்னனே. (கூ0)

† நமித்திரர்நடுக்குறுநலங்கொண்மொய்ம்புடை
நிமித்திருமரபுளான்முன்னர்நீர்மையிற்
சுமித்திரைக்களித்தனன்சுரர்க்குவேந்தினிச்
‡ சமித்ததென்பகையெனத்தமரொடார்ப்பவே. (கூக)

$ பின்னுமப்பெருந்தகைபிதிர்ந்துவீழ்ந்தவை
தம்மையுஞ்சுமித்திரைதனக்குநல்கினான்
ஒன்னலர்க்கிடமும்வேறுலகினோங்கிய
மன்னுயிர்தமக்குநீள்வலமுந்துள்ளவே. (கூஉ)

வாம்பரிவேள்வியுமகவைநல்குவ
தாம்புரையாகுதிபிறவுமந்தணன்

---

* உரியமாதர் என்றது ஈண்டு–பட்டமகிஷிகள் மூவர். † நமித்திரர்–பகைவர். ‡ சமித்தது–அடங்கிற்று. $ பின்னும் வினைமாற்றுப்பொருளில் வருவதோரிடைச்சொல்.

ஓம்பிடமுடிந்தபினுலகுகாவலன்
ஏம்பலொடெழுந்தனன்யாருமேத்தவே. (கூ௩)

முருடருபல்லியமுழங்கியார்த்தன
இருடருமுலகமுமிடருநீங்கின
தெருடருவேள்வியின்கடன்கழிந்தூழி
அருடருமவையின்வந்தரசனெய்தினன். (கூ௪)

செய்ம்முறைசடன்முறைதிறம்பலின்றியே
மெய்ம்முறைகடவுளுக்கீந்துவிண்ணுளோர்க்
கம்முறையளித்துநீடந்தணாளர்க்கும்
கைம்முறைவழங்கினன்கனகமாரியே. (கூ௫)

வேந்தர்கட்கரசொடுவெறுக்கைதேர்பரி
வாய்ந்தநற்றுகிலொடுவரிசைக்கேற்பன
ஈய்ந்தனன்பல்லியந்துவைப்பவேகிநீர்
தோய்ந்தனன்சரயுநற்றுறைக்கணெய்தியே. (கூ௬)

முரசினங்கறங்கிடமுத்தவெண்குடை
விரசிடுநிழறரவேந்தர்சூழ்தர
அரசவையடைந்துழியயனுநாணுற
உரைசெறிமுனிவர்தாள்வணங்கியோங்கினன். (கூ௭)

அரியநற்றவமுடைவசிட்டனுணையால்
* இரலைநற்சிருங்கமாவிறைவன்றனொடொழா
உரியபற்பலவுரைபயிற்றியுய்ந்தனன்
பெரியநற்றவவினிப்பெறுவதியாதென்றான். (கூ௮)

எந்தைநின்னருளினலிடரினீங்கியே
உய்ந்தனனடியனேனென்னவொண்டவன்
சிந்தையுண்மகிழ்ச்சியால்வாழ்த்தித்தேர்மிசை
வந்தமாதவரொடும்வழிக்கொண்டேகினன். (கூ௯)

† வாங்கியதுயருடைமன்னன்பின்னரும்
பாங்குடைமுனிவர்தாள்பழிச்சியேத்தல்கொண்
டோங்கியவுவகையராசியோடெழா
நீங்கினரிருந்தனனேமிவேந்தனே. (௧00)

தெரிவையர்மூவருஞ்சிறிதுநாட்செலீஇ
மருவியவயாவொடுவருத்தந்துய்த்தலால்

---

* இரலைநற்சிருங்கமாவிறைவன்—கலைக்கோட்டுமுனி.
† வாங்கியதுயர்—துன்பம்நீங்கின.

பொருவருதிருமுகமன்றிப்பொற்புநீ
டுருவமுமதியமொடொப்பத்தோன்றினர். (௧0௧)

ஆயிடைப்பருவம்வந்தடைந்தவெல்லையின்
மூயிரும்புவிமகண்மகிழ்வினேங்கிட
வேய்புநர்பூசமும்விண்ணுளோர்களும்
தூயகர்க்கடகமுமெழுந்துதுள்ளவே. (௧0௨)

சித்தருமியக்கருந்தெரிவைமார்களும்
வித்தகமுனிவரும்விண்ணுளோர்களும்
நித்தருமுறைமுறைநெருங்கியார்ப்புறத்
தத்துறவொழிந்துநீடருமமோங்கவே. (௧0௩)

ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந்
தருமறைக்குணர்வருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ்சோதியைத்
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை. (௧0௪)

ஆசையும்விசும்புநின்றமரரார்த்தெழ
வாசவன்முதலினர்வணங்கிவாழ்த்துறப்
பூசமுமீனமும்பொலியநல்கினாள்
மாசறுகேகயன்மாதுமைந்தனை. (௧0௫)

தளையவிழ்தருவுடைச் * சயிலகோபனுங்
கிளையுமந்தரமிசைகெழுமியார்ப்புற
அளைபுகுமரவினோடலவன்வாழ்வுற
இளையவற்பயந்தனளிளையமென்கொடி. (௧0௬)

படங்கிளர்பஃறலைப்பாந்தளேந்துபார்
நடங்கிளர்தரமறைநவிலநாடகம்
மடங்கலுமகமுமேவாழ்வினேங்கிட
விடங்கிளர்விழியிணைமீட்டுமீன்றனள். (௧0௭)

ஆடினரரம்பையரமுதவேழிசை
பாடினர்கின்னரர்துவைத்தபல்லியம்
வீடினரரக்கரென்றுவக்கும்விம்மலால்
ஓடினருலவினரும்பர்முற்றுமே. (௧0௮)

ஓடினரரசன்மாட்டுவகைகூறநின்
றூடினர்சிலதியரந்தணாளர்கள்
கூடினர்நாளொடுகோளுநின்றமை
நாடினருலகினிநவையின்றென்றனர். (௧0௯)

---

* சயிலகோபன்–பூருவத்தில் மலைகளைக்கோபித்துச் சிறகுகளைவெட்டினன் ஆதலால் இந்திரனுக்குச் சயிலகோபனென்று பெயர் வழங்கிவருகின்றது.

மேடமாமதிதிதிநவமிமீன்கழை
நீடுறுமாலைகற்கடகநீதிசேர்
ஒடைமாகளிறனுனுதயராசிகோள்
நாடிஏகாதசர்நால்வருச்சரே. (கக௦)

நீதி-ஒழுக்கமானது, சேர்-சேர்ந்த, ஓடை-நுதலணியையுடைய, மா-பெருமை பொருந்திய, களிறு-யானையை, அனன்-ஒத்தவனாகிய (இராமமூர்த்தியினது அவதார காலையில்) மா-பெருமைபொருந்திய, மதி-மாஸமானது, மேடம்-மேஷமாயும், திதி-திதியானது, நவமி-நவமியாயும், மீன்-நட்சத்திரமானது, கழை-புநர்பூசமாயும், கற்கடகம்-கடகமானது, உதயராசி-உதயமும், இருசிலக்கினமாகிய சந்திரலக்கினமுமாயும், மால்-புதன், ஐ-ராஜஸ்தானமாகிய பத்தாமிடத்திலும், கோள்-கேதுவிற்கு, நாடு-மிதுனமானது இல்-வீடாயும், ஏகாதசர்-பதினொன்றுக்குடையவர், நால்வர்-நான்குபேர், உச்சர்-உச்சஸ்தானத்திலும், நீடுறும்-பலமாயிருக்கும், ஏகாரம்-தேற்றம்.

இராமர் ஜாதகம்.

| | | | |
|---|---|---|---|
| சுக்கிரன் | சூரியன் புதன் | | கேது |
| | இராசி | | சந்திரன் லக்கினம் குரு |
| செவ்வாய் | | | |
| இராகு | | சனி | |

என்றனர்சாதக * மீசற்கேனையர்
தன்றனக்குகந்தமுறையிற்றுன்றெறிந்
தொன்றியதமனியத்தெழுதியோதினர்
வன்திறற்சுரர்குருவாழ்த்தெடுப்பவே. (ககக)

மாமுனிதன்னொடுமன்னர்மன்னவன்
ஏமுறப்புனல்படிஇவித்தொடின்பொருள்
தாமுறவழங்கிவெண்சங்கமார்ப்புறக்
கோமகர்திருமுகங்குறுகிநோக்கினன். (ககஉ)

இறைதவிர்ந்திடுகபார்யாண்டொரேழ்நிதி
நிறைதருசாலைதாணீக்கியாவையும்
முறைகெடவறியவர்முகந்துகொள்கென
அறைபறையென்றனனரசர்கோமகன். (ககங)

* ஈசன் ஈண்டு-சீராமன்.

படையொழிந்திடுகதம்பதிகளேயினி
விடைபெருகுகமுடிவேந்தர்வேதியர்
நடையுறரியமருநவையின்றுருக
கடவுளர்விழவொடுகளிப்பவெங்கணும். (௧௧௪)

ஆலயம்புதுக்குகவந்தணாளர்தம்
சாலையுஞ்சதுக்கமுஞ்சமைக்கசந்தியும்
காலையுமாலையுங்கடவுளர்க்கணி
மாலையுந்தீபமும்வழங்குகென்றனன். (௧௧௫)

என்புழிவள்ளுயர்வானைமீமிசை
நன்பறையறைந்தனர்நகரமாந்தரும்
மின்பிறழ்நுசுப்பினர்தாமும்விம்மலால்
இன்பமென்றளக்கருமளக்கரெய்தினர். (௧௧௬)

ஆர்த்தனர்முறைமுறையன்பினுவுடல்
போர்த்தனபுளகம்வேர்பொடித்தநீணிதி
தூர்த்தனரெதிரெதிர்சொல்லினர்க்கெலாம்
தீர்த்தனென்றறிந்ததோவவர்தஞ்சிந்தையே. (௧௧௭)

பண்ணையுமாயமுந்திரளும்பாங்கரும்
கண்ணகன்றிருநகர்களிப்புகைம்மிகுந்
தெண்ணெயுங்களபமுமிழுதுநானமும்
சுண்ணமுந்தூவினவீதிதோறுமே. (௧௧௮)

வேறு.

இத்தகைமாநக * ரீரறுநாளும்
சித்தமுறுங்களியோடுசிறந்தே
தத்தமையொன்றுமுணர்ந்திலதாவா
மெய்த்தவனும்மம்விதிப்பமதித்தான். (௧௧௯)

கராமலையத்தளர்கைக்கரியெய்த்தே
அராவணையிற்றுயில்வோயெனவந்நாள்
விராவியளித்தருண்மெய்ப்பொருளுக்கே
இராமனெனப்பெயரீந்தனனன்றே. (௧௨௦)

கரதலமுற்றுளிர்நெல்லிகடுப்ப
விரதமறைப்பொருண்மெய்ந்நெறிகண்ட
வரதனுதித்திடமற்றையவொளியை
பரதனெனப்பெயர்பன்னினனன்றே. (௧௨௧)

---

* ஈரறுநாள் என்றதனைப் பத்துநாளுங்கடந்த விரண்டாநாள் எனப் பெரியாரும் புணித்தமையானறிக.

உலக்குநர்வஞ்சகரும்பருமுய்ந்தார்
நிலக்கொடியுந்துயர்நீத்தனளிந்த
விலக்கருமொய்ம்பின்விளங்கொளிநாமம்
இலக்குவனென்னவிசைத்தனனன்றே. (கஉஉ)

முத்துருக்கொண்டுசெம்முளரியலர்ந்தால்
ஒத்திருக்குமெழிலுடையவிவ்வொளியால்
எத்திருக்குங்கெடுமென்பதையெண்ணுச்
சத்துருக்கனெனச்சாத்தினர்நாமம். (கஉங)

பொய்வழியின்முனிபுகறருமறையால்
இவ்வழிபெயர்களிசைத்துழியிறைவன்
கைவழிநிதியெனுநதிக்கலைமறையோர்
மெய்வழியுவரிநிறைத்தனமேன்மேல். (கஉச)

காவியுமொளிர்தருகமலமுமெனவே
* ஓவியவெழிலுடையொருவனையலதோர்
ஆவியுமுடலமுமிலதெனவருளின்
மேவினனுலகுடைவேந்தர்தம்வேந்தன். (கஉரு)

அமிர்துகுகுதலையொடணிநடைபயிலாத்
திமிரமதறவருதினகரனெனவும்
† தமரமதுடன்வளர்சதுமறையெனவும்
குமரர்கணிலமகள்குறைவறவளர்நாள். (கஉசு)

கவுளமொ § டுபநயம்விதிமுறைதருகுற்
றிவளவதெனவொருகரைபிறிதிலவா
உவள்தருமறையினொடொழிவறுகலையும்
‡ தவள்மதிபுனையரனிகர்முனிதரவே. (கஉஎ)

யானையுமிரதமுமிவுளியுமுதலா
ஏனையபிறவுமவ்வியல்பினினடையுற்
றானுறுபடைபலசிலையொடுபெயிலா
§ வானவர்தனிமுதல்கிளையொடுவளர. (கஉஅ)

அருமறைமுனிவருமமரருமவனித்
திருவுமநகருறைசெனமுநமிடரோ
டிருவினைதுணிதருமிவரினிதிவணின்
ஒருபொழுதகல்கிலமுறையெனவுறுவார். (கஉகூ)

* கரியகோலத்திருமேனியனாகிய சீராமனை 'ஓவியவெழிலுடையொருவன்' என்றார். † தமரமதுடன் என்றார் எழிசையோடுகூடிய மறையொலியை. ‡ உபநயனமென்றதும் - தவளமென்றதும் குறைந்துநின்றன. அயர்வருமமரர்களதிபதி என்பதுதோன்ற வானவர் தனிமுதல் என்றார்.

அய்யனுமிளவலுமணிநிலமகடன்
செய்தவமுடைமைகடெரிதரநதியும்
மைதவழ்பொழில்களும்வாவியுமருவி
நெய்குழனுறுமிழையெனநிலைதிரிவார். (கநூ0)

பரதனுமிளவலுமொருநொடிபகிரா
திரதமுமிவுளியுமிவரினுமறைநூல்
உரைதருபொழுதினுமொழிகிலரெனையாள்
வரதனுமிளவலுமெனமருவினரே. (கநூக)

வீரருமிளைஞரும்வெறிபொழில்களின்வாய்
ஈரமொடுரைதருமுனிவரரிடைபோய்ச்
* சோர்பொழுதணிநகர்துறுகுவரெதிர்வார்
கார்வரவலர்பயிர்பொருவுவர்களியால். (கநூஉ)

ஏழையரனைவருமிவர்தடமுலைதோய்
கேழ்கிளர்மதுகையர்கிளைகளுமினையார்
வாழியவெனவவர்மனனுறுகடவுட்
டாழ்குவர்கவுசலைதயரதனெனவே. (கநூந)

கடல்கருமுகிலொளிர்கமலமதலரா
வடவரையுடன்வருசெயலெனமறையும்
தடவுதலறிவருதனிமுதலவனும்
புடைவருமிளவலுமெனநிகர்புகல்வார். (கநூச)

எதிர்வருமவர்களையெமையுடையிறைவன்
முதிர்தருகருணையின்முகமலரொளிரா
எதுவினையிடரிலையினிதினுமனையும்
மதிதருகுமரரும்வலியர்கொலெனவே. (கநூரு)

† அஃதையநினையெமதரசெனவுடையேம்
இஃதொருபொருளலவெமதுயிருடனேழ்
மகிதலமுழுதையுமுறுகவிமலரோன்
உகுபகலளவெனவுரைநனிபுரிவார். (கநூசு)

வே று.

இப்பரிசணிநகருறையும்யாவரும்
மெய்ப்புகழ்புனைதரவிளையவீரர்கள்

---

* சோர்பொழுது - மாலைக்காலம். † அகதியைய என்றது அஃதைய என நின்றது, இதனை 'அஃதை தந்தை' எனப்பிறருங் கூறுதல் காண்க.

தப்பறவடிநிழறமுவியேத்துற
* முப்பரம்பொருளுக்குமுதல்வன்வைகுறும். (கௗ)

அரைசர்தம்பெருமகனகிலம்யாவையும்
விரைசுறுதனிக்குடைவிளங்கவென்றிசேர்
முரைசொலிகறங்கிடமுனிவரேத்துறக்
கரைசெயலரியதோர்களிப்பின்வைகுநாள். (கஅ)

சூ-வது. திருவவதாரப்படலம் முற்றிற்று.
ஆக திருவிருத்தம்-ஙகஎ

## எ - வது. கையடைப்படலம்.

நனைவருகற்பகநாட்டுநன்னகர்
அனைவருமனைதரவயிர்க்குஞ்சிந்தையான்
நினையவுமரியதுவிசும்பினீண்டதோர்
புனைமணிமண்டபம்பொலியவெய்தினான். (க)

தூயமெல்லரியணைப்பொலிந்துதான்றினன்
சேயிருவிசும்பிடைத்திரியுஞ் † சாரணர்
நாயகனிவன்கொலென்றயிர்த்துநாட்டமோர்
ஆயிரமில்லையென்றையநீங்கினார். (உ)

விசுவாமித்திரர் வருதல்.

மடங்கல்போன்மொய்ம்பினான்முன்னர்மன்னுயிர்
அடங்கலுமுலகும்வேறமைத்துத்தேவரோ
டிணங்கொணான்முகனையும்படைப்பெனீண்டெனுத்
தொடங்கிய ‡ தனியுறுமுனிவன்றோன்றினான். (ங)

வேறு.

வந்துமுனியெய்துதலுமார்பினணியாரம்
அந்தரதலத்திரவியஞ்சவொளிவிஞ்சக்
கந்தமலரிற்கடவுடன்வரவுகாணும்
இந்திரனெனக்கடிதெழுந்தடிபணிந்தான். (ச)

பணிந்துமணிசெற்றுபுகுயிற்றியவிர்பைம்பொன்
அணிந்ததவிசிட்டதினருத்தியொடிருத்தி
இணைந்தகமலச்சரணருச்சனைசெய்தின்றே
துணிந்ததென்வினைத்தொடர்பெனத்தொழுதுசொன்னான். (ரு)

---

* முப்பரம்பொருளுக்கு முதல்வன்—சங்கருடணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்னும் வியூகர் மூவருக்கு முதற்பொருளை, இதனை 'முப்பரம்பொருளிற்குண் முதலை' என்றிவ்வாசிரியர் பிற்கூறுதலுமிப்பெற்றிநோக்கி, † சாரணர்—தேவவொற்றர். ‡ தனியுறுமுனிவன்—கோசிகன்.

நிலஞ்செய்தவமென் றுணரினன் றுநெடியோயென்
நலஞ்செய்வினையுண் டெனினுமன் றுநகர்நீயான்
வலஞ்செய்துவணங்கவெளிவந்தவிதுமுந்தென்
குலஞ்செய்தவமென் றினிதுகூறமுனிகூறும். (௬)

வேறு.

என்னனையமுனிவருமிமையவருமிடையூறொன் றுடையரானால்
பன்னகமுநகுவெள்ளிப்பனிவரையும்பாற்கடலும்பதுமபீடத்
தன்னகருங்கற்பகநாட்டணிநகருமணிமாடயோத்தியென்னும்
பொன்னகருமல்லாதுபுகலுண்டோவிகல்கடந்தபுலவுவேலோய். (௭)

இன்றளிர்க்கற்பகநறுந்தேனிடைதுளிக்குநிழலிருக்கையிழந்துபோந்து
நின்றளிர்க்குந்தனிக்குடைக்கீழதினொதுங்கிக்குறையிரந்துநிற்பநோக்கிக்
குன்றளிக்குங்குலமணித்தோட்சம்பரனைக்குலத்தோடுந்தொலைந்துநீகொ
ண், டன்றளித்தவரசன்றேபுரந்தர * னின்றாள்கின்றதரசவென்றான். ()

உரைசெய்யுமளவிலவன்முகநோக்கியுள்ளத்தினொருவராலும்
கரைசெய்யவரியதொருபேருவகைக்கடல்பெருகக்கரங்கள்கூப்பி
அரைசெய்தியிருந்தபயனெய்தினன்மற்றினிச்செய்வதருளுகென்று
முறைசெய்துகடைத்தலையான்முன்மொழியப்பின்மொழியுமுனிவனாங்கே

தருவனத்துள்யானியற்றுந்தவவேள்விக்கிடையூறாத்தவஞ்செய்வோர்கள்
வெருவர்ச்சென்றடை † காமவெகுளியெனநிருதரிடைவிலக்காவண்ணம்
செருமுகத்துக்காத்தியெனநின்சிறுவர்நால்வரினுங்கரியசெம்மல் [ன்.
‡ ஒருவனைத்தந்திடுதியெனவுயிரிரக்குங்கொடுங்கூற்றினுளையச்சொன்னா

எண்ணிலாவருந்தவத்தோனியம்பியசொன்மருமத்தினெறிவேல்பாய்ந்த
புண்ணிலாம்பெரும்புழையிற்கனனுழைந்தாலெனச்செவியிற்புகுதலோடு
உண்ணிலாவியதுயரம்பிடித்துந்தவாருயிர்நின்றாசலாடக் [ம்
கண்ணிலான்பெற்றிழந்தானெனவுழந்தான்கடுந்துயரங்காலவேலான். ()

தொடையூற்றுந்தேன்றுளிக்குநறுந்தாரானொருவண்ணந்துயரநீங்கிப்
§படையூற்றமிலன்சிறியனிவன்பெரியோய்பணியிதுவேற்பனிநீர்க்கங்கை
புடையூற்றுஞ்சடையானுநான்முகனும்புரந்தரனும்புகுந்துசெய்யும்
இடையூற்றுக்கிடையூறாயான்காப்பென்பெருவேள்விக்கெழுகவென்றான்.

என்றனனென்றலுமுனிவோடெழுந்தனன் மண்படைத்தமுனியிறு
திக்காலம், அன்றெனவாமெனவிமையோரயிர்த்தனர்மேல்வெயில்கரந்தத

---

* இற்றைப்போதவனரசாள்வது நின்னாற்கொடுக்கப்பட்டதென்பார் இன்றரசாள்வதென்றார். † காமவெகுளியெனக் கூறினமையான் மயக்கமென்பதையு முபலக்கணத்தாற் கூறிக்கொள்க. ‡ ஒருவனை—ஒப்பற்றவனை. § படையூற்றமிலனென் றிவ்வாசிரியர் கூறியதை முதனூலாசிரியரும் இன்னும் பதினாறாண்டு நிரம்பிற்றில்லையென்றும், நிசாசரர் பூசலுக்கிவனுதவானென்றும், தாமரைக்கண்ணனையழைத்தல்பொருந்தாதுகாணென்றும் கூறுவர், இதனை வடநூலார்வாய்க்கேட்டுணர்க.

ங்குமிங்கும், நின்றனவுந்திரிந்தனமீங்வந்தகொழுங்கடைப்புருவநெற்றிமு
ற்றச், சென்றினவந்தனநகையுஞ்சிவந்தனகண்ணிருண்டனபோய்த்திசை
களெல்லாம். (௧௩)

வேறு.

* கறுத்தமாமுனிகருத்தையுன்னிநீ
பொறுத்தியென்றவற்புகன்றுநின்மகற்
குறுத்தலாகலாவுறுதியெய்துநாள்
மறுத்தியோவெனுவசிட்டன்கூறினன். (௧௪)

† பெய்யுமாரியாற்பெருகுவெள்ளம்போய்
மொய்கொள்வேலைவாய்முடுகுமாறுபோல்
அய்யநின்மகற்களவில்விஞ்சைவந்
தெய்துகாலமின்றெதிர்ந்ததென்னவே. (௧௫)

குருவின்வாசகங்கொண்டுகொற்றவன்
திருவின்கேள்வனைக்கொணர்மின்சென்றென
வருகவென்றனனென்றலோடும்வந்
தருகுசார்ந்தனனறிவினும்பரான். (௧௬)

வந்தநம்பியைத்தம்பிதன்னொடு
முந்தைநான்மறைமுனிக்குக்காட்டிநற்
றந்தைநீதனித்தாயுநீயிவர்க்
கெந்தைதந்தனனியைந்தசெய்கென்றான். (௧௭)

கொடுத்தமைந்தரைக்கொண்டுசிந்தைமுந்
தெடுத்தசீற்றம்விட்டினிதுவாழ்த்திமேல்
அடுத்தவேள்விபோய்முடித்துநாமெனு
நடத்தன்மேபினனவைக்கணீங்கினன். (௧௮)

வென்றிவாள்புடைவிசித்துமெய்ம்மைபோல்
என்றுந்தேய்வுறுத்தூணியார்த்திரு
குன்றம்போன்றுயர்தோளிற்கொற்ற ‡ வில்
ஒன்றுதாங்கினனுலகந்தாங்கினன். (௧௯)

அன்னதம்பியுந்தானுமையனும்
மன்னனின்னுயிர்வழிக்கொண்டாலெனச்

---

* துனியுறமுனிவன் என்றதும் பின் கறுத்தமாமுனி என்றதும் கோசிகனை.

† முனிவர்யாவரு மிறைவன்பால் விஞ்சையாவுமடைந்து மீட்டுமவனிடந் தருவ
தியல்பாதலாற் பெய்யுமாரியாற் பெருகுவெள்ளம்போய் - மொய்கொள் வேலைவாய்
முடுகுமாறுபோ லென்றுவமையாற் கூறினார்.

‡ உலகமெலாந்தன்னகட்டில் தாங்கிக்கிடவொருபொருளன்றென்பார் கொற்ற
வில் ஒன்றுதாங்கினு னுலகந்தாங்கினனென் றார்.

சொன்னமாதவற்றொடர்ந்தசாயைபோல்
பொன்னின்மாநகர்ப்புரிசைநீங்கினான். (உ0)

வரங்கண்மாசறத்தவஞ்செய்தோர்கள்வாழ்
புரங்கணேரிலாநகரநீங்கிப்போய்
அரங்கினாடுவார்சிலம்பினன்னநின்
றிரங்குவார்புனற்சரயுவெய்தினார். (உக)

கரும்புகால்பொரக்கமுகின்வார்ந்ததேன்
வரம்பைமீதிடுமருதவேலிவாய்
அரும்புகொங்கையாரம்மெலோதிபோல்
சுரும்புவாழ்வதோர்சோலைநண்ணினார். (உஉ)

தாழுமாமழைதழுவுநெற்றியால்
சூழியானைபோற்றோன்றுமால்வரைப்
பாழிமாமுகட்டுச்சிபச்சைமா
ஏழுமேறப்போயாறுமேறினார். (உங)

தேவுமாதவற்றொழுதுதேவர்தம்
நாவுளாகுதிநயக்கும்வேள்விவாய்த்
தாவுமாபுகைதழுவுசோலைகண்
டியாவதீதென்றானெவர்க்குமேனின்றான். (உச)

எ-வது, கையடைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-நசக.

## அ-வது. தாடகைவதைப்படலம்.

* திங்கண்மேவுஞ்சடைத்தேவன்மேன்மாரவேள்
இங்குநின்றெய்யவும்மெரிதரும்நுதல்விழிப்
பொங்குகோபஞ்சுடப்பூளைவீயன்னதன்
அங்கம்வெந்தன்றுதொட்டநங்கனேயாயினான். (க)

வாரணத்துரிவையான்மதனைச்சினவுநாள்
ஈரமற்றங்கமிங்குகுதலாலிவணெலாம்
ஆரணத்துறையுளாயங்கநாடிதுவுமக்
காரணக்குறியுடைக்காமனாச்சிரமமே. (உ)

பற்றவாவேரொடும்பசையறப்பிறவிபோய்
முற்றவாலுணர்வுமேன்முடிகினாறிவுசென்

* திங்கண்மேவுஞ்சடைத்தேவன்-சிவபெருமான். தேவர்தம்நா-கனற்கடவுள்.

றுற்றவானவனிருந்தியோகுசெய்தனனெனிற்
சொற்றவாமளவதோமற்றிதன்றூய்மையே. (௩)

என்றவந்தணனியம்பலும்வியந்தவ்வயிற்
சென்றுவந்தெதிரெழுஞ்செந்நெறிச்செல்வரோ
டன்றுறைந்தலர்கதிர்ப்பரிதிமண்டிலமகன்
குன்றினின்றிவரவோர்சுசேரங்குறுகினர். (௪)

பருதிவானவனிலம்பசையறப்பருகுவான்
விருதுமேற்கொண்டுலாம்வேனிலேயல்லதோர்
இருதுவேறின்மையாலெரிசுடர்க்கடவுளும்
கருதின்வேமுள்ளமுங்காணில்வேம்நயனமும். (௫)

படியின்மேல்வெம்மையைப்பகரினும்பசுருநா
முடியவேமுடியமூடிருளும்வான்முகடுவேம்
விடியுமேல்வெயிலும்வேமழையும்வேமின்னிஞே
டிடியும்வேமென்னில்வேறியாவைவேவாதவே. (௬)

விஞ்சுவான்மழையின்மேலம்பும்வேலும்படச்
செஞ்செவேசெருமுகத்தன்றியேதிறனிலா
வஞ்சர்தீவினைகளான்மானமாமணியிழந்
தஞ்சினர்நெஞ்சுபோலென்றுமாறுதரோ. (௭)

பேய்பிளந்தொக்கநின்றுலர் * பெருங்கள்ளியின்
தாய்பிளந்துக்ககாரகில்களுந்தழையிலா
வேய்பிளந்துக்கவெண்டாளமும்விடவரா
வாய்பிளந்துக்கசெம்மணியுமேவனமெலாம். (௮)

பாருமோடாதுநீடாதெனும்பாலதே
சூருமோடாதுகூடாதரோசூரியன்
தேருமோடாதுமாமாகமீதேரினேர்
காருமோடாதுநீள்காலுமோடாதரோ. (௯)

கண்கிழித்துமிழ்விடக்கனலராவரசுகார
விண்கிழித்தொளிருமின்னனையபன்மணிவெயில்
மண்கிழித்திடவெழுஞ்சுடர்கண்மண்மகளுடற்
புண்கிழித்திடவெழுங்குருதியேபோலுமே. (௧௦)

வேறு.

புழுங்குவெம்பசியொடுபுரளும்யோரரா
விழுங்கவந்தெதிரெதிர்விரித்தவாயின்வாய்

---

* கள்ளிவயிறினகில்பிறக்குமென்றதனாற் பெருங்கள்ளியின்றாய் பிளந்துக்ககார
கில்களுமென்றார்.

முழங்குதிண்கரிபுகுமுடுகிமீமிசை
வழங்குவெங்கதிர்சுடமறைவுதேடியே (கக)

ஏகவெங்கனலரசிருந்தகாட்டினில்
சாகமுங்கரிகளுங்கரிந்துசாம்பின
மாகவெங்கனலெனும்வடவைத்தீச்சுட
மேகமுங்கரிந்திடைவீழ்ந்தபோலுமே. (கஉ)

கானகத்தியங்கியகழுதின்றேர்க்குலம்
தானகத்தெழுதலாற்றலைக்கொண்டோடிப்போய்
மேனிமிர்ந்தெழுந்திடில்விசும்பும்வேமெனு
வானவர்க்கிரங்கிநீர்வளைந்ததொத்ததே. (கங)

ஏய்ந்தவக்கனலிடையெழுந்தகானற்றேர்
காய்ந்தவக்கடுவனங்காக்கும்வேனிலின்
வேந்தனுக்கரசுவீற்றிருக்கச்செய்ததோர்
பாய்ந்தபொற்காலுடைப்பளிக்குப்பீடமே. (கச)

தாவரு * மிருவினைசெற்றுத்தள்ளரு
† மூவகைப்பகையரண்கடந்துமுத்தியில்
போவதுபுரிபவர்மனமும்பொன்விலைப்
பாவையர்மனமும்போற்பசையுமற்றதே. (கரு)

பொரிபரற்படர்நிலம்பொடிந்துகீழுற
விரிதலிற்பெருவழிவிளங்கித்தோன்றலால்
அரிமணிப்பணத்தராவரசர்நாட்டினும்
எரிகதிர்க்கினிதுபுக்கியங்கலாயதே. (கசு)

எரிந்தெழுகொடுஞ்சுரமிணையதெய்தலும்
அருந்தவனிவர்பெரிதளவிலாற்றலைப்
பொருந்தினராயினும்பூவின்மெல்லியர்
வருந்துவர்சிறிதெனமனத்தினேக்கினன். (கஎ)

நோக்கினனவர்முகநோக்கநோக்குடைக்
கோக்குமரருமடிகுறுகநான்முகன்
ஆக்கிய ‡ விஞ்சைகளிரண்டுமவ்வழி
ஊக்கினனவையவருள்ளத்துள்ளினர். (கஅ)

உள்ளியகாலையினூழித்தீயினை
எள்ளுறுகொழுங்கனவெஞ்சும்வெஞ்சுரம்
தெள்ளுதண்புனலிடைச்சேறலொத்தது
வள்ளலுமுனிவனைவணங்கிக்கூறுவான். (ககூ)

---

* இருவினை-புண்ணியபாவங்கள். † மூவகைப்பகை-காமவெகுளிமயக்கங்களை.
‡ விஞ்சைகளிரண்டு-பலம், அதிபலம் என்பன.

* சுழிபடுகங்கையந்தொங்கன்மௌலியான்
விழிபடவெந்ததோவேறுதானுண்டோ
பழிபடாமன்னவன்படைத்தநாட்டினுங்
கழிவதென்காரணமறிஞகூறென்றான். (௨௦)

என்றலுமிராமனைநோக்கியின்னுயிர்
கொன்றுழல்வாழ்க்கையள்கூற்றின்றோற்றத்தள்
அன்றியுமையிருநூறுமையன்மா
வொன்றியவலியினளுறுதிகேளென. (௨௧)

மண்ணுருத்தெடுப்பினுங்கடலைவாரினும்
விண்ணுருத்திடிப்பினும்வேண்டிற்செய்கிற்பாள்
எண்ணுருத்தெரிவரும்பாவமீண்டியோர்
பெண்ணுருக்கொண்டெனத்தெரியும்பெற்றியாள். (௨௨)

† பெருவரையிரண்டொடுசிம்பிறந்தநஞ்சொடும்
உருமுறழ்முழக்கொடுமூழித்தீயொடும்
இருபிறைசெறிந்தெழுகடலுண்டாமெனின்
வெருவருதோற்றத்தண்மேனிமானுமே. (௨௩)

சூடகவரவுறழ்சூலக்கையினள்
காடுறைவாழ்க்கையள்கண்ணிற்காண்பரேல்
‡ ஆடவர்பெண்மையையவாவுந்தோளினாய்
தாடகையென்பதச்சழக்கிநாமமே. (௨௪)

கன்னவிறோளினாய்கமலத்தோனருள்
மன்னுயிரனைத்தையும்வாரிவாய்ப்படுத்
தின்னுயிர்வளர்க்குமோதெறிகொள்கூற்றநேர்
அன்னவள்யாவளென்றறையக்கேட்டியால். (௨௫)

இயக்கர்தங்குலத்துளானுலகமெங்கணும்
வியக்குறுமொய்ம்பினனெறியின்வெம்மையான்
மயக்கில்சற்சரனெனும்வலத்தினனுள்
துயக்கிலன்சுகேதுவென்றுளனோர்தூய்மையான். (௨௬)

அன்னவன்மகவிலாதயருஞ்சிந்தையான்
மன்னெடுந்தாமரைமலரின்வைகுறும்

---

* சுழிபடுகங்கையந்தொங்கன் மௌலியான்-சிவன். † வரையிரண்டு-தனங்கள், பிறந்தநஞ்சிரண்டுகண், ஊழித்தீ என்றது கூந்தலை, இருபிறை என்றது வளைந்தவெயிற்றை, கடலென்ற துருவத்தை, இருபிறைசெறிந்தெழுகடலென்றது இல் பொருளுவமை, ‡ ஆடவர்பெண்மையை யவாவுந்தோளினாயென்றார் முற்றத்துறந்தமுனிவரும் இவன் அழகிற்சாலவைந்து துவக்குண்டமையை.

நன்னெடுமுதல்வனைவழுத்திநற்றவம்
பன்னெடும்பகலெல்லாம்பயின்றபான்மையான் (உ௭)

முந்தினனருமறைக்கிழவன்முற்றுநின்
சிந்தனையென்னெனச்சிறுவரின்மையான்
நொந்தனனருள்கெனநுணங்குகேள்வியாய்
மைந்தர்களிலையொருமகளுண்டாமென்றான். (உ௮)

பூமட்டமயிலினைப்பொருவும்பொற்பொடும்
ஏமுறுமதமலையீரைஞ்ஞூறுடைத்
தாமிகுவலியொடுந்தனையடோன்றுநீ
போவெனமலரயன்புகன்றுபோயினன். (உ௯)

ஆயவனருள்வழியலர்ந்ததாமரைச்
சேயவளென்வளர்செவ்விகண்டிவட்
காயவன்யார்கொலென்றாய்ந்துதன்கிளை
நாயகன்சுந்தனென்றவற்குநல்கினன். (௩0)

காமனுமிரதியுங்கலந்தகாட்சியி
தாமெனவியக்கனுமணங்களும்வே
றியாமமும்பகலுமோரீறின்றென்னலாய்த்
தாழுறுபெருங்களிச்சலதிமூழ்கினர். (௩௧)

பற்பலநாட்செலீஇப் * பதுமைபோலிய
பொற்பினுள்வயிற்றிடைப்புவனமேங்கிட
வெற்பணிபுயத்துமாரீசனும்விறல்
மற்பொருசுவாகுவும்வந்துதோன்றினர். (௩௨)

மாயமும்வஞ்சமும்வரம்பிலாற்றலும்
தாயினும்பழகினர்தமக்குந்தேர்வொணு
தாயவர்வளர்வுழியவரையீன்றவக்
காய்சினத்தியக்கனுங்களிப்பின்மேன்மையான். (௩௩)

தீதுறுமவுணர்கடமைதீர்தர
மோதுறுகடலெலாமொருகைமொண்டிடு
† மாதவனுறைவிடமதனின்வந்துநீள்
பாதவமனைத்தையும்பறித்துவீசினன். (௩௪)

விழைவுறுமாதவம்வெஃகினோர்விரும்
புழைகலையிரலையையுயிருண்டோங்கிய

---

* பதுமா என்றது பதுமைஎன நின்றது, ஈண்டு திருமகள். † மாதவனென்றதும் தமிழெனுமளப்பருஞ் சலதிதந்தவன் என்றதும் அகத்தியனுனா.

வழையொடுமரனெலாமடிப்பமாதவன்
தழலெழவிழித்தனன்சாம்பராயினான். (௩௫)

மற்றவன்விளிந்தமைமைந்தர்தம்மொடும்
பொற்றொடிகேட்டுவெங்கனலிற்பொங்குறா
முற்றுறமுடிக்குவென்முனியையென்றெழா
நற்றவனுறைவிடமதனைநண்ணினாள். (௩௬)

இடியொடுமடங்கலும்வளியுமேங்கிடக்
கடிகெடவமரர்கள்கதிருமுட்குறத்
தடியுடைமுகிற்குலஞ்சலிப்பவண்டமும்
வெடிபடவதிர்த்தெதிர்விளித்துமண்டவே (௩௭)

தமிழெனமளப்பருஞ்சலதிதந்தவன்
உமிழ்கனல்விழிவழியொழுகவுங்கரித்
தழிவனசெய்தலாலரக்கராகியே
இழிகெனவுரைத்தனனசனியெஞ்சவே. (௩௮)

வெருக்கொளவுலகையும்விண்ணுளோரையும்
முருக்கியெவ்வுயிருமுண்டுழலுமூர்க்கராம்
அரக்கர்களாயினரக்கணத்தினில்
உருக்கியசெம்பெனவுமிழ்கட்டீயினர். (௩௯)

ஆங்கவன்வெகுளியுமறைந்தசாபமும்
தாங்கினரெதிர்செயுந்தருக்கிலாமையின்
நீங்கினர்சுமாலியைநேர்ந்துநிற்கியாம்
ஓங்கியபுதல்வரென்றுறவுகூர்ந்தனர். (௪0)

அவனொடும்பாதலத்தனேகநாட்செலீஇத்
தவனுறு * தசமுகன்றனக்குமாதுலர்
இவரெனப்புடைத்தழித்துலகமெங்கணும்
பவனிநிற்றிரிகுநர்பதகிமைந்தர்கள். (௪௧)

மிகுந்திறன்மைந்தரைவேறுநீங்குறாத்
தகுந்தொழின்முனிவரன்சலத்தையுண்ணியே
† வகுந்துவின்வசுவரிவதிந்ததிவ்வனம்
புகுந்தனளழலெனப்புழுங்குநெஞ்சினாள். (௪௨)

‡ உளப்பரும்பிணிப்புறுவுலோபமொன்றுமே
அளப்பருங்குணங்களையழிக்குமாறுபோல்
கிளப்பருங்கொடுமையவரக்கிகேடிலா
வளப்பருமருதவைப்பழித்துமாற்றினாள். (௪௩)

* தசமுகன்—இராவணன். † வகுந்து—வழி. ‡ உள்ளத்திற் பருமையாகியபிணிப்படையாத பற்றுள்ளமொன்றே அளவில்லாத நற்குணங்களை யழிக்கும் வண்ணம் போல வெனக்கொள்க.

வேறு.

இலங்கையரசன்பணியமைந்தொரிடையூரு
விலங்கல்வலிகொண்டெனதுவேள்விநலிகின்றாள்
அலங்கன்முகிலேயவளிவ்வங்கநிலமெங்குங்
குலங்களொடடங்கநனிகொன்றுதிரிகின்றாள். (சச)

முன்னுலகளித்துமுறைநின்றவுயிரெல்லாம்
தன்னுயிரெனக்கருது * தன்மையவன்மைந்த
என்னினியுணர்த்துவதினிச்சிறிதுநாளின்
மன்னுயிரனைத்தையும்வயிற்றினிடுமென்றான் (சரு)

அங்கிறைவனப்பரிசுரைப்பவதுகேளா
கொங்குறைநறைக்குலமலர்ச்செனிகுலுக்கா
எங்குறைவதித்தொழிலியற்றுவவளென்றான்
† சங்குறைகரத்தொருதனிச்சிலைதரித்தான். (சசு)

கைவரையெனத்தகையகாளையுரைகேளா
ஐவரையகத்திடையடைத்தமுனியைய
இவ்வரையிருப்பதவளென்பதனின்முன்போர்
மைவரைநெருப்பெரியவந்ததெனவந்தாள். (சஎ)

சிலம்புகள்சிலம்பிடைசெறித்தகழலோடு
நிலம்புகமிதித்தனணெளித்தகுழிவேலைச்
சலம்புகவனற்நறுகணந்தகனுமஞ்சிப்
பிலம்புகநிலக்கிரிகள்பின்றொடரவந்தாள். (சஅ)

இறைக்கடைதுடித்தபுருவத்தளெயிறென்னும்
பிறைக்கடைபிறக்கிட்டமடித்தபிலவாயள்
மறைக்கடையரக்கி ‡ வடவைக்கனலிரண்டாய்
நிறைக்கடன்முளைத்தெனநெருப்பெழவிழித்தாள். (சகூ)

கடங்கலுழ்தடங்களிறுகையொடுகைதெற்று
வடங்கொளுநுடங்குமிடையாண்மறுகிவானோர்
இடங்களுநெடுந்திசையுமேழுலகுமெங்கும்
அடங்கலுநடுங்கவுருமஞ்சநனியார்த்தாள். (ருo)

---

* மகனறிவுதந்தையறிவாகலின் நீயுமவ்வாறு செய்வையென்பர் தன்மையவன்மைந்த எனவுங்கூறினர். † சங்கேந்தியகை வறிதேகிடப்ப அறத்தை நிறுத்தற்பொருட்டசுரரைக் கொல்லவில்லேந்தி நிற்றலின், சங்குறைகரத்தொருதனிச்சிலைதரித்தானென்றார். ‡ கரியகடல்போல்மேனியும், அக்கடலில் வடவைத்தீயிரண்டாய் முளைத்தாற்போல் வளைந்த வெயிறுந் தோன்றலின் வடவைக்கனலிரண்டாய் நிறைக்கடன்முளைத்தன என்றார்.

ஆர்த்தவரைநோக்கிநகைசெய்தவருமஞ்சக்
கூர்த்தநுதிமுத்தலையயிற்கொடியகூற்றைப்
பார்த்தெயிறுதின்றுபகுவாய்முழைதிறந்தோர்
வார்த்தையுரைசெய்தனளிடிக்குமழையன்னாள். (௫க)

கடக்கரும்வலத்தெனதுகாவலிதில்யாவும்
கெடக்கரிசறுத்தனெனினிச்சுவைகிடக்கும்
* விடக்கரிதெனக்கருதியோவிதிகொடுந்தப்
படக்கருதியோபகர்மின்வந்தபரிசென்றே. (௫உ)

மேகமவையிற்றுகவிழித்தனள்புழுங்கா
மாகவரையற்றுகவுதைத்தனண் † மதித்திண்
பாகமெனுமுற்றெயிறதுக்கியயில்பற்று
ஆகமுறவுய்த்தெறிவெனென்றெதிரழன்றாள். (௫ங)

அண்ணன்முனிவற்கதுகருத்தெனினுமாவி
உண்ணெனவடிக்கணைதொடுக்கிலனுயர்க்கே
‡ துண்ணெனும்வினைத்தொழிற்றொடங்கியுள்ளேனும்
பெண்ணெனமனத்திடை § பெருந்தகைநினைந்தான். (௫ச)

வேறு,

வெறிந்தசெம்மயிர்வெள்ளெயிற்றாளயில்
எறிந்துகொல்வெனென்றேற்கவும்பார்க்கிலாச்
செறிந்ததாரவன்சிந்தைக்கருத்தெலாம்
அறிந்துநான்மறையந்தணன்கூறுவான். (௫௫)

தீதென்றுள்ளவையாவையுஞ்செய்தெமைக்
கோதென்றுண்டிலளித்தனையேகுறை
யாதென்றெண்ணுவதிக்கொடியாளையும்
மாதென்றெண்ணுவதோமணிப்பூணினாய். (௫சு)

நாண்மையேயுடையார்பிழைத்தார்நகு
வாண்மையேபெற்றவன்றிறலாடவர்
¶ தோண்மையேயிவள்பேர்சொலத்தோற்பரேல்
ஆண்மையென்னுமதாரிடைவைகுமே. (௫எ)

இந்திரன்னிடைந்தானுடைந்தோடினார்
தந்திரம்படத்தானவர்வானவர்

---

* விடக்கு-ஊண். † மதித்திண்பாகம்-பிறைக்கோடு. ‡ வினைத்தொழில் என்றது ஒருபொருட்பன்மொழி துண்ணெனுமென்ற அடையான் தீத்தொழில் என்பது பட்டநின்றது. § பெருந்தகை-பெருந்தன்மையுடைய இராமனை அன்மொழித்தொகை. ¶ தோண்மை-தோளாற்றலை. வாண்மை-வாட்டொழிற்சிறப்பை.

மந்தரம்மிவடோளெனின் மைந்தரோ
டந்தரம்மினியாதுகொலாண்மையே. (ருஅ)

* மன்னர்மன்னவன்காதலமற்றுமொன்
றின்னம்யானுரைக்கின்றதியாதெனின்
முன்னொர்காலநிகழ்ந்தமுறைமையீ
தென்னவோதலுற்றான்றவத்திறலான். (ருகூ)

† பிருகுவென்னும்பெருந்தவன்றன்மனை
வருகயற்கட்கியாதிவல் ‡ லாசுரர்க்
குருகுகாதலுறவுறவாதலே
கருதியாவிகவர்ந்தனனேமியான். (சுo)

வானகத்தினின்மண்ணினின்மன்னுயிர்
¶ போனகந்தனக்கென்றெணும்புந்திய
தானவள் § குமதிப்பெயராடனை
யூனொழித்தனன்வச்சிரத்தும்பர்கோன். (சுக)

ஆதலாலரிக்காகண்டலன்றனக்
கோதுகீர்த்தியுடையவல்லாதிடை
யேதமென்பனவெய்தியவோசொலாய்
தாதடர்ந்துதயங்கியதாரினாய். (சுஉ)

கறங்கிடத்திகிரிப்படிகாத்தவர்
பிறங்கடைப்பெரியோய்பெரியோரொடும்
மறங்கொடித்தரைமன்னுயிர்மாய்த்துநின்
றறங்கெடுத்தவட்காண்மையும்வேண்டுமோ. (சுங)

சாற்றுநாளற்றதெண்ணித்தருமம்பார்த்
தேற்றும்விண்ணெனன்பதன்றிவளைப்போல்
o நாற்றங்கேட்டலுந்தின்னநயப்பதோர்
கூற்றுண்டோசொலைகூற்றுழல்வேலினாய். (சுச)

மன்னும்பல்லுயிர்வாரித்தன்வாய்ப்பெய்து
தின்னும்புன்மையிற்றீமையதேயைய
பின்னுந்தாழ்குழற்பேதைமைப்பெண்ணிவள்
என்னுந்தன்மையெளிமையின்பாலதே. (சுரு)

---

* சக்கரவர்த்தித் திருமகனென்றழைப்பது நோக்கி 'மன்னர்மன்னவன்காதல' என்றார். † பிருகுமனைவிகியாதியென்பாள் அசுரர்க்குப் புகலிடந்தந்து மாயோன்சக்கரத்தானன் மாண்டாளென்பது. ‡ ஆசுரரென்றது நீட்டம்வழி நீட்டல்பெற்றது.

¶ போனகம்-உண்டி. § குமதி-விரோசனனென்னுமசுரன் மகள். o நாற்றங்கேட்டலுமென்றதிலக்கணை, கொலைஎன்றது ஐயீற்று ஒவ்வொருமைவினைமுற்று. நாளற்றதெண்ணித் தருமம்பார்த்து விண்ணிலேற்றுங் கூற்றைப்போலாது நாற்றங்கேட்டலுந் தின்னநயப்பதுநோக்கி, ஓர் கூற்றுண்டோ என்றார்.

ஈறினல்லறம்பார்த்திசைத்தேனிவட்
சீறிநின்றிதுசெப்புகின்றேனலேன்
ஆறிநின்றதறனன்றரக்கியைக்
கோறியென்றெதிரந்தணன்கூறினன். (௬௬)

அய்யனங்கதுகேட்டறனல்லவும்
எய்தினலதுசெய்கவென்றேவினல்
மெய்யநின்னுரைவேதமெனக்கொடு
செய்கையன்றேவறஞ்செய்யுமாறென்றான். (௬௭)

* கங்கைத்தீம்புனனுடன்கருத்தையும்
மங்கைத்தீயனையாளும்மனக்கொளாச்
செங்கைசூலவெந்தீயினைத்தீயதன்
வெங்கட்டீயொடுமேற்செலவீசினள். (௬௮)

† புதியகூற்றனையாள்புகைந்தேவிய
கதிர்கொண்மூவிலைக்காலவெந்தீமுனி
விதியைமேற்கொண்டுநின்றவன்மேலுவா
மதியின்மேல்வருங்கோளெனவந்ததே. (௬௯)

மாலுமக்கணம்வாளியைத்தொட்டதும்
கோலவிற்கால்குனித்ததுங்கண்டிலர்
காலனைப்பறித்தக்கடியாள்விட்ட
சூலமற்றன துண்டங்கள்கண்டனர். (௭0)

அல்லின்மாரியனையநிறத்தவள்
சொல்லின்மாத்திரையிற்கடநூர்ப்பன
கல்லின்மாரியைக்கைவகுத்தாளது
வில்லின்மாரியின்வீரன்விலக்கினன். (௭௧)

வேறு.

‡ சொல்லொக்குங்கடியவேகச்சுசெரங்கரியசெம்மல்
அல்லொக்குநிறத்தினள்மேல்விடுதலும்வயிரக்குன்றக்
கல்லொக்கு § நெஞ்சிற்றங்காதப்புறங்கழன்றுகல்லாப்
புல்வர்க்குநல்லோர்சொன்னபொருளெனப்போயிற்றன்றே. (௭௨)

---

* கங்கைத் தீம்புனனுடனென்றதிராமனை தீயானது புனலையவித்தன் முறையாதலின் கிம்புனனுடனென்றும், தீயனையாளுமென்றுங்கூறினர். † நாற்றங்கேட்டலுந் தின்னநயப்பதோர் கூற்றுண்டோ என்றதைவற்புறுத்தற்குப் புதிய கூற்றனையாளென்றார். ‡ நிறைமொழிஎன்பதுபற்றிச்சொல் லொக்குமெனச் சுடுசெரத்துக் குவமைகூறினர். § கல்வியறிவில்லாத புல்லறிவுடையார்க்கு நல்லோர்கூறிய உறுதிமொழிசிறிதும் பயன்படாமையின் 'நெஞ்சிற்றங்காதப் புறங்கழன்று புல்லர்க்கு நல்லோர் சொன்னபொரு' ளென்றுவமை முகத்தாற்கூறினர்.

பொன்னெடுங்குன்றமன்னான்புகர்முகப்பகழியென்னும்
மன்னெடுங்காலவன்காற்றடித்தலுமிடித்துவானில்
கன்னெடுமாரிபெய்யக்கடையுகத்தெழுந்தமேகம்
மின்னொடுமெசனியோடும்வீழ்வதேபோலவீழ்ந்தாள். (எங)

பொடியுடைக்கானமெங்குங்குருதிநீர்பொங்கவீழ்ந்த
தடியுடையெயிற்றுப்பேழ்வாய்த்தாடகைதலைகடோறும்
முடியுடையரக்கற்கந்நாண்முந்தியுற்பாதமாகப்
படியிடையற்றுவீழ்ந்தவெற்றியம்பதாகையொத்தாள். (எச)

கான்றிரிந்தாழியாகத்தாடகைக்கடினமார்பத்
தூன்றியபகழிவாயூடொழுகியகுருதிவெள்ளம்
ஆன்றவக்கானமெல்லாமாயினதந்திமாலைத்
தோன்றியசெக்கர்வானந்தொடக்கற்றுவீழ்ந்ததொத்தே. (எரு)

வாசநாண்மலரோனன்னமாமுனிபணிமருத
காசுலாங்கனகப்பைம்பூட்காகுத்தன்கன்னிப்போரில்
கூசிவாளரக்கர்தங்கள்குலத்துயிர்குடிக்கவஞ்சி
ஆசையாலுழலுங்கூற்றஞ்சுவைசிறிதறிந்ததன்றே. (எசு)

யாமுமெம்மிருக்கைபெற்றேமுனக்கிடையூறுமில்லை
கோமகற்கினியதெய்வப்படைக்கலங்கொடுத்தியென்று
மாமுனிக்குரைத்துப்பின்னர் * விற்கொண்டமழையனான்மேல்
பூமழைபொழிந்துவாழ்த்திவிண்ணவர்போயினாரே. (எஎ)

அ-வது. தாடகைவதைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-சoசு.



## கூ - வது. வேள்விப்படலம்.

விண்ணவர்போயபின்றைவிரிந்தபூமழையினாலே
தண்ணெனுங்கானநீங்கித்தாங்கருந்தவத்தின்மிக்கோன்
மண்ணவர்வறுமைநோய்க்குமருந்தனசடையன்வெண்ணெய்
அண்ணறன்சொல்லேயன்னபடைக்கலமருளினானே. (க)

ஆறியவறிஞன்கூறியளித்தலுமண்ணறன்பால்
ஊறியவுவகையோடுமும்பர்தம்படைகளெல்லாம்
தேறியமனத்தான்செய்தநல்வினைப்பயன்களெல்லாம்
மாறியபிறப்பிற்றேடிவருவபோல்வந்தவன்றே, (உ)

---

* இந்திரவில்லொடுதோன்றுமேகம்போலெய்தியமை நோக்கி 'விற்கொண்ட மழையனா' னென்றார்,

மேவினம்பிரிதலாற்றேம்வீரநீவீதியினெம்மை
ஏவினசெய்துநிற்றுமிளையவன்போலவென்று
தேவர்தம்படைகள்செப்பச்செவ்விதென்றவனுநேரப்
* பூவைபோனிறத்தினற்குப்புறத்தொழில்புரிந்தவன்றே. (ந)

இனையனநிகழ்ந்தபின்னர்க்காவதமிரண்டுசென்றார்
அனையவர்காணவாண்டோரரவம்வந்தணுகித்தோன்ற
முனைவவீதியாவதென்றுமுன்னவன்வினவப்பின்னர்
வினையறநோற்றுநின்றமேலவன்விளம்பலுற்றான். (ச)

மானசமடுவிற்றோன்றிவருதலாற்சரயுவென்றே
மேன்முறையமரர்போற்றும்விழுநதியதனிேனாடும்
ஆனகோமதிவந்தெய்துமரவமதென்னவப்பாற்
போன்பின்பவங்கடீர்க்கும்புனிதமாநதியையுற்றார். (ரு)

சுரர்தொழுதிறைஞ்சற்கோத்தநதியாவதென்று
† வரமுனிதன்னையண்ணல்வினவுறமலருள்வைகும்
பிரமனன்றளித்தவென்றிப்பெருந்தகைக்குசனென்றோதும்
அரசர்கோன்மனைவிதன்பாலளித்தவர்நால்வராகும். (சு)

குசன்குசநாபன்கோதில்குணத்தினதூர்த்தன்கொற்றத்
திசைகெழுவசுவென்றோதுமிவர்பெயரிவர்கடம்மில்
குசன்கவுசாம்பிநாபன்குளிர்மகோதயமதூர்த்தன்
வசையிறன்மவனமற்றைவசுகிரிவிரசம்வாழ்ந்தார். (எ)

அவர்களிற்குசநாபற்கேயையிருபதின்மரஞ்சொல்
துவரிதழ்த்தெரிவைநல்லார்தோன்றினர்வளருநாளில்
இவர்பொழிற்றலைக்கணுய்த்தெய்துழிவாயுவெய்திக்
கவர்மனத்தினனாய்ந்தக்கன்னியர்தம்மைநோக்கி. (அ)

‡ கொடித்தனிமகரங்கொண்டான்குனிசிலைச்சரத்தானைந்தேன்
வடித்தடங்கண்ணீரென்னைமணத்திரென்றுரைப்பவெந்தை
அடித்தலத்துரைத்துநீரோடளித்திடினணைதுமென்ன
ஒடித்தனன்வெரிநைவீழ்ந்தாரொளிவளைமகளிரெல்லாம். (கூ)

சமிரணனசன்றபின்னர்த்தையலார்தவழ்ந்துசென்றே
அமிர்துகுகுதலைமாழ்கியரசன்மாட்டுரைப்பவன்னான்
நிமிர்குழன்மடவார்த்தேற்றிநிறைதவன்சூளிநல்கும்
திமிறுபிரமதத்தற்களித்தனன்றிருவனாரை. (க0)

---

* காயாம்பூவையொத்த நிறத்தனாகலின் 'பூவைபோனிறத்தின' னென்றார்.

† வரமுனி கோசிகன்.

‡ கொடித்தனிமகரங் கொண்டவன்-மன்மதன்.

அவன்மலர்க்கைகடீண்டக்கூனிமிர்ந்தழகுவாய்த்தார்
புவனமுற்றுடையகோவும்புதல்வரில்லாமைவேள்வி
தவர்களிற்புரிதலோடுந்தகையுறத்தழுவிஞப்பண்
கவனவேகத்துரங்கக்காதிவந்துதயஞ்செய்தான். (கக)

அன்னவன்றனக்குவேந்தனரசொடுமுடியுமீந்து
பொன்னகரடைந்தபின்னர்ப்புகழ்மகோதயத்தில்வாழும்
மன்னவன்காதிக்கியானுங்கவுசிகையென்னுமாது
முன்னர்வந்துதிப்பவுந்தமுடியுடைவேந்தர்வேந்தன். (கஉ)

பிருகுவின்மதலையாயபெருந்தகைப்பிதாவுமொவ்வா
இருசிகனென்பவற்குமெல்லியலாளையீந்தான்
அருமறையவனுஞ்சின்ளைநம்பொருளின்பமுற்றி
விரிமலர்த்தவிசோன்றன்பால்விழுத்தவம்புரிந்துமீண்டான். (கங)

காதலன்சேணிநீங்கக்கவுசிகைதரிக்கலாற்ருள்
மீதுறப்படரலுற்ருள்விழுநதிவடிவமாகி
மாதவர்க்கரசுநோக்கிமாநிலத்துறுகணீக்கப்
போதுகநதியாயென்ருப்பூமகனுலகுபுக்கான். (கச)

எம்முனுணங்கையிந்தவிருநதியாயினுளென்
றம்முனிபுகலக்கேளாவதிசயமிகவுந்தோன்றச்
செம்மலுமிளையகோவுஞ்சிறிதிடந்தீர்ந்தபின்னர்
மைம்மலிபொழில்யாதென்னமாதவன்கூறலுற்ருன். (கரு)

தங்கணுயகரிற்றெய்வந்தவம்பிறிதிலவென்றெண்ணும்
மங்கைமார்சிந்தைபோலத்தூயதுமற்றுங்கேளாய்
எங்கணுன்மறைக்குந்தேவரறிவிற்கும்பிறர்க்குமெட்டாச்
செங்கண்மாலிருந்துமேனுட்செய்தவஞ்செய்ததன்றே, (கசு)

பாரின்பால்விசும்பின்பாலும்பற்றறப்படிப்பதன்ருன்
பேரென்பானவன்செய்மாயப்பெரும்பிணக்கொருங்குதேர்வார்
ஆரென்பானமலமூர்த்திகருதியதறிதரேற்ரும்
ஈரைம்பானூழிகாலமிருந்தவமியற்றியிட்டான், (கஎ)

மாவலியின்கதை.

வேறு.

ஆனவனிங்குறைகின்றவந்நாள்வாய்
ஊனமின்ஞாலமொடுங்குமெயிற்ருண்
ஏனமெனுந்திறன்மாவலியென்பான்
வானமும்வையமும்வௌவுதல்செய்தான், (கஅ)

செய்தவர்வானவருஞ்செயலாற்ரு
நெய்தவழ்வேள்வியைமுற்றிடநின்ருன்
அய்யமில்சிந்தையனந்தணர்தம்பால்
வய்யமும்யாவும்வழங்கவலித்தான், (ககூ)

ஆயதறிந்தனர்வர்னவரந்நாள்
மாயனைவந்துவணங்கியிரந்தார்
தீயவன்வெந்தொழி நீரெனநின்றார்
நாயகனும்மதுசெய்யநயந்தான். (௨0)

வாமனாவதாரம்.

காலநுனித்துணர்காசிபனென்னும்
வாலறிவற்கதிதிக்கொருமகவாய்
நீலநிறத்துநெடுந்தகைவந்தோர்
* ஆலமர்வித்தினருங்குறளானான். (௨௧)

முப்புரிநூலினன்முஞ்சியன்விஞ்சை
கற்பதொர்நாவனனற்படிகையன்
† அற்புதனற்புதரேயறியுந்தன்
சிற்பதமொப்பதோர்மெய்க்கொடுசென்றான். (௨௨)

அன்றவன்வர்ததறிந்துலகெல்லாம்
வென்றவன்முந்திவியந்தெதிர்கொண்டான்
நின்றனினந்தணரில்லைநிறைந்தோய்
என்றனினுய்ந்தவர்யாரினியென்றான். (௨௩)

ஆண்டகையவ்வழிகூறவறிந்தோன்
வேண்டினர்வேட்கையின்மேற்படவீசி
‡ நீண்டகையாயினிநின்னுழைவந்தோர்
மாண்டவரல்லவர்மாண்பிலரென்றான். (௨௪)

சிந்தையுவந்தெதிரென்செயவென்றான்
அந்தணன்மூவடிமண்ணருளுண்டேல்
வெந்திறலாயிதுவேண்டுமெனாமுன்
தந்தனனென்றனன்வெள்ளிதடுத்தான். (௨௫)

---

* ஆலமர்வித்தினருங்குறளானான்-ஆலின் சிறுவித்துப்போலச் சிறு குறள்வடிவமானான் என்றதென்க. அதன்வித்துமிகச்சிறியதேனும் யானை, தேர், குதிரை, காலாள் என்னு நால்வகைப்படைக்குந் தங்கநிழல் பயப்பதுபோல முன்னர்ச் சிறுகுறளாகச்சென்று பின்நீண்டமையினவ்வாறுவமைகூறினர். அமர்-சிறுமை, இதனை 'அமர் மெய்யுடையவனானன்' என்றிவ்வாசிரியர் கூறுதலுங்காண்க.

† மெய்யுணர்ச்சியுடையராற் காணப்படுபவனாகலின் 'அற்புதரேயறியு' மென்றும், அவர்க்குத்தான் இறப்ப நண்ணிய ஞானத்திருமேனிகாட்டலின் 'சிற்பதமொப்பதோர்மெய்க்கொடுசென்றான்' என்றுங்கூறினர்.

‡ ஈகைக்குணமுடைமையிற் சிறந்தோனாகலின் 'நீண்டகையா'யென்றும், நின்னுழையிரந்தார் மாட்சிமையுடையராகலின் 'மாண்டவ' ரென்றும், அல்லாதாரன்ன ரல்லராகலின், அல்லவர்மாண்பில' ரென்றுங்கூறினர்.

கண்டதிறத்திதுகைதவமைய
கொண்டனிறக்குறளென்பதுகொள்ளேல்
* அண்டமுமுற்றுமகண்டமுமேனாள்
உண்டவனுமிதுணர்ந்துகொளென்றான். (உசு)

நினக்கிலையென்கைநிமிர்ந்திடவந்து
தனக்கியலாவகைதாழ்வதுதாழ்வில்
† கனக்கரியானதுகைத்தலமென்னின்
எனக்கிதன்மேனலம்யாதுகொலென்றான். (உஎ)

துன்னினர்துன்னலரென்பதுசொல்லார்
முன்னியநன்னெறிநூலவர்முன்வந்
‡ துன்னியதானமுயர்ந்தவர்கொள்க
என்னினிவன்றுணையாவருயர்ந்தார். (உஅ)

$ வெள்ளியையாதல்விளம்பினைமேலோர்
வள்ளியராகவழங்குவதல்லால்
எள்ளுவவென்சிலவின்னுயிரேனும்
கொள்ளுதல்தீதுகொடுப்பதுநன்றால். (உகூ)

மாய்ந்தவர்மாய்ந்தவரல்லர்கண்மாயா
§ தேந்தியகைகொடிரந்தவரெந்தாய்
வீய்ந்தவரென்பவர்வீய்ந்தவரேனும்
ஈய்ந்தவரல்லதிருந்தவர்யாரே. (ங0)

அடுப்பவரும்பழிசெய்ஞ்ஞருமல்லர்
கொடுப்பவர்முன்புகொடேலெனநின்று
தடுப்பவரேபகைதம்மையுமன்னர்
கெடுப்பவரன்னதொர்கேடிலையென்றான். (ஙக)

கட்டுரையிற்றமகைத்துளபோழ்தே
இட்டிசைகொண்டறனெய்தமுயன்றோர்
உட்டெறுவெம்பகையாவது ○ லோபம்
விட்டிடவென்றுவிலக்கினர்தாமே. (ஙஉ)

---

* உலகமுண்ட பெருவாயனாகலின் 'அண்டமுமுற்று மகண்டமுமேனா ளுண்டவ' னென்றதென்க. † கனக்கரியான்-மேகம்போலுங் கரியமேனியன். ‡ தக்குழியீதலே நன்றென்பதுபற்றி 'உன்னியதான முயர்ந்தவர் கொள்க' என்றார்.

$ வெள்ளியை வெள்ளியென்னும் பெயரையுடைய, எனவும் வெள்ளறிவையுடைய எனவு மிருபொருள்படநின்றது நேரே ஆசிரியனாகலின்சிலேடையாகக் கூறினான். ¶ கொள்ளுதல்தீது கொடுப்பது நன்று என்பதனை 'நல்லாறெனினுங் கொளறீது மேலுலகமில்லெனினு மீதலே நன்று என்ற குறட்பொருளை யுட்கொண்டது.

§ செத்தாரின்வேறல்லாராதலின் 'ஏந்தியகை கொடிரந்தவர் வீய்ந்தவ' ரென்றும்புகழுடம்போ டழியாதிருப்பது கருதி 'வீய்ந்தவரேனும் ஈந்தவரல்ல திருந்தவர்யாரே யென்றுங்கூறினார். ○ உலோபம் - ஒருவர்க்கிருக்கிணிருமையும் கெடுக்குமாயுதமென்க.

வே று.

எடுத்தொருவருக்கொருவரீவதனின்முன்னே
தடுப்பதுநினக்கிதழகோதகைவில்வெள்ளி
* கொடுப்பதுவிலக்குகொடியோயுனதுசுற்றம்
உடுப்பதுவுமுண்பதுவுமின்றிவிடுகின்றாய். (௩௩)

வே று.

முடியவிம்மொழியெலாமொழிந்துமந்திரி
கொடியனென்றுரைத்தசொலொன்றுங்கொண்டிலன்
அடியொருமூன்றுநீயளந்துகொள்கென
நெடியவன்குறியகைநீரினீட்டினான். (௩௪)

† கயந்தருநறும்புனல்கையிற்றீண்டலும்
பயந்தவர்களுமிகழ்குறளன்பார்த்தெதிர்
வியந்தவர்வெருக்கொளவிசும்பினோங்கினான்
உயர்ந்தவர்க்குதவியவுதவியொப்பவே. (௩௫)

நின்றகான்மண்ணெலாநிரப்பியப்புறம்
சென்றுபாவிற்றிலைசிறிதுபாரெனா
ஒன்றவானகமெலாமொடுக்கியும்பரை
வென்றகான்மீண்டதுவெளிபெறாமையே. (௩௬)

உலகெலாமுள்ளடியடக்கியோரடிக்
கலகிலாதவ்வடிக்கன்பன்மெய்யதாம்
இலகுலாந்துழாய்முடியேகநாயகன்
சிலகுலாந்தோளினாய்சிறியன்சாலவே. (௩௭)

உரியதிந்திரற்கிதென்றுலகமீந்துபோய்
விரிதிரைப்பாற்கடற்பள்ளிமேவினான்
கரியவனுலகெலாங்கடந்ததாளிணை
திருமகள்கரந்தொடச்சிவந்துகாட்டவே. (௩௮)

ஆதலாலறுவினையறுக்குமாரிய
காதலாற்கண்டவர்பிறவிகாண்குறார்
வேதநூன்முறைமையால்வேள்விமுற்றுவேற்
கீதலாதில்லைவேறிருக்கற்பாலதே. (௩௯)

ஈண்டிருந்தியற்றுவென்யாகம்யானெனா
நீண்டபூம்பழுவத்துநெறியினெய்திப்பின்

*கொடுப்பதுவிலக்கு கொடியோயென்பதனை 'கெடுப்ப தழுக்கறுப்பான் சுற்றமுடுப்பதூஉ முண்பதூஉ மின்றிக்கெடும்' என்பதனானறிக.
† புதுப்புனலென்றது கருதி 'கயந்தருநறும்புன' லென்றார்.

வேண்வேகொண்டுதன்வேள்விமேவினான்
காண்டகுகுமரரைக்காவலேவியே. (௪0)

எண்ணுதற்காக்கரிதிரண்டுமூன்றுநாள்
விண்ணவர்காக்கியமுனிவன்வேள்வியை
மண்ணினைக்காக்கின்றமன்னன்மைந்தர்கள்
கண்ணினைக்காக்கின்றவிமையிற்காத்தனர். (௪௧)

காத்தனர்திரிகின்றகாளைவீரரில்
மூத்தவன்முழுதுணர்முனியைமுன்னிநீ
தீத்தொழிலியற்றுவரென்றதீயவர்
* எத்தருங்குணத்தினாய்வருவதென்றென்றான். (௪௨)

வார்த்தைமாறுரைத்திலன்முனிவன்மௌனியாய்ப்
போர்த்தொழிற்குமரனுந்தொழுதுபோந்தபின்
பார்த்தனன்விசும்பினைப் † பருவமேகம்போல்
ஆர்த்தனரிடித்தனரசனியஞ்சவே. (௪௩)

எய்தனரெறிந்தனரெறியுநீருமாப்
பெய்தனர்பெருவரைபிடுங்கிவீசினர்
வைதனர்தெழித்தனர்மழுக்கொண்டோச்சினர்
செய்தனரொன்றலதீயமாயமே. (௪௪)

ஊனகுபடைக்கலமுருத்துவீசின
கானகமழைத்தனகாலமாரிபோல்
மீனகுதிரைக்கடல்விசும்புபோர்த்தென
வானகமறைத்தனவளைந்தசேனையே. (௪௫)

வில்லொடுபகழிவாண்மிடைந்துலாவிடப்
பல்லியங்கிடிப்பினினிடிக்கும்பல்படை
ஒல்லெனவுரறியவூழிப்பேர்ச்சியுள்
வல்லைவந்தெழுந்ததோர்மழையும்போன்றவே. (௪௬)

கவருடையெயிற்றினர்கடித்தவாயினர்
துவர்சிறப்பங்கியர்சுழல்கட்டியினர்
பவர்சடையந்தணன்பணித்ததீயவர்
இவரெனவிலக்குவற்கிராமன்காட்டினான். (௪௭)

கண்டவக்குமரனுங்கடைக்கண்டீயூக
விண்டனைநோக்கித்தன்வில்லைநோக்கினான்

* எத்தவருங்குணத்தினாயென்றது-ஈறுதொகுக்கப்பட்டது.
† பருவமேகம்-கார்கலாமேகம்.

அண்டர்நாயகவினிக்காண்டியீண்டவர்
துண்டம்வீழ்வனவெனத்தொழுதுசொல்லினன். (௪௮)

தூமவேலரக்கர்தந்நிணமுஞ்சோரியும்
ஓமவெங்கனலிடையுகுமென்றுன்னியத்
தாமரைக்கண்ணனுஞ்சரங்களேகொடு
கோமுனியிருக்கையோர்கூடமாக்கினன். (௪௯)

நஞ்சுடவெழுதலுநடுங்கிநாண்மதிச்
செஞ்சடைக்கடவுளையடையுந்தேவர்போல்
வஞ்சனையரக்கரைவெருவிமாதவர்
அஞ்சனவண்ணநின்னபயம்யாமென்றார். (௫௦)

கவித்தனன்கரதலங்கலங்கனீரெனச்
செவித்தலநிறுத்தினன்சிலையின்றெய்வநாண்
புவித்தலங்குருதியின்புணரியாக்கினன்
குவித்தனனரக்கர்தஞ்சிரத்தின்குன்றமே. (௫௧)

திருமகணயகன் * தெய்வவாளிதான்
வெருவருதாடகைபயந்தவீரர்கள்
இருவரிலொருவனைக்கடலினிட்டதக்
கொருவனையந்தகபுரத்தினுய்த்ததே. (௫௨)

துணர்த்தபூந்தொடையலான்பகழிதூவினன்
கணத்திடைவிசும்பினைக்கவித்துத்தூர்த்தலால்
பிணத்திடைநடந்திவர்பிடிப்பரீண்டென
உணர்த்தினரொருவர்முன்னொருவரோடினர். (௫௩)

ஓடினவரக்கரையுருமின்வெங்கணை
கூடின † குறைத்தலைமிறைத்துக்கூத்துநின்
றாடினவலகையுமையன்கீர்த்தியைப்
பாடினபறந்தனபறவைப்பந்தரே. (௫௪)

பந்தரைக்கிழித்தனபாந்தபூமழை
அந்தரதுந்துமிமுகிலினார்த்தன
இந்திரன்முதலியவமரரீண்டினார்
சுந்தரவில்லியைத்தொழுதுவாழ்த்தினார் (௫௫)

வேறு.

புனிதமாதவராசியின்பூமழைபொழிந்தார்
அனையசானத்துமரங்களுமலர்மழைசொரிந்த

---

* காந்தருவக்கணை—அக்கினிக்கணை, வாயுக்கணை, இவற்றை முறையே சுபாகு, மாரீசன், இவரையொழித்தற்கு அரக்கர்மேல் விடுத்தலைக்காண்க.

† குறைத்தலை—கவந்தம்.

முனியுமவ்வழிவேள்வியைமுறைமையின்முற்றி
இனியசிந்தையனிராமனுக்கினையனவிசைத்தான். (௫௬)

பாக்கியம்மெனக்குளதெனநினைவுறும்பான்மை
போக்கிநிற்கிதுபொருளெனவுணர்கிலென்புவனம்
* ஆக்கிமற்றவையகிலமுமணிவயிற்றடக்கிக்
காக்குநீயொருவேள்விகாத்தனையெனுங்கருத்தே. (௫௭)

என்றுகூறியபின்னரவ்வெழின்மலர்க்கானத்
தன்றுதானுறைந்தருந்தவமுனிவரோடிருந்த
குன்றுபோற்குணத்தானெதிர்கோசலைக்குரிசில்
இன்றியான்செயும்பணியென்சொல்பணியெனவிசைத்தான். ()

அரியயான்சொலினையமிற்கரியதொன்றில்லை
† பெரியகாரியமுளவவைமுடிப்பதுபின்னர்
விரியும்வார்புனன்மருதஞ்சூழ்மிதிலையர்கோமான்
புரியும்வேள்வியுங்காண்டுமெழுகென்றுபோனார். (௫௯)

௯-வது வேள்விப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௭௭அ.

---

## ௰-வது. அகலிகைப்படலம்.

அகலிகையின் சாபவிமோசனுதி வரலாறுகளைக்கூறுகின்ற படலம்.

அலம்புமாமணியாரத்தோடகிலளைபுளின
நலம்பெய்பூண்முலைநாகிளவஞ்சியாமருங்குற்
புலம்புமேகலைப்புதுமலர்ப்புனையறற்கூந்தற்
சிலம்புசூழுங்காற்சோணமாந்தெரிவையைச்சேர்ந்தார். (௧)

நதிக்குவந்தவரெய்தலுமருணன்றனயனக்
கதிக்குமுந்துறுகலின்மான்றேரொடுங்கதிரோன்
உதிக்குங்காலையிற்றண்மைசெய்வான்றனதுருவில்
கொதிக்கும்வெம்மையையாற்றுவான்போற்கடற்குளித்தான். (௨)

கறங்குதண்புனற்கடிநெடுந்தாளுடைக்கமலத்
‡ தறங்கொணுன்மலர்க்கோயில்களிதழ்க்கதவடைப்பப்
பிறங்குதாமரைவனம்விட்டுப்பெடையொடுகளிவண்
டுறங்குகின்றதோர்நறுமலர்ச்சோலைபுக்குறைந்தார். (௩)

---

* 'ஏருளுமிறையோனு நான்முகனுமிமையோருங்-கூருளுந்தனியுடம்ப' னுகலின் 'புவனமாக்கி மற்றவையகிலமுந் தன்வயிற்றடக்கிக்காக்குநீ' என்றார்.

† ஈசன் வில்லொடித்தனமுதலிய பற்றிப்பெரிய காரியமுளஎன்றார்.

‡ அவ்வப்பருவங்களின்மலருமியல்புநோக்கி' அறங்கொணுன்மலரென்றார்.

இனையசோலைமற்றியாதென்விராகவன்வினவ
வினையெலாமறநோற்றவன்விளம்புவான்மேனாள்
தனையரானவர்க்கிரங்கியேகாசிபன்றனது
மனையுளாள்தவம்புரிந்தனளிவணெனவலித்தான். (௪)

அண்டகோளகைக்கப்புறத்தென்னையாளுடைய
கொண்ட * னீள்பதத்தெய்தியோர்விஞ்சையர்கோதை
புண்டரீகமென்பதத்தியைப்புகழ்ந்தினள்புகழ
வண்டறுமதுமாலைகைக்கொடுத்தனண்மகிழ்ந்து. (௫)

அன்னமாலையையாழிடைப்பிணித்தயனுலகம்
கன்னிமீடலுங் † கசட்டுறுமுனியெதிர்காணு
என்னையாளுடைநாயகிக்கிசையெடுப்பவளென்
றன்னள்தாளிணைவணங்கிநின்றேத்தலுமனையாள். (௬)

உலகம்யாவையும்படைத்தளித்துண்டுயிழொருவன்
இலகமார்பகத்திருந்துயிர்யாவையுமீன்ற
திலகவாணுதல்சென்னியிற்சூடியதெரியல்
அலகின்மாமுனிபெறுகெனவளித்தனளளியால். (௭)

தெய்வநாயகிசென்னியிற்சூடியதெரியல்
அய்யயான்பெறப்புரிந்ததெத்தவமெனவாடி
வெய்யமாமுனிசென்னியிற்சூடியேவினைபோய்
உய்யுமாறிதென்றுவந்துவந்தும்பர்நாடடைந்தான். (௮)

பொய்யுமாமுகில்வெள்ளியம்பிறங்கன்மீப்பிறழும்
செய்யதாமரையாயிரமலர்ந்துசெங்கதிரின்
மொய்யசோதிய்யமிலேச்சியமுறைமைபோன்றொளிரும்
மெய்யினோடையிராவதக்களிற்றின்மேல்விளங்க. (௯)

அரம்பைமேனகைதிலோர்த்தமையுருப்பசியனங்கன்
சரம்பெய்தூணியிற்றளிரடிநூபுரந்தழைப்பக்
கரும்பையுஞ்சுவைகைப்பித்தருதலையர்கிளரி
நிரம்புபாடலோடாடினர்வீதிகணெருங்க. (௰)

நீலமால்வரைத்தவழ்தருகதிர்நிலாக்கற்றை
போலவேயிருபுடையினுஞ்சாமரைபுரள
கோலமாமதிகுறைவறநிறைந்தொளிகுலாவ
மேல்நிவர்ந்தெனவெள்ளியந்தனிக்குடைவிளங்க. (௧௧)

* நீள்பதம்-அந்தமிலின்பவீடு. † கசட்டுறுமுனி, வெய்யமாமுனி, வெஞ்சொன்மாமுனி, மறநிலாமுனி, தனை யொவாதவன், கொடியோன் எனக்கூறியன-துருவாசனை என்க.

தழங்குபேரியுங்குறட்டொடுபாண்டிலிஞ்சங்கும்
வழங்குகம்பலைமங்கலகீதத்தைமறைப்ப
முழங்குநான்மறைமுரிநீர்முழக்கெனவுலகை
* விழுங்குமாவரும்விழாவணிக்கண்டுளம்வியந்தான். (கஉ)

தனையொவாதவன்மகிழ்ச்சியால்வாசவன்றன்கை
வனையுமாலையைநீட்டலுந்தோட்டியால்வாங்கித்
துனைவலத்தயிராவதத்தெருத்திடைத்தொடுத்தான்
† பனைசெய்கையினுற்பறித்தடிப்படுத்ததப்பகடு. (கங)

கண்டமாமுனிவிழிவழியொழுகுவெங்கனலால்
அண்டகூடமுஞ்சாம்பராயொழியுமென்றழியா
விண்டுநீங்கினர்விண்ணவரிருசுடர்மீண்ட
எண்டிசாமுகமிருண்டதுசுழன்றதெவ்வுலகும். (கச)

புகையெழுந்தனவுயிர்தொறுமெயில்பொடித்தவனில்
நகையெழுந்தனநிவந்தனபுருவநன்னுதலில்
சிகையெழுஞ்சுடர்விழியினனசனியுந்திகைப்ப
மிகையெழுந்திடுசதமககேளெனவெகுண்டான். (கரு)

பூதநாயகன்புவிமகணுயகன்பொருவில்
வேதநாயகன்மார்பகத்தினிதுவீற்றிருக்கும்
ஆதிநாயகிவிருப்புறுதெரியல்கொண்டணிந்த
மாதராள்வயிற்பெற்றனென்முயன்றமாதவத்தால். (கசு)

இன்றுநின்பெருஞ்செல்விகண்டுவகையினீந்த
மன்றலந்தொடையிகழ்ந்தனைநினதுமாநிதியும்
ஒன்றலாதபல்வளங்களுமுவரிபுக்கொளிப்பக்
குன்றிநீதுயருறுகெனவுரைத்தனன்கொடியோன். (கஎ)

அரமடந்தையர்கற்பகநவநிதியமிர்தம்.
‡ சுரபிவாம்பரிமதவலைமுதலியதொடக்கற்
றொருபெரும்பொருளின்றியேயுவரிபுக்கொளிப்ப
வெருவியோடினவெண்ணெய்வாழ்கண்ணன்மேவாரின். (கஅ)

வெய்யமாமுனிவெகுளியால்விண்ணகமுதலாம்
வய்யம்யாவையும்வறுமைநோய்நலிதரவானேர்
தய்யல்பாகனுஞ்சதுமுகக்கடவுளுங்கூடிச்
செய்யதாமரைத்திருதறுமார்பனைச்சேர்ந்தார். (கசு)

---

* விழுங்குமாறு என்பது கடைக்குறைந்துநின்றது. † பனைசெய்கை என்புழிசெய உவமவுருபு. ‡ சுரபிகாமதேனு, வாம்பரி என்றது உச்சைசிரவத்தை, மதமலை ஐராவதம்.

வெஞ்சொன்மாமுனிவெகுளியால்விளைந்தமைவிளம்பிக்
கஞ்சநாண்மலர்க்கிழவனுங்கடவுளர்பிறரும்
தஞ்சமில்லைநின்சரணமேசரணெனச்சலியா
தஞ்சலஞ்சலென்றுரைத்தனனுலகெலாமளந்தோன். (உ0)

மத்துமந்திரம்வாசுகிகடைகயிறடைதூண்
மெத்துச்சந்திரன்சுராசுரர்வேறுவேறுள்ள
கொத்திரண்டுபோல்வலிப்பவரோடதிகொடுத்து
கத்துவாரிதிமறுகுறவமிழ்தெழக்கடைமின். (உக)

யாமுமவ்வயின்வருதுநீர்கதுமெனவெழுந்து
போமினென்றருள்புரிதலுமிறைஞ்சினர்புகழ்ந்தார்
* நாமமின்றெனக்குளித்தனர்நல்குரவொழிந்த
தாமெனும்பெருங்களிதுளக்குறுதலாலமரர். (உஉ)

மலைபிடுங்கினர்வாசுகிபிணித்தனர்மதியம்
நிலைபெறும்படிநட்டனரோடதிநிரைத்தார்
அலைபெறும்படிபயோததிகடைந்தனரவனி
நிலைதளர்ந்திடவனந்தனுங்கீழுறநெளித்தான். (உங)

திறல்கொளாமையாய்முதுகினின்மந்தரந்திரிய
விறல்கொளாயிரந்தடக்கைகள்பரப்பிமீவலிப்ப
மறனிலாமுனிவெகுளியின்மடிந்தனவரவே
† அறனிலாமனத்தடையலாநெடுந்தகையமைத்தான். (உச)

இறந்துநீங்கினயாவையுமெம்பிரானருளாற்
பிறந்தவவ்வயிற்சுராசுரர்தங்களிற்பிணங்கச்
சிறந்தமோகினிமடந்தையாலவுணர்தஞ்செய்கை
துறந்துமாண்டனராரமிர்தமரர்கள்துய்த்தார் (உரு)

வெருவுமாலமும்பிறையும்வெவ்விடையவற்கீந்து
தருவும் ‡ வேறுளதகைமையுஞ்சதமகற்கருளி
மருவுதொல்பெருவளங்களும்வேறுறவழங்கித்
திருவுமாரமுமணிந்தனன்சீதரமூர்த்தி. (உசு)

அந்தவேலையிற்றிதிபெருந்துயருழந்தழிவாள்
வந்துகாசிபன்மலரடிவணங்கியென்மைந்தர்
இந்திராதியர்புணர்ப்பினுலிறந்தனரெனக்கோர்
மைந்தனீயருளவர்தமைமடித்தலுக்கென்றாள். (உஎ)

---

* நாம்-அச்சம் அது அம்மு முச்சாரியை பெற்றது † அறன் இலாமனத்து அடையலா நெடுந்தகை என்றது திருமாலை. அறன் நில்லா மனத்தெனக் கோடலுமமையும். ‡ வேறுளதகைமையுமென்றது சிந்தாமணி காமதேனு அமுதம் ஐராவதம் முதலியனவென்க.

என்றுகூறலுமகவுனக்களித்தனமினநீ
சென்றுபாரிடைப் * பருவமோராயிரந்தீர
நின்றுமாதவம்புரிதியேனினைவுமுற்றுதியென்
றன்றுகூறிடப்புரிந்தனளருந்தவமனையாள். (௨௮)

கேட்டவாசவனன்னவட்கடிமையிற்கிடைத்து
வாட்டமாதவத்துணர்ந்தவள்வயிற்றுறுமகவை
வீட்டியேயெழுகூறுசெய்திடுதலும்விம்மி
நாட்டநீர்தரமருத்தெனுநாமமுநவின்றான். (௨௯)

ஆயதிவ்விடமவ்விடமவிர்மதியணிந்த
தூயவன்றனக் † கரிவையிற்றோன்றியதொல்லை
வாயுவும்புனற்கங்கையும்பொறுக்கலாவலத்த
‡ சேய்வளர்ந்தருஞ்சரவணமென்பதுந்தெரித்தான். (௩௦)

காலன்மேனியிற்கருகிருள்கடிந்துலகளிப்பான்
நீலவார்கலித்தேரொடுரிறைகதிர்க்கடருள்
மாலின்மாமணியுந்தியினயனொடுவந்த
மூலதாமரைமுழுமலர்முளைத்தெனமுளைத்தான். (௩௧)

அங்குநின்றெழுந்தயன்முதன்மூவருமனையார்
செங்கணேற்றவன்செறிசடைப் $ பழுவத்தினிறைதேன்
பொங்குகொன்றைமீர்த்தொழுகலாற்¶பொன்னியைப்பொருவும்
கங்கையென்னுமக்கரைபொருதிருநதிகண்டார். (௩௨)

இந்தமாநதிக்குற்றுளதகைமையயாவும்
எந்தைகூறுகென்றிராகவன்வினவுறவெனையாள்
மைந்தநின்றிருமரபுளானயோத்திமாநகர்வாழ்
விந்தைசேர்புயன்சகரனிம்மேதினிபுரந்தோன். (௩௩)

விறல்கொள்வேந்தனுக்குரியவரிருவரிலவிதர்ப்பை
பொறையினகில்கியபோசணனென்றொருபுதல்வன்
பறவைவேந்தனுக்கிளையமென்சுமதிமுற்பயந்த
அறனின்மைந்த ○ ராறயுதர்மற்றஞ்சுமானவன்சேய். (௩௪)

திண்டிறற்புனைசகரனுந்தனையர்சேவகந்தான்
கண்டுமுற்றிய § வயமகம்புரிதலுங்கனன்று

---

* பருவம்-ஆண்டு. † அரிவைஈண்டு மலையரையன்மகள். ‡ சேய்-முருகன். $ பழுவம்-காடு. ¶ பொன்னியைப்பொருவுங் கங்கைஎன்றார் 'கங்கையிற்புனிதமாயகாவிரி' எனப்பெரியாரும் பணித்தலினென்க. ○ ஆறயுதர் அறுபதினாயிரம்பேர். அயுதம்-பதினாயிரம். § அயமகம்-பரிமேதம். கபிலனிடையினில் எனவருபின் மேனுருபுவந்தமையை 'நிலவார் நிலமிசைமேல்' எனவருதலானுமமைத்துக்கொள்க, அயம்-குதிரை,மேதம்-கொலை.

வண்டுதுற்றதார்வாசவற்குணர்த்தினர்வானோர்
ஒண்டிறற்பரிகபிலனதிடையினிலொளித்தான். (நரு)

வாயுவாசிபின்சென்றனனஞ்சுமான்மறுகிப்
பூவினேரிடமின்றியேநாடினன்புகுந்து
தேவர்கோமகன்சரந்தமையறிந்திலன்திகைத்து
மேவு * தாதைதன்றாதைபாலுரைத்தனன்மீண்டு. (நசு)

கேட்டவேந்தனுமதலையர்க்கம்மொழிகிளத்த
வாட்டமீக்கொளச்சகரர்கள்வடவையின்மறுகி
நாட்டம்வெங்கனல்பொழிதரநானிலந்தடவித்
தோட்டு † நுங்கினர்புவியினைப்பாதலந்தோன்ற. (நஎ)

நூறியோசனையகலமுமாழமுநடுங்கக்
கூறுசெய்தனரென்பரால்வடகுணதிசையின்
ஏறுமாதவக்கபிலனிலிவுளிகண்டெரியிற்
சீறிவைதனர்செருக்கினர்நெருக்கினர்செறுத்தார். (நஅ)

மூளும்வெஞ்சினத்தருந்தவன்முனிந்தெரிவிழிப்பப்
‡ பூளைசூடிதன்னகையினிலெயில்பொடித்தனபோல்
ஆளுமைந்தராறயுதருஞ்சாம்பராயவிந்தார்
வேள்விகண்டநல்வேந்தனுக்குரைத்தனர்வேகர். (நகூ)

உழைத்துவெந்துயர்க்கூறுகாண்கிலனுணர்வொழியா
தழைத்துமைந்தனன்மைந்தனையவர்கழிந்தனரேல்
இழைத்தவேள்வியின்றிழப்பதோவெனவவனெழுந்து
தழைத்தமாதவக்கபிலன்வாழ்பாதலஞ்சார்ந்தான். (சo)

விண்டுநீங்கினருடலுகுபிறங்கல்வெண்ணீறு
கண்டுதுண்ணெனுமனத்தினன்கபிலமாமுனிதன்
புண்டரீகமென்றாடொழுதெழுந்தனன்புகலக்
கொண்டுபோகநின்னிவுளியென்றுற்றதுங்குறித்தான். (சக)

பழுதிலாதவனுரைத்தசொற்கேட்டலும்பரிவால்
தொழுதுவாம்பரிகொணர்ந்தவிசுரர்களுக்கியா
முழுதும்வேள்வியைமுற்றுவித்தரசனுமுடிந்தான்
§ எழுதுகீர்த்தியாய்மைந்தனுக்கரசியலீந்து. (சஉ)

---

* தாதைதன்றாதையென்றது சகரனை. † நுங்குதல் - விழுங்குதல். ‡ பூளைசூடி தன்னகையினிலெயில் பொடித்தனபோல் சிவபிரான் நகையாற்புரம் பொடிபடுத்தமைபோல். § முற்றத்துறந்தமுனிவரும்விரும்பும் புகழினையுடையனாகலின் இராமனை எழுதுகீர்த்தியாயென்றார்.

பாணியிவன் படர்செங்கைபடாதேல்
வாணுதல்சீதையும்வாழ்விலளென்பார். (உஅ)

கரங்கள்குவித்திருகண்கள்பனிப்ப
இருங்களிறிச்சிலையேற்றிலனாயின்
நரந்தநறைக்குழனங்கையுநாமும்
முரங்கெரியிற்புகமூழ்குதுவென்பார். (உகூ)

வள்ளன் மணத்தைமகிழ்ந்தனனென்றால்
கொள்ளென முன்புகொடுப்பதையல்லால்
*வெள்ளமணைத்தவன் வில்லையெடுத்திப்
பிள்ளைமுனிட்டபேதமையென்பார். (௩0)

ஞானமுனிக்கொருநாணிலையென்பார்
கோனிவனிற்கொடியாரிலையென்பார்
மானவனிச்சிலைகால்வளையானேற்
பீனதனத்தவள்பேரிலளென்பார். (௩க)

தோகையரின்னனசொல்லிடநல்லோர்
ஓகைவிலம்பிடயும்பருவப்ப
மாகமடங்கலுமால்விடையும்பொன்
† நாகமுநாகமுநாணநடந்தான். (௩உ)

ஆடகமால்வரையன்னதுதன்னைத்
தேடருமாமணிசீதையெனும்பொற்
சூடகவால்வளைசூட்டிடநீட்டும்
ஏடவிழ்மாலையிதென்னவெடுத்தான். (௩௩)

தடுத்திமையாமலிருந்தவர்தாளின்
மடுத்ததுநாணுதிவைத்ததுநோக்கார்
கடுப்பினில்யாருமறிந்திலர்கையால்
எடுத்ததுகண்டனரிற்றதுகேட்டார். (௩௪)

வேறு.

ஆரிடைப்புகுதுநாமென்றமரர்கள் ‡ கமலத்தோன் றன்
பேருடையண்டகோளம்பிளந்ததென்றேங்கிநைந்தார்
பாரிடையுற்றதன்மைபகர்வதென்பாரைத்தாங்கி
வேரிடைக்கிடந்தநாகமிடியெனவெருவிற்றன்றே. (௩௫)

---

* உலகையழிக்கவந்த கங்கையைத் தன்சடைநுனியிற் கரக்குமாற்ற லுடையோன் 'வெள்ளமணைத்தவ' னென்றும், அவனேந்தும் வில்லை இராம னிடத்தளிப்பது தகாதென்பார் பிள்ளை முன்னிட்டது பேதைமையென் றும் கூறினர்.

† ஆற்றலிற் சிறந்ததாகலின்மாக மடங்கலும், நடையிற் சிறந்ததாக லின் மால்விடையும், சலியாமையின் பொன்நாகமும், கம்பீரமுடைமை யின் நாகமுமென் றின்ன நாணச்சென்றானென்றது. ‡ கமலத்தோன்... கோளம்-பிரமாண்டகோளம்.

பூமழைசொரிந்தார்விண்ணோர்பொன்மழைபொழிந்தமேகம்
பாமமாகடல்களெல்லாம்பன்மணிதூவியார்த்த
கோமுனிக்கணங்களெல்லாங்கூறினவாசிகொற்ற
நாமவேற்சனகற்கின்றுவினைபயந்ததென்று. (௫௬)

மாலையுமிழையுஞ்சாந்துஞ்சுண்ணமும்வாசநெய்யும்
வேலைவெண்முத்தும்பொன்னுங்காசுநுண்டுகிலும்வீசிப்
பால்வளையமிர்தளாயபல்லியந்துவைப்பமுந்நீர்
* ஒல்கியர்ந்துவாவுற்றென்னவொலிநகர்கிளர்ந்ததன்றே. (௫௭)

நல்லியன்மகரவீணைத்தேனுகநகையுந்தோடும்
வில்லிடவாளும்வீசவேல்கிடந்தனையநாட்டத்
தெல்லியன்மதியமன்னமுகத்தியரெழிலிதோன்றச்
சொல்லியபருவநோக்குந்தோகையினாடினாரே. (௫௮)

உண்ணரவருந்தினாரிச்சிவந்தொளிர்கருங்கண்மாதர்
புண்ணுறுபுலவிநீங்கக்கொழுநரைப்புல்லிக்கொண்டார்
வெண்ணிறமேகமென்மேல்விரிகடல்பருகுமாபோல்
மண்ணுறுவேந்தன்செல்வம்வறியவர்முகந்துகொண்டார். (௫௯)

வயிரியர்மதுரகீதமங்கையரமுதகீதம்
செயிரியர்மகரயாழின்றேம்பிழிதெய்வகீதம்
பயிரியர்வேயின்கீதமென்றிவைபருகிவிண்ணோர்
உயிருடையுடம்புவெல்லாமோவியமொப்பநின்றார். (௬௦)

ஐயன்வில்லிறுத்தவாற்றல்காணியவமரர்நாட்டுத்
தையலாரிழிந்துபாரின்மகளிரைத்தழுவிக்கொண்டார்
செய்கையின்வடிவினாடல்பாடலிற்றெளிதறேற்றார்
மையரிநெடுங்கணோக்கமிமைத்தலுமயங்கிநின்றார். (௬௧)

தயரதன்புதல்வனென்பார்தாமரைக்கண்ணனென்பார்
புயலிவன்மேனியென்பார்பூவையும்பொருவுமென்பார்
மயலுடைத்துலகமென்பார்மானுடனல்லனென்பார்
கயல்பொருகடலுள்வைகுங்கவவுளேகாணுமென்பார். (௬௨)

நம்பியைக்காணநங்கைக்காயிரம்நயனம்வேண்டும்
கொம்பினைக்காணுந்தோறுங்குரிசிற்குமன்னதேயாம்
தம்பியைக்காண்மினென்பார்தவமுடைத்துலகமென்பார்
இம்பரிந்நகரிற்றந்தமுனிவனையிறைஞ்சுமென்பார். (௬௩)

---

* நிறைமதியங் காண்புழி கடல் ஒல்லெனக் கிளர்ந்து பொங்கலான் ஒல்கிளர்ந்து! வாவுற்றென்ன என்றார்.

இற்றிவணின்ன தாகமதியொடுமெல்லிநீங்கப்
பெற்றுயிர்பின்னுங்காணுமாசையாற்சிறிதுபெற்ற
சிற்றிடைப்பெரியகொங்கைச்சேயரிக்கரியவாட்கட்
பொற்றொடிமடந்தைக்கப்பாலுற்றதுபுகலலுற்றாம். (சச)

ஊசலாடுயிரினோடுமுருகுபூம்பள்ளிநீங்கிப்
பாசிழைமகளிர்சூழப்போயொருபளிக்குமாடக்
காசிறுமணியின்பொய்கைச்சந்திரகாந்தமீன்ற
சீதநீர்தெளித்தமென்பூஞ்சேக்கையையரிதிற்சேர்ந்தாள். (சரு)

பெண்ணிவணுற்றதென்னும்பெருமையாலருமையான
* வண்ணமுமிலைகளாலேகாட்டவால்வாட்டந்தீர்ந்தேன்
தண்ணறுங்கமலங்கா † ளென்றளிர்நிறமுண்டகண்ணின்
உண்ணிறங்காட்டிநீரென்னுயிர்தரவுலோவினீரே. (சசு)

வேறு.

நாணுலாவுமேருவோடுநாணுலாவுபாணியும்
தூணுலாவுதோளும்வாளியூடுலாவுதூணியும்
‡ வாணிலாவினூலுலாவுமாலைமார்புமீளவும்
காணலாகுமாகினுவிகாணலாகுமேகொலாம். (சஎ)

விண்டலங்கலந்திலங்குதிங்களோடுமீதுசூழ்
வண்டலம்பலங்கறங்குபங்கியோடும்வார்சிலைக்
கொண்டலொன்றிரண்டுகண்ணின்மொண்டுகொண்டென்னாவியை
உண்டதுண்டெனெஞ்சினின்றுமுண்டதென்றுமுண்டரோ. (சஅ)

பஞ்சரங்குதீயினுவிபற்றநீடுகொற்றவில்
வெஞ்சரங்கணெஞ்சரங்கவெய்யகாமனெய்யவே
சஞ்சலங்கலந்தபோதுதையலாரையுய்யவந்
தஞ்சலஞ்சலென்கிலாதவாண்மையென்னவாண்மையே. (சகூ)

இளைக்கலாதகொங்கைகாளெழுந்துவிம்மி $ யென்செய்தீர்
¶ முளைக்கலாமதிக்கொழுந்துபோலும்வாண்முகத்தினன்
வளைக்கலாதவிற்கையாளிவள்ளன்மார்பினுள்ளுறத்
திளைக்கலாகுமாகிலானசெய்தவங்கள்செய்மினே. (ரு0)

* இராமன் மரகதமேனியனாதலின் இலைகளாலே வண்ணங்காட்டலாலென்றார். † இராமனைக்கண்டவழித்தன் வடிவழகிவந்து மாமை நிறங்கோடலான் என்றளிர் நிறமுண்ட கண்ணென்றார். ‡ அவனைக்காணாத வழியுயிரிழப்பலென்பதுபற்றிக் காணலாகுமாகினுவி காணலாகுமேகோலென்றார். $ என்செய்தீர். ஒன்றுஞ்செய்திவீர் என்பதுபடநின்றது. ¶ கலைகள் பிறத்தற்கிடமாகிய மதிக்கொழுந்தென்பார் முளைக்கலா மதிக்கொழுந்தென்றார்.

எங்குநின்றெழுந்ததிந்தவிந்துவந்தெனெஞ்சுலா
அங்கியன்றனங்கனெய்தவம்பின்வந்தசிந்தைநோய்
பொங்குகின்றகொங்கைமேல்விடம்பொழிந்ததென்னினும்
கங்குல்வந்ததிங்களன்றகங்களங்கமில்லையே. (ருக)

அடர்ந்துவந்தனங்கனெஞ்சழன்றுசிந்துமம்பெனும்
விடங்குடைந்தமெய்யினின்றுவெந்திடாதெழுந்துவெங்
கடந்துதைந்த * காரியானையன்னகானைகாலடைந்
துடன்றொடர்ந்துபோனவாவிவந்தவாவெனுள்ளமே. (ரு௨)

விண்ணுளேயெழுந்தமேகமார்பினூலின்மின்னொடிம்
மண்ணுளேயிழிந்தநென்னவந்துபோனமைந்தனார்
எண்ணுளேயிருந்தபோதும்யாவரென்றுதேர்கிலென்
கண்ணுளேயிருந்தபோதுமென்கொல்காண்கிலாதவே. (ருங)

† பெய்கடற்பிறந்தயல்பிறக்கொணாமருந்துபெற்
றையபொற்கலத்தொடங்கைவிட்டிருந்தவாதர்போல்
மொய்கிடக்குமண்ணரேண்முயங்கிடாதுமுன்னமே
கைகடக்கவிட்டிருந்துகட்டுரைப்பதென்கொலோ. (ருச)

என்றுகொண்டுணர்ந்துநைந்திரங்கிவிம்மிவிம்மியே
பொன்றிணிந்தகொங்கைமங்கையிடரின்மூழ்குபோழ்தின்வாய்க்
குன்றமன்னசிலைமுரிந்தகொள்கைகொண்டுகுளிர்மனத்
தொன்றுமுண்சண்மதிமுகத்தொருத்திசெய்ததுரைசெய்வாம். (ருரு)

வேறு.

வடங்களுங்குழைகளும்வானவில்லிடத்
தொடங்குபகலைகளுஞ்சுழலுஞ்சோர்தர
நுடங்கியமின்னெனநொய்தினெய்தினள்
நெடுந்தடங்கிடந்தகண் ‡ நீலமாலையே. (ருசு)

வந்தடிவணங்கிலள்வழங்குமோதையள்
அந்தமிலுவகையாளடிப்பாடினள்
சிந்தையுன்மகிழ்ச்சியும்புகுந்தசெய்கையும்
சுந்தரிசொல்லெனத்தொழுதுசொல்லுவான். (ருஎ)

§ கரததுரகயமாக்கடலன்கல்லியன்
தயாதனெனும்பெயர்த்தனிச்சென்னேமியான்
புயல்பொழிதடக்கையான்புதல்வானபூங்கணை
மயல்விளைமதனற்கும்வடிவுமேன்மையான். (ருஅ)

---

* காரியானை கரியயானை என்றபடி. † மணிமுதலியன யாவுந்தருதலின் பெய்கடலென்றார். ‡ நீலமாலை-ஒருசேடியின்பெயர். § நால்வகைப் படையுட்சிறந்தமையின் கயத்தைமுற்கூறினார்.

மராமரமிவையெனவலியதோளினன்
அராவணையமலனென்றயிர்க்குமாற்றலான்
இராமனென்பதுபெயரிளையகோவொடும்
பராவருமுனியொடும்பதிவந்தெய்தினன். (ருகூ)

பூணியன்மொய்ம்பினன்புனிதனெய்தவில்
காணியவந்தனனென்னக்காவலன்
ஆணையினடைந்தவில்லதனையாண்டகை
நாணினிதேற்றினனடுங்கிற்றும்பரே. (சுO)

மாத்திரையளவிற்றாண்மடுத்துமுன்பயில்
சூத்திரமிதுவெனத்தோளின்வாங்கினன்
ஏத்தினரிமையவரிழிந்தபூமழை
வேத்தவைநடுக்குறமுறிந்துவீழ்ந்ததே. (சுக)

கோமுனியுடன்வருகொண்டலென்றபின்
தாமரைக்கண்ணினனென்றதன்மையால்
ஆமவனேகொலென்றையநீங்கினள்
* வாமமேகலையினுள்வளர்ந்ததல்குலே. (சுஉ)

இல்லையேநுசுப்பென்பருண்டுண்டென்னவும்
மெல்லியன்முலைகளும்விம்மவிம்முவாள்
சொல்லியகுறியினத்தோன்றலேயவன்
அல்லனேலிறப்பனென்றகத்துளுன்னினள். (சுங)

ஆசையுற்றயர்பவளன்னளாயினள்
பாசடைக்கமலத்தோன்படைத்தவில்லிறும்
ஓசையிற்பெரியதோருவகையெய்தியக்
கோசிகற்கொருமொழிசனகன்கூறுவான். (சுச)

உரைசெயெம்பெருமவுன்புதல்வன் † வேள்விதான்
விரைவினின்றொருபகன்முடித்தல்வேட்கையோ
முரைசெறிந்ததிர்கழன்முழங்குதானையவ்
வரைசையுமிவ்வழியழைத்தல்வேட்கையோ. (சுரு)

மல்வலானவ்வுரைபகரமாதவன்
ஒல்லையிலவனும்வந்துறுதனன்றெனர்
எல்லையிலுவகையானியைந்தவாறெலாஞ்
சொல்லுகென்றோலையுந்தூதும்போக்கினன். (சுசு)

கரு-வது. கார்முகப்படலம்-முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-அககசு.

---

* இலக்கணக்குறைபாடின்றியே வளராநின்ற தென்பார் வாமமேகலையினுள்வளர்ந்ததல்குலென்றார். † வேள்வி-மணத்தை.

## கச-வது எழுச்சிப்படலம்

தசரதன் தனது படைகளோடு மிதிலைக்குச் செல்வதைக்
குறித்துக்கூறுகின்ற படலம்.

கடுகியதூதருங்காலிற்காலிற்சென்
றிடிகுரன்முரசதிரயோத்தியெய்தினர்
அடியிணைதொழுமிடமன்றிமன்னர்தம்
* முடியொடுமுடிபொருவாயின்முன்னினர். (க)

முகந்தனர்திருவருண்முறையினெய்தினர்
திகழ்ந்தொளிர்கழலிணைதொழுதுசெல்வனைப்
புகழ்ந்தனரரசநின்புதல்வர்போயபின்
நிகழ்ந்ததையிதுவெனநெடிதுகூறினர். (உ)

கூறியதூதருங்கொணர்ந்தவோலையை
ஈறில்வண்புகழினயிதுவதென்றனர்
வேறொருபுலமகன்விரும்பிவாங்கினன்
மாறதிர்கழலினன்வாசியென்றனன். (௩)

இலைமுகப்படத்தவரெழுதிக்காட்டிய
தலைமகன்சிலைத்தொழில்செவியிற்சார்தலும்
நிலைமுகவலயங்கணிமிர்ந்துநீங்கிட
மலையெனவளர்ந்தனவயிரத்தோள்களே. (௪)

வெற்றிவேன்மன்னவன்றக்கன்வேள்வியில்
கற்றைவார்சடைமுடிக் † கணிச்சிவானவன்
முற்றவேழுலகையும்வென்றமூரிவில்
இற்றபேரொலிகொலன்றிடித்ததிங்கென்றான். (௫)

என்றுரைத்தெதிரெதிரிடைவிடாதுநேர்
துன்றியகனகழற்றூதர்கொள்கெனப்
பொன்றிணிகலன்களுந்தூசும்போக்கினன்
குன்றெனவுயரியகுவவுத்தோளினன். (௬)

‡ வானவன்குலத்தெமர்வரத்தினல்வரும்
வேனில் $ வேளிருந்தவம்மிதிலைநோக்கிநம்

---

* ஒருவரோடொருவர் நெருங்கி முற்படுவதனன் முடியோடுமுடி பொருவாயிலென்றார். † கணிச்சிவானவன்-மழுப்படை இறைவன். கணிச்சியென்னும் விசேடணத்தாற் சிவனையுணர்த்திற்று. ‡ வானவன் - வானத்திலியங்குங் காரணத்தால் சூரியனுக்குத் தலைமைப்பற்றிவந்த பெயர். $ வேள்-விருப்பத்தையுண்டாக்குவோன்.

சேனையுமரசருஞ்செல்கமுந்தென
ஆனைமேன்மணமுரசறைகென்றேவினான். (எ)

வாம்பரிவிரிதிரைக்கடலைவள்ளுவன்
தேம்பொழிதுழாய்முடிச்செங்கண்மாலவன்
ஆம்பரிசுலகெலாமளந்துகொண்டநாள்
சாம்புவன்றிரிந்தெனத்திரிந்துசாற்றினான். (அ)

சாற்றியமுரசொலிசெவியிற்சாருமுன்
கோற்றொடிமகளிருங்கோலமைந்தரும்
வேற்றருகுமரரும்வென்றிவேந்தரும்
காற்றெறிகடலெனக்களிப்பினேங்கினார். (கூ)

விடைபொருநடையினான்சேனைவெள்ளமோர்
இடையிலையுலகினிலென்னவீண்டிய
கடையுகமுடிவினிலெலையங்காற்படப்
புடைபெயர்கடலெனவெழுந்துபோயதே. (க0)

சில்லிடமுலகெனச்செறிந்ததேர்கடாம்
புல்லிடுசுடரெனப்பொலிந்தவேந்தரால்
எல்லிடுகதிர்மணியெறிக்குமோடையால்
வில்லிடுமுகிலெனப்பொலிந்தவேழமே, (கக)

கால்விரிந்தெழுகுடைகணக்கிலோதிமம்
பால்விரிந்ததுவெனப்பறப்பபோன்றன
மேல்விரிந்தெழுகொடிப்படலைவிண்ணெலாம்
தோலுரிந்துகுவளைபோன்றுதோன்றுமால். (கஉ)

நுடங்கியதுகிற்கொடிநூழைக்கைம்மலைக்
கடங்கலுழ்சேனையைக்கடலிதாமென
இடம்படவெங்கணுமெழுந்தவெண்முகில்
தடம்புனல்பருகிடத்தாழ்வபோன்றவே. (கங)

இழையிடையிளவேயிலெறிக்குமவ்வெயில்
தழையிடைநிழல்கெடத்தவழுமத்தழை
மழையிடையெழில்கெடமலருமம்மழை
குழைவுறமுழங்கிடுங்குழாங்கொள்பேரியே. (கச)

மன்னணிப்புரவிகண்மகுளிரூர்வன
அன்னமுந்தியதிரையாறுபோன்றன
* பொன்னணிப்புணர்முலைப்புரிமென்கூந்தலார்
மின்னெனமடப்பிடிமேகம்போன்றவே. (கரு)

---

* மாதரை மின்னாகவும், மடப்பிடியை மேகமாகவு முருவகஞ்செய்தார்.

இணையெடுத்திடையிடைநெருக்கவேழையர்
துணைமுலைக்குங்குமச்சுவடுமாடவர்
மணிவரைப்புயத்துமென்சாந்துமாழ்கிமேல்
அணையெனப்பொலிந்ததக்கடல்செலா றரோ. (கசு)

முத்திஞுண்முழுநிலவெறிக்குமொய்ம்மணிப்
பத்தியாலிளவெயில்பரப்பும்பாகிறும்
தித்தியாநின்றசொற்சிவந்தவாயச்சியர்
* உத்தராசங்கமிட்டொளிக்குங்கூற்றமே. (கஎ)

வில்லினர்வாளினர்வெறித்தகுஞ்சியர்
கல்வினையழித்துயர்மனகத்தோளினர்
வல்லியின்மருங்கினர்மருங்குமாப்பிடி
புல்லியகளிறெனமைந்தர்போயினர் (கஅ)

மன்றலம்புதுமலர்மழையிற்சூழ்ந்தெனத்
துன்றிருகூந்தலார்முகங்கடோன்றலால்
ஒன்றலாமுழுமதியூருமானம்போல்
சென்றனவாலவர்சிவிகையீட்டமே. (ககூ)

மொய்திரைக்கடலெனமுழங்கு † மூக்குடைக்
கைகளிற்றிசைநிலைக்களிற்றையாய்வன
மையலுற்றிழிமதமழையருமையால்
தொய்யலைக்கடந்திலசூழியானையே. (உ0)

‡ சூருடைநிலையெனத்தோய்ந்துந்தோய்கிலா
வாருடைவனமுலைமகளிர்சிந்தைபோல்
தாரொடுஞ்சதியொடுந்தாவுமாயினும்
பாரிடைமிதிக்கிலபரியின்பந்தியே. (உக)

ஊடியமனத்தினருருதநோக்கினர்
நீடியவுயிர்ப்பினர்நெரிந்தநெற்றியர்
தோடவிழ்கோதையுந்துறந்தகூந்தலர்
ஆடவருயிரெனவருகுபோயினர். (உஉ)

மாறெனத்தடங்களைப்பொருதுமாமரம்
ஊறுபட்டிடவிடையொடித்துச்சாயத்துராய
ஆறெனச்சென்றனவருவிபாய்கவுட்
டாறெனக்கனலுமிழ்தறுகண்யானையே. (உங)

* உத்தராசங்கம்-மேற்போர்வை. † மூக்குடைக்கை- புழைக்கை. ‡ சூருடை நிலை பூமியிற்கால்தோயாது செல்லல்.

உழுந்திடவிடமிலையுலகமெங்கணும்
அழுந்தியவுயிர்க்கெலாமருட்கொம்பாயினன்
எழுந்திலனெழுந்திடைப்படருஞ்சேனையின்
கொழுந்துபோய்க்கொடிமதின்மிதிலைகூடிற்றே. (உச)

கண்டவர்மனங்கள்கைகோப்பக்காதலின்
வண்டமர்கோதையர்வதனராசியால்
பண்டிகள்பண்டிகள்பரிசிற்செல்வன
புண்டரீகத்தடம்போவபோன்றவே. (உரு)

பாண்டிலின்வைத்தவோர்பாவைதன்னொடும்
ஈண்டியவன்பினனேகுவானிடை
காண்டலுநோக்கியகடைக்கணஞ்சனம்
ஆண்டகைக்கினியதோரமுதமாயதே. (உசு)

பிள்ளைமானோக்கியைப்பிரிந்துபோகின்றான்
அள்ளனீர்மருதவைப்பதனினன்னமாம்
புள்ளுமென்றாமரைப்பூவுநோக்கினன்
உள்ளமுந்தானுநின்றூசலாடுவான். (உஎ)

வேறு.

அங்கண்ஞாலத்தரசுமிடைந்தவா
பொங்குவெண்குடைசாமரைபோர்த்தலால்
கங்கையாறுகடுத்ததுகாரெனச்
சங்குபேரிமுழங்கியதானையே. (உஅ)

அமரரஞ்சவ்வணங்கனையாருயிர்
கவருங்கூர்நுதிக்கண்ணெனுங்காலவேல்
குமரர்நெஞ்சுகுளிப்பவழங்கலால்
சமரபூமியுமொத்ததுதானையே. (உகூ)

தோண்மிடைந்தனதூணமிடைந்தென
வாண்மிடைந்தனவான்மின்மிடைந்தெனத்
தாண்மிடைந்தெனதம்மின்மிடைந்தென
ஆண்மிடைந்தனவாளிமிடைந்தென. (ங0)

* வார்குலாமுலைவைத்தகண்வாங்கிடப்
பேர்கிலாதுபிறங்குமுகத்தினன்
தேர்கிலானெறியந்தரிற்சென்றொரு
மூரிமாமதயானையைமுட்டினன். (நக)

* வார்குலாமுலை - கச்சுவிரும்புமுலை.

சுழிகொள்வாம்பரிதுள்ளவோர்தோகையாள்
வழுவிவீழலுற்றாளையோர்வள்ளறான்
எழுவினீள்புயத்தாலெடுத்தேந்தினான்
தழுவிநின்றொழியான்றரைதான்வையான். (௩௨)

துணைத்ததாமரைநோவத்தொடர்ந்தடர்
கணைக்கருங்கணினாளையோர்காளைதான்
பணைத்தவெம்முலைப்பாய்மதயானையை
அணைக்கநங்கைக்ககலிடமில்லென்றான். (௩௩)

சுழியுங்குஞ்சிமிசைச்சுரும்பார்த்திடப
பொழிமாமதயானையிற்போகின்றான்
கழியகூரியவென்றொருகாரிகை
விழியைநோக்கித்தன்வேலையுநோக்கினான். (௩௪)

தரங்கவார்குழற்றாமரைச்சீறடிக்
கருங்கண்வாளுடையாளையோர்காளைதான்
நெருங்குபூண்முலைநீள்வளைத்தோளினிர்
மருங்குலெங்குமறந்ததுநீரென்றான். (௩௫)

கூற்றம்போலுங்கொலைக் * கண்ணினாலன்றி
மாற்றம்பேசுகிலாளையோர்வள்ளறான்
ஆற்றுநீரிடையங்கைகளாலெடுத்
தேற்றுவாருமையாவார்கொலேவென்றான். (௩௬)

தள்ளரும்பரந்தாங்கியவொட்டகம்
தெள்ளுதேன்கரும்பியாவையுந்தின்கில
உள்ளமென்னத்தம்வாயுமுலர்ந்தன
கள்ளுண்மாந்தரிற்கைப்பணதேடியே. (௩௭)

அரத்தநோக்கினரற்றிரண்மேனியர்
பரித்தகாவினர்பப்பரரேகினார்
திருத்துகூடத்திற்றிண் † கணையத்தொடும்
எருந்தினேந்தியமால்களிறென்னவே. (௩௮)

பித்தயானைபிணங்கிப்பிடியிற்கை
வைத்தமேவிருந்தஞ்சியமங்கைமார்
எய்த்திடுக்கணுற்றார்புதைத்தார்க்கிரு
கைத்தலங்களிற்கண்ணடங்காமையே. (௩௯)

---

* கண்ணினாலன்றி மாற்றம்பேசவென்றது - கண்ணளவானன்றி வாயிற்றோன்றுஞ் சொற்களை. † கணையம்-மதயானையைத்தடுக்குமரம்.

வாமமேகலையாரிடைவாலதி
பூமிதோய்பிடிச் * சிந்தரும்போயினார்
காமர்தாமரைநாண்மலர்க்கானத்துள்
ஆமைமேல்வருந்தேரையினையரோ. (சா)

இம்பர்நாட்டின்றரமல்லளீங்கிவள்
உம்பர்கோமகற்கென்கின்றதொக்குமால்
கம்பமாவரக்கால்கள்வளைத்தொரு
கொம்பனாளைக்கொண்டோடுங்குதிரையே. (சாக)

சந்தவார்குழல்சோர்பவைதாங்கலார்
சிந்துமேகலைசிந்தையுஞ்செய்கலார்
எந்தைவில்லிறுத்தானெனுமின்சொலை
மைந்தர்பேசமனங்களித்தோடுவார். (சாஉ)

குடையர்குண்டிகைதூக்கினர்குந்திய
நடையர்நாசிபுதைத்தகைநாற்றலர்
கடைகளிற்றையுங்காரிகையாரையும்
அடையவஞ்சியவந்தணர்முந்தினார். (சாங)

நாறுபூங்குழனங்கையோர்கண்கணீர்
ஊறுநேர்வந் † துருவுவெளிப்படி
மாறுகொண்டனைவந்தனையாகில்வந்
தேறுதேறெனக்கைகளிழிச்சுவார். (சாச)

குரைத்ததேருங்களிருங்குதிரையும்
நிறைத்தவார்முரசுந்நெளிந்தெங்கணும்
இரைத்தபேரொலியாலிடையாவரும்
உரைத்துணர்ந்திலருமரினேகினார். (சாரு)

துட்சிலம்பியலர்ந்தன நுண்டுகில்
‡கட்சிலம்புகருங்குழலார்குழு
உட்சிலம்புசிலம்பவொதுங்கலால்
புட்சிலம்பிடுபொய்கையும்போன்றதே. (சாசு)

தெண்டிரைப்பரவைத்திருவன்னவர்
நுண்டிரைப்புரைநோக்கியநோக்கினைக்
கண்டிரைப்பனவாடவர்கண்களி
வண்டிரைப்பனவானைமதங்களே. (சாஎ)

---

* சிந்தர்-குறளர் இவர் மெய்காப்பாளர். † உருவுவெளிப்படஎன்றூர் போர்வயிற்பிரிந்த தலைவன் உறுவெளித்தோற்றத்தை. ‡கள்-மலர்த்தேன்.

* உழைகளத்தனவென்னவுயிர்த்துணை
நுழைகலிக்கருங்கண்ணியர் நூபுர
இழைகலித்தனவின்னியமாவெழு
மழைகலித்தெனவாசிகலித்தவே. (சஅ)

மண்களிப்படைப்பவர்வாணுதல்
உண்களிக்கமலங்களினுள்ளுறை
திண்களிச்சிறு † தும்பியெனச்சிலர்
கண்களித்தனகாமன்களிக்கவே. (சகூ)

எண்ணமாத்திரமும்மரிதாமிடை
வண்ணமாத்துவர்வாய்க்கனிவாய்ச்சியர்
திண்ணமாத்தொளிர்செவ்விளநீரிழி
சுண்ண ‡ மாத்தனதூளியுமாத்தவே. (இ0)

சித்திரத்தடந்தேர்மைந்தர்மங்கையர்
உய்த்துரைப்பநினைப்பவுலப்பிலர்
இத்திறத்தினரெத்தனையோபலர்
மொய்த்திரைத்துவழிக்கொண்டுமுன்னினார். (இக)

வேறு.

குசையுறுபரியுந்தேரும்வீரருங்குமிழியெங்கும்
விசையொடுகெடுகப்பொங்கிவீங்கியதூளிவிம்மிப்
பசையுறுதுனியின்றூரைப்பசுந்தொளையடைத்தமேகம்
திசைதொறுநின்றயானைமதத்தொளை ‡செம்மிற்றன்றே. (இஉ)

கேடகத்தடக்கையாலேகிளரொளிவாளும்பற்றிச்
சூடகத்தளிர்க்கைமற்றைச்சுடர்மணித்தடக்கைபற்றி
0 ஆடகத்தோடையானையழிமதத்திழுக்கலாற்றி
பாடகக்காலினாரைப்பயப்பயக்கொண்டுபோனார். (இங)

செய்களின்மடுவினன்னீர்ச்சிறைகளினிறைப்பூத்த
நெய்தலுங்குமுதப்பூவுநெகிழ்ந்தசெங்கமலப்போதும்
கைகளுமுகமும்வாயுங்கண்களுங்காட்டக்கண்டு
கொய்தவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றாரும். (இச)

பந்தியம்புரவிநின்றும்பார்டையிழிந்தோர்வாசக்
கொந்தளபாரஞ்சோரக்குலமணிக்கலன்கள்சிந்தக்
சந்தநுண்டுகிலும்வீழத்தளிர்க்கையாலணைத்துச்சார
வந்ததுவேழமென்னமயிலெனவிரியல்போவார். (இரு)

* உழை-ஏழிசைக்குள், சிரத்திற்பிறக்குமிசை. † தும்பி - வண்டு ‡ யாத்தனமென்றது மரீஇயது 'ஆதுபில் காலத்தெந்தை' என் புழிப் போல. $ செம்மிற்று அடைத்தது, 0 ஆடகம் - நால்வகைப்பொன்னி னொன்று.

* குடையொடுகளிறுந்தொங்கற்குழாங்களுங்கொடியின்காடும்
இடையிடைமயங்கியெங்கும்வெளிகரந்திருளைச்செய்யப்
படைகளுமுடியும்பூணும்படர்வெயில்பரப்பிச்செல்ல
இடையொருகணத்தினுள்ளேயிரவுண்டுபகலுமுண்டே. (ருசு)

முருக்கிதழ்முத்தமூரன் முறுவலார்முகங்களென்னும்
திருக்கிளர்கமலப்போதிற்றீட்டினகிடந்தகூர்வாள்
நெருக்கிடையறுக்கு † நீர்கணீங்குமினீங்குமென்றன்
றருக்கனிலெரளிருமேனியாடவரகலப்போவார். (ருஎ)

நீந்தருநெறியினுற்றநெருக்கினுற்சுருக்குண்டற்றுக்
காந்தினமணியுமுத்துஞ்சிந்தின ‡ கலாபஞ்சூழ்ந்த
பாந்தளினல்குலார்தம்பரிபுரம்புலம்பப்பைம்பொற்
பூந்தளிருறைப்பமாழ்கிப்போக்கரிதென்னநிற்பார். (ருஅ)

கொற்றபல்லியங்களெங்குங்கொண்டலிற்றுவைப்பப்பண்டிப்
பெற்றவேறன்னப்புள்ளிற்பேதையற்வெருவிநீங்க
முற்றுறுபரங்களெல்லாமுறைமுறைபாசத்தோடும்
பற்றறவீசியேகியோகியிற்பரிவுதீர்ந்த. (ருகூ)

$ காற்செறிவேகப்பாகர்கார்முகவுண்டைபாரா
வார்சிறைக்கொங்கையன்னகும்பமுமருப்புங்காணப்
பாற்செறிகடலிற்றோன்றும்பணைக்கைமால்யானையென்ன
நீர்ச்சிறைபற்றியேறுகின்றகுன்றனையவேழம். (சுO)

அறிவியற்கூந்தற்கண்வாளமுதுகுகுமுதச்செவ்வாய்
விறலியரோடுநல்யாழ்ச்செயிரியர்புரவிமேலார்
நறைசெவிப்பெய்வதென்னநவைவளர்மேகப்பாடல்
முறைமுறைநணுகப்போனார்கின்னரமிதுனமொப்பார். (சுக)

அருவிபெய்வரையிற்பொங்கியங்குசகிமிரவெங்கும்
இரியலிற்சனங்கள்சிந்தவிளங்களிச்செங்கண்யானை
விரிசிறைத்தும்பிவேறோர்வீழ்மதந்தோய்ந்துமாதர்
சுரிகுழல்படியவேற்றின்பிடியொடுந்தொடர்ந்துசெல்ப. (சுஉ)

நிறைமதித்தோற்றங்கண்டநீனெடுங்கடலிற்றுகி
அறைபறைதுவைப்பத்தேருமானையுமாடன்மாவும்

---

* குடைகளிறு முதலாயின இருளைச்செய்தமையானும், படைகளு முடியு முதலாயின பகலைச்செய்தமையானும், இடையொருகணத்தினுள் ளே யிரவுண்டு பகலுமுண்டே என்றார். † நீர்கள்-முன்னிலைப் பன்மைப் பெயர்; இதனை 'மேவித்தொழு துய்மினீர்கள்' என்றதனுனறிக. ‡ கலா பம்-பதினறு கோவைமணி, இது மாதரிடையணியுளொன்று. $ காற்செறி வேகம்-வாயுவேகம்.

கறைகெழுவேற்கணுருவமைந்தருங்கவினியொல்லை
நெறியிடைப்படரவேந்த * னேயமங்கையர்தாஞ்செல்வார். (சுரு)

பொய்கையங்கமலக்கானிற்பொலிவதோரன்னமென்னக்
கய்கயர்வேந்தன்பாவைகணிகையரீட்டம்பொங்கி
அய்யிருநூறுசூழ்ந்தவாய்மணிச்சிவிகைதன்மேல்
தெய்வமங்கையருநாணத்தேனிசைமுரலப்போனாள். (சுச)

காரணமின்றியேயுங்கனலெழவிழிக்குங்கண்ணார்
வீரவேத்திரத்தார்தாழ்ந்துவிரிந்தகஞ்சுகத்துமெய்யார்
தாரணிபுரவிமேலார்தலத்துளார்தடித்தசொல்லார்
ஆரணங்கனையமாதரடிமுறைகாத்துப்போனார். (சுரு)

விரிமணித்தார்கள்பூண்டவேசரி † வெரிநிற்றோன்றும்
அரிமலர்த்தடங்கணல்லாராயிரத்திரட்டிசூழக்
குருமணிச்சிவிகைதன்மேற்கொண்டலின்மின்னிதென்ன
‡ இருவரைப்பயந்தநங்கையாழிசைமுரலப்போனாள். (சுசு)

செங்கையின்மஞ்ஞையன்னஞ்சிறுகிளிபூவைபாவை
சங்குறைகழித்தவன்னசாமரைமுதலதாங்கி
இங்கலதெண்ணுங்காலிவ்வெழுதிரைவளாகந்தன்னில்
மங்கையரில்லையென்னமடந்தையர்மருங்குபோனார். (சுஎ)

வெள்ளெயிற்றிலவச்செவ்வாய்முகத்தைவெண்மதியமென்று
கொள்ளையிற்சுற்றுமீன்கள்குழுமியவனையவூர்தி
தெள்ளரிபாண்டிபாணிச்செயிரியரிசைத்தேன்சிந்த
வள்ளலைப்பயந்தநங்கைவானவர்வணங்கப்போனாள். (சுஅ)

கூனொடுகுறளுஞ்சிந்துஞ்சிலதியர்குழாமுங்கொண்ட
பானிறப்புரவியன்னப்புள்ளெனப்பாரிற்செல்லத்
¶ தேனொடுமிஞிறும்வண்டுந்தும்பியுந்தொடர்ந்துசெல்லப்
பூசிறைகூந்தன்மாதர்புடைபிடிநடையிற்போனார். (சுகூ)

துப்பினின்மணியிற்பொன்னிற்சுடர்மரகதத்தின்முத்தின்
ஒப்பறவமைத்தபைம்பூணோவியம்புகழவேறி
முப்பதிற்றிரட்டிகொண்டவாயிரமுகிழ்மென்கொங்கைச்
செப்பருந்திருவினல்லார்தேர்மிசைசூழப்போனார். (எ0)

செவிவயினமிர்தகேள்விதெவிட்டினார்தேவர்நாவின்
அவிகையினளிக்குமீராரையிருகோடிசூழக்

---

* நேயமங்கையரென்றது அறுபதினாயிரமாதரை. † வெரிந்-முதுகு ‡ இருவரைப்பயந்த நங்கை-சுமத்திரியை. ¶ தேன் முதலாயின வென்றது நால்வகை வண்டினை. ஞிமிறு-பொன்வண்டு.

கவிகையினீழற்கற்பினருந்ததிகணவன்வெள்ளைச்
சிவிகையினன்னமூருந்திசைமுகனென்னச்சென்றான். (எக)

பொருகளிறிவுளிபொற்றேர்பொலங்கழற்குமரர்முந்நீர்
அருவரைசூழ்ந்ததென்னவருகுபின்முன்னுஞ்செல்லத்
திருவளர்மார்பர்தெய்வச்சிலையினர்தேரர்வீரர்
* இருவருமுனிபின்போனவிருவருமென்னப்போனார். (எஉ)

நித்தியநியமமுற்றி † நேமியான்பாதஞ்சென்னி
வைத்தபின்மறைவலோர்க்குவரப்பறுமணியும்பொன்னும்
பத்தியானிரையும்பாரும்பரிவுடனல்கிப்போனான்
முத்தணிவைரப்பூணான்மங்கலமுகூர்த்தநன்னாள். (எங)

இருபிறப்பாளரெண்ணாயிரர்மணிக்கலசமேந்தி
அருமறைவருக்கமோதியறுகுநீரளித்துச்சூழ
வரன்முறைவந்தார்கோடிமங்கலமழலைச்செவ்வாய்ப்
பருமணிக்கலாபத்தார்பல்லாண்டிசைபரவப்போனான். (எச)

கண்டிலனென்னையென்பார்கண்டனனென்னையென்பார்
குண்டலம்வீழ்ந்ததென்பார்குறுகரிதினிச்சென்றென்பார்
உண்டுகொலெழுச்சியென்பாரொலித்ததுசங்கமென்பார்
மண்டலவேந்தர்வந்துநெருங்கினர்மயங்கவென்பார் (எரு)

பொற்றொடிமகளிரூரும்பொலன்கொடார்ப்புரவிவெள்ளம்
சுற்றுறுகமலம்பூத்ததொடுகடற்றிரையிற்செல்லக்
கொற்றவேன்மன்னர்செங்கைப்பங்கயக்குழாங்கள்கூப்ப
மற்றொருகதிரோனென்னமணிநெடுந்தேரிற்போனான். (எசு)

ஆர்த்ததுவிசும்பைமுட்டிமீண்டகன்றிசைகளெங்கும்
போர்த்ததங்கொருவர்தம்மையொருவர்கட்புலங்கொளாமை
சேர்த்ததுசெறிந்ததோடித்திரைநெடுங்கடலையெல்லாம்
தூர்த்ததுசகரரோடுபகைத்தெனத்தூளிவெள்ளம். (எஎ)

சங்கமும்பணையுங்கொம்புந்தாளமுங்காளத்தோடு
மங்கலபேரிசெய்தபேரொலிமழையையோட்டத்
தொங்கலுங்குடையுந்தோகைப்பிச்சமுஞ்சுடரையோட்டத்
திங்கள்வெண்குடைகண்டோடத்தேவருமருளச்சென்றான். (எஅ)

மந்திரகீதவோதைவலம்புரிமுழங்குமோதை
அந்தணராசியோதையார்த்தெழுமுரசினோதை

* இருவரென்றது-பரதசத்துருக்கரை.
† நேமியான் - ஆயிரமோலியரும்பரஞ்சுடரை.

கந்துகொல்களிற்றிஞேதைகடிகையர்கவிதையோதை
இந்திரதிருவன்செல்லவெழுந்தன திசைகளெல்லாம். (எகூ)

நோக்கியதிசைகளெல்லாந்தன்னையேநோக்கிச்செல்ல
வீக்கியகழற்கால்வேந்தர் விரிந்தைகைம்மலர்கள் கூப்பத்
தாக்கியகளிறுந்தேரும்புரவியும்படைஞர்தாளும்
ஆக்கிய தூளிவிண்ணுமண்ணுலகாக்சப்போனேன். (அ0)

வீரருங்களிறுந்தேரும்புரவியுமிடைந்தசேனை
பேர்விடமில்லைமற்ருேருலகில்லைபெயர்க்கலாகா
நீருடையாடையாளுநெளித்தனண்முதுகையென்ருல்
பார்பொறைநீக்கினுனென்றுரைத்ததெப்பரிசுமன்ருே. (அக)

இன்னணமேகிமன்னன்யோசனையிரண்டுசென்ருன்
பொன்வரைபோலுமிந்துசயிலத்தின்சாரல்புக்காள்
மன்மதக்களிறுமாதர்கொங்கையுமாரனம்புந்
தென்வரைச்சாந்துநாறுஞ்சேனையுமிறுத்ததன்றே. (அஉ)

கச-வது எழுச்சிப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-அகூஅ.

---

## கரு-வது. வரைக்காட்சிப்படலம்.

சந்திரசைலத்தைக் கண்டதைக் குறித்துரைக்கும் படலம்.

கோவையார்வடக்கொழுங்கவடொடிதரநிவந்த
ஆவிவேட்டனவரிசிலையனங்கன்மேற்கொண்ட
பூவைவாய்ச்சியர்முலைசிலர்புயத்தொடும்பூட்டத்
தேவதாரத்துஞ்சந்தினும்பூட்டினசிலமா. (க)

நேரொடுங்கலில்பகையினைநீதியால்வெல்லும்
சோர்விடம்பெருவுணர்வினன்சூழ்ச்சியேபோல
வாரொடுந்தொடர்கவட்டொடுமராமரக்குவட்டை
வேரொடுங்கொடுகிரியெனநடந்ததோர்வேழம். (உ)

திரண்டதாளெடுஞ்செறிபணைமருதிடையொடியப்
புரண்டுபின்வர * வுரலொடுபோனவன்போல
உருண்டுகொருேடர்பிரகிடுதறியொடுமொருங்கே
இரண்டுமொமரமிடையிறநடந்ததோர்யானை. (ங)

* உரலொடுபோனவனென்றது-கண்ணபிரானை.

கதங்கொள் * சீற்றத்தையாற்றுவானினியனகழறிப்
பதங்கொள்பாகனுமந்திரியொத்தனன்பன்னூல்
விதங்களாலவன்மெல்லெனவிளம்பும்
இதங்கள்கொள்கிலாவிறைவனையொத்ததோர்யானை. (௪)

மாறுகாணுயதாய்நின்றுமமழையெனமுழங்கும்
தாறுபாய்கரி † வனகரிதண்டத்தைத்தடவிப்
பாறுபின்செலக்காலெனச்செல்வதுபண்டோர்
ஆறுபோகியவாறுபோமாறுபோன்றதுவே. (௫)

பாத்தயானையிற்பதங்களிற்படுமதநாறக்
காத்தவங்குசரிமிர்ந்திடக்கால்பிடித்தோடிப்
பூத்தவேழிலம்பாலையைப்பொடிப்பொடியாகக்
காத்திரங்களாற்றலத்தொடுந்தேய்த்ததோர்களிறு. (௬)

அலகிலானைகளனேகமுமவற்றொடுமிடைந்த
திலகவாணுதற்பிடிகளுங்குருளையுஞ்செறிந்த
உலவைநீள்வனத்தூதமேயொத்தவவ்வூதத்
தலைவனேயொத்துப்பொலிந்ததுசந்திரசயிலம். (௭)

தெருண்டமேலவர்சிறியவர்ச்சேரினுமவர்தம்
மருண்டதன்மையைமாற்றுவரெனுமிதுவழக்கே
உருண்டவாய்தொறும்பொன்னுருளுரைத்தோடி
இருண்டகல்லையுந்தன்னிறமாக்கியவிரதம். (௮)

கொவ்வைநோக்கியவாய்களையிந்திரகோபம்
‡ கவ்விநோக்கினவென்றுசொல்காட்டினமயில்கள்
நவ்விநோக்கியர்நலங்கொண்மேகலைபொலஞ்சாயற்
செவ்விநோக்கினதிரிவனபோல்வனதிரிந்த. (௯)

உய்க்கும்வாசிகளிழிந்தனரன்னத்தினொதுங்கி
மெய்க்கலாபமுங்குழைகளுமிழைகளும்விளங்கத்
தொக்கமென்மரநிழல்படத்துவன்றியசூழல்
புக்கமங்கையர்பூத்தகொம்பாமெனப்பொலிந்தார். (௧௦)

தளங்கொடாமரையெனத்தளிரடியினுமுகத்தும்
வளங்கொண்மாலைவண்டலமரவழிவருந்தினராய்
விளங்குதம்முருப்பளிங்கிடைவெளிப்படவேறோர்
துளங்குபாறையிற்றோழியாயிர்த்திடத்துயின்றார். (௧௧)

---

* சீற்றம் சிறிதுபொழுது நிகழுங்கோபம். இது சீறு என்னும்பகுதியடியாகப் பிறந்ததென் றறியாதார் சிறுமையென்னும் பண்படியாகப் பிறந்ததென்பர். † வனகரிதண்டத்தை தடவுதல்-மோப்பம் பிடித்தல்.

‡ கவ்விநோக்கனவென்று கால் எனற்குக் கவ்விய அழகுடையன வென்றே எனக்கொள்க,

பிடிபுக் * காவிடைமின்னெடும்பிறங்கியமேகம்
படிப்புக்காலெனப்படிதரப்பரிபுரம்புலம்பத்
துடிபுக்காவிடைத்திருமகடாமரைதுறந்து
குடிப்புக்காலெனக்குடிபுக்கார்கொடியன்னமடவார். (கஉ)

வே று.

உண்ணமுதமூட்டியிளையோர்நகர்கொணர்ந்த
துண்ணெனுமுழங்கினதுருக்கர்தரவந்த
மண்மகடன்மார்பினணிவன்னசரமென்னப்
பண்ணியல்வயப்பரிகள்பந்தியினிரைத்தார். (கங)

நீர்திரைநிரைத்தவெனநீடிரைநிரைத்தார்
ஆர்கலிநிரைத்தவெனவாவணநிரைத்தார்
கார்நிரையெனக்களிறுகாவிடைநிரைத்தார்
மாருதநிரைத்தவெனவாசிகணிரைத்தார். (கச)

நடிக்குமயிலென்னவருநவ்விவிழியாரும்
வடிக்குமயில்வீரருமயங்கினர்திரிந்தார்
இடிக்குமுரசக்குரலினெங்குமுரல்சங்கின்
கொடிக்களினுணர்ந்தரசர்கோநகரடைந்தார். (கரு)

மிதிக்கநிமிர்தூளியின்விளக்கமருமெய்யைச்
சுதைக்கணுரையைப்பொருவுதூசுகொடுதூய்தா
உதிர்த்தனரிளங்குமரரோவியரிலோவம்
புதுக்கினரெனத்தருணமங்கையர்பொலிந்தார். (கசு)

தாளுயர்தடக்கிரியிழித்துதரைசேரும்
சோளரியெனக்கரிகொள்கொற்றவரிழிந்தார்
பாளைவிரியொத்துலவுசாமரைபடப்போய்
வாளெழரிரைத்த † படமாடமவைபுக்கார். (கஎ)

தூசினெடுவெண்படமுடைக்குடில்கடோறும்
வாசநகைமங்கையர்முகங்கண்மழைவானிற்
காசின்மதியின்கதிர்வழங்குநிழலெங்கும்
வீசுதிரைவெண்புனல்விழுங்கியனபோலும். (கஅ)

மண்ணுறவிழுந்துநெடுவானுறவெழுந்து
கண்ணுதல்பொருந்தவருகண்ணனில்வருங்கார்
உண்ணிறநறும்பொடியைவீசியொருபாகம்
வெண்ணிறநறும்பொடிபுனைந்தமதவேழம். (கக)

* ஆயிடை என்புழி அகரச்சுட்டு நீண்டது. † படமாடம் - ஆடையானியன்றமனை. கூடாரம் என இக்காலவழக்கு.

தீயவரொடொன்றியதிறத்தருநலத்தோர்
ஆயவரையங்நிலையறிந்தனர்துறந்தாங்
கேயவருநுண்பொடிபடிந்துடனெழுந்தொண்
பாய்பரிவிரைந்துதறிநின்றனமரந்தே. (உ0)

மும்மைப்புரிவன்கயிறுகொய்துசெயன்மொய்ம்பால்
தம்மையுமுணர்ந்துதரைகண்டுவிரைகின்ற
* அம்மையினெடிம்மையையறிந்துநெறிசெல்லும்
செம்மையவரென்னநனிசென்றனதுரங்கம். (உக)

விழுந்தபனியன்னதிரைவீசுபுரைதோறும்
† கழங்குபயின்மங்கையர்கருங்கண்மிளிர்கின்ற
தழங்குகழிசிந்தியதரம்பயிறரங்கத்
தெழுந்திடைபிறழ்ந்தொளிர்கொழுங்கயல்களென்ன. (உஉ)

வெள்ளநெடுவாரியறவீசியுளவேனும்
கிள்ளவெழுகின்றபுனல்கேளிரின்விரும்பித்
தெள்ளுபுனலாறுசிறிதேயுதவுகின்ற
உள்ளதுமருதுதயம்வள்ளலையுமொத்த. (உந)

துன்றிநெறிபங்கிகடுளங்கவழலோடும்
மின்றிரிவவென்னமணியாரமினிர்மார்பர்
மன்றன்மணநாறுபடமாடநுழைகின்றார்
குன்றின்முழைதோறுநுழைகோளரிகளொத்தார். (உச)

நெருங்கயிலெயிற்றனையசெம்மயிரினெற்றிப்
பொருங்குலிகமப்பியனபோர்மணிகளார்ப்பப்
பெருங்களிறலைப்புனல்கலக்குவனபெட்டுக்
கருங்கடல்கலக்கு ‡ மதுகயிடவரையொத்த. (உரு)

ஒக்கநெறிபுய்ப்பவருரைத்தகுறிகொள்ளா
பக்கமினமொய்க்கயலலைக்கநனிபாரா
கைக்கரிமதத்தவிலைமாதர்கலையல்குல்
புக்கவரையொத்தனபுனற்சிறைகளேறு. (உசு)

துகிலிடைமடந்தையரொடாடவர்துவன்றிப்
பகலிடையவட்டிவின்மடுத்தெரிபரப்பம்
அகிலிடுகொழும்புகையமுங்கவின்முழங்கா
முகில்படுநெடுங்கடலையொத்துளதம்மூதூர். (உஎ)

---

* அம்மை இம்மைப்பயன்களை யறிந்து முத்திநெறிப்படர்பவராதவிற் செம்மையவரென்றார். † கழங்கு என்றது-கழங்காடலை ‡ நீசைக் கலக்கும் மதயானைகளை மதுகயிடவரோடுவமை கூறினர்.

வேறு.

கமருறுபொருப்பின்வாழும்விஞ்சையர்காணவந்தார்
தமரையுமறியார்நின்றுதிகைப்புறுதகமைசான்ற
குமரருமங்கைமாருங்குழுவலால்வழுவிவிண்ணின்
றிமரர்நாடிழிந்ததென்னப்பொலிந்ததவ்வனீகவெள்ளம். (உஅ)

வெயினிறங்குறையச்சோதிமின்னிழல்பரப்பமுன்னாள்
துயிலுணர்செவ்வியோருந் * துனியுறுமுனிவினோரும்
குயிலொடுமினிதுபேசிச்சலம்பொடுமினிதுகூவி
மயிலினந்திரிவவென்னத்திரிந்தனர்மகளிரெல்லாம். (உகூ)

தாளிணைகழல்களார்ப்பத்தாரிடையளிகளார்ப்ப
வாள்புடையிலங்கச்செங்கேழ்மணியணிவலயமின்னத்
தோளெனவுயர்ந்தகுன்றின்சூழல்களினிதுநோக்கி
வாளரிதிரிவவென்னத்திரிந்தனர்மைந்தரெல்லாம். (௩0)

சுற்றியகடல்களெல்லாஞ்சுடர்மணிக்கனகக்குன்றைப்
பற்றியவளைந்தவென்னப்பரந்துவந்திறுத்தசேனை
கொற்றவர்தேவிமார்கண்மைந்தர்கள்கொம்பனார்வந்
துற்றவர்காணலுற்றமலைநிலையுளரத்துமன்றே. (௩க)

பம்புதேன்மிஞறுதும்பிபரந்திசைபாடியாட
உம்பர்வானகத்துநின்றவொளிவளர்தருவினோங்கும்
கொம்புகள்பணைக்கைநீட்டிக்குழையொடுமொடித்துக்கோட்டுத்
தும்பிகளுயிரேயன்ன துணைமடப்பிடிக்குநல்கும் (௩உ)

பண்மலர்பவளச்செவ்வாய்ப்பனிமலர்குவளையன்ன
கண்மலர்க்கொடிச்சிமார்க்குக்கணித்தொழில்புரியும் † வேங்கை
உண்மலர்வெறுத்ததும்பிபுதியதேனுதவுநாகத்
தண்மலரென்றுவானத்தாரகைதாவுமன்றே. (௩௩)

மீனெனும்பிடிகளோடும்விளங்கும்வெண்மதிநல்வேழம்
கூனல்வான்கோடுநீட்டிக்குத்திடக்குமுறிப்பாயும்
தேனுகுமடையைமாற்றிச்செந்தினைக்குறவர்முந்தி
வானநீராறுபாய்ச்சியைவனம்வளர்ப்பர்மாதோ. (௩௪)

குப்புறக்கருமையாலக்குலவரைச்சாரல்வைகி
ஒப்புறத்துளங்குகின்றவுடுபதியாடியின்கண்
இப்புறத்தேயுங்காண்பார்குறத்தியரியைந்தகோலம்
அப்புறத்தேயுங்காண்பாரரம்பையரழகுமாதோ (௩௫)

---

துனி-கலவிக்காலத்து ஆடவர்பாற்குற்றங்காரணமாக மாதவரிடத் துண்டாவவதோர் சிறுபிணக்கு † தினைக்குரல்கொய்தற்கு வேங்கைமலர் தல் காலமாதலின் கணித்தொழில் புரியும் வேங்கை என்றார்.

உதியுறு துருத்தியூது முலையுறு தீயும்வாயின்
அதிவிடநீறு நெய்யுமுண்கிலா தாவியுண்ணும்
கொதிநுனைவேற்கண் மாதர் குறத்தியர் நுதலினோடு
மதியினைவாங்கியொப்புக்காண்குவர் குறவர்மன்னோ. (௩௬)

பேணுதற்கரியசீயக்குருளையம்பிடிகளீன்ற
காணுதற்கினியவேழக்கன்றுடுகளிக்குமுன்றில்
கோணுதற்குரியதிங்கட்குழவியுங்குறவர்தங்கள்
வாணுதற்கொடிச்சிமாதர்மகவொடுதவழுமாதோ. (௩௭)

அஞ்சனக்கிரியினன்னவழிகவுள்யானைகொன்ற
வெஞ்சினத்தரியின்றிண்காற்கவட்டொடுவிஞ்சைவேந்தர்
குஞ்சியந்தலத்துநீலக்குலமணித்தலத்துமாதர்
பஞ்சியங்கமலம்பூத்தபசுஞ்சுவடுடைத்துமன்னோ. (௩௮)

செங்கயலனையநாட்டஞ்செவியுறுமுறுவரோன்று
பொங்கிருங்கூந்தல்சோராபுருவங்கணெரியாபூவின்
அங்கையுமிடறுங்கூட்டிநரம்பளைந்தமிர்தமூறும்
மங்கையர்பாடல்கேட்டுக்கின்னரமயங்குமாதோ. (௩௯)

கள்ளவிழ்கோதைமாதர்காதொடுமுறவுசெய்யும்
கொள்ளைவாட்கண்ணினார்தங்குங்குமக்குழம்புதங்கும்
தெள்ளியபளிக்குப்பாறைத்தெளிசுனைமணியிற்றேய்த்த
வள்ளமுநறவுமென்னவரம்பிலபொலியுமன்னோ. (௪0)

ஆடவராலிசோரவஞ்சனவாரிசோர
ஊடலிற்சிவந்தநாட்டத்தும்பர்தம்மரம்பைமாதர்
தோடலர்கோதைநின்றுந்துறந்த * மந்தாரமாலை
வாடலநறவருதவயின்வயின்வயங்குமாதோ. (௪௧)

மாந்தளிரனையமேனிக்குறத்தியர்மாலைசூட்டிக்
கூந்தலின்கமுகின்பாளைகுழலினோடொப்புக்காண்பார்
ஏந்திழையரம்பைமாதரெரிமணிக்கடகம்வாங்கிக்
காந்தளம்போதிற்பெய்துகைகளோடொப்புக்காண்பார். (௪௨)

சரம்பயில்சாபமென்னப்புருவங்கடம்மினோடே
நரம்பினோடினிதுபாடிநாடகமயிலோடாடி
அரம்பையர்வெறுத்துநீத்தவவிர்மணிக்கோவையாரம்
மரம்பயில்கடுவன்பூணமந்திகண்டுவக்குமாதோ. (௪௩)

சாந்துசாய்தடங்கடோறும் † தாதுராகத்திற்சார்ந்த
கூந்தலம்பிடிகளெல்லாங்குங்குமமணிந்தபோலும்

* மந்தாரம்-பஞ்சதருக்களிலொன்று. † தாதுராகம்-காவிக்கல்.

காந்திணமணியின்சோதிக்கதிரொடுங்கலந்துமூசச்
சேந்துவானகமெப்போதுஞ்செக்கரையொக்குமாதோ. (௬௪)

நிலமகட்கணிகளென்னநிரைகதிர்முத்தஞ்சிந்தி
மலேமகள்கொழுநன்சென்னிவந்துவீழ்கங்கைமான
அலகில்பொன்னலம்பியாரஞ்சார்ந்துவீழருவிமாலே
உலகளந்தவன்றன்மார்பினுத்தரீயத்தையொத்த. (௬௫)

கோடுலாநாகப்போதோடிலவங்கமலருங்கூட்டிச்
சூடுவார்களிவண்டோச்சித்தூநறுந்தேறலுண்பார்
சேடிலாமகரயாழிற்கின்னரமிதுனம்பாடும்
பாடலாலூடனீங்கும்பரிமுகமாக்கள்கண்டார். (௬௬)

பெருங்களிறேயுமைந்தர்பேரெழிலாகத்தோடு
பொருந்துணக்கொங்கையன்னபொருவில்கோங்கரும்பின்மாடே
மருங்கெனக்குழையுங்கொம்பின்மடப்பெடைவண்டுந்தங்கள்
கருங்குழற்களிக்கும்வண்டுங்கடிமணம்புணரக்கண்டார். (௬௭)

படிகத்தின்றலமென்றெண்ணிப்படர்சுனைமூடுகிப்புக்க
சுடிகைப்பூங்கமலமன்னசுடர்மதிமுகத்தினூர்தம்
* வடகத்தோடுடுத்ததுகைமாசிளிர்நனைப்பநோக்கிக்
கடகத்தையெறிந்துதம்மிற்கருங்கழல்வீரர்நக்கார். (௬௮)

பூவணைபலவுங்கண்டார்பொன்னரிமாலேகண்டார்
மேவருங்கோபமன்னவெள்ளிலேத்தம்பல்கண்டார்
ஆவியினினியகொண்கர்ப்பிறிந்தறிவழிந்தவிஞ்சைப்
பாவையர்வைகத்தீய்ந்தபல்லவசயனங்கண்டார். (௬௯)

† பானலங்கண்களாடப்பவளவாய்முறுவலாடப்
பீனவெம்முலேயினிட்டபெருவிலேயாரமாடத்
தேன்முரன்றளகத்தாடத்திருமணிக்குழைகளாட
வானவர்மகளிராடும்வாசநாறூசல்கண்டார். (௭௦)

சுந்தரவானமாதர்துவரிதழ்ப்பவளவாயும்
அந்தமில்சுரும்புந்தேனுமிஞ்ஞிறுமுண்டல்குல்விற்கும்
பைந்தொடிமகளிர்கைத்தோர்பசையில்லேயென்னவிட்ட
மைந்தரினீத்துநீந்தேன்வளளங்கள்பலவுங்கண்டார். (௭௧)

அற்பகலாககுஞ்சோதிப்பளிக்கறையமளிபாங்கர்
மற்பகமலர்ந்ததிண்டோள்வானவர்மணந்தகோலம்
விற்பகைநுதலினூர்தங்கலவியின்வெறுத்துநீத்த
கற்பகமீன்றமாலேகலனொடுங்கிடப்பக்கண்டார். (௭௨)

---

* வடகம்-மேற்போர்வை. † பானல்-நீலோற்பலம்.

கையெனமலரவேண்டியரும்பியகாந்தனைக்கிப்
பையரவிவையென்றஞ்சிப்படைக்கண்கள்புதைக்கின்றரும்
செய்தவழ்வயிரப்பாறைநிழலிடைத்தோன்றும்போதைக்
கொய்திவைதருதிரென்றுகொழுநரைத்தொழுகின்றரும். (ருங)

பிண்ணங்களுகிரிற்செய்துபிண்டியந்தளிர்க்கைக்கொண்ட
சின்னங்கண்முலையினப்பித்தேமலர்கொய்கின்றரும்
வன்னங்கள்பலவுந்தோன்ற * மணியொளிர்மலையினில்லா
அன்னங்கள்புகுந்தவென்னவகன்சுனைகுடைகின்றரும். (ருச)

வே று.

ஈனுமாழையிளந்தளிரேயொளி
ஈனுமாழையிளந்தளிரேயிடை
மானும்வேழமுநாகமுமாதர்தோள்
மானும்வேழமுநாகமுமாடெலாம். (ருரு)

திமிரமாவுடற்குங்குமச்சேதகம்
திமிரமாவொடுஞ்சந்தொடுந்தேய்க்குமால்
அமரமாதரையொத்தொளிரஞ்சொலார்
அமரமாதரையொத்ததவ்வானமே. (ருசு)

பேரவாவொடுமாசுணம்பேரவே
பேரவாவொடுமாசுணம்பேரவே
ஆரவாரத்திஞேடுமெருவியே
ஆரவாரத்திஞேடுமெருவியே. (ருஎ)

புகலும்வாளரிக்கண்ணியர்பொற்புயம்
புகலும்வாளரிக்கண்ணியர்பூண்முலை
அகிலுமாரமுமாரவங்கோங்குமே
அகிலுமாரமுமாரவங்கோங்குமே. (ருஅ)

துன்னரம்பைபரிரம்பியதொல்வரை
துன்னரம்பையருருவிற்றேன்றுமால்
இன்னரம்பயில்கீதங்களென்னவாம்
இன்னரம்பயில்கின்றனரேழைமார். (ருகூ)

ஊறுமாகடமாவுறவூங்கெலாம்
ஊறுமாகடமாமதமோடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே
ஆறுசேர்வனமாவரையாடுமே. (சுo)

---

* மணி-நவமணிகளையுங்கொள்க.

கல்லியங்குகருங்குறமங்கையர்
கல்லியங்ககழ்காமர்கிழங்கெடா
வல்லியங்கணெருங்குமருங்கெலாம்
வல்லியங்கணெருங்கிமயங்குமே. (சுக)

கோளிபங்கயமூழ்கக்குளிர்கயம்
கோளிபங்கயமூழ்கக்குலைந்தவால்
* ஆளிபொங்குமருவரையூடிழிந்
† தாளிபொங்குமரம்பையரோதியே. (சுஉ)

ஆகமாலயமாகவுளால்பொலி
வாகமாலெனலாகியதம்மலை
மேகமாலைமிடைந்தனமேலெலாம்
மேகமாலைமிடைந்தனகீழெலாம். (சுங)

பொங்குதேனுகர்பூமின்றுமென
எங்குமாதருமைந்தருமீண்டியத்
துங்கமால்வரைச்சூழல்கள்யாவையும்
தங்கிநீங்கலர்தாமினிதாடுவார். (சுச)

இறக்கமென்பதையெண்ணிலநெண்ணுங்கால்
பிறக்குமென்பதோர்பீழையதாதலால்
துறக்கமெய்தியதூயவரேயென
மறக்கிற்றிலரன்னதன்மாண்பெலாம். (சுரு)

வேறு.

‡ மஞ்சார்மலைவாரணமொத்ததுவானினேடும்
வெஞ்சாயையுடைக்கதிரங்கதன்மீதுபாயும்
§ பஞ்சானனமொத்ததுமற்றதுபாயவேறும்
செஞ்சோரியெனப்பொலிவுற்றதுசெக்கர்வானம். (சுசு)

திணியார்சினைமாமரம்யாவையுஞ்செக்கர்பாயத்
தணியாதநறுந்தளிர்தந்தனபோன்றுதாழ
அணியாரொளிவந்துநிரம்பலினங்கமெங்கும்
மணியாலியன்றம்மலையொத்ததம்மைபில்குன்றம். (சுஎ)

கண்ணுக்கினிதாகிவிளங்கியகாட்சியாலும்
எண்ணற்கரிதாகியிலங்குசிரங்களாறும்

---

* ஆளி-வண்டுகள். † ஆளி-சிங்கம். ‡ செக்கர்வானமுதலியன கூறிப் போந்தமையானும், வருவது மாலைப்போதாகலானும் மஞ்சார்மலை என்பதற்கு அத்தகிரியெனப் பொருளுரைத்துக்கொள்க. § பஞ்சானனம்-விரிந்த முகமுள்ளது.

வண்ணக்கொழுஞ் * சந்தனச்சேதகமார்பணிந்த
அண்ணற்கரியோன்றனையொத்ததவ்வாசில்குன்றம். (சுஅ)

ஊனும்முயிரும்மனையாரொருவர்க்கொருவர்
தேனும்மிஞிறுஞ்சிருதும்பியும்பம்பியார்ப்ப
† ஆனையினமும்பிடியும்மிகளாளியேறும்
மானுங்கலையும்மெனமால்வரைவந்திழிந்தார். (சுகூ)

‡ கால்வானகத்தேருடைவெய்யவன்காய்கடுங்கட்
கோல்மாய்கதிர்ப்புல்லுளைக்கொல்சினக்கோளரிம்மா
மேல்பான்மலையிற்புகவீங்கிருள்வேரிருந்த
மால்யானையீட்டமெனவந்துபரந்ததன்றே. (எ0)

மந்தாரமுந்துமகரந்தமணங்குலாவும்
அந்தாரரசர்க்கரசன்றனனீகவெள்ளம்
நந்தாதொலிக்குந்நரலைப்பெருவேலையெல்லாம்
செந்தாமரைபூத்தெனத்தீபமெடுத்ததன்றே, (எக)

தண்ணக்கடலிற்றளிசிந்துதரங்கநீங்கி
விண்ணிற்சுடர்வெண்மதிவந்ததுமீன்கள்சூழ
வண்ணக்கதிர்வெண்ணிலவின்றிரள்வானகத்தோ
டொண்ணித்திலமீன்றௌிர்வால்வளையூர்வதொத்தே. (எஉ)

மீனூறுவேலையொருவெண்மதியீனும்வேலை
$ நோனுததனைநுவலற்கருங்கோடிவெள்ளம்
வானுடியரிற்பொலிமாதர்முகங்களென்னும்
ஆனுமதியங்கணமலர்ந்ததனீகவெள்ளம். (எங)

மண்ணும்முழவின்னொலிமங்கயர்பாடலோதை
பண்ணுந்நரம்பிற்பகையாவியற் ¶ பாணியோதை
கண்ணும்முடைவேயிசை 0 கண்ணுளராடரோதும்
விண்ணும்மருளும்படிவிம்மியெழுந்தவன்றே. (எச)

மணியின்னணிநீக்கிவயங்கொளிமுத்தம்வாங்கி
அணியும்முலையாரகிலாவிபுலத்துநல்லார்
தணியும்மதுமல்லிகைத்தாமம்வெறுத்துவாசம்
திணியும்மிதழ்ப் § பித்திகைக்கத்திகைசேர்த்துவாரும். (எரு)

---

* சந்தனச்சேதகம்-சந்தனக்குழம்பு. † ஆனையினமென்றது-பிடி யெனப் பிற்கூறலாற்றினமெனக் கூறுக. ‡ கால் ஈண்டு-ஒற்றையுருளை.
$ நோனு-பொழுது. ¶ பாணியோதை-தாளவோசை. 0 கண்ணுளர்-நாடகர். § பித்திகைக்கத்திகை-கருமுகைமாலை.

புதுக்கொண்டவேழம்பிணிப்போர் * புனைபாடலோதை
மதுக்கொண்டமார்தர்மடவாரின்மிழற்றுமோதை
பொதுப்பெண்டிரல்குற்புனைமேகலைப்பூசலோதை
கதக்கொண்டயானைகளியாற்களிக்கின்றவோதை. (எக)

உண்ணுவமுதன்ன † கலைப்பொருளுள்ளதுண்டும்
பெண்ணாமுதம்மனையார்மனத்தூடல்பேர்த்தும்
பண்ணுளபாடல்செவிமாந்திப்பயன்கொளாடல்
கண்ணுலினிதுய்க்கவுங்கங்குல்கழிந்ததன்றே. (எஉ)

கரு-வது உலாகாட்சிப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கூ0ரு.

## ககூ-வது. பூக்கொய்படலம்.

மலர்பறிப்பதைக்குறித்துக் கூறும் படலம்.

மீனுடையெயிற்றுக்கங்குற் ‡ கனகனைவெகுண்டுவெய்ய
கானுடைக்கதிர்களென்னுமாயிரங்கரங்களோச்சித்
தானுடையுதயமென்னுந்தமனியத்தறியுணின்று
§ மானுடைமடங்கலென்னத்தோன்றினன்வயங்குவெய்யோன். (க)

முறையெலாமுடித்தபின்னர்மன்னனுமூரித்தேர்மேல்
இறையெலாம்வணங்கப்போனனெழுந்துடன்சேனைவெள்ளம்
குறையெலாஞ்சோலையாகிக்குழியெலாங்குழீராகித்
துறையெலாங்கமலமானசோலையாறடைந்ததன்றே. (உ)

அடைந்தவணிறுத்தபின்னரருக்கனுமும்பர்சேர்ந்தான்
மடந்தையர்குழாங்களோடுமன்னருமைந்தர்தாமும்
குடைந்துவண்டுறையுமென்பூக்கொய்துநீராடமைதீர்
தடங்களுமடுவுஞ்சூழ்ந்ததண்ணறுஞ்சோலைசார்ந்தார். (ங)

திண்சிலைபுருவமாகச்சேயரிக்கருங்கணம்பால்
புண்சிலசெய்வரென்றுபோவனபோன்றமஞ்ஞை
பண்சிலம்பணிவாயார்ப்பநாணினூற்பறந்தகிள்ளை
ஒண்சிலம்பார்ப்பமாதரொதுங்குதோறொதுங்குமன்னம். (ச)

---

* புனைபாடல்-யானைகளைத்தளைக்குங்காற் பாடும்பாட்டு. † கலைப்பொருளுள்ளதுண்டு மென்றது-கலையின்றுணிந்தபொருளைச்செவியாகிய வாயால் நுகர்ந்துமெனக் கொள்க. கலைப்பொருள்-சாதியொருமை.

‡ கனகனென்றது-இரணியனை. § மானுடைமடங்கல்-நரமடங்கல்.

செம்பொன்செய்சுருளுந்தெய்வக்குழைகளுஞ்சேர்ந்துமின்னப்
பம்புதேனலம்பவொல்கிப்பண்ணையினுடனேகிக்
கொம்பொடுங்கொடியனாரைக்குறிப்பறிந்துணர்தறேற்றார்
வம்பவிழலங்கன்மாலைமைந்தருமயங்கிநின்றார். (௫)

பாசிழைப்பரவையல்குற்பண்டருகிளவித்தண்டேன்
மூசியகூந்தன்மாதர்மொய்த்தபேரமலைகேட்டுக்
கூசினவல்லபேசநாணினகுயில்களெல்லாம்
* வாசகம்வல்லார்முன்னின்றியாவர்வாய்திறக்கவல்லார். (௬)

நஞ்சினுங்கொடியநாட்டமமுதினுநயந்துநோக்கிச்
செஞ்செவேகமலக்கையாற்றீண்டலு † நீண்டகொம்பர்
தஞ்சிலம்படியின்மென்பூச்சொரிந்துடன்றாழ்ந்தவென்றால்
வஞ்சிபோன்மருங்குலார்மாட்டியாவரேவணங்கிலாதார். (௭)

அம்புயத்தணங்கினன்னாரம்மலர்க்கைகடீண்ட
வம்பியலலங்கற்பங்கி ‡ வாளரீமருளுங்கோளார்
தம்புயவரைகள்வந்துதாழ்வனதளிர்த்தமென்பூங்
கொம்புகடாமுமென்றல்கூறலாந்தகைமைத்தொன்றே. (௮)

§ நதியினுங்குளத்தும்பூவாநளினங்கள்குவளையோடு
மதிநுதல்வல்லிபூப்பநோக்கியமாலைத்தும்பி
அதிசயமெய்திப்புக்குவீழ்ந்தனவலைக்கப்போகா
புதியனகண்டபோழ்துவிடுவரோபுதுமைபார்ப்பார். (௯)

¶ உலந்தருவயிரத்திண்டோளொழுகிவரொளிகொண்மேனி
மலர்ந்தபூந்தொடையன்மாலைமைந்தர்பான்மயிலினன்னார்
கலந்தவர்போலவொல்கியொசிந்தனசிலகைவாராப்
புலந்தவர்போலநின்றவுளசிலபூத்தகொம்பர். (௧௦)

பூவெலாங்கொய்துகொள்ளப்பொலிவிலதுவளநோக்கி
யாவையாங்கணவர்கண்ணுக்கழகிலவிவையென்றெண்ணிக்
கோவையும்வடமுநாணுங்குழைகளுங்குழையப்பூட்டிப்
பாவையர்பனிமென்கொம்பைநோக்கினர்பரிந்துநிற்பார். (௧௧)

வேறு.

துறும்போதினிற்றேன்றுவைத்துண்டுழறும்பியீட்டம்
நறுங்கோதையோடுநனைசின்னமுநீத்தநல்லார்
வெறுங்கூந்தன்மொய்க்கின்றனவேண்டலவேண்டுபோதும்
உறும்போகமெல்லாநலனுள்வழியுண்பரன்றே. (௧௨)

* வாசகம்வல்லார்-வாய்வன்மையுடையார் † ஓரறிவுயிரேதாழின் ஆறறிவுயிர்தாழ்வது கூறாதேயமைந்ததென்க. ‡ வாளரிமருளுங்கோள்-கம்பீரநடை, உடல், வலி, சமர்க்கஞ்சாத்தறுகண்மையின்னோரன்னவற்றை. § நதியினுங்குலத்தும் பூவாநளினங்கள்-முகத்தாமரைகள். ¶ உலம்-திரண்டகல்.

மெய்ப்போதினங்கைக்கணியன்னவண்மென்பளிங்கிற்
பொய்ப்போது தாங்கிப்பொலிகின்றதன்மேனிநோக்கி
இப்பாவையெங்கோற்குயிரன்னவளென்னவுன்னிக்
கைப்போதினோடுநெடுங்கண்பனிகாரநின்றாள். (௧௩)

* கோளுண்டதிங்கண்முகத்தாளொருகொம்பொர்மன்னன்
தோளுண்டமாலையொருதோகையைச்சூட்டநோக்கித்
தாளுண்டகச்சாற்றகையுண்டமுலைக்கணலி
வாளுண்டகண்ணின்மழையுண்டெனவாரநின்றாள். (௧௪)

மயில்போல்வருவாண்மணங்காணியகாதன்மன்னன்
செயிர்தீர்மலர்க்காவினோர் † மாதவிச்சூழல்சேரப்
பயில்வாளிறைபண்டுபிறிந்தறியாள்பதைத்தாள்
உயிர்நாடியொல்கும்முடல்போலலமந்துழன்றாள். (௧௫)

மைதாழ்கருங்கண்கள்சிவப்புறவந்துதோன்ற
நெய்தாவும்வேலானொடுநெஞ்சுபுலந்துநின்றாள்
எய்தாதுநின்றமலர்நோக்கியெனக்கிதீண்டக்
கொய்திதீயென்றோர்குயிலைக்கரங்கூப்புகின்றாள். (௧௬)

செம்மாந்ததெங்கின்னிளநீரையொர்செம்மனோக்கி
அம்மாவிவைமங்கையர்கொங்கைகளாகுமென்ன
எம்மாதர்கொங்கைக்கிவையொப்பனவென்றொரேழை
விம்மாவெதும்பாவெயராமுகம்வெய்துயிர்த்தாள். (௧௭)

போரென்னவீங்கும்பொருப்பன்னபொலங்கொடிண்டோள்
மாரன்னையான்மலர்கொய்திருந்தானைவேந்தோர்
காரன்னகூந்தற்குயிலன்னவள்கண்புதைப்ப
‡ ஆரென்னலோடும்மனலென்னவயிர்த்தாள். (௧௮)

ஊற்றூர்நறைநாண்மலர் 0 மாதரொருங்குவாசச்
சேற்றால்விளையாதசெந்தாமரைக்கைகணீட்டி
ஏற்றார்குதவானிடையேந்தினனின்றொழிந்தான்
மாற்றானுதவான்கடு § வச்சையன்போலொர்மன்னன். (௧௯)

தைக்கின்றவேனோக்கினடன்னுயிரன்னமன்னன்
மைக்கொண்டகண்ணாளெதிர்மாற்றவள்பேர்விளம்ப

---

* கோளுண்டதிங்கள் - இராகுவினாற் பீடிக்கப்பட்ட சந்திரன்

† மாதவிசூழல்-வசந்தமல்லிகைக்கொடி வீடு. இதனை வடநூலார்லதாக்ருஹம் என்பர்.

‡ ஆறென்றவன் வினவலான் நம்மைப்போலிவன் மாட்டுவிளையாட்டு. மகளிர்பலருளரென்பது-கருதினாளென்பது. 0 பன்மாதரென்னாது-மாதரென்றது இருவரை. § வச்சையன்-லோபி.

மெய்க்கொண்டநாணந்தலைக்கொண்டவிம்மிமென்பூக்
கைக்கொண்டுமோந்தாளுயிர்ப்புண்கெரிந்தவன்றே. (உ0)

திண்டேரரசன்னொருமன்குலத்தேவிமார்தம்
ஒண்டாமரைவாண்முகத்துண்மினி * ருண்கணெல்லாம்
கண்டாதரிக்கத்திரிவான்மதங்கௌவியுண்ண
வண்டாதரிக்கத்திரிமாமதவானையொத்தான். (உக)

† சந்திக்கலாவெண்மதிவாணுதலாடனக்கும்
வந்திக்கலாகுமடவாட்கும்வகுத்துநல்கி
நிந்திக்கலாயகாவுருவத்தினனின்றபோழ்துஞ்
சிந்திக்கலாபமயிற்கண்கள்சிவந்துபோனா். (உஉ)

வேறு.

வந்தெங்குந்தம்மன்னுயிரேயோபிறிதொன்றோ
கந்தந்துன்றுஞ்சோர்குழல்காணார்கலைபேணார்
‡ அந்தந்தோறுமற்றுகுமுத்தமவைபாரார்
சிந்துஞ்சந்தத்தேமலர்நாடித்திரிவாரும். (உ௩)

யாழொக்குஞ்சொற் $ பொன்னனையாளோரிகன்மன்னன்
தாழத்தாழாடாழ்ந்தமனத்தாடளர்கின்றாள்
ஆழத்துள்ளுங்கள்ளகினைப்பாளவனின்ற
சூழற்கேதன்கிள்ளையையேருத்தொடர்வாளும். (உச)

அந்தாராகத் § தைங்கணை நூறுடிரமாகச்
சிந்தாநின்றசிந்தையினான்செய்குவதோரான்
மந்தாரங்கொண்டீகுதியோமாதவியென்றோர்
சந்தார்கொங்கைத்தார்குழலால்பாற்றளர்வானும். (உரு)

நாடிக்கொண்டாள்குற்றநயந்தாண்முனிவாற்றாள்
ஊடிக்காணக்காட்டுநலத்தாளுடனில்லாள்
தேடித்தேடிச்செய்தசெழும்பூநறுமாலை
சூடிச்சூடிக்கண்ணடிநோக்கித்துவள்வாளும். (உசு)

‖ மறலிக்கூறும்வன்கதிர்வேலானிடையேவந்
துறவிக்கோலம்பெற்றிலெனென்றாலுடன்வாழ்விப்

---

* உண்கள்-மையுண்டகண். இதனை 'இருநோக்கிவளுண்கண்' என்பதனானறிக. † சந்திக்கலாவெண்மதி-மாலைப்பொழுதிற்றோன்றுங் கலைகளோடு தோன்றுமதி. ‡ அந்தமென்றது-கடைப்பூட்டுகளை $ பொன்னனையாள்-திருமகளொப்பாள். § ஐங்கணை-மா, தாமரை, நெய்தல், அசோகு, முல்லை ‖ எவ்வகைவினையையேனும் தன் கைப்படையேயல்லது வேறு துணை வேண்டாது முட்டின்றி முடிக்கு மாற்றலுடையானென்பார் 'மறலிக்கூறும் வன்கதிர்வேலா' னென்றதென்க.

பிறவிக்கொல்வேலனென்செய்வதிப்பேரணியென்றோர்
விறலிக்கீவாளொத்திழையெல்லாம்விடுவாளும். (உள)

* வம்பிற்பொங்குங்கொங்கைசுமக்கும்வலியின்றிக்
கம்பிக்குந்தந் நுண்ணிடைநோவக்கசிவாரும்
பைம்பொற்கிண்ணம்மெல்விரலுக்கிப்பயில்கின்ற
கொம்பிற்பிள்ளைக்கிள்ளையொளிக்கக்குழைவாரும். (உஅ)

தன்னைக்கண்டாண்மென்னடைகண்டாடமர்போலத்
துன்னக்கண்டாடோழமைகண்டாடுணையென்றாள்
உன்னைக்கண்டாரென்னுவர்பொல்லாதுடீயென்
றன்னக்கன்னிக்காடையளிப்பானமைவாரும். (உகூ)

பாகொக்குஞ்சொன்னுண்கலையாடன்படரல்குல்
ஆகக்கண்டோராடரவாமென்றயனண்ணும்
தோகைக்கஞ்சிக்கொம்பினொதுங்கித்துணரீன்ற
சாகைத்தங்கைக்கண்கள் † புதைத்தேதளர்வாரும். (௩௰)

பொன்னேதேனேபூமகளேகாணெனையென்னுத்
தன்னேரில்லாளங்கொருகொய்யற்றழைசூழ்கி
இன்னேபென்னைக்காணுதிநீயென்றிகலித்தன்
நன் ‡ னீலக்கண்கையின்மறைத்துநகுவாரும். (௩க)

வில்விற்கோதைநாணுறமிக்கோரிலவங்கம்
புல்லிக்கொண்டதாமரைமென்பூமலர்தாங்கி
அல்விற்கோதைமாதர்முகப்பேரரவிந்தச்
செல்வக்கானிற்செங்கதிரென்னத்திரிவாரும். (௩உ)

செய்யிற்கொய்புஞ்செங்குமுதஞ்செஞ்சிலையொன்றும்
கய்யிற்பெய்யுங்காமனுநாணுங்கவினர்தம்
மையற்பேதைமாதர்மிழற்றும்மழலைச்சொல்
தெய்வப்பாடல்சொற்கலையென்னத்தெரிவாரும். (௩௩)

சோலைத்தும்பிமென்குழலாகத்தொடைமேவும்
கோலக்கொண்டமன்மதவாயன்குறியுய்ப்ப
நீலத்துண்கண்மங்கையர்சூழநிரையாவின்
மாலைப்போதின்மால்விடையென்னவருவாரும். (௩ச)

வேறு.

o ஊக்கமுள்ளத்துடையமுனிவரால்
காக்கலாவதகாமன்கைவில்லெனும்

---

* கசசினின்று மடங்காதுபுறத்தே தோன்றுவதாகலின் வம்பிற்பொங்குங்கொங்கையென்றார். † புதைத்துத்தளர்வாரென்றதை முன்பின்னாகநிறுத்தி விகுதிபிரித்துக்கூட்டியுரைக்க. ‡ நீலமென்றது-ஆகுபெயர். o ஊக்கமென்றது. தாம்விடுத்த காமநுகர்ச்சியிற் றளராதிருக்குநிலைமையை.

வர்க்குமாத்திரமல்லதுவல்லியிற்
பூக்கொய்வாள்புருவக்கடைபோதுமே. (ரு௫)

நாறுபூங்குழ * னன்னுதல்புன்னைமேல்
ஏறினான்மனத்தும்பர்சென்றேறினாள்
ஊறுஞானத்துயர்ந்தவராயினும்
வீறுசேர்முலைமாதரைவெல்வரோ. (ரு௬)

சினையின்மேலிருந்தானுருத்தேவரால்
வனையவும்மரியாள்வனப்பின்றலை
நினைவுநோக்கமுநீக்கலன்கைகளால்
நனையுநாண்முறியுங்கொய்துநல்கினன். (ரு௭)

வண்டுவாழ்குலாண்முகநோக்கியோர்
† தண்டுபோற்புயத்தான்றமொறினன்
உண்டுகோபமுள்ளத்துணர்ந்தவள்
தொண்டைவாயிற்றுடிப்பொன்றுசொல்லவே. (ரு௮)

ஏயுந்தன்மையரிவ்வகையாரெலாம்
தூயதண்ணிழற்சோலைத்துறுமலர்
வேயுஞ்செய்கைவெறுத்தனர்வெண்டிரை
பாவுந்தீம்புனற்பண்ணைசென்றெய்தினர். (ரு௯)

கசு-வது. பூக்கோய்படல-முற்றிற்று

ஆ திருவிருத்தம் ௬௦௧௬.

## கஎ-வது நீர்விளையாட்டுப்படலம்

நீர்விளையாட்டைக் குறித்துச்சொல்லும் படலம்.

புனைமலர்த்தடங்கணோக்கிப்பூசல்வண்டார்த்துப்பொங்க
‡ வினையறுதுறக்கநாட்டுவிண்ணவர்கணமுநாண
அனகருமணங்கனுருமம்மலர்ச்சோலைநின்று
வனகரிபிடிகளோடும்வருவன்போலவந்தார். (க)

அங்கவர்பண்ணைநன்னீராடுமாறமைந்ததோற்றம்
0 கங்கைவார்சடையோனன்னமாமுனிகனலமேனள்

* நன்னுதன்மனத்தும்பர் சென்றேறுதலென்றது தலைவிபால்வைத்த வேட்கைப்பெருங்கடங்காது அவளையே நாடிநிற்றலை. † தண்டுபோற்புயத்தானென்பதனுன் வழியதோளானெனப்போதரலான் தன்றோண்மாலையையொருத்திக்குச் சூட்டிவந்தானென் றாடினளென்க. ‡ தீவினையிழந்தா ரெய்துதற்கிடனுகலின் வினையறுதுறக்க நாடென்றார். 0கங்கைவார் சடையோனன்ன மாமுனியென்றது-தூர்வாசனை.

மங்கையர்கூட்டத்தோடும்வானவர்க்கிறைவன்செல்வம்
பொங்குபாற்கடலிற்செல்லுந்தோற்றமேபோன்றதன்றே. (௨)

மையவாங்குவளையெல்லாமாதர்கண்மலர்கள்பூத்த
* கையவாமுருவத்தார்தங்கண்மலர்குவளைபூத்த
செய்யதாமரைகளெல்லாந்தெரிவையர்முகங்கள்பூத்த
தையலார்முகங்கள்செய்யதாமரைபூத்தவன்றே. (௩)

தாளையேய்கமலத்தாளின்மார்புறத்தழுவுவாரும்
† தோளையேபற்றிவெற்றித்திருவெனத்தோன்றுவாரும்
பாளையேவிரிந்ததென்னப்பரந்துநீருந்துவாரும்
வாளைமீனுகளவஞ்சிமைந்தரைத்தழுவுவாரும் (௪)

வண்டுணக்கமழுஞ்சுண்ணம்வாசநெய்நானத்தோடும்
கொண்டெதிர்வீசுவாருங்கோதைகொண்டோச்சுவாரும்
தொண்டைவாய்ப்பெய்துதாநீர்கொழுநர்மேற்றூகின்றாரும்
புண்டரீகக்கைகூப்பிப்புனன்முகத்திறைக்கின்றாரும். (௫)

‡ மின்னொத்தவிடையினாரும்வேயொத்ததோளினாரும்
சின்னத்தினளகபந்திதிருமுகமறைப்பநீக்கி
அன்னத்தைவருதியென்னோடாடவென்றழைக்கின்றாரும்
பொன்னொத்தமுலையின்வந்துபூவொத்தவுளைகின்றாரும். (௬)

பண்ணுளப்வளத்தொண்டைபங்கயம்பூத்ததன்ன
வண்ணவாய்க்குவளைவாட்கண்மருங்கிலாக்கரும்பினன்னார்
உண்ணிறைகயலைநோக்கியோடுநீர்த்தடங்கட்கெல்லாம்
கண்ணுளவாங்கொலென்றுகணவரைவினவுவாரும். (௭)

தேனகுநறவுமாலைச்செறிகுழற்றெய்வமன்னார்
தானுடைக்கோலமேனிதடத்திடைத்தோன்றநோக்கி
நானகநகுகின்றாளிந்நன்னுதறோழியாமென்
றானமில்விலையினாரமுளங்குளிர்ந்துதவுவாரும். (௮)

குண்டலந்திருவில்வீசக்குலமணியாரமின்ன
விண்டொடர்வரையின்வைகுமென்மயிற்கணங்கள்போல
வண்டுளர்கோதைமாதர்மைந்தர்தம்வயிரத்திண்டோட்
டண்டுகள்தழுவுமாசைபுனற்கரைசார்கின்றாரும். (௯)

---

* சாமுத்திரிகைநூலி னொழுங்கென்பது படக்கையென்றார். † வெற்றித்திருவென்றமையான் தேரளென்றது-ஆடவர்தோளை விளக்கிநின்றது. அம்மாதராருடைய உறுப்பிடை வொவ்வொன்றுமே காண்பாருடைய மனங்கண்களை யொருசேரக்கவரும் வனப்பிற்றாகலின் அவ்வாறு தம்மை அவர்பாற் செல்லக்கணவர் அவ்வவ்வமையத்து அவ்வவ்வுறுப்பே காரணமாக அவர்க்கிட்டு மின்னொத்தவிடையினாள்; வேயொத்தத்தாளினாள் என கூறுங்கூற்றினைத்தாம்கொண்டு கூறினாரல்லது இடையொன்றுமே சிறந்தார்தோளொன்றுமே சிறந்தாரென இருவகையாராகக் கூறினாரல்லர்.

அங்கிடையுற்றகுற்றம்யாவதென்றறிதறேற்றாம்
செங்கயலனையகாட்டஞ்சிவப்புறச்சீறிப்போன
மங்கையோர்கமலச்சூழன்மறைந்தனண்மறையமைந்தன்
பங்கயமுகமென்றோராதையுற்றுப்பார்க்கின்றானால். (௧௦)

பொற்றொடிதளிர்க்கைச்சங்கம்வண்டொடுபுலம்பியார்ப்ப
எற்றுநீர்குடையுந்தோறுமேந்துபேரல்குனின்றும்
கற்றைமேகலைகணீங்கிச்சீறடிகௌவக்காலில்
சுற்றியநாகமென்றுதுணுக்கத்தாற்றுடிக்கின்றாரும். (௧௧)

குடைந்துநீராடுமாதர்குழாம்புடைசூழவாழித்
தடம்புயம்பொலியவாண்டோர்தார்கெழுவேந்தனின்றான்
கடைந்தநாளமிழ்தினோடுங்கடலிடைவந்துதோன்றும்
மடந்தையர்சூழநின்றமந்தரம்போலமாதோ. (௧௨)

தொடியுலாங்கமலச்செங்கைதூநகைத்துவர்த்தசெவ்வாய்க்
கொடியுலாமருங்குனல்லார்குழாத்தொருகுருசினின்றான்
கடியுலாங்கமலவேலிக்கண்ணகன்கானியாற்றுப்
பிடியெலாஞ்சூழநின்றபெய்மதயானையொத்தான். (௧௩)

கானமாமயில்களெல்லாங்களிகெடக்களிக்குஞ்சாயல்
* சோனைவார்குழலினார்தங்குழாத்தொருதோன்றனின்றான்
வானயாறதனைநண்ணிவயின்வயங்கித்தோன்றும்
மீனெலாஞ்சூழநின்றவிரிகதிர்த்திங்களொத்தான். (௧௪)

மேவலாந்தகைமைத்தல்லால் † வேழவிற்றறடக்கைவீரற்
கேவெலாங்காட்டுகின்றவிணைநெடுங்கண்ணேரேழை
பாவைமார்பயந்தகோலப்பண்ணையிற்பொலிவாள்வண்ணப்
பூவெலாமலர்ந்தபொய்கைதாமரைபொலிவதொத்தாள். (௧௫)

மிடலுடைக்கொடியவேலையென்னவாண்மிளிர்வவென்னச்
சுடர்முகத்துலவுகண்ணாடோகையர்சூழநின்றாள்
மடலுடைப்போதுகாட்டும்வளர்கொடிபலவுஞ்சூழக்
கடலிடைத்தோன்றுமென் ‡ பூங்கற்பகவல்லியொத்தாள். (௧௬)

தேரிடைக்கொண்டவல்குற்றெங்கிடைக்கொண்டகொங்கை
ஆரிடைச்சென்றுங்கொள்ளவொண்கிலாவழகுகொண்டாள்
வாரிடைத்தனமீதாடமூழ்கினாள்வதனமைதீர்
நீரிடைத்தோன்றுந்திங்கணிழலெனப்பொலிந்ததன்றே. (௧௭)

---

* சோனைமழைபோலிடையறாது வார்ந்து தொங்குதலான்சோனை வார் குழலினாரென்றார் † வேழவிற்றடக்கைவீரன்-கரும்புவில்லையுடைய மன்மதன், ‡ கற்பகவல்லி-கற்பகத்தின் மேற்படரும் காமவல்லி.

வேறு.

மலைகடந்தபுயங்கண் மடந்தைமார்
கலைகடைந்தகலல்குல்கடாம்பட
முலைகடந்தமின் முந்திநெருங்கலால்
நிலைகடந்துபரந்ததுநீத்தமே. (கஅ)

* செய்யவாய்வெளுப்பக்கண் சிவப்புற
நெய்யராகமழியத்துகினெகத்
தொய்யின்மாமுலைமங்கையர்தோய்தலாற்
பொய்கைகாதற்கொழுநரும்போன்றதே. (கக)

ஆனதூயவரோடுடனாடினர்
ஞானநீரவராகுதனன்றரோ
தேனுநாவியுந்தேக்ககிலாவியும்
மீனுநாறினவேறினிவேண்டுமோ. (உ0)

மிக்கவேந்தர்தம்மெய்யழிசாந்தொடும்
புக்கமங்கையர்குங்குமம்போர்த்தலால்
ஒக்கநீலமுகிற்றலையோடிய
செக்கர்வானகமொத்ததத்தீம்புனல். (உக)

காகதுண்டநறுங்கலவைக்களி
ஆகமுண்டதடங்கலுநீங்கலால்
பாகடர்ந்தபனிக்கனிவாய்ச்சியர்
† வேகடஞ்செய்மணியெனமின்னினர். (உஉ)

பாயரித்திறலான் ‡ பசுஞ்சாந்தினால்
தூயபொற்புயத்துப்பொதிதூக்குறி
மீயரித்துவெளுக்கவொர்மெல்லியல்
சேயரிக்கருங்கண்கள்சிவந்தவே. (உ௩)

§ கதம்பநாள்விரைகள்ளவிழ்தாதொடும்
ததும்புபூந்திரைத்தண்புனல்சுட்டதால்
நிதம்பபாரத்தொர்நேரிழைகாமத்தால்
வெதும்புவாளுடல்வெப்பம்வெதுப்பவே. (உச)

தையலாளையோர்தாரணிதோளினன்
நெய்கொளோதியினீர்முகந்தேற்றினன்

---

* வாய்வெளுத்தலுங் கண்சிவத்தலு மாதரைத்தோய்வதனாலுண்டாவது. †வேகடஞ்செயல்-சாணைபிடித்தல். அன்றி அழுக்கற்றுதல் எனினுமமையும். ‡ பசுமை வெண்மை யென்னும் பண்புகள் வண்ணப்பன்பினையுணர்த்தாது முறையே ஈரமுமின்மையு முணர்த்திநின்றன. § கதம்பம் - பரிமளப்பொடி.

* செய்யதாமரைச்செல்வியைத்தீம்புனல்
கையினாட்டுங்களிற்றரசனென்னவே. (௨௫)

சுளியுமென்னடைதோற்கநடந்தவர்
அளிகொள்சீறடியொத்தனவாமென
விளிவுதோன்றமிதிப்பனபோன்றன
நளினமேறியநாகிளவன்னமே. (௨௬)

எரிந்தசிந்தையரெத்தனையென்கொலோ
அரிந்தகூருகிராலழிசாந்துபோய்த்
தெரிந்தகொங்கைகள்செவ்வியநூல்புடை
வரிந்த[illegible]கலசங்களைமானவே. (௨௭)

தாழகின்றததைமலர்க்கையினால்
ஆழிமன்னொருவன்னுரைத்தானது
வீழியின்கனிவாயொருமெல்லியல்
தோழிகண்ணிற் † கடைக்கணிற்சொல்லினாள். (௨௮)

தள்ளியோடியலைதடுமாறலால்
தெள்ளுநீரின்முழுகுசெந்தாமரை
புள்ளிமானனையார்முகம்போல்கிலா
துள்ளினாணியொளிப்பனபோன்றவே. (௨௯)

இனையவெய்தியிரும்புனலாடிய
வனைகருங்கழன்மைந்தருமாதரும்
அனையநீர்வறிதாகவந்தேறினார்
புனைநறுந்துகில்பூணொடு ‡ தாங்கினார். (௩0)

மேவினார்பிரிந்தார்க்கந்தவீங்குநீர்
தாவுதண்மதிதன்னொடுந்தாரகை
ஓவுவானமுழுமுண்ணுறைதாமரைப்
பூவெலாங்குடிபோனதும்போன்றதே. (௩௧)

மானினோக்கியாமைந்தரோடாடிய
ஆனநீர்விளையாடலைநோக்கினான்
தானுமன்னதுகாதலித்தானென
() மீனவேலையைவெய்யவனெய்தினான். (௩௨)

ஆற்றலின்மையினாலழிந்தேயுந்தம்
வேற்றுமன்னர்தம்மேல்வரும்வேந்தர்போல்
ஏற்றுமாதர்முகங்களொடெங்கணும்
தோற்றசந்திரன்மீளவுந்தோற்றினான். (௩௩)

௧௭-வது நீர்விளையாட்டுப்படல-முற்றிற்று.

ஆ- திருவிருத்தம் ௧0௪௭.

---

* தாமரைச்செல்வியைக் கையினாட்டுங்களிற்றரசசென்ன என்றமையான் கசலக்குமியை யுணர்த்தியது. † கண்ணிற்கடைக்கணிற் சொல்லல் என்றது-நயனபாடையை. ‡ தாங்கினாரென்றமையான் ஆடையணியிவற்றானல்லது இயற்கையழகினையுடையரென்பதும்,பூவின்மெல்லியரென்பதும் பெறப்பட்டன. () மீனவேலையை வெய்யவனெய்தினானென்றது பொழுதுபட்டதென்பதுணர்த்திற்று.

## கஅ-வது உண்டாட்டுப்படலம்.

உண்டாடலைக்கூறித்துச் சொல்லும்படலம்.

வெண்ணிறநறைநிறைவெள்ளமென்னவும்
பண்ணிறஞ்செறிந்திடைபரந்ததென்னவும்
உண்ணிறைகாமமிக்கொழுகிற்றென்னவும்
தண்ணிறைநெடுநிலாத்தழைத்ததெங்குமே. (க)

கலந்தவர்க்கினியதோர்கள்ளுமாயப்பிரிந்
துலந்தவர்க்குயிர்சுடுவிடமுமாயுடன்
புலந்தவர்க்குதவிசெய்புதியதூதுமாய்
மலர்ந்ததுநெடுநிலாமதனன்வேண்டவே. (உ)

ஆறெலாங்கங்கையேயாயவாழிதாம்
கூறுபாற்கடலேயேயொத்தகுன்றெலாம்
* ஈறிலான்கயிலையையியைந்தவென்னினி
வேறியாம்புகல்வதுநிலவின்வீக்கமே. (ங)

எள்ளருந்திசைகளோடி † யாரும்யாவையும்
கொள்ளைவெண்ணிலவினூற்கோலங்கோடலால்
வள்ளுறைவயிரவான் ‡ மகரகேதனன்
வெள்ளணியொத்ததுவேலைஞாலமே (ச)

தயங்குதாரகைபுரைதரளநீழலும்
இயங்குதார்மிடைந்தகாரெழினிச்சூழலும்
கயங்கள்போன்றொளிர் ¶ பளிங்கடுத்தகானமும்
வயங்குபூம்பந்தருமகளிரெய்தினர். (ரு)

பூக்கமழோதியர்போதுபோக்கிய
சேக்கை () யின்பச்செருச்செருக்குஞ்சிந்தையார்
ஆக்கியவமிழ்தெனவம்பொன்வள்ளத்து
வாக்கியபசுநறுமாந்தன்மேயினர். (சு)

மீனுடைவானுடைவிஞ்சைநாட்டவர்
ஊனுடையுடம்பினுருவமொப்பிலார்
மானுடைநோக்கினர்வாயின்மாந்தினர்
தேனுடைமலரிடைத்தேன்பெய்தென்னவே. (எ)

---

* ஈறிலான்-சங்காரகாரணனாகிய சிவன், இதற்குவேறு கூறுவாருமுளர். † யாரும்யாவையும் என்றது-இயங்குதிணை. நிலத்திணைகளை. ‡ மகரகேதனன்-சுயற்கொடியையுடையமன்மதன். ¶ பளிங்கடுத்த கானமென்றது, பளிங்குப்பாறையை. () இன்பச்செரு-கல்விப்போர்.

உக்கபால்புரைநிலாவுண்டவள்ளமும்
கைக்கொள்வாளொளிபடச்சிவந்துகாட்டத்தன்
மைக்கணுஞ்சிவந்ததோர்மடந்தைவாய்வழி
புக்கதேனமிர்தமாய்ப்பொலிந்தபோன்றவே. (அ)

தாமமுநானமுந்ததைந்ததண்ணகிற்
றூமமுண்குழலியருண்டதூநறை
எமவெங்குழியுகுநெய்யினுள்ளுறை
காமவெங்கனலினைக்கனற்றிக்காட்டிற்றே. (கூ)

வேறு.

* விடனுக்குநெடியநோக்கினமிர்தொக்குமின்சொலார்தம்
மடனுக்குமடனுமுண்டேவானுதலொருத்திகாணத்
தடனுக்குநிழலைப்பொன்செய்தண்ணறுந்தேறல்வள்ளத்
துடனுக்கவுவந்துநீயேயுண்ணுதிதோழியென்றாள். (க0)

அச்சநுண்மருங்குலாளோரனங்கனுளளகபந்தி
நஞ்சுவேற்கருங்கட்செவ்வாய்நளிர்முகமதுவட்டோன்றப்
பிச்சிநீயென்செய்தாயிப்பெருநறவிருக்கவாளா
எச்சிலைநுகர்தியோவென்றெயிற்றரும்பிலங்கநக்காள். (கக)

புறமெலாநகைசெய்தேசப்பொருவருமேனிவேறோர்
மறமுலாங்கொலைவேற்கண்ணாண்மணியின்வள்ளத்துவெள்ளை
நிறநிலாக்கற்றைபாயநிறைந்ததுபோன்றுதோன்ற
நறவெனவதனைவாயின்வைத்தனளுணுட்கொண்டாள். (கஉ)

யாழ்க்குமின்குழற்குமின்பமளித்தனவிவையாமென்னக்
கேட்குமென்மழலைச்சொல்லோர்கிஞ்சுகங்கிடந்தவாயாள்
† தாட்கருங்குவளைதோய்ந்ததண்ணறைச்சாடியுட்டன்
வாட்கணினிழலைக்கண்டாள்வண்டெனவோச்சுகின்றாள். (கங)

களித்தகண்மதர்ப்பவாங்கோர்நனங்குழைகள்ளினுள்ளால்
வெளிப்படுகின்றகாட்சிவெண்மதிநிழலைநோக்கி
அளித்தனெனபயம்வானத்தரவினையஞ்சிநீவந்
தொளித்தனையஞ்சலென்றாங்கினியன ‡ வுணர்த்துகின்றாள். (கச)

அழிகின்றவறிவினாலோபேதைமையாலோவாற்றிற்
சுழியொன்றிநின்றதன்னவுந்தியாடயசெந்தேன்

---

* நோய்நோக்கென்பது படவிடனுக்குநெடியநோக்கென்றார்.

† தாட்கருங்குவளை தோய்ந்ததண்ணறைச்சாடியென்றது மொய்க்கும் வண்டுகட்கஞ்சி அத்தண்டின் சிறுதொளையின்றவை யுரிஞ்சுதற்கென்க. ‡ உரையாநின்றாளென்னாது உணர்த்துகின்றாளென்றதனான் இனியன என்றது றுதிமொழியென்பதுணர்த்திற்று.

பொழிகின்றபூவின்வேய்ந்தபந்தரைப்புரைத்துக்கீழ்வர்
திழிகின்றகொழுநிலாவைநறவெனவள்ளத்தேற்றாள். (க௫)

மின்னெனநுடங்குகின்றமருங்குலாளொருத்திவெள்ளை
இன்னமிழ்தனையதீஞ்சொலிடைதடுமாறியென்ன
வன்னமேகலையைநீக்கிமலர்த்தொடை * யல்குல்சூழ்ந்தாள்
பொன்னரிமாலைகொண்டுபுரிகுழல்புனையலுற்றாள். (க௬)

கண்மணிவள்ளத்துள்ளேகளிக்குந்தன்முகத்தைநோக்கி
விண்மதிமதுவினாசைவீழ்ந்ததென்றொருத்தியுன்னி
உண்மகிழ்துணைவனோடுமூடுநாள்வெம்மைநீக்கித்
தண்மதியாகில்யானுந்தருவெனிந்நறவையென்றாள். (க௭)

எள்ளொத்தகோலமூக்கினேந்திழையொருத்திமுன்னை
தள்ளத்தண்ணறவையெல்லாந்தவிசிடையுகுத்துந்தேறாள்
உள்ளத்தின்மயக்கந்தன்னாலுட்புறத்துண்டென்றெண்ணி
வள்ளத்தைமறித்துவாங்கிமணிநிறவிதழின்வைத்தாள். (க௮)

வான்றனைப்பிரிதலாற்றாவண்டினம் † வச்சைமாக்கள்
என்றவர்நிதியம்வேட்டவிரவலரென்னவார்ப்பத்
தேன்றருகமலச்செவ்வாய்திறந்தனணுகரநாணி
ஊன்றியகழுநீர்நாளத்தாளினாலொருத்தியுண்டார். (க௯)

புள்ளுறைகமலவாவிப்பொருகயல்வெருவிப்போட்
உள்ளுறைகழித்தவாள்போல்வரிபுறவயங்குகண்ணாள்
கள்ளுறைமலர்மென்கூந்தற்களியிளமஞ்ஞையன்னாள்
‡ உள்ளுறையன்பனுண்ணாவென்னநறவுண்ணமெல்லண்ணாள். (௨௦)

வேறு.

கூற்றுறழ்நயனங்கள்சிவப்பக்கூனுதல்
ஏற்றிவாளெயிறுகளதுக்கியின்றளிர்
மாற்றருங்கரதலமறிக்குமாதொரு
○ சீற்றமாமபிநயந்தெரிக்கின்றாரினே. (௨க)

துடித்தவான்றுவரிதழ்த்தொண்டைத்தூநிலா
கடித்தவாலெயிறுகளதுக்கிக்கண்களால்
வடித்தவெங்குருதிவேல்விழிக்குமாதர்மெய்
பொடித்தவேர்புறத்துகுநறவம்போன்றவே. (௨௨)

* அல்குல் சூழ்ந்தாள் எனப்பின்வருதலான் மேகலை என்ற தாடையினை. † வச்சைமாக்கள்-உலோபிகள். ‡ தன்னுள்ளத்து நீங்காதுறைதலின் உள்ளுறையன்பனென்றார். ○ சீற்றமாமபிநயமெனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார்.

* கனித்திரளிதழ்பொழிசெம்மைகண்புக
நினைப்பதொன்றுரைப்பதொன்றுமோர்நேரிழை
தனிச்சுடர்தாமரைமுகத்துச்சாபமும்
குனித்ததுபனித்ததுகுழவித்திங்களே. (உ௩)

இலவிதழ்த்துவர்விடவெயிறுதேனுக
மூலமிசைக்கச்சொடுகலையுமூட்டற
அலகுழல்சோர்தரவசதியாட்டலாற்
கலவிசெய்கொழுநருங்கள்ளுமொத்தவே. (உ௪)

† கனைகடற்கள்வனுற்கலக்கமுற்றதை
‡ அனகனுக்கறிவியென்றறியப்போக்குமோர்
இனமணிக்கலையினுடோழிநீயுடன்
மனமெனத்தாழ்த்தியோவருதியோவென்றாள். (உ௫)

மானமர்நோக்கியோர்மதுகைவேந்தன்பால்
ஆனதன்பாங்கியராயினரெலாம்
§ போனவர்போனவர்தொடரப்போக்கினுள்
தானுமங்கவர்பினேதமியளேகினுள். (உ௬)

விரைசெயபூஞ்சேக்கையினடுத்த ¶ மீமிசைக்
கரைசெயாவாசையங்கடலுளாளொரு
பிரைசமென்குதலையாள்கொழுநன்பேரெலாம்
உரைசெயுங்கிள்ளையைபுவந்துபுல்லினுள். (உ௭)

மன்றனொருசிறையிருந்தொர்வாணுதல்
தன்றுணைக்கிள்ளையைத்தழீஇயென்னுவியை
இன்றுபோய்க்கொணர்கிலையென்செய்வாயெனக்
கன்றிலோடெத்தியென்றழுதுசீறினுள். (உ௮)

வளைபயின்முன்கையோர்மயிலனுடனக்
கிளையவள்பெயரினைக்கொழுநனீதலும்
முளையெயிறிலங்கிடமுறுவல்வந்தது
களகளவுதிர்ந்ததுகயற்கணுலியே. (உ௯)

செற்றமுன்புரிந்ததோர்செம்மல்வெம்மையாற்
பற்றலுமல்குலிற்பாந்தமேகலை
அற்றுகுமுத்தின்முன்னவனிசேர்ந்தன
பொற்றொடியொருத்திகண்பொழுசமுத்தமே. (௩௦)

---

* கனிபொழி என்புழி வினைப்பகுதியே வினையெச்சப்பொருடந்தது வரிப்புனைபந்தென்புழிப்போல. † கனைகடல் - ஒலிகடல் ‡ யான்நீயே னென்பாள் எதிர்மறைமுகத்தான். அவனை அனகனென்றாள் § போனவர்போனவர்-முற்போனவரையும்பிற்போனவரையுமுணர்த்திற்று. ¶மீமிசை ஒருபொருட்பன்மொழி.

தோடவிழ்கூந்தலாளொருத்திதோன்றலோ
டூடுகேனெவுயிருருகுநோய்கெடக்
கூடுகேனெவவன்குணங்கள்வீணையிற்
பாடுகேனெனப்பலவும்பன்னினள். (ருக)

மாடகம்பற்றினண்மகரவீணைதன்
தோடவிழ்மலர்க்கரஞ்சிவப்பத்தொட்டனள்
பாடினளொருத்திதன்பாங்குளார்களோ
டேடினதுரைசெயாளுள்ளத்துள்ளதே. (ருஉ)

குழைத்தபூங்கொம்பனாளொருத்திகூடலை
இழைத்தனளவ்வவவிட்டபோதெலாம்
பிழைத்தலுமனங்கவேள்பிழைப்பிலம்பொடும்
உழைத்தனளுயிர்த்தனளுயிருண்டென்னவே. (ருங)

பந்தணிவிரலினளொருத்திபையுளாள்
சுந்தரனொருவன்பாற்றூதுபோக்கினள்
வந்தனனெனக்கடையடைத்துமாற்றினள்
சிந்தனைதெரிந்திலஞ்சிவந்தநாட்டமே (ருச)

உய்த்தபூம்பள்ளியினூடனீங்குவான்
சித்தமுண்டொருத்திக்கதன்பன்மேர்கிலான்
பொய்த்ததோர் * மூரியானிமிர்ந்துபோக்குவாள்
எத்தனையிறந்தனகடிகையீண்டென்றாள். (ருரு)

விதைத்தமென்காதலின்வித்துமெய்ந்நிறை
இதைப்புனனனைத்திடமுளைத்தவேயெனப்
பகைத்தனளொருத்தன்மேலொருத்தி † பஞ்சடி
உதைத்தலும்பொடித்தனவுரோமராசியே. (ருசு)

பொலிந்தவாண்முகத்தினன்பொங்கித்தன்னையு
மலிந்தபேருவகையான்மாற்றுவேந்தரை
நலிந்தவாளுழவனோர்நங்கைகொங்கைபோய்
மெலிந்தவாநோக்கித்தன்புயங்கள்வீங்கினன். (ருஎ)

எய்ந்தபேரெழிலினனொருவனெய்தினன்
வேய்ந்தபோலெங்கணுமனங்கள்வெங்கணை
பாய்ந்தபூம்பள்ளியிற்படுத்தபல்லவந்
தீய்ந்தனநோக்கினன்றிசைக்குஞ்சிந்தையான். (ருஅ)

ஊட்டியசாந்துவெந்துலரும்வெம்மையான்
நாட்டினையளித்திநீயென்றுநல்லவர்

* மூரி-உறக்கம் † வஞ்சடி-செம்பஞ்சூட்டியதாள்.

ஆட்டுநீர்க்கலசமேயென்னலானவோர்
வாட்டொழின்மைந்தற்கோர்மங்கைகொங்கையே. (நகூ)

பயிருறுகிண்கிணிபரந்தமேகலை
வயிரவான்பூணணிவாங்கிநீக்கினள்
உயிருறுதலைவன்பாற்போகவுன்னினள்
* செயிருறுதிங்களைத்தீயநோக்கினள். (சO)

ஏலுமிவ்வன்மையையென்னென்றுன்னுதும்
† ஆலமென்கரும்பனுளொருவற்காங்கொரு
சோலைமென்குயிலனுள்சுற்றிவீக்கிய
யாலையைநிமிர்ந்திலவயிரத்தோள்களே. (சக)

சேர்குழலொருத்திதன்வருத்தஞ்சொல்லுவான்
மாரனைநோக்கியோர்மாதைநோக்கினள்
காரிகையிவளவள்கருத்தைநோக்கியோர்
வேரியந்தெரியலான்வீடுநோக்கினள். (சஉ)

சினங்கெழுவாட்கையோர்செம்மல்பாலொரு
கனங்குழைமயிலனுள்கடிதுபோயினள்
மனங்குழைநறவமோமாலைதான்கொலோ
அனங்கனேயார்கொலோவழைத்ததூதரே. (சங)

தொகுதருகாதற்குத் ‡ தோற்றசீற்றத்தோர்
வகிர்மதிநெற்றியாண்மழைக்கணவிவந்
துகுதலுமுற்றதென்னென்றுகொற்றவன்
நகுதலுதக்கணனுணுநீங்கினள். (சச)

பொய்த்தலைமருங்குலாளொருத்திபுல்லிய
கைத்தலநீக்கினள்கருத்தினீக்கலள்
சித்திரம்போன்றவச்செயலோர்தோன்றற்குச்
சத்திரமார்பிடைத்தைத்ததொத்ததே. (சரு)

மெல்லியலொருத்திதான்விரும்புஞ்சேடியைப்
புல்லியகையினள்போதிதூதெனச்
சொல்லுவானுறுமுறநாணுஞ்சொல்லலள்
o எல்லையில்பொழுதெலாமிருந்துவிம்மினள். (சகூ)

---

* நீ தோன்றித்தலைவன்பாற் காமவேட்கையுண்டாக்கப் பிறநியா வண்ணம் செல்வேனை நிலாவெரித்துத் தடுத்தி, இது நிற்குத்தகதென்பாள் செயிருறுதிங்களைத் தீயநோக்கினளென்றார். † பிரிந்து நின்று காமவெப்பத்தானெந்தமையின் ஆலமென் கரும்பனுளென்றும், அவன்பட்ட காமவிடாயை யொருவண்ணந் தணியப்பெற்றது இவள்சொல்லேயென்றது கருதிச்சோலைமென் குயிலனுளென்றுங் கூறினர். ‡ ஆற்றகுப்பைக ளென்றாற்போலத் தோற்ற சீற்றமென்புழிக் காலங்காட்டு மின்னிடைநிலை புணர்ந்துகெட்டது. o பன்முறையாற்றிய செய்கையினெல்லையில்லாமையை அச்செய்கை நிகழ்ந்த பொழுதின்மேலேற்றி எல்லையில் பொழுதெலா மென்றார்

ஊறுபேரன்பினளொருத்திதன்னுயிர்
மாறிலாக்காதலன் செலவைமற்றொரு
நாறுபூங்கோதைபானவிலநாணுவாள்
வேறுவேறுறச்சிலமொழிவிளம்பினள். (சஎ)

உருத்தெரிதன்மையவுயிருமொன்றுதாம்
அருத்தியுமத்துணையாயகீரினர்
ஒருத்தியுமொருத்தனுமுடம்புமொன்றெனப்
பொருத்துவாராமெனப்புல்லினாரரோ. (சஅ)

வெதிர்பொருதோளினளொருத்திவேந்தன்வந்
தெதிர்தலுந்தன்மனமெழுந்துமுன்செல
மதிமுகங்கதுமெனவணங்கினளது
புதுமையாதலினவற்கச்சம்பூத்ததே. (சகூ)

துனிவருநலத்தொடுசோர்கின்றனளொரு
குனிவருநுதலிக்குக்கொழுநனின்றியே
தனிவருந்தோழியுந்தாயையொத்தனள்
இனிவருதென்றலுமிரவுமென்னவே. (ருo)

ஆக்கியகாதலளொருத்தியந்தியில்
தாக்கிதெய்வமுண்டென்னுந்தன்மையவள்
நொக்கினணின்றனணுவன்றதோர்கிலள்
போக்கினதுதிநேடுணர்வும்போக்கினள். (ருக)

மறப்பிலள்கொழுநனைவரவுநோக்குவாள்
பிறப்பினெடிறப்பெனப்பெயருஞ்சிந்தையால்
* துறப்பருமுகிலிடைத்தோன்றுமின்னெனப்
புறப்படும்புகுமொருபூத்தகொம்பனாள். (ருஉ)

எழுதருங் † கொங்கைமேலனங்கனெய்தவும்
புழுதவெம்புண்களில்வளைக்கையொற்றினள்
அழுதனள்சிரித்தனளற்றஞ்சொல்லினள்
தொழுதனளொருத்தியைத்தூதுவேண்டுவாள். (ருங)

ஆர்த்தியுமுற்றதுமறிஞர்க்கற்றந்தான்
வார்த்தையினுணர்த்துதலரிதன்றேமனம்
வேர்த்தனள்வெதும்பினள்மெலிந்துசாய்ந்தனள்
பார்த்தனளொருத்திதன்பாங்கனாளையே. (ருச)

---

* படமாடத்தைத் துறப்பருமுகிலென்றார்
† கொங்கையினருமைநோக்கி எழுதருங்கொங்கையென்றார்.

தனங்களினிளையவர்தம்மின்மும்மடி
கனங்கனமிடையிடைகளிக்குங்கள்வனாய்
மனங்களினுழைந்தவர்மாந்துதேறலை
அனங்கனுமருந்தினாதல்வேண்டுமால். (ருரு)

வேறு.

நறைகமழலங்கன்மாலைநளிர்நறுங்குஞ்சிமைந்தர்
துறையறிகலவிச்செவ்வித்தோகையர்தூசுவீசி
நிறையகலல்குல்புல்குங்கலன்கழித்தகலநீத்தார்
அறைப்பறையனையநீராரருமறைக்காவரோதான். (ருசு)

பொன்னருங்கலனுந்தூசும்புறத்துளதுறத்தல்வம்பே
நன்னுதலொருத்திதன்பாலகத்துளதானுநீத்தாள்
உன்னருந்துறவுபூண்டவுணர்வுடையொருவனேபோல்
தன்னையுந்துறக்குந்தன்மைகாமத்தேதங்கிற்றன்றே (ருஎ)

பொருவருமதனன்போல்வானொருவனும்பூவின்மேலத்
திருவினுக்குவமைசால்வாளொருத்தியுஞ்சேக்கைப்போரில்
* ஒருவருக்கொருவர்தோலாரொத்தனருயிருமொன்றே
இருவரதுணர்வுமொன்றேயென்றபோதியாவர்வெல்வார். (ருஅ)

கொள்ளைப்போர்வாட்கணாளங்கொருத்தியோர்குமரனன்னான்
† வள்ளத்தாரகலந்தன்னைமலர்க்கையாற்புதைப்பநோக்கி
உள்ளத்தாருயிரன்னாண்மேலுதைபடுமென்றுநீநின்
கள்ளத்தாற்புதைத்தியென்னாமுன்னையிற்கனன்றுமிக்காள். (ருகூ)

பாலுளபவளச்செவ்வாய்ப்பணைமுலைநிகர்த்தமென்றோள்
வேலுளநோக்கினாளோர்மெல்லியல்வேலையன்ன
மாலுளசிந்தையாங்கோர் ‡ மழையுளதடக்கையாற்கு
மேலுளவரம்பைமாதரென்பதோர்விருப்பையீந்தாள். (சுO)

வேறு.

புனத்துளமயிலனாள்கொழுநன்பொய்யுரை
நினைத்தனள்சீறவாளொருத்திநீடிய
சினத்தொடுகாதலன்சேக்கைப்போரிடை
மனத்துறைகாதலே § வாகைகொண்டதே. (சுக)

கொலையுருவமைந்தெனக்கொடியநாட்டத்தோர்
கலை () யுருவல்குலாள்கணவற்புல்குவாள்

---

* ஒத்தகிழவனும் கிழத்தியுமொத்தவின் பந்துய்த்தலின் ஒருவருக்கொருவர் தோலாரொத்தன ரென்றார். † வளமென்றது - வள்ளமென விரிக்கும்; வழிவிரித்தல் பெற்றது; ‡ மழையுளதடக்கை என்றது - கொடையின் சிறப்புத்தோன்றநின்றது. § வெற்றியை வாகை யென்றார்.

0 உருவுதலாகிய இயைபில்லாதிருப்ப அவ்வியபுல்பட முலையுருவினவெனக்கூறினார்.

சிலையுருவழிதரச்செறிந்தமார்பிற்றன்
முலையுருவினவெனமுதுகைநோக்கினள். (௬௨.)

குங்குமமுதிர்ந்தனகோதைசோர்ந்தன
சங்கினமுரன்றனகலையுஞ்சாறின
பொங்கினசிலம்புகள்பூசலிட்டன
மங்கையரிளநலமைந்தருண்ணவே (௬௩)

துனியுறுபுலவியைக்காதல்சூழ்சுடர்
பனியெனத்துடைத்தலும்பதைக்குஞ்சிந்தையாள்
புனையிழையொருமயில்பொய்யுறங்குவாள்
* கனவெனுநலத்தினற்கணவற்புல்லினள். (௬௪)

வட்டவாண்முகத்தொருமயிலுமன்னனும்
† கிட்டியபோதுடல்கிடக்கப்புல்லினர்
விட்டிலர்கங்குலின்விடிவுகண்டிலர்
ஒட்டியவுடல்பிரிப்புணர்கிலாமையால். (௬௫)

அருங்களிமால்களிறனையவீரர்க்கும்
கருங்குழன்மகளிர்க்குங்கலவிப்பூசலால்
நெருங்கியவனமுலைசுமக்கநேர்கலா
மருங்குல்போற்றேய்ந்ததம்மாலைக்கங்குலே. (௬௬)

கடையுறநன்னெறிகாண்கிலாதவர்க்
கிடையுறுதிருவெனவிந்துநத்தினன்
படர்திரைக்கருங்கடற்பரமன்மார்பிடைச்
‡ சுடர்மணிக்கரசெனவிரவிதோன்றினன். (௬௭)

கஅ-வது உண்டாட்டுப்படலம்-முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-கககச.

---

* கனவிடைப்பயந்ததுபோற் கணவனைப் புல்லுதற்கேதுவாதல் பற்றி கனவெனுநலமென்றார். † பிரிவானுளதாம் வருத்தத்தினருமை தோன்றக் கிட்டியபோதென்றார். ‡ சுடர்மணிக்கரசென்றது பீதகவாடைப்பிரானார் மார்பிடை மணியாகிய கவுத்துவத்தை.

## ௧௯-வது எதிர்கோட்படலம்.

எதிர்கொள்வதைக்கூறித்துக் கூறும்படலம்.

வேறு.

அடாநெறியறைதல்செல்லாவருமறையறைந்தநீதி
விடாநெறிப்புலமைச்செங்கோல்வெண்குடைவேந்தர்வேந்தன்
* படர்முகமுகிலிற்றோன்றும்பருவமொத்தருவிப்பல்கும்
கடாநிறையாறுபாயுங்கடலொடுங்கங்கைசேர்ந்தான். (௧)

கப்புடைநாவினாகருலகமுங்கண்ணீற்றோன்றத்
துப்புடைமணலிற்றுகிக்கங்கைநீர்சுருங்கிக்காட்ட
† அப்புடையநீகவேலையகன்புனன்முகுந்துமாந்த
உப்புடைக்கடலுந்தெண்ணீருண்ணசையுற்றதன்றே. (௨)

ஆண்டுநின்றெழுந்துபோகியகன்பணைமிதிலையென்னும்
ஈண்டுநீர்நகரின்பாங்க ‡ ரிருநிலக்கிழவனெய்தத்
தாண்டுமாப்புரவித்தானைத்தண்ணளிச்சனகனென்னும்
தூண்டருவயிரத்தோளான்செய்ததுசொல்லலுற்றாம். (௩)

வந்தனனரசனென்னமனத்தெழுமுவகைபொங்கக்
கந்துகளிறுந்தேருங்கலினமாக்கடலுஞ்சூழச்
சந்திரனிரவிதன்னைச்சார்வதோர்தன்மைதோன்ற
○ இந்திரதிருவன்றன்னையெதிர்கொள்வானெழுந்துவந்தான். (௪)

கங்கைநீர்நாடன்சேனைமற்றுளகடல்களெல்லாம்
சங்கினமார்ப்பவந்துசார்வனபோலச்சாரப்
பங்கயத்தணங்கைத்தந்தபாற்கடலெதிர்வதேபோன்
மங்கையைப்பயந்தமன்னன்வளநகர்வந்ததன்றே. (௫)

வேறு.

இலைகுலாவலியினானனிகமேழெனவுலா
நிலைகுலாமகரநீர்நெடியமாகடலெலாம்
அலகின்மாகளிறுதேர்புரவியாளெனவிராய்
உலகெலாநிமிர்வதேபொருவுமோருவமையே (௬)

தொங்கல்வெண்குடைதொகைப்பிச்சமுட்படவிராய்
எங்கும்விண்புதைதரப்பகன்மறைந்திருளெழப்
பங்கயஞ்செய்யவும்வெளியவம்பலபடத்
தங்குதாமரையுடைத்தானமேபோலுமே. (௭)

---

* படாமுகமென்றது-யானையை. † படைகளின் மிகுதிநோக்கி அப்புடையநீகமென்றார். ‡ இருநிலக்கிழவனென்றது தயரதனை. ○ இந்திரதிருவனென்றதுமது.

கொடியுளாளோதனிக்குடையுளாளோகுலப்
படியுளாளோகடற்படையுளாளோபகர்
மடியிலாவரசினன்மார்புளாளோவளர்
முடியுளாளோதெரிந்துணர்கிலா * முளரியாள். (அ)

வார்முகங்கெழுவுகொங்கையர்கருங்குழலின்வண்
டோர்முழங்கரவமேழிசைமுழங்கரவமே
தேர்முழங்கரவம்வெண்டிரைமுழங்கரவமே
கார்முழங்கரவம்வெங்கரிமுழங்கரவமே, (கூ)

சூழுமாகடல்களுந்திடர்படத்துகடவழ்ந்
தேழுபாராகமுமுற்றுளவெத்தனிற்கெளிதரோ
ஆழியானுலகளந்தன்றுதாள்சென்றவப்
பூழையூடேபொடித்தப்புறம்போயதே. (க0)

மன்னெடுங்குடைமிடைந்தடையவான்மறைதரத்
துன்னிடுநிழல்வழங்கிருடுரப்பெளிதரோ
பொன்னிடும்புவியிடும்புனைமணிக்கலனெலாம்
மின்னிடும்வில்லிடும்வெயிலிடும்நிலவிடும் (கக)

தாவின்மன்னவர்பிரான்வரமுரட்சனகனும்
ஏவருஞ்சிலையினனெதிர்வரும்நெறியெலாம்
தூவுதண்சுண்ணமுங்கனகநுண்டூளியும்
பூவின்மென்றாதுரும்பொடியுமேபொடியெலாம். (கஉ)

நறுவிரைத்தேனுநானமுநறுங்குங்குமச்
செறியகிற்றேய்வையுமான்மதத்தேக்கரும்
வெறியுடைக்கலவையும்விரவுசெஞ்சாந்தமும்
செறிமதக்கலுழிபாய்சேறுமேறெலாம். (கங)

மன்றலங்கோதையார்மணியினும்பொன்னினும்
சென்றவந்துலவுமச்சிதைவிலாநிழலினோர்
வென்றிதிண்கொடியொடும்நெடுவிதானமும்விராய்
நின்றவெண்குடைகளினிழல்களேநிழலெலாம். (கச)

மாறிலாமதுகையான்மகிழ்பெருந்தானைமேல்
ஊறுபேருவகையானனிகம்வந்துற்றபோ
தீறிலோதையினெடுமறிதிரைப்பரவைமேல்
ஆறுபாய்கின்றதோரமலைபோலானதே. (கரு)

கந்தையேபொருகரிச்சனகனுங்காதலோ
டுந்தவோதரியதோர்தன்மையோடுலகுளோர்

---

* முளரியாள்-சயமகள்.

* தந்தையையனையவத்தகவினான் முன்புதன்
சிந்தையேபொருநெடுந்தேரின்வந்தெய்தினான். (கசு)

எய்தவத்திருநெடுந்தேரிழிந்திளையதன்
மொய்கொடிஞ்சேனைபின்னிற்கமுன்சேறலும்
கய்யின்வந்தேறெனக்கடிதின்வந்தேறினான்
அய்யனும்முகமலர்ந்தகமுறத்தழுவினான். (கஎ)

தழுவினின்றவனிருங்கிளையையுந்தமரையும்
வழுவில்சிந்தனையினான்வரிசையின்னளவளாய்
எழுகமுந்துறவெனாவினிதுவந்தெய்தினான்
உழுவைமுந்தரியனானெவரினும்முயரினான். (கஅ)

இன்னவாறிருவருமினியவாறேகவத்
துன்னுமாநகரினின்றெதிர்வரத்துன்னினான்
தன்னையேயனையவன்றழலையேயனையவன்
† பொன்னின்வார்சிலையிறப்புயநிமிர்ந்தருளினான். (கக)

தம்பியுந்தானுமத்தானைமன்னவனகர்ப்
பம்புதிண்புரவியும்படைஞரும்புடைவரச்
செம்பொனின்பசுமணித்தேரின்வந்தெய்தினான்
‡ உம்பருமிம்பருமுரகருந்தொழவுளான். (உ0)

யானையோவிரதமோவிவுளியோபிடிகளோ
ஆனபே § ருறையிலாநிறையையாரறிகுவார்
தானையோர்சனகனேவலினெடுந்தாதைமுன்
போனபேரிருவர்தம்புடைவரும்படையினே. (உக)

காவியுங்குவளையுங்கடிகொள் $ காயாவுமொத்
தோவியஞ்சுவைகெடப்பொலிவதோருருவொடே
தேவருந்தொழுகழற்சிறுவன்முன்பிரிவதோர்
ஆவிவந்தென்னவந்தரசன்மாடணுகினான். (உஉ)

அனிகம்வந்தடிதொழக்கடிதுசென்றசர்கோன்
இனியபைங்கழல்பணிந்தெழுதலுந்தழுவினான்
மனுவெனுந்தகையன்மார்பிடைமறைந்தன ○ மலைத்
தனிநெடுஞ்சிலையிறத்தவழ்தடங்கிரிகளே. (உங)

* அனைவோர்க்குந் தெய்வமிலைமுகட்பைம்பூணிறையென்பது பற்றித் தந்தையே யனையவத்தகவினானென்றார். † பொன்னின் வார்சிலை - ஈசன் வில். ‡ உம்பர் முதலினர் தொழவுளானென்றது-இராமனை.

§ உறை யென்றது - மிகப்பெரியதோரெண். $ கரியகோலப்பெருந்தகையாதலின் காவியுங்குவளையும் கடியகாயாவுமென்றார். ○ மலையென்றது-மேருவை, அது மலைகளுட் சிறந்தமை பற்றி.

இளையபைங்குரிசில்வந்தடிபணிந்தெழுதலும்
தளைவருந்தொடையன்மார்புறவுறத்தழுவினன்
களைவருந்துயரறக்ககனமெண்டிசையெலாம்
* விளைதரும்புகழினனெவரினும்மிகுதியான். (உச)

சற்றைவார்சடையினன்கைக்கொளுந்தனுவிறக்
கொற்றநீள்புயநிமிர்த்தருளுமக்குரிசில்பின்
பெற்றதாயரையுமப்பெற்றியிற்றொழுதெழுந்
துற்றமேலோதவர்மனத்துவகை † யாருரைசெய்வார். (உரு)

உன்னுபேரன்புமிக்கொழுகியொத்தொண்கணீர்
பன்னுதாரைகடரத்தொழுதெழும்பரதனைப்
பொன்னின்மார்புறவணைத்துயிருறப்புல்லினன்
தன்னையத்தாதைமுன்றழுவினுலென்னவே. (உசு)

கரியவன்பின்புசென்றவனருங்காதலிற்
பெரியவன்றம்பியென்றினையதோர்பெருமையப்
பொருவருங்குமரர்தம்புனைநறுங்குஞ்சியால்
இருவர்பைங்கழலும்வந்திருவரும்வருடினர். (உஎ)

கோல்வருஞ்செம்மையுங்குடைவருந்தண்மையும்
சால்வருஞ்செல்வமென்றுணர்பெருந்தாதைதன்
மேல்வருந்தன்மையான்மிகவிளங்கினர்கடாம்
‡ நால்வரும்பொருவினன்மறையெனுநடையினர். (உஅ)

சான்றெனத்தகையசெங்கோலினனுயிர்கடாம்
ஈன்றநற்றுயெனக்கருதுபேரருளினன்
ஆன்றவிச்செல்வமித்தனையுமொய்த்தருகுறத்
தோன்றலைக்கொண்டுமுற்செல்கெனச்சொல்லினன். (உகூ)

காதலோவறிகிலங்கரிகளைப்பொருவினர்
§ தீதிலாவுவகையுஞ்சிறிதரோபெரிதரோ
சோதைசூழ்குஞ்சியக்குமரர்வந்தெய்தலும்
தாதை § யாமொத்ததத்தானையின்றன்றன்மையே. (௩0)

தொழுதிரண்டருகுமன்புடையதம்பியர்தொடர்ந்
தழிவில்சிந்தையினுகந்தாடன்மாமிசைவரத்

---

* துயரறக் ககனமெண்டிசையெலாம் விளைதரும்புகழினனென்முர் சம்பரன் முதலானோரைக் குலத்தோடுகளைந்த சிறப்புநோக்கி. † யாரென்னும் வினவினைக்குறிப்பு ஈண்டின்மைகுறித்து நின்றது 'யா அருலகத் தோர் சொல்லில்லா' ரென்புழிப்போல ‡ நால்வருநடையான் நான்மறை பொருவலினவற்றையே உவமை கூறினர்.

§ ஏனையுவகைபோலாது உயிர்க்குறுதி பயத்தலான் தீதிலாவுவகை யன்முர். § ஆதலொத்தது என்றது-ஆதொத்ததெனநின்றது.

தழுவுசங்குடனெடும்பணைதழங்கிடவெழுந்
தெழுதருந்தகையதோர்தேரின்மேலேகினான். (௯௧)

பஞ்சிசூழ்மெல்லடிப்பாவைமார்பண்ணை * சூழ்
மஞ்சுசூழ்நெடியமாளிகையின்வந்திடைவிராய்
நஞ்சுசூழ்விழிகள்பூமழையின்மேல்விழநடந்
திஞ்சிசூழ்மிதிலைமாவீதிசென்றெய்தினான். (௯௨)

சூடகந்துயல்வரக்கோதைசோர்தரமலர்ப்
பாடகம்பரதநூல்பகரவெங்கடகரிக்
கோடரங்கிடவெழுங்குவிதடங்கொங்கையார்
ஆடரங்கல்லவேயணியரங்கயலெலாம். (௯௩)

பேதைமார்முதல்கடைப்பேரிளம்பெண்கடாம்
ஏதியார்மாரவேளேவ்வந்தெய்தினார்
ஆதிவானவர்பிரானனுகலாலணிகொள்கார்
ஓதியார்வீதிவாயுற்றவாறுரைசெய்வாம். (௯௪)

கக௬-வது. எதிர்கோட்படல-முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம் ககசஅ.

---

## உ௰-வது. உலாவியற்படலம்.

### உலாவியலைக்குறித்துக் கூறும்படலம்.

‡ மானினம்வருவபோன்றுமயிலினந்திரிவபோன்றும்
மீனின்மிளிர்வபோன்றுமின்னினமிடைவபோன்றும்
தேனினஞ்சிலம்பியார்ப்பச்சிலம்பினம்புலம்பவெங்கும்
பூநனைகூந்தன்மாதர்பொம்மெனப்புகுந்துமொய்த்தார். (க)

விரிந்துவீழ்கூந்தல்பாரார்மேகலையற்றநோக்கார்
சரிந்தபூந்துகில்கடாங்காரிடைதடுமாறத்தாழார்
நெருங்கினர்நெருங்கிப்புக்குநீங்குனீங்குமின்னென்
றருங்கலமனையமாதர்தேனுகரளியின்மொய்த்தார். (உ)

---

* சூழ் என்னு முதனிலைத்தனி வினைப்பெயர் சூழ்ந்தென்னும் வினையெச்சப் பொருளது. † பேதைமார்முதல் கடைப்பேரிளம் பெண்களென்றது பேதை, பெதும்பை, மங்கை, மடந்தை; அரிவை, தெரிவை, பேரிளம் பெண்ணென்னு மெழுவரை. ‡ கண்ணான் மானினத்தையும், சாயலான் மயிலினத்தையும், அணிகலனான் மீனினத்தையும், இடையான் மின்னினத்தையுங் கூறினார்.

கண்ணுற் * காதலென்னும்பொருளையேகாண்கின்றோமிப்
பெண்ணணிநீர்மையினலெய்தும்பயனின்றுபெறுதுமென்பார்
மண்ணணிநீருலர்ந்துவானமழையறவறந்தகாலத்
துண்ணுநீர்கண்டுவீழுமுழைக்குலம்பலவுமொத்தார். (௩)

பள்ளத்துப்பாயுநன்னீரனையவர்பானல்பூத்த
வெள்ளத்துப்பெரியகண்ணார்மென்சிலம்பலம்பமென்பூத்
தள்ளத்தம்மிடைகணோவத்தமைவலித்தவன்பாற்செல்லும்
உள்ளத்தைப்பிடித்துநாமென்றோடுகின்றாருமொத்தார். (௪)

அரத்தமுண்டனையமேனியகலிகைகளித்தநாளும்
விரைக்கருங்குழலிக்காகவில்லிறகியிர்ந்துவீங்கும்
வரைத்தடந்தோளுங்கானமறுகினின்வீழுமாதர்
இரைத்துவந்தமிழ்தின்மொய்க்குமீயினமென்னலானார். (௫)

வீதிவாய்ச்செல்கின்றான்போல்விழித்திமையாதுநின்ற
மாதரார்கண்களூடேவாவுமான்றேரிற்செல்வான்
யாதினுமுயர்ந்தோர்தன்னையாவர்க்குங் † கண்ணனென்றே
ஓதியபெயர்க்குத்தானேயுறுபொருளுணர்த்திவிட்டான். (௬)

எண்கடந்தகிலாதின்றேகுறுமிவன்றேரென்று
பெண்கடந்தம்மினெந்துபேதுறுகின்றகாலை
‡ மண்கடந்தமரார்வைகும்வான்கடந்தானைத்தான்றன்
கண்கடவாதுகாத்தகாரிகைபெரியளேகாண். (௭)

பயிரொன்றுகலையுஞ்சங்கும்பழிப்பருநலனும்பண்பும்
செயிரின்றியலர்ந்தபொற்புஞ்சிந்தையுமுணர்வுந்தேசும்
வயிரஞ்செய்பூணுநாணுமடனும் § தன்னிறையுமற்றும்
உயிரொன்றுமொழியவெல்லாமுகுத்தொருதெரிவைநின்றாள். (௮)

குழையுறுமிளிருங் ‖ கெண்டைகொண்டலினுலிசிந்தத்
தழையுறுக்கரும்பின்சாபத்தனங்கவேள்சரங்கள்பாய
இழையுறுப்புண்ணறுதவிளமுலையொருத்திசோர்ந்து
மழையுறுமின்னினன்னமருங்குல்போனுடங்கிநின்றாள். (௯)

---

* காதலைப்பொருளென்றார் வைசேடிகர்பொருள், பண்பு, தொழில், சாதி, விசேடம், இயைபு என்பனவற்றை அறுவகைப்பொருளென்றதனு னென்க. † யாவர் கண்ணிடைச்செல்வனென்றதுபற்றிக் கண்ணனென்ற தென்க. ‡ கடவுள் என்னும் பெயர்பற்றி மண்கடந்தமரார்வைகும் வான் கடந்தானென்றார். § உகுத்தெனக் கலைமுதலியன தன்னினீங்கினமை யுணராமை இலக்கணையாற் கூறினர். ‖ இவனையடையத் தவமுடையே னல்லேனெனத் தன்னைநோக்கிக் கவன்றமையான் கெண்டையாலி சிந்தவென்றார்.

பஞ்சணிவிரலினார் தம்படைநெடுங்கண்களெல்லாம்
செஞ்செவேயையன்மெய்மிற் கருமையைச்சேர்ந்தவோதாம்
மஞ்சனமேனியான் றன்மணிநிறமாதரார்தம்
அஞ்சனநோக்கம்பார்க்கவிருண்டதோவறிகிலேமால்　(க௦)

மாந்தளிர்மேனியாளோர்வாணுதன்மதனனெங்கும்
பூந்துணர்வாளிமாரிபொழிகின்றபூசனேக்கி
* வேந்தர்கோனுணேநோக்கான்வீரன்வில்லாண்மையாரான்
ஏந்திழையாரையெய்வான்யாவனேயொருவனென்றாள்.　(கக)

† சொன்னலங்கடந்தகாமச்சுவையையோருருவமாக்கி
இன்னலந்தெரியவல்லாரெழுதியதென்னநின்றாள்
பொன்னையும்பொருவுநீராள்புனைந்தனவெல்லாம்போகத்
தன்னையுந்தாங்கலாதாடுகிலொன்றுந்தாங்கிநின்றாள்.　(கஉ)

விற்றங்குபுருவநெற்றிவெயர்வரப்பசலைவிம்ம
சுற்றெங்குமெறிப்பவுள்ளஞ்சோரவோர்தோகைநின்றாள்
கொற்றஞ்செய்கொலைவேலென்னக்கூற்றெனக்கொடியகண்ணாள்
மற்றொன்றுங்காண்கிலாதாடமியனே ‡ வள்ளலென்றாள்.　(கங)

மைக்கருங்கூந்தற்செவ்வாய்வாணுதலொருத்தியுள்ளம்
நெக்கனளுருகுகின்றாளெஞ்சிடை $ வஞ்சன்வந்து
புக்கனன்போகாவண்ணங்கண்ணெனும்புலங்கொளவாயும்
சிக்கெனவடைத்தேன்றோழிசேருதுமமளியென்றாள்.　(கச)

தாக்கணங்கனையமேனிதைத்தவேள்சரங்கள்பாராள்
வீக்கிபகலனுந்தூசும்வேறுவேறனதோராள்
ஆக்கியபாவையன்னுளொருத்தியாண்டமலன்மேனி
¶ நோக்குறுவாரையெல்லாமெரியெழநோக்குகின்றாள்.　(கரு)

களிப்பனமதர்ப்பநீண்டுகதுப்பினையளப்பகள்ளம்
ஒளிப்பனவெளிப்பட்டோடப்பார்ப்பனசிவப்புள்ளூற

---

* வேந்தர்கோனுணைக் கச்சமும்வீரன் வில்லாண்மைக்கு நாணமுமில்லாது ஏந்திழையாரையெய்வதனன் யாவனே என்றதென்க. † உளத்து நிகழுங் காமச்சுவை பிறர்க்குப்புலப்பட இற்றென்றுவாயாற் கூறுவதரிதும், ஏனையுலகங்களினும் சிறந்தது ஆகலின் சொன்னலங்கடந்த காமச்சுவை என்றார் ‡ வள்ளலென்றார் யாவருங்காண வீதியாய்வந்து தவுதனேக்கி $ தானடைந்து நமக்கு வேட்கையைப்பெருக்கி அது பயன்படத் தழுவுதலும் உள்ளத்தேவருதல் பெயர்த்தும் சேர்தலென்னுமொரு நிலை நிற்றலுமில்லாமையின் வஞ்சனென்றும், தன்போற்றோழியும் வேட்கையுடையாளாகலானும் தான்கண்ணெனும் புலன்கொள்வாயைச் சிக்கெனவடைத்தலின் அவனை புழுடன் கொண்டுபோகவேண்டுமாகலானுமவளையுமுளப்படுத்திச் சேருதுமமளியென்றுங்கூறினார். ¶ யாவருமொருங்கு நோக்கலின் திருமேனிக்குக் கண்ணெச்சில்படுமென்றதனனும், தன்னை இறைவற்குரியளாகக்கருதி ஏனையோர் நோக்கப்பெறுது அது நமக்கின்றென்னுங் கருத்தானுமென்க.

வெளுப்பனகறுப்பவானவேற்கணொளொருத்தியுள்ளம்
குளிர்ப்பொடுகோணவந்தாள்வெதுப்பொடுகோயில்புக்காள், (கசு)

கருங்குழற்பாரம்வார்கொள்கனமுலைகலைசூழல்குல்
நெருங்கினமறைப்பவாண்டோர்நீக்கிடம்பெறாதுவிம்மும்,
பெருந்தடங்கண்ணிகாணும்பேரெழிலாசைதூண்ட
மருங்குலின்வெளிகளூடேவள்ளலைநோக்குகின்றாள் (கஎ)

வரிந்தவாளனங்கன்வாளிமனங்கழன்றனவுமாதர்
எரிந்தபூணினமுங்கொங்கைவெயர்த்தபோதிழிந்தசாந்தும்
சரிந்தமேகலைபுமுத்துஞ்சங்கமுந்தாழ்ந்தகூந்தல்
விரிந்தபூந்தொடையுமன்றிவெள்ளிடையரிதவ்வீதி. (கஅ)

* தோள்கண்டார்தோளேகண்டார்தொடுகழற்கமலமன்ன
தாள்கண்டார்தாளேகண்டார்தடக்கைகண்டாருமஃதே
வாள்கொண்டகண்ணார்யாரேவடிவினைமுடியக்கண்டார்
ஊழ்கொண்டசமயத்தன்னானுருவுகண்டாரையொத்தார். (கக)

வேறு.

தையல்சிற்றிடையாளொருதாழ்குழல்
உய்யமற்றவளுள்ளத்தொடுங்கினன்
வய்யமுற்றும்வயிற்றினடக்கிய
அய்யனிற்பெரியாரினியாவரே. (உ0)

அலம்புபாரக்குழலியொராயிழை
சிலம்புமேகலையும்மொலிசெய்திட
நலம்பெய்கொம்பினடந்துவந்தெய்தினள்
† புலம்புசேடியர்கைமிசைபோயினள். (உக)

அருப்புமென்முலையாளங்கொராயிழை
இருப்புநெஞ்சினையேனுமொரேழைக்காப்
பொருப்புவில்லைப்பொடிசெய்தபுண்ணியா
கருப்புவில்லிறுத்தாட்கொண்டுகாவென்றாள். (உஉ)

மைதவழ்ந்தகருங்கணொர்வாணுதல்
‡ செய்தவன்றனிதேர்மிசைச்சேறல்விட்
டெய்தவந்தெதிர்நின்றமைதானிது
கய்தவங்கொல்கனவுகொலாமென்றாள். (உங)

---

* தாடகையை வென்ற தோளாண்மை நோக்கித் தோள்கண்டார் தோளே கண்டாரென்றும், அகலிகை சாபமொழித்த தாளின்பெருமை நோக்கிக் கமலமன்னதாள் கண்டார் தாளேகண்டார் தாளேகண்டாரென்றும், ஈசன்வில்லிறுத்த ஆற்றலுன்றத் தடக்கைகண்டாருமஃதே என்றுங் கூறினர். † புலம்புசேடியரென்றார் இவளைப்பிரியுமாறுவந்ததென்று கவன்றமையானென்க. ‡ செய்துமுடித்த தவத்தானாகலின் செய்தவனென்றார்.

மாதொருத்திமனத்தினையல்லதோர்
* தூதுபெற்றிலளின்னுயிர்சோர்கின்ருள்
போதரிக்கட்பொலங்குழைப்பூண்முலைக்
கீதையெத்தவஞ்செய்தனளோவென்ருள். (உச)

பழுதிலாவொருபாவையன்னுள்பதைத்
தழுதுவெய்துயிர்த்தன்புடைத்தோழியைத்
தொழுதுசோர்ந்துயர்வாளிந்தத்தோன்றலை
எழுதலாங்கொலிம்மன்மதனுலென்ருள். (உரு)

வண்ணவாயொருவாணுதன்மானுடற்
கெண்ணுங்காலிவ் விலக்கணமெய்திட
† ஒண்ணுமோவிதுணர்த்துகின்றேனிவன்
கண்ணனேயிதுகண்டிரும்பின்னென்ருள். (உசு)

கனகநூபுரங்கைவளையோடுக
மனநெகும்படிவாடியொர்வாணுதல்
அனகனிந்நகரெய்தியதாதியிற்
சனசர்செய்ததவப்பயனுலென்ருள். (உஎ)

நனிவருந்திநலங்குடிபோயிடப
பனிவருங்கணோர் ‡ பாசிழையல்குலாள்
முனிவருங்குலமன்னருமொய்ப்பறத
தனிவருங்கொல்கனவின்றலையென்ருள். (உஅ)

புனங்கொள்கார்மயில்போலியோர்பொற்கொடி
மனங்கொள்காதன்மறைத்தலியெண்ணினுள்
§ அனங்கவேளதறிந்தனனற்றந்தான்
மனங்கள்போலமுகமுமறைக்குமே. (உக)

இணைநெடுங்கணோரேந்திழையேந்துபூ
அணையணைந்திடியுண்டவராவெனப்
புணர்நல்கிளர்கொங்கைபுழுங்கிட
உணர்வழுங்கவுயிர்த்தனலாவியே. (ஙo)

ஆம்பலொத்தமுதூறுசெவ்வாய்ச்சியர்
தாம்பதைத்துயிருட்டடமோறுவார்
தேம்புசிற்றிடைச்சீதையைப்போற்சிறி
தேம்பல்பெற்றிலரெங்கணமுய்வரே. (ஙக)

* கிள்ளை நாரைமுதலிய தூதினின்று நீக்குதற்கு மனத்தினையல்லதோர் தூதென்ருர். † ஒன்றுமோ என்றது-ஒண்ணுமோ என மரீஇயது.
‡ பசும்பொனுனியன்ற அணியைப் பாசிழை என்றது - மரபு வழுவமைதி. § உருவிலியாதலான் அநங்கவேளென்ருர்.

வேர்த்துமேனிதளர்ந்துயிர்விம்மலோ
டார்த்தியுற்றமடந்தையராரையும்
* தீர்த்தனித்தனைசிந்தையிற்செங்கணிற்
பார்த்திலனுட்பரிவிலனேயென்றாள். (௩௨)

வய்யம்பற்றியமங்கையரெண்ணிலார்
அய்யன்பொற்புக்களவிலையாதலால்
எய்யும்பொற்சிலைமாரனுமென்செய்வான்
† கய்யம்பற்றுடைவாளினுங்கைவைத்தான். (௩௩)

நானவார்குழனரியரோடலால்
வேனில்வேளொடுமேலுறைவார்களோ
டானபூசலறிந்திலமம்புபோய்
வானநாடியர்மார்பினுந்தைத்தவே. (௩௪)

மருண்மயங்குமடந்தையர்மாட்டொரு
பொருணயந்திலன்போகின்றதேயிவன்
கருணையென்பதுகண்டறியான்பெரும்
பரிணதன்சொல் ‡ படுகொலையானென்றாள். (௩௫)

தொய்யில்வெய்யமுலைத்துடிபோலிடை
நய்யும்நொய்யமருங்குலோர்நங்கைதான்
கய்யுமெய்யுமறிந்திலள்கண்டவர்
உய்யுமுய்யுமெனத்தளர்ந்தோய்வுற்றாள். (௩௬)

பூசலூசல்புரிபவர்போலொரு
பாசமென்மொழிதன்மலர்ப்பாதங்கள்
சேகுசேர்தரச்சேவகன்றேரின்பின்
ஏகுமீளுமிதென்செய்தவாறரோ. (௩௭)

பெருத்தகாதலிற்பேதுறுமாதர்ன்
ஒருத்திமற்றங்கொருத்தியைநோக்கியென்
கருத்துமவ்வழிகண்டதுண்டோவென்றாள்
அருத்தியுற்றபின்னாணமுண்டாகுமோ. (௩௮)

நங்கையங்கொருபொன்னயந்தாருய்யத்
தங்களின்னுயிருங்கொடுத்தார்தமர்

---

* தீர்த்தனென்றதிராமனை. † கையம்பற்றுடைவாளினுங் கைவைத்தானென்றார் கை அம்புகளொழிந் துடைவாளினுங்கைவைத்தானென்க. இனி உடைவாளினுங் கைவைத்தான் என்றது-கையம்புமலராப்பாதலின் தேன் சொரிவதனான் நழுவுகின்றமைபற்றி அங்ஙனமாகா வண்ணம் கேதகையின் பராகத்தா னழுவாவண்ணஞ் செய்தானென்றது. ‡ படுகொலையான்-கழிபெருங்கொலையாளி.

எங்களின் னுயிரெங்களுக்கீகிலா
வெங்கணெங்கண் விளைந்ததிவற்கென்றாள். (ங௯)

நாமத்தாலழிவா ளொருநன்னுதல்
* சேமத்தார்வில்லிறுத்ததுதேருங்கால்
தாமத்தார்குழற்றூயொழித்தோகைபால்
காமத்தாலன்றுகல்வியினுலென்றாள் (௪0)

ஆரமுந்துகிலுங்கலனியாவையும்
சோரவின் னுயிர்சோருமொர்சோர்குழல்
† கோரவில்விமுன்னேயெனைக்கொல்கின்ற
மாரவேளின்வலியவர்யாரென்றாள். (௪௧)

மாதரின்னணமெய்திடவள்ளல்போய்க்
கோதில்சிந்தைவசிட்டனுங்கோசிக
‡ வேதபாரனுமேவியமண்டபம்
எதின்மன்னர்குழாத்தொடுமெய்தினன். (௪௨)

திருவீனுயகன்மின்றிரிந்தாலெனத்
○ துருவின்மாமணியாரந்துயல்வரப்
பருவமேகம்படிந்ததுபோற்படிந்
திருவர்தாளுமுறையினிறைஞ்சினன். (௪௩)

இறைஞ்சவன்னவரேத்தினரேவவோர்
நிறைஞ்சபூந்தவிசேறிநிழற்கள்போல்
புறஞ்செய்தம்பியருட்பொலிந்தனரோ
¶ அறஞ்செய்காவற்கயோத்தியிற்றேன்றினன். (௪௪)

ஆனமாமணிமண்டபமன்னது
தானைமன்னன்றமரொடுஞ்சார்ந்தனன்
மீனெலாந்தனபின்வரவெண்மதி
வானிலாவுறவந்ததுமானவே. (௪௫)

வந்துமாதவர்பாதம்வணங்கிமேற்
சிந்துதேமலர்மாறிசிறந்திட
அந்தணாளர்களாசியொடாசனம்
இந்திரன்முகநாணுறவேறினன். (௪௬)

---

* சேமித்துவைத்த வில்லாதலின் சேமத்தார் வில்லென்றார்.

† பிறர்க்கச்சம் விளைத்தவில்லை வளைத்தவனுகலின் கோரவில்லிஎன்றார். ‡ வேதபாரகன்-வேதபாரனென இடைக்குறைந்தது. ○ தோளாமணி என்றதுபற்றித் துருவின் மாமணி என்றார். ¶ பாப்பணைதுறந்தமை அறத்தை நிறுத்தற்பொருட்டாகலின் அறஞ்செய்காவற்றயோத்தியிற்றேன்றினனென்றார்.

கங்கர்கொங்கர்கலிங்கர்குலிங்கர்கள்
சிங்காளதிபர்சேரலர்தென்னவர்
அங்கராசர்குலிங்கரவந்திகர்
வங்கர்மாளவர்சோளர்மராடரே. (சஎ)

மானமாகதர்மச்சர்மிலேச்சர்கள்
ஏனைவீரவிலாடர்விராடர்கள்
சீனர்தெங்கணர்செஞ்சகர்சோமகர்
சோனசேகர்துருக்கர்குருக்களே. (சஅ)

ஏதியாதவரேழ்திறற்கொங்கணர்
சேதிராசர்தெலுங்கர்கருநடர்
ஆதிவானங்கவித்தவனிவாழ்
சோதிநீண்முடிமன்னருந்துன்னினர். (சகூ)

தீங்கரும்பினுந்தித்திக்குமின்சொலார்
தாங்குசாமரைமாடுதெயங்குவ
ஓங்கியோங்கிவளர்ந்துயர் * கீர்த்தியின்
பூங்கொழுந்துபொலிவனபோன்றவே. (ருo)

சுழலும்வண்டுமிஞ்சிறுஞ்சுரும்புஞ்சூழ்ந்
துழலும்வாசமதுமலரோதியர்
குழலினோடுறக்கூறுபல்லாண்டொலி
மழலையாழிசையோடுமெலிந்தவே. (ருக)

வெங்கணானையினன்றனிவெண்குடை
திங்கடங்கள்குலக்கொடிசீதையாம்
மங்கைமாமணங்காணியவந்தருள்
பொங்கியோங்கித்தழைப்பதுபோன்றதே. (ருஉ)

ஊடுபேர்விடமின்றியொன்றும்வகை
நீடுமாகடற்றானைநெருங்கலால்
ஆடன்மாமதயானைச்சனகர்கோன்
நாடெலாமொருநன்னகராயதே. (ருங)

ஓழிந்தவென்னினியொண்ணுதற்றூதைதன்
பொழிந்தகாதன்றொடரப்பொருளெலாம்
அழிந்துவந்துகொண்டாடலினன்புதான்
இழிந்துளார்க்குமிராமற்குமொத்ததே. (ருச)

உ०-வது உலாவியற்படல-முற்றிற்று.
ஆ திருவிருத்தம்-கஉ०உ

---

* கீர்த்தியை வெண்மையாகக்கூறலின் சாமரைமாடு தயங்குவது கீர்த்தியின் பூங்கொழுந்தென்றுவமித்தார்.

# உக - வது. கோலங்காண்படலம்.

கோலங்காண்டலைக் குறித்துக்கூறும் படலம்.

தேவியர்மருங்குசூழ * விந்திரனிருக்கைசேர்ந்த
ஓவியமுயிர்பெற்றென்னவுவந்தரசிருந்தகாலை
தாவில்வெண்கவிகைச்செங்கோற்சனகனையினிதுநோக்கி
† மாவியனேக்கிஞளைக்கொணர்கெனவசிட்டன்சொன்னான். (க)

உரைசெய்யத்தொழுதகையனுவந்தவன்லத்தன்பெண்ணுக்
கரைசியைத்தருதிரீண்டென்றுயிழையவரையேவக்
கரைசெயற்கரியகாதல்கடாவிடக்கடிதுசென்றார்
பிரைசமொத்தினியசொல்லார்பேதைதாதியரிற்சொன்னார். (உ)

அமிழிமைத்துணைகள்கண்ணுக்கணியெனவமைக்குமாபோல்
உமிழ்சுடர்க்கலன்கணங்கையுருவினைமறைப்பதோரார்
அமிழ்தினைச்சுவைசெய்தென்னவழகினுக்கழகுசெய்தார்
இமிழ்திரைப்பரவைஞாலமேழைமையுடைத்துமாதோ. (ங)

கண்ணன்றன்னிறந்தன்னுள்ளக்கருத்தினைநிறைத்துமீதிட்
டுண்ணின்றுங்கொடிகளோடியுலகெங்கும்பரந்ததன்ன
வண்ணஞ்செய்கூந்தற்பாரவலயத்துமழையிற்றேன்றும்
விண்ணின்றமதியின்மென்பூஞ்சிகழிகைக் ‡ கோதைவேய்ந்தார். ()

விதியதுவகையால்வானமீனினம்பிறையைவந்து
கதுவுறுகின்றதென்னக்கொழுந்தொளிகஞலத்தூக்கி
மதியினைத்தந்தமேகமருங்குநாவளைப்பதென்னப்
பொதியிருளளகபந்திபூட்டியபூட்டுமிட்டார். (ரு)

வெள்ளத்தின்சடிலத்தான்றன்வெஞ்சிலையிறுத்தவீரன்
தள்ளத்தன்ஞவிசோரத்தனிப்பெரும் § பெண்மைதன்னை
அள்ளிக்கொண்டகன்றகாலையல்லன்கொலாங்கலென்பாள்
உள்ளத்திஞசலாடுங்குழைநிழலுமிழவிட்டார். (சு)

○ கோனணிசங்கம்வந்துகுடியிருந்தனையகண்டத்
தீனமில்கலன்கடம்மினியையவனவணிதல்செய்தார்

---

* இந்திரனிருக்கை-அரசனதிருக்கை. இவ்வாறே வடநூலாரும் இந்திரஸ்தானமென்பர். † மாவியனேக்கிஞளென்றது-சனகியை. ‡ சிகழிக் கோதை வேய்தலென்றது-மயிர்முடியிற் பூமாலை முடித்தலை. § பெண்மை என்றது-கட்கினிமையாமமைதித்தன்மை. ○ கோனென்றது அயர்வரு மமரர்கட்கிறையை, இதனைத் 'தேவிற்றிருமா' லென்பதனுனறிக. சங்க மென்றது பாஞ்சசன்னியத்தை.

மானணிநோக்கினார்தம்மங்கலக்கழுத்துக்கெல்லாம்
* தானணியானபோது தனக்கணியாதுமாதோ. (எ)

கோனிலாவானமீன்களியையவனகோத்தவென்கோ
வாணிலாவயங்குசெவ்விவளர்பிறைவகிர்ந்தவென்கொ
நாணிலாநகையினின்றனிர்நிலாத்தவழ்ந்தவென்கோ
பூணிலாமுலைமேலாரமுத்தையான்புகல்வதென்றோ. (அ)

மொய்கொள்சீறடியைச்சேர்ந்தமுளரிக்குஞ்செம்மைமீந்த
தய்யலாளமிழ்தமேனிதயங்கொளிதழுவிக்கொள்ள
வெய்யபூண்முலையிற்சேர்ந்தவெண்மூத்தஞ்சிவந்தவென்றால்
செய்யரைச்சேர்ந்துளாருஞ்செய்யராய்த்திகழ்வரன்றே. (கூ)

† கொமையுறவீங்குகின்றகுலிகச்செப்பனையகொங்கைச்
சுமையுறநுடங்குகின்றநுசுப்பினுள்பூண்செய்தோளுக்
கிமையுறவிமைக்குஞ்செங்கேழினமணிமுத்திறேடும்
அமையுறவமைதுண்டாமாகினைப்பாகுமன்றே. (கo)

தளையவிழ்கோதையோதிச்சானகிதளிர்க்கையென்னும்
முளரிகளிராமன்செங்கைமுறைமையிற்றீண்டநோற்ற
அளியனகங்குற்போதுங்குவியலவாகுமென்றுங்
கிளவெயில்சுற்றியன்னவெரிமணிக்கடகமிட்டார். (கக)

சில்லியலோதிகொங்கைத்திரள்மணிக்கனகச்செப்பில்
வல்லியுமனங்கன்வில்லுமான்மதச்சாந்திற்றீட்டிப்
பல்லியனெறியிற்பார்க்கும் ‡ பரம்பொருளென்னயார்க்கும்
இல்லையுண்டென்னநின்றவிடையினுக்கிடுக்கண்செய்தார். (கஉ)

நிறஞ்செய்கோசிகநுண்டேசுநீவிநீவிர்தவல்குற்
புறஞ்செய்மேகலையுந்தாழத்தாரகைச்சும்மைபூட்டித்
திறஞ்செய்காசின்றசோதிபேதைசேயொளியிற்றீர்ந்த
கறங்குபுதிரியயாருங்கண்விளக்குற்றுநின்றா. (கங)

அய்யவாமணிச்சப்போதினதிகழுநொய்யவாடற்
பய்யரவல்குலாடன்பஞ்சின்றிப்பழுத்தபாதம்
செய்யபூங்கமலனன்னச்சேர்த்தியசிலம்புசால
நொய்யவேநொய்யதன்றேபலபடநுவல்வதம்மா. (கச)

நஞ்சிடையமிழ்தங்கூட்டிநாட்டங்களானவென்னச்
செஞ்சவேகீண்டுமீண்டுசேயரிசிதறித்தீய

* தானென்றது திருமாமகளை. † கொம்மை என்றது-கொமை எனக் குறைந்து நின்றது. ‡ பரம்பொருணிலை இல்லையுண்டென நின்றது போன்றிடையுமன்னதாகலினதனையே யுவமித்தார்.

வஞ்சமுங்களவுமின்றிமழையெனமதர்த்தகண்கள்
அஞ்சனநிறமோவண்ணல்வண்ணமோவறிதறேற்றும். (கரு)

மொய்வளர்குவளைபூத்தமுளரிபின்முளைத்த * மூன்நாள்
மெய்வளர்மதியினுப்பண்மீனுண்டேலனையதேய்ப்ப
வய்யகமடந்தைமார்க்குநாகர்கோதையர்க்கும்வானத்
தெய்வமங்கையர்க்குமெல்லாந்திலகத்தைத்திலகஞ்செய்தார். (கசு)

சின்னப்பூச்செருருமென்பூச்சேகரப்போதுகோதில்
கன்னப்பூக்கஞலமீதுகற்பகக்கொழுந்துமான
மின்னப்பூஞ் † சுரும்பும்வண்டுமிஞிறுந்தும்பிகளும்பம்பும்
புன்னைப்பூந்தாதுதானும்பொற்பொடியப்பிவிட்டார். (கஎ)

நெய்வளர்விளக்கமாட்டிநீரொடுபூவுந்தூவித்
தெய்வமும்பராவிவேதபாரகர்க்கீந்துசெம்பொன்
அய்யவிநுதலிற்சேர்த்தியாய்நிறவயினிசுற்றிக்
கய்வளர்மயிலனையவலஞ்செய்து ‡ காப்புமிட்டார். (கஅ)

கஞ்சத்துக்களிக்குமின்றேன்கவர்ந்துணும்வண்டுபோல
அஞ்சொற்கள்கிள்ளைக்கெல்லாமருளினுளழகைமாந்தித்
தஞ்சொற்கள்குழறித்தத்தந்தகைதடுமாறிநின்றார்
¶ மஞ்சர்க்குமாதரார்க்குமனமென்பதொன்றேயன்றோ. (கக)

இழைகுலாமுலையினுளையிடையுவாமதியினோக்கி
மழைகுலாவோதிநல்லார்களிமயக்குற்றுநின்றார்
உழைகுலாநயனத்தார்மாட்டொன்றென்றேவிரும்பற்கொத்த
தழைகெலாமொருங்கேகண்டால்யாவரேயாற்றவல்லார். (உ0)

○ சங்கங்கையுடைமையாலுந்தாமரைக்கோயிலாலும்
எங்கெங்கும்பரந்துவெவ்வேறுள்ளத்தினெழுதிற்றென்ன
அங்கங்கேதோன்றலாலுமருந்ததியனையகற்பின்
நங்கையுநம்பியொத்தாளுமினிப்புகல்வதென்னோ. (உக)

பரந்தமேகலையுங்கோத்தபாதசாலகமுநாகச்
சிரஞ்செய்நூபுரமும்வண்டுஞ்சிலம்பொடுசிலம்பியார்ப்பப்
புரந்தரன்கோற்கீழாளோரம்பையர்புடைசூழ்ந்தென்ன
வரம்பறுசும்மைத்தீஞ்சொன்மடந்தையர்தொடர்ந்துசூழ்ந்தார். (உஉ)

---

* மூன்நாள் ஈண்டு-மூன்றாம்பிறையை. † கரும்பு முதலியன நால்வகைவண்டென்க. ‡ காப்பு. சூர்முதலிய தாக்காமைபொருட்டு இடுவதோர்பொருட்டு. ¶ மஞ்சரென்றதாடவரை. ○ சங்கு அங்கையுடைமை சங்கமேந்தியிருத்தல். வளையலணிந்திருத்தல்.

சிந்தொடுகுறளுங்கூனுஞ்சிலதியர்குழாமுந்தெற்றி
வந்தடிவணங்கிச்சுற்றமணியணிவிதானநீழல்
இத்துயின்கொழுந்துவிண்மீனினத்தொடும்வருவதென்ன
நந்தலில்விளக்கமன்னநங்கையுநடக்கலுற்றாள். (உங)

வேறு

வல்லியையுயிர்த்தநிலமங்கையிவள்பாதம்
மெல்லியவுறைக்குமெனவஞ்சிவெளியெங்கும்
பல்லவமலர்த்தொகைபரப்பினவெனத்தன்
நல்லணிமணிச்சுடர்தவழ்ந்திடநடந்தாள். (உச)

தொழுந்தகையமென்னடைதொலைந்துகளியன்னம்
எழுந்திடைவிழுந்தயர்வதென்னவயலெங்கும்
கொழுந்துடையசாமரைகுலாவவொர்கலாபம்
வழங்கநிழன்மின்னவருமஞ்ஞையெனவந்தாள். (உரு)

மண்முதலனைத்துலகின்மங்கையருளெல்லாம்
கண்மணியெனத்தகையகன்னியெழில்காண
அண்ணன்மரபிற்சுடராருத்தியொடுதோனவ்
விண்ணிழிவதொப்பதொர்விதானநிழல்வந்தாள். (உசு)

கற்றைவிரிபொற்கடைமயிர்த்துறுகலாபம்
சுற்றுமணிபுக்கவிழைமிக்கிடைவதுவன்றி
விற்றவழவாணிமிரமெய்யணிகண்மின்னச்
சிற்றிடைநுடங்கவொளிர்சீறடிபெயர்த்தாள். (உஎ)

பொன்னினொளிபூவின்வெறிசாந்துபொதிசீதம்
மின்னினிழலன்னவடன்மேனியொளியான
அன்னமு * மரம்பையருமாரமிழ்துநாண
மன்னவையிருந்தமணிமண்டபமடைந்தாள். (உஅ)

சமைத்தவரையின்மைமறைதானுமெனலாமச்
சுமைத்திரண்முலைத்தெரிவைதூய்வடிவுகண்டார்
அமைத்திரள்கொடோளியருமாடவருமெல்லாம்
இமைத்திலருயிர்த்திலர்கள்சித்திரமெனத்தாம். (உகூ)

அன்னவளையல்லளெனவாமெனவயிர்ப்பான்
கன்னியமிழ்தத்தையெதிர்கண்டகடல்வண்ணன்
உன்னுயிர்நிலைப்பதொரருத்தியொடுழைத்தாண்
டின்னமிழ்தெழக்கனிகொளிந்திரனையொத்தான். (ஙு0)

* நடையினன்னமும், அழகினரம்பையரும், சொல்லினமிழ்துமொப் பிராகாமையினாணவென்றார்.

நறத்துறைமுதிர்ச்சியுறுநல்லமிழ்பில்குற்
றறத்தின்விளைவொத்துமுகடுந்தியருகுய்க்கும்
நிறத்துவரிதழ்க்குயினினைப்பினிடையல்லாற்
புறத்துமுளதோவெனமனத்தொடுபுகன்றான். (ரு.க)

எங்கள்செய்தவத்தினிலிராமனெனவந்தோன்
சங்கினொடுசக்கரமுடைத்தனிமுதற்பேர்
அங்கணரசாதலினவ்வல்லிமலர்புல்லும்
மங்கையிவளாமெனவசிட்டன்மகிழ்வுற்றான். (ரு.உ)

துன்றுபுரிகோதையெழில்கண்டுலகுசூழ்வந்
தொன்றுபிரிகோலொடுதனித்திகிரியுய்ப்பான்
என்றுமுலகேழுமரசெய்தியுளனேனும்
இன்றுதிருவெய்தியதிதென்னவயமென்றான். (ரு.ரு)

நய்வளநவிற்றுமொழிநண்ணவரலோடும்
* வய்யநுகர்கொற்றவனுமாதவருமல்லார்
கய்கடலைபுக்கனகருத்துளதுமெல்லாம்
தெய்வமெனவுற்றவுடல்சிந்தைவயமன்றே. (ரு.ச)

மாதவரைமுற்கொளவணங்கிநெடுமன்னன்
பாதமலரைத்தொழுதுகண்கள்பனிசோரும்
தாதையருகிட்டதவிசிற்றனியிருந்தாள்
போதினைவெறுத்தரசர்பொன்மனைபுகுந்தாள். (ரு.ரு)

அச்சனகனைத்தமுதலந்தணனிருந்தான்
பச்சைமலையொத்தபடிவத்தடலிராமன்
நச்சுடைவடிக்கண்மலர்நங்கையிவளென்றால்
இச்சிலைகிடக்கமலையேழையுமிறானோ. (ரு.சு)

எய்யவில்வளைத்துமிறுத்ததுமுரைத்தும்
மெய்விளைவிடத்துமுதலையம்விடலுற்றாள்
அய்யனையகத்துவடிவேயலபுறத்தும்
கய்வளைதிருத்துபுகடைக்கணினுணர்ந்தாள். (ரு.எ)

கருங்கடைநெடுங்கணொளியாறுநிறைகண்ணப்
பெருங்கடலின்மண்டவுயிர்பெற்றினிதுயிர்க்கும்
அருங்கலனணங்கரசியாரமிழ்தனைத்தும்
ஒருங்குடனருந்தினரையொத்துடறடித்தாள். (ரு.அ)

கணங்குழைகருத்தினுறைகள்வனெனலானன்
வணங்குவிலிறுத்தவனெனத்துயர்மறந்தாள்

---

* வையநுகர்கொற்றவனென்ற திராமனை.

அணங்குறு * மவிஞ்சைகெடவிஞ்சையினகம்பா
டுணர்ந்திறை யுற்றபயனுற்றவரையொத்தான். (௩௧)

கொல்லுயர்களிற்றரசர்கோமகனிருந்தான்
கல்விகரையுற்றமுனிகவுசிகனைமேலோய்
வல்விபொருசிற்றிடைமடந்தைமணநாளாம்
எல்லையினலத்தபகலென்றுரைசெய்கென்றான். (௪0)

வாளையுகளக்கயல்கள்வாவுமதின்மேதி
மூளைமுதுகைக்கிழியமூரியவரான்மீன்
பாளைவிரியக்குதிகொள்பண்ணைவளநாடா
நாளையெனவுற்றபகனற்றவனுரைத்தான். (௪௧)

சொற்றபொழுதத்தரசர்கைதொழுதெழுத்தன்
ஒற்றைவயிரச்சுரிகொள்சங்கிஞெலிபொங்கப்
பொற்றடமுடிப்புதுவெயிற்பொழிதரப்போய்
நற்றபனனுச்சிதொடுநன்மனைபுகுந்தான். (௪௨)

அன்னமரிதிற்பிரியவண்ணலுமகன்றப்
பொன்னினெடுமோடவரைபுக்கனன்மணிப்பூண்
மன்னவர்பிரிந்தனர்கண்மாதவர்கள்போனார்
† மின்னுசுடர்நாயகனுமேருவின்மறைந்தான். (௪௩)

உக-வது. கோலங்காண்படல-முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௧௨௪௩.

---

## உஉ-வது: கடிமணப்படலம்.

விவாகத்தைதைக் குறித்துக்கூறும்படலம்.

இடம்படுபுகழ்ச்சனகர்கோனினிதுபேணக்
கடம்படுகளிற்றரசராதியிடைகண்டோர்
தடம்படுபுயத்தசிறுதம்பியர்கள்காறும்
உடம்பொடுதுறக்கநகருற்றவரையொத்தார். (௧)

தேடருநலத்தபுனலாசைதெறலுற்றார்
மாடொர்தடமுற்றதனையெய்துமவகைகாணார்
ஈடழிவுறத்தளர்வொடேமுறுவரன்றே
ஆடகவளைக்குயிலுமங்கிலையளானாள். (௨)

---

* அவிஞ்சையென்ற தவித்தையை, அது பிரவித்துயர்க் கேதுவாக லின் அணங்குறுமென விசேடித்தார் † மின்னுசுடர் நாயகன் ஞாயிறு.

வேறு.

உரவேதுமிலாயிரீதும்மனைக்
கரவேபுரிவாருளரோசதிரோன்
வரவேயெனையாளுடையான்வருமே
இரவேகொடியாய்விடியாயெனுமால். (ரு)

கருநாயிறுபோல்பவர்காலொடுபோய்
வருநாளயலேவருவாய்மனனே
பெருநாளுடனேபிரியாதுழல்வாய்
ஒருநாடரியாதொழிவாருளரோ. (சு)

கனையேழ்கடல்போல் *கருநாழிகைதான்
வினையேன்வினையால்விடியாவிடினீ
தனியேபறவாய்தகவேதுமிலாய்
பனைமேலுறைவாய்பழிபூணுதியோ. (எ)

அயில்வேலனல்கால்வனவாகிழலாய்
வெயிலேயெனநீவிரிவாய்நிழவே
செயிரேதுமிலாருடறேய்வுறவார்
உயிர்கோளுறுவாருளரோவுரையாய். (அ)

மன்றற்குளிர்வாசம்வயங்கனல்வாய்
மின்றொத்துநிலாநகைவீழ்மலயக்
குன்றிற்குலமாமுழையிற்குடிவாழ்
தென்றற்புலியேயிரைதேடுதியோ. (எ)

தெருவேதிரிவாரொருசேவகனார்
இருபோதும்விடாரிதுவென்னைகொலாம்
கருமாமுகில்போல்பவர்கன்னியர்பால்
வருவாருளரோகுலமன்னவரே. (அ)

தெருளாவினைதீயவர்சேரலர்தோள்
அருளாநெறியோடுமேவாவதுவோ
கருளார்கடலோகரைகாணரிதால்
இருளானதுதானெனையூழிகொலாம். (கூ)

பண்ணேமொழியாபகலோபுகுதா
தெண்ணேதவிராவிரவோவிடியா
துண்ணேமொழியாவுயிரோவகலா
கண்ணேதுயிலாவிதுவோகடனே. (க0)

* கருநாழிகை-இரவு.

இடையேவளைசோரவெழுந்துவிழுந்
தடலேய்மதனன்சரமஞ்சினையோ
உடலோய்வுறநாளுமுறங்கலையால்
கடலேயுரைநீயுமொர்கன்னிகொலாம். (கக)

எனவின்னனபன்னியிருந்துளைவாள்
துனியுன்னிநலங்கொடுசோர்வுறுகால்
மனைதன்னின்வயங்குறும்வைகிருள்வாய்
அனகன்னினைகின்றனயாமறைவாம். (கஉ)

* முன்கண்டுமுடிப்பருவேட்கையினால்
என்கண்டுணைகொண்டிதயத்தெழுதிப்
பின்கண்குமொர்பெண்கரைகண்டிலெனால்
மின்கண்டவரெங்கறிவார்வினையே. (கங)

திருவேயனையாண்முகமேதெரியின்
கருவேகனியேவிளைகாமவிதைக்
கொருவேமதியேயிதுவென்செய்தவா
ஒருவேனொடுநீயுறவாகலையோ. (கச)

கழியாவுயிருந்தியசாரிகைதன்
விழிபோலவளர்ந்துவீகிலதால்
அழிபோரிறைவன்படவஞ்சியவன்
பழிபோலவளர்ந்ததுபாயிருளே. (க௫)

சினையாயொருகானெடிதோநெறிதான்
வினவாதவர்பால்விடைகொண்டிலையோ
புனமானனையாரொடுபோயினவென்
மனனேயெனைநீயுமறந்தனையோ. (கசு)

தன்னோக்கெரிகாறகைவாளரவின்
பன்னோக்கினதென்பதுபண்டுகொலாம்
என்னோக்கினுநெஞ்சினுமென்றுமுளார்
மென்னோக்கினதேகடுவெல்விடமே. (கஎ)

கல்லார்மலர்சூழ்கழிவார்பொழிலோ
டெல்லாமுளவாயினுமென்மனமோ

---

* முன்கண்டென்றது - கன்னிமாடத்துக்காண்டமலை, என்கண்டுணை கொண்டென்றது என்கண்ணாகிய ஓவியக்கோல் கொண்டென்றதை. இதயத்தெழுதி என்றது உள்ளமாகிய எட்டிலெழுதி என்றதை. வினை என்றது-காண்டற்றொழிலை, பின்கண்டென்ற தரசவையிற் கண்டதை. மின்கண்டவரெங்கறிவார் வினையென்றார். மின்னலைக்கண்டார் வேறுபொருளைக் காணாதவாறுபோற்சனகியைக்கண்டதான்வேறொருபொருளைக் கண்டிலரென்பதனாலென்க.

சொல்லாரமுதின்சுவையோடினிதாம்
எல்லோதியர்தாம்விளையாடிடமே. (௧௮)

வேறு

* வானவர்பெருமானும்மனநினைவினனாகத்
தேனகுகுழலாடன்றிருமணவினைநாளை
பூநகுமணிவாசம்புனைநகரணிவீரென்
றானையின்மிசையாணரணிமுரசறைகென்றான். (௧௯)

முரசறைதலுமானமுதியருமிளையோரும்
விரைசெறிகுழலாரும்விரவினர்விரைகின்றார்
உரைசெறிகிளையோடுமுவகையினுயர்கின்றார்
கரைசெறிவரிதாகுமிரவொருகரைகண்டார். (௨௦)

அஞ்சனவொளியானுமலர்மிசையுறைவாளும்
எஞ்சலின்மணநாளைப்புணர்குவரெனவோடும்
செஞ்சுடரிருள்கீறித்தினகரனொருதேர்மேல்
மஞ்சனையணிகோலங்காணியவெனவந்தான். (௨௧)

தோரணநடுவாருந்தூணுறைபொதிவாரும்
பூரணகுடமெங்கும்புனைதுகில்புனைவாரும்
காரணிநெடுமாடங்கதிர்மணியணிவாரும்
ஆரணமறைவாணர்க்கமுதினிதடுவாரும். (௨௨)

அன்னமென்னடையாரும்மழவிடையனையாரும்
கன்னிநன்னகர்வாழைகமுகொடுநடுவாரும்
பன்னருநிரைமுத்தம்பரியனதெரிவாரும்
பொன்னணியணிவாரும்மணியணிபுனைவாரும். (௨௩)

சந்தனமகிலுறுஞ்சாந்தொடுதெருவெங்குஞ்
சிந்தினர்திரிவாருஞ்செழுமலர்சொரிவாரும்
இந்திரதனுநாணுமெரிமணிநிரைமாடத்
தந்தமில்விலையாரக்கோவைகளணிவாரும். (௨௪)

தளங்கிளர்மணிகாலத்தவழ்சுடரிமிழ்தீபம்
இளங்குளிர்முளையார்நற்பாலிகையினமெங்கும்
விளிம்புபொன்விரைநாறவெயிலொடுநிலவீனும்
பளிங்குடையுயர்திண்ணைப்பத்தியின்வைப்பாரும் (௨௫)

மந்தரமணிமாடமுன்றிலின்வயினெங்கும்
அந்தமிலொளிர்முத்தினகனிரையொளிவீச

* வானவர்பெருமானென்ற தயர்வருமமரர்கட்கிறையை,

இந்திரனெடுவானம்மீனலர்குவதென்னப்
பந்தரினிழல்வீசப்படர்வெயில்கடிவாரும். (௨௬)

வயிரமிஞெளியீனும்மரகதமணிவேதிச்
செயிரறுமொழிதீபஞ்சிலதியர்கொணர்வாரும்
வெயில்விரவியபொன்னின்மிடைகொடிமதிதோயும்
எயிலினினமேறுமகிலெரியிடுவாரும். (௨௭)

பண்டியினிறைவாசப்பனிமலர்கொணர்வாரும்
தண்டலையிலையோடுகனிபலதருவாரும்
குண்டலம்வெயில்வீசக்குரவைகள்புரிவாரும்
உண்டைகொண்மதவேழத்தொடைகளணிவாரும் (௨௮)

கலவைகள்புனைவாருங்கலைநலதெரிவாரும்
மலர்குழன்மலைவாரும்மதிமுகமணியாடித்
திலகமுனிடுவாருஞ்சிகழிகையணிவாரும்
இலவிதழ்பொலிகோலமெழில்பெறவிடுவாரும் (௨௯)

தப்பினமணிகாசுஞ்சங்கமுமயிலன்னார்
ஒப்பனைபுரிபோதுமூடலினுகுபோதும்
துப்புறழிளவாகச்சுண்ணமுமுதிர்தாதும்
குப்பைகளெனவாரிக்கொண்டனர்களைவாரும். (௩0)

மன்னவர்வருவாரும்மறையவர்நிறைவாரும்
இன்னிசைமணியாழினிசைமதுநுகர்வாரும்
சென்னியர்திரிவாருஞ்சிலதியர்செறிவாரும்
கன்னலின்மணவேலைக்கடிகைகடெரிவாரும். (௩௧)

கணிகையர்தொகுவாருங்கலைபலபயில்வாரும்
பணியணியினமுத்தம்பலவிதரிலமன்னர்
அணிநெடுமுடியொன்றொன்றறைதலினுகுமம்பொன்
மணிமலைதொகுமன்னன்வாயிலின்மிடைவாரும். (௩௨)

கேடகம்வெயில்வீசக்கிளரயினிலவீனக்
கோடுயர்நெடுவிஞ்சைக்குஞ்சரமதுபோல
ஆடவர்திரிவாருமரிவையர்களிகூரு
நாடகவில்வாருநகையுயிர்கவர்வாரும். (௩௩)

கதிர்மணியொளிகாலக்கவர்பொருடெரியாவா
றெதிற்சுடர்தரமின்னுற்றெழுதலினிமையோரும்
மதுவிரிகுழலாரும்மதிலுடைநெடுவானம்
அதுவிதுவெனவோராதலமரலுறுவாரும். (௩௪)

தேர்மிசைவருவாருஞ்சிவிகையில்வருவாரும்
ஊர்தியில்வருவாருமொளிமணிநிரையோடைக்
கார்மிசைவருவாருங்கரிணியில்வருவாரும்
பார்மிசைவருவாரும்பண்டியில்வருவாரும். (ந௫)

முத்தணியணிவாரும்மணியணிமுனிவாரும்
பத்தியினிமிர்செம்பொற்பலகலன்மகிழ்வாருந்
தொத்துறுதொழின்மாலைசுரிகுழலணிவாருஞ்
சித்திரநிரைதோயுஞ்செந்துகில்புனைவாரும். (ந௬)

விடநிகர்விழியாருமமுதெனுமொழியாருங்
கிடைபுரையிதழாருங்கிளர்நகைவெளியாருந்
தடமுலைபெரியாருந்தனியிடைசிறியாரும்
பெடையனநடையாரும்பிடியெனவருவாரும். (௩எ)

உண்ணிறைநிமிர்செல்வமொருதுறைசெலவென்றுங்
கண்ணுறலரிதென்றுங்கருதுதலரிதம்மா
எண்ணுறுசுடர்வானத்திந்திரன்முடிசூடும்
மண்ணுறுதிருநாளேயொத்ததமணநாளே. (௩அ)

வேறு.

கரைதெரிவரியதுகனகம்வேய்ந்தது
வரையெனவுயர்ந்ததுமணியிற்செய்தது
நிரைவளைமணவினைநிரப்புமண்டபம்
அரைசர்தமரசனுமணுகன்மேயினான். (ந௯)

வெண்குடையிளநிலாவிர்க்கமின்னெனக்
கண்குடையினமணிமெயிலுங்கான்றிடப்
பண்குடைவண்டினம்பாடவாடன்மா
மண்குடைதுளிவிண்மறைப்பவேகினான். (௪0)

மங்கலமுரசினமழையினார்த்தன
சங்குகண்முரன்றனதாரைபோரெனப்
பொங்கினமறையவர்புகலுநான்மறை
கங்குலிலொலிக்குமாகடலும்போன்றவே. (௪௧

பரந்ததேர்களிறுபாய்புரவிபண்ணையில்
தரந்தரநடந்தனதானைவேந்தனை
நிரந்தரந்தொழுதெழுநேமிமன்னவர்
புரந்தரன்புடைவருமமரர்போன்றனர் (௪௨)

அனையவன்மண்டபமணுகியம்பொனின்
புனைமணியாதனம்பொலியத்தோன்றினான்

முனிவரு மன்னரு முறையி னேறினார்
சனகனுந் தன்கிளை தழுவ வேறினான். (சுங)

மன்னரு முனிவரும் வானு ளோர்களும்
அன்னமென் னடையணங் கனைய மாதரும்
துன்னினர் துவன்றினர் சுடர்கள் சூழ்வரும்
பொன்மலை யொத்ததப் பொருவில் கூடமே. (சுச)

புயலுள மின்னுள பொருவின் மீனுள
இயன்மணி யினமுள சுடரி ரண்டுள
மயன்முதற் றிருத்திய மணிசெய் மண்டபம்
அயன்முதற் றிருத்திய வண்ட மொத்ததே. (சுரு)

எண்டவ முனிவரு மிறைவர் யாவரும்
அண்டரும் பிறரும்புக் கடங்கிற் றாதலால்
மண்டபம் வையமும் வானும் வாய்மடுத்
துண்டவன் மணியணி யுதர மொத்ததே. (சுசு)

தராதல முதலுல கனைத்துந் தள்ளுற
விராவின குவிந்தன விளம்ப வேண்டுமோ
அராவணை துறந்துபோந் தயோத்தி யெய்திய
இராகவன் செய்கையை யியம்பு வாமரோ. (சுஎ)

சங்கினந் தவழ்கட லேழி றந்தன
சிங்கலி லருமறை தெரிந்த தீர்த்தங்கள்
கங்கையே முதலிய கலந்த நீரினால்
மங்கல மஞ்சன மரபி னாடியே. (சுஅ)

என்றுநான் முகன்முதல் யாரும் யாவையும்
நின்றபே ரிருளினை நீக்கி நீணெறி
சென்றுமீ ளாக்குறி சேரச் சேர்த்திடு
* தன்றிரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே. (சுகூ)

கோதறு தவத்துத் † தங்குலத் துளோர்தொழும்
ஆதியஞ் சோதியை யடிவ ணங்கினான்
காதியல் கயல்விழிக் கன்னி மார்களை
வேதியர்க் கருமறை விதியி னல்கிய (எo)

---

* தன்றிருநாமத்தைத் தானுஞ்சாத்தியென்றது - தன்றிருநாமத்தைத் தானுங்கூறிப் புண்டரமிட்டென்பதை.

† தங்குலத்துளோர்தொழும் ஆதியஞ்சோதி என்றது - ஆயிரமோலியரும்பரஞ்சுடரை,

அழியாவருதவத்தினோடறத்தையாக்குவான்
ஒழிவருங்கருணையோருருவுகொண்டென
எழுதருவடிவுகொண்டிருண்டமேகத்தைத்
தழுவியநிலவெனக்கலவைசாத்தியே. (ருக)

மங்கலமுழுநிலாமலர்ந்ததிங்களைப்
பொங்கிருங்கருங்கடல்பூத்ததாமெனச்
செங்கிடைச்சிகழிகைச்செம்பொன்மாலையும்
தொங்கலுந்துயல்வரச்சுழியஞ்சூடியே. (ருஉ)

ஏதமிலிருகுழையிரவுநன்பகல்
காதல்கண்டுணர்ந்தனகதிருந்திங்களும்
சீதைதன்கருத்தினைச்செவியினுள்ளுறத்
தூதுசென்றுரைப்பனபோன்றதோன்றவே. (ருங)

கார்விடக்கறையுடைக்கணிச்சிவானவன்
வார்சடைப்புடையினோர்மதிமிலைற்சித்தான்
சூர்சுடர்க்குலமெலாஞ்சூடினானென
வீரபட்டத்தொடுதிலகமின்னவே. (ருச)

சக்கரத்தயல்வருஞ்சங்கமாமென
மிக்கணிகழுத்தணிதரளவெண்கொடி
மொய்க்குமென்குழலினாண்முறவலுள்ளுறப்
புக்கனநிறைத்துமெய்பொடித்தபோன்றவே. (ருரு)

பந்திசெய்வயிரங்கள்பொறியிற்பாடுற
அந்தமில்சுடர்மணியழலிற்றோன்றலால்
சுந்தரத்தோளணிவலயர்தொல்லைநாள்
மந்தரஞ்சுற்றியவரவைமானுமே. (ருசு)

கோவையின்பெருவடமுத்தங்கோத்தன
காவல்செய்தடக்கையினடுவட்காந்துவ
மூவகையுலகிற்குமுதல்வனாமென
ஏவரும்பெருங்குறியிட்டபோன்றவே. (ருஎ)

மாண்டபொன்மணியணிவலயம்வந்தெதிர்
வேண்டினர்க்குதவுவான்விரும்பிக்கற்பகம்
ஈண்டுதன்கொம்பிடையீன்றதாமெனக்
காண்டகுதடக்கையிற்கடகமின்னவே. (ருஅ)

தேனுடமலர்மகடிளைக்குமார்பினில்
தானிடைவிளங்கியதகையினாரந்தான்

மீனொடுசுடர்விடவிளங்குமேகத்து
வானிடுவில்லெனவயங்கிக்காட்டவே. (ருகூ)

நணுகவுநிமிரவுநடக்குஞானத்தர்
உணர்வினிலொளிதிகழுத்தரீயந்தான்
தணிவருங்கருணைதன்கழுத்திற்சாத்திய
மணியுமிழ்கதிரெனமார்பிற்றோன்றவே. (சுo)

மேவருஞ்சுடரெனவிளங்குமார்பினால்
ஏவருந்தெரிந்தினிதுணர்மினீண்டெனத்
தேவருமுனிவருந்தெரிக்கலா * முதன்
மூவருந்தானெனமுடிந்ததொத்ததே. (சுக)

சுற்றுநீடணிமணிச்சோதிபொங்கமேல்
ஒற்றைமாமணியுமிழுதரபந்தனம்
மற்றுமோரண்டமுமயனும்வந்தெழப்
பொற்றடந்தாமரைபூத்தபோன்றதே. (சுஉ)

மண்ணுறுசுடர்மணிவயங்கித்தோன்றிய
கண்ணுறுகருங்கடலதனைக்கைவளர்
தண்ணிறப்பாற்கடறழீஇயதாமென
வெண்ணிறப்பட்டொளிவிளங்கச்சாத்தியே. (சுரு)

சலம்வருதரளமுந்தயங்குநீலமும்
அலம்வருநிழலுமிழம்பொற்கச்சினால்
குலம்வருகனகவான்குன்றைநின்றுடன்
வலம்வருகதிரெனவாளும்வீக்கியே. (சுச)

முகைவிரிசுடரொளிமுத்தின்பத்திவான்
தொகைவரிபட்டிகைச்சுடருஞ்சுற்றிடத்
தகையுடைவாளெனுந்தயங்குவெய்யவன்
நகையிளவெயிலெனத்தொங்கனாற்றியே. (சுரு)

காசொடுகண்ணிழல்கஞலக்கைவினை
ஏசறுகிம்புரியெயிறுவெண்ணிலா
வீசலின்மகரவாய்விளங்குமின்னென
ஆசையையொளிகளாலளந்துகாட்டவே. (சுசு)

இனிப்பரந்துலகினையளப்பதெங்கெனத்
தனித்தனித்தடிப்பனபோலுஞ்சால்பின
நுனிப்பருநுண்வினைச்சிலம்புநோன்கழல்
பனிப்பருந்தாமரைப்பாதம்பற்றவே. (சுஎ)

* முதன்மூவரென்றது-மும்மைப்பெருந்தேவரை.

இன்னணமொளிர்தர்விமையவர்க்கெலாம்
தன்னேயேயனையதோர்கோலந்தாங்கினன்
பன்னகமணிவிளக்கழலும்பாயலுள்
அன்னவர்தவத்திறைலனந்தனீங்கினன். (௬௮)

* முப்பரம்பொருளிற்குண்முதலைமூலத்தை
இப்பரந்துடைத்தவரெய்துமின்பத்தை
அப்பனையப்பினுளமிர்தந்தன்னையே
ஒப்பனையொப்பனையுரைக்கவொண்ணுமோ. (௬௯)

பல்பதினுயிரம்பசுவும்பைம்பொனும்
எல்லையினிலனெடுமணிகள்யாவையும்
நல்லவர்க்குதவினனவினிலுநான்மறைச்
செல்வர்கள்வழுத்துறத்தேர்வந்தேறினன். (௭௦)

பொற்றிரளச்சதுவெள்ளிச்சில்லிபுக்
குற்றதுவயிரத்தினுற்றதட்டது
சுற்றுறுநவமணிசுடருந்தோற்றத்த
தொற்றையாழிக்கதிர்த்தேரொடொத்ததே. (௭௧)

நூல்வருந்தன்மையைநுனிக்குநோன்மைய
சால்பெருஞ்செவ்விய † தருமமாதிய
நாலையுமனையனபுரவிநான்கொரு
பாலமையுணர்ந்தவன்பக்கம்பூண்டவே. (௭௨)

அனையதோர்தேரினிலருணனின்றெனப்
பனிவருமலர்க்கணப்பரதன்கோள்கொளக்
குனிசிலைத்தம்பிபின்கூடவேனையன்
இனியபொற்கவரிகாலியக்கவேகினன். (௭௩)

அமைவருமேனியானழகினையதோ
கமையுறுமனத்தினற்கருதவந்ததோ
சமைவுறவறிந்திலந்தக்கதாகுக
‡ இமையவராயினரிங்குளாருமே. (௭௪)

---

* முப்பரம் பொருளென்றது சங்கருஷணன், பிரத்தியும்னன், அநிருத்தனென்பாரை. முதலையென்றது பாற்கடற்பரமனை. மூலத்தையென்றது வாசுதேவனை. இப்பரந்துடைத்தவரெய்து மின்பத்தையென்றது பரமபதநாதனை. அப்பனையென்றது திருவேங்கடமுடையானை. அப்பினுளமிர்தமென்றது ஆவிக்காவியாய்நின்றபரஞ்சுடரை. அதிமானுடசேட்டிதத்தையுணர்த்தத் தன்னையே யொப்பனையென்று மிவ்வாரிச்சமயத்தவர்கூறும் பரத்துவம், வியூகம், விபவம், அந்தரியாமி, அர்ச்சாவதாரமறி வித்தமைகாண்க.

† தருமமாதிய நாலையும்-அறம், பொருள், இன்பம், வீடு.

‡ கண்ணிமைத்தலின்றி நோக்கலின் இமையவராயினரிங்குளாருமென்றார்.

வரம்பறுமூலகினைவலிந்துமாய்வின்றித்
திரம்பயிலரக்கர்தம்வருக்கந்தேய்வின்று
நிரம்பியதெனக்கொடுநிறைந்ததேவரும்
அரம்பையர்குழாத்தொடுமொடன்மேயினர். (எ௫)

சொரிந்தினர்பூமழைசுண்ணந்தூவினர்
விரிந்தொளிர்காசுபொன்றூசுவீசினர்
பரிந்தனரகிழனைப்பருகினர்கொலாம்
தெரிந்ததிலந்திருநகர்மகளிர்செய்கையே. (எ௬)

* வள்ளலைநோக்கியமகளிர்மேனியின்
எள்ளரும்பூணெலாமிரியநிற்கின்றார்
உள்ளனயாவையுமுதவிப்பூண்டவும்
கொள்ளையிற்கொள்கெனக்கொடுக்கின்றாரினே. (எஎ)

வேறு

எஞ்சலிலுலகத்துள்ளவெறிபடையரசவெள்ளம்
குஞ்சரக்குழாத்திற்சுற்றக்கொற்றவனிருந்தகூடம்
வெஞ்சினத்தனுவலானுமேருமால்வரையிற்சேரும்
செஞ்சுடர்க்கடவுளென்னத்தேரிடைச்சென்றுசேர்ந்தான். (எஅ)

இரதமாண்டிழிந்தபின்னரிருமருங்கிரண்டுகையும்
பரதனுமிளையகோவும்பரிந்தனரேந்தப்பைந்தார்
வரதனுமெய்திமைதீர்மாதவர்த்தொழுதுநீதி
விரதமெய்த்தாதைபாதம்வணங்கிமாடிருந்தவேலை. (எகூ)

சிலையுடைக்கயல்வாட்டிங்களேந்தியோர்செம்பொற்கொம்பர்
முலையிடைமுகிழ்ப்பத்தேர்மேன்முன்றிசைமுளைத்ததன்றள்
அலைகடற்பிறந்துபின்னையவனியிற்றோன்றிமீள
மலையிடையுதிக்கின்றாள்போன்மண்டபமதனில்வந்தாள். (அ0)

வேறு

நன்றிவானவரெலாமிருந்தநம்பியைத்
துன்றிருங்கருங்கடறுவைப்பத்தோன்றிய
மன்றலங்கோதையாண்மாலைசூட்டிய
அன்றினுமின்றுடைத்தழகென்றாரரோ. (அக)

ஒலிகடலுலகினிலும்பர்நகரில்
பொலிவதுமற்றிவள்பொற்பென்றாலிவள்
மலிதருமணம்படுதிருவைவாயினால்
மெலிதருமுணர்வினேன்விளம்புகேன்ரோ. (அ௨)

---

* தன்திருநாமத்தை ஒருகாற்கூறியமாத்திரையின், அன்னோர்க்குவீடு பேறு முதலியவற்றை எண்ணியாங்குவரையாது பயத்தலின் வள்ளலென்றார்.

இந்திரன்சசியொடுமெய்தினனிளஞ்
சந்திரமௌலியுந்தையலாளொடும்
வந்தனன்மலரயன்வாக்கினளுடன்
அந்தரம்புகுந்தனனழகுகாணவே. (௮௩)

நீத்தருங்கடலெனநிறைந்தவேதியர்
தோய்ந்தநூன்மார்பினர்சுற்றத்தொன்னெறி
வாய்ந்தநல்வேள்விக்குவசிட்டன்மையற
ஏய்ந்த * நற்றருப்பையோடிளிதினெய்தினன்.. (௮௪)

தண்டுலம்விரித்துநற்றருப்பைசாத்தியே
மண்டலம்விதிமுறைவகுத்துமென்மலர்
கொண்டவைசொரிந்தெரிகுழுமமூட்டினன்
பண்டுளமறைநெறிபரவிச்செய்தனன். (௮௫)

வேறு.

மன்றலின்வந்துமணத்தவிசேறி
வென்றிநெடுத்தகைவீரனுமார்வத்
தின்றுணையன்னமுமெய்தியிருந்தார்
ஒன்றியபோகமும்யோகமுமொத்தார். (௮௬

கோமகன்முன்சனகன்குளிர்நன்னீர்
பூமகளும்பொருளுமெனநீயென்
மாமகடன்னொடுமென்னுதியென்னாத்
தாமரையன்னதடக்கைனீந்தான். (௮௭)

அந்தணராசியருங்கலமன்னர்
தந்தபல்லாண்டிசைதார்முடிமன்னர்
வந்தனைவானவர்வாழ்த்தொலிபோல
முந்திசயங்கமுழ்ங்கினமாதோ. (௮௮)

வானவர்பூமழைமன்னவர்பொற்பூ
ஏனையர்தூவுமிலங்கொளிமுத்தம்
தானகுநாண்மதரென்றிவைதம்மால்
மீனகுவானின்விளங்கியதிப்பார். (௮௯)

வெய்யகனற்றலைவீரனுமந்நாள்
மய்யறுமந்திரமுற்றும்வழங்கா
நெய்யமையாகுதியாவையுநேர்ந்தான்
தய்யறளிர்க்கை † தடக்கைபிடித்தான். (௯௦)

---

* நற்றருப்பை-நுனித்தருப்பை.

† தடக்கைபிடித்தான்-பாணிக்கிரகணம்செய்தான்.

இடம்படுதோளவனோடியைவேள்வி
தொடங்கியவெங்கனல்சூழ்வருபோதின்
மடம்படுசிந்தையண்மாறுபிறப்பின்
உடம்புயிரைத்தொடர்கின்றதையொத்தாள். (௧௧)

வலங்கொடுதீயைவணங்கினர்வந்து
பொலம்பொரிசெய்வனசெய்பொருண்முற்றி
இலங்கொளி * யம்மிமிதித்தெதிர்நின்ற
கலங்கலில்கற்பினருந்ததிகண்டார். (௧௨)

மற்றுளசெய்வனசெய்துமகிழ்ந்தார்
முற்றறியமாதவர்தாண்முறைசூடிக்
கொற்றவனைக்கழல்கும்பிடலோடும்
பொற்றொடிகைக்கொடுநன்மனைபுக்கான். (௧௩)

ஆர்த்தனபேரிகளார்த்தனசங்கம்
ஆர்த்தனநான்மறையார்த்தனர்வானோர்
ஆர்த்தனபல்கலையார்த்தனபல்லாண்
டார்த்தனவண்டினமார்த்தனவேலை. (௧௪)

கேகயன்மாமகள்கேழ்கிளர்பாதம்
தாயினுமன்பொடுதாழ்ந்துவணங்கா
ஆயதனன்னையடித்துணைசூடித்
தூயசுமித்திரைதாடொழலோடும். (௧௫)

அன்னமுமன்னவரம்பொன்மலர்த்தாள்
சென்னிபுனைந்தனள்சிந்தையுவந்தார்
கன்னியருந்ததிகாரிகைகாண
நன்மகனுக்கிவணல்லணியென்றார். (௧௬)

சங்கவளைக்குயிலைத் † தழிநின்றார்
அங்கணனுக்குரியாருளராவார்
பெண்களினிப்பிறரெங்குளரென்றார்
கண்கள்களிப்பமனங்கள்களிப்பார். (௧௭)

எண்ணிலகோடிபொன்னெல்லையில்கோடி
வண்ணவருங்கலமங்கையர்வெள்ளம்
கண்ணகனாடொடுகாசயர்தூசும்
பெண்ணினணங்கனையாள்பெறுகென்றார். (௧௮)

---

* அம்மிமிதித்தலைச் சத்தபதி என்பவர் வடநூலார்.

† தழீஇஎன்றது தழியெனக்குறுக்கும் வழிகுறுக்கல்பெற்றது.

இனையயாவையுமேந்திழைக்கியம்பினன்காட்டி
அனையமால்வரையருந்தவரெதிர்வரவணங்கி
வினையினீங்கியவேதியர்விருந்தினனானான்
* மனையின்மெய்யெனுமாதவம்புரிந்தவன்மைந்தன். (நகூ)

வேறு.

மாவியலுதயமாந் - துளபவானவன்
மேவியபகையிருளவுணர்வீந்துகக்
காவியல்குடவரைக்காலநேமிமேல்
ஏவியதிகிரிபோலிரவியேகினான். (சO)

சக்கரந் ‡ தானவனுடலிற்றூக்குற
எக்கியசோரியிற்பரந்ததெங்கணும்
செக்கரத்தியவன்வாயிற்றீர்ந்துவே.
றுக்கவான்றனியெயிறொத்ததிந்துவே. (சக)

ஆனனமகளிருக்களித்ததாமரைப்
பூநனிமுகிழ்த்தனபுலரிபோனபின்
மீனெனவிளங்கியவெள்ளியாம்பல்வீ
வானெனமணித்தடமலர்ந்தவெங்குமே (சஉ)

மந்தியுங்கடுவனுமரங்களேறக்கின
தந்தியும்பிடிகளுந்தடங்களேறக்கின
நிந்தையில்சகுந்தங்கணீளநோக்கின
அந்தியைநோக்கினானந்தியைநோக்கினான், (சந)

மொய்யுறுநறிமலர்முகிழ்த்தவாஞ்சில
மய்யறுநறுமலர்மலர்ந்தவாஞ்சில
அய்யனோடிளவற்குமயிழ்தனளுக்கும்
O கய்களுங்கண்களுங்கமலப்போன்றவே. (சச)

மாலைவந்தகன்றபின் ¶ மருங்கிலாளொடும்
வேலைவந்துறைவிடமேயதாமெனக்
கோலைவந்துமிழ்சிலைத்தம்பிகோலிய
சாலைவந்தெய்தினான்றவத்தினெய்தினான். (சரு)

நெடுங்கழைக்குறுந்துணிசிறுவிமேனிரைத்
தொடுங்கலினெடுமுகடொழுக்கியூழுற

* புகழுடம்பு நிறீஇப் பூதவுடம்பை நீத்தமையான் மனையின் மெய்யெனு மாதவம் என்றார். † துளபவானவன்-திருமால். ‡ தானவன்-காலநேமி. O மாலைக்கடன்முடிப்பக் கண்முகிழ்த்துத் தியானித்தலின் கைகளும் கண்களுங் கமலம்போன்றவென்றார். ¶ மருங்கிலாள்-சனகியை, தவத்தானல்லது வேறொன்றானெய்தப்படுபவனன்மையின் தவத்தினெய்தினானென்றார்.

இடங்கலில்லைவிசித்தேற்றியெங்கணும்
முடங்கவில்வரிச்சுமேல்விரிச்சுமூட்டியே (சசு)

தேக்கடைப்படலையிற்செறிவுசெய்துபின்
பூக்கிளர்நாணலின்புல்லுவேய்ந்துகீழ்
தூக்கியவேய்களிற்சுவருஞ்சுற்றுறப்
போக்கிமண்ணெறிந்தவைபுனலிற்றீற்றியே. (சஎ)

வேறிடமியற்றினன் *மிதிலைநாடிக்கும்
கூறினநெறிமுறைகுயிற்றிக்குங்குமச்
சேறுகொண்டழகுறத்திருத்தித்திண்சுவர்
ஆறிடமெணியொடுங்கனகமப்பியே. (சஅ)

மயிலுடைப்பீலியின்விதானமேல்வகுத்
தயிலுடைச்சுரிகையாலருகுறாக்கறுத்
தெயிலிளங்கழைகளாலியற்றியாறிடு
செயலுடைப்புதுமலர்பொற்பச்சிந்தியே. (சக)

இன்னணமிளையவனிழைத்தசாலையிற்
பொன்னிறத்திருவொடுங்குடிபுக்கானரோ
நன்னெடுந்திசைமுகனகத்துநம்மனோர்க்
குன்னருமுயிருளுமொக்கவைகுவான் (ருo)

வேறு.

மாயநீங்கியசிந்தனைமாமறை
தூயபாற்கடல்வைகுந்தஞ்சொல்லலாம்
ஆய † சாலையரும்பெறலன்பினன்.
நேயநெஞ்சின்விரும்பிநிரப்பினன். (ருக)

மேவுகானமிதிலையர்கோன்மகள்
பூவின்மெல்லியபாதமும்போந்தன
தாவிலெம்பிகைசாலசமைத்தன
யாவையாதுமிலார்க்கியையாதவே. (ருஉ)

என்றுசிந்தித்திளையவற்பார்த்திரு
குன்றுபோலக்குவவியதோளினாய்
என்றுகற்றனைநீயிதுபோலென்றான்
துன்றுதாமரைக்கண்பனிசோர்கின்றான். (ருங)

அடருஞ்செல்வமளித்தவனாணையாற்
படருநல்லறம்பாலித்திரவியிற்

---

* மிதிலைநாடி-சனகி. † சாலையைமாயைநீங்கிய சிந்தனையோடும்மாமறையோடும் பாற்கடலோடும் வைகுந்தத்தோடு மூவாமைகூறினர்.

சுடருமெய்ப்புகழ்சூடினனெனபதென்
இடருனக்கிழைத்தேனெடுநாளென்றான். (ருச)

அந்தவாய்மொழியையனியம்பலும்
நொந்திசிந்தையிளையவனேக்கினல்
எந்தைகாண்டியிடரினுக்கங்குரம்
முந்திவந்துமுளைத்தன்றேவென்றான். (ருரு)

ஆகசெய்தக்கதில்லையறத்தினின்
றேகலென்பதரிதென்றுமெண்ணினன்
ஓகைகொண்டவனுள்ளிடர்நோக்கினன்
சோகபங்கந்துடைப்பரிதாலெனா. (ருசு)

பின்னுந்தம்பியைநோக்கிப்பெரியவன்
மன்னுஞ்செல்வத்திற்குண்டுவரம்பிதற்
கென்னகேடுண் * டிவ்வெல்லையிலின்பத்தை
உன்னுமேல்வருமூதியத்தோடென்றான். (ருஎ)

தேற்றித்தம்பியைத்தேவருங்கைதொழ
நோற்றிருந்தனனேன்சிலையோனிப்பால்
ஆற்றன்மாதவனுணேயிற்போனவர்
கூற்றினுற்றதுகூறலுற்றாமரோ. (ருஅ)

அ-வது சித்திரகூடப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எகசு.

---

## கூ-வது. பள்ளியடைப்படலம்.



பொருவிறாதுவர்போயினர்பொய்யிலார்
இரவுநன்பகலுங்கடிதேகினர்
பரதன்கோயிலுற்றார் † படிகாரிரெம்
வரவுசொல்லுதிர்மன்னவற்கேயென்றார். (க)

தூதர்வந்தனருந்தைசொல்லோடெனக்
காதன்முந்திக்களிக்கின்றசிந்தையான்
போதுகென்னெனப்புக்கவர்கைதொழத்
தீதிலன்கொ ‡ திருமுடியோனென்றான். (உ)

---

இவ்வெல்லையிலின்பம்-துறவறவொழுக்கினை. † படிகாரிர்-காவலாளர்
‡ திருமுடியோன்-தயரதன்.

வலியனென்றவர்கூறமகிழ்ந்தனன்
இலைகொள்பூணிளங்கோனெம்பிரானெனும்
உலைவில்செல்வத்தனோவெனவுண்டெனத்
தலையினேந்தினன்றாழ்தடக்கைகளே. (௩)

மற்றுஞ்சுற்றத்துளார்க்கும்வரன்முறை
உற்றதன்மைவினாவியுவந்தபின்
இற்றதாகுமெழுதருமேனியாய்
கொற்றவன்றன் * திருமுகங்கொள்கென்றார். (௪)

என்றுகூறலுமேத்தியிறைஞ்சினான்
பொன்றிணிந்தபொருவிறடக்கையால்
நின்று வாங்கியுருகியநெஞ்சினான்
துன்றுநாண்மலர்ச்சென்னியிற்சூடினான். (௫)

சூடிச்சந்தனந்தோய்த்துடைசுற்றுமண்
மூடுதோட்டின்முடங்கனிமிர்த்ததன்
ஏடுநோக்கிவந்தெய்தியதூதர்க்குக்
கோடிமேலுநிதியங்கொடுத்தனன். (௬)

வாணிலாநகைதோன்றமயிர்புறம்
பூணவானுயர்காதலிற்பொங்கினான்
† தாணிலாமலர்தூவினன்றம்முனைக்
காணலாமெனுமாசைகடாவவே. (௭)

எழுகசேனையென்றேவினனெய்தினன்
தொழுதுகேகயர்கோமகன்சொல்லொடும்
தழுவுதேரிடைத்தம்பியொடேறினான்
பொழுதுநாளுங்குறித்திலன்போயினான். (௮)

யானைசுற்றினதேரிரைத்தீண்டின
மானவேந்தர்குழுவினர்வாளுடைத்
தானைசூழ்ந்தனசங்கமுரன்றன
மீனவேலையின்விம்மினபேரியே. (௯)

கொடிநெருங்கினதொங்கல்குழுமின
வடிநெடுங்கண்மடந்தையரூர்மடப்
பிடிதுவன்றினபூணொலிபேர்ந்தன
இடிதுவன்றினமின்னெனவெங்குமே. (௧௦)

பண்டியங்கள்பரந்தனபல்லியம்
கொண்டியம்பினகொண்டலிற்கோதையில்

---

* திருமுகம்-முடங்கல். மங்கலவழக்கு † தாணிலா-தாளில் பொருந்தும்படி.

வண்டியம்பினவாளியின்வாவுறுஞ்
* செண்டியங்குபரியுஞ்செறிந்தவே. (கக)

தொளைமுகத்திற்சுருதிவிளம்பின
இளைமுகத்தினனும்பரினேகிட
விளைமுகத்தனல் † வேலையின்மீதுசெல்
வளைமுகத்தனவாசியும்வந்தவே. (கஉ)

‡ வில்லின்வேதியர்வாள்செறிவித்தகர்
மல்லின்மல்லர்சுரிகையின்வல்லவர்
கொல்லும்வேல்குந்தங்கற்றுயர்கொற்றவர்
தொல்லைவாரணப்பாகருஞ்சுற்றினர். (கங)

எறிபகட்டினமாடுகளேற்றைமா
குறிகொள்கோழிசிவல்குறும்பூழ்நெடும்
பொறிமயிர்க்கவுதாரிகள்போற்றுறும்
நெறியின்மாக்களுமுந்திநெருங்கினர். (கச)

நிறைந்தமாந்தர்நெருங்கினர்நெஞ்சினிற்
பறந்துபோதுங்கொலென்றுபதைக்கின்றார்
பிறந்துதேவருணர்ந்துபெயர்ந்துமுன்
உறைந்தவானுறுவார்களையொக்கின்றார். (கரு)

ஊனளைந்தவுடற்குமிராமெனத்
தானளைந்துதழுவினதண்ணுமை
தேனளைந்துசெவியுறவார்த்தென
¶ வானளைந்ததுமாகதற்பாடலே. (கசு)

ஊறுகொண்டமுரசுமிழோதையை
வீறுகொண்டனவேதியர்வாழ்த்தொலி
ஏறுகொண்டெழுமல்லரிடிப்பினை
மாறுகொண்டனவந்திகரேத்தரோ. (கஎ)

ஆறுங்கானுமகன்மலையுங்கடந்
தேறியேழ்பகனீந்திப்பின்னெந்திரத்
தூறுபாகுமடையுடைத்தொண்முளை
நாறுபாய்வயற்கேசலைநண்ணினன். (கஅ)

* செண்டியங்குபரி வையாளியாகச்செல்கின்ற குதிரை. † வேலையின்மீதுசெல்லுகின்ற, அல்லது கடலினுமதிகமாகச்செல்கின்ற எனினுமமையும். ‡ வில்லின்வேதியர் தனுர்வேதம் வல்லார். ¶ வானளைந்ததுசுவர்க்கபரியந்தம் எட்டியது.

ஏர்துறந்தவயலிளமைந்தர்தோள்
தார்துறந்தன தண்டலைநெல்லினும்
நீர்துறந்தன தாமரைநீத்தெனப்
பார்துறந்தனள் * பங்கயச்செல்வியே. (கக)

பிதிர்ந்துசாறுபெறுந்துறைமண்டிடச்
சிதிர்ந்துசிந்தியழிந்தனதேங்கனி
முதிர்ந்துகொய்யுநரின்மையின்மூக்குமிழ்த்
துதிர்ந்துலர்ந்தனவொண்மலரீட்டமே. (உ0)

ஏய்ந்தகாலமிதுவிதற்காமென
ஆய்ந்துமள்ளரரிகுநரின்மையால்
பாய்ந்தசூதப்பசுநறுந்தேறலால்
சாய்ந்தொசிந்துமுளைத்தன சாலியே. (உக)

எட்குலாமலரேசியநாசியர்
புட்குலாவயற்பூசற்கடைசியர்
கட்குலார்களைகாதற்கொழுநரோ
டுட்கலாமுடையாரினுயங்கினர். (உஉ)

ஓதுகின்றிலகிள்ளையுமோதியர்
தூதுசென்றிலவந்திலதோழர்பால்
மோதுகின்றிலபேரிமுழாவிழா
போதுகின்றிலபொன்னணிவீதியே. (உங)

பாடணித்தனபண்டொடர்பண்குழல்
ஆடணித்தவரங்கொடகன்புனல்
சூடணித்தனசூடிகைசூளிகை
மாடணித்தன † மங்கலவள்ளையே. (உச)

நகையிழந்தனவாண்முகநாறகிற்
புகையிழந்தனமாளிகைபொங்கழற்
சிகையிழந்தன ‡ தீவிகைதேமலர்த்
தொகையிழந்தனதோகையரோதியே. (உரு)

அலர்ந்தபைங்கூழுகன்குளக்கீழன
மலர்ந்தவாயிற்புனல்வழங்காமையால்
உலர்ந்தவன்கண்ணுலோபர்கடைத்தலை
புலர்ந்துநிற்கும் § பரிசிலர்போலவே. (உசு)

---

* பங்கயச்செல்வி திருமாமகள். † மங்கலவள்ளை-மங்கலகரமானவள்ளைப்பாட்டு, மங்கலமும் வள்ளைப்பாட்டு என்றுங்கூறுவர். வள்ளை-உலக்கைப்பாட்டு.

‡ தீவிகை-விளக்குகள். § பரிசிலர் - உலோபர்கடைத்தலையின்றிரப்போர்.

நாவிநீத்தருநல்வளந்துன்னிய
பூவிநீத்தெனநாடுபொலிவொரீஇத்
தேவிநீத்தருஞ்சேணெறிதாவிட
ஆவிநீத்தவுடலெனலாயதே. (உஎ)

என்றநாட்டினைநோக்கியிடருழந்
தொன்றுமுற்றதுணர்ந்திலனுன்னுவான்
சென்றுகேட்பதொர்தீங்குளதாமெனு
நின்றுநின்றுநெடிதுயிர்த்தானரோ. (உஅ)

மீண்டுமெய்தியம் * மெய்யெனுநல்லணி
பூண்டவேந்தன்றிருமகன்புந்திதான்
தூண்டுதேரினுமுந்துறத்தூங்குவான்
நீண்டவாயினெடுநகர்நோக்கினன். (உகூ)

அண்டமுற்றுந்திரிந்தயர்த்தாயமு
துண்டுபோதியென்றெண்கதிர்ச்செல்வனை
விண்டொடர்ந்துவிலக்குவபோல்வன
கண்டிலன்கொடியின்னெடுங்கானமே. (௩௦)

ஈட்டுநன்புகழ்க்கீட்டியயாவையும்
வேட்டவேட்டவர்கொண்மின்விரைந்தெனக்
கோட்டிமாக்களைக்கூவுவபோல்வன
கேட்டிலன்முரசின்கிளரோதையே (௩க)

கள்ளைமாக்கவர்கண்ணியன்கண்டிலன்
பிள்ளைமாக்களிறும்பிடியீட்டமும்
† வள்ளைமாக்கணிதியும்வயிரியர்
கொள்ளைமாக்களிற்கொண்டனரேகவே. (௩உ)

காவன்மன்னவன்கான்முளைகண்டிலன்
ஆவுமாவுமழிகவுள்வேழமும்
மேவுகாதனிதியும்வெறுக்கையும்
‡ பூவின்வானவர்கொண்டனர்போகவே. (௩௩)

சூழமைந்தசுரும்புநரம்புந்தம்
§ ஏழமைந்தவிசையிசையாமையான்
மாழையுண்கண்மயிலெனுஞ்சாயலார்
கூழைபோன்றபொருநர்குழாங்களே. (௩௪)

* தன்னுயிர்நீத்தும் தன்சொற்கடவாமையின் மெய்யெனுநல்லணி பூண்டவேந்தனென்றார். † வள்ளைமாக்கள் - மங்கலபாடகர்கள். ‡ பூசுரரென்னும் பெயர்பற்றிப் பூவின்வானவரென்றார். § ஏழமைந்தவிசை-ஏழாகப் பொருந்திய இசை.

தேருமாவுங்களிறுஞ்சிவிகையும்
ஊரும்பண்டியுமூருநரின்மையால்
யாருமின்றியெழிலழிவீதிகள்
வாரியின்றிய * வாலுகவாற்றினே. (௩௫)

அன்னதன்மையகநகர்நோக்கினன்
பின்னையப்பெரியோர்தம்பெருந்தகை
மன்னன்வைகும்வளநகர்போலுமீ
தென்னதன்மையிளையவனேயென்றான். (௩௬)

வேற்றடங்கலர்விண்ணுறவென்றிடும்
கூற்றடங்கப்பொருநெடுங்கோளினாய்
சேற்றடங்கட்டிருவொடுநீங்கிய
பாற்றடங்கடலொத்ததுபாரென்றான். (௩௭)

குருமணிப்பூணரசிளங்கோளரி
இருகைகூப்பியிறைஞ்சினனெய்திய
தொருவகைத்தன்றுழுதுய † ரூழிவாழ்
திருநகர்த்திருதீர்ந்தனளாமென்றான், (௩௮)

அனையவேலையிலக்கடைத்தோரண
மனையினீணெடுமங்கலவீதிகள்
‡ நினையுமாழ்திரத்தேகியநேமியான்
தனையனுந்தந்தைசார்விடமேவினான். (௩௯)

விருப்பினெய்தினன்வெந்திறல்வேந்தனை
இருப்புநல்லிடமெங்கணுங்கண்டிலன்
அருப்பமன்றிதென்றையுறவெய்தினான்
பொருப்புநாணவுயர்ந்தபுயத்தினான் (௪0)

ஆயகாலையிலையனைநாடித்தன்
தூயகையிற்றொழுதலுறுவான்றனை
கூயளன்னைகுறுகுதிரீண்டென
வெய்கோடோளியொருத்திவிளம்பினாள். (௪௧)

வந்துதாயையடியில்வணங்கலும்
சிந்தையாரத்தழுவினடிதிலர்
எந்தையென்னையரெங்கையரென்றனள்
¶ அந்தமில்குணத்தானுமதாமென்றான். (௪௨)

---

* வாலுகம் - மணற்குன்று. † எழுநகரத்துஞ்சிறந்தமையின் ஊழிவாழ்திருநகரென்றார். ‡ நினையுமாத்திரம்-நுண்மைதாகிய காலவளவு. அந்தமில்குணத்தன் - (௧) அழிவற்ற குணத்தினையுடைய பரதாழ்வான். (௨) பிதாவினைக்காணாமையால் அழகழிந்துள்ள எண்ணத்தினையுடையபரதன் எனினுமமையும்.

### வேறு.

மூண்டெழுகாதலான்முளரித்தாடொழ
வேண்டினனெய்தினனுள்ளம்விம்முமால்
ஆண்டகைநெடுமுடியரசர்கோமகன்
யாண்டயான்பணித்திரென்றிருகைகூப்பினன். (௪௩)

ஆனவனுரைசெயவழிவில்சிந்தையாள்
தானவர்வலிதவவிமிர்ந்ததானையத்
தேனமர்தெரியலான்றேவர்கைதொழ
* வானகமெய்தினன்வருந்தனீயென்றாள். (௪௪)

எறிந்தனகடியசொற்செவியுளெய்தலும்
நெறிந்தலர்குஞ்சியானெடிதுவீழ்ந்தனன்
அறிந்திலனுயிர்த்திலனசனியேற்றினன்
மறிந்துயர்மாமரமண்ணுற்றென்னவே. (௪௫)

வாயொளிமழுங்கத்தன்மலர்ந்ததாமரை
ஆயலர்நயனங்களருவிசோர்தரத்
தீயெரிசெவியில்வைத்தனையதீயசொல்
நீயலதுரைசெயநினைப்பரோவென்றான். (௪௬)

எழுந்தனனேங்கினனிரங்கிப்பின்னரும்
விழுந்தனன்விம்மினன்வெய்துயிர்த்தனன்
அழிந்தனனரற்றினனரற்றியின்னன
மொழிந்தனன்பின்னரு † முருகிற்செவ்வியான். (௪௭)

அறந்தனைவேரறுத்தருளைக்கொன்றனை
சிறந்தநின்றண்ணளித்திருவைத்தேசழித்
திறந்தனையாமெனிலிறைவநீதியை
மறந்தனையுனக்கிதின்மாசுமேலுண்டோ. (௪௮)

சினக்குறும்பெறிந்தெழுகாமதீயவித்
தினக்குறும்பியாவையுமெற்றியாவர்க்கும்
மனக்குறுநெறிசெலும்வள்ளியோய்மறந்
துனக்குறுநெறிசெலவொழுக்கின்பாலதோ. (௪௯)

‡ முதலவன்முதலியமுந்தையோர்பழங்
கதையையும்புதுக்கியதலைவன் $ கண்ணுடை
நுதலவன் ¶ சிலைவிலினோன்மைநூறிய
புதல்வனையெங்கணம்பிரிந்துபோயினாய். (௫௰)

---

* வான்கமெய்தினன் - துறக்கமடைந்தான். இது மங்கலவழக்கு.
† முருகிற்செவ்வியான் - பரதன். ‡ முதலவன் - இட்சுவாகு. $ கண்ணுடைநுதலவன் - சிவன். ¶ சிலைவில் - மலைபோன்றவில்.

செவ்வழியுருட்டிய திகிரிமன்னவ
எவ்வழிமரபினுமிரவலாளர்தாம்
இவ்வழியுலகினிலின்மைகண்பிஞர்
அவ்வழியுலகினுமுளர்கோலோவையா. (ருக)

பற்பகனிழற்றுநின்கவிகைபாய்நிழல்
நிற்பனபல்லுயிருணங்கநீநெடுங்
கற்பகநறுநிழல்காதலித்தியோ
மற்பகமலர்ந்ததோண்மன்னர்மன்னனே. (ருஉ)

இம்பர்நின்றேகினையிருக்குஞ்சார்பிழந்
தும்பர்வந்துன்கழலொதுங்கினர்கொலாம்
சம்பரனனையவத்தானைத்தானவர்
* அம்பரத்தின்னருமுளர்கொலாமையா. (ருங)

இயங்கெழுதானையரிறுத்தமாத்திறை
உயங்கலின்மறையவர்க்குதவியும்பரின்
† அயங்கெழுவேள்வியோடமரர்க்காக்கிய
வயங்கெரிவளர்த்தனைவைகவல்லையோ. (ருச)

ஏழுயர்மதகளிற்றிறைவவேகினை
வாழியகரியவன்வறியன்கையெனப்
பாழியம்புயத்துநின்பணியினீங்கிலா
ஆழியையினியவற்களிக்கவெண்ணியோ. (ருரு)

பற்றிலைதவத்தினிற்பயந்தமைந்தற்கு
முற்றுலகளித்ததுமுறையினெய்திய
கொற்றவன்முடிமணக்கோலங்காணவும்
பெற்றிலைபோலுநின் ‡ பெரியகண்களால். (ருசு)

ஆற்றலனின்னனபன்னியாவலித்
தூற்றுறுகண்ணினனுருகுவான்றனைத்
தேற்றினனொருவகைசிறிதுதேறிய
கூற்றுறழ்வரிசிலைக்குரிசில்கூறுவான். (ருஎ)

எந்தையும்யாயுமெம்பிரானுமெம்முனும்
அந்தமில்பெருங்குணத்திராமனாதலால்
வந்தனையவன்கழல்வைத்தபோதலாற்
சிந்தைவெங்கொடுந்துயர்தீர்கலாதென்றான். (ருஅ)

---

* அம்பரம்-துறக்கம் † அயங்கெழுவேள்வி-பரிமேதம்.
‡ பெரியகண்ணென்றார்-முடிமணக்கோலங்காணுங் கண்ணாகலின்.

அவ்வுரைகேட்டலுமசனியேறென
* வெவ்வுரைவல்லவள்மீட்டுங்கூறுவாள்
தெவ்வடுசிலையினய்தேவிதம்பியென்
றிவ்விருவோரொடுங்கானத்தானென்றாள். (ருகூ)

வனத்தினனென்றவளிசைத்தமாற்றத்தை
நினைத்தனனிருந்தனனெருப்புண்டானென
வினைத்திறம்யாதினிவிளைவதின்னமும்
† எனைத்துளகேட்பனதுன்பம்யானென்றான். (சூ0)

ஏங்கினவிம்மலோடிருந்தவேந்தலப்
பூங்கழற்காலவன்வனத்துப்போயது
தீங்கிழைத்ததனினோதெய்வஞ்சீறியோ
ஓங்கியவிதியினோயாதினோவென. (சூக)

தீயனவிராமனேசெய்யுமேலவை
தாய்செயலல்லவோதலத்துளோர்க்கெலாம்
போயதுதாதைவிண்புக்கபின்னரோ
ஆயதன்முன்னரோவருளுவீரென்றான். (சூஉ)

குருக்களையிகழ்தலினன்றுகூறிய
செருக்கினலன்றொருதெய்வத்தாலுமன்
றருக்கனேயனையவவ்வரசர்கோமகன்
இருக்கவேவனத்தவனேகினனென்றாள். (சூ௩)

குற்றமொன்றில்லையேற்கொதித்துவேறுளோர்
செற்றதுமில்லையேற்றெய்வத்தாலன்றேற்
பெற்றவனிருக்கவே ‡ பிள்ளைகான்புக
உற்றதென்பின்னவனுலந்ததென்னென்றான். (சூச)

வாக்கினல்வரந்தரக்கொண்டுமைந்தனைப்
போக்கினேன்வனத்திடைப்போக்கிப்பாருனக்
காக்கினேனவனதுபொறுக்கலாமையால்
நீக்கினன்றன்னுயிர் ഠ நேமிவேந்தென்றாள். (சூரு)

சூடினமலர்க்கரஞ்சொல்லின்முன்செயி
கூடினபுருவங்கள்குதித்துக்கூத்துநின்
றாடினவுயிர்ப்பினோடழற்கொழுந்துகள்
ஓடினவுமிழ்ந்தனவுதிரங்கண்களே. (சூசூ)

---

* வெவ்வுரைவல்லவள்-கைகேசி. † எனைத்து-எத்தனைத்தென்பதன் மரூஉ.

‡ பிள்ளைஈண்டு-சிராமனே. ഠ நேமிவேந்து-சக்கிரவர்த்தி

துடித்தனகபோலங்கள்சுற்றுந்தீச்சுடர்
பொடித்தனமயிர்த்தொளைபுகையும்போர்த்தது
மடித்ததுவாய்நெடுமழைக்கைம்மண்பக
அடித்தனவொன்றொடொன்றசனியஞ்சவே. (சுஎ)

பாதங்கள்பெயர்தொறும்பாருமேருவும்
போதங்கொணெடுந்தனிப்பொருவில் * கூம்பொடு
மாதங்கம்வருகலமறுகிக்கால்பொர
ஓதங்கொள்கடலினின்றுலைவபோன்றவே. (சுஅ)

அஞ்சினர்வானவரவுணரச்சத்தால்
துஞ்சினரெனப்பலசொரிமதத்தொளை
எஞ்சினதிசைக்கரியிரவிமீண்டனன்
வெஞ்சினக்கூற்றுந்தன்விழிபுதைத்ததே. (சுகூ)

கொடியவெங்கோபத்தாற்கொதித்தகோளரி
கடியவடாயெனக்கருதுகின்றிலன்
† நெடியவன்முனியுமென்றஞ்சிநின்றனன்
இடியுருமனையவெம்மொழியியம்புவான். (எ0)

மாண்டனனெந்தையென்றம்முன்மாதவம்
பூண்டனனின்கொடும்புணர்ப்பினாலென்றாற்
றீண்டிலென்வாய்அதுகேட்டுநின்றயான்
ஆண்டனனேயன்றோவரசையாசையால். (எக)

நீயினமிருந்தனையானுநின்றனென்
ஏயெனுமாத்திரத்தெற்றுகிற்றிலென்
‡ ஆயகன்முனியுமென்றஞ்சினேனலால்
தாயெனும்பெயரெனைத்தடுக்கற்பாலதோ. (எஉ)

மாளவுமுளனொருமன்னனன்சொலால்
மீளவுமுளனொருவீரன்மேயபார்
ஆளவுமுளனொருபரதனுகினால்
கோளலதறநெறிகுறையுண்டாகுமோ. (எங)

சுழியுடைத்தாயுடைக்கொடியசூழ்ச்சியால்
வழியுடைத்தாய்வருமரபைமாய்த்தொரு
பழியுடைத்தாக்கினன்பரதன்பண்டெனும்
மொழியுடைத்தாக்கலின்முறைமைவேறுண்டோ. (எச)

---

* கூம்பு-பாய்மரம். † நெடியவன்-ஸ்ரீராமன்.
‡ ஆயகன்-தாய்போலுமிரங்குநெஞ்சுடையான்.

## வேறு.

கோயிரல்லீர் நுங்கணவன் றன்னுயிருண்டீர்
பேயீரேநீரின்னமிருக்கப்பெறுவீரே
மாயீர்மாயாவன்பழிதந்தீர்முலைதந்தீர்
தாயீரேநீரின்னுமெனக்கென்றருவீரே. (எ௫)

ஒன்றும்பொய்யாமன்னனைவாயாலுயிரோடுந்
தின்றுந்தீராவன்பழிகொண்டுந்திருவெய்தி
என்றுந்நீரேவாழ்வுவந்தீரவனேகக்
கன்றுந்தாயும்போவனகண்டுங்கழியீரே. (எசு)

இறந்தான்றந்தையீந்தவரத்துக்கிழிவென்னு
அறந்தானீதென்றன்னவன்மைந்தனரசெல்லாந்
துறந்தான்றாயின்சூழ்ச்சியின்ஞாலமவனோடும்
பிறந்தானுண்டானென்னுமிதென்னாற்பெறலாமே. (எஎ)

மாளும்மென்றேதந்தையையுன்னுவசைகொண்டாள்
கோளும்மென்னலாயெனல்கொண்டானதுவன்றேல்
மீளும்மன்றேயென்னையுமெய்யேயுலகெல்லாம்
ஆளுமென்றேபோயினன்றே * வரசாள்வான். (எஅ)

ஓதாநின்றதொல்குலமன்னனுணர்வப்பால்
யாதானுந்தானாகவெனக்கேபணிசெய்வான்
தீதாநின்றசிந்தனைசெய்தானவனென்னப்
போதாதோவென்றாயிவள்கொண்டபுகழம்மா. (எகூ)

உய்யாநின்றேனின்னமுமென்முன்னுடன்வந்தான்
கய்யார்கல்லைப்புல்லடகுண்ணக்கலமெந்தி
வெய்யோனுனின்சாலியின்வெண்சோறமுதென்ன
நெய்யோடுண்ணநின்றதுநின்றார்சினையாரோ. (அ0)

வில்லார்தோளான்மேவினன்வெங்கானகமென்ன
† நல்லானன்றேதுஞ்சினனஞ்சேயனையாளைக்
கொல்லேன்மாயேன்வன்பழியாலேகுறைவற்றேன்
அல்லேனேயானன்புடையார்போலழுகின்றேன். (அக)

பாரோர்கொள்ளார்யானுயிர்பேணிப்பழிபூணேன்
தீராதொன்றோதுன்பமில்லூரிற்றிருகில்லாள்
ஆரோடைண்ணிற்றுருரைதந்தாயறமெல்லாம்
வேரோடுங்கேடாகமுடித்தென்விளைவித்தாய். (அ௨)

---

* அரசாள்வான் என்றது சீராமனை. † நல்லான்-தயரதன்.

கொன்றேனுனென்றந்தையைமற்றுன்கொலைவாயால்
ஒன்றோகானத்தண்ணலையுய்த்தேனுலகாள்வான்
நின்றேனென்றானின்பிழையுண்டோபழியுண்டோ
என்றேனுந்தானென்புகழ்மாயுமிடமுண்டோ. (அ௩)

கண்ணாலேயென்செய்வினையின்னுஞ்சிலகாண்பார்
மண்ணார்பாராதெள்ளுவர்வாளாபழிபூண்டாய்
* உண்ணாநஞ்சங்கொல்கிலதென்னுமுறையுண்டென்
றெண்ணாநின்றேனன்றியிரேனென்னுயிரோடே. (அ௪)

என்றுன்பாவிக்கும்பிவயிற்றினிடைவைகித்
தோன்றுந்தீராப்பாதகமற்றென்றுயர்தீரச்
சான்றுந்தானேநல்லறமாகத்தகைஞாலம்
மூன்றுங்காணமாதவம்யானேமுயல்கின்றேன். (அ௫)

சிறந்தார்சொல்லுநல்லுரைசொன்னேன்செயலெல்லாம்
மறந்தாய்செய்நாயாகுதி † மாயாவுயிர்தன்னைத்
துறந்தாயாகிற்றாயையுமாதியுலகத்தே
பிறந்தாயாதியீதலதில்லைபிறிதென்றான். (அ௬)

வேறு.

இன்னணம்வினையனவியம்பியானுமிப்
பன்னருங்கொடுமனப்பாவிபாடிரேன்
துன்னருந்துயர்கெடத்தூயகோசலை
பொன்னடிதொழுவெனென்றெழுந்துபோயினான். (அ௭)

ஆண்டகைகோசலையருகரெய்தினன்
மீண்டுமெண்ணிழிதரவீழ்ந்துகேழ்கிளர்
காண்டகுதடக்கையிற்கமலச்சீறடி
பூண்டனன்கிடந்தனன்புலம்பினானரோ. (அஅ)

எந்தையெவ்வுலகுளானெம்முன்யாண்டையான்
வந்ததுதமியெனிம்மறுக்கங்காணவோ
சிந்தையினுறுதுயர்தீர்த்திராலெனும்
அந்தரத்தமரருமழுதுசோரவே. (அ௯)

அடித்தலங்கண்டிலென்னையானெனையனைப்
படித்தலங்காவலன்பெயரற்பாலனோ
பிடித்திலிர்போலுநீர்பிழைத்திராலெனும்
பொடித்தலந்தோளுறப்புரண்டுசோர்கின்றான். (௯0)

---

* உண்ணாஈறுகெட்டவெதிர்மறை வினையெச்சம்.
† உயிர்நித்தமென்பார் மதம்பற்றி மாயாவுயிரென்றார். ‡ ஆண்டகை பரதன்.

கொடியவர்யாவருங்குலங்கள்வேரற
நொடிகுவென்யானது நுவலவதெங்ஙனம்
கடியவள்வயிற்றினிற்பிறந்தகள்வனேன்
முடிகுவெனருந்துயர்முடியவென்னுமால். (கூக)

இரதமொன்றூர்ந்துபாரிருளைநீக்குமவ்
* வரதனிலொளிபெறவளர்ந்ததொல்குலம்
† பரதனென்றொருபழிபடைத்ததென்னுமால்
மரகதமலையெனவளர்ந்ததோளினான். (கூஉ)

வாடொடுதானையான்வானில்வைகிடக்
காடொருதலைமகனெய்தக்கண்ணிலா
நாடொருதுயரிடைநைவதேயெனும்
தாடொடுதடக்கையத்தருமமேயனான். (கூங)

புலம்புறுகுரிசிறன்புலர்வுநோக்கினள்
குலம்பொறைகற்பிவைசுமந்தகோசலை
நிலம்பொறையாற்றலனெஞ்சந்தூய்தெனுச்
சலம்பிறிதுறமனந்தளர்ந்துகூறுவாள். (கூச)

மய்யறுமனத்தொருமாசுளானலன்
செய்யனேயென்பதுதேருஞ்சிந்தையாள்
கய்கயர்கோமகளிழைத்தகைதவம்
அய்யநீயறிந்திலைபோலுமாலென்றாள். (கூரு)

தாளுறுகுரிசிலத்தாய்சொற்கேட்டலும்
‡ கோளுறுமடங்கலிற்குமுறிவிம்முவான்
நாளுறுநல்லறநடுங்கநாவினால்
சூளுறுகட்டுரைசொல்லன்மேயினான். (கூசா)

அறங்கெடமுயன்றவனருளினெஞ்சினன்
பிறன்கடைநின்றவன்பிறரைச்சீறினோன்
மறங்கொடுமன்னுயிர்கொன்றுவாழ்ந்தவன்
துறந்தமாதவர்க்கருந்துயரஞ்சூழ்ந்துளோன். (கூஎ)

குரவரைமகளிரைவாளிற்கொன்றுளோன்
புரவலனுறுபொருள்புனைவில்வாரினோன்
விரவலர்வெரிநிடைவிழிக்கமீண்டுளோன்
○ இரவலருநிதியெறிந்துவெளவினோன். (கூஅ)

---

* வரதன்-சூரியன். † பரதனைத் தருமமேயனனென்றுவமைமுகத்தாற்கூறினர்.

‡ கோளுறுமடங்கல் வன்மை பொருந்திய சிங்கம் அல்லது தடையுண்ட சிங்கம்என்றும் கூறுவர். ○ இரவலர் அருநிதி-ஏழைகள் வெகுகஷ்டப்பட்டு பற்பலரிடத்துநின்றுஞ் சேகரிக்கின்றபொருள்.

தழைத்ததண்டுளவினேன் றலைவனல்லனென்
றழைத்தவன றநெறியந்தணாளிற்
பிழைத்தவன்பிழைப்பிலாமறைநயைப்பேணலா
திழைத்தவன்பொய்யெனுமிழுதைநெஞ்சினேன். (கூகூ)

தாய்பசியுழந் துயிர்தளரத்தான் றனிப்
பாய்பெரும்பாழ்வயிறளிக்கும்பாவியும்
நாயகன்படநடந்தவனுநண்ணுமத்
தீயெரிநரகத்துக்கடிதுசெல்கயான். (க00)

தாளினிலடைந்தவர்தம்மைத்தற்கொரு
கோளுறவஞ்சினன்கொடுத்தபேதையும்
நாளினுமறமறந்தவனுநண்ணுறும்
மீளருநரகிடைக்கடிதுவீழ்கயான். (க0க)

பொய்க் * கரிகூறினேன்போருக்கஞ்சினேன்
கைக்கொளுமடைக்கலங்கரந்தவவ்வினேன்
எய்த்திடத்திடர்செய்தோனென்றின்னோர்புகும்
மெய்க்கொடுநரகிடைவிரைவின்வீழ்கயான். (க0உ)

† அந்தணருறையுளையனலிபூட்டினேன்
மைந்தரைக்கொன்றளோன்வழக்கிற்பொய்த்துளோன்
நிந்தனைதேவரைநிகழ்த்தினேன்புகும்
வெந்துயர்நரகத்துவீழ்கயானுமே. (க0ங)

கன்றுயிரோய்ந்துகக்கறந்துபாலுண்டோன்
மன்றிடைப்பிறர்பொருண்மறைத்துவவ்வினேன்
நன்றியைமறந்திடுநயமிலுவினேன்
என்றிவருறுநரகென்னதாகவே. (க0ச)

ஆறுதன்னுடன்வருமஞ்சொன்மாதரை
ஊறுகொண்டலைக்கத்தன்னுயிர்கொண்டோடினேன்
சோறுதன்னயலுளோர்பசிக்கத்துய்த்துளோன்
ஏறுமக்கதியிடையானுமேறவே. (க0ரு)

எஃகெறிசெருமுகத்தேற்றதெவ்வருக்
‡ கொஃகினனுயிர்வளர்த்துண்ணுமாசையான்
அஃகலிலறநெறியாக்கியான்பொருள்
வெஃகியமன்னன்வீழ்நரகின்வீழ்கயான். (க0சு)

---

* கரி-சாக்ஷி. † அந்தணருறையுளை யனலியூட்டினேன்-பிரமத்தோஷி.
‡ ஒஃகினன்-அஞ்சினவன்.

அழிவருமரசியலெய்தியாகுமென்
றிழிவருசிறுதொழிலியற்றியாண்டதின்
வழிதருதருமத்தைமறந்துமற்றொரு
பழிவருநெறிபடர்பதகனுகயான். (கOள)

தஞ்செனவொதுங்கினர்தனதுபாருளோர்
எஞ்சலின்மறுக்கினேடிரியல்போயுற
* வஞ்சிசென்றிறுத்தவன் † வாகைமீக்கொள
அஞ்சினமன்னவனுகயானுமே. (கOஅ)

கன்னியையழிசெயக்கருதினேன்குரு
பன்னியைநோக்கினேன்பருகினேனறை
பொன்னிகழ்களவினிற்பொருந்தினேனென
இன்னவருறுகதியென்னதாகவே. (கOகூ)

ஊணலவுண்வழிநாயினுண்டவன்
ஆணலன்பெண்ணலனுர்கொலாமென
நாணலனரகமுண்டென்னுநல்லுரை
பேணலன்பிறர்பழிபிதற்றியாகயான். (ககO)

மறுவிறெல்குலங்களைமாசிட்டேற்றினேன்
சிறுவிலையெளியவருணவுசிந்தினேன்
நறியனவயலவர்நாவினீர்வர
‡ உறுபதநுங்கியவொருவனுகயான். (ககக)

வில்லினும்வாளினும்விரிந்தவாண்டொழில்
புல்லினடையுகுத்தனென்பொய்மையாக்கையைச்
சில்பகலோம்புவான்செறுநர்சிறிய
இல்லிடையிடுபதமேற்கவென்கையால். (ககஉ)

ஏற்றவற்கொருபொருளுள்ளதின்றென்று
மாற்றலனுதவலன்வரம்பில்பல்பகல்
ஆர்றினனுழற்றுமோ § ராதனெய்துமக்
கூற்றுறுநரகினேர்கூறுகொள்கயான். (ககங)

பிணிக்குறமுடையுடல்பேணிப்பேணலார்த்
துணிக்குறுவயிரவாடக்கைதூக்கிப்போய்
மணிக்குறுநகையிளமங்கைமார்கண்முன்
தணிக்குறுபகைஞரைத்தாழ்கவென்றலே. (ககச)

---

* வஞ்சி-வட்கார் மேற்செல்வார்புனையுமாலை. † வாகைவெற்றிகொண்டார் புனையுமாலை. ‡ உறுபதம்-உண்ணுமுணவு. இடுபதம்மது. § ஆதன் அறிவிலி

கரும்பலர்செந்நெலங்கழனிக்கானநா
டரும்பகைகவர்ந்துணவாவிபேணினென்
இரும்பலர்நெடுக்தளேயீர்த்தகாலொடும்
* விரும்பலர்முகத்தெதிர்விழித்துநிற்கயான். (ககரு)

† தீயனகொடியவள்செய்தசெய்கையை
நாயினேனுணரினன்னெறியினீங்கலாத்
தாயவர்க்கிடரிழைத்துழலுந்தோமுடை
ஆயவர்வீழ்கதியதனில்வீழ்கயான். (கக௬)

வேறு.

தூயவாசகஞ்சொன்ன ‡ தோன்றலைத்
தீயகானகந்திருவினீங்கிமுன்
போயினன்வரக்கண்டபொம்மலாள்
ஆயகாதலாலழுதுபுல்லினாள். (கக௭)

செம்மைநன்மனத்தண்ணல்செய்கையும்
அம்மைதீமையுமறிந்தேற்றினாள்.
கொம்மைவெம்முலைகுமுறுபாலுக
விம்மல்விம்மநின்றழுதுவீங்கினாள். (கக௮)

முன்னை ¶ நங்குலமுதலுளோர்கடாம்
நின்னையாவரேநிகர்க்குநீர்மையார்
மன்னர்மன்னவாவென்றுவாழ்த்தினாள்
உன்னவுன்னநைந்துருகிவிம்முவாள். (கக௯)

உன்னவுன்னநைந்துருகுமன்புகூர்
அன்னைதாளில்வீழ்ந்திளையவண்ணலும்
சொன்னநீர்மையாரொருமுதுமாழ்கினான்
இன்னவேலைவாய்முனிவனெய்தினான். (கஉ0)

வந்தமாதவன்தாளில்வள்ளல்வீழ்ந்
தெந்தையாண்டையானியம்புவீரென
நொந்துமாழ்கினானுவல்வதோர்கிலா
வந்தமாதவனழுதுபுல்லினான். (கஉக)

மருவின்மைந்தனேவள்ளலுந்தையார்
இறுதியெய்தினாளேழிரண்டின
கிறுவர்செய்கடன்செய்துதீர்த்தியென்
றுறுவன்மேயினானுரையின்மேயினான். (கஉஉ)

---

* இரும்பலர்-பகைவர். † வெள்ளிப்பாட்டு. ‡ தோன்றல்-ஈண்டுபரதன்
¶ நங்குலமுதலுளோர் மனுத்தொடக்கமானவரை.

அன்னையேவிஞளடியிறைஞ்சினன்
பொன்னின்வார்சடைப்புனிதனேடும்போய்த்
* தன்னைநல்கியத்தருமநல்கினன்
பன்னுதொல்லறப்படிவநோக்கினன். (௧௨௩)

மண்ணின்மேல்விழுந்தலறிமாழ்குவான்
அண்ண † லாழியானவனிகாவலான்
எண்ணெயுண்டபொன்னெழில்கொள்மேனியைக்
கண்ணநீரினற்கழுவியாட்டினன். (௧௨௪)

பற்றியவ்வயின்பரிவின்வாங்கினர்
சுற்றுநான்மறைத்துறைசெய்கேள்வியார்
கொற்றமண்கணைகுழுறமன்னனை
மற்றோர்பொன்னின் ‡ மாமனமேற்றினர். (௧௨௫)

கரைசெய்வேலைபோனகரிகையெடுத்
துரைசெய்பூசலிட்டுயிர்துளங்குற
அரைசவேலைசூழ்ந்தழுதுகைதொழப்
புரைசயானையிற்கொண்டுபோயினர். (௧௨௬)

உந்துபொற்றடந்தேர்வலானெடும்
மந்திரப்பெருந்தலைவர்மற்றுளோர்
தந்திரத்தனித்தலைவர்கண்பினோர்
வந்துசுற்றமுற்றழுதுமாழ்கினர். (௧௨௭)

சங்குபேரியுந்தழுவுசின்னமும்
எங்குமெங்குநின்றிரங்கியேங்குவ
மங்குரேய்நகர்மகளிராமெனப்
பொங்குகண்புடைத்தழுவபோன்றவே. (௧௨௮)

மாவும்யானையும்வயங்குதேர்களும்
சேவுநான்மறைக்குழுவுமுன்செலத்
$ தேவிமாரொடுங்கொண்டுதெண்டிரை
தாவுவார்புனற்சரயுவெய்தினர். (௧௨௯)

எய்தினூலுளோர்மொழிந்தயாவையும்
செய்துதீக்கலந்திருத்திச்செல்வனை
வெய்தினேற்றினர்வீரநுந்தைபால்
பொய்யின்மாக் ¶ கடன்கழித்திபோந்தென்றார். (௧௩௦)

---

* தன்னையிழந்து வாய்மைகாத்தமையின் தன்னைநல்கியத்தருமநல்கினனென்றார்.

† ஆழியான்-தெய்வீகமான சக்கரத்தினையுடையவன்.
‡ மாமானம்-பெரியவிமானம். § வெள்ளிப்பாட்டு.
$ தேவிமார்-அறுபதினுபிரவரை. ¶ கடன்-உரிமைச்சடங்கு.

என்னும்வேலையிலெழுந்தவீரனை
அன்னைதீமையாலரசனின்னையும்
துன்னுதுன்பத்தாற்றுறந்துபோயினன்
முன்னரேயெனமுனிவன்கூறினன். (௩௩௧)

துறந்துபோயினனெனவேதோன்றனீ
பிறந்துபேரறம்பிழைத்ததென்றல்போல்
இறந்துபோயினனிருந்ததாண்டது
மறந்துவேறொருமைந்தனுங்கொலாம். (௩௩௨)

இடிக்கண்வாளராவிடைவதாமெனப்
படிக்கண்வீழ்ந்தகம்பதைக்குநெஞ்சினன்
தடிக்கலாகலாத்துயரந்தன்னுளே
துடிக்கவிம்மிநின்றழுதுசொல்லுவான். (௩௩௩)

உரைசெய்மன்னன்மற்றுன்னிலென்னில்யார்
இரவிதன்குலத்தெந்தைமுந்தையோர்
* பிரதபூசனைக்குரியபேறிலேன்
அரைசுசெய்யவோவாவதாயினேன். (௩௩௪)

பூவினன்முகன்புதல்வனுதியாம்
தாவின்மன்னர்தந்தருமநீதியால்
தேவராயினர்சிறவனுகியே
† ஆவகான்பிறந்தவத்தனைவா (௩௩௫)

துன்னுதாள்வளஞ்சுமந்த ‡ தாழையில்
பன்னுவான் லைப்பதடியாயினேன்
என்னையென்னையேயீன்றுகாத்தவென்
அன்னையாரெனக்கழகுசெய்தவா. (௩௩௬)

என்றுகூறிசொந்திடரின்மூழ்குமத்
துன்றுதாரவற்கிளையதோன்றலால்
அன்றநேர்கடனமைவதாக்கினன்
நின்றுகான்மறைநெறிசெய்நீர்மையான். (௩௩௭)

இழையுமாரமுமிடையுமின்னிடக்
குழையுமாமலர்க்கொம்பனார்கடாம்
தழையின்முண்டகந்தழுவுகானிடை
முழையின்மஞ்ஞைபோலெரியின்மூழ்கினர். (௩௩௮)

---

* பிரதபூசனை-பிரேதசம்ஸ்காரத்தை. † ஆவஎன்றது இரக்கத்தின்கட் குறிப்பு.
‡ தாழை-தெங்கு.

அங்கிரீனுங்குளிரவம்புயத்
திங்கள்வாண்முகந்திருவிளங்குறச்
சங்கைதீர்ந்து * தங்கணவர்பின்செலும்
நங்கைமார்புகுமுலகநண்ணினர். (கஙக)

அனையசெய்கையாலரசர்கோமகற்
கினையதன்மையாலியைவசெய்துபின்
மனையுனெய்தினன்மரபின்வாழ்வினை
வினையினெய்துமோர்பணியின்வேலையான். (கசo)

† ஐந்துமைந்துநாளுழியாமென
மைந்தன்வெந்துயர்க்கடலின்வைகினன்
தந்தைதன்வயிற்றருமம்யாவையும்
மூந்துநூலுளோர்முறையின்முற்றினன். (கசக)

முற்றுமுற்றவித்துதவித்துதவிமும்மைநூல்
சுற்றம்யாவையுந்தொடரத்தோன்றினன்
வெற்றிமாதவன்வினைமுடித்தவன்
கொற்றவேனெடுங்குமரற்கூடினன். (கசஉ)

மன்னரின்றியேவையம்வைகருன்
தொன்மையன்றெனத்துணியுநெஞ்சினர்
அன்னமாநிலத்தறிஞர்தம்மொடும்
முன்னைமந்திரக்கிழவர்மூந்தினர். (கசங)

கூ-வது பள்ளியடைப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஙக.

## கo-வது. ஆற்றுப்படலம்.

வரன்முறைதெரிந்துணர்மறையின்மாதவத்
தருமரைமுனிவனுமாண்டையானென
விரைவின்வந்தீண்டினர்விரகினெய்தினர்
பரதனைவணங்கினர்பரியுநெஞ்சினர். (க)

மந்திரக்கிழவருநகரமாந்தரும்
தந்திரத்தலைவருந்தரணிபாலரும்
அந்தரமுனிவரோடறிஞர்யாவரும்
சுந்தரக்குரிசிலைமரபிற்சுற்றினர். (உ)

* தங்கணவர்பின்செலு நங்கைமார்புகுமுலகம் சககனமனடைந்த மாதரடையும் புண்ணிய உலகம் † ஐந்துமைந்துநாள்தசராத்திரி.

சுற்றினரிருந்துழிச்சுமந்திரப்பெயர்
பொற்றடந்தேர்வலான்புலமையுள்ளத்தான்
கொற்றவற்குறுபொருள்குறித்தகொள்கையான்
முற்றுணர்முனிவனைமுகத்துநோக்கினன். (௩)

* நோக்கினற்சுமந்திரனுவலலுற்றதை
வாக்கினலன்றியேயுணர்ந்தமாதவன்
காக்குதியுலகுநின்கடனதாமெனக்
கோக்குமானுக்கதுதெரியக்கூறுவான் (௪)

வேதியருந்தவர்விருத்தர்வேந்தர்கள்
ஆதியர்நின்வயினடைந்தகாரியம்
நீதியுந்தருமமுநீறுவநீயிது
கோதறுகுணத்தினய்மனத்துட்கோடியால். (௫)

தருமமென்றொருபொருடந்துகாட்டுதல்
அருமையென்பதுபெரிதறிதியையநீ
† இருமையுந்தருவதற்கியைவதீண்டிது
தெருண்மனத்தார்செயுஞ்செயலிதாகுமால். (௬)

வள்ளுறுவயிரவாளரசில்வையகம்
நள்ளுருகதிரில்லாப்பகலுநாளொடும்
தெள்ளுறுமதியிலாவிரவுந்தேவுடன்
உள்ளுறையுயிரிலாவுடலுமொக்குமே. (௭)

தேவர்தம்முலகினுந்தீமைசெய்துழல்
மாவலியவுணர்கள்வைகுநாட்டினும்
ஏவெவையுலகமென்றிசைக்குமன்னவை
காவல்செய்தலைவரையின்மைகண்டிலம். (௮)

முறைதெரிந்தொருவகைமுடியநோக்குறின்
மறைதவன்வகுத்தனமண்ணில்வானிடை
நிறைபெருந்தன்மையினிற்பசெல்வன
இறைகளையில்லனயாவைகாண்கிலம். (௯)

பூத்தநாண்மலரயனுதிப்புண்ணியர்
ஏத்துவான்புகழினரின்றுகாறுங்கூ
காத்தனர்பின்னொருகளைகணின்மையால்
‡ நீத்தநீருடைகலநீரதாகுமால். (௧௦)

---

* நோக்கினல்குளுப்புப்பார்வையால். † இருமைஇம்மைமறுமை
‡ நீத்தநீருடைகலநீரதென்றது கடலிற்கவிழ்ந்த மரக்கலத்தன்மையை.

உந்தையோவிறந்தன னும்முனிந்தனன்
வந்தது மன்னேதன்வரத்தின்மைந்தநீ
அந்தமில்பேரரசளித்தியன்னது
சிந்தனையெமக்கெனத்தெரிந்துகூறினன். (கக)

தஞ்சமிவ்வுலகநீதாங்குவாயெனச்
செஞ்சவேமுனிவரன்செப்பக்கேட்டலும்
நஞ்சினை நுகரென நடுங்குவாரினும்
அஞ்சினனயர்ந்தனனருவிக்கண்ணினன். (கஉ)

நடுங்கினனுத்தமமாறிநாட்டமும்
இடுங்கினன்மகளிரினிரங்குநெஞ்சினன்
ஒடுங்கியவுயிரினனுணவுகைதரத்
தொடங்கினனரசவைக்குள்ளஞ்சொல்லுவான். (கங)

மூன்றுலகினுக்குமோர்முதல்வனும்முதல்
தோன்றினனிருக்கயான்மகுடஞ்சூடுதல்
சான்றவருரைசெயத்தருமமாதலால்
ஈன்றவள்செய்கையினிழுக்குண்டாகுமோ. (கச)

அடைவருங்கொடுமையென்னன்னைசெய்கையை
நடைவருந்தன்மைநீர்நன்றிதென்றிரேல்
இடைவருங்காலமீண்டிரண்டுநீத்தது
கடைவருந்நெறிக்கலியினாட்சியோ. (கரு)

வேத்தவையிருந்தநீர்விமலனுந்தியில்
பூத்தவன் * முதலியபுவியுட்டோன்றினர்
மூத்தவரிருக்கவேமுறைமையானிலம்
காத்தவருளரெனிற்காட்டிக்காண்டிரால். (கசா)

நன்னெறியென்னினுநானிந்நானில
இன்னுயிர்ப்பொறைசுமந்திருந்துவாழ்கிலேன்
அன்னவன்றனைக்கொணர்ந்தலங்கன்மாமுடி
தொன்னெறிமுறைமையிற்சூட்டிக்காண்டிரால். (கஎ)

அன்றெனிலவனொடுமரியகானிடை
நின்றினிதிருந்தவநெறியினாற்றுவென்
ஒன்றினியுரைப்பினென்னுயிரைநீக்குவென்
என்றனனென்றபோதிருந்தபேரவை. (கஅ)

ஆன்றபேரரசனுமிருப்பவையனும்
ஏன்றனன்மணிமுடியேந்தல்வேந்தநீ

† முதலுதல்-சிருஷ்டியில் முற்பட்டுதோற்றல்.

வான்றொடர்திருவினைமறுத்திமன்னிளந்
தோன்றல்கள்யாருளர்நின்னிற்றோன்றினார். (க௯)

ஆழியையுருட்டியுமறங்கள்போற்றியும்
வேள்வியையியற்றியும்வளர்க்கவேண்டுமோ
ஏழினோடேழெனுமுலகுமெஞ்சினும்
வாழியநின்புகழென்றுவாழ்த்தினார். (உ0)

குரிசிலுந்தம்பியைக்கூவிக்கொண்டலின்
முரசறைந்திந்நகர்முறைமையேந்தனைத்
தருதுமீண்டென்பதுசாற்றித்தானையை
விரைவினிலெழுகெனவிளம்புவாயென்றார். (உக)

நல்லவனுரைசெய * நம்பிகூறலும்
அல்லலிலழுங்கியவன்பின்மாநகர்
ஒல்லெனவிரைத்தாலுயிரில்யாக்கையைச்
சொல்லெனுமமிர்தினாற் † றுளித்ததென்னவே. (உஉ)

அவித்தலைம்புலத்தவராதியாயுள
புவித்தலையுயிரெலாமிராமன்பொன்முடி
கவிக்குமென்றுரைக்கவேகளித்ததாலது
செவிப்புலநுகர்வதோர்தெய்வத்தேன்கொலாம். (உந)

படுமுரசறைந்தனர்பரதன்றம்முனைக்
கொடிநகர்தருமவற்கொணரச்சேனையை
முடுகுகவென்றசொன்மூரிமாநகர்
உடுபதிவேலையினுதயம்போன்றதே. (உச)

எழுந்ததுபெரும்படையேழுவேலையின்
மொழிந்தபேரூழியின்முழங்கிமுந் ‡ தெழ
அழிந்ததுகேகயன்மடந்தையாசைபோய்க்
கழிந்ததுதுயர்நெடுங்காதறூண்டவே. (உரு)

பண்ணினபகடுதேர்புரவிபண்டியும்
மண்ணினைமறைத்தனவளர்ந்தமாக்கொடி
விண்ணினைமறைத்தனவிரிந்தமாத்துகள்
கண்ணினைமறைத்தனகமலத்தோனையே. (உசு)

ஈசனிவ்வுலகினையழிக்குநாளெழும்
ஓசையினிமிர்ந்துளதொல்லென்பேரொலி

* நம்பி; ஈண்டு-சத்துருக்கனை. † துளித்தல் ஈண்டு உயிர்பெற்றுக் கண்ணீர்வார்தல் - துளிர்த்தலென்னும் கிராம்யமொழி துளித்ததென நின்றது. துளிர்த்தல்- உயிர்பெறுதல்.

காசையில்கரியவற்காண மூண்டெழும்
ஆசையினிமிர்ந்த * தவ்வனிகராசியே. (உஎ)

படியொடுதிருநகர் துறந்துபன்மரம்
செடியொடுகொடுவனநோக்கிச்சீதையாம்
கொடியொடுநடந்தவக்கொண்டலாமெனப்
பிடியொடுநடந்தனபெருங்கைவேழமே. (உஅ)

சேற்றிளமரைமலர்சிறந்தவாமெனக்
காற்றளம்பொலிதருகன்னிமாரொடும்
ஏற்றிளம்பிடிக்குலமிகலிவின்னடை
தோற்றிளமகளிரைச்சுமப்பபோன்றவே. (உகூ)

வேதனைவெயிற்கதிர்தணிக்கமென்மழைச்
சீதநீர்கொடுநெடுங்கொடியுஞ்சென்றன
கோதைவெஞ்சிலையவன்கோலங்காண்கிலா
மாதரினுடங்குவரம்பில்கோடியே. (௩௦)

வெண்மதிமீச்செலமேகமூர்ந்தென
அண்ணல்வெங்கதிரவனளவின்மூர்த்தியாய்
மண்ணிடையிழிந்தொருவழிக்கொண்டாலென
எண்ணருமன்னவர்களிற்றிேனகினர். (௩க)

தேர்மிசைச்சென்றதோர்சிந்துசெம்முகக்
கார்மிசைக்கழிந்ததார்கலியொர்கார்க்கடல்
ஏர்மிசையிவுளிமேலெகிற்றெங்கணும்
பார்மிசைப்படர்ந்ததுபதாதிப்பௌவமே. (௩உ)

தாரையுஞ்சங்குமுந்தாளங்கொம்பொடு
வார்மிசைப்பம்பையுந்துடியுமற்றவும்
பேரியுமியம்பலசென்றபேதைமைப்
பூரியர்குழாத்திடையஞர்போலவே. (௩௩)

தாவருநாண்முதலணியலாற்றகை
மேவருகலங்களைவெறுத்தமேனியர்
தேவருமருள்கொளத்தெரியுங்காட்சியர்
பூவுதிர்கொம்பெனமகளிர்போயினர். (௩௪)

அதிர்கடல்வையகமனைத்துங்காத்தவன்
† விதிவருந்தனிக்குடைமீதிலாப்படை

* அவ்வனிகராசி-அந்தச்சேனையின் பிரிவுகள். அவையாவன, இரதம், கசம், துரகம், பதாதி என்பனவாகிய இவைகள். † விதிவரும் தனிக்குடை-சூரியவம்சத்து முதலரசன் காலந்தொட்டு பட்டாபிஷேகவரசர் தலைமீதுபிடிக்கப்பட்டு வருகிற ஒப்பற்றகுடை அது வேதமந்திரவழியாய் புனிதப்படுத்தப்பட்ட இயல்பினையுடையதாகலின் அதற்கு விதிவருமென்ற சிறப்படைகொடுத்தனர்.

பொதிபலகவிகைமீன்பூத்ததாகிலும்
கதிர்மதிநீங்கியகங்குல்போன்றதே. (ருரு)

செல்லியசெலவினூற்சிறியதிக்கெனச்
சொல்லியசேனையைச்சுமர்ததேயெனில்
ஒல்லியல்வேலைநீருடுத்தபாரையோர்
மெல்லியலென்றவர்மெல்லியரேகொலாம் (ருசு)

தங்குசெஞ்சாந்தகில்கலவைசார்கில
குங்குமங்கொட்டிலகோவைமுத்தில
பௌங்கிளங்கொங்கைகள்யுதுமைவேறில
தெங்கிளநீரெனத்தெரிந்தகாட்சியே. (ருஎ)

இன்றுணையவர்முலையெழுதுசாந்தினம்
மன்றலந்தாரினுமறைந்திலாமையால்
துன்றிளங்கொடிமுகிற்றூசுநீங்கிய
குன்றெனப்பொலிந்தனகுவவுத்தோள்களே. (ருஅ)

நறையறுகோதையர்நாட்செய்கோலத்தின்
துறையறவஞ்சனந்துறந்தநாட்டங்கள்
குறையறநிகர்த்தனகொற்றமுற்றுவான்
கறையறக்கழுவிய † காலவேலையே. (ருகூ)

விரிமணிமேகலைவிரவியார்க்கில
தெரிவையரல்குருரொலியிறேறெனப்
பரிபுரமார்க்கிலாப்பவளச்சீறடி
அரியினமார்க்கிலாக்கமலமன்னவே. (சு0)

மல்கியேகேகயன்மடந்தைவாசகம்
நல்கியதரிவையர்நடுவிற்கேகொலாம்
புல்கியமலர்வடம்பூண்கிலாமையால்
ஒல்கியவொருவகைபொறையுயிர்க்கவே. (சுக)

கோமகன்பிரிதலிற்கோலநீத்துள
தாமரைச்செல்வியுந்தவத்தைமேவினாள்
காமனுமருந்துயர்க்கடலின்மூழ்கினான்
ஆமெனநிகழ்ந்ததவ்வளவில்சேனையே (சுஉ)

மண்ணையும்வானையும்வயங்குதிக்கையும்
உண்ணியநிமிர்கடலொக்குமென்பதென்

* ஒல்லியல்வேலைநீர்-ஒலியையியல்பாகவுடைய கடல்.
† காலவேலை-காலன்போன்ற வேலினை.

கண்ணினுமனத்தினுங்கமலத்தண்ணறன்
எண்ணினுநெடிதவனெழுந்தசேனையே.　　(சஙு)

அலைநெடும்புனலறக்குடித்தலாலகம்
நிலைபெறநிலைநெறிநிலுத்தலாநெடு
மலைகளைமண்ணுறவழுத்தலாற்றமிழ்த்
தலைவனைநிகர்த்ததத்தயங்குதானையே.　　(சச)

அறிஞருஞ்சிறிஞருமாதியந்தமாச்
செறிபெருந்தானையுந்திருவுநீங்கலால்
† குறியவன்புனலெலாம்வயிற்றிற்கொண்டநாள்
மறிகடலொத்ததவ்வயோத்திமாநகர்.　　(சரு)

பெருந்திரைநதிகளும்வயலும்பெட்புறு
மரங்களுமலைகளுமண்ணுங்கண்ணுறத்
திருந்தவிலயோதியாந்தெய்வமாநகர்
அருந்தெருவொத்ததப்படைசெல்லாறரோ　　(சசு)

தார்கடாங்கோதைதாந்தாமந்தாந்தகை
ஏர்கடாங்கலவைதாங்கமழ்ந்தின்றென்பரால்
கார்கடாமெனமிகக்கடுத்தகைம்மலை
வார்கடாமல்லத்தம்மன்னன்சேனையே.　　(சஎ)

ஆளுலாங்கடலினுமகன்றவக்கடல்
தோளுலாங்குண்டலமுதலதொல்லணி
கேளுலாமின்னொளிகிளர்ந்ததில்லையால்
வாளுலாநுதலியர்மருங்குல்போலவே.　　(சஅ)

மத்தளமுதலியவயங்குபல்லியம்
ஒத்தனசேறலிலுரையிலாமையில்
சித்திரச்சுவர்நெடுஞ்சேனைதீட்டிய
பத்தியைநிகர்த்ததப்படையினீட்டமே.　　(சகூ)

ஏடறுகோதையர்விழியினெய்தகோல்
ஊடறவுரந்தொளைத்துயிருணவகை
ஆடவர்க்கரும்பெருங்கவசமாயது
காடுறைவாழ்க்கையக்கண்ணனண்ணவே.　　(ருo)

கனங்குழைக்கைகயன்மகளிற்கண்ணிய
சினங்கிடந்தெரிதலிற்றீய்ந்தவேகொலாம்

---

* தமிழ்த்தலைவன் அகத்தியமுனிவன்.

† குறியவன்-குறுமுனியென்னுந்துணையாநின்றது.

அனங்கனேங்கொடுங்கணைகடந்தவாடவர்
மனங்கிடந்துண்கிலமகளிர்கொங்கையே. (௩௧)

இன்னணநெடும்படையேகவேந்தலும்
தன்னுடத்தைத்திருவரைச்சிரைசாத்தினன்
பின்னிளையவனெடுபிறந்ததுன்பொடும்
நன்னெடுந்தேர்மிசைநடத்தன்மேயினன். (௩௨)

தாயருமருந்தவத்தவருந்தந்தையின்
ஆயமந்திரியருமளவில்சுற்றமும்
தூயவந்தணர்களுந்தொடர்ந்துசூழ்வரப்
போயினன்றிருநகர்ப்புரிசைவாயிலே. (௩௩)

மந்தரைக்கூற்றமும்வழிச்செல்வாரொடும்
உந்தியேபோதல்கண்டிளவலேரடியார்த்
தந்தரத்தெற்றுவாழன்றபற்றலும்
சுந்தரத்தோளவன்விலக்கிச்சொல்லுவான். (௩௪)

முன்னையர்முறைகெடமுடித்தபாவியைச்
சின்னபின்னஞ்செய்தென்சினத்தைத்தீர்வெனேல்
என்னையின்றென்னையன்றுறக்குமென்றலால்
அன்னையென்றுணர்ந்திலேனயநானென்றான். (௩௫)

ஆதலான்முனியுமென்றையனந்தமில்
வேதனைக்கூனியை * வெகுண்டுமென்னினும்
கோதிலாவருமறைகுலவுநூல்வலாய்
போதுநாமென்றுகொண்டரிதிற்போயினன். (௩௬)

மொய்பெருஞ்சேனையுமூரிஞாலமும்
கய்கலந்தயலொருகடலிற்சுற்றிட
அய்யனுந்தேவியுமிளையவாளியும்
வய்கியசோலையிற்றானும்வைகினன். (௩௭)

அல்லனேநெடுங்கணீரருவியாடினன்
கல்லனேகிழங்கொடுகனியுமுண்டிலன்
வில்லனேத்துயர்ந்ததோள்வீரன்வைகிய
புல்லணைமருங்கிற்றான்பொடியின்வைகினன். (௩௮)

ஆண்டுநின் † றாண்டகையடியினேகினன்
ஈண்டியநெறியெனத்தானுமேகினன்
தூண்டிடுதேர்களுந்துரகராசியும்
காண்டகுகரிகளுந்தொடரக்காலினே. (௩௯)

௪௦ - வது ஆற்றுப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௩௩௮.

---

* வெகுண்டும்-டும்மீற்றுத்தன்மைப்பன்மை
† புருடோத்தமனென்னும் பெயர்பற்றி ஆண்டகையென்றார்.

## கக - வது. குகப்படலம்.



பூவிரிபொலன்கழற்புனைவிருளையான்
காவிரிநாடன்னகழனிநாடொரீஇத்
தாவரசங்கமமென்னுந்தன்மைய
யாவையுமிரங்கிடக்கங்கையெய்தினன். (க)

எண்ணருஞ்சுரும்புதம்மினத்துக்கல்லது
கண்ணகன்பெரும்புனற்கங்கையெங்கணும்
அண்ணல்வெங்கரிமதத்தருவிபாய்தலால்
* உண்ணவுங்குடையவுமுரித்தன்றாயதே. (உ)

அடிமிசைத்தூளிபுக்கடைந்ததேவர்தம்
முடியுறப்புலர்ந்ததோர்முறைமைதேர்ந்திலென்
நெடிதுயிர்த்துண்டவுநீந்தநின்றவும்
பொடிமிசைப்புரண்டவும்புரவியீட்டமே (ந)

பாலையேய்நிறத்தொடுபெண்டுதான்படர்
† ஓலையேய்நெடுங்கடலோடிற்றில்லையால்
மாலையேய்நெடுமுடிமன்னன்சேனையாம்
வேலையேமடுத்ததக்கங்கைவெள்ளமே. (ச)

கான்றலைநண்ணியகாளைபின்படர்
தோன்றலையவ்வழிதொடர்ந்துசென்றன
ஆன்றவருணர்த்தியவக்குரோணிகள்
மூன்றுபத்தாயிரத்திரட்டிமுற்றுமே. (ரு)

அப்படைகங்கையையடைந்தவாயிடைத்
துப்புடைக்கடலினீர்சுமந்தமேகத்தை
ஒப்புடையண்ணலோடுற்றவேகொலாம்
இப்படையெடுத்ததென்றெடுத்தசீற்றத்தான். (சு)

குகனெனப்பெயரியகூற்றினாற்றலான்
தொகைமுரட்சேனையைத்துகளினோக்குவான்
நகைமிகக்கண்கள்தீநாறநாசியில்
புகையுறக்குனிப்புறும்புருவப்போர்விலான் (எ)

மையுறவுயிரெலாமிருதிவாங்குவான்
கையுறுகவரயில்பிடித்தகாலன்றான்

---

* யானையின்மதத்தை வண்டுகளல்லாமல் மற்றையுயிர்கள் பருகுத லில்லாமையால் உண்ணவுங்குடையவுமுரித்தன்றாயது என்றார்.

† ஓலையேய்-ஒலிமிகுந்த.

யையைறூருயிரமுருவமாயின
மெய்யுற்றானை யான்வில்லின்கல்வியான். (அ)

கட்டியசுரிகையன் கடித்தவாயினன்
வெட்டியமொழியினன் விழிக்குந்தீயினன்
கொட்டியதுடியினன் குறிக்குங்கொம்பினன்
கிட்டியதமரெனக்கிளர்ந்ததோளினன். (௯)

எலியெலாமிப்படையரவம்யானென
ஒலியுலாஞ்சேனையையுவந்து கூயினன்
வலியுலாமுலகினில்வாழும்வள்ளுகிர்ப்
புலியெலாமொருவழிபுகுந்தபோலவே. (௧௦)

மருங்கடைதென்கரைவந்துதோன்றினன்
ஒருங்கடைநெடும்படையொல்லெனர்ப்பினோ
டருங்கடையுகந்தனிலசனிமாமழை
கருங்கடல்கிளர்ந்தெனக்கலந்துசூழவே. (௧௧)

தோன்றினபுளினரைநோக்கிச்சூழ்ச்சியின்
ஊன்றியசேனையையும்பரேற்றுதற்
கேன்றனனென்னுயிர்த்துணைவற்கீகுவான்
ஆன்றபேரரசனீரமைதிராமென்றான். (௧௨)

துடியெறிநெறிகளுந்துறையுஞ்சுற்றுற
ஒடியெறியம்பிகள்யாதுமோட்டலிர்
கடியெறிகங்கையின்கரைவந்தோர்களைப்
பிடியெறிபடவெனப்பெயர்த்துங்கூறுவான். (௧௩)

வேறு.

அஞ்சனவண்ணனென்னுருயிர்நாயகனாளாமே .
வஞ்சனையாலரசெய்திய * மன்னரும்வந்தாரே
செஞ்சரமென்பன்தீயுமிழ்கின்றனசெல்லாவோ
உய்ஞ்சிவர்போய்விடுவய்க்குகனென்றனையேசாரோ. (௧௪)

ஆழநெடுந்திரையாறுகடந்திவர்போவாரோ
வேழநெடும்படைகண்டுவிலங்கிடும்வில்லாளோ
தோழமையென்றவர்சொல்லியசொல்லொருசொல்லன்றோ
ஏழமைவேடனிறந்திலனென்றெனையேசாரோ. (௧௫)

முன்னவனென்றுநினைந்திலன்மொய்புலியன்னானோர்
† பின்னவனின்றனனென்றிலனன்னவைபெசானேல்

* மன்னருமென இழித்தலாற்பண்மையிற்கூறினர். † பின்னவன்-பரதன்.

என்னிவனென்னையிகழ்ந்ததிவ்வெல்லைகடந்தன்றே
மன்னவர்நெஞ்சினில்வேடர்விடுஞ்சரம்வாயாவோ. (கசு)

பாவமுநின்றபெரும்பழியும்பகைநண்போடும்
ஏவமுமென்பவைமண்ணுலகாள்பவரெண்ணாரோ
ஆவதுபோகவென்னாருயிர்த்தோழமைதந்தான்மேல்
போவதுசேனையுமாருயிருங்கொடுபோயன்றே. (கஎ)

அருந்தவமென் * றுணையாளவிவன்புவியாள்வானே
மருந்தெனினன்றுயிர்வண்புகழ்கொண்டுபின்மாயேனோ
பொருந்தியகேண்மையுகந்தவர்தம்மொடுபோகாதே
இருந்ததுநன்றுகழிக்குவெனென்கடனின்றேயே. (கஅ)

தம்பியுமாவுமிடைந்தபெரும்படைசூழ்வாரும்
வம்பியலாரிவர்வாள்வலிகங்கைகடந்தன்றே
வெம்பியவேடருளீர்துறையோடம் † விலக்கீரோ
நம்பிமுன்னேயினிநம்முயிர்மாய்வதுநன்றன்றே. (ககூ)

போனபடைத்தலைவீரர்தமக்கிரைபோதாவிச்
சேனை ‡ கிடக்கிடுதேவர்வரிற்சிலைமாமேகம்
$ சோனைபடக்குடர்சூறைபடச்சுடர்வாளோடும்
தானைபடத்தனியானைபடத்திரள்சாயேனோ. (உ0)

நின்றகொடைக்கையென்னன்பனுடுக் * நெடுஞ்சீரை
அன்றுகொடுத்தவண்மைந்தர்பலத்தையெனம்பாலே
கொன்றுகுவித்தநிணங்கொள்பிணக்குவைகொண்டோடித்
துன்றுதிரைக்கடல்கங்கைமடுத்திடைதாராதோ. (உக)

ஆடுகொடிப்படைசாடியறத்தவரேயாள
¶ வேடுகொடுத்ததுபாரெனுமிப்புகழ்மேவீரோ
நாடுகொடுத்தவென்னாயகனுக்கிவர்நாமாளும்
காடுகொடுக்கிலராகியெடுத்ததுகாணீரோ. (உஉ)

மாமுனிவர்க்குறவாகிவனத்திடையேவாழும்
0 கோமுனியத்தகுமென்றுமனத்திறைகொள்ளாதே
ஏமுனையுற்றிடிலேழுகடற்படையென்றாலும்
ஆமுனையிற்சிறுகூழெனவிப்பொழுதாகாதோ. (உ௩)

என்பனசொல்லியிரும்பனமேனியரானோர்முன்
வன்பணைவில்லினன்மல்லுயர்தோளினன்வாள்வீரற்

* துணை-சீராமன். † விலக்கீர்-முன்னிலைப்பன்மையுடன் பாட்டே வல் வினைமுற்று. ‡ கிடக்கிடு என்பது இசைச்சொல். $ சோனை-விடாமற்சிந்து மழைத்துளி.

¶ வேடு-சொல்லானஃறிணை, 0 கோ-இறைவன்.

கன்பனுநின்றனனின்றதுகண்டரியேறன்ன
முன்பனில்வந்துமொழிந்தனன்மூரியதேர்வல்லான். (உச)

வேறு.

* கங்கையிருகரையுடையான் கணக்கிறந்தநாவாயான்
உங்கள்குலத்தனிநாதற்குயிர்த்துணைவனுயர்தோளான்
வெங்கரியினேறனையான் விற்பிடித்தவேலையினான்
கொங்கலருநறுந்தண்டார்க்குகனென்னுங்குறியுடையான். (உரு)

கற்காணுந்திண்மையான் கரைகாணாக்காதலான்
அற்காணிற்கண்டனையவழகமைந்தமேனியான்
மற்காணுந்திரடிண்டோண் மழைகாணுமணிநிறத்தோய்
நிற்காணுமுள்ளத்தானெறியெதிர்நின்றனனென்றான். (உசு)

தன்முன்னேயவன்றன்மைதன்றுணைவன்முந்துரைத்த
சொன்முன்னேயுவக்கின்றதுருகிலாத்திருமனத்தான்
மன்முன்னேதழீஇக்கொண்டமனக்கினியதுணைவனேல்
என்முன்னேயவற்காண்பென்யானேசென்றெனவெழுந்தான். (உஎ)

என்றெழுந்ததம்பியொடுமெழுகின்றகாதலொடும்
குன்றெழுந்துசென்றதெனக்குளிர்கங்கைக்கரைகுறுகி
நின்றவனைநோக்கினான்றிருமேனிநிலையுணர்ந்தான்
துன்றுகருநறுங்குஞ்சியெயினர்கோன்றுண்ணென்றான். (உஅ)

வற்கலையினுடையானைமாசடைந்தமெய்யானை
நற்கலையின்மதியென்னநகையிழந்தமுகத்தானைக்
கற்கனியக்கனிகின்றதுயரானைக்கண்ணுற்றான்
விற்கையினின்றிடைவீழவிம்முற்றுநின்றொழிந்தான். (உகூ)

நம்பியுமென்னாயகனையொக்கின்றானயனின்றாலியனின்றான்
தம்பியையுமொக்கின்றான்றவவேடந்தலைநின்றான்
துன்பமொருமுடிவில்லைத்திசைநோக்கித்தொழுகின்றான்
எம்பெருமான்பின்பிறந்தாரிழைப்பரோபிழைப்பென்றான். (ங0)

உண்டிடுக்கணொன்றுடையானுலையாதவன்புடையான்
கொண்டதவவேடமேகொண்டிருந்தான்குறிப்பெல்லாம்
கண்டுணர்ந்துபெயர்கின்றேன்காமின்கணெறியென்னாத்
தண்டுறையோர்நாவாயிலொருதனியேதான்வந்தான். (ஙக)

வந்தெதிரே † தொழுதானைவணங்கினான்மலரிருந்த
அந்தணனுந்தனைவணங்குமவனுமவனடிவீழ்ந்தான்

---

* ஏற்றுதலும் இறக்குதலும் உடைமைபற்றிக் கங்கையிருகரையுடையான்என்றார். † தொழுதானை-வணங்கிய குகனை.

தந்தையினுங்களிகூரத்தழுவினன் றகவுடையோர்
சிந்தையினுஞ்சென்னியினும்வீற்றிருக்குஞ் * சீர்த்தியான். (நஉ)

வேறு.

தழுவினபுளினர்வேந்தன் றாமரைச்செங்கணனை
எழுவினுமுயர்ந்ததோளாயெய்தியதென்னையென்ன
முழுதுலகளித்ததந்தைமுந்தையோர்முறையினின்றும்
வழுவினனதனைநீக்கமன்னனைக்கொணர்வான்வந்தேன். (நந)

கேட்டனன்கிராதர்வேந்தன்கிளர்ந்தெழுமுயிரனுகி
மீட்டுமண்ணதனில்வீழ்ந்தான்விம்மினனுவகைவீங்கத்
தீட்டருமேனிமைந்தன்சேவடிக்கமலப்பூவில்
பூட்டியகையன்பொய்யிலுள்ளத்தான்புகலலுற்றான். (நச)

தாயுரைகொண்டுதாதையுதவியதரணிதன்னைத்
தீவினையென்னநீத்துச்சிந்தனைமுகத்திற்றேக்கிப்
போயினையென்றபோழ்துபுகழினேய்தன்மைகண்டால்
ஆயிரமிராமர்நின்கேழாவரோதெரியிலம்மா. (நரு)

என்புகழ்கின்றதேழைமையெயினனேனிரவியென்பான்
தன்புகழ்க்கற்றை † மற்றையொளிகளைத்தவிர்க்குமாபோல்
மன்புகழ்பெருமைநுங்கண்மரபினோர்புகழ்களெல்லாம்
உன்புகழாக்கிக்கொண்டாயுயர்குணத்துரவுத்தோளாய். (நசு)

எனவிவையன்னமாற்றமியையவனபலவுங்கூறிப்
புனைகழற்புலவுவேற்கைப்புளிஞர்கோன்பொருவில்காதல்
அனையவற்கமைவிற்செய்தானவற்கன்பிலாதார்
நினைவருங்குணங்கொடன்றோவிராமன்மேனிமிர்ந்தகாதல். ()

அவ்வழியவனைநோக்கியருடருவாரியன்ன
செவ்வழியுள்ளத்தண்ணறென்றிசைச்செங்கைகூப்பி
எவ்வழியுறைந்தானம்முன்னென்றலுமெயினர்வேந்தன்
இவ்வழிவீரயானேகாட்டுவலெழுகவென்றான். (நஅ)

காரெனக்கடிதுசென்றான்கல்லிடைப்படுத்தபுல்லின்
வார்சிலைத்தடக்கைவள்ளல்வைகியபள்ளிகண்டான்
பார்மிசைப்பதைத்துவீழ்ந்தான்பருவரற்பரவைபுக்கான்
வார் ‡ மணிப்புனலான்மண்ணைமண்ணுநீராட்டுங்கண்ணன். (நகூ)

இயன்றதென்பொருட்டினலிவ்விடருனக்கென்றபோழ்தும்
அயின்றனைகிழங்குங்காயுமமிர்தெனவரியபுல்லில்

* சீர்த்தியான்-பரதன். † மற்றையொளிகள்-திங்கண்முதலியவற்றை
‡ மணிப்புனல்-வற்றாதநீர் எனப் பரிமேலழகர் உரையிற்காண்க.

துயின் றனையெனவுமாவி துறந்திலென்சுடருங்காசு
குயின் றுயர்மகுடஞ்சூடும்செல்வமுங்கொள்வென்யானே. (சo)

தூண்டரங்வந்தோளான் பின்னருஞ்சொல்லுவானர்
நீண்டவன் றுயின்றசூழலிதுவெனினிமிர்ந்தநேயம்
பூண்டவன்றொடர்ந்துபின்னேபோந்தவன்பொழுதுநீத்த
தியாண்டெனவினிதுகேட்டானெயினர்கோனிதனைச்சொன்னன்.

அல்லையாண்டமைந்தமேனியழகனுமவளுந்துஞ்ச
வில்லையூன்றியகையோடும்வெய்துயிர்ப்போடும்வீரன்
கல்லையாண்டுயர்ந்ததோளாய்கண்கணீர்சொரியக்கங்குல்
எல்லைகாண்பளவுநின்றானிமைப்பிலனயனமென்றான். (சஉ)

என்பத்தைக்கேட்டமைந்தனிராமனுக்கிளையாரென்று
முன்பொத்ததோற்றத்தேமில்யானென்றுமுடிவிலாத
துன்பத்துக்கேதுவானேனவனதுடைக்கநின்றான்
அன்பத்துக்கெல்லையுண்டேயழகிதென்னடிமையென்றான். (சங)

அவ்விடையண்ணலானுமன்றரும்பொடியின்வைகித்
தெவ்விடைதரநின்றார்க்குஞ்செறிகழற்புளிஞர்கோமான்
இவ்விடைக்கங்கையாற்றினேற்றினையாயினெம்மை
வெவ்விடர்க்கடனின்றேற்றிவேந்தன்பால்விடுத்ததென்றான். ()

நன்றெனப்புளிஞர்வேந்தனண்ணினன்றமரைநாவாய்
சென்றுநீர்தருதிரென்னவந்தனசிவன்சேர் * வெள்ளிக்
குன்றெனக்குனிக்கு † மம்பொற்குவடெனக் ‡ குபேரன்மானம்
ஒன்றெனநாணிப்பல்வேறுருவுகொண்டனையவான. (சரு)

நங்கையர்நடையினன்னநாணுறுசெலவினவாய்
கங்கையுமிடமிலாமைமிடைந்தனகலந்தவெங்கும்
அங்கொடிங்கிழித்தியேற்றுமமைதியனமரர்வையத்
திங்கொடங்கிழித்தியேற்றுமிருவினையென்னலான. (சசு)

வந்தனவரம்பினவாய்வரிசிலைக்குரிசின்மைந்த
சிந்தனையாவதென்றுசிருங்கிபேரியர்கோன்செப்பச்
சுந்தரவரிவிலானுஞ்சுமந்திரன்றன்னைநோக்கி
எந்தையித்தானைதன்னையேற்றுதிவிரைவினென்றான். (சஎ)

குரிசிலதேவலாலக்குரகதத்தேர்வலானும்
வரிசையின்வழாமைநோக்கிமரபுளிவகையினேற்றக்

---

* வெள்ளிக்குன்றம்-கயிலை. † அம்பொற்குவடு-சுவணமேரு.
‡ குபேரன்மானம்-குபேரனது புட்பகவிமானம்.

கரிபரியிரதங்காளாள்கணக்கறுகரையில்வேலை
எரிமணிதிரையின்வீசுங்கங்கையாரேற்றிற்றன்றே (சஅ)

இடிபடுமுழக்கம்பொங்கவினமழை * மகரநீரை
முடிவுறமுகப்பவூழியிறுதியின்மொய்ப்பபோலக்
கொடியொருவங்கம்வேலைகூம்பொடுபடர்வபோல
நெடியகையெடுத்துநீட்டிநீந்தினநெடுங்கைவேழம். (சகூ)

சுங்கமுமகாமீனுந்தரளமுமணியுந்தள்ளி
வங்கநீர்கடலும்வந்துதன்வழிப்படரமானப்
பொங்குவெங்களிறுதூக்கக்கரையொரீஇப்போயிற்றம்மா
கங்கையுமிராமற்கானுங்காதலதென்னமாதோ. (ருo)

கொடிஞ்சொடுதட்டுமெச்சுமாழியுங்கோத்தமொட்டும்
நெடுஞ்சுவர்கொடியும்யாவுநெறிவருமுறையினீக்கி
விடுஞ்சுவர்ப்புரவியோடும்வேறுவேறேற்றிச்சென்ற
மடிஞ்சபினுடம்புகூட்டும்வினையெனவயிரத்தேர்கள். (ருக)

நாலிரண்டாயகோடிநவையினுவாய்கண்மீதா
சேறிரண்டனையவாய † கதியொடுநெதியிற்சென்ற
பாறிரண்டனையமெய்யபயந்திரண்டனையநெஞ்ச
காறிரண்டனையகாலகநெடைக்கலினப்பாய்மா. (ருஉ)

ஊடுறநெருக்கியோடத்தொருவர்முன்னொருவர்கிட்டிச்
‡ சூடகத்தளிர்க்கைமாதர்குழுமினர்துவன்றித்தோன்றப்
பாடியல்களிநல்யானைப்பந்தியங்கடையிற்குத்தக்
கோடுகண்மிடைந்தவென்னமிடைந்தனகுவவுக்கொங்கை. (ருங)

பாங்கினுத்தரியமானப்படர்திரைதவழப்பாரின்
வீங்குநீரமுவந்தன்னுள்விழுமதக்கலுழிவெள்ளத்
தோங்கடல்கடலைகடோன்றவொளித்தவணுயர்ந்தகும்பம்
பூங்குழற்கங்கைநங்கைமுலையெனப்பொலிந்தமாதோ. (ருச)

பொலன்குழைமகளிர்நாவாய்ப்போக்கினென்றூன்றுதாக்க
மலங்கினரிரண்டுபாலுமறுகினர்வெருவிநோக்க
அலங்குநீர்வெள்ளந்தள்ளியழிதரவங்குமிங்கும்
கலங்களின்வெருவிப்பாயுங்கயற்குலநிகர்த்தகண்கள். (ருரு)

இயல்வுறுசெலவினுவாயிருகையுமெயினர்தூண்டத்
துயல்வனதுடுப்புவீசுர்துவலைகண்மகளிர்மென்றூ

* மகரநீர்-கடல். † கதி-மல்லகதி, மயூரகதி, வியாக்கிரகதி, வானரகதி, விடபகதிஇயல்பாயுள்ளன. ‡ சூடகம்-வலையவில் ஒருவகை.

சுயல்வுறுபரவையல்குலொளிப்புறத்தளிர்ப்பவுள்ளத்
தயர்வுறுமதுகைமைந்தர்க்கயர்வுயிர்ப்பளித்தவம்மா. (ருசு)

இக்கரையிரைத்தசேனையெறிகடன்முகந்துவெஃகி
அக்கரையடையவீசிவறியனவணுகுநாவாய்
புக்கலையாழிநன்னீர்பொறுத்தனபோக்கிப்போக்கி
அக்கணத்துவரிமீளுமகன்மழைநிகர்த்தமாதோ (ருஎ)

அகிலிடுதூபமன்னவாய்மயிற்பீலியார்த்த
முகிளிநிமுரண்மாத்தண்கேடம்பெனமுகிலின்வண்ணத்
துகிலொடுதொடுத்தசெம்பொற்றகட்டிடைதொடுத்தமுத்தம்
நகுகொடிநெடியபாயி * னவ்வெனச்சென்றநாவாய் (ருஅ)

ஆனனங்கமலத்தன்னமின்னன்னவமிர்தச்செவ்வாய்
தேனனைகுழலாரேறுமம்பிகள்சிந்துமுத்தம்
மீனெனவிரிந்தகங்கைவிண்ணெனப்பண்ணைமுற்றி
வானவர்மகளிரூரமானமேநிகர்த்தமாதோ. (ருகூ)

துளிபடத்துழாவுதிண்கோற்றுடுப்பிருகாலிற்றேன்ற
நளிர்புனற்கங்கையாற்றினடந்தெனச்செல்லுநாவாய்
களியுடைமஞ்ஞையன்னகனக்குழைகயற்கண்மாதர்
ஒளிரடிக்கமலந்தீண்டவுயிர்படைத்தனவேயொத்த. (சுO)

மய்யறுவிசும்பின்மண்ணின் † மற்றுமோருலகின்முற்றும்
மெய்வினைதவமேயன்றிமேலுமொன்றுளதோகீழோர்
செய்வினைநாவாயேறித்தீண்டலர்மனத்திற்செல்லும்
‡ மொய்விசும்போடமாகத்தேவரின்முனிவர்போனர். (சுக)

வேறு.

அறுபதினாயிரமக்குரோணியென்
றிறுதிசெய்சேனையுமெல்லைதீர்நகர்
மறுவறுமாக்களுமகளிர்வெள்ளமும்
செறிதிரைக்கங்கையின்கிடக்கச்சென்றவே. (சுஉ)

சுழித்துநீர்வருதுறையாற்றைச்சூழ்பட
கழித்துநீங்கியதெனக்கள்ளவாசையை
அழித்துவேறவனி § பண்டாண்டவேந்தரை
இழித்துமேலேறினன்றானுமேறினன். (சுந)

* நவ்-மரக்கலம். இது வடசொல்-நாவாய் வடசொற்றிபு. † மற்றுமோருலகுகூண்டு பாதலத்தை ‡ நினைத்தமாத்திரையிற் சேறவின் மனத்திற்செல்லுமொய்விசும்போடமாக என்றார். § தன்புகழான் யாவரையும் வென்றவனுகலின் பண்டாண்டவேந்தரையிழித்து மேலேறினனென்றார்

தன்னை தம்பியுந்தாயார்மூவரும்
சொன்னதேர்வலவனுந்தூயதோழனும்
துன்னினரேறலுந்துழாதுடுப்பெனும்
நன்னயக்காலினானடத்தன்மேயினான். (௬௪)

வேறு.

சுற்றத்தார்தேவரொடுந்தொழநின்றகோசலையைத்தொழுதுநோக்கி
வெற்றித்தார்க்குரிசிலிவராரென்றுகுகன்வினவவேந்தர்வைகும்
முற்றத்தானமுதற்றேவி * மூன்றுலகமீன்றானைமுன்னீன்றானைப் [ன்.
பெற்றத்தாற்பெருஞ்செல்வம்யான்பிறத்தலாற்றுறந்தபெரியாளென்று

என்றலுமேயடியின்மிசைநெடிதுவீழ்ந்தழுவானையிவன்யாரென்று
கன்றுபிரிகாராவின்றுயருடையகொடிவினவக்கழற்கான்மைந்தன்
இன்றுணைவனிராகவனுக்கிலக்குவற்குமிளையவற்குமெனக்குமித்தான்
குன்றனையதிருநெடுந்தோட்குகனென்பானிந்நின்றகுரிசிலென்றான்.

நைவீரலீர்மைந்தீரினித்துயரானாடிறந்துகாடுநோக்கி
† மெய்வீரர்பெயர்ந்ததுவுநலமாயிற்றுமன்றேவிலங்கற்றிண்டோள்
கைவீரக்களிறனையகாளையிவன்றன்னோடுகலந்து ‡ நீங்கள்
ஐவீருமொருவீராயகலிடத்தைநெடுங்காலமளித்திரென்றான். (௬௭)

அறந்தானேயென்கின்றவயனின்றாளைநோக்கியையவன்பின்
நிறைந்தானையுரையென்னநெறிதிறம்பாத்தன்மெய்யைநிற்பதாக்கி
இறந்தான்றன்னிளந்தேவியாவர்க்குந்தொழுகுலமாமிராமன்பின்பு
பிறந்தானுமுளனென்னப்பிரியாதான்றனைப்பயந்தபெரியாளென்றான்.

சுடுமயானத்திடைதன்றுணையேகத்தோன்றறுயர்க்கடலினேகக்
கடுமையார்கானகத்துக்கருணையார்கலியேகக்கழற்கான்மாயன்
நெடுமையாலன்றளந்தவுலகெல்லாம் ¶ தன்மனத்தேநினைந்துசெய்யுங்
கொடுமையாலளந்தாளையாரிவரென்றுரையென்னக்குரிசில்கூறும். (௬௯)

படரெல்லாம்படைத்தாளைப் § பழிவளர்க்குஞ்செவிலியைத்தன்பாழ்த்தபா
குடரிலேநெடுங்காலங்கிடந்தேற்குமுயிர்ப்பாரங்குறைந்துதேய [விக்
உடரெலாமுயிரெலாவெனத்தோன்றுமுலகத்தேயொருத்தியன்றே
இடரிலாமுகத்தாளையறிந்திலையே ○ லிந்நின்றாளென்னையீன்றாள். (௭௰)

* மூன்றுலகுமீன்றான் மூன்றுலகையுஞ் சிருஷ்டித்தபிரமன். $ மெய்வீரர் ஸ்ரீராமலக்குவரை. ‡ நீங்கள் முன்னிலைப்பன்மைபெயர். ¶ தான் பெற்றவரத்தான் அரசரைப்பெற்றமையான் தன்மனத்தேநினைந்து செய்யுங்கொடுமையாலளந்தாளை என்றார். § பழிவளர்க்குஞ்செவிலியென்றது ஏகதேசவுருவகம். ○ இந்நின்றாளொருத்தி யென்னை ஈன்றாளை முடிக்க.

வேறு.

என்னக்கேட்டவ்விரக்கமிலாளையும்
தன்னற்கையின்வணங்கினன்றுயென
அன்னப்பேடைசிறையிலதாய்க்கரை
துன்னிற்றெனனவும்வந்ததுதோணியே. (எக)

இழிந்ததாயர்சிவிகையினேறத்தான்
பொழிந்தகண்ணிற்புதுப்பனற்போயினுன்
ஒழிந்திலன்குகனும்முட * ஞேகினுன்
கழிந்தனன்பலகாவதங்காலினே. (எஉ)

பரத்தினீங்கும்பரத்துவனென்னும்பேர்
வரத்தின்மிக்குயர்மாதவன்வைகிடம்
அருத்திகூறவணுகினனண்டவன்
விருத்திவேதியரோடெதிர்மேயினுன். (எங)

கக-வது குகப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் கஎக

## கஉ-வது கிளைகண்டு நீங்குபடலம்.

வந்தமாதவத்தோனையம்மைந்தனும்
தந்தையாமெனத்தாழ்ந்துவணங்கினுன்
இந்துமோலினனுமிரங்கினுன்
அந்தமில்குணத்தாசிகன்கூறினுன். (க)

எடுத்தமாமுடிசூடிநின்பாலியைந்
தடுத்தபேரரசாண்டிலையைநீ
முடித்தவார்சடைக்கற்றைறயைமூசுது
சுடுத்துநண்ணுதற்குற்றளதியாதென்றான். (உ)

† சினக்கொடுந்திறற்சிற்றவெந்தீயினுன்
மனக்கடுப்பினன்மாதவத்தோங்கலே
எனக்கடுத்ததியம்பிலைநீயென்றான்
உனக்கடுத்ததுமன்றரவோயென்றான். (ங)

‡ மறையின்கேள்வற்குமன்னிளந்தோன்றல்பின்
முறையினீங்கிமுழுநிலங்கொள்கிலேன்

* ஓகினுன் திசைச்சொல். † சினம்சீற்றம். ஒருபொருட்பன்மொழி.
‡ மறையின்கேள்வன் ஈண்டுபரத்துவாசனே.

இறைவன்காக்கிலனாமெனில் யாண்டெலாம்
உறைவென்கானத்தொருங்குடனேயென்றான். (௪)

உரைத்தவாசகங்கேட்டலுமுள்ளெழுந்
திளைத்தகாதலிருந்தவத்தோர்க்கெலாம்
குரைத்தமேனியொடுள்ளங்குளிர்ந்ததால்
அரைத்தசாந்துகொண்டப்பியதென்னவே. (௫)

ஆயகாதலொடையனைக்கொண்டுதன்
தூயசாலையுறைவிடந்துன்னினான்
மேயசேனைக்கமைப்பென்விருந்தெனத்
தீயி * னாவுதிசெங்கையினீக்கினான். (௬)

துறந்தசெல்வனினையத்துறக்கந்தான்
பறந்துவந்துபடிந்ததுபல்சனர்
பிறந்து † வேறோருலகுபெற்றோரென
மறந்துவைகினர்முன்னைத்தம்வாழ்வெலாம். (௭)

நந்தலில்லறநந்தினராமென
அந்தரத்தினரம்பையரன்பினர்
வந்துவந்தெதிரேத்தினர்மைந்தரை
இந்துவிற்சுடர்கோயில்கொண்டேகினர். (௮)

கானநன்குரைத்தார்நளிர்வானிடை
ஆனகங்கையரும்புனலாட்டினர்
தானமாமணிக்கற்பகந்தாங்கிய
ஊனமின்மலராடையுடுத்தினர். (௯)

கொம்பினின்றுநுடங்குறுகொள்கையார்
செம்பொனின் ‡ கலராசிதிருத்தினர்
அம்பரத்தினரம்பையரன்பொடும்
உம்பர்கோனகரின்னமிர்தூட்டினர். (௧௦)

¶ அஞ்சடுத்தவமளியலத்தகப்
பஞ்சடுத்தபரிபுரப்பல்லவ
நஞ்சடுத்தநயனியர்நவ்வியிய்
துஞ்சவத்தனைமைந்தருந்துஞ்சினர். (௧௧)

ஏந்துசெல்வத்திமையவராமெனக்
கூர்ததெய்வமகளிர்கொண்டாடினர்.

---

* ஆவதி-வடசொற்சிதைவு. † வேறோருலகுதுறக்கம். ‡ கலராசி-கலத்தின் கூட்டம். ¶ அஞ்சடுத்தவமளி-பஞ்சசயனம், அதாவது—இலவம்பஞ்சு, செம்பஞ்சு, வெண்பஞ்சு, மயிர், அன்னத்தூவி.

வேந்தராதிசிவிகையின்வீங்குதோள்
மாந்தர்காறும்வரிசைவழாமலே. (கஉ)

மாதர்யாவரும்வானவர்தேவியர்
கோதில்செல்வத்துவைகினர்கொவ்வைவாய்த்
தீதில்செல்வமடந்தையர்சேடியர்
தாதிமாரெனத்தம்பணிகேட்பவே. (கங)

நந்தநந்தவனங்களினுண்மலர்
கந்தமூந்தியகற்பகக்காவினின்
றந்தர்வந்தெனவந்திதன்கைதர
மந்தமந்தமணந்ததுவாடையே (கச)

மான்றளிக்குலநன்மதம்வந்துணத்
தேன்றளிர்த்தகவுளமுஞ்செங்கதிர்
கான்றநெற்றமைழக்கற்றையுங்கற்பகம்
ஈன்றளிக்கநுகர்ந்தனயானையே. (கரு)

நரகதர்க்கறநல்குநலத்தநீர்
கரகதக்கரிகானிமிர்த்துண்டன
மரகதத்தின்கொழுந்தெனவார்ந்தபுல்
குரகதத்தினகுழாங்களுங்கொண்டவே. (கசு)

இன்னரின்னணம்யாவருமிந்திரன்
துன்னுபோகங்கடுய்த்தனர்தோன்றலுன்
அன்னகாயுங்கிழங்குமுண்டப்பகல்
பொன்னின்மேனிபொடியுறப்போக்கினன். (கஎ)

நீலவல்லிருணீங்கலுநீங்குமம்
மூலமில்கனவிற்றிருமுற்றுற
ஏலும்நல்வினைதுய்ப்பவர்க் † கீறுசெல்
காலமென்னக்கதிரவன்றோன்றினன். (கஅ)

ஆறுநின்றறமாற்றலர்வாழ்வெனப்
பாறிவீந்ததுசெல்வம்பரிந்திலர்
தேறிமுந்தைத்தஞ்சிந்தையராயினர்
மாறிவந்துபிறந்தன்னமாட்சியார். (கக)

* அந்தர்-குறைந்துநின்றது.
† ஈறுசெல்காலம்-கடைபோகுங்காலம்.
† மாறிவந்து பிறந்தன்னமாட்சியாரென்றுமொன்றது பரதன்சேனையை.

வேறு.

காலையென்றெழுந்ததுகண்டுவானவர்
வேலையன்றனிகமேயென்றுவிம்மறச்
சோலையுங்கிரிகளுஞ்சுண்ணமாயெழப்
பாலைசென்றடைந்ததுபரதன்சேனையே. (உ௦)

எழுந்ததுதுகளதினெரியும்வெய்யவன்
அழுந்தினனவிப்பரும்வெம்மையாறினுன்
பொழிந்தனகரிமதம்பொடிவெங்கானகம்
இழிந்தனவடிநடக்தேருணமையே. (உக)

வடியுடையயிற்படைமன்னர்வெண்குடை
செடியுடைநெடுநிழல்செய்ததீப்பொதி
படியுடைப்பரலுறைப்பாலைமேலுயர்
கொடியுடைப்பந்தரிற்குளிர்ந்ததெங்குமே. (உஉ)

பெருகியசெல்வநீபிடியென்றுள்வயின்
திருகியசீற்றத்தாற்செம்மையாய் * நிறங்
கருகியவண்ணலைக்கண்டகாதலின்
உருகியதளிர்த்தனவுலவையீட்டமே. (உங)

வன்றெறுபாலையைமருதமாமெனச்
சென்றதுசித்திரகூடஞ்சேர்ந்ததால்
ஒன்றுரைத்துயிரினு † மொழுக்கநன்றெனப்
பொன்றியபுரவலன்பொருவிச்சேனையே. (உச)

தூளியின்படலையுந்துரகத்தேரொடு
மூளிருஞ்சினக்கரிமுழங்குமோதையும்
ஆளிருங்குழுவினராரவாரமுங்
கோளிரும்படையிதென்றுணரக்கூறவே. (உரு)

எழுந்தனனிளையவனேறினனிலங்
கொழுந்துயர்ந்தனையதோர்நெடியகுன்றின்மேற்
செழுந்திரைப்பரவையைச்சிறுமைபேசிய
கழுந்துடைவரிசிலைக்கடலைநோக்கினன். (உசா)

பரதனிப்படைகொடுபோர்கொண்டாண்மறங்
கருதியுட்கிடந்ததோர்கறுவுகாதலான்
விரதமுற்றிருந்தவன்மேல்வந்தானிது
சரதமற்றிலதெனத்தழங்குசீற்றத்தான். (உஎ)

---

* நிறங்கருகிய வண்ணலென்றது பரதனை. † "ஒழுக்க முயிரினு மோம்பப்படும்" என்பவாகலின் உயிரினுமொழுக்க நன்றென்றார்.

குதித்தனன்பாரிடைக்குவடுநீறெழ
மிதித்தனனிராமனைவிரைவினெய்தினன்
மதித்திலன்பரதனின்மேல்வந்தான்மதிப்
பதிப்பெருஞ்சேனையின்பரப்பினனென்றான். (உஅ)

கட்டினன்சுரிகையுங்கழலும்பல்கணைப்
புட்டிலும்பொறுத்தனன்கவசம்பூட்டமைத்
திட்டினனெடுத்தனன்வரிவிலேந்தலைத்
தொட்டடிவணங்கினின்றினையசொல்லினன். (உகூ)

இருமையுமிழந்தவப்பரதனேந்துதோட்
பருமையுமன்னவன்படைத்தசேனையின்
பெருமையுமின்றொருபின்புவந்தவென்
ஒருமையுங்கண்டினியுவத்தியுள்ளநீ. (ஙo)

படரெலாம்படப்படும்பருமயானையின்
திடரெலாமுருட்டினதேருமீர்த்தன
* குடரெலாந்திரைத்தனகுருதியாறுகள்
† கடரெலாமடுப்பனபலவுங்காண்டியால். (ஙக)

கருவியுங்கைகளுங்கவசமார்பமும்
உருவினவுயிரினோடுதிரந்தோய்வில
திரிவனசுடர்க்கணைதிசைக்கையானைகள்
வெருவரச்செய்வனகாண்டிவீரநீ (ஙஉ)

கோடகத்தேர்படுகுதிரைதாவிய
‡ ஆடகத்தட்டிடையலகையற்றுகு
கேடகத்தடக்கைகள்கவ்விக்கீதத்தின்
நாடகநடிப்பனகாண்டிநாதநீ. (ஙஙு)

பண்முதிர்களிற்றொருபரதன்சேனையின்
எண்முதலறுத்துநானிமைப்பினீக்கலால்
விண்முதற்குளுக்கவும்வேலையாடையின்
மண்முதுகாற்றவுங்காண்டி $ வள்ளனீ (ஙச)

சிவந்தவான்குருதியினீத்தநீந்திமெய்
செவந்தசாதகரொடுசிறுகட்கூளியுங்
கவந்தமுமுலகசின்கையதாயதென்
றுவந்தனகுனிப்பனகாண்டியும்பர்போல். (ஙரு)

* குடல் குடர், † கடல் கடர் இறுதிநிலைப்போலி. ‡ ஆடகம்-நால்வகைப் பொன்னில் ஒன்று, ஆடகம், கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம். $ வள்ளல்-வரையாது கொடுப்போன்.

சூழிவெங்கடகரிதுரகராசிகள்
பாழிவன்புயத்திகல்வயவர்பட்டற
வீழிவெங்குருதியாலலேந்தவேலைகள்
ஏழுமொன்றுகின்றிரைப்பக்காண்டியால் (௩௬)

ஆளறவலங்குதேரழியவாடவர்
வாளறவரிசிலேதுணியமாக்கரி
தாளறத்தலேயறப்புரவிதாளொடுந்
தோளறவடிக்கணேதொடுப்பக்காண்டியால் (௩௭)

தழைத்தவான்சிறையனதசையுங்கவ்வின
அழைத்தவான்பறவைகளலங்குபொன்வடிம்
பிழைத்தவான்பகழிபுக்கிருவர்மார்பிடைப்
புழைத்தவான்பெருவழிபோவக்காண்டியால். (௩அ)

ஒருமகள்காதலினுலகைநோய்செய்த
பெருமகனேவலிற்பாதன்றன்பெறும்
இருநிலமான்கைவிட்டின்றென்னேவலால்
அருநரகாள்வதுகாண்டியாழியாய். (௩௯)

வையகந்துறந்துவந்தடவிவைகுதல்
எய்தியதுனக்கெனநின்னையீன்றவள்
நைதல்கண்டுவந்தவணவையினேங்கிய
கைகயன்மகள்விழுந்தரற்றக்காண்டியால். (௪0)

அரஞ்சுடவழனிமிரலங்கல்வேலினய்
* விரைஞ்சொருநொடியிலிவ்வனிகவேலையை
உரஞ்சுடவடிக்கணேயொன்றில்வென்று † முப்
புரஞ்சுடுமொருவனிற்பொலிவன்யானென்றுன். (௪௧)

இலக்குவவுலகமோரேழுமேழுநீ
கலக்குவனென்பதுகருதினலது
விலக்குவதரிதுவிளம்பல்வேண்டுமோ
‡ புலக்குரித்தொருபொருள்புகலக்கேட்டியால். (௪௨)

நங்குலத்துதித்தவர்நவையுணீங்கினர்
எங்குலப்புறுவர்களெண்ணில்யாவரே
தங்குலத்தொருவருந்தருமநீங்கினர்
பொங்குலத்திரளொடும்பொருததோளினய். (௪௩)

---

* விரைந்து விரைஞ்சு இடைநிலைப்பொலி. † முப்புரஞ்சுடுமொருவன் - சிவன், ‡ புலக்குறித்தென்றது மாடக்குச்சித்திரமென்றூர்போல.

எனைத்துளமறையவையியம்பற்பாலன
பனைத்திரல்கரக்கரிப்பரதன்செய்கையே
அனைத்திரமல்லனவல்லவல்லது
நினைத்திலையென்வயினேயநெஞ்சினால். (௪௪)

பெருமகனென்வயிற்பிறந்தகாதலின்
வருமெனநினைகையுமண்ணையென்வயின்
தருமெனநினைகையுந்தவிரத்தானையால்
பொருமெனநினைகையும்புலமைப்பாலதோ. (௪௫)

பொன்னேடும்பொருகழற்பரதன்போர்தனன்
நன்னெடும்பெரும்படைநல்கலன்றியே
என்னொடும்பொருமெனவியம்பற்பாலதோ
மின்னொடும்பொருவுறலிளங்கும்வேலினாய். (௪௬)

சேனுயர்தருமத்தின்றேவைச்செம்மையின்
ஆணியையன்னதுநினைக்கலாகுமே
பூணியன்மொய்ம்பினாய்போந்ததீண்டெனக்
காணியநீயிதுபின்னுங்காண்டியால். (௪௭)

என்றனனிளவலைநோக்கியேநதலும்
நின்றனன்பரதனுநிமிர்ந்தசேனையைப்
பின்றருகென்றுதன்பிரிவில்காதலில்
தன்றுணைத்தம்பியுந்தானுமுந்தினான். (௪௮)

தொழுதுயர்கையினன்றுவண்டமேனியன்
அழுதழிகண்ணினனவலமீதென
எழுதியபடிவமொத்தெய்துவான்றனை
முழுதுணர்சிந்தையான்முடியநோக்கினான். (௪௯)

கார்ப்பொருமேனியக்கண்ணன்காட்டினான்
ஆர்ப்புறுவரிசிலையிளையவையநீ
தேர்ப்பெருந்தானையாற்பரதன்சீறிய
போர்ப்பெருங்கோலத்தைப்பொருந்தநோக்கென. (௫0)

எல்லொடுங்கியமுகத்திளவனின்றனன்
மல்லொடுங்கியபுயத்தவனைதெழும்
சொல்லொடுஞ்சினத்தொடுமுணர்வுசோர்தர
வில்லொடுங்கண்ணணைசேர்நிலத்துவீழவே. (௫௧)

கோதறத்தவஞ்செய்துகுறிப்பினெய்திய
நாதனைப்பிரிந்தனனலத்துநீங்கினாள்

வேதனைத்திருமகண்மெலிகின்றாள்விடு
தூதெனப்பரதனுந்தொழுதுதோன்றினன். (நுஉ)

அறந்தனைநினைந்திலையருளைநீத்தனை
துறந்தனைமுறைமையையென்னுஞ்சொல்லினன்
மறந்தனன்மலரடிவந்துவீழ்ந்தனன்
* இறந்தனன்றாதையையெதிர்கண்டென்னவே. (நுங)

உண்டுகொலுயிரெனவொடுங்கினனுருக்
கண்டனனின்றனன்கண்ணன்கண்ணெனும்
புண்டரீகம்பொழிபுனலவன்சடா
மண்டிலநிறைந்துபோய்வழிந்துசோரவே. (நுச)

அயாவுயிர்த்தழுகணீரருவிமார்பிடை
உயாவுறத்திருவுளமுருகப்புல்லினன்
நியாயமத்தனைக்குமோர்நிலையமாகினன்
† தயாமுதலறத்தினைத்தழுவியென்னவே. (நுரு)

புல்லினனின்றவன்புனைந்தவேடத்தைப்
பன்முறைநோக்கினன்பலவுமுன்னினன்
அல்லலினழுங்கினையையவாளுடை
‡ மல்லுயர்தோளினன்வலியனோவென்றான். (நுசா)

அரியவனுரைசெயப்பரதனையநின்
பிரிவெனும்பிணியினலென்னைப்பெற்றவக்
கரியவள்வரமெனுங்காலனுறனக்
குரிய $ மெய்ந்நிறுவிப்போயும்பரானென்றான். (நுஎ)

விண்ணிடையடைந்தனனென்றவெய்யசொல்
புண்ணிடையயிலெனச்செவிபுகாமுனம்
கண்ணொடுமனஞ்சுழல்கறங்குபோலவாய்
மண்ணிடைவிழுந்தனன் ¶ வானினும்பரான். (நுஅ)

இருநிலஞ்சேர்ந்தனனிறையுயிர்த்திலன்
உருமினையரவென § வுணர்வினீங்கினன்
அருமையினுயிர்வரவயர்வுயிர்த்தகம்
பொருமினன்பன்முறைபுலம்பினனரோ. (நுகூ)

---

* இறந்தனன்றாதை யென்றது பெயரெச்சமுற்று, உண்டான் சாத்தனார்க்குப்போயினா னென்புழிப்போல. † தயா இராமமூர்த்தியும் அறம் பரதாழ்வானுமாகக் கூறினமையால் ஒப்புமைக்கூட்ட வுவமையணி ‡ அரசர்க்குத்தோள் சிறந்தமையின் மல்லுயர்தோளென்றார் $ மெய்-உருவுடம்பினை. ¶ வானினும் பரா னென்றது நிரதிசய இன்பவீட்டுலகமுடையானென்பதனை § உணர்வினீங்கலை உருமினையரவினேடுவமை கூறினர்.

## வேறு.

நந்தாவிளக்கனையநாயகனேநானிலத்தோர்
தந்தாய்தனியறத்தின்றாயேதயாநிலையே
எந்தாயிகல்வேந்தரேறேயிறந்தனையே
அந்தோவினிவாய்மைக்காருளரேமற்றென்றான். (சுO)

சொற்பெற்றநோன்பின்றுறையோனருள்வேண்டி
நற்பெற்றவேள்விநவைநீங்கநீயியற்றி
எற்பெற்றநீபெற்றநின்னுயிர்போய்நீங்கவோ
* கொற்பெற்றவெற்றிக்கொலைபெற்றகூர்வேலோய். (சுக)

மன்னுயிர்க்குநல்குரிமைமண்பாரநான்சுமக்கப்
பொன்னுயிர்க்குந்தாரோய்பொறையுயிர்த்தவாறிதுவோ
உன்னுயிர்க்குங்கூற்றாயுலகாளவுற்றேனே
மின்னுயிர்க்குந்தீவாய்வெயிலுயிர்க்கும்வெள்வேலோய். (சுஉ)

என்பரத்ததாக்கியரசுரிமையிந்தியங்கள்
வெம்பவத்தின்வீயத்தவம்விளைத்தவாறிதுவோ
சம்பரப்பேர்த்தானவனைத்தள்ளிச் † சதமகன்றன்
‡ அம்பரத்தினீங்காவரசளித்தவாழியாய். (சுஙு)

வேண்டுந்திறத்தாரும்வேண்டாவரசாட்சி
பூண்டிவ்வுலகுக்கிடர்கொடுத்தபுல்லனேன்
மாண்டுமுடிவதல்லான்மாயாவுடம்பிதுகொண்
டாண்டுவருவதினியார்முகத்தேநோக்கவே. (சுச)

தேனடைந்தசோலைத்திருநாடுகைவிட்டுக்
கானடைந்தேனென்னத்தரியாதுகாவலநீ
வானடைந்தாயின்னமிருந்தேனுன்வாழ்வுகந்தே
ஊனடைந்ததெவ்வருயிரடைந்தவொள்வேலாய். (சுரு)

வண்மையிஇயுமானமுமேல்வானவர்க்கும்போக்கிலாத்
திண்மையிஇயுஞ்செங்கோனெறியுந்திறம்பாத
உண்மையிஇயுமெல்லாமுடனேகொண்டேகினையே
தண்மைஇதகைமதிக்குமீந்தனிக்குடையோய். (சுசு)

என்றெடுத்துப்பற்பலவும்பன்னியிடருழக்குங்
குன்றெடுத்தவொக்குங்குவவுத்தோட் § கோளரியை
வன்றடக்கைத்தம்பியருமற்றுள்ளமன்னவருஞ்
சென்றெடுத்துத்தாங்கினார்மாவதிட்டன்றேற்றினான். (சுஎ)

* கொல்-சொல்லானஃறிணை. † சதமகனென்றதிந்திரனை. ‡ அம்பரம் துறக்கம். § கோளரியை-சிங்கம்போன்ற இராமமூர்த்தியை.

பன்னரியசோன்பின்பரத்துவனேயாதியாம்
பின்னுசடையோரும்பே * ருலகமோரேழின்
மன்னவருமந்திரியரெல்லாரும்வந்தடைந்தார்
தன்னுரிமைச்சேனைத்தலைவோருந்தாமடைந்தார். (சுஅ)

மற்றும்வரற்பாலரெல்லாரும்வந்தடைந்தார்
சுற்றுமிருந்தவமைதியினிற்றுன்புழக்குங்
கொற்றக்குரிசின்முகநோக்கிக்கோமலரோன்
பெற்றபெருமைத்தவமுனிவன்பேசுவான். (சுக)

வேறு.

துறத்தலுநல்லறத்துறையுமல்லது
புறத்தொருதுணையிலைப்பொருந்துமன்னுயிர்க்
கிறத்தலும்பிறத்தலுமியற்கையென்பதை
மறத்தியோமறைகளின்வரம்புகண்டநீ. (எ0)

உண்மையில் † பிறவிகளுலப்பில்கோடிகள்
‡ தண்மையில்வெம்மையிற்றழுவினவ்வெனும்
வண்மையைநோக்கியவரியகூற்றின்பால்
கண்மையுமுளதெனக்கருதலாகுமோ. (எக)

பெறுவதன்முன்னுயிர்பிரிதல்காண்டியால்
மறுவறுகற்பினில்வையம்யாவையும்
அறுவதினுயிரமாண்டுமாண்டவன்
இறுவதுகண்டவற்கிரங்கல்வேண்டுமோ. (எஉ)

சிலமுந்தருமமுஞ்சிதவில்செய்கையுஞ்
சூலமுந்திகிரியுஞ்சொல்லுந்தாங்கிய
$ மூலம்வந்துதவிய ¶ மூவர்க்காயினுங்
காலமென்றொருவலைகடக்கலாகுமோ (எங)

கண்முதற்காட்சியகரையினீளத்த
உண்முதற்பொருட்கெலாமூற்றமாவன
மண்முதற்பூதங்கண்மாயுமென்றபோ
தென்முதலுயிர்க்குநீயிரங்கல்வேண்டுமோ. (எச)

---

* உலகமோரேழ்-எழுதீவுகளைநாவல், இறலி, குசை, கிரவுஞ்சம், புட்கரம், தெங்குகமுகு. † பிரமன்முதல் பிபீலி காந்தங்காறும் என்பார்பிறவிகளுலப்பில் கோடிகள்எனவும். ‡ அப்பிறப்புகள் புண்ணியபாவங்களின் வழிபட்டன என்பார் தண்மையில் வெம்மையில் தழுவினவெனவும், எல்லாவுயிர்களிடத்தும் இயமன் ஒரு தன்மையன் என்பார் கண்மையு முளதென எனவுங்கூறினர். $ மூலம்-பரமபதநாதனை. ¶ மூவர்-பிரமன், விஷ்ணு, உருத்திரன்

புண்ணியநறுநெயிற்பொருவில்காலமாந்
திண்ணியதிரியினில்விதியென்றீயினால்
எண்ணியவிளக்கவையிரண்டுமெஞ்சினால்
அண்ணலேயவிவதற்கையமாவதோ. (௭௫)

இவ்வுலகத்தினுமிடரினேகிடந்
தவ்வுலகத்தினுநரகினாழ்ந்துபின்
வெவ்வினைதுய்ப்பனவிரிந்தயோனிகள்
எவ்வளவிற்செலவெண்ணலாகுமோ. (௭௬)

உண்டுகொலிதுவலதுதவிநீசெய்வ
தெண்டகுகுணத்தினாய்தாதையென்றலால்
* புண்டரீகத்தனிமுதற்கும்போக்கரு
விண்டுவினாலகிடைவிளங்கினானரோ (௭௭)

அய்யநீயாதொன்றுமவலிப்பாயலை
உய்திறமவற்கினியிதனினாங்குண்டோ
செய்வனவரன்முறைதிருத்திச்சேர்தநின்
கய்யினாலொழுக்குதிகடனெலாமென்றான். (௭௮)

† விண்ணுநீர்மொக்குளின்விளியும்யாக்கையை
எண்ணிநீயழுங்குதலிழுதைப்பாலதால்
கண்ணினீருகுத்தலிற்கண்டதில்லைபோய்
மண்ணுநீருகுத்திதாமரைக்கையாலென்றான் (௭௯)

என்றபினேந்தலையேந்திவேந்தரும்
பொன்றிணிந்தனசடைப்புனிதனோடும்போய்ச்
சென்றனர்செறிதிரைப்புனலிற்செய்கென
நின்றனரிராமனுநெறியைநோக்கினான். (௮0)

புக்கனன்புனலின்முழுகிப்போந்தனன்
தக்கநன்மறையவன்சடங்குகாட்டத்தான்
முக்கையினீர்விதிமுறையினீந்தனன்
ஒக்கநின்றுயிர்தொறுமுணர்வுநல்குவான் (௮௧)

ஆனவன்பிறவுளயாவுமாற்றிப்பின்
மானமந்திரத்தவர்மன்னர்மாதவர்
ஏனையர்பிறர்களுஞ்சுற்றவேகினன்
சானகியிருந்தவச்சாலையெய்தினான். (௮௨)

---

* புண்டரீகத்தனிமுதல் பிரமன்.

யாக்கை நிலையாமை தோன்ற விண்ணுநீர் மொக்குளின் விளியும்யாக்கையென்றார்.

எய்தியவேலையிற்றமியளெய்திய
தையலைநோக்கினன்சாலைநோக்கினன்
கைகளிற்கண்மலர்புடைத்துக்கான்மிசை
ஐயனப்பரதன்வீழ்ந்தரற்றினனரோ. (அரு)

வெந்துயர்தொடர்தரவிம்மல்விம்மநீர்
உந்தியசிரந்தரமூற்றமாற்றில
சிந்தியகுரிசிலச்செம்மல்சேர்தகண்
இந்தியங்களிலெறிகடலுண்டென்னவே. (அச)

அந்நெடுந்துயருறமரிய * வீரனைத்
தன்னெடுந்தடக்கையாலிராமன்றாங்கினன்
நன்னெடுங்கூந்தலைநோக்கிநாயகன்
என்னெடும்பிரிவினிலிறந்திட்டானென்றான். (அரு)

துன்னெனும்நெஞ்சினனுளங்கினனுணைக்
கண்ணெனுங்கடனெடுங்கலுழிகான்றிட
மண்ணெனுஞ்செவிலிமேல்வைத்தகையினள்
பண்ணெனுங்கிளவியாற்பன்னியேங்கினள். (அசு)

கன்னகுதிரள்புயக்கணவன்பின்செல
நன்னகரொத்ததுநடந்தகானமும்
மன்னவன்றுஞ்சினனென்றமாற்றத்தால்
அன்னமுந் † துயர்க்கடலடிவைத்தாளரோ. (அஎ)

ஆயவடன்னைசேர்ந்தங்கையேந்தினர்
தாயரின்முனிவர்தந்தருமப்பன்னியர்
தூயநீராட்டினர்துயரநீக்கினர்
நாயகற்சேர்த்தினர்நவையுணீங்கினர். (அஅ)

தேன்றருந்தெரியலச் ‡ செம்மனல்வரை
ஈன்றவர்மூவரோடிருமைநோக்குறுஞ்
சான்றவர்குழாத்தொடுந்தருமநோக்குறுந்
தோன்றல்பாற்சுமந்திரன்றொழுதுதோன்றினன். (அகூ)

## வேறு.

எந்தையாண்டையானியம்புவீரொன
வந்ததாயர்தம்வயங்குசேவடிச்
சிந்திரின்றனன்சேர்தகண்ணினீர்
முந்தைநான்முகத்தவற்குமுந்தையான். (கூ0)

---

* வீரன்ஈண்டு பரதன். † இதுகாறுந் துயரமென்ப தறியாளாகலின் துயர்க்கடலடிவைத்தா ளென்றார். ‡ செம்மல்-பெருமையிற் சிறந்தோன்.

தாயருந்தலைப்பெய்துதாந்தழீஇ
ஒய்விலன்பினலரற்றலோங்கினர்
ஆயசேனையுமணங்கனர்களும்
தீயில்வீழ்ந்துதீமெழுகிற்றேம்பினர். (கக)

பின்னவ்வீரரைப்பெற்றபெற்றியப்
பொன்னனூர்களுஞ்சனகன் * பூவையைத்
துன்னிமார்புறத்தொடர்ந்துபுல்லினர்
இன்னல்வேலைபுக்கிழிந்தழுந்துவார். (கஉ)

சேனைவீரருந்திருநன்மாநகர்
மானமாந்தருமற்றுளோர்களும்
ஏனைவேந்தரும்பிறரும்யாவரும்
கோனையெய்தினர்குறையுஞ்சிந்தையார். (கங)

படஞ்செய்நாகணைப்பள்ளிநீங்கினன்
இடஞ்செய்தொல்குலத்திறைவனாதலால்
தடஞ்செய்தேரினன்றானுநீரினல்
கடஞ்செய்வானெனக்கடலின்மூழ்கினன். (கச)

அன்றுதீர்ந்தபின்னரசவேலையுந்
துன்றுசெஞ்சடைத்தவருஞ்சுற்றமும்
தன்றுணைத்திருத்தம்பிமார்களும்
சென்றுசூழவாண்டிருந்தசெம்மலுன். (கரு)

வரதன்றுஞ்சினன்வையமானையால்
சரதநின்னதேமகுடந்தாங்கலாய்
விரதவேடநீயென்கொல்வேண்டுவான்
பரதகூறெனப்பரிந்துகூறினன். (கசு)

என்றலும்பதைத்தெழுந்துகைதொழா
நின்றுதோன்றலைநெடிதுநோக்கிநீ
அன்றியாவரேயறத்துளோரதர்
பின்றுவாய்கொலாமென்னப்பேசுவான். (கஎ)

மனக்கொன்றுதனவரத்தினின்னையும்
நினக்கொன்றுநிலைநிறுவிநேமியான்
தனக்கொன்றுடருந்தனையனாதலால்
எனக்கொன்றுதவமெப்பதெண்ணினல். (கஅ)

கோவதாகவிவ்வுலகைநோய்செய்த
பாவகாரியிற்பிறந்தபாவியேன்

* பூவை உவமையாகுபெயராய்ச் சீதைமேல் நின்றது.

சாவதோர்கிலேன் றவஞ்செய்வேனலேன்
யாவனுகியிப்பழிநின்றேறுவேன். (௯௯)

நிறையினீங்கியமகளிர்நீர்மையும்
பொறையினீங்கியதவமும்பொங்கருட்
டுறையினீங்கியவறமுந்தொல்லையோர்
முறையினீங்கியவரசின்முந்துமோ. (௧00)

பிறந்து * நீயுடைப்பிரிவிஞெல்பதந்
துறந்துமாதவந்தொடங்குவாயென்ருல்
மறந்துநீதியிற்றிறம்பிவாளிற்கொன்
றறந்தின்ருலெனவரசதாள்வெனே. (௧0௧)

தொகையுலன்பினுலிறைவன்றுஞ்சநீ
புகையுங்வெஞ்சுறம்புகுதப்புந்தியால்
வகையில்வஞ்சனையரசுவெளவயான்
பகைவனேகொலாமிறவுபார்க்கின்றேன். (௧0௨)

உந்தைதீமையுமூலகுறுதநோய்
தந்ததீவினைத்தாய்செய்தீமையும்
எந்தைநீங்கமீண்டரசுசெய்தெனுச்
சிந்தையாவதுந்தெரியக்கூறினன். (௧0௩)

சொற்றவாசகத்துணிவுணர்ந்தபின்
இற்றதோவிவன்மனமென்றெண்ணுவான்
வெற்றிவீரயான்விளம்பக்கேளெனு
முற்றநோக்கினன்மொழிதன்மேயினன். (௧0௪)

முறையும்வாய்மையுமுயலுநீதியும்
அறையுமேன்மையோடறனுமாதியாந்
துறையும்யாவையுஞ்சுருதிநூல்விடா
இறைவரேவலாவியைவகாண்டியால். (௧0௫)

பரவுகேள்வியும்பழுதின்ஞானமும்
விரவுசீலமும்வினையின்மேன்மையும்
உரவிலோய்தொழற்குரியதேவருக்
குரவரேயெனப்பெரிதுகோடியால். (௧0௬)

அந்தநற்பெறுங்குரவராரெனச்
சிந்தைதேர்வுறத்தெரியநோக்கினல்

---

* நீயுடைப்பதம் மூன்றுசொல்இரண்டுசெந்தியாக்கி முன்னது எழுவாய்த் தொடரும் பின்னது குறிப்பு வினையெச்சத்தொடருமாகக் கொள்க.

தந்தைதாயரென்றிவர்கடாமலால்
எந்தைகூறவேறெவருமில்லையால். (கoஎ)

தாய்வரங்கொளத்தந்தையேவலால்
மேயசுங்குலத்தருமமேவினேன்
நீவரங்கொளத்தவிர்தனீர்மையோ
ஆய்வரும்புலத்தறிவுமேவினாய். (கoஅ)

தனையராயினார்தந்தைதாயரை
வினையினல்லதோரிசையை * வேய்தலோ
நினையலோவிடாநெடியவன்பழி
புனைதலோவவையபுதல்வராதாான். (கoகூ)

இம்மைபொய்யுரைத்திவறியெந்தையார்
அம்மைவெம்மைசேர்நரகமாளயான்
கொம்மைவெம்முலைக்குவையின்வைகிவாழ்
செம்மைசேர்நிலத்தரசுசெய்வனோ. (ககo)

வரனிலுந்தைசொன்மரபினாலுடைத்
தரணிநின்னதென்றியைந்ததன்மையால்
உரனினீபிறந்துரிமையாதலால்
அரசுநின்னதேயாள்கவென்னவே. (கக்க)

முன்னர்வந்துதித்துலகமூன்றினும்
நின்னையொப்பிலாநீபிறந்தபார்
என்னதாகில்யானின்றுதந்தனென்
மன்னபோந்து நீமகுடஞ்சூடெனா. (ககஉ)

மலங்கிவையகம்வருந்துவைகனீ
உலங்கொடோளுனக்குறவுசெய்தியோ
கலங்குறுவணங்காத்திபோந்தெனப்
பொலங்குலாவுதாள்பூண்டுவேண்டினான். (ககங)

பசைந்தசிந்தைநீபரிவின்வையமென்
வசஞ்செய்தாலதுமுறைமையோவசைக்
கசைந்தவெந்தையாரருளவன்றுநான்
இசைந்தவாண்டெலாமின்றேடேறுமோ (ககச)

வாய்மையென்றுமீதன்றிவையகந்
தூய்மையென்றுமொன்றுண்மைசொல்லுமோ

* வேய்தல்-புனைதல்.

வேறு.

தீய்மைதான திற்றீர்தலன் றியே
ஆய்மெய்யாகவேறறையலாவதே. (ககரு)

எந்தையேவவாண்டேழொடேழனு
வந்தகாலநான்வனத்துள்வைகநீ
தந்தபாரகந்தன்னைமெய்ம்மையால்
அந்தநாளெலாமாளென்னுணையால். (ககசு)

வேறு.

மன்னவனிருக்கவேயுமணியணிமகுடஞ்சூடு
கென்னயானியைந்ததன்னுனேயதுமறுக்கவஞ்சி
அன்னதுசினேந்துநீயென்னுணையைமறுக்கலாமோ
சொன்னதுசெய்தியையதயருழந்தயரலென்றான். (ககஎ)

ஒள்ளியோனினையவெல்லாமுணர்த்தலுமுரைக்கலுற்ற
* பள்ளநீர்வெள்ளமன்னபரதனைவிலக்கிப்பண்டு
தெள்ளியோர்குலத்துச்செய்கைசிக்கறச்சிந்தைநோக்கி
வள்ளியோய்கேட்டியென்னுவசிட்டமாமுனிவன்சொன்னன். (ககஅ)

வேறு.

கிளரகன்புனலுணின் றரியொர்கேழலாய்
† இளையெனுந்திருவினையேந்தினனரோ
உளைவரும்பெருமையோரெயிற்றினுட்புரை
வளரிளம்பிறையிடைமறுவிற்றேன்றவே. (ககக)

வேறு.

ஆதியவமைதியினிறுதியைம்பெரும்
பூதமும் ‡ வெளியொழித்தெவையும்புக்கபின்
காதனவ்வகன்புனல்கிடண்ணருஞ்
சோதியார்தன்மையிற்றுயிரன்மேயினன். (கஉ0)

எற்றவித்தன்மையினமரர்க்கின்னமு
தூற்றுடைக்கடல்வணனுந்தியுந்திய
§ நூற்றிதழ்க்கமலத்தினெய்தின்யாவையும்
தோற்றுவித்துதவிடமுதல்வன்றேன்றினன். (கஉக)

---

* வெள்ளம் பள்ளத்தடங்கல்போன்று எல்லாநற்குணங்களும் தன்னகத்தடங்கலி னங்ஙனங் கூறினர். மேட்டினின்று பள்ளத்தில் விழும் வெள்ளம் கீழ்மேலாதல்போல் அவனிலை துன்பத்தால் கீழ்மேலாய்நிற்றலிற் பள்ளநீர் வெள்ளமன்ன பரதன்என்றார். † இளை-இளையென்னும் பூப்பிராட்டி. ‡ வெளி-ஆகாயம். § சகத்திரதளமென்னும் வடமொழிப்பெயர் பற்றி நூற்றிதழ்த்தாமரையென்றார்.

அன்றவனுலகினையளிக்கவாகிய
துன்றனிக்குலமுதலுள்ளவேந்தர்கள்
இன்றளவினுமுறையிகந்துளாரிலை
ஒன்றளதுரையினமுணரக்கேட்டியால். (கஉஉ)

இதவியலியற்றிய * குரவர்யாரினும்
மதவியல்களிற்றிணய்மறவில்விஞ்சைகள்
பதவியவிருமையும்பயக்கப்பண்பினல்
உதவியவொருவனேயுயருமென்பரால். (கஉ௩)

என்றலால்யானுனையெடுத்துவிஞ்சைகள்
ஒன்றலாதனபலவுதவிற்றுண்மையால்
அன்றெனுதின்றெனதாணையையநீ
நன்றுபோந்தளியுனக்குரியநாடென்றான். (கஉ௪)

கூறியமுனிவனைக்குவிந்ததாமரை
சீறியகைகளாற்றொழுதுசெங்கணான்
ஆறிய † சிந்தனையறிஞவொன்றுரை
கூறுவதுளதெனக்கூறன்மேயனன். (கஉ௫)

சான்றவராகதன்குரவராகதாய்
போன்றவராகமெய்ப்புதல்வராகதான்
தேன்றருமலருளான்சிறுவசெய்வெனென்
றேன்றபின்னவ்வுரைமறக்குமீட்டதோ. (கஉ.௬)

தாய்பணித்துவந்தனதந்தைசெய்கென
ஏயவெப்பொருள்களுமிறைஞ்சிமேற்கொளாத்
தீயவப்புலையனிற்செய்கைதேர்கிலா
நாயெனத்திரிவதுநல்லதல்லதோ. (கஉ௭)

முன்னுறப்பணித்தவர்மொழியையானெனச்
சென்னியிற்கொண்டதுசெய்வேனென்றதின்
பின்னுறப்பணித்தனைபெருமையோவெனக்
கென்னினிச்செய்வதையுரைசெயீங்கென்றான் (கஉ௮)

முனிவனுமுரைப்பதோர்முறைமைகண்டிலெம்
இனியெனவிருந்தனனிளையமைந்தனும்
அனையதேலாள்பவராள்கநானோன்
பனிபடர்காடடேன்படர்தன்மெய்யென்றான். (கஉ௯)

---

* குரவர்-அரசன், உபாத்தியாயன், தந்தை, தேசிகன், மூத்தோன்.
† சிந்தனையடங்கியோனாகலின் ஆறிய சிந்தனை என்றார்.

அவ்வழியிமையவரமிர்துகூடினார்
இவ்வழியிராமனையிவன்கொண்டேகுமேல்
செவ்வழித்தன்றாநஞ்செயலென்றெண்ணினார்
கவ்வையர்விசும்பிடைக்கழறன்மேயினார். (கஙo)

ஏத்தரும்பெருங்குணத்திராமனிவ்வழி
* போத்தருந்தாதைசொற்புரக்கும்பூட்சியான்
ஆத்தவாண்டேழினோடேழுமந்நிலம்
காத்தலுன்கடனிவைகடமையென்றனர். (கஙக)

வானவருரைத்தலுமறுக்கற்பாலதன்
றியானுனையிரந்தனனினியென்னாணையால்
ஆனதோரமைதியினளித்திபாரெனாத்
தானவன்றுணைமலர்த்தடக்கைபற்றினான். (கஙஉ)

ஆமெனிலேழிரண்டாண்டிலைட நீ
நாமநீர்நெடுநகர்நண்ணிநானிலம்
கோமுறைபுரிகிலையென்னிற்கூரெரிச்
சாமிதுசரதநின்னாணைசாற்றினேன். (கஙங)

என்பதுசொல்லியபரதன்யாதுமோர்
துன்பினலவனதுதுணிவைநோக்கினான்
அன்பினனுருகினனன்னதாகென்றான்
† தன்புகழ்தன்னினும்பெரியதன்மையான். (கஙச)

விம்மினன்பரதனும்வேறுசெய்வதொன்
றின்மையினரிதெனவெண்ணியேங்குவான்
செம்மையின்றிருவடித்தலந்தந்தீகென
எம்மையுந்தருவனவிரண்டுநல்கினான். (கஙரு)

அடித்தலமிரண்டையுமழுதகண்ணினான்
முடித்தலமிவையெனமுறையிற்சூடினான்
படிதலத்திறைஞ்சினன்பரதன்போயினான்
பொடித்தலமிலங்குறுபொலங்கொண்மேனியான் (கஙசு)

ஈன்றவர்முதலியவெண்ணில்சுற்றமும்
சான்றவர்குழுவொடுதவத்துளோர்களும்
வான்றருசேனையுமற்றுஞ்சுற்றுற
மூன்றுநூல்கிடந்ததோண்முனியும்போயினான். (கஙஎ)

* மொய்ம்மையில்லானென்பது மடம் போத்தருந்தாதை என்றார்.
† புகழினும் குணங்கலால் பெரியனாகலின் தன்புகழ் தன்னினும்பெரியதன்மையானென்றார்.

பண்டைநூறெறிபரத்துவனும்போயினன்
மண்டுநீர்நெடுநகர்மாந்தர்போயினர்
விண்டுறைதேவரும்விலகிப்போயினர்
தொண்டறன்றுணையாற்குகனும்போயினன். (௧௫௮)

பாதுகந்தலைக்கொடுபரதன்பைம்புனல்
மோதுகங்கையின்கரைகடந்துமுந்தினன்
போதுகுங்கடிபொழிலயோத்திபுக்கிலன்
ஓதுகங்குலினெடிதுறக்கம்நீங்கினன். (௧௫௯)

நந்தியம்பதியிடைநாதன்பாதுகம்
செந்தனிக்கோன்முறைசெலுத்தச்சிந்தையான்
இந்தியங்களையவித்திருந்தன்மேயினன்
அந்தியும்பகலுநீராருதகண்ணினன். (௧௬௦)

குன்றினிலிருந்தனனென்னுங்கொள்கையான்
நின்றவர்கலிவராமையத்தாலனைத்
தன்றுணைத்தம்பியுந்தானுந்தையலும்
தென்றிசைநெறியினைச்சேறன்மேயினன். (௧௬௧)

௧௨ - வது கிளைகண்டுநீங்குபடலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௨௧௨.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

---

இரண்டாவது

அயோத்தியாகாண்டம்.

முற்றிற்று.

---

* பண்டைநூல்-முதனூல் அதாவது வேதம். † நந்தியம்பதி-நந்திக்கிராமம்.
‡ குன்றுஈண்டு சித்திரகூடத்தை.

# அயோத்தியாகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.







ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

ஸ்ரீமத்கம்பராமாயணம்.

மூன்றாவது,

# ஆரணியகாண்டம்.

தெய்வப்புலமைக்

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்தது.

இஃது

சென்னை இராசதானி வித்தியாசாலைத்

தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய

இயற்றமிழாசிரியர்

கோ - இராசகோபால பிள்ளையவர்கள்

மாணாக்கரும்

சென்னை வேப்பேரி எஸ் - பி - ஜி - ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

திருமயிலை - சண்முகம்பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு

பிருங்கிமாநகரம்

வேம்புலிமுதலியாரவர்கள் குமாரர்

நமசிவாயமுதலியாரவர்களால்

தமது

சென்னை - சூளை

நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1913.



ஹரிஓம்.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

# ஸ்ரீ மத்கம்பராமாயணம்.

மூன்றவது.

# ஆரணியகாண்டம்.

## முதலாவது விராதன்வதைப்படலம்.

காப்பு.

பேதியாதுநிமிர்பேதவுருவம்பிறழ்கிலா
ஓதியோதியுணருந்தொறுமுணர்ச்சியுதவும்
வேதம்வேதியர்விரிஞ்சன்முதலோர் * தெரிகிலா
ஆதிதேவரவரெம்மறிவினுக்கறிவரோ. (௧)

## நூல்.

முத்திருத்தியவ்விருந்தனையமொய்ந்நகையொடும்
சித்திரக்குனிசிலைக்குமரர்சென்றணுகினர்
அத்திரிப்பெயரருந்தவனிருந்தவமைதி
பத்திரப்பழுமரப்பொழிறுவன்ற † பழுவம். (௨)

திக்குறுஞ்செறிபரந்தெரியநின்றதிறள்பொற்
கைக்குறுங்கண்மலைபோற்குமரர்காமமுதலா
முக்குறும்பறவெறிந்தவினைவான்முனிவனைப்
புக்கிறைஞ்சினரருந்தவனுவந்துபுகலும். (௩)

குமரர்நீரிவணடைந்துதவுகொள்கையெளிதோ
அமரர்யாவரொடுமெவ்வுலகும்வந்தவளவே
எமரின்யார்தவமுயன்றவர்களென்றுருகினன்
தமரெலாம்வரவுகந்தனையதானமுனிவன். (௪)

அன்னமாமுனியொடன்றவணுறைந்தவனரும்
பன்னிகற்பி ‡ னநசூயைபணியாலணிகலன்
துன்னுதூசினொடுசந்திவைசுமந்தசனகன்
பொன்னொடேகியுயர்தண்டகவனம்புகுதலும். (௫)

---

* வெளியிடாவென்றும்பாடம். † பழுவம் ஆச்சிரமம்.

‡ அநசூயை-அழுக்காறில்லாதவள்.

எட்டொடெட்டுமெதமாகரியிரட்டியரிமா
வட்டவெங்கண்வரையாளிபதினாறுவகையின்
கிட்டவிட்டிடைகிடந்தனசெறிந்தவொருகை
தொட்டமுத்தலையயிற்றொகைமிடற்கழுவொடே. (௬)

செஞ்சுடர்ச்செறிமயிர்ச்சுருள்செறிந்தசெனியன்
நஞ்சுதட்டுருவுபெற்றிடைநடந்ததெனமா
மஞ்சுசுற்றியவயங்குகிரிபாதவிசையில்
பஞ்சுபட்டதுபடப்படியின்மேன்முடுகியே. (௭)

புண்டுளங்கியனகண்கள்கனல்பொங்கமழைசூழ்
விண்டுளங்கிடவிலங்கல்குலுங்கவெயிலும்
கண்டுளங்கதிர்குறைந்திடநெடுங்கடல்சுலாம்
மண்டுளங்கவய * வந்தகன்மனந்தளரவே. (௮)

புக்குவாளரிமுழங்குசெவியின்பொறியுறப்
பக்கமின்னுமணிமேருசிகரங்குழைபடச்
செக்கர்வான்மழைநிகர்த்தவெதிருற்றசெருவத்
துக்கவீரருதிரத்தினொளிர்செங்கையினொடே (௯)

படையொடாடவர்கள்பாய்புரவிமால்களிறுதேர்
நடையவாளரிகள்கோளுழுவைநண்ணியவெலாம்
அடையவாரியரவாலசையநேகவிதவந்
தொடையன்மாலைதுயல்வந்துலவுதோள்பொலியவே. (௧௦)

குன்றுதுன்றினவெனக்குமுறுகோயமதமா
ஒன்றினொன்றிடையடுக்கினதடக்கையுதவப்
பின்றுகின்றபிலனிற்பெரியவாயினொருபால்
மென்றுதின்றுவிளியாதுவிரியும்பசியொடே. (௧௧)

பன்னகாதிபர்பணாமணியறித்தவைபகுத்
தென்னவிண்ணவர் † விமானமிடையிட்டாவிடைத்
தன்னுகோளினொடுதாரகைதொடுத்ததழனிச்
சன்னவீரமினடமின்னுதடமார்பினொடுமே. (௧௨)

பம்புசெக்கரெரியொக்குமயிர்பக்கமெரியக்
கும்பமுற்றவுயர்நெற்றியின்விசித்தொளிகுலா
உம்பருக்கரசன்மால்கரியினோடையெயிறின்
‡ கிம்புரிப்பெரியதோள்வளையொடுங்கிளரவே. (௧௩)

* அந்தகன்-எல்லாப்பிராணிகளுக்கும் முடிவைச்செய்பவன்.
† விமானம்-தேவரூர்தி. ‡ கிம்புரி-யானைக்கொம்பிற்பூண்.

தங்குதிண் டரியகாளிமைதழைந்து தவழப்
பொங்குவெங்கொடுமையென்பதுபுழுங்கியெழுமா
மங்குபாதகம்விடக்கனல்வயங்கிநிமிரக்
கங்குலூசிவருகின் றகலிகாலமெனவே. (கச)

செற்றவாளுழுவைவன்செறியதட்டிருகுறச்
சுற்றிவாரணவுரித்தொகுதிநீவிதொடரக்
கொற்றமேவுதிசையானையின் மணிக்குலமுடைக்
கற்றைமாசுணம்விரித்துவரிகச்சொளிரவே. (கரு)

செங்கணங்கவரவின்பொருவில்செம்மணிவிராய்
வெங்கணங்கவலயங்களும்விலங்கவிரவிச்
சங்கணங்கிய * சலஞ்சலமலம்புதவளக்
கங்கணங்களுமிலங்கியகரம்பிரழவே. (கசு)

முந்துவெள்ளிமலைபொன்னின் மலையோடுமுணரப்
பந்துமுந்துகழம்பாடுபடலூடுபடர்வோன்
வந்துமண்ணினிடைவோனெனினும்வானிமையோர்
சிந்தையுள்ளும்விழியுள்ளுமுளனென்றதிறலோன், (கஎ)

பூதமத்தனையுமோர்வடிவுகொண்டுபுதிதென்
றோதவொத்தவுருமத்தனுருமொத்தகுரலன்
காதலித்தயனளித்தகடையிட்டகணிதப்
பாதலக்கமதவெற்பிடைபடைத்தவலியான். (கஅ)

சாரவந்தவல்விலங்கினமரங்கடரையில்
பேரவன்கிரிபிளந்துகவளர்ந்திகல்பெறு
வீரவெஞ்சிலையிஞேரெதிர்விராதனெனுமக்
கோரவெங்கணுருமேறனகொடுந்தொழிலினன். (ககூ)

நில்லுநில்லுமெனவந்துநிணமுண்டநெடுவெண்
பல்லும் † வல்லெயிறுமின்னுபகுவாய்முழைதிறந்
தல்லிபுல்லுமலரன்னமனையாளையொருகைச்
சொல்லுமெல்லையின்முகந்துயர்விசும்புதொடர. (உ0)

காளைமந்தாதுகண்டுகதம்வந்துகதுவத்
தோளின்வெஞ்சிலையிடங்கொடுதொடர்ந்துசுடர்வாய்
வாளிதங்கியவலங்கையவஞ்சனையடா
மீளுகெங்கறியென்பதுவிளம்பவவனும் (உக)

* சலஞ்சலம் வலம்புரி ஆயிரம் சூழ்ந்தசங்கு.
† வய்லெயிறு-வக்கிரதந்தம்.

ஆதிநான்முகன்வரத்தினெனதாவியகலேன்
ஏதியாவதுவுமின்றியுலகியாவுமிகலில்
சாதியாதனவுமில்லையுயிர்தந்தனனடா
போதிர்மாதிவளையுந்தியினிதென்றுபுகல. (உஉ)

வீரனுஞ்சிறிதுவெண்முறுவல்வெண்ணிலவுகப்
போரநிந்திலனிவன்றனதுபொற்புமுரணும்
தீருமெஞ்சியெனநெஞ்சினுறுசிந்தைதெரியாப்
பாரவெஞ்சிலையினுணொலிபடைத்தபொழுதே. (உ௩)

இலைகொள்வேலடலிராமனெழுமேகவுருவன்
சிலைகொணுணொடியகோதையொலியேறுதிரைநீர்
மலைகணீடுதலநாகர்பிலம்வானமுதலாம்
உலகமேழுமுருமேறெனவொலித்துரறவே. (உச)

வஞ்சகக்கொடியபூசைநெடுவாயின்மறுகும்
பஞ்சரக்கிளியெனக்கதறுபாவையைவிடா
நெஞ்சுளுக்கினனெனச்சிறிதுநின்றுநினையா
அஞ்சனக்கிரியனுனெதிரரக்கனழலா. (உரு)

பேய்முகப்பிணியறப்பகைஞர்பெட்பினுதிரம்
தோய்முகத்ததுகனத்ததுசுடர்க்குதிரையின்
வாய்முகத்திடைமிமிர்ந்துவடவேலைபருகும்
தீய்முகத்திரிசிகைப்படைதிரித்தெறியவே. (உசு)

திசையும்வானவருநின்றதிசைமாவுமுலகும்
அசையுமாலமெனவன்னவயின்மின்னிவரலும்
வசையின்மேருமுதன்மால்வரைகளேழின்வலிசால்
விசையவார்சிலையிராமனொருவாளிவிடவே. (உஎ)

இற்றதின்றொடிவ்வரக்கர்குலமென்றுபகலே
வெற்றவிண்ணினிடைநின்றுநெடுமீன்விழுவபோல்
சுற்றமைந்தசுடரெஃகமதிரண்டுதுணியா
அற்றகண்டமவையாசையினதந்தமுறவே. (உஅ)

சூரொடுங்கயிறுணிந்திறுதல்கண்டுசிறிதும்
போரொடுங்கிலன்மறங்கொடுபுழுங்கிகிருதன்
பாரொடுங்குறுகரங்கொடு * பருப்பதமெலாம்
வேரொடுங்கடிதெடுத்தெதிர்விசைத்துவிடலும். (உகூ)

வட்டமிட்டகிரியற்றுகவயங்குவயிரக்
கட்டமைந்தகதிர்வாளியெதிரேகடவலால்

* பருப்பதம்-பர்வதமென்பதன்சிதைவு.

விட்டவிட்டமலைமீளவவன்மெய்யில்விசையால்
பட்டபட்டவிடமெங்குமுடலூறுபடலும். (௩௦)

ஓமராமரையொருங்குமுணர்வோருணர்வுறும்
நாமராமவரைநல்லறநிறுத்தநனுகித்
தாமராவணைதுறந்துதரைநின்றவரையோர்
மா * மராமரமிறுத்ததுகொடெற்றவரலும். (௩௧)

ஏறுசேவகனிரண்டினொடிரண்டுகணையால்
வேறுவேறுதுணிசெய்ததுவிழுத்துவிசையால்
மாறுமாறுநிமிர்தோளிடையுமார்பினிடையும்
ஆறுமாறுமயில்வெங்கணையழுத்தவவனும். (௩௨)

மொய்த்தமுட்டனதுடற்றலைதொளைப்பமுடுகிக்
கய்த்தலத்தினிமிரக்கடிதுகன்றிவிசிறும்
மெய்த்தமெய்ப்பெரியகேழலெனவெங்கும்விசையில்
தய்த்தவக்கணைதெறிப்பமெய்சிலிர்த்துதறவே. (௩௩)

எரியின்வார்கணையிராமன்விடவெங்குசிலையா
துருவியோடமறமோடுதல்செயாவுணர்விஞன்
அருவிபாயும்வரைபோல்குருதியாறுபெருகிச்
சொரிய † வேகவலிகெட்டுணர்வுசோர்வுறுதலும். (௩௪)

மெய்வரத்தினன்மிடற்படைவிடப்படுகிலன்
செய்யுமற்றுமிகலென்றுசினவாளுருவிவன்
கய்துணித்துமெனமுந்துகடுகிப்படர்புயத்
தெய்வின்மற்பொருவுதோளிருவரேறநிருதன். (௩௫)

உண்டெழுந்தவுணர்வவ்வயினுணர்ந்துமுடுகித்
தண்டெழுந்தனையதோள்கொடுசுமந்துதழுவிப்
பண்டெழுந்தனதுவன்கதிபதிற்றின்முடுகிக்
கொண்டெழுந்தனன்விழுந்தழிகொழுங்குருதியான். (௩௬)

முந்துவான்முகடுறக்கடிதுமுட்டிமுடுகிச்
சிந்துசோரியொடு ‡ சாரிகைதிரிந்தனனரோ
வந்துமேருவினைநாடொறும்வலஞ்செய்துழல்வோர்
இந்துசூரியரையொத்திருவரும்பொலியவே. (௩௭)

சுவணவண்ணனெடுகண்ணனுறைதோளன்விசைதோ
அவணவிண்ணினிடைநிமிர்ந்துபடர்கின்றவனறம்

* மராமரம்-ஆச்சாமரம். † வேகவலி-வேகமும் வலியுமென்றுமாம்.
‡ சாரிகை-மண்டலாகாரமானகதி.

சிவண தன்னசிறைமுன்னவரொடேகுசெலவத்
* துவணனென்னுநெடுமன்னவனுமொத்தனனரோ. (௩௮)

மாதயாவுடையதன்கணவன்வஞ்சன்வினையில்
போதலோடுமலமந்தனள்புலர்ந்துபொடியில்
கோதையோடுமொசிகொம்பெனவிழுந்தனள்குலச்
சீதைசேவல்பிடியுண்டசிறையன்னமனையாள். (௩௯)

பின்னையேதுமுதவுந்துணைபெறாளுரைபெறாள்
மின்னையேயிடைநுடங்கிடவிரைந்துதொடர்வாள்
அன்னையேயனையவன்பினறவோர்கடமைவிட்
டென்னையேநுகர்தியென்றனளெழுந்துவிழுவாள். (௪௰)

அழுதுவாய்குழறியாருயிரழுங்கியலையா
எழுதுபாவையனையாணிலையுணர்ந்திளையவன்
தொழுதுதேவிதுயர்கூரவிளையாடன்றொழிலோ
பழுதுவாழியெனவூழிமுதல்வன்பகர்வுறும். (௪௧)

ஏகநின்றநெறியெல்லைகடிதேறியினிதிற்
போகனன்றெனநினைந்தனனிவன்பொருவிலோய்
சாகவின்றுபொருளன்றெனநகுந்தகைமையோன்
வேகவெங்கழலினுந்தலும்விராதன்விழவே. (௪௨)

தோளிரண்டும்வடிவாள்கொடுதுணித்துவிசையால்
மீளிமொம்பினர்குதித்தலும்வெகுண்டுபுருவத்
தேளிரண்டுநெரியச்சினவுசெங்கணரவக்
கோளிரண்டுசுடருந்தொடர்வதிற்குறுகலும். (௪௩)

புண்ணிடைப்பொழியுயிர்ப்புனல்பொலிந்துவரவும்
விண்ணிடைப்படர்தல்விட்டெழுவிகற்பநினையா
எண்ணுடைக் † குரிசிலெண்ணியிளையோயிவனையிம்
மண்ணிடைக்கடிதுபொத்துதல்வழக்கெனலுமே. (௪௪)

மதநல்யானையனையானிலம்வகிர்ந்தகுழிவாய்
‡ நதமுலாவுநளிநீர்வயினழுந்தநவைதீர்
அதவமாய்நறுநெயுண்டலகிலன்பர்கருதிற்
றுதவுசேவடியினுலமனுந்துதலுமே. (௪௫)

---

* உவணன் - ஸுபர்ணனென்பதன் சிதைவு; அழகிய சிறகுடையவனென்று பொருள். † குரிசில் - பெருமையிற்சிறந்தோன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்.

‡ நதம் - மேற்குநோக்கி செல்லுமாறு; ஈண்டு நதி, நருமதை இரண்டிலொன்றைக் கொள்ளலாம்.

பட்டதன்மையுமுணர்ந்துபடர்சாபமிடமுன்
கட்டவன்பிறவிதந்தகடையானவுடரூன்
விட்டுவிண்ணிடைவிளங்கினன்விரிஞ்சனெனவோர்
முட்டைதந்ததனில்வந்தமுதன்முன்னவனினே. (சசு)

பொறியினொன்றியயல்சென்றுதிரிபுந்தியுணரான்
நெறியினொன்றிநிலைநின்றநினைவுண்டதனினும்
பிறிவிலன்புதனிபண்டுடையபெற்றிதனினும்
அறிவுவந்துதவநம்பனையறிந்துபகர்வான். (சஎ)

வேறு.

வேதங்களறைகின்றவுலகெங்கும்விரிந்தனவுன்
பாதங்களிவையென்னிற்படிவங்களெப்படியோ
ஓதங்கொள்கடலன்றி * யொன்றினொடொன்றுறவ்வாப்
பூதங்களொடுமுறைநங்காலவையுன்னைப்பொறுக்குமோ. (சஅ)

கடுத்தகராங்கதுவலிமிர்கையெடுத்துமெய்கலங்கி
உடுத்தநிசையனைத்தினுஞ்சென்றுறுவிகொள்ளவுறுதுயரால்
அடுத்தபெருந்தனிமூலத்தரும்பரமேபரமேயென்
றெடுத்தொருவாரணமழைப்பநீயோவன்றேனென்றாய். (சகூ)

புறங்காணவகங்காணப்பொதுமூகத்தினருணுக்கம்
இறங்காததாமரைக்கணெம்பெருமாஅனியம்புதியால்
அறங்காத்தற்குனக்கொருவராருமொருதுணையின்றிக்
கறங்காகுமெனத்திரியநீயேயோகடவாய்தான். (ருo)

துறப்பதேதொழிலாகத்தோன்றினோர்தோன்றியக்கால்
மறப்பரோதம்மையதுவன்றாகின்மற்றவர்போல்
பிறப்பரோவெவர்க்குந்தாம்பெற்றபதம்பெறலரிதோ
இறப்பதேபிறப்பதேயெனும்விளையாட்டினிதுகந்தோய். (ருக)

பனிநின்றபெரும்பிறவிக்கடல்கடக்கும்படிபற்றி
நனிநின்றசமயத்தோரெல்லாருநன்றென்னத்
தனிநின்றதத்துவத்தின்றகைமூர்த்திநீயாகில்
இனிநின்றமுதற்றேவரென்கொண்டென்செய்வாரே. (ருஉ)

ஓயாதமலரயனேமுதலாகவுளராகி
மாயாதவானவர்க்குமற்றொழிந்தமன்னுயிர்க்கும்

---

* பூதங்கள்-பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம் என்பன. நிலம் நிலையாயிருத்தலும், கந்தமுடையதாதலும்; நீர்-பாய்ந்தோடுதலும், குளிர்ந்தபரிசமுடையதாதலும்; தீ-மேல்நோக்கி எரிதலும், சுடும்பரிசமுடையதாதலும்; விசும்பு-எங்கும் பரவியிருத்தலும், சப்தகுணமுடையதாதலுமாகிய தன்மைவேறுபாடுகளைப்பற்றி ஒன்றினொடொன்றுறவ்வாப்பூதங்கள் என்றார்

நீயாகின் முதற்றுதைநெறிமுறையாலீன்றெடுத்த
தாயாவார்யாவரேதருமத்தின் றனிமூர்த்தி. (ருங)

நீயாதிபரம்பரமுநின்னவேயுலகங்கள்
ஆயாதசமயமுநின்னடியவேயயலில்லை
தீயாரிஞெளித்தியால்வெளிநின்றுற்றீங்குண்டோ
வீயாதபெருமாயைவிளையாட்டும்வேண்டுமோ. (ருச)

தாய்தன்னையறியாதகன்றில்லைதன்கன்றை
யாயுமறியும்முலகின்றுயாகினைய
நீயறிதியெப்பொருளுமவையுன்னைநிலையறியா
மாயையிதுவென்கொலோவாராதேவரவல்லாய். (ருரு)

பன்னலாமென்றுலகம்பலபலவுநினையுமால்
உன்னலாற்பெருந்தெய்வமுயர்ந்துளோரொழுக்கன்றே
அன்னவூர்தியைமுதலாமந்தணர்மாட்டருந்தெய்வம்
நின்னலாலில்லாமைநெறிநின்றூர்நினையாரோ. (ருசு)

பொருவரியசமயங்கள்புகல்கின்றபுத்தேளிர்
இருவினையுமுடையார்போலருந்தவநின்றியற்றுவார்
திருவுறையுமணிமார்பநினக்கென்னைசெயற்பால
ஒருவினையுமில்லார்போலுறங்குதியாலுறங்காதாய். (ருஎ)

அரவாகிச்சுமத்தியாலயிலெயிற்றினேந்துதியால்
ஒருவாயின்விழுங்குதியாலோரடியாலொளித்தியால்
திருவானநிலமகளையிஃதறிந்தாற்சீறுளோ!
மருவாருந்துழாயலங்கன்மணிமார்பின்வைகுவாள். (ருஅ)

மெய்யைத்தான்சிறிதுணர்ந்துநீவிதித்தமன்னுயிர்கள்
உய்யத்தானாகாதோவுனக்கென்னகுறையுண்டோ
வய்யத்தார்வானத்தார்மழுவாளிக்கன்றளித்த
* அய்யத்தாற்சிறிதையந்தவிர்ந்தாருமுளரையா. (சுக)

அன்னமாயருமறைகளறைந்தாய்நீயவையுன்னை
முன்னமாரோதுவித்தாரெல்லாருமுடிந்தாரோ?
பின்னமாயொன்றுதல்பிறிந்தேயோபிறியாதோ!
என்னமாமாயமிவையேனமாய்மண்ணிடந்தாய்!. (சுO)

ஒப்பிறையும்பெறலரியவொருவாமுன்னுவர்துறையும்
அப்புறையுநேர்ந்தடியேனருந்தவத்தாலனுகுறலால்
இப்பிறவிக்கடல்கடந்தேனினிப்பிறவேனிருவினையும்
துப்புறழுநீர்த்தசுடர்த்திருவடியாற்றுடைத்தாய்நீ. (சுக)

* ஐயம்-பிச்சையும் சந்தேகமாதல் "ஐயமே பிச்சையேற்கு மோடறு மானம் பிச்சை" என்பதனாலறிக.

வேறு.

இற்றெலாமியம்பினன்
நிற்றலோடுநீயிவ்வா
றுற்றவாறுணர்த்தென
வெற்றியான்விளம்பினன். (சுஉ)

கள்ளமாயவாழ்வெலாம்
விள்ளஞானம்வீசுதாள்
வள்ளல்வாழிகேளென
உள்ளவாறுணர்த்தினன். (சுங)

இம்பருற்றிதெய்தினேன்
வெம்புவிற்கைவீரபேர்
தும்புருத் * தனதன்சூழ்
அம்பரத்துளேனரோ. (சுச)

ஆடரம்பைநீடரங்
கூடுநின்றுபாடலால்
ஊடுவந்துகூடவிக்
கூடுவந்துகூடினேன். (சுரு)

கரக்கவந்தகாமநோய்
துரக்கவந்ததோமினல்
இரக்கமின்றியேவினன்
அரக்கன்மைந்தனாபினேன். (சுசு)

அன்னயக்கணதியாய்
இன்னநீருமீகையான்
நின்னதாளினீங்குமென்
றன்னுமெற்குணர்த்தினன். (சுஎ)

வலஞ்செய்திந்தவானெலாம்
நலிஞ்சுதின்னநாமவேல்
பொலிஞ்சவென்றிபூணுமக்
கிலிஞ்சன்மைந்தனாயினேன். (சுஅ)

அன்றுமூலமாதியாய்
இன்றுகாறுமேமையேன்
நன்றுதீதுநாடலேன்
நின்றுநீயதேடினேன். (சுகூ)

† தூண்டநின்றதொன்மைதான்
வேண்டநின்றவேதநூல்
பூண்டநின்பொலங்கொடாள்
தீண்டவின்றுதேறினேன். (எ0)

தெறுத்துவந்ததீதெலாம்
அறுத்தவுன்னையாதனேன்
ஒறுத்ததன்மையூழியாய்
பொறுத்தியென்றுபோயினன். ()

தேவுகாதல்சீரியோன்
ஆவிபோயினனெனப்
பூவுலாவுபூவையோ
டேவலாருமேகினர். (எஉ)

கய்கொள்காலவேலினர்
மெய்கொள் ‡ வேதமெய்யர்வாழ்
மொய்கொள்சோலைமுன்னினர்
வய்கருனும்வைகினர். (எங)

முதலாவது-விராதன்வதைப்படலம்-முற்றிற்று.

ஆகு திருவிருத்தம்-எங.



* தனதன்-சம்பத்தைக்கொடுக்கின்றவன்.

† தூண்டுதல்-உண்டாக்கிவளர்த்தல்.

‡ வேதமெய்யர்-வேதவிதிப்படி நித்திய நைமித்திக கருமங்களிற் சிறிதும் வழுவாது ஒழுகுபவர்.

## இரண்டாவது

# சரபங்கர் பிறப்பு நீங்குபடலம்.

குரவங்குவிகோங்கலர்கொம்பினொடும்
இரவங்கணுறும்பொழுதேகினரால்
சரவங்கனிருந்துதவங்கருது
மரவங்கிளர்கோங்கொளிர் * வாசவனம். (௧)

செவ்வேலவர்சென்றனர்சேரலுறும்
அவ்வேலையினெய்தினனாயிரமாம்
தவ்வாதிரவும்பொலிதாமரையின்
வெவ்வேறலர்கண்ணினன்விண்ணவர்கோன். (௨)

அன்னச்செலவிற்படிமேலயல்சூழ்
பொன்னிற்பொலிவாரணிபூணொளிமேல்
மின்னிற்செறிகற்றைவிரிந்தனபோல்
பின்னிச்சுடரும்பிறழ்பேரொளியான். (௩)

வானிற்பொலிதோகையர்கண்மலர்வண்
கானிற்படர்கட்களிவண்டொடுகார்
மேனித்திரு † நாரதன்வீணையிசைத்
தேனிற்பொலியுஞ்செவிவண்டுடையான். (௪)

அனையின்றுறையைம்பதொடைம்பதுநூல்
வினையின்றொகைவேள்விசிரம்பியமா
முனைவன்முதுதேவரின்மூவரலார்
புனையும்முடிதுன்றுபொலன்கழலான். (௫)

செம்மாமலராணிகர்தேவியொடும்
மும்மாமதவெண்ணிறமுன்னுயர்தாள்
வெம்மாமிசையான்விரிவெள்ளிவிளங்
கம்மாமலையண்ணலையேயனையான். (௬)

தானின்றயனின்றொளிர்தண்கதிரோன்
யானின்றதெனென்றொளியெஞ்சிடமா
வானின்றபெரும்பதம்வந்துருவாய்
மேனின்றெனநின்றொளிர்வெண்குடையான். (௭)

---

* வாசவனம்-வாசனையையுடைய ஆச்சிரமம், வாசஸ்தானமாகிய சோலை எனினும் பொருந்தும்.

† நாரதன் என்பதற்கு ஆத்மஞானத்தை உபதேசிப்பவனென்றும், நரர்களுக்கு உள்ள ஒற்றுமையைப் பிளப்பவனென்றும் இருவகையாகப் பொருள் கொள்ளலாம்.

திசைகட்டியமால்கரிதெட்டமதப்
பசைகட்டினகிட்டினபற்பலபோர்
விசைகட்டழிதானவர்விட்டவர்பேர்
இசைகட்டியவொத்திவர் * சாமரையான் (அ)

தீர்வித்திரிசெங்கதிர்தங்குவதோர்
ஊருற்றதெனப்பொலியொண்முடியான்
போர்வித்தகனேமிபொறுத்தவன்மா
மார்விற்றிருவிற்பொலிமாலையினான். (கூ)

செற்றிக்கதிரிற்பொலிசெம்மணியின்
கற்றைச்சுடர்விட்டெரிகஞ்சுகியான்
வெற்றித்திருவின்குளிர்வெண்ணகைபோல்
சுற்றிக்கிளருஞ்சுடர்தோள்வளையான். (க0)

பல்லாயிரமாமணிபாடமுறுந்
தொல்லாரணிகால்சுடரின்றொகைதாம்
எல்லாமுடனுயெழலானயலே
வில்லாலொளிர்மேகமெனப்பொலிவான். (கக)

மானுவுலகந்தனின்ம்ன்றல்பொருந்
தேனுறுநலஞ்செறிதொங்கலினன்
மீனேகெடுத்துயர்வென்றியவாம்
வானுடியர்கண்ணெனும்வாளுடையான். (கஉ)

வெல்வானசையால்விசையால்விடுகொள்
எல்வான்சுடர்மாலையிராவணன்மேல்
செல்வாலுமருதகிறம்பிறழா
வல்வாய்மடியாவயிரப்படையான். (கங)

நின்றானெதிர்நின்றநெடுந்தவனுஞ்
சென்றானெதிர்கொண்டுசிறப்பமையா
என்றானிவணெய்தியவாறெனலும்
பொன்றாதபொலங்கழலோன்புகலும் (கச)

நின்னாலியனீதிநெடுந்தவமின்
றென்னனும்விளம்பரிதென்றுணர்வான்
அந்நான்முகனின்னையழைத்தனனல்
பொன்னார்சடைமாதவபோதுதியால். (கரு)

---

* சாமரை - சமரமென்னும் மானினது வாலின்மயிராற் செய்யப்பட்டதொரு இராஜ சின்னம்.

எந்தாயுலகியாவையுமெவ்வுயிரும்
தந்தானுறையுந்நெறிதந்தனனால்
நந்தாதபெருந்தவநாடதுநீ
வந்தாயெனினின்னெதிரேவருவான். (கசு)

எல்லாவுலகிற்குமுயர்ந்தமையான்
சொல்லாவகைநீயுணர்தொன்மையையா
னல்லாயுடனேநடநீயெனலும்
அல்லேனென * வாலறிவானறைவான். (கஎ)

சொற்பொங்குபெரும்புகழோய்தொழின்மாய்
சிற்பங்களின்வீவனசேர்குவெனே
அற்பங்கருதேனெனருந்தவமோ
† கற்பம்பலசென்றதுகாணுதியால். (கஅ)

சொற்றுந்தரமன்றிது சூழ்கழலாய்
பெற்றும்பெறுகில்லதோர்பெற்றியதே
மற்றென்பலசொல்லிவண்வந்து தவம்
முற்றும்பகருனுமுடித்தனனால். (கக)

சிறுகாலையிலாநிலையோதிரியா
குறுகாநெடுகாகுணம்வேறுபடா
உறுகாலகிளர்பூதமெலாமுகினும்
மறுகாநெறியெய்துவென்வானுடையாய் (உ0)

என்றின்னவிளம்பிடுமெல்லையின்வாய்
வன்றிண்சிலைவீரரும்வந்தனுகா
ஒன்றுங்கிளரோதையினாலுணர்வார்
நின்றென்னைகொலின்னதெனாநினைவார் (உக)

கொம்பத்தனநாலொளிர்கோள்வயிரக்
கம்பக்கரிநின்றதுகண்டனமால்
இம்பர்த்தலைமாதவர்பாலிவனும்
உம்பர்க்கரசெய்தினனென்றுணரா. (உஉ)

மானேயனையாளொடுமைந்தனையும்
பூநேர்பொழிலின்புறமேகிறுவா
ஆனேறெனவாளரியேறிதெனத்
தானேயவ்வகன்பொழில்சாருதலும். (உங)

---

* வால் அறிவான் தத்துவஞானத்தையுடையவர். வால்-தூய்மை.
† கற்பம்-யுகம்.

கண்டாமலையாயிரமுங்கதுவக்
கண்டாமரைபோர்கருணாயிரெனக்
கண்டானிமையோரிறை * காசினியின்
கண்டானருநான்மறையின்கனியை (உச)

காணுமனநொந்துகவன் றனால்
ஆணுதனையந்தணர்நாயகனை
நாணாளும்வணங்கியநான்முடியால்
தூணுகியதோள்கொடவற்றெழுவான். (உரு)

வேறு.

துவசமார்தொல்மருட்டுன் ஞரைச்செற்றுஞ்
சுறுதிப்பெருங்கடலின்சொற்பொருள்கற்பித்தும்
திவசமார்நல்லறத்தின்செந்நெறியினுய்த்துந்
திருவளித்தும்வீடளித்துஞ் † சிங்காமைத்தங்கள்
கவசமாயாருயிராய்த்தவமாய்க்கண்ணாய்
கடையிலாஞானமாய்க்காப்பானைகாணு
அவசமாய்ச்சிந்தையழிந்தயலேநின்று
னறியாதான்போலவறிந்தவெலாஞ்சொல்வான். (உசு)

தோய்ந்தும்பொருளனைத்துந்தோயாதுநின்ற
சுடரேதொடக்கறுத்தோர்சுற்றமேபற்றி
நீய்ந்தவரியநெடுங்கருணைக்கெல்லா
நிலயமேவேதநெறிமுறையினேடி
ஆய்ந்தவுணர்விணுணர்வேபகையா
லலைப்புண்டடியேமடிபோற்றவந்நாள்
ஈந்தவரமுதவவெய்தினையேயெந்தா
யிருநிலத்தவோநின் ‡ னிணையடித்தாமரைதாம். (உஎ)

மேவாதவரில்லைமேவினருமில்லை
வெளியோடிருளில்லைமேல்கீழுமில்லை
மூவாமையில்லைமூத்தமையுமில்லை
முதலிடையோடிறில்லைமுன்னொடுபின்னில்லை
தேவாயுகிவ்வோநீசென்றநிலையென்றாற்
சிலையேந்திவந்தெம்மைச்சேவடிகணோவக்
காவாதொழியிற்பழிபெரிதோவன்றேற்
கருங்கடலிற்கண்வளராய்கைம்மாறுமுண்டோ. (உஅ)

---

* காசினி காஸ்யபீ என்னும் வடசொல்லின் சிதைவு; பரசுராமராற் கச்யபமுனிவருக்கு யக்ஞதக்ஷிணையாகக் கொடுக்கப்பட்டதனால் பூமிக்குஇப்பெயர். † சிங்காமை அழியாமை. ‡ இணையடிஉபயபாதம்.

நாழிகைவைதீருலகெலாமாக
நளினத்துநீதந்தநான்முகனூர்தாமே
ஊழிபலபலவுநின்றளந்தாலொன்று
மூலவாப்பெருங்குணத்தவுத்தமனேமேனாள்
தாழிதரையாகத்தண்டயிர்நீராகத்
தடவரையேமத்தாகத்தாமரைக்கைநோவ
ஆழிகடைந்தமுதமெங்களுக்கேயீந்தா
யவுணர்கடாநின்னடிமையல்லாமையுண்டோ. (உகூ)

ஒன்றாகிமூலத்துருவம்பலவாகி
யுணர்வுமுயிரும்பிறிதாகியூழி
சென் * றாசறுங்காலத்தந்நிலையதாகித்
திறத்துலகந்தானாகிச்செஞ்சவேநின்ற
நன்றாயஞானத்தனிக்கொழுந்தேநங்க
ணவைதீர்க்குநாயகமேநல்வினையேநோக்கி
நின்றாரைக்காத்தியபர்பேரைக்காய்தி
நிலையில்லாத்தீவினையுநீதந்ததன்றே. (௩0)

வல்லைவரம்பில்லாதமாயவினைதன்னான்
மயங்கினரோடெய்திமதிமயங்கிமேனாள்
அல்லையிறையவனீயாதியெனப்பேதுற்
றலமருவேமுன்னையறப்பயனுண்டாக
எல்லைவலயங்கணின்னுழையென்றந்நா
ளெரியோனைத்தீண்டி † யெழுவரெனநின்ற
தொல்லைமுதன்முனிவர்சூளுற்றபோதே
தொகைநின்றவையந்துடைத்திலையோவெந்தாய்! (௩க)

வேறு.

இன்னபலநினைந்தேத்தினனியம்பாத்
துன்னுதவிடையுளதெனநனிதுணிவான்
தன்னிகர்முனிவனைத்தரவிடையென்னாப்
பொன்னொளிர்னெடுமுடிப்புரந்தரன்போனான். (௩உ)

போனவனகநிலைபுலமையினுணர்வான்
வானவர்தலைவனைவரவெதிர்கொண்டான்
ஆனவனடிதொழவருள்வரவமுதான்
தானடவிடவகைதழுவினனுழைவான். (௩௩)

* ஆசறுதல்-முடிதல். † எழுவர்-சப்தருஷிகள் -அத்தரி, பிருகு, குத்ஸர், வசிஷ்டர், கௌதமர், காஸ்யபர், ஆங்கிரஸர்.

ஏழையுமிளவலும்வருகெனவினிதா
வாழியவவரொடும்வந்தனன்மகிழ்வால்
ஊழியின்முதன்முனியுறையுளையணுகா
ஆழியில்விழிதுயிலவனெனமகிழ்வான். (௩௪)

அவ்வயினழகனும்வைகினனறிஞன்
செவ்வியவறவுரைசெவிவயினுதவ
நவ்வியின்விழியவளொடுநனியிருளைக்
கவ்வியசிசியொருகடையுறுமளவில். (௩௫)

விலகிடுநிழலினன்வெயில்விரியயில்வாள்
இலகிடுசுடரவனிசையனதிசைதோய்
அலகிடலரியதனவிர்கரநிரையால்
உலகிடுநிறையிருளுறையினையுரிவான். (௩௬)

ஆயிடையறிஞனுமவனெதிரழுவத்
தீயினைநுழைவதொர்தெளிவினையுடையான்
நீய்விடைதருகெனநிருவினனெறியால்
காயெரிவரன்முறைகடிதினினிடுவான். (௩௭)

வரிசிலையுழவனுமறையுழவனைநீ
புரிதொழிலெனையதுபுகலுதியெனலும்
திருமகடலைவசெய்திருவினையுறயான்
எரிபுகநினைகுவெனருள்கெனவிறைவன். (௩௮)

யான்வருமமைதியினிதுசெயலெவனோ
மான்வருதனியுரிமார்பினையெனலும்
மீன்வருகொடியவன்விறலடுமறவோன்
ஊன்வருமுவகையினுரைநனிபுரிவான். (௩௯)

ஆயிரமுகமுளதவமயர்குவெனான்
நீயிவண்வருதிகொலெனுநிலையுடையேன்
போயினவிருவினைபுகலுறுவிதியால்
மேயினையினியொருவினையிலைவிறலோய். (௪௦)

இந்திரனருளினனிருதிசெய்பகலா
வந்தனன்மருவுதிமலரயனுலகம்
தந்தனனெனவதுசாரலெனுரவோய்
அந்தமிலுயர்பதமடைதலைமுயல்வேன். (௪௧)

ஆதலினிதுபெறவருளெனவுரையாக்
காதலியவளொடுகதழெரிமூழ்கிப்

போதலைமருவினனொருநேறிபுகலா
வேதமுமறிவருமிகுபொருளுணர்வோன். (சஉ)

தேவருமுனிவருமுறுவதுதெரிவோர்
* மாவருநறுவிரைமலரயன்முதலோர்
ஏவருமறிவினிலிருவினையொருவிப்
போவதுகருதுமவ்வருநெறிபுக்கான். (சங)

அண்டமுமகிலமுமறிவருநெறியால்
உண்டவனொருபெயருணர்குநருறுபே
றெண்டவநெடிதெனினிறுதியிலவனைக்
கண்டவருறுபொருள்கருதுவதெளிதே. (சச)

உ-வது சரபங்கர்பிறப்புநீங்குபடலம். முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-ககஎ.

---

## ங-வது அகத்தியப்படலம்.

அனையவனிறுதியினமைவுநோக்கலின்
இனியவரின்னலினிரங்குநெஞ்சினர்
குனிவருதிண்சிலைக்குமரர்கொம்பொடும்
புனிதனதுறையுணின்றரிதிற்போயினர். (க)

மலைகளுமரங்களுமணிக்கற்பாறையும்
அலைபுனனதிகளுமருவிச்சாரலும்
இலைசெறிபழுவமுமினியசூழலும்
நிலைமிகுதடங்களுமினிதுநீங்கினர். (உ)

பண்டையவயன்றரு † பாலகில்லரும்
மூண்டருமோனருமுதலினோர்களைத்
தண்டகவனத்துறைதவத்துளோர்கடாம்
கண்டனரிராமனைக்களிக்குஞ்சிந்தையார். (ங)

கனைவருகடுஞ்சினத்தரக்கர்காயவோர்
வினைபிறிதின்மையின்வெதும்புகின்றனர்
அனைவருகானகத்தமுதளாவிய
புனைவரவுயிர்வருமுலைவைபோல்கின்றார். (ச)

---

* மா-அழகும் ஒளியுமாம். † பாலகில்லர்-வாலகில்லியர், பகவானது மயிரினின்றுந் தோன்றினவர்.

ஆய்வரும்பெருவ்லியரக்கர்நாமமே
வாய்வெரீஇயலமருமறுக்கநீங்கினர்
தீய்வருவனத்திடையிட்டுத்தீர்ந்ததோர்
தாய்வரநோக்கியகன்றின்றன்மையார். (௫)

கரக்கருங்கடுந்தொழிலரக்கர்காய்தலில்
பொரற்கிடமின்மையிற்புழுங்கிச்சோருநர்
அரக்கரென்கடலிடையாழ்கின்றுரொரு
மரக்கலம்பெற்றனமறுக்கநீங்கினர். (௬)

தெரிஞ்சுறநோக்கினர்செய்தசெய்தவம்
அருஞ்சிறப்புதவநல்லறிவுகைதர
விரிஞ்சுறப்பற்றியபிறவிவெந்துயர்ப்
பெருஞ்சிறைவீடுபெற்றனையபெற்றியார். (௭)

வேண்டினவேண்டினர்க்களிக்குமெய்த்தவம்
பூண்டுளராயினும்பொறையினுற்றலால்
மூண்டெழுவெகுளியைமுதலினீக்கினர்
ஆண்டுறையரக்கராலலைப்புண்டாரரோ (௮)

எழுந்தனரெய்தினரிருண்டமேகத்தின்
கொழுந்தெனநின்றவக்குரிசில்வீரனைப்
பொழிந்தெழுகாதலிற்பொருந்தினுரவன்
தொழுந்தொறுந்தொழுந்தொறுமாசிசொல்லுவார். (௯)

இனியதோர்சாலைகொண்டேகியிவ்வயின்
கனியுறையென்றவர்கமையநல்கித்தாம்
தனியிடஞ்சார்ந்தனர்தங்கிமாதவர்
அனைவருமெய்தினரல்லல்சொல்லுவான். (௧௦)

எய்தியமுனிவரையிறைஞ்சியேத்துவந்
தய்யனுமிருந்தனனருளெனென்றலும்
வய்யகங்காவலன்மைந்தவந்ததோர்
வெய்யவெங்கொடுந்தொழில்விளைவுகேளென. (௧௧)

இரக்கமென்றொருபொருளிலாதநெஞ்சினர்
அரக்கரென்றுளர்சிலரறத்தினீங்கினர்
நெருக்கவும்யாம்படர்நெறியலாநெறி
துரக்கவுமருந்தவத்துறையுணீங்கினேம். (௧௨)

வல்லியம்பலதிரிவனத்துமானென
எல்லியும்பகலுநொந்திரங்கியாற்றலெம்

சொல்லியவறநெறித்துறையுநீங்கினெம்
வில்லியன்மொய்ம்பிஞய்வீடுகோண் * குமோ (கங)

மாதவத்தொழுகலெமறைகள்யாவையும்
ஓதலெமோதுவார்க்குதவலாற்றலெம்
† மூதெரிவளர்க்கிலெமுறையினீங்கினேம்
ஆதலி † னந்தணரேயுமாகிலேம். (கச)

இந்திரனெனினவனரக்கரேயின
சிந்தையிற்சென்னியிற்கொள்ளுஞ்செய்கையான்
எந்தைமற்றியாருளரிடுக்கணீக்குவார்
வந்தனையாஞ்செயத்தவத்தின்மாட்சியால். (கரு)

உருளுடைநேமியாலுலகையோம்பிய
பொருளுடைமன்னவன்புதல்வபோக்கிலா
இருளுடைவைகலேமிரவிதோன்றிஞய்
அருளுடைவீரநின்னபயம்யாமென்றார். (கசு)

வேறு.

புகல்புகுந்திலரேற்புறத்தண்டத்தின்
அகல்வரேனுமென்னம்பொடுவீழ்வரால்
தகவிறன்பர்தவிருதிர்நீரெனப்
பகலவன்குலமைந்தன்பணிக்கின்றான். (கஎ)

வேந்தன்வீயவும்யாய்வரமேவவும்
ஏந்தலெம்பிவருந்தவுமென்னகர்
மாந்தர்வன்றுயர்கூரவும்யான்வனம்
போந்ததென்னுடைப்புண்ணியத்தாலென்றான். (கஅ)

அறந்தவாநெறியந்தணர்தன்மையை
மறந்தபுல்லர்வலிதொலையேனெனின்
இறந்துபோகினுநன்றிதுவல்லது
பிறந்தியான்பெறும்பேறென்பதியாவதோ. (கக)

நிவந்தவேதியர்நீவிருந்தியவர்
கவந்தபந்தக்களிநடங்கண்டிட
அமைந்தவில்லுமருங்கணைத்தூணியும்
சுமந்ததோளும்பொறைத்துயர்தீருமால். (உ0)

ஆவுக்காயினுமந்தணர்க்காயினும்
யாவர்க்கனுனுமெளியவர்க்காயினும்

* கும்-தன்மைப் பன்மை விகுதி, எதிர்காலம் காட்டிற்று. † மூதெரி காருகபத்தியம், ஆகவனீயம் தக்ஷிணாக்கினி என்பவை. ‡ அந்தணர்-ஈண்டு முனிவரை.

சாவப்பெற்றவரேதகைவானுறை
தேவர்க்குந்தொழுந்தேவர்களாகுவார். (உக)

சூரறுத்தவனுஞ்சுடர்நேமியும்
ஊரறுத்தவொருவனுமோம்பினும்
ஆரறத்தினொடன்றிநின்றூரவர்
வேரறுப்பென்வெருவன்மினீரென்றான். (உஉ)

உரைத்தவாசகங்கேட்டுவந்தோங்கிட
இரைத்தகாதலரேகியவின்னலர்
திரித்தகோலினர் * தேமறைபாடினர்
நிருத்தமாடினர்நின்றுவிளம்புவார் (உங)

தோன்றனீமுனியிற்புவனத்தொகை
மூன்றுபோல்வனமுப்பதுகோடிவந்
தேன்றபோதுமெதிரலவென்றலிற்
சான்றுவேதந்தவம் † பெருஞானமே (உச)

அன்னதாகலினேயினவாண்டெலாம்
இன்னல்காத்திங்கினிதுறைவாயெனச்
சொன்னமாதவர்பாதந்தொழுதுயர்
மன்னர்மன்னவன்மைந்தனும்வைகினான் (உரு)

ஐந்துமைந்துமமைதியினண்டவண்
மைந்தர்தீதிலர்வைகினர்மாதவர்
சிந்தையெண்ணியகத்தியற்சேர்கென
இந்துநன்னுதறன்னொடுமேகினார் (உசு)

விடரகங்களும்வேய்செறிகானமுந்
படருஞ்சின்னெறிபைப்பையநீங்கினார்
சுடருமேனிச்சுதீக்கணனென்னுமவ்
விடரிலானுறைசோலைசென்றேய்தினார். (உஎ)

அருக்கனன்னமுனிவனையவ்வழிச்
செருக்கில்சிந்தையர்சேவடிதாழ்தலும்
இருக்கவீண்டென்றினியனகூறினன்
மருக்கொள்சோலையின்மைந்தரும்வைகினார். (உஅ)

வைகும்வைகலின்மாதவன்மைந்தன்பால்
செய்கையாவையுஞ்செய்திவட் ‡ செல்வநீ

---

* தேமறை. இனிப்பான வேதங்கள், தெய்வத்தன்மையையுடைய வேதம்என்றுமாம் † பெருஞானம் ஐயந்திரிபில்லாத உண்மையுணர்வு. ‡ செல்வன் இம்மைமறுமைவீடுகளில் அடையும் பாய்க்கியங்களைத்தன் அடியார்க்குத் தருபவன்.

எய்தயான்செய்ததெத்தவமென்றனன்
ஐயனும்மவற்கன்பினன் கூறுவான். (உகூ)

சொன்னநான்முகன்றன்வழித்தோன்றினர்
முன்னையொருளுயர்தவமுற்றினர்
உன்னின்யாருளருன்னருளெய்திய
என்னின்யாருளரிற்பிறந்தாரென்றான். (௩0)

உவமைநீங்கியதோன்றலுரைக்கெதிர்
நவமைநீங்கியநற்றவன்சொல்லுவான்
அவமிலாவிருந்தாகியென்றுலமை
தவமெலாங்கொள்கதக்கினையாவென்றான். (௩க)

மறைவலானெதிர்வள்ளலுங்கூறுவான்
இறைவநின்னருளெத்தவத்திற்கெளி
தறைவதீண்டொன்றகத்தியற்காண்பதோர்
குறைகிடந்ததினியெனக்கூறினான். (௩உ)

நல்லதேநினைந்தாயதுநானுமுன்
சொல்லுவான்றுணிகின்றதுதோன்றனீ
செல்லுகாண்டவற்சேருதிசேர்ந்தபின்
இல்லைநின்வயினெய்தலில்லாதவே. (௩௩)

அன்றியுநின்வரவினையாதரித்
தின்றுகாறுநின்றேமுறுமாலவற்
சென்றுசேருதிசேருதல்செவ்வியோய்
நன்றுதேவர்க்கும்யாவற்குநன்றெனு. (௩௪)

வழியுங்கூறிவரம்பகலாசிகள்
மொழியுமாதவன்மொய்மலர்த்தாடொழாப்
பிழியுந்தேனிற்பிறங்கருவித்திரள்
பொழியுஞ்சோலைவிரைவினிற்போயினர். (௩௫)

வேறு.

ஆண்டகையரவ்வயினடைந்தமையறிந்தான்
ஈண்டுவகைவேலைதுணையேழுலகமெய்த
மாண்டவரதன்சரண்வழங்கவெதிர்வந்தான்
நீண்ட ‡ தமிழாலுலகைநேமியினளந்தான். (௩௬)

பண்டவுணர்மூழ்கினர்படார்களெனவானோர்
எண்டவவெமக்கருள்கெனக்குறையிரந்தார்

‡ தமிழால் உலகை அளத்தல்-தமிழ்ப்பாஷையை உலகமுழுவதும் பரவச்செய்தல்.

கண்டொருகைவாரினன்முகந்துகடலெல்லாம்
உண்டவர்கள்பின்னுமிழ்கவென்றலுமுமிழ்ந்தான். (௩௭)

தூயகடனீரடிசிலுண்டது † துரந்தான்
ஆயவதலாலமருமெய்யுடையவன்றன்
மாயவினைவாளவுணன்மாயவவன்வன்மைக்
காயமினிதுண்டுலகின்றரிடர்களைந்தான். (௩௮)

யோகமுறுபேருயிர்கடாமுலைவுறாமல்
ஏகுநெறியாதெனமிதித்தடியினேறி
மேகநெடுமாலைதவழ்விந்தையெனும்விண்டோய்
நாகமதுநாகமுறநாகமெனநின்றான். (௩௯)

மூசரவுசூடுமுதலோனுரையின்மூவா
மாசிறவவேகெனவடாதுதிசைமேனாள்
நீசமுறவானிநெடுமாமலயநேரா
ஈசனிகராயுலகுசீர்பெறவிருந்தான். (௪௦)

உழக்குமறைநாலினுமுயர்ந்துலகமோதும்
வழக்கினுமதிக்கவியினும்மரபினாடி
இழற்பொலிகணிச்சிமணிநெற்றியுமிழ்செங்கண்
தழற்புரைசுடர்க்கடவுடந்ததமிழ்தந்தான். (௪௧)

விண்ணினினிலத்தினில்விகற்பவுலகிற்பேர்
எண்ணினிவிருக்கினிலிருக்குமெனயாரும்
உண்ணினைகருத்தினையுறப்பெறுவெனாலென்
கண்ணினிலெனக்கொடுகளிப்புறுமனத்தான். (௪௨)

இரைத்தமறைநான்கினொ ‡ டியைந்தபிறயாவும்
நிரைத்தநெடுஞானநிமிர்கல்வினெடுநாளிட்
டரைத்துமயனாலுமறியாதபொருணேர்நின்
றுரைக்குதவுமாலெனுமுணர்ச்சியினுவப்பான். (௪௩)

உய்ந்தனரிமைப்பிலருயிர்த்தனர்தவத்தோர்
அந்தணரறத்தினெறினின்றனர்களானா
வெந்திறலரக்கர்விடவேர்முதலறுப்பான்
வந்தனன் § மருத்துவனெனத்தனிவலிப்பான். (௪௪)

எனையுயிராமுதலயாவுமிடைவேவித்
தானுகாரக்கருருமைச்சுடுசினத்தின்

---

† துரத்தல்-வெளிப்படுத்துதல். ‡ இயைந்த பிறயாவும் என்றது, அவ்வேதங்களின் பொருளை யறியக் கருவியாகிய மீமாம்சை புராணம்-நியாயம், தருமசாத்திரம் முதலியவற்றை. § மருத்துவன்-மருந்தின் தன்மை யறிந்து கொடுப்பவன்.

ஆனவனலைக்கடிதவித்துலகளிப்பான்
வானமழைவந்ததெனமூர்ந்துறமணத்தான். (௬௫)

கண்டனனிராமனைவரக்கருணைக்கூரப்
புண்டரிகவாணயனநீர்பொழியநின்றான்
எண்டிசையுமேழுலகுமெவ்வுயிருமுய்யக்
குண்டிகையினிற்பொருவில்காவிரிகொணர்ந்தான். (௬௬)

நின்றவனைவந்தநெடியோனடிபணிந்தான்
அன்றவனுமன்பொடுதழீஇயழுதகண்ணன்
நன்றுவரவென்றுபலநல்லுரைபகர்ந்தனன்
என்றுமுளதென்றமிழியம்பியிசைகொண்டான். (௬௭)

வேதியர்கள்வேதமொழிவேறுபலகூறிக்
காதன்மிகநின்றெழில்கமண்டலுவினன்னீர்
மாதவர்கள்வீசிநெடுமாமலர்கவேப்
போதுமணநாறுகுளிர்சோலைகொடுபுக்கான். (௬௮)

பொருந்தவமலன்பொழிலகத்தினிதுபுக்கான்
விருந்தவனமைத்தபின்விரும்பினன்விரும்பி
இருந்தவமிழைத்தவெனதில்விடையின்வந்தென்
அருந்தவமுடித்தனையருட்கரசவென்றான் (௬௯)

என்றமுனியைத்தொழுதிராமனிமையோரும்
நின்றதவமுற்றுநெடியோரினெடியோரும்
உன்றனருள்பெற்றிவர்களுன்னருள்சுமந்தேன்
வென்றனனைத்துலகுமேவினிதெனென்றான். (௭௰)

தண்டகவனத்துறைதியென்றுரைதரக்கொண்
டுண்டுவரவித்திசையெனப்பெரிதுவந்தேன்
† எண்டகுகுணத்தினையெனக்கொடுயர்சென்னி
துண்டமதிவைத்தவனையொத்தமுனிசொல்லும். (௭௧)

ஈண்டுறைதியையவினியிவ்வயினிருந்தால்
வேண்டியனமாதவம்விரும்பினமுடிப்பாய்
தூண்டுசினவாளிருதர்தோன்றியுளரென்றால்
மாண்டுகமலைந்தெமர்மனத்துயர்துடைப்பாய். (௭௨)

வாழுமறைவாழுமனுநீதியறம்வாழும்
தாழுமிமையோருயர்வர்தானவர்கடாழ்வார்
ஆழியுழவன்புதல்வவையமிலைமெய்யே
ஏழுலகும்வாழுமினிஇங்குறைதியென்றான். (௭௩)

* எண்டகுகுணம்-அபஹதபாப் மத்வம், விஜரத்வம், விம்ருத்யுத்வம், விசோகத்வம், விஜகத்சத்வம், அபிபாஸத்வம், ஸத்யகாமத்வம், ஸத்யசங்கல்பத்வம்.

செருக்கடையரக்கர்புரிதீமைசிதைவெய்தித்
தருக்கழிதரக்கடிதுகொல்வதுசமைந்தேன்
வருக்கமறையோயவர்வருந்திசையின்முந்துற்
றிருக்கைநலமிற்கருளென்னென்றனனிராமன். (ருச)

விழுமியதுசொற்றனையிவ்வில்லிதிவண்மேனாள்
முழுமுதல்வன்வைத்துளதுமூவுலகும்யானும்
வழிபடவிருப்பதிதுதன்னைவடிவாளிக்
குழுவழுவில்புட்டிலொடுகோடியெனநல்கி. (ருரு)

இப்புவனமுற்றுமொருதட்டினிடையிட்டால்
ஒப்புவரவிற்றெனவுரைப்பரியவாளும்
வெப்புருவுபெற்ற * வரன்மேருவரைவில்லாய்
முப்புரமெரித்ததனிமொய்கணையுநல்கா. (ருசு)

ஓங்குமரனேங்கிமலையோங்கிமணலோங்கிப்
பூங்குலைகுலாவுகுளிர்சோலைபுடைவிம்மித்
தூங்குதிரையாறுதவழ்சூழலதோர்குன்றின்
பாங்குளதாலுறையுள்பஞ்சவடிமஞ்ச. (ருஎ)

கன்னியிளவாழைகனியீவகதிர்வாலின்
செந்நெலுளதேனொழுகுபோதுமுளதெய்வப்
பொன்னியெனலாயபுனலாறுமுள † போதா
அன்னமுளபொன்னிவளொடன்பின்விளையாட. (ருஅ)

ஏகியினியவ்வயினிருந்துறைமியென்றான்
மேகநிறவண்ணனும்வணங்கிவிடைகொண்டான்
பாகனையசொல்லியொடுதம்பிபரிவிற்பின்
போகமுனிசிந்தைதொடரக்கடிதுபோனான். (ருகூ)

ங-வது அகத்தியப்படலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம். கஎசு



---

* அரன்-ஹரன் பிரளயகாலத்தில் எல்லாவற்றையும் ஹரிப்பவன். ஹரித்தல் அழித்தல். † போதா-பெருநாரை.

நான்காவது.

## சடாயுகாண்படலம்.



நடந்தனர்காவதம்பலவுநன்னதி
கிடந்தனநின்றனகிரிகள்கேண்மையின்
தொடர்ந்தனதுவன்றினசூழல்யாவையும்
கடந்தனர்கண்டனர்கழுகின்வேந்தையே. (க)

உருக்கியசுவணமொத்துதயத்துச்சேர்
அருக்கனவ்வகலிடத்தலங்குதிக்கெலாம்
தெரிப்புறுசெறிசுடர்ச்சிகையினூற்சிறை
விரித்திருந்தனனெனவிளங்குவான்றனை. (உ)

முந்தொருகருமலைமுகட்டுமுன்றிலின்
சந்திரனொளியொடுதழுவச்சாத்திய
அந்தமில்கனைகடலமரர்நாட்டிய
மந்தரகிரியெனவயங்குவான்றனை. (ங)

மானிறவிசும்பெழின்மறையத்தன்மணிக்
கானிறச்சேயொளிகதுவக்கண்ணகல்
நீனிறவரையினிற்பவளநீள்கொடி
போனிறம்பொலிந்தெனப்பொலிகின்றான்றனை. (ச)

தூய்மையனிருங்கலைதுணிந்தகேள்வியன்
வாய்மையன்மறுவிலன்மதியின்கூர்மையன்
ஆய்மையின்மந்திரத்தறிஞனுமெனச்
சேய்மையினோக்குறுசிறுகணான்றனை. (ரு)

வீட்டிவாளவுணரைவிருந்துகூற்றினை
ஊட்டிவீழ்மிச்சிறுனுண்டோடொறும்
தீட்டிமேலிந்திரன்சிறுகண்யானையின்
தோட்டிபோற்றேய்ந்தொளிர்துண்டத்தான்றனை. (சு)

கோளிருகாலினோடொன்றகூடின
ஆளுறுதிகிரிபோலாரத்தான்றனை
நீளுறுமேருவினெற்றிமுற்றிய
வாளிரவியிற்பொலிமௌலியான்றனை. (எ)

சொற்பங்கமுறநிமிரிசையின்சும்மையை
அற்பங்கமுறவரு * மருணன்செம்மலைச்

* அருணன்-சூரியன் சாரதி.

சிற்பங்கொள்பகலெனக்கடிதுசென்றுதீர்
கற்பங்களனைப்பலகண்டுளான்றனை. (அ)

ஓங்குயர்நெடுவரையொன்றினின்றது
தாங்கலதிருநிலந்தாழ்ந்துதாழ்வுற
வீங்கியவலியினிலிருந்தவீரனை
ஆங்கவரணுகினரயிர்க்குஞ்சிந்தையார். (௯)

இறுதியைத்தன்வயினிற்றவெய்தினன்
அறிவலியரக்கனுமல்லனுமெனின்
எறுழ்வலிக்கலுழனேயென்னவுன்னியச்
செறிகழல்வீரருஞ்செயிர்த்துநோக்கினர். (௧௦)

வணைகழல்வரிசிலைமதுகைமைந்தரை
அனையவன்றானுங்கண்டுயிர்த்துநோக்கினன்
வினையறுநோன்பினரல்லர்வில்லினர்
புனைசடைமுடியினர் * புலவரோவென. (௧௧)

புரந்தரன்முதலியபுலவர்யாரையும்
நிரந்தரநோக்குவெனேமியானுமவ்
வரந்தருமிறைவனுமழுவலாளனும்
கரந்திலரென்னையானென்றுங்காண்பெனல். (௧௨)

காமனென்பவனையுங்கண்ணினோக்கினேன்
தாமரைச்செங்கணித்தடக்கைவீரர்கள்
பூமருபொலன்கழற்பொடியினோடுமொப்
பாமெனவறிகிலனர்கொலாமிவர், (௧௩)

உலகொருமூன்றுந்தம்முடைமையாக்குறும்
† அலகறுமிலக்கணமமைந்தமெய்யினர்
மலர்மகட்குவமையாளோடும்வந்தவிச்
சிலைவலிவீரரைத்தெரிகிலேனென. (௧௪)

கருமலைசெம்மலையனையகாட்சியர்
திருமகிழ்மார்பினர்செங்கண்வீரர்தாம்
அருமைசெய்குணத்தினென்றுணவனுழியான்
ஒருவனையிருவருமொத்துளாரரோ. (௧௫)

எனப்பல ‡ நினைப்பினமனத்துளெண்ணுவான்
சினப்படைவீரர்மேற்செல்லுமன்பினன்

* புலவர் அறிவுடையவர். † அலகறும்அளவில்லாத,குற்றமற்றவென்றுமாம். ‡ நினைப்பின நினைத்தலையுடையவை. நினைப்பு இனம் எனப்பிரித்து நினைப்புக்களின்கூட்டமென்றுமாம்.,

கைத்தலைச்சூலமேயனையகாட்சியான்
வைத்தலைப்பகழியான்மழைசெய்வில்லினன். (கக௩)

அன்னவனடவுறவாழியூழியீ
தென்னவந்தெங்கணுமிரைத்தசேனையுள்
தன்னிகர்வீரனுந்தமியன்வில்லினன்
துன்னிருளிடையதோர்விளக்கிற்றேன்றினன். (கக௪)

ஓங்கொளிவாளினனுருமினார்ப்பினன்
வீங்கியகவசத்தன்வெய்யகண்ணினன்
ஆங்கவனணிக்கெதிரணிகளாகநேர்
தாங்கினனிராமனுஞ்சரத்தின்றானையால். (கக௫)

தாளிடையற்றனதலையுமற்றன
தோளிடையற்றனதொடையுமற்றன
வாளிடையற்றனமழுவுமற்றன
கோளிடையற்றனகுடையுமற்றன. (கக௬)

கொடியொடுகொடிஞ்சினப்புரவிக்கூட்டறப்
படியிடைபடிந்தனபருத்ததேர்பலை
நெடியவன்கடகரிபுரண்டநெற்றியின்
இடியொடுமுறிந்துவீழ்சிகரமென்னவே. (கக௭)

அற்றனசிரமெனவறிதநேற்றலர்
கொற்றவெஞ்சிலைச்சரங்கோத்துவாங்குவார்
இற்றவரிறூதவரெழுந்துவிண்ணினைப்
பற்றினமழையெனப்படைவழங்குவார். (கக௮)

கேடகத்தடக்கையர்கிரியின்றோற்றத்தர்
ஆடகக்கவசத்தர்கவந்தமாடுவ
பாடகத்தரம்பையர்மருளப்பல்வித
நாடகத்தொழிலினைநடிப்பவொத்தவே. (கக௯)

கவரிவெண்குடையெனுநுரையகைம்மலை
சுவறருசுறவமாழ்சுழியதண்டுறைப்
பவரிளப்பமணிக்குவிகும்பண்ணைய
உவரியைப்புதுக்கினவுதிரயாறரோ. (கஉ0)

‡ சண்டவெங்கடுங்கணைதடியத்தான்சில
திண்டிறல்வளையெயிற்றரக்கர்தேவராய்

---

‡ சண்டவெங் கடுங்கணை-வேகம்பொருந்திய கொடியபாணங்கள்,நமன்போன்ற கொடிய கணைகளுமாம்.

வண்டுழல்புரிகுழன் மடந்தைமாரொடும்
கண்டனர்தம்முடைக்கவந்தநாடகம். (கஉக)

ஆய்வளை மகளிரோடமரரீட்டத்தர்
தூயவெங்கடுங்கணை துணித்த தங்கடோள்
பேயொருதலைகொளப்பிணங்கிவாய்களின்
நாயொருதலைகொளநகையுற்றார்சிலர். (கஉஉ)

தெரிகணைமூழ்கலிற்றிறந்தமார்பினர்
இருவினைகடந்துபோயும்பரெய்தினர்
நிருதர்தம்பெரும்படைநெடிதுநின்றவன்
ஒருவனென்றுள்ளத்தினுலைவுற்றாரரோ. (கஉங)

கைக்கரியன்னவன்பகழிகண்டவர்
மெய்க்குலம்வேரொடுந்துணித்துவீழ்த்தின
மைக்கருமனத்தொருவஞ்சன்மாண்பிலன்
பொய்க்கரிகூறியகொடுஞ்சொல்போன்றவே. (கஉச)

அஞ்சிறை * யறுபதமடைந்தகீடத்தைத்
தஞ்செனத்தன்மயமாக்குந்தன்மைபோல்
வஞ்சகத்தரக்கரைவளைத்துவள்ளறான்
செஞ்சரத்தூய்மையாற்றேவராக்கினன். (கஉரு)

வலங்கொள்போர்மானுடன்வலிந்துகொன்றமை
அலங்கல்வேலிராவணற்கறிவிப்பாமெனச்
சலங்கொள்போரரக்கர்தமுருக்கடாங்கின
இலங்கையினுற்றவக்குருதியாறரோ. (கஉசா)

சூழ்ந்ததார்நெடும்படைபகழிசுற்றுறப்
போழ்ந்துயிர்குடித்தலிற்புரளப்பொங்கினன்
தாழ்ந்திலன்முத்தலைத்தலைவன்சோரியின்
ஆழ்ந்ததேரம்பரத்தோட்டியார்க்கின்றான். (கஉஎ)

ஊன்றியதேரினனுருமின்வெங்கணை
வான்றொடர்மழையெனவாய்மையாவர்க்கும்
சான்றெனநின்றவத்தருமமன்னவன்
தோன்றறன்றிருவுருமறையத்தூவினன். (கஉஅ)

தூவியசரமெலாந்துணியவெங்கணை
ஏவினனிராமனுமேவியேழிரு
பூவியல்வாளியாற்பொலங்கொடேரழித்
தாவிவெம்பாகனையழித்துமாற்றினன். (கஉகூ)

* அறுபதம்-சினையாகுபெயராய் அறுகாற்பறவையை யுணர்த்திற்று.

அன்றியுமக்கணத்தமரரார்த்தெழப்
பொன்றெரிவடிம்புடைப்பொருவில்வாளியால்
வன்றொழிறீயவன்மகுடமாத்தலை
ஒன்றொழித்திரண்டையுமுருட்டினனரோ. (௩௩௰)

தேரழிந்தவ்வழித்திரிசிராவெனும்
பேரழிந்ததனினுமறம்பிழைத்திலன்
வாரழிந்துமிழ்சிலைவானநாட்டிழிக்
காரிழிந்தாலெனக்கணைகள்சிந்தினன். (௩௩௧)

எற்றியநுதலினனிருண்டகார்மழை
தோற்றியவில்லொடுந்தொடரமீமிசைக்
காற்றிடையழிந்தெனக்கார்முகத்தையும்
மாற்றரும்பகழியாலறுத்துமாற்றினன். (௩௩௨)

வேறு.

வில்லிழந்தனனென்னினும்விழித்தவாண்முகத்தின்
எல்லிழந்திலனிழந்திலன்வெங்கதமிடிக்கும்
சொல்லிழந்திலன்றோள்வலியிழந்திலன்சொரியும்
கல்லிழந்திலனிழந்திலன்கறங்கெனத்திரிதல். (௩௩௩)

ஆளிரண்டுநூறுளவனவந்தரத்தொருவன்
மூளிரும்பெருமாயவெஞ்செருமுயல்வானைத்
தாளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றடிந்து
தோளிரண்டையுமிரண்டுவெங்கணைகளாற்றுணித்தான். (௩௩௪)

அற்றதாளொடுதோளினனயிலெயிறிலங்கப்
பொற்றைமாமுழைப்புலாலுடைவாயினன்புகுந்து
பற்றவாதரிப்பான்றனைநோக்கினன்பரியான்
கொற்றவார்சிலைச்சரங்கொடுதலையையுங்குறைத்தான். (௩௩௫)

திரிசிராவெனுஞ்சிகரமண்சேர்தலுஞ்செறிந்த
நிருதரோடினர்தூடணன்விலக்கவுநில்லார்
பரிதிவாளினர்கேடகத்தடக்கையர்பரந்த
குருதிநீரிடைவார் † கழற்கொழுங்குடர்தொடக்க, (௩௩௬)

கணத்தின்மேனின்றவானவர்கைபுடைத்தார்த்தார்
பணத்தின்மேனிலங்குழியுறக்கால்கொடுபதைத்தார்
நிணத்தின்மேல்விழுந்தழுந்தினர்சிலர்சிலர்நிவந்த
பிணத்தின்மேல்விழுந்துருண்டனருயிர்கொடுபிழைப்பார். (௩௩௭)

---

† கழல்-வீரர்காலில் அணிகின்றஅணி

வேய்ந்தவாளொடுவேலிடைமிடைத்தனவெட்ட
ஓய்ந்துளார்சிலருலந்தனருதிரநீர்யாற்றில்
பாய்ந்துகால்பறித்தழுந்தினர்சிலர்சிலர்பயத்தால்
நீந்தினுர்நெடுங்குருதியங்கடல்புக்குநிலையார். (கரு அ)

கச்சும்வாளுந்தங்காருடர்ந் * தீர்வனகாணுர்
அச்சமென்பதொன் றுருவுகொண்டாலெனவழிவார்
உச்சவீரனைக்சுடுசரநிருதர்நெஞ்சுருவத்
தச்சுநின் றனகண்டனரவ்வழித்தவிர்ந்தார். (கருக)

மண்டியோடினர்சிலர்நெடுங்கடகரிவயிற்றில்
புண்டிறந்தமாமுழையிடைவாளொடும்புகுவார்
தொண்டைநீங்கியகவந்தத்தைத்துணைவநீயெம்மைக்
கண்டிலேனெனப்புகலெனக்கைதலைக்கொள்வார். (கசO)

அனையராகியவரக்கரையாண்டொழிற்கமைந்த
வினையநீங்கியமனித்தரைவெருவன்மினன்ன
நினையுநானுமக்குரைப்பதுமுண்டெனநின்றே
துனையும்வார்ப்பரித்தேரினன்றூடணன்சொன்னுன். (கசக)

வச்சையாமெனும்பயமனத்துண்டெனவாழும்
கொச்சைமாந்தரைக்கோல்வளைமகளிருங்கூசார்
நிச்சயம்மெனுங்கவசந்தானிலைநிற்பதன்றி
அச்சமென்னுமீதாருயிர்க்கருந்துணையாமோ. (கசஉ)

† பூவராவுவேற்புரந்தரனேடுதான்பொன்ரு
மூவரோடுதான்முன்னின்றுமுட்டியமுனையில்
ஏவரோடினரிராக்கதர்நுமக்கிடந்தோடும்
தேவரோகெற்றறிந்துளிரர்மெனத்திகைத்தீர். (கசங)

இக்கொர்மானுடற்கித்தனைவீரர்களிடைந்தீர்
உங்கைவாளொடுபோய்விழுந்தார்புகலுற்றீர்
கொங்கைமார்பிடைக்குறிப்புறக்களிப்புற்றுங்கொழுங்கண்
நங்கைமார்களைப்புல்லுதிரோநலநுகர்வீர். (கசச)

செம்புகாட்டியகண்ணினைபாலெனத்தெளிந்தீர்
வெம்புகாட்டிடைநுழைதொறும்வெரிநுறப்பாய்ந்த
கொம்புகாட்டுதிரோதடமார்பிடைக்குளித்த
அம்புகாட்டுதிரோகுலமங்கையர்க்கம்மா. (கசரு)

---

* ஈர்தல்-இழுத்தலும் பிளத்தலுமாம்.

† பூவராவுவேல்-இலைபோலும் அராவுவேல், பொலிவுற்ற அராவிய வச்சிராயுதமுமாம்.

ஏக்கமிங்கிதன்மேலுமுண்டேயிகன் மனிதன்
ஆக்குவெஞ்சமத்தாண்மையவ்வமரர்க்குமரிதாத்
தாக்கரும்புயத்துங்குலத்தலைமகன் றங்கை
மூக்கொடன்றியும்முதுகொடும்போம்பழிமுயன் றீர். (கசசு)

ஆரவாழ்க்கையின்வனிகராயமைதிரோவயில்வேல்
* வீரவாட்கொடுவேன்மடுத்துழுதிரோவெறிபோர்த்
தீரவாழ்க்கையிற்றெவ்வரைச்செருவிடைப்பறித்த
வீரவாட்கையிரெங்ஙனம்வாழ்திரோவிளம்பீர். (கசஎ)

என்றுதானுந்தன்னெறிகடற்சேனையுமிறைநீர்
நின்றுகாண்டிரென்னெடுஞ்சிலைவலியெனநேராச்
சென்றுதாக்கினன்றேவருமருள்கொண்டுதிகைத்தார்
நன்றுகாத்தியென்றிராமனுமெதிர்செலநடந்தான். (கசஅ)

ஊடறுப்புண்டமொய்படைக்கையொடுமுயர்ந்த
கோடறுப்புண்டகுஞ்சரங்கொடிஞ்சொடுகொடியின்
காடறுப்புண்டகாலியறேர்கதிர்ச்சாலி
சூடறுப்புண்டவெனக்கழுத்தறுப்புண்டதுரகம். (கசகூ)

துருவியோடினவுயிர்நிலைசுடுசரந்துரந்த
கருவியோடினகச்சையுங்கவசமுங்கழல
அருவியோடினவெனவழிகுருதியாறொழுக
உருவியோடினகேடகத்தட்டொடுமுடலம். (கரு௦)

ஆய்ந்தகங்கபத்திரங்கள்புக்கரக்கரதாவி
தோய்ந்ததோய்விலாப்பிறைமுகச்சரஞ்சிரந்துமித்த
காய்ந்தவெஞ்சரநிருதர்தங்கவசமார்புருவப்
பாய்ந்தவஞ்சகரிதயமும்பிளந்தனபல்லம். (கருக)

தூடணன்விடுசுடுசரம்யாவையுந்துணிய
மாடுநின்றவர்வழங்கியபடைகளுமாற
ஆடல்கொண்டனனளப்பரும்பெருவலியரக்கர்
கூடிநின்றவக்குரைகடல்வறள்படக்குறைத்தான். (கருஉ)

ஆர்த்தெழுந்தனர்வானவருவரைமத்தோ
டீர்ந்தெழுந்தனகுருதியின்பெருநதியிராமன்
தூர்த்தசெஞ்சரந்திசைதொறுந்திசைதொறுந்தொடர்ந்து
போர்த்தவெஞ்சினத்தரக்கரைப்புரட்டினபுவியில். (கருங)

தோன்றுமால்வரைத்தொகையெனத்துவன்றியநிணச்சே
றூன்றபாழ்வயிற்றலகையைப்புகல்வதெனமர்வேட்

* வீரவாட்-கொடுவெழுமடுத்துழுதிரோ எனப் பிரதியந்தரம்.

னேன்றிருரெலாமுலைந்தனரொல்லையிலொழிந்தார்
கான்றவின்னுயிர்காலனுங்கவர்ந்துமெய்ம்மறந்தான். (கருச)

களிறுதேர்பரிகடுத்தவர்முடித்தலைகவந்தம்
ஒளிறுபல்படைத்தங்குலத்தரக்கர்த * முடலம்
வெளிறுசேர்பிணம்பிறங்கியவடுக்கலின்மீதாக்
குளிருதேர்கடிதோட்டினன்றூடணன்கொதித்தான். (கருரு)

அறங்கொளாதவராக்கைகளடுக்கியவடுக்கல்
பிறங்கிநீண்டனகணிப்பிலபெருங்கடுவிசையால்
கறங்குபோன்றுளதாயினும்பிணப்பெருங்கட்டத்
திறங்குமேறுமத்தேர்பட்டதியாதெனவுரைப்பாம். (கருசு)

அரிதினெய்தினனையைந்துகொய்யுளைப்பரிமா
உருளுமாழியதொருதனித்தேரினனுலகத்
திருளைநீக்கியவிர்துவிற்பொலிகின்றவிராமன்
தெருளும்வார்கணைக்கூற்றெதிராவிசென்றென்ன. (கருஎ)

சென்றசேனையுஞ்சிலையுடைமலையெனத்தேர்மேல்
நின்றதூடணன்றன்னையுநோக்கிய † நிமலன்
நன்றுநன்றுநின்னிலையெனவருளினைநயந்தான்
என்றகாலத்தவ்வெய்யவன்பகழிமூன்றெய்தான். (கருஅ)

தாரவட்டவெண்டிசைகளைத்தனித்தனிசுமக்கும்
பாரவெட்டினேடிரண்டினிலொன்றுபார்புரக்கப்
பேரவிட்டவனுதலணியோடையிற்பிறழும்
வீரபட்டிகைபட்டனவிண்ணவர்வெருவ. (கருகூ)

எய்தகாலமும்வலியுநல்லெனநினைந்திராமன்
செய்த ‡ சேயொளிமுழுவலன்கடுங்கணைதெரிந்தான்
கொய்தினங்கவனுெறிற்பரித்தேர்படூறிக்
கையின்வெஞ்சிலையறுத்தொளிர்கவசமுங்கடிந்தான். (கசுO)

தேவரார்த்தெழமுனிவர்கடிசைதொறுஞ்சிலம்பும்
ஓவிவ்வாழ்த்தொலிநாற்கடன்முழக்கெனவோங்கக்
காவடாவிதுவல்லையேனியெனக்கணையொன்
றேவினனவனெயிறுடைநெடுந்தலையிழந்தான். (கசுக)

வேறு.

தம்பிதலையற்றபடியுந்தயரதன்சேய்
அம்புபடையைத்துணிபடுத்ததும்றிந்தான்

---

* உடலம்-உறுப்புகளறுபடாமல் வீழ்ந்திறந்த சரீரம்.
† நிமலன்-மலரகிதன். ‡ சேயொளி - செம்மையொளி.

வெம்புபடைவிற்கைவிசயக்கரன்வெகுண்டான்
கொம்புதலைகட்டியகுலக்கரிகடிப்பான். (கசுஉ)

அந்தகனுமுட்கிடவரக்கர்கடலோடும்
சிந்துரம்வயப்புரவிதேர்திசைபரப்பி
இந்துவைவளைக்குமெழிலிக்குலமெனத்தான்
வந்துவரிவிற்கைமதயானையைவளைத்தான். (கசுக)

அடங்கவில்கொடுந்தொழிலரக்கா ‡ வநந்தன்
படங்கிழிதரப்படிதனிற்பலவிதப்போர்
கடங்கலுழ்தடங்களிறுதேர்பரிகடாவித்
தொடங்கினர்நெடுந்தகையும்வெங்கணைதுரந்தான். (கசுச)

துடித்தனகடக்கரிதுடித்தனபரித்தேர்
துடித்தனமுடித்தலைதுடித்தனதொடித்தோள்
துடித்தனமணிக்குடர்துடித்தனதசைத்தோல்
துடித்தனகழற்றுணைதுடித்தனவிடத்தோள். (கசுரு)

வாளின்வனம்வேலின்வனம்வார்சிலைவனந்திண்
தோளின்வனமென்றிவைதுவன்றிநிருதப்பேர்
ஆளின்வனநின்றதனையம்பின்வனமென்னும்
கோளின்வனவன்குழுவினிற்குறைபடுத்தான். (கசுசு)

தானுருவுகொண்டதருமந்தெரிசரந்தான்
மீனுருவுமேருவைவிலங்குருவுமேலாம்
வானுருவுமண்ணுருவும்வாளுருவிவந்தார்
ஊனுருவுமென்னுமிதுணர்த்தவுமுரித்தோ. (கசுஎ)

அன்றிடைவளைந்தவர்குலங்களொட்டங்கச்
சென்றுலைவுறும்படிதெரிந்துகணைசிந்த
மன்றிடைநலிந்துவலியோர்களெளியோரைக்
கொன்றனர்நுகர்ந்தபொருளிற்கடிதுகொன்ற. (கசுஅ)

கடுங்கரனெனப்பெயர்படைத்தகழல்வீரன்
அடங்கலுமரக்கரழிவுற்றிடவழன்றான்
ஒடுங்கலினிணக்குருதியோதமதினுள்ளான்
நெடுங்கடலின்மந்தரமெனத்தமியனின்றான். (கசுகூ)

செங்கணெரிசிந்தவரிவிற்பகழிசிந்தப்
பொங்குகுருதிப்புணரியுட்புகையுநெஞ்சன்
சங்கமொடுகோகமிடையைக்கடலினூடும்
வங்கமெனலாயதொருதேரின்மிசைவந்தான். (கஎ0)

‡ அநந்தன்-அந்தமில்லாதவன்.

செறுத்திறுதியிற்புவனிதீயவெழுதீயின்
மறத்தின்வயிரத்தொருவன்வந்தனுகுமுர்ந்தைக்
கறுத்தமணிகண்டர்கடவுட்சிலைகரத்தால்
இறுத்தவனும்வெங்கணைதெரிந்தனனெதிர்ந்தான். (கஎக)

தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையரக்கர்பதிசெய்தான்
தீயுருவகால்விசையசெவ்வியனவெவ்வாய்
ஆயிரம்வடிக்கணையிராமனுமறுத்தான். (கஎஉ)

ஊழுமெரியிற்கொடியபாய்பகழியொன்பான்
ஏழுலகினுக்குமொருநாயகனுமெய்தான்
சூழ்சுடர்வடிக்கணையவற்றெதிர்தொடுத்தே
ஆழிவரிவிற்கரனுமன்னவையறுத்தான். (கஎங)

கள்ளவமர்மாயவினைகல்வியின்விளைத்தான்
வள்ளலுருவைப்பகழிமாரியின்மறைத்தான்
உள்ளமுலைவுற்றமரரோடினரொளித்தார்
வெள்ளெயிறிதழ்ப்பவளவீரனும்வெகுண்டான். (கஎச)

வே று.

முடிப்பெனின்றொருமொய்கணையாலெனுத்
தொடுத்துநின்றுயர்கோளுறவாங்கினன்
பிடித்ததிண்கிலைபேரகல்வானிடை
இடிம்பின்னோசைபடக்கடிதிற்றதே. (கஎரு)

வெற்றிகூறியவானவர்வீரன்வில்
இற்றபோதுதுனுக்கமுற்றேங்கினர்
மற்றொர்வெஞ்சிலையின்மைமனக்கொளா
அற்றதாலெம்வலியெனவஞ்சினர். (கஎசு)

என்னுமீாத்திரத்தேந்தியகார்முகம்
சின்னமென்றுந்தனிமையுஞ்சிந்தியான்
மன்னர்மன்னவன்செம்மன்மரபினுல்
பின்னுறத்தன்பெருங்கரநீட்டினன். (கஎஎ)

கண்டுநின்றுகருத்துணர்ந்தானென
அன்டர்நாதன்றடக்கையினத்துனே
பண்டுபோர்மழுவாளியைம்பண்பினுல்
கொண்டவில்லைவருணன்கொடுத்தனன் (கஎஅ)

‡ கள்ளவமர்-உருமறைந்துநின்றுசெய்யும்போர்.

கொடுத்தவில்லையக்கொண்டனிறத்தினன்
எடுத்துவாங்கிவலங்கொண்டிடக்கையில்
பிடித்தபோதுநெறிபிழைத்தோர்க்கெலாம்
துடித்தவாலிடக்கண்ணொடுதோளுமே. (கஎக)

ஏற்றிநாணிமையாமுனெடுத்தது
கூற்றினூருங்குனிக்கக்குனித்தெதிர்
ஆர்த்தினனவனுழியந்தேர்சரம்
தூற்றினனுண்பொடிபடநூறினன். (சஅ0)

எந்திரத்தடந்தேரழிந்தானிழந்
தந்தரத்திடையார்த்தெழுந்தம்பெலாம்
சுந்தரத்தனிவில்லிதன்றோளெனும்
மந்தரத்தின்மழையின்வழங்கினன். (கஅக)

தாங்கிநின்றதயரதராமனும்
தூங்குதூணியிடைச்சுடுசெஞ்சரம்
வாங்குகின்றவலக்கையொளிர்வாளியால்
வீங்குதோளொடுபார்மிசைவீழ்த்தினன். (கஅ௨)

வலக்கைவீழ்தலுமற்றைக்கையால்வெற்றி
உலக்கைவானத்துருமெனவோச்சினன்
* இலக்குவற்முன்வந்தவிராமனும்
விலக்கினனொருவெங்கதிர்வாளியால். (கஅ௩)

விராவருங்கடுவெள்ளெயிற்றிற்றபின்
அராவழன்றதனையதன்னாற்றலால்
மராமரங்கையில்வாங்கிவந்தெய்தினன்
இராமனங்கொர்தனிக்கணையேவினன். (கஅச)

வரமரக்கன்படைத்தலின்மாயையின்
உரமுடைத்தன்மையாலுலகேழையும்
பரமுருக்கியபாவத்தினல்வலக்
கரமெனக்கரன்கண்டமுற்றனரோ. (கஅ௫)

ஆர்த்தெழுந்தனராடினர்பாடினர்
தூர்த்தமைந்தனர்வானவர்தூய்மலர்
† தீர்த்தனும்பொலிந்தான்கதிரோன்றிசை
போர்த்தமென்பனிபோக்கியதென்னவே. (கஅ௬)

---

* இலக்குவற்குமுன்வந்த போர்க்கோலங்கொண்ட இளையபெருமாளைத்தடுத்து நிறுத்திவிட்டுவந்த என்றும் இலக்குவற்குமுன்னே பிறந்தோனென்னலுமியையும்.

† தீர்த்தன்-பரிசுத்தன், ஆலோசனைக்காரன், நியமிப்பவன். மேன்மையுடையவன்.

முனிவர்வந்துமுறைமுறைமொய்ப்புற
இனியசிந்தையிராமனுமேகினன்
அனிகவெஞ்சமத்தாருயிர்போகத்தான்
தனியிருந்தவுடலன்னதையல்பால் (கஅஎ)

விண்ணினீங்கியவெய்யவர்மேனியில்
புன்னினீரும்பொடிகளும் * போயுக
அண்ணல்வீரனைத்தம்பியுமன்னமும்
கண்ணினீரினிற்பாதங்கழுவினர். (கஅஅ)

மூத்தமொன்றின்முடிந்தவர்மொய்புணீர்
நீத்தமோடிநெடுந்திசைசேருறக்
கோத்தவேலைக்குரலெனவானவர்
ஏத்தவீரனினிதிருந்தானரோ. (கஅகூ)

இங்குநின்றதுரைத்துமிராவணன்
தங்கைதன்கைவயிறுதகர்த்தனள்
கங்குலன்னரகனைத்தழீஇநெடும்
பொங்குவெங்குருதிப்புரண்டாளரோ. (ககூ0)

ஆக்கினேன்மனத்தாசையவ்வாசையென்
மூக்கினோடுமுடியமுடிந்திலேன்
வாக்கிலுங்கள்வாழ்வையுநாளையும்
போக்கினேன்கொடியேனென்றுபோயினாள். (ககூக)

அலங்கல்வேற்கையரக்கரை ‡ யாசறக்
குலங்கள்வேரறுப்பான்குறித்தாளுயிர்
கலங்குகூறைறவன்போர்நெடுங்காலென
இலங்கைமாநகர்நொய்திற்சென்றெய்தினாள். (ககூஉ)

சூ-வது கரன்வதைப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ருருகூ.

---

* போயுக-நீங்க. † மூத்தம்-முகூர்த்தம்.

‡ அரக்கரை பாவத்தைப்போக்கித் தேவராக்குந் தன்மையையுடைய ராமபாணத்துக்கு இரையாக்கக் குறித்தாளென்பார் 'ஆசற' என்றார்.

ஏழாவது

## மாரீசன்வதைப்படலம்.



இரைக்குநெடும்பணையரக்கரிறந்ததனைமறந்தனள்போலிராமன்றுங்க
வரைப்புயத்தினிடைக்கிடந்தபேராசைமனங்கவற்றவாற்றுளாகித்
திரைப்பரவைப்பேரகழீத்திண்ணகரிற்கடிதோடிச்சீதைதன்மை
உரைப்பெனெனச் *சூர்ப்பணகைவரவிருந்தானிருந்தபரிசுரைத்துமன்றே

நிலையிலாவுலகினிடைநிற்பனவுநடப்பனவுநெறியினீந்த
மலரின்மேலுன்முகற்கும்வகுப்பரிதுநுனிப்பதொருவரம்பிலாற்றல்
உலைவிலாவகையுழந்ததருமமெனநினைந்தவெலாமுதவுந்தச்சன்
புலனெலாந்தெரிப்பதொருபுனைமணிமண்டபமதனிற்பொலியமன்றே ()

பண்டலங்குதிசைக்களிற்றின்பணைமருப்பினிணையொடியப்படர்ந்தபொற்
விண்டலங்கலுறவீங்கியோங்குதயமால்வரையின்விளங்கமீதில் [றோள்
குண்டலங்கள்குலவரையைவலம்வருவானிரவிகொழுங்கதிர்சூழ்கற்றை
மண்டலங்கள்பன்னிரண்டுநாலைந்தாய்ப்பொலிந்தவெனவயங்கமன்றே()

புலியினதளுடையானும்பொன்னுடைபுனைந்தானும்பூவினானும்
நலியும்வரத்தரல்லர்தேவரினிங்கியாவரினிநாட்டலாவார்
மெலியுமிடைத்தடிக்குழுலைவேயிளந்தோட்சேயரிக்கண்வென்றிமாதர்
வலியநெடும் † புலவியினும்வணங்காதமகுடநிரைவயங்கமன்றே. (ச)

வாளுலா ‡ முழுமணிகள்வயங்கொளியின்றொகைவழங்கவயிரக்குன்றத்
தோளெலாம்படிசுமந்தவிடவரவின்படநிரையிற்றோன்றவான்ற
நாளெலாம்புடைதயங்காமணீரிலங்கையிற்றான்வாரியிட்ட
கோளெலாங்கிடந்தநெடுஞ்சிறையன்னநிறையாரங்குலவமன்றே. (ரு)

வேறு.

ஆய்வரும்பெருவலியரக்கராதியோர்
நாயகர்நளிர்மணிமகுடநண்ணலால்
தேய்வுறத்தேய்வுறப்பெயர்ந்துசெஞ்சுடர்
ஆய்மணிப்பொலன்கழலடிநின்றூர்ப்பவே. (சு)

---

* சூர்ப்பணகை-சூர்ப்பணகா என்றவடசொல் ஆவீறுஐயாயிற்று;இப் பெயர்சூர்ப்பம் நகம் எனப்பிரிந்து முறம்போன்ற (வடிவமுடைய) நகமு ள்ளவளென்று எதுப்பொருள்படும். இது அவளுக்கு வடிவுபுற்றிவைக்கப் பட்ட காரணக்குறியாகிய இயற்பெயர்.

† புலவியாவது-ஆடவரும் மகளிரும் இன்பநிலையில் அவ்வின்பத்தை மிகுவிக்கும்பொருட்டு ஒருவரோடொருவர் கோபித்தல்.

‡ முழுமணி-உத்தமவிலக்கணம் நிறைந்த இரத்தினம், ஒளிநிரம்பி இரத்தினம்.

மூவகையுலகினுமுதல்வர்முந்தையோர்
ஓவலருதவியபரிசினேனுங்கல்போல்
தேவருமவுணருமுதவினோர்திசை
தூவியநறுமலர்க்குப்பைதுன்னவே. (எ)

இன்னபோதிவ்வழிநோக்குமென்பதை
உன்னலற்கரதலஞ்சுமந்தவுச்சியர்
மின்னவிர்மணிமுடிவிஞ்சைவேந்தர்கள்
துன்னினர்முறைமுறைதுறையிற்சுற்றவே. (அ)

மங்கையர்திறத்தொருமாற்றங்கூறினும்
தங்களையாமனத்தாழுஞ்சென்னியர்
அங்கையுமுள்ளமுங்குவிந்தவாக்கையர்
சிங்கவேறெனத்திறற்சித்தர்சேரவே. (கூ)

அன்னவனமைச்சரைநோக்கியாண்டொரு
நன்மொழிபகரினுநடுங்குஞ்சிந்தையர்
என்னைகொல்பணியெனவிறைஞ்சுகின்றனர்
கின்னரர்பெரும்பயங்கிடந்தநெஞ்சினர். (க0)

பிரகரநெடுந்திசைப்பெருந்தண்டேந்திய
கரதலத்தண்ணலைக்கண்ணினோக்கிய
நரகினராமெனநடுங்குநாவினர்
உரகர்கடம்மனமுலைந்துசூழவே. (கக)

திசையுறுகரிகளைச்செற்றுதேவனும்
வசையுறக்கலையைமறித்துவானெலாம்
அசையுறப்புரந்தரனடர்த்ததோள்களின்
இசையினைத்தும்புருவிசையினேந்தவே. (க௨)

சேணுயர்நெறிமுறைதிறம்பலின்றியே
பாணிகள்பணிசெயப்பழுதில்பண்ணிடை
வீணையினரம்பிடைவிளைத்ததேமறை
வாணியினாரதன்செவியின்வார்க்கவே. (கங)

வேறு.

மேகமென்றுருத்திகொண்டுவிண்ணவர்தருவும்விஞ்சை
நாகமுஞ்சுரந்ததீந்தேம்புனலொடுமளாவிநவ்வித்
தோகையர்துகிலிற்றோயுமென்பதோர்துணுக்கத்தோடும்
சீகரமகரவேலைக்காவலன்சிந்தமன்றே. (கச)

நறைமலர்த்தாதுந்தேனுநளிர்நெடுமெகுடகோடி
முறைமுறையறையச்சிந்திமுரிந்துகுமணியுமுத்தும்

தறையிடையுகாதமுன்னந்தாங்கினன்றழுவிவாங்கித்
துறைதொறுந்தொடர்ந்துநின்று ‡ சமீரணன்றுடைப்பமன்னோ. ()

### வேறு.

மின்னுடைவேத்திரக்கையர்மெய்புகத்
துன்னெடுங்கஞ்சுகத்துகிலர்சோர்வுலர்
பொன்னொடுவெள்ளியும்புரந்தராதியர்க்
கின்னியன்முறைமுறையிருக்கையீயவே. (கசு)

சூலமேமுதலியதுறந்துசுற்றிய
சேலையாற்சிறியவாய்புதைத்துச்செங்கையின்
தோலுடைநெடும்பணைதுவைக்குந்தேசநெலாம்
காலன்வந்திசைக்குநாட்கடிகைகூரவே. (கரு)

நயனங்கிளர்நானநெய்யளாவிநந்தலில்
வியங்கருப்பூரமென்பஞ்சின்மீக்கொளீஇக்
கயங்களின்மரைமலர்க்காடுபூத்தென
வயங்கெரிக்கடவுளும்விளக்கமாட்டவே. (கஅ)

அதிசயமளிப்பதற்கருளநிந்துநற்
புதிதலர்கற்பகத்தருவும்பொய்யிலாக்
கதிர்கெடுமணிகணங்கறவையான்களும்
நிதிகளுமுறைமுறைநின்றுநீட்டவே. (கக)

குண்டலமுதலியகுலங்கொள்பேரணி
மண்டியபேரொளிவயங்கவீசலால்
உண்டுகொரலிவினியுலகமேழினும்
எண்டிசைமருங்கினுமிருளின்றென்னவே. உ0)

கங்கையேமுதலியதீர்த்தகன்னியர்
கொங்கைகள்சுமந்திடைகொடியினெல்கிடச்
செங்கையினரிசியுமலருஞ்சிந்தினர்
மங்கலமுறைமுறைகூறிவாழ்த்தவே. (உக)

ஊருவிற்றோன்றியவுயிர்பெய்யோவியம்
காரினிற்செருக்கியகலாபமஞ்ஞைபோல்
வார்விசிக்கருவியோர்வகுத்தபாணியின்
நாரியருநடநடிப்பநோக்கியே. (உஉ)

இருந்தனனுலகங்களிரண்டுமொன்றுந்தன்
அருந்தவமுடைமையினளவிலாற்றலின்

‡ சமீரணன் நன்றாகசஞ்சரிப்பவன் அதாவது வாயுதேவன்.

பொருந்தியவிராவணன்புருவக்கார்முகக்
கருந்தடங்கண்ணியர்கண்ணின்வெள்ளத்தே. (உரு)

சூர்ப்பணகை இராவணனரண்மனையின் வடக்குக்
கோபுரவாயிலில் வருதல்.

தங்கையுமவ்வழித்தலையிற்றூங்கிய
செங்கையள்சோரியின்றாரைசேர்திழி
கொங்கையண்மூக்கினள் குழையில்காதினள்
மங்குலிஞெளிபடத்திறந்தவாயினள். (உச)

* முடிமிடைவாயிலின்முறையிட்டார்கலிக்
கடையுகக்கடலொலிகாட்டக்காந்துவாள்
குடதிசைச்செக்கரிற்சேந்தகூந்தலாள்
வடதிசைவாயிலின்வந்துதோன்றினாள். (உரு)

இதுமுதல் பத்தொன்பது கவிகளில், அவளது நிலையைக்கண்டு
அரக்கர்துயருறுதலைக் கூறுகிறர்.

தோன்றலுந்தொன்னகரரக்கர்தோகையர்
என்றெதிர்வயிறலைத்திரங்கியேங்கினார்
மூன்றுலகுடையவன்றங்கைமூக்கிலள்
தான்றனியவள்தரிக்கவல்லரோ. (உசு)

பொருக்கெனநோக்கினர்புகல்வதோகிலர்
அரக்கருமிரைத்தனரசனியாமெனக்
கரத்தொடுகரங்களைப்புடைத்துக்கண்களை
நெருப்பெழவிழித்துவாய்மடித்துநிற்கின்றார். (உஎ)

இந்திரன்மேலதோவுலகமீன்றபேர்
அந்தணன்மேலதோவாழியானதோ
சந்திரமௌலிபாற்றங்குமேகொலோ
அந்தரமென்றுநின்றழல்கிள்றார்சிலர். (உஅ)

செப்புறற்குரியவர்தெவ்வர்யாருளர்
முப்புறத்துலகுமுமடங்கமூடிய
இப்புறத்தண்டத்தோர்க்கியைவதன்றிது
† அப்புறத்தண்டத்தோராமென்றார்சிலர். (உகூ)

என்னையேமிராவணன்றங்கையென்றபின்
அன்னையேயென்றடிவணங்கலன்றியே

---

* முடிமிடைவாயிலின் பல அரசர்களுடைய கிரீடங்கள் நெருங்கிய இராவணனது அரண்மனைவாயிலில், சிகரங்கள்நெருங்கிய கோபுரவாயிலின் என்றும் பொருள்படும்.

† அப்புறத்தண்டம்-பகிரண்டம், வெளியண்டம்.

உன்னவேயொண்ணுமோவொருவராலிவள்
தன்னையேயரிந்தனடானென்ருர்சிலர். (ந௦)

போரிலான்புரந்தரனேவல்பூண்டனன்
ஆருலாநேமியானுற்றரேற்றுப்போய்
நீரினுனெருப்பினுன்பொருப்பினுனினி
ஆர்கொலாமீதெனவறைகின்ருர்சிலர். (நக)

சொற்பிறந்தார்க்கிது துணியவொண்ணுமே
இற்பிறந்தார்தமக்கியைவசெய்திலள்
* கற்பிறந்தானெனக்கரன்கொலாமிவள்
† பொற்பிறந்தாக்கினன்புகன்றென்ருர்சிலர். (நஉ)

தத்துருசிந்தையர்தளருந்தேவரில்
பித்துறவல்லரேபிழைப்பில்சூழ்ச்சியார்
முத்திரத்துலகையுமுடிக்கவெண்ணுவார்
இத்திரம்புணர்த்தனரென்கின்ருர்சிலர். (நந)

இனியொரு ‡ கற்பமுண்டென்னினன்றியே
வனைகழல்வழங்குவார்வீரர்வல்லரோ
பனிவருங்கானிடைப்பழிப்பினேன்புடை
முனிவர்வெகுளியின்முடிபென்ருர்சிலர் (நச)

கரையறுதிருநகர்க்கருங்கணங்கைமார்
நிறைவளைத்தளிர்க்கைகணெரித்துநோக்கினர்
பிறையுறு...லெனநிலையிற்பின்றுய
உரையினரொருவர்முன்னொருவரோடினர். (நரு)

முழவினில்வீணையின்முரளியாழினில்
தழுவியகுழலினிற்சங்கிற்றுரையில்
எழுகுரவின்றியேயென்றுமில்லதோர்
அழுகுரல்பிறந்ததவ்விலங்கைக்கன்றரோ. (நசு)

கள்ளுடைவள்ளமுங்களித்ததும்பியும்
உள்ளமுமொருவழிக்கிடக்கவோடினர்
வெள்ளமுநாணுறவிரிந்தகண்ணினர்
தள்ளுறுமருங்கினர்தழீஇக்கொண்டேகினர். (நஎ)

நாந்தக்வுழவரைநாட்டுந்தண்டத்தர்
காந்தியகனத்தினர்புலவி $ கைம்மிகச்

---

* கற்புபதிவிரதாதருமம். † பொற்புபொலிவு

‡ கற்பம்காலத்தின் ஒருபேரெல்லை. $ கைம்மிகமிகவும்அதிகப்பட, எல்லைமிக.

சேந்தகணதிகமுஞ்சிவந்துநீருக
வேந்தனுக்கிளையவாடாளின்வீழ்ந்தனர். (௩அ)

பொற்றலைமரகதப்பூகநேர்வுறச்
சுற்றியமணிவடந்தூங்குமூசலின்
முற்றியவாடலின்முனிவுற்றேங்கினர்
சிற்றிடையலமரத்தெருவுசேர்கின்றார் (௩௯)

எழுவெனமலையெனவெழுந்தமேதோள்களைத்
தழுவிவளைத்தளிர்நெகிழத்தாமரை
முழுமுகத்திருகயன்முத்தினலிகள்
பொழிதரச்சிலருளர்பொருமிவிம்முவார். (௪0)

வேறு.

நெய்ந்நிலையவேலரசனேருநரையில்லான்
இந்நிலையுணர்ந்தபொழுதெந்நிலபனென்று
மைந்நிலநெடுங்கண்மழைவானிலையதாகப்
பொய்ந்நிலமருங்கினர்புலம்பினர்புரண்டார். (௪க)

மனந்தலைவருங்கணவரின்சுவைமறந்தார்
கனந்தலைவருங்குழலொசிந்துகலைசோர
நனந்தலையகொங்கைகடதும்பிடநடந்தார்
அனந்தரிளமங்கையரழுங்கியயர்கின்றார். (௪௨)

அங்கையினரன்கயிலைகொண்டதிறலையன்
தங்கைநிலையிங்கிதுகொலென்றுதளர்கின்றார்
கொங்கையிணைசெங்கையின்மலைந்துகுலைகோதை
மங்கையர்கணங்கையெதிர்வந்துவிழுகின்றார். (௪௩)

இலங்கையில்விலங்குமிவையெய்தவிலவென்றும்
வலங்கையிவிலங்குமயின் * மன்னனுளனென்ன
நலங்கையிலகன்றதுகொனம்மினெனநைந்தார்
கலங்கலினிலங்கணினைவாரிகலுழ்கின்றார். (௪௪)

சூர்ப்பணகை இராவணனையிறைல் விழந்துபுரளுதல்.

என்றினையவன்றுயரிலங்கைககரெய்த
நின்றவரிருந்தவரொடோடுநெறிதேடக்
குன்றினடிவந்துபடிகொண்டலெனமன்னன்
பொன்றிணிகருங்கழல்விழுந்தனள்புரண்டாள். (௪௫)

* மன்-பெருமை அதனையுடையவன், மன்னன்.

இடமுதல் ங-கவிகள் அப்பொழுதுலகத்திலுண்டான் சுழப்பத்தைக்கூறும்.

மூடினதிருட்படலமூவுலகுமுற்றச்
சேடனும்வெருக்கொடுசிரக்குவைநெளித்தான்
ஆடின * குலக்கிரியருக்கனுமயிர்த்தான்
ஓடினதிசைக்கரிகளும்பருமொளித்தார். (சசு)

விரிந்தவலயங்கண்மிடைதோள்படரமீதிட்
டெரிந்தநயனங்களெயிறின்புறமெரிப்ப
நெரிந்தபுருவங்களிடைநெற்றியினைமுற்றத்
திரிந்தபுவனங்கள்வினைதேவருமயிர்த்தார். (சஎ)

தென்றிசைநமன்றனொடுதேவர்குலமெல்லாம்
இன்றிறுதிவந்ததுநமக்கெனவிருந்த
நின்றுயிர்நடுங்கியுடல்விம்மிநிலைநில்லார்
ஒன்றுமுரையாடலிலரும்பரிஞெடிம்பர். (சஅ)

இராவணன் சூர்ப்பணகையை இதுசெய்தவர் யார் என்றல்

மடித்தபிலவாய்கடொறும்வந்துபுகைமுந்தத்
துடித்ததொடர்மீசைகள்சுறுக்கொளவுயிர்ப்பக்
கடித்தகதிர்வாளெயிறுமின்கஞலமேகத்
திடித்தவுருமொத்துரறியாவர்செயலென்றான். (சகூ)

சூர்ப்பணகை விடை கூறுதல்.

கானிடையடைந்துபுவிகாவல்புரிகின்றார்
மீனுடைநெடுங்கொடியினோனையர்மேல்கீழ்
ஊனுடையுடம்புடைமையோருவமையொவ்வா
மானுடர்தடிந்தனர்கள்வாளுருவியென்றாள். (ருo)

இராவணன் கோபித்து நடந்ததை விவரமாகக் கூறுஎன்றல்.

செய்தனர்கண்மானுடரெனத்திசையனைத்தும்
எய்தநகைவந்ததெரிசிந்தினகணெல்லாம்
நொய்தவர்வலித்தொழினுவன்றமொழியொன்றோ
பொய்தவிர்பயத்தையொழிபுக்கபுகலென்றான். (ருக)

இதுமுதல் ஆறுகவிகள் ஒருதொடர் சூர்ப்பணகை விவரமாகக் கூறும் விடை.

மன்மதனையொப்பர்மணிமேனிவடமேருத்
தன்னெழிலழிப்பர்திரடோளின்வலிதன்னால்

---

* குலகிரிகள்-கைலாசம், இமயம், மந்தரம், விந்தியம், நிஷதம், ஏமகூடம், நீலம், கந்தமாதநம் என்பன.

என்னதனையிப்பொழுதிசைப்பதுலகேழின்
நன்மதனழிப்பரொரிமைப்பி * னனிவில்லான். (௫௨)

வந்தனைமுனித்தலைவர்பாலுடையர்வானத்
திந்துவின்முகத்தரெறிநீரிலெழுநாளக்
கந்தமலரைப்பொருவுகண்ணர்கழல்கையர்
அந்தமிறவத்தொழிலராரவரையொப்பார் (௫௩)

வற்கலையர்வார்கழலர்மார்பினணிநூலர்
விற்கலையர்வேதமுறைநாவர்நனிமெய்யர்
உற்கலையருன்னையொர் துகட்டனையுமுன்னார்
சொற்கலையெனத்தொலைவிறூணிகள்சுமந்தார். (௫௪)

† ஆறுபுனலஞ்சினமரக்கரையெனச்சென்
றேறநெறியந்தணரியம்பவுலகெல்லாம்
வேறுமெனுநுங்கள்குலம்வேரொடுமடங்கக்
கோறுமெனமுந்தையொருசூளுறவுகொண்டார். (௫௫)

மாரருளரேயிருவரோருலகின்வாழ்வார்
வீரருளரேயவரின்வில்லதனின்வல்லார்
ஆரொருவரன்னவரையொப்பவர்களையா
ஓரொருவரேயிறைவர்மூவரையுமொப்பார். (௫௬)

தராவலயநேமியுழவன்றயரதப்பேர்ப்
பராவருநலத்தொருவன் ‡ மைந்தர்பழியில்லார்
விராவருவனத்தவன்விளம்பவுறைகின்றார்
இராமனுமிலக்குவனுமென்பர்பெயரென்றாள். (௫௭)

இதுமுதல் நான்குகவிகள் இராவணன் தன்னைவெறுத்தல்.

மருந்தனையதங்கைமணிநாசிவடிவாளால்
அரிந்தவருமானுட § ரரிந்துமுயிர்வாழ்வார்
விருந்தனையவாளொடும்விழித்திறையும்வெள்கா
இருந்தனனிராவணனுமின்னுயிர்கொடின்னும். (௫௮)

கொற்றமறுமுற்றிவலியாலரசுகொண்டேன்
உற்றபயன்மற்றிதுவொல்காவுரையிறந்தேன்
முற்றவுலகத்துமுதல்வீரர்முடியெல்லாம்
அற்றபொழுதத்திதுபொருந்துமெனலாமே. (௫௯)

---

* நனி-விசேடித்த உரிச்சொல். † ஆறுபுலன் "மக்கள்தாமே யாறறிவுயிரே" என்றதொல்காப்பியத்தால் மக்களெனப்படுவார் ஐம்பொறியுணர்வேயன்றிமனமென்பதோரறிவுமுடையராதலுணர்க.

‡ மைந்து-இளமை, வலிமை, அழகு; அதனையுடையவர், மைந்தர்.

§ அறிந்து முயிர்வாழ்வாரென்றும் பாடம்.

மூளுமுள தாயபழியென் வயின் முடித்தோர்
ஆளுமுளவாமவர தாருயிருமுண்டாம்
வாளுமுளதோதவிடமுண்டவன் வழங்கும்
நாளுமுளதோளுமுளநானுமுளனன்றே. (சுO)

இது ராவணன் தன்மனத்தை முன்னிலைப்படுத்திக் கூறுவது.

* புத்துறவுறப்பழிபுகுந்ததெனநாணித்
† தத்துறுவதென்னைமனனேதளரலம்மா
எத்துயருனக்குளதினிப்பழிசுமக்கப்
பத்துளதலைப்பகுதிதோள்கள்பலவன்றே. (சுக)

இராவணன் கரன்முதலியோர் அவர்களைக்
கொன்றிலரோ ? என்றல்.

என்றுரைசெயாநகைசெயாவெரிவிழிப்பான்
வன்றுணையிலாவிருவர்மானுடரைவாளால்
கொன்றிலர்களாநெடியகுன்றுடையகானில்
நின்றகரனேமுதலினோர்நிருதரென்றான். (சு௨)

வேறு.

அதற்குச்சூர்ப்பணகை விடைகூறத் தொடங்கல்.

அற்றவனுரைத்தலோடுமழுதிழியருவிக்கண்ணள்
எற்றியவயிற்றள்பாரினிடைவிழுந்தேங்குகின்றாள்
சுற்றமுந்தொலைந்ததையநொய்தெனச்சுமந்தகையள்
உற்றதுதெரியும்வண்ணமொருவகையுரைக்கலுற்றாள். (சுங)

சூர்ப்பணகை செய்திகூறல்.

சொல்லென்றென்வாயிற்கேட்டார்தொடர்ந்தெழுசேனையோடும்
கல்லென்றவொலியிற்சென்றார்கரன்முதற்காளைவீரர்
எல்லொன்றுகமலச்செங்கணிராமனென்றிசைத்தவேந்தல்
வில்லொன்றிற்கடிகைமூன்றிலேறினர்விண்ணிலென்றாள். (சுச)

அதுகேட்டு இராவணன் சோகமுங்கோபமும் ஒருங்குஅடைதல்.

தாருடைத்தானையோடுந்தம்பியர்தமியன்செய்த
போரிடைமடிந்தாரென்றவுரைசெவிபுகாமுன்னம்
காரிடையுருமின் மாரிகனலொடுபிறக்குமாபோல்
நீரொடுநெருப்புக்கான்றநிறைநெடுங்கண்களெல்லாம் (சுரு)

---

* புதுமை + உறவு—பத்துறபு; பண்புப்பெயர் ஈறுபோய்த் தன்னொற்று இரட்டிற்று இனி புத்துற-புதுமையாக, உற-மிகவும், பழிபுகுந்தது என்றலுமொன்று.

† தத்துறுவது-அலைவது:

இராவணன் சூர்ப்பநகையை நீஅவருக்குச்செய்த
குற்றம் என் - என்றல்.

ஆயிடையெழுந்தசீற்றத்தழுந்தியதுன்பமாழித்
தீயிடையுகுக்குநெய்யிற்சீற்றத்திற்கூற்றஞ்செய்ய
நீயிடையிழைத்தகுற்றமென்னைகொன்னினையின்னே
வாயிடையிதழுழுக்கும்வலிந்தவர்கொய்யவென்றான். (சுசு)

அதற்கவள்கூறும் விடை.

என்வயினுற்றகுற்றம்யாவர்க்கும்மெழுதொணாத
தன்மையனிராமனோடுந்தாமரைதவிரப்போந்தாள்
மின்னவயின்மருங்குல்கொண்டாள்வேய்வயின்மென்றோள்கொண்டாள்
பொன்வயின்மேனிகொண்டாள்பொருட்டினாற்புகுந்ததென்றாள். (சுஎ)

ஆரவளென்னலோடமெரக்கியுமையவாழ்ந்து
தேரவடிரண்டகொங்கைவெம்பொன்செய்குலிகமெசெப்பு
பாரவள்பாதந்தீண்டப்பாக்கியம்படைத்ததம்மா
பேரவள்சீதையென்றுவடிவெலாம்பேசலுற்றாள். (சுஅ)

இதுமுதல் கக-கவிகள் சூர்ப்பணகை பலவாற்றல்
சீதையை வருணித்தல்.

காமரமுரலும்பாடல்களௗனக்கனிந்தவின்சொற்
றேமலர்நிறைந்தகூந்தற்றேவர்க்குமணங்காமென்னத்
தாமரையிருந்த * தையல்சேடியாந்தராமுமல்லள்
யாமுரைவழங்குமென்பதேழமைப்பாலதன்றே. (சுகூ)

மஞ்சொக்குமளகவோதிமமழையொக்கும்வடித்தகூந்தல்
பஞ்சொக்குமடிகள்செய்யபவளத்தின்விரல்களைய
அஞ்சொற்களமுதிலள்ளிக்கொண்டவள்வதனமைதீர்
கஞ்சத்தினளவிற்றேனுங்கடலினும்பெரியகண்கள் (எ0)

ஈசனார்கண்ணின்வெந்தானென்னுமிதுமுதைச்சொல்லிவ்
வாசகாறேதியாளைக்கண்டனன்வல்லவாற்றால்
பேசலாந்தகைமைத்தல்லாப்பெரும்பிணிபிணிப்பநீண்ட
ஆசையாலழிந்துதேய்ந்தானநங்கனவ்வுருவமம்மா. (எக)

தெவ்வுலகத்துங்காண்டிசிரத்திணிற்பணத்தினோர்கள்
அவ்வுலகத்துங்காண்டியலைகடலுலகிற்காண்டி
வெவ்வுலையுற்றவேலைவாளினையென்றகண்ணாள்
இவ்வுலகத்தாளங்கம்யாவர்க்குமெழுதொணாதாள். (எஉ)

* தையல் அழகு; அப்னையுடையாளுக்குப் பண்பாகுபெயர்.

தோளையேசொல்லுகேனோசுடர்முகத்துலவுகின்ற
வாளையேசொல்லுகேனோவல்லவைவழுத்துகேனோ
மீளாவுந்திகைப்பதல்லாற்றனித்தனிவிளம்பலாற்றேன்
நாளையேகாண்டியன்றேநானுனக்குரைப்பதென்னோ. (௭௩)

வில்லொக்குநுதலென்றாலும்வேலொக்கும்விழியென்றாலும்
பல்லொக்குமுத்தென்றாலும்பவளத்தையிதழென்றாலும்
சொல்லொக்கும்பொருளொவ்வாவாற்சொல்லலாமுவமையுண்டோ
நெல்லொக்கும்புல்லென்றாலுநேருரைத்தாகவற்றே. (௭௪)

இந்திரன்சசியைப்பெற்றானிமூன்றுமதனத்தோன்றன்
தந்தையுமுமையைப்பெற்றான்றாமரைச்செங்கணானும்
செத்திருமகளைப்பெற்றான்சீதையைப்பெற்றாய்நீயும்
அந்தரம்பார்க்கினன்மையவர்க்கில்லையுனக்கேயையா. (௭௫)

பாகத்திலொருவன்வைத்தான்பங்கயத்திருந்தபொன்னை
ஆகத்திலொருவன்வைத்தானந்தணனாவில்வைத்தான்
மேகத்தின்மின்னைமுன்னேவென்றநுண்ணிடையைநீயும்
மாகத்தோள்வீரபெற்றாலெங்ஙனம்வைத்துவாழ்தி. (௭௬)

பிள்ளைபோற்பேச்சினாளைப்பெற்றபின்பிழைக்கலாற்றாய்
கொள்ளைபோகின்றசெல்வமவளுக்கேகொடுத்தியைய
வள்ளலேயுனக்குநல்லேன்மற்றுநின்மனையில்வாழும்
கிள்ளைபோன்மொழியார்க்கெல்லாங்கேடுசூழ்கின்றேனன்றே. (௭௭)

தேர்தந்தவல்குற்சீதைதேவர்தமுலகினிம்பர்
வார்தந்தகொங்கையார்தம்வயிறுதந்தாளுமல்லள்
தார்தந்தகமலத்தாளைத்தருக்கினர்கடையச்சங்க
நீர்தந்ததனைவெல்வானிலந்தந்துதிரம்பிற்றன்றே. (௭௮

மீன்கொண்டோடும்வேலைமேகலையுலகமேத்தத்
தேண்கொண்டோடுங்கூந்தற்சிற்றிடைச்சிதையென்னும்
மாண்கொண்டோடுநீயுன்வாள்வலியுலகங்காண
யான்கொண்டோடும்வண்ணமிராமனைத்தருதியென்பால். (௭௯)

தருவதுவிதியேயென்றாற்றவம்பெரிதுடையரேனும்
வருவதுவருநாளன்றிவந்துகைகூடவற்றோ
ஒருபதுமுகமுங்கண்ணுமுருவமுமார்புந்தோள்கள்
இருபதும்படைத்தசெல்வமெய்துவதினிநீயெந்தாய் (௮௰)

சூர்ப்பநகை இவளையெடுக்கையிலிது செய்யப்பட்டேனென்றல்.

இன்னவடன்னையுன்பாலுய்ப்பலென்றெடுக்கலுற்ற
என்னையவ்விராமன்றம்பியிடைபுகுந்திலங்குவாளால்

முன்னைமூக்கரிந்துவிட்டான் முடிந்ததென்வாழ்வுமுன்னின்
சொன்னபினுயிரைநீப்பான் றுணிந்தனெனென்னச்சொன்னாள். ()

அதுகேட்டு இராவணன் மிக்ககாமமடைதல்.

கோமமுமறனுமானக்கொதிப்புமென் றினையவெல்லாம்
பாபநின் றிடத்துநில்லாப்பெற்றிபோற்பற்றுவிட்ட
நீபமொன்றொன்றையுற்றாலென்னலாஞ்செயலிற்புக்க
தாபமுங்காமநோயுமாருயிர்கலந்தவன்றே. (அ௨)

இதுமுதல் 85-கவிகள் இராவணனது காமவேதனையைக்கூறும்.

கரனையுமறந்தான் றங்கைமூக்கினைக்கடிந்துநின்றான்
உரனையுமறந்தானுற்றபழியையுமறந்தான்வெற்றி
அரனையுங்கொண்டகாமனம்பினுன் முன்னைப்பெற்ற
வரனையுமறந்தான்கேட்டமங்கையைமறந்திலாதான். (அ௩)

சிற்றிடைச்சீதையென்னுநாமமுஞ்சிந்தைதானும்
உற்றிரண்டொன்றாய்நின்றாலொன்றொழித்தொன்றையுன்ன
மற்றொருமனமுமுண்டோமறக்கலாம்வழிமற்றியாதோ
கற்றனர் * ஞானமின்றேற்காமத்தைக்கடக்கலாமோ. (அ௪)

மயிலுடைச்சாயலாளைவஞ்சியாமுன்னநீண்ட
எயிலுடையிலங்கைநாதனிதயமாஞ்சிறையில்வைத்தான்
அயிலுடையரக்கனுள்ளமவ்வழிமெல்லமெல்ல
வெயிலுடைநாளிலுற்றவெண்ணெய்போல்வெதும்பிற்றன்றே. ()

விதியதுவலியினுனுமேலுளவினைவினுனும்
பதியுறுகேடுவந்துகுறுகியபயத்தினுனும்
கதியுறுபொறியின்வெய்யகாமனோய்கல்விநோக்கா
மதியிலிமறையச்செய்ததீமைபோல்வளர்ந்ததன்றே (அ௬)

பொன்மயமானநங்கைமனம்புகப்புண்மைபூண்ட
தன்மையோவரக்கன் றன்னையயர்த்ததோர்தகைமையாலோ
மன்மதன்வாளிதூவிநலிவதோர்வலத்தனுனன்
வன்மையைமாற்றுமாற்றல்காமத்தேவதிந்ததன்றே. (அ௭)

இராவணன் சபையைவிட்டுத் தன்மனையிலுள்ளே செல்லுதல்.

எழுந்தனனிருக்கைநின்றுண்டேழுலகத்துளோரும்
மொழிந்தனராசியோசைமுழங்கினசங்கமெங்கும்
பொழிந்தனபூவின்மாரிபோயினர்புறத்தோரெல்லாம்
அழிந்தழில்சிந்தையோமொடகக்கோயில்புக்கான். (அ௮)

---

* ஞானமானது-முத்திநிலையையும் மற்றைப் பிரபஞ்சநிலைகளையும்சந்தேகவிபரீதங்களின்றி உள்ளபடியறிதல்.

இனி இராவணனது காயநோயெழுதிர்ச்சி.

பூவினால்வேய்ந்துசெய்தபொங்குபேரமளிகொங்கைத்
தேவிமார்குழுவுநீங்கச்சேர்ந்தனன்சேர்தலோடும்
நாவினாரேறுதிநவ்வினையனமுங்குயமும்புக்குப்
பாவியாக்கொடுத்தவெம்மைபயப்பயப்பரந்ததன்றே. (அக)

வே று.

நூக்கலாகலாதகாதனூறுநூறுகோடியாய்ப்
பூக்கவாசவாடைவீசுசீதநீர்பொதிந்தமென்
சேக்கைவீகரிந்துதிக்கயங்களெட்டைவென்றதோள்
ஆக்கைதீயவுள்ளமையவாவிவேவதாயினான். (கூ0)

தாதுகொண்டசீதமேவுசந்துசந்தமென்றளிர்ப்
போதுகொண்டடித்தபோதுபொங்குதீமருந்தினால்
வேதுகொண்டதென்னமேனிவெந்துவெந்துவிம்முதீ
ஊதுவன்றுருத்திபோலுயிர்த்துயிர்த்துயங்கினான். (கூக)

தாவியாதுநீதெனுதுதையலாளைமெய்யுறப்
பாவியாதபோதிலாதபாவிமாழைபானல்வேல்
காவியானகண்ணிமேனிகாணமூளுமாசையால்
ஆவிசாலநொந்துநொந்தழுங்குமானுமாயினான். (கூஉ)

பரங்கிடந்தமாதிரம்பரித்தபாழியானையின்
கரங்கிடந்தகொம்பொடிந்திரங்கவென்றகாவலன்
மரங்குடைந்ததும்பிபோலநங்கன்வாளிவந்துவந்
துரங்குடைந்துநொந்துநொந்துளைந்தொதுங்கினான். (கூங)

கொன்றைதுன்றுகோதையோடொர்கொம்புவந்தெனெஞ்சிடை
நின்றதுண்டெகண்டதென்றழிந்தழுங்குநீர்மையான்
மன்றறங்கலங்கன்மாரன்வாளிபோலமல்லிகைத்
தென்றல்வந்தெதிர்ந்தபோதுசீதுவானுமாயினான். (கூச)

இராவணன் மாளிகையை விட்டு ஒருசோலையை யடைதல்.

அன்னகாலையங்குநின்றெழுந்தழுங்குசிந்தையான்
இன்னவாறுசெய்வெனென்றெரெண்ணிலானிரங்குவான்
பன்னுகோடிதீபமாலைபாலையாழ்பழித்தசொற்
பொன்னனாரெடுக்கவங்கர்சோலையூடுபோயினான். (கூரு)

வே று.

அந்தச்சோலையின் வருணனை.

மாணிக்கம்பனசம்வாழைமரகதம்பிவரந்தேமா
ஆணிப்பொன்வேங்கைகோங்கமரவிந்தந்தாரகம்பூகம்

சேணுய்க்குநீலஞ்சாலங்குருவிந்தந்தென்னம்வெள்ளி
பாணித்தென்பளிங்குநாகம்பாடலம்பவளமன்றே. (கூசு)

அந்த ஒருமண்டபத்தில் ஒருபடுக்கையிற்சேர்தல்.

வானுறநிவந்தசெங்கேழ்மணிமரந்துவன்றிவான
மீனெனமலர்கடம்மில்வேற்றுமைதெரிதறேற்று
தேனுகுசோலைநாப்பட்செம்பொன்மண்டபத்துளாங்கோர்
பானிறவமளிசேர்ந்தான்பையுளுற்றுயங்கிளைவான். (கூஎ)

அந்தப்பறவைகள்இராவணனுக்கஞ்சி மௌனமாயிருத்தல்.

கனிகளின்மலரின்வந்தகள்ளுண்டுகளிகளன்ன
வனிதையர்மழலையின்சொற்கிள்ளையுங்குயிலும்வண்டும்
இனியனமிழற்றுகின்றவியாவையுமிலங்குவேந்தன்
முனியுமென்றவிந்தவாயமூங்கையர்போன்றவன்றே. (கூஅ)

வசந்தகாலம் வருதல்

பருவத்தால்வாடைவந்தபசும்பனியசங்கபாணம்
உருவிப்புக்கொளித்தபுண்ணிற்குளித்தலுமுளைந்துவிம்மி
இருதுத்தான்யாதடாவென்றியம்பினதியம்பலோடும்
வெருவிப்போய்ச்சிசிரநீங்கிவேனிலவந்திறுத்ததன்றே. (கூகூ)

இராவணனது தாபம் தணிவு பொறுமை.

வண்பணைமரமூந்தியமலைகளுங்குளிரவாழும்
மென்பனியெரிந்தவென்றால்வேனிலைவிளம்பலாமோ
அன்பெனும்விடமுண்டாரையார்றலாமருந்துமுண்டோ
இன்பமுந்துன்பந்தானுமுள்ளத்தோடியைந்தவன்றே. (க00)

அவன் சரத்காலத்தைக் கொணரக் கட்டளையிடுதல்

மாதிரந்திறுதிகாறுந்தன்மனத்தெழுந்த * மையல
வேதனைவெப்பஞ்செய்யவேனிலும்வெதுப்புங்காலை
யாதிதிங்கிதனின்முன்னைச்சிசிரமன்றிதனைநீக்கிக்
கூதிராம்பருவந்தன்னைக்கொணருதிர்விரைவினென்றான். (க0க)

அதுவும் தபிக்கவே அவன் யெல்லாப்பருவத்தையும்ஒழிக்கவென்றல்.

கூதிர்வந்தடைந்தகாலைகொதித்தனகுவவுத்திண்டோள்
சீதமுஞ்சுடுமோமுன்னைச்சிசிரமேகாணிதென்றான்
ஆதியாயஞ்சுமன்றேயருளலதியற்றவென்ன
யாதுமிங்கிருதுவாகாதியாவையுமகற்றுமென்றான். (க0உ)

---

* மையல்வேதனைமோகத்துன்பம்

இருதுவொன்று மில்லாத அச்சமயத்து நிலைமையின் வருணனை.

என்னலுமிருதுவெல்லாமேகினயாவுந்தத்தம்
பன்னரும்பருவஞ்செய்யாயோகிபோற்பற்றுநீத்த
பின்னருமுலகமெல்லாம்பிணிமுதற்பாசம்வீசித்
துன்னருந்துவத்தினெய்துர் * துறக்கம்போற்றேன்றிற்றன்றே. ()

தாபம் ஒழியாமை.

கூலத்தாருலகமெல்லாங்குளிப்பொடுவெதுப்புநீங்க
நீலத்தாரரக்கன்மேனிநெய்யின்றியெறிந்ததன்றே
காலத்தால்வருவதொன்றோகாமத்தாற்கனலும்வெந்தீச்
சீலத்தாலவிவதன்றிச்செய்யத்தாலுவதுண்டோ. (கoச)

தாபந்தணியாத அவன் சந்திரனைக்கோணர்களென்றல்.

நாரமுண்டெழுந்தமேகந்தாமரைவளையநாளு
சாரமுண்டிருந்தசீதசந்தனத்தளிர்மென்றூதோ
டாரமுண்டிருந்துஞ்சிந்தையயர்கின்றனயநின்றுரை
ஈரமுண்டென்பரோடியிர்துவைர்கொணர்மினென்றான். (கoரு)

சந்திரன் வருதல்.

வெஞ்சினத்தரக்கனுண்டவியனகர்மீதுபோதும்
நெஞ்சிலனொதுங்குகின்றநிறைமதியோனைநோக்கி
அஞ்சலைவருதிநின்னையழைத்தனனறசனென்னச்
சஞ்சலந்துறந்துதானச்சந்திரனுதிக்கலுற்றான். (கoசு)

சந்திரோதயவருணனை சந்திரன் இராவணனை வருத்துதல்.

அயிருறக்கலந்தநன்னீராழிநின்றுமிழநீத்துச்
செயிருறக்கலந்ததாண்டோந்தேய்வுவந்துற்றபோது
வயிரமுற்றுடைந்துசென்றோர்வலியவற்செல்லுமாபோல்
உயிர்தெறக் † காலனென்பானொத்தனனுதயஞ்செய்தான். (கo)

பராவருங்கதிர்களெங்கும்பரப்பிமீப்படர்ந்துவானில்
தாரதலத்தெவரும்பேணுவவனையேசவிக்குநீரால்
அராவனைதுயிலுமண்ணல்காலமோர்ந்தற்றநோக்கி
இராவணனுயிர்மேலுய்த்ததிகிரியுமென்னலானான். (கoஅ)

அருகுருபாலின்வேலையமுதெலாமளைந்துவாரிப்
பருகினன்பரந்துபாய்ந்தநிலாச்சுடர்ப்பனிமென்கற்றை
நெறியுறுபுருவச்செங்கணரக்கற்குநெருப்பினுப்பண்
உருகியவெள்ளியள்ளிவீசினுலொத்ததன்றே. (கoகூ)

* துறக்கம் முத்தியுலகம். சுவர்க்கம். † காலன்காலத்தை அறுதியிடுபவன்.

ழின்னிலந்திரிந்ததன்னவிழுங்கிலாமிதிலைசூழ்ந்த
செந்நெலங்கழனிநாடன்றிருமகள்செவ்விகேளா
நன்னலந்தொலைந்துசோருமரக்கனைநாளுந்தோலாத்
* துன்னலவெருவன்பெற்றபுகழெனச்சுட்டதன்றே.　　(கக0)

சூரியனையேன் கொணர்ந்தீரென்றல்.

கருங்கழற்காலனஞ்சுங்காவலன்கருத்துநோக்கித்
தருங்கதிர்ச்சீதயாக்கைச்சந்திரற்றருதிரென்ன
முருங்கியதனலின்மூரிவிடத்தினைமுகக்குஞ்சீற்றத்
தருங்கதிருக்கன்றன்னையாரழைத்தீர்களென்றான்.　　(ககக)

ஏவளாளர் சந்திரனே என்றல்.

அவ்வழிச்சிலதரஞ்சியாதியாயருளில்லாரை
இவ்வழித்தருதுமென்பதியம்பலாமியல்பிற்றன்றால்
செவ்வழிக்கதிரோரென்றுந்தேரின்மேலன்றிவாரான்
வெவ்வழித்தெனினுந்திங்கள்விமானத்தின்மேலதென்றார்.　　(ககஉ)

வேறு.

இராவணன் சந்திரனேன்றறிந்து அவனை வெறுக்கத் தொடங்கல்.

பணைந்தாழல்குற்பனிமொழியார்க்கன்புபட்டார்படுங்காமக்
குணந்தான்முன்னமரியாதான்கொதியாநின்றான்மதியாலே
தணந்தாமரையின்றனிப்பகைஞனென்னுந்தன்மையொருதானே
உணர்ந்தானுணர்வுற்றவன்மேலிட்டுயிர்தந்துய்க்கவுரைசெய்வான்.

தேயாநின்றாய்மெய்வெளுத்தாயுள்ளங்கறுத்தாய்நிலைதிரிந்து
காயாநின்றாயொருநீயுங்கண்டார்சொல்லக்கேட்டாயோ
பாயாநின்றமலர்வாளிபறியாநின்றாரின்மையால்
ஓயாநின்றேனுயிர்காத்தற்குரியார்யாவருபெறியே　　(ககச)

ஆற்றாராகிற்றம்மைக்கொண்டடங்காரோவென்றாருயிர்க்குக்
கூற்றாய்நின்றகுலச்சனகிகுவளைமலர்ந்ததாமரைக்குத்
தோற்றாயதனுனைக்கரித்தாய்மெலிந்தாய்வெதும்பத்தொடங்கினாய்
மாற்றார்செல்வங்கண்டழிந்தால்வெற்றியாக † வற்றாமோ.　　(ககரு)

இராவணன் சூரியனையும் பகலையும் வரவழைத்தல்.

என்னப்பன்னியிடருழவாவிரவோடிவனைக்கொண்டகற்றி
முன்னைப்பகலும்பகலோனும்வருகவென்றான்மொழியாமுன்
உன்னற்கரியவுபெதியுமிரவுமொழிந்தவொருநொடியில்
பன்னற்கரியபகலவனும்பகலும்வந்துபரந்தவால்.　　(ககசா)

* துன்னலன்-சோரதவன். † வற்று-வல்லது; பண்படிக்குறிப்புமுற்று.

இதுமுதல் கரு-கவிகள் அவ்வுதய காலவருணனை.

இருக்கின்மொழியாரெரிமுகத்தினீந்தநெய்யினவிர்செம்பொன்
உருக்கியனையகதிர்பாயவனல்போல்விரிந்ததுயர்கமலம்
அருக்கனெய்தவமைந்தடங்கிவாழாவடாதபொருளெய்திச்
செருக்கியிடையேதிருவிழந்தசிறியோர்போன்றசேதாம்பல். (ககஎ)

நாணிநின்றவொளிமழுங்கிநெடுங்காநின்றவுடம்பினனாய்ச்
சேணினின்றுபுறஞ்சாய்ந்துகங்குற்றூரம்பின்செல்லப்
பூணின்வெய்யோனொருதிசையேபுகுதப்போவான்புகழ்வேந்தர்
ஆணைசெல்லநிலையழிந்தவரசர்போன்றானல்லாண்டான். (ககஅ)

வே று.

மணந்தபேரன்பரைமலரின்சேக்கையுள்
புணர்ந்தவரிடையொருவெகுளிபொங்கலாற்
* கணங்குழைமகளிர்கள்கங்குனீங்கிட
உணர்ந்திலர்கனவினுமூடறீர்ந்திலர். (ககக)

தள்ளுறுமுயிரினர்தலைவர்நீங்கலால்
நள்ளிரவிடையுறநடுக்கநீங்கலர்
கொள்ளையினலர்தருகுவளைநாண்மலர்
கள்ளுகுவனவெனக்கலுழுங்கண்ணினர். (கஉ0)

அணைமலர்ச்சேக்கையுளாடறீர்ந்தனர்
பணைகளைத்தழுவியபவளவல்லிபோல்
இணைமலர்க்கைகளினிறுகவின் † னுயிர்த்
துணைவரைத்தழுவினர்துயில்கின்றார்சிலர். (கஉக)

அளியினங்கடந்தொறுமார்ப்பவாய்கதிர்
ஒளிபடவுணர்ந்திலவுறங்குகின்றன
தெளிவிலவின்றுயில்விளையுஞ்சேக்கையுள்
களிகளைநிகர்த்தனகளிநல்யானையே. (கஉஉ)

விரிந்துறைதுறைதொறும்விளக்கம்யாவையும்
எரிந்திழுதஃகலவொளியிழந்தன
அருந்துறைநிரம்பியவுயிரினன்பரைப்
பிரிந்துறைதருங்குலப்பேதைமாரினே. (கஉங)

‡ புனைந்திதழுரிஞ்சுறபொழுதுபுல்லியும்
வினைந்திலவைகறைமலருமாமலர்

---

* கணம்-கூட்டம். † உயிர்த்துணைவர் - உயிர்போன்ற துணைவரென உவமத்தொகை. ‡ புனைதல்-அழகுசெய்தல் "பொன்னியற்புனைதோட்டியால்" என்புழி இப்பொருட்டாதல் காண்க. (புறநானூறு கச-வதுபாட்டு.)

நனந்தலைபமளியிற்றுயிலுநங்கைமார்
அனந்தரினெடுங்கணோடொத்தவாமரோ. (௧௨௪)

இச்சையிற்றுயில்வதற்கியாவர்கண்களும்
நிச்சயம்பகலுந்தமிமைகணீக்கலர்
பிச்சையுமிடுதுமென்றுணர்வுபேணலர்
வச்சையர்நெடுமனைவாயிலானவே. (௧௨௫)

நஞ்சுறுபிரிவினைநாளினீளமோர்
தஞ்சரவிடுவதோர்தயாவுதாங்கலால்
வெஞ்சிறைநீங்கியவினையினாரென
நெஞ்சுறக்களித்தனநேமிப்புள்ளெலாம். (௧௨௬)

நாண்மதிக்கல்லதுநடுவணெய்திய
ஆணையினீக்கலாவரிற்பாய்வன
‡ மாண்வினைபயன்படாமாந்தர்வாயில்சேர்
பாணரிற்றளர்ந்தனபாடற்றும்பியே. (௧௨௭)

அருமணிச்சாளரமதனினூடுபுக்
கெரிகதிரின்றுயிலெழுப்பியேற்றவும்
மருளொடுதெருளுறுநிலையர்மங்கையர்
தெருளுறமெய்ப்பொருடெளிந்திலாரினே. (௧௨௮)

ஏவலின்வன்மையையெண்ணநேற்றலர்
நாவலரியற்றியநாளினுமநூல்
காவலினினிதுணர்கணிதமாக்களும்
கூவுறுகோழியுந்துயில்வுகொண்டவே. (௧௨௯)

இனையனயுலகினினிகழுமெல்லையில்
கனைகழலரக்கனுங்கணணினோக்கினான்
நினைவுறுமனத்தையுநெருப்பிற்றீக்குமால்
அனையவத்திங்களேயாகுமாலென்றான். (௧௩௦)

ஏவலர் சூரியனே என்றுணர்த்தல்.

திங்களோவன்றிதுசெல்வசெங்கதிர்
பொங்குளைப்பச்சையம்புரவித்தேரதால்
வெங்கதிர்சுடுவதேயன்றிமெய்யுறத்
தங்குதண்கதிர்சுடத்தகாதென்றார்சிலர். (௧௩௧)

‡ மாண்வினை-பாடலின் தன்மையையுணர்ந்து கேட்டு மகிழ்தலும் பாணர்க்கு வேண்டியபடி கொடுத்துப் பெருமையையடைதலுமாகிய செயல்களாம்.

வேறு.

இராவணன் இளம்பிறையைக் கோணர்க என்றல்.

நீலச்சிகரக்கிரியன்னவனின்றவெய்யோன்
ஆலத்தினும்வெய்யனகற்றியாற்றுகின்ற
வேலைக்குரலைத்தவிர்கென்றுவிலக்கிமேலை
மாலைப்பிறைப்பிள்ளையைக்கூவுதிர்வல்லையென்றான். (கருஉ)

சொன்னானிருதர்க்கிறையம்மொழிசொல்லலோடும்
அந்நாளினிரம்பியவம்மதியாண் * டொர்வேலை
முந்நாளினிளம்பிறையாகிமுளைத்ததென்றால்
எந்நாளுமருந்தவமன்றியியற்றலாமோ. (கருங)

இராவணன்பிறையைப் பழித்தல்

குடபாலின்முளைத்ததுகண்டகுணங்கடியோன்
வடவாவனலன்றெனின்மண்பிடர்வைத்தபாம்பின்
விடவாளெயிறன்றெனினென்னைவெகுண்டமாலை
அடவாளுருவிக்கொடுதோன்றியதாகுமன்றே. (கருச)

தாதுண்சடிலத்தலைவைத்ததுதண்டரங்கம்
மோதுங்கடலிற்கிடைமுந்துபிறந்தபோதே
ஓதுங்கடுவைத்தன்மிடற்றினொளித்தகோன்
ஈதுங்கடுவாமெனவெண்ணியவெண்ணமன்றே. (கருரு)

உருமொக்கவுலைந்துயிர்நுங்கியதிங்களோடித்
திருமிச்சிறுமின்பிறைதீமைகுறைந்ததில்லை
கருமைக்கறைநெஞ்சினினஞ்சுகலந்தபாம்பின்
பெருமைச்சிறுமைக்கொருபெற்றிகுறைந்ததுண்டோ. (கருசு)

இராவணன் இருளைத் தருக என்றல்.

கன்னக்கனியும்மிருடன்னையுங்காண்டுமென்றே
முன்னைக்கதிர்நன்றிதகற்றுதிர்முன்புசான்ற
என்னைச்சுடுமென்னினிவ்வேழுலகத்தும்வாழ்வோர்
பின்னைச்சிலருய்வரென் † றங்கொருபேச்சுமுண்டோ. (கருஎ)

அந்தகாரவருணனை.

ஆண்டப்பிறைநீங்கலுமெய்தியதந்தகாரம்
தீண்டற்கெளிதாய்ப்பலதேய்ப்பனதேய்கலாகி
வேண்டிற்கரபத்திரத்தீர்த்துவிழுத்தலாகிக்
காண்டற்கினிதாய்ப்பலகந்துதிரட்டலாகி. (கருஅ)

---

* ஒருவேலை-ஒருபுறத்தில், எல்லை. † அங்கு-அசை.

முருடீர்ந்திருட்டற்கெளிதென்பதென் முற்றுமுற்றிப்
பொருடீங்கில்கேள்விச்சுடர்புக்குவழங்கலின்றிக்
குருடீங்கிதென்னக்குறிக்கொண்டுகண்ணேட்டங்குன்றி
அருடீர்ந்தநெஞ்சிற்கரிதென்பதவ்வந்தகாரம். (௧௩௯)

இராவணன் இருளைப்பழித்தல்.

விள்ளாதுசெறிந்திடைமேலுறவோங்கி * யெங்கும்
நள்ளாதிருளந்தகன்ஞாலம்விழுங்கலோடும்
எள்ளாதுலகியாவையும்யாவரும்வீயுமென்ப
துள்ளாதுமிழ்ந்தான்விடமுண்டவொருத்தனென்றான். (௧௪௦)

வேலைத்தலைவந்தொருவன்வலியால்விழுங்கும்
ஆலத்தினடங்குவதன்றிதறிந்துணர்ந்தேன்
ஞாலத்தொடுவிண்முதல்யாவையுநாவினக்கும்
காலக்கனல்கார்விடமுண்டுகறுத்ததன்றே. (௧௪௧)

இராவணன் சீதையை உருவெளித்தோற்றத்திலே கண்டு
கூறும் வார்த்தை.

அம்புமனலுநுழையாக்கனவந்தகாரத்
தும்பர்மழைகொண்டயலொப்பரிதாயதுப்பின்
கொம்பர்குரும்பைக்குலங்கொண்டதுதிங்கடாங்கி
வெம்புந்தமியேன்முன்விளக்கெனத்தோன்றுமன்றே. (௧௪௨)

மருளூடுவெந்தமயக்கோமதிமற்றுமுண்டோ
தெருளாதிதென்னேதிணிமையிழைத்தாலுமொவ்வா
இருளூடிருகுண்டலங்கொண்டிருண்டநீலச்
சுருளோடும்வந்தோர்சுடர்மாமதிதோன்றுமன்றே. (௧௪௩)

† புடைகொண்டெழுகொங்கையுமல்குலும்புல்லிநிற்கும்
இடைகண்டிலமல்லதெல்லாவுருவுந்தெரிந்தாம்
விடநுங்கியகண்ணுடையாரிவர்மெல்லமெல்ல
மடமங்கையராயென்மனத்தவராயினரே. (௧௪௪)

பண்டேயுலகேழினுமுள்ளபடைக்கணாரைக்
கண்டேனிவர்போல்வதொர்பெண்ணுருக்கண்டிலேனல்
உண்டேயெனின்வேறினியெங்கையுணர்த்திநின்ற
வண்டேறுகோதைமடவாரிவராகுமன்றே. (௧௪௫)

இராவணன் சூர்ப்பணகையை யழைக்கவென்றல்.

பூண்டிப்பிணியானுறுகின்றதுதான்பொறாதாள்
தேண்டிக்கொடுவெந்தனள்செய்வதொர்மாறுமுண்டோ

* எங்கும் நள்ளாது யாதோரிடத்தையும் விட்டிடாமல்.
† புடை-பக்கம், திரட்சியுமாம்.

காண்டற்கினியாளுருக்கண்டவட்கேட்கு * மாற்றால்
ஈண்டிப்பொழுதேவிரைந்தெங்கையைக்கூவுகென்றான். (கசசு)

சூர்ப்பணகை இராவணனிடத்து வருதல்.

என்றானெனலுங்கடிதேகினர்கூவுமெல்லை
வன்றானிருதக்குலம் † வேரறமாய்த்தல்செய்வாள்
ஒன்றாதகாமக்கனலுட்டெறலோடுநாசி
பொன்றாழ்குழைதன்னொடும்போக்கினள்போய்புகுந்தாள். (கசஎ)

இராவணன் அவளைநோக்கி இவள் சீதைதானோ எனவினவல்.

பொய்ந்நின்றநெஞ்சிற்கொடியாள்புகுந்தாளைநோக்கி
நெய்ந்நின்றகூர்வாளவனேருறநொக்குநங்காய்
மைந்நின்றவாட்கண்மயினின்றெனவந்தென்முன்னர்
இந்நின்றவளாங்கொலியம்பியசீதையென்றான். (கசஅ)

அவன் தனது உருவெளிதோற்றத்தின்படி இராமனென்றல்.

செந்தாமரைகண்ணொடுஞ்செங்கனிவாயினோடும்
சந்தார்தடந்தோளொடுந்தாழ்தடக்கைகளோடும்
அந்தாரகலத்தொடுமஞ்சனக்குன்றமென்ன
வந்தானிவனாகுமவ்வல்விலிராமனென்றாள். (கசகூ)

சூர்ப்பணகையை நோக்கி நமது காக்ஷிமாறு படுவதேன் என்றல்.

பெண்பாலுருநானிதுகண்டதுபேதைநீயீண்
டெண்பாலுமிலாததொராணுருவென்றியென்னே
கண்பாலுறுமாயைகவற்றுதல்கற்றநம்மை
மண்பாலவரேகொல்விளைப்பவர்மாயையென்றான். (கரு0)

அவள் இராவணனை நோக்கி நீகண்டபெண்ணுரு
உருவெளித்தோற்றமே என்றல்.

ஊன்றுமுணர்வப்புறமொன்றினுமோடலின்றி
ஆன்றுமுளதாநெடிதாசைகனற்றநின்றாய்க்
கேன்றுனெதிரேவிழிநோக்குமிடங்கடோறும்
தோன்றுமனையாளிதுதொன்னெறித்தாகுமென்றாள். (கருக)

நீ இராமனைக்கண்டது என்னே எனற்கு அவள் விடைகூறல்.

அன்னாளதுகூறவரக்கனுமன்னதாக
நின்னாலவ்விராமனைக்காண்குறுநீரெனென்றான்
எந்நாளவனென்னையித்தீர்வருமின்னல்செய்தான்
அந்நாண்முதல்யானுமயர்த்திலனாகுமென்றாள். (கருஉ)

---

* ஆறு-வழி. ஆற்று - தலைக்கடைவாயில். † வேரறமாய்த்தல்-நிர்மூலமாக்குதல், சந்ததியுமறத்தொலைத்தல்.

### சீதையைக்கவர்ந்து வரும்படி சூர்ப்பணகை இராவணனுக்குக்கூறுதல்.

*ஆமாமதடுக்குமெனுக்கையொடாவிலைய*
*வே * மால்வினையேற்கினியென்விடிவாகுமென்னக்*
*கோமானுலகுக்கொருநீகுறைகின்றதென்னே*
*பூமாண்குழலாடனைவெளவுதிபோதியென்றாள்.* (௧௫௩)

### இராவணன் காம நோயால் மரணவத்தைப் படுதல்.

*என்றாளகன்றாளரக்கனுமீடழிந்தான்*
*ஒன்றானுமுணர்ந்திலனாவியுலைந்துசோர்ந்தான்*
*நின்றாருநடுங்கினர்நின்றுளநாளினாலே*
*பொன்றாதுளனாயினனத்துணைபோலுமன்றே.* (௧௫௪)

### இராவணன் தனது வெப்பந்தீர்தற் பொருட்டுச் சந்திரகாந்தமண்டபஞ் செய்யச்சொல்லல்.

*இறந்தார்பிறந்தாரெனவின்னுயிர்பெற்றமன்னன்*
*மறந்தானுணர்ந்தானவண்மாடுநின்றாரைநோக்கிக்*
*கறந்தாலெனநீர்தருசந்திரகாந்தத்தாலே*
*சிறந்தார்மணிமண்டபஞ்செய்கெனச்செப்புகென்றான்.* (௧௫௫)

### தெய்வதச்சன் சந்திரகாந்தமண்டப மியற்றல்.

*வந்தானெடுவானுறைதச்சன்மனத்துணர்ந்தான்*
*† சிந்தாவினையன்றியுஞ்செய்வினையானுஞ்செய்தான்*
*அத்தாமநெடுங் ‡ தறியாயிரத்தாலமைந்த*
*சந்தார்மணிமண்டபந்தாமரையோனுநாண.* (௧௫௬)

*காந்தமமுதின்றுளிகால்வனகாலமீனின்*
*வேந்தனொளியன்றியுமெலொடுகீழ்விரித்தான்*
*பூந்தென்றல்புகுந்துறைசாளரமும்புனைந்தான்*
*ஏந்துமணிக்கற்பகச்சீதளக்காவிழைத்தான்.* (௧௫௭)

### இராவணன் மண்டபங்காணவருதல்.

*ஆணிக்கமைபொற்கைம்மணிச்சுடரார்விளக்கம்*
*சேணுற்றிருள்சீப்பவத்தெய்வமடந்தைமார்கள்*
*பூணிற்பொலிவார்புடையேந்திடப்பொங்குதோளான்*
*மாணிக்கமானத்திடைமண்டபங்காணவந்தான்.* (௧௫௮)

---

* மால்வினையேற்கு-வேட்கைச்செயலையுடைய எனக்கு, பெரிய தீவினையையுடைய எனக்கு. † சிந்தாவினை-மாநஸ்கர்மம்; மனத்தால் நினைத்தவளவில் நிருமித்தல்; குறைவற்றவேலை. ‡ தறியாலமைந்தமண்டபம் ஆயிரக்கால்மண்டபம்.

இராவணனதுபரிசாரகப் பெண்களின் முகவொளி.

அல்லாயிரகோடியருக்கியதொத்ததேனும்
நல்லார்முகமாநளிர்வானிலவீன்றநாமப்
பல்லாயிரகோடிபனிச்சுடரீன்றதிங்கள்
எல்லாமுடனுயிருளோடியிரிந்ததன்றே. (கருகூ)

அம்மண்டபத்தைச்சூழ்ந்த சோலையிலுள்ள கற்பக விருக்ஷங்களின் காந்திவிசேடம்.

பொற்புற்றனமாமணியொன்பதும்பூவினின்ற
கற்பத்தருவின்கதிர்நாணிழற்கற்றைநாற
அற்பற்றழியப்பகலாக்கியதாலருக்கன்
நிற்பத்தெளிகின்றதுநீள்சுடர்மேன்மையன்றோ. (கசு0)

இராவணன் மண்டபத்தினுட்புகுதல்.

ஊன்றோசைமுதற்பொறியாவையுமொன்றியொன்று
தேறாநிலையுற்றதோர்சிந்தையன்செய்கையோரான்
வேறாயபிறப்பிடைவேட்கைவிசித்ததீர்ப்ப
மாறோருடலுற்றெனமண்டபம்வந்துபுக்கான். (கசுக)

வேறு.

இராவணன் அங்குப் பூம்பள்ளியையடைதல்.

தண்டலிறவஞ்செய்வோர்தாம்வேண்டியதரவேநல்கும்
மண்டலமகரவேலையமுதொடுவந்ததென்னப்
பண்டருசுரும்புசேரும்பசுமரமுயிர்த்தபைம்பொற்
றண்டளிர்மலரிற்செய்தசீதளச்சேக்கைசார்ந்தான். (கசுஉ)

அங்குத்தென்றற்காற்று வீசுதல்.

நேரிழைமகளிர்கூந்தனிறைநறைவாசநீந்தி
வேரியஞ்சரளச்சோலைவேனிலான்விருந்துசெய்ய
ஆர்கலியமுவந்தமருந்தெனவொருவராவி
தீரினுமுதவற்கொத்ததென்றல்வந்திறுத்த * தன்றே. (கசுங)

அத்தென்றலுக்கு இராவணன் வருந்துதல்.

சாளரத்தூடுவந்துதவழ்தலுந்தரித்தறேற்றான்
நீளரத்தங்கள்சிந்திநெருப்புகநோக்குநீரான்
வாழ்மனைபுகுந்ததாண்டோர்மாசுணம்வரக்கண்டன்ன
கோளுறக்கொதித்துவிம்மியுழையரைக்கூவிச்சொன்னான். (கசுச)

---

* அன்றே-ஈற்றசை; அப்பொழுதேயெனினுமாம்.

இராவணன்வாயில் காவலரையழைத்து வரச்சொல்லுதல்.

கூவலினுயிர்த்தசின்னீருலகினைக்குப்புத்றென்னத்
தேவரிஞெருவனென்னையின்னலுஞ்செய்யத்தக்கான்
ஏவினன்றிவந்திங்கிவ்வழியெய்திற்றென்னுக்
காவலினுழையர்தம்மைக்கொணருதிர்கடிதினென்முன். (கசுடு)

வாயில்காவலனேருவன் இராவணனுக்குச் சமாதானங்கூறல்.

அவ்வழியுழையரோடியாண்டவற்கொணர்தலோடும்
வெவ்வழியமைந்தசெங்கண்வெருவுறநோக்கிவெய்யோன்
செவ்வழிதென்றலோற்குத்திருத்தினைநீகொலென்ன
இவ்வழியிருந்தகாலைத்தடையவற்கில்லையென்முன். (கசுசு)

(இங்கே ஒருசெய்யுள் விடுபட்டுப்போனதென்று தெரிகிறது; அது இவ்வார்த்தையைக் கேட்டவுடன் இராவணன் பரிசனங்களைநோக்கிதேவர்கள் தம்தம் இச்சைப்படி வந்து தந்தமக்குவேண்டியபடி செய்வதானல் எனது கட்டளையும் வலிமையும் என்னபயனுடையன ? பலதிசைகளிலுமுள்ள காற்றுக்களையெல்லாம் நீங்கள் இக்கணமே ஓடிப்பிடித்து வந்து சிறையிடுங்கள் என்று கட்டளையிட்டான் என்னுங் கருத்துடையது.)

இராவணன் ஏவலரைநோக்கி மந்திரிகளை யழைக்கவென்றல்.

காற்றினேன்றன்னைவாளாமுனிதலிற்கண்டதில்லை
கூற்றுவந்தென்னையின்னேகுறுகுமாற்குறித்தவாற்றுல்
வேற்றருங்கருங்கட்சீதைமெய்யருள்புனையேனென்றால்
ஆற்றலாலடுத்ததெண்ணுமமைச்சரைக்கொணர்திரென்முன். (கசுஎ)

ஏவலர் அழைக்க அமைச்சர் விரைந்துவருதல்.

ஏவினசிலதரோடியேயெனுந்துணையினெங்கும்
கூவினர்கூவலோடுங்குறுகினர்கொடித்திண்டேரர்
மாவினர்சிவிகைமேலர்மும்மதக்களிற்றர்வையத்
தேவரும்வானர்தன்னிற்றேவருஞ்சிந்தைசிந்த. (கசுஅ)

மந்திரிகளுடன் ஆலோசித்து இராவணன் மாரீசனிடஞ்சேல்லுதல்.

வந்த * மந்திரியரோடுமோசதமனத்தினெண்ணிச்
சிந்தையினினைந்தசெய்யுஞ்செய்கையன்றெளிவினெஞ்சன்
அந்தரஞ்செல்வதாண்டோர்விமானத்திலாருமின்றி
இந்தியமடக்கிநின்றமாரீசனிருக்கைசேர்ந்தான். (கசுகூ)

மாரீசன் இராவணனை எதிர்கொண்டுபசரித்தல்.

இருந்தமாரீசனந்தவிராவணனெய்தலோடும்
பொருந்தியபயத்தன்சிந்தைபொருமுற்றுவெருவுகின்றான்

---

† மந்திரி-மந்த்ரீயென்ற வடசொல்லின்றிரிபு; ஆலோசனை யுடையவனென்றுபொருள்படும். மந்திரம்-ஆலோசனை.

கருந்தடமலையன்னானையெதிர்கொண்டுகேடன்கள்யாவும்
திருந்தியசெய்துசெவ்வித்திருமுகநோக்கிச்செப்பும். (கஎ0)

வே று.

மாரீசன் இராவணனை நீவந்தகாரியம் என் என்றல்.

சந்தமலர்த்தண்டேற்பகநீ கற்றலைவற்கும்
அந்தகனுக்குமஞ்சவடுக்குமரசாள்வாய்
இந்தவனத்தென்னின்னவிருக்கைக்கெளியோரின்
வந்தகருத்தென்சொல்லுதியென்றான்மருள்கின்றான். (கஎக)

இராவணன் கூறும் விடை.

ஆனதனைத்துமாவிதரித்தேனையர்கின்றேன்
போனதுபொற்புமேன்மையுமற்றென்புகழோடும்
யானதுனக்கின்றெந்நானுரைக்கேனினிதென்னை
வானவருக்குநாணதுக்கும்வகைமன்றே. (கஎஉ)

வன்மைதரித்தோர்மானுடர்மற்றங்கவர்வாளால்
நின்மருகிக்குநாசியிழக்குநிலைநேர்ந்தார்
என்மரபுக்குநின்மரபுக்குமிதன்மேலோர்
புன்மைதெரிப்பின்வேறினியெற்றேபுகல்வேலோய். (கஎங)

திருகுசினத்தார்முதிரமலைத்தார்சிறியோர் * நாள்
பருகினரென்றால்வென்றநலத்தின்பழியன்றே
இருகைசுமந்தாயினிதினிருந்தாயிகல்வேலுள்
மருகருவந்தாரொருவன்மலைந்தான்வரிவில்லால். (கஎச)

வெப்பழியாதென்னெஞ்சுழலந்தேன்வீழ்கின்றேன்
ஒப்பழிவென்றேபோர்செயவொல்லேனுடன்வாழும்
துப்பழிசெவ்வாய்வஞ்சியைவெளவத்துணைகொண்டிட்
டிப்பழிநின்னாற்றீரியவந்தேனிவணென்றான். (கஎரு)

அதுகேட்ட மாரிசன் உடன்படாது மறுத்துக் கூறத்தொடங்குதல்

இச்சொலனைத்துஞ்சொல்லியாக்கனெரிகின்ற
† கிச்சினுருக்கிட்டுய்த்தனனென்னக்கிளராமுன்
சிச்சியெனத்தன்மெய்ச்செவிபொத்தித்தெருமந்தான்
அச்சமகற்றிச்செற்றமனத்தோடறைகின்றான். (கஎசு)

மாரீசன் எதிர்மறுத்துக் கூறும்வார்த்தை.

மன்னாநீநின்வாழ்வைமுடித்தாய்மதியற்றாய்
உன்னானின்றீதுழ்வினையென்றேயுணர்கின்றேன்

---

* நாள்பருகுதல்-ஆயுளையொழித்தல். † கிச்சு-நெருப்பு.

இன்ஞெஞ்சனேனுமுரைப்பலிதமென்னுச்
சொன்னுனன்றேயன்னவனுக்குத்துணிவெல்லாம். (கஎஎ)

அற்றகரத்தோடின்றலைதீயேயனன்முன்றில்
பற்றினையுய்த்தாய்பற்பலகாலம்பசிகூர
உற்றுயிருள்ளேதேயவுலந்தாயுழையன்ருே
பெற்றனைசெல்வம்பின்னதிகழ்ந்தாற்பெறலாமோ. (கஎஅ)

திறத்திறனுலோசெய்தவமுற்றித்திருவுற்ருய்
மறத்திறனுலோசொல்லுதசொல்லாய்மறைவல்லோய்
அறத்திறனுலேயெய்தினையன்ருேவதுநீயும்
புறத்திறனுலேபின்னுமிழக்கப்புகுவாயோ. (கஎகூ)

* நாரங்கொண்டார்நாகெவர்ந்தார்நடையல்லா
வாரங்கொண்டார்மற்றொருவர்க்காய்மனைவாழும்
தாரங்கொண்டாரென்றிவர்தம்மைத்தருமந்தான்
ஈருங்கண்டாய் † கண்டகருய்ந்தாரெவரையா. (கஅ0)

அந்தாமுற்ரு ‡ னகலிகைபொற்பாலழிவுற்ருன்
இந்திரனெப்பாரெத்தனையோர்தாமிழிபுற்ருர்
செந்திருவொப்பாரெத்தனையோர்சின்றிருவுண்பார்
மந்திரமற்ருருற்றதுரைத்தாய்மதியற்ருய். (கஅக)

செய்தாயேனுந்தீவினையோம்பழியல்லால்
எய்தாதெய்தாதெய்தினிராமனுலகின்ருன்
வைதாலன்னவாளிகள்கொண்டும்வழியோடும்
கொய்தானன்றேகொற்றமுடித்துன்குழுவெல்லாம். (கஅஉ)

என்ருலென்னேயெண்ணலையேநீகரனென்பான்
நின்ருனக்குமேலுளனென்னுநிலையம்மா
தன்ருனக்குற்ருரொடுமாளத்தனுவொன்ருல்
கொன்ருன்முற்றுங்கொல்லமனத்திற்குறிகொண்டான். (கஅங)

வெய்யோர்யாரேவீரவிராதன்றுணைவெய்யோர்
அய்யோபோனுனம்பொடுமும்பர்க்கவனென்ருல்
உய்வார்யாரேநம்மினெனக்கொண்டுணர்தோறும்
நய்யாநின்றேனீயிதுரைத்துநலிவாயோ. (கஅச)

---

* நாரம்-ஈண்டு அன்பு. † கண்டகர்-முட்போன்றவர்; பிறர்க்குஉபத்திரவஞ் செய்பவரென்றபடி. ‡ அகலிகை-அஹல்யா என்னும் வடமொழியின் திரிபு; இச்சொல்லுக்கு அழகில்லாமை யில்லாதவளென்று பொருள். மிக்க அழகுடையவளென்று கருத்து; ஹல்யம்-அழகின்மை.

மாண்டார்மாண்டார்நீயினிமாள்வார்தொழில்செய்ய
வேண்டாவேண்டாசெய்கெனினுய்வான்விதியுண்டோ
ஆண்டாராண்டாரெத்தனையென்கோவறநோனார்
ஈண்டாரீண்டார்நின்றவரெல்லாமிலரன்றே. (கஅரு)

எம்பிக்குமென்னென்னைதனக்குமிறுதிக்கோர்
அம்புய்க்கும்போர்வில்லிதனக்குமயனிற்கும்
தம்பிக்குநம் * மாண்மைதவிர்ந்தேசயமிற்கும்
கம்பிக்குமென்னெஞ்சவனென்றேகவல்கின்றேன். (கஅசு)

நின்றுஞ்சென்றும்வாழ்வனயாவுநிலையாவால்
பொன்றும்மென்றும்மெய்ம்மையுணர்ந்தாம்புலையாடற்
கொன்றும்முன்னுயென்னுரைகொள்ளாயுயர்செல்வத்
தென்றும்மென்றும்வைகுதியையாவினியென்றான். (கஅஎ)

வேறு.

அதுகேட்டு இராவணன் மாரீசன்மேற் கோபித்தல்.

கங்கைசடைவைத்தவனொடுங்கைலைவெற்போர்
அங்கையினெடுத்தவெனதாடெழின்மணித்தோள்
இங்கொர்மனிதற்கெளியவென்றனையெனத்தன்
வெங்கணெரியப்புருவமீதுறவிடைத்தான். (கஅஅ)

நிகழ்ந்ததைநினைத்திலையெனெஞ்சினிலையஞ்சா
திகழ்ந்தனையெனக்கிளையநங்கைமுகமெங்கும்
அகழ்ந்தனயதொப்புறவமைத்தவரையையா
புகழ்ந்தனை † தனிப்பிழைபொறுத்தனெனிதென்றான். (கஅகூ)

மாரீசன்மீண்டும் உறுதிமொழிகூறல்.

தன்னைமுனிவுற்றதறுகட்டகவிலோனைப்
பின்னைமுனிவுற்றிடுமெனத்தவிர்தல்பேணு
துன்னைமுனிவுற்றனகுலத்தைமுனிவுற்றாய்
என்னைமுனிவுற்றிலையிதென்னெனவிசைத்தான். (ககூ0)

எடுத்தமலையேநினையினீசனிகல்வில்லாய்
வடித்தமலையேயிதுவலித்தியெனவாரிப்
பிடித்தமலைநாணிடைபிடித்தொருவன்மேனாள்
ஒடித்தமலையும்பர்முகடுற்றமலையன்றே (ககூக)

யாதுமறியாயுரைகொளாயிகலிராமன்
கோதைபுனையாமுனுயிர்கொள்ளைபமென்றே

* ஆண்மை-பௌருஷம். † தனி பிழை-ஒருகுற்றம்; ஒப்பற்ற (பெரும்) பிழையென்றும் பொருள் கொள்ளலாம்.

பேதைமதியாலிஃதொர்பெண்ணுருவமென்றாய்
சீதையுருவோநிருதர்தீவினையதன்றே. (௧௯௨)

உஞ்சுபிழையாயுறவினோடுமெனவுன்னா
நெஞ்சுபறைபோதுமதுநீநினையகில்லாய்
அஞ்சுமெனதாருயிரறிந்தருகுகின்றார்
நஞ்சுநுகர்வாரையிதுநன்றெனலுநன்றே. (௧௯௩)

ஈசன்முதன்மற்றுமிமையோருலகுமற்றைத்
தேசமுதன்முற்றுமொரிமைப்பினுயிர்தின்ப
* கோசிகனமைத்தகடவுட்படைகொதிப்போ
டாசிலகணிப்பிலவிராமனருணிற்ப. (௧௯௪)

ஆயிரமடற்கையுடையானைமழுவாளால்
ஏயெனுமிமைப்பினுயிர்செற்றவெதிரில்லோன்
மேயவிறன்முற்றுவரிவெஞ்சிலைபினோடும்
தாயகன்வலித்தகைமையாமுறுதகைத்தோ. (௧௯௫)

வேதனைசெய்காமவிடமேலிடமெலிந்தாய்
தீதுரைசெய்தாயினையசெய்கைசிதைவன்றே
மாதுலனுமாய்மரபின்முந்தையுறவந்தேன்
ஈதுரைசெய்தேனதனையெந்தைதவிர்கென்றான். (௧௯௬)

இராவணன் மாரீசனைச்சினந்து கூறல்.

என்னவுரையத்தனையுமெத்தனையுமெண்ணச்
சொன்னவனையேசினவரக்கர்பதிசொன்னான்
அன்னையுயிர்செற்றவனையஞ்சியுறைகின்றாய்
உன்னையொருவற்கொருவனென்றுணர்கைநன்றே. (௧௯௭)

திக்கயமொளிப்பநிலைதேவர்கெடவானம்
புக்கவரிருக்கைபுகைவித்துலகம்யாவும்
† சக்கரநடத்துமெனையோதயரதன்றன்
மக்கணலிகிற்பரிதுநன்றுவலியன்றே. (௧௯௮)

மூவுலகினுக்கு ‡ மொருநாயகமுடித்தேன்
மேவலர்கிடைக்கினிதன்மேலினியதுண்டோ
ஏவல்செயகிற்றியெனதாணைவழியெண்ணிக்
காவல்செயமைச்சர்கடனீகடவதுண்டோ (௧௯௯)

---

* கோசிகன்-கௌசிகனென்ற வடசொல்லின் விகாரம்; குசிகனது குலத்திற்பிறந்தவனென்று பொருள்படும்; குசனே குசிகனெனவும் வழங்கப்படுவன். † ஆஜ்ஞையைச் சக்கரமென்றல் கவிசமயம். ‡ ஒருநாயகம்-ஏகாதிபத்தியம்.

மறுத்தனை யெனப்பெறினுநின்னைவடிவாளால்
ஒறுத்தென மனக்குறைமுடிப்பதொழிகல்லேன்
வெறுப்பனகிளத்தலுறமித்தொழிலைவிட்டென்
குறிப்பின்வழிநிற்றியுயிர்கொண்டுழலிநென்றான். (உOO)

வேறு.

மாரீசன் ஆய்ந்து அடங்குதல்.

அரக்கனஃதுரைத்தலோடுமறிந்தனனடங்கிநெஞ்சம்
தருக்கினர்கெடுவரன்றேதத்துவநிலையிற்றன்றோ
செருக்கினிற்றீர்துமென்பார்தம்மினுஞ்செருக்கரென்று
உருக்கியகெம்பினுற்றநீரெனவுரைக்கலுற்றான். (உOக)

மாரீசன் இராவணனுக்கு இணங்கிக்கூறும் வார்த்தை.

உன்வயினுறுதிநோக்கியுண்மையினுணர்த்தினேன்மற்
றென்வயினுறுதிநோக்கியச்சத்தாலிசைத்தேனல்லேன்
நன்மையுந்தீமையன்றேநாசம்வந்துற்றபோது
புன்மையினுற்றநீராய்செய்வதுபுகறியென்றான். (உOஉ)

இராவணன் மாரீசனைநோக்கி சீதையைத்தருக என்றல்.

என்றலுமெழுந்துபுல்லியேறியவெகுளிநீங்கிக்
குன்றெனக்குவிந்ததோளாய்மாரவேள்கொதிக்குமம்பால்
பொன்றலினிராமனம்பாற்பொன்றலேபுகழுண்டன்றோ
தென்றலைப்பகைமைபச்செய்தசீதையைத்தருதியென்றான். (உOஙு)

மாரீசன் அதற்குயான் செய்யவேண்டுவது என்?என்றல்.

ஆண்டையானனையகூறவரக்கரோரிருவரோடும்
பூண்டவென்மானந்தீரத்தவவனம்புக்கபோழ்தில்
தூண்டியசரங்கள்பாயத்துணைவர்பட்டுருளவஞ்சி
மீண்டயான்சென்றுசெய்யும்வினையென்கொல்விளம்புகென்றான். ()

சீதையைமாயையால் வஞ்சித்து கவரவேண்டும் என்றல்.

ஆயதாங்கனையகூறவரக்கர்கோனையநொய்துன்
தாயையாருயிருண்டானையான்கொலச்சமைந்துநின்றேன்
போரையயாபுணர்ப்பதென்னேயென்பதுபொருந்திற்றன்றோ
மாயையால்வஞ்சித்தன்றோவௌவுதலவளையென்றான். (உOடு)

மாரீசன்போர்வெற்றியால் சீதையைக்கோள்ளுதலேசிறப்பு என்றல்.

புறத்தினியுரைப்பதென்னே * புரவலன்றேவிதன்னைத்
திறத்துழியன்றிவஞ்சித்தெய்துதல்சிறுமைத்தாகும்

* புரவலன் - அரசர்குலத்தான், சக்ரவர்த்திகுமாரன், காத்தற்றொழிற் கடவுளாகிய திருமாலின் அம்சமானவன்.

அறத்துளதொக்குமன்றேயமர்த்தளிவென்றுகொண்டுன்
மறத்துறைவளர்த்திமன்னவென்னமாரீசன்சொன்ஞன். (உ0௬)

அதிநகுதியன்றென்று இராவணன்காரணங்காட்டல்.

ஆனவனுரைக்கரக்கவரக்கர்கோனவரைவெல்லத்
தானையும்வேண்டுமோவென்றடக்கைவாடக்கதன்றே
ஏனையரிறக்கிற்றானுந்தமியளாயிறக்குமன்றே
மானவளாதலாலேமாயையின்வலித்துமென்றான். (உ0௭)

மாரிசன் சிந்தைப்படுதல்.

தேவியைத்தீண்டாமுன்னமிவன்றலைசரத்திற்சிந்திப்
போம்வகைபுணர்ப்பனென்றுபுந்தியாற்புகல்கின்றேற்கும்
ஆம்வகையாயிற்றில்லையார்விதிவிளைவையோர்வார்
ஏவதுசெய்வதல்லாலில்லைவேறென்றெண்ணா. (உ0அ)

மாரீசன் மாயமானநந்து உடன்படுதல்.

என்னமாமாயம்யான்மற்றியற்றுவதியம்புகென்றான்
பொன்னின்மானகிப்புக்குப் * பொன்னைமால்புணர்த்துகென்ன
அன்னதுசெய்வேனென்னுமாரீசனமைந்துபோனான்
மின்னும்வேலரக்கர்கோனும்வேறொருநெறியிற்போனான். (உ0௯)

வேறு.

இது கலிக்கூற்று.

மேனளவன்வில்வலிகண்டமையால்
தானகவமைந்துசமைந்திலனல்
மானருதியென்றவன்வாய்மொழியால்
போனன்மனமுஞ்செலலும்புகல்வாம். (உ௧0)

மாரீசனது மனநிலை.

வெஞ்சுற்றவினைத்துகும்வீரரைவே
றஞ்சுற்றுமறுக்குறுமாழ்குழிநீர்
நஞ்சுற்றுறமீனினடுக்குறுமால்
நெஞ்சுற்றதொர்பெற்றிநினைப்பரிதால். (உ௧௧)

மாரீசன் இராமனுள்ள இடத்தையடைதல்.

அக்காலமும்வேள்வியினன்றிவனோ
டெக்காலுநலிந்துமொரீறுபெறான்
முக்காலின்முடிந்திடுவான்முயல்வான்
புக்கானவ்விராகவன்வைகுபுனம். (உ௧உ)

* பொன்-பொன்னிறமானவள்; பொன்போல் அருமையானவள்;
திருமகளின் அம்சமானவள்.

மாரீசன்பொன்மானுருவங் கொண்டு எதிர்வரல்.

தன்மானமிலாததயங்கொளிசால்
மின்வானமுமண்ணும்விளங்குவதோர்
பொன்மானுருவங்கொடுபோயின்னல்
நன்மானனையாடனை * நாடுறுவான். (உ௧௩)

அந்தமானைமான்கள் பலவுந்தொடர்தல்.

கலைமான்முதலாயினகண்டவெலாம்
அலைமானுறமாசையின்வந்தனவால்
நிலையாமனவஞ்சனைநேயமிலா
† விலைமாதர்கண்யாரும்விழுந்தெனவே. (உ௧௪)

அப்பொழுது சீதை மலர்கொய்துவருதல்.

பொய்யாமெனவோதுபுறஞ்சொலினால்
நையாவிடைநோவநடந்தனளால்
வைதேகித்ன் ‡ வால்வளைமென்கையெனும்
கொய்யாமலரான்மலர்கொய்துறுவாள். (உ௧௫)

சீதை மாயமானைக்காணுதல்.

உண்டாகியகேடுடையார்துயில்வாய்
எண்டானுமியைந்தியையாவுருவம்
கண்டாரெனலாம்வகைகண்டனளால்
பண்டாருமுறுவிடர்பாடுறுவாள். (உ௧௬)

சீதை அந்தமானினிடத்து விருப்பங்கொள்ளல்.

காணுவிதுகைதவமென்றுணராள்
¶ பேணாநலங்கொடுபேணினளால்
வாணாளையிராவணன்மாளுதலால்
வீணாளினறம்புவிமேவுதலால். (உ௧௭)

அதனைப்பிடித்துத்தரச்சொல்லும் பொருட்டுச்சீதை
இராமனிடம் வருதல்.

நெற்றிப்பிறையாண்முனகின்றிடலும்
முற்றிப்பொழிகாதலின்முந்துறுவாள்
பற்றித்தருகென்பெனெனப்பதையா
o வெற்றிச்சிலைவீரனைமேவினளால். (உ௧௮)

---

* நாடுறு, உறு-துணைவினை.
† விலைமாதர்-தமது மெய்யின்பத்தைப் பொருட்கு விலைப்படுத்தும் மகளிர். ‡ வால் வெண்மையும் ஒண்மையுமாம்.
¶ பேணாநலம்-விரும்பத்தகாத அழகு; பாராட்டத்தகாத ஆசை என்றும் பொருள்கொள்ளலாம். o வெற்றிச்சிலை-விசயகோதண்டம்.

அந்த மானைக்குறித்துச் சீதை இராமனிடம் பிரஸ்தாபித்தல்.

ஆணிப்பொனினுகியதாய்கதிரால்
சேணிற்சுடர்கின்றது * திண்செவிகால்
மாணிக்கமயத்தொருமானுளதால்
காணத்தகுமென்றனள்கைதொழுவாள். (உ௧௯)

இராமன் அதனைப்பார்க்க விரும்புதல்.

இம்மானிநிலத்தினிவில்லையெனு
எம்மானிதெனச்சிறிதெண்ணல்செயான்
செம்மானவள்சொற்கொடுதேமலரோ
அம்மானுமருத்தியனுயினனால். (உ௨0)

அப்பொழுது இலக்ஷ்மணன் ஒன்றுகூறத்தொடங்கல்.

ஆண்டங்கிளையோனுரையாடினனால்
வேண்டும்மெனலால்விளைவன்றிதெனுன்
பூண்டுஞ்சுபொலங்கொடியோயதுநாம்
காண்டும்மெனும்வள்ளல்கருத்துணர்வான். (உ௨௧)

இலக்ஷ்மணனதை மாயமானென்றல்.

காயங்கனகம்மணிகால்செவிவால்
பாயும்முருவோடிதுபண்பெனலால்
மாயம்மெனலன்றிமனக்கொளவே
ஏயும்மிறையையுறவென்றளவே. (உ௨௨)

இராமன் அதனை மறுத்துக்கூறல்.

நில்லாவுலகின்னிலைநேர்மையினல்
வல்லாருமுணர்ந்திலர்மன்னுயிர்தாம்
பல்லாயிரகோடிபரந்துளவால்
இல்லாதனவில்லைவிளங்குழரா. (உ௨௩)

என்னென்றுநினைத்ததிழைத்துளநம்
கன்னங்களின்வேறுளகானுதுமால்
பொன்னின்னொளிமேனிபொருந்தியவேழ்
அன்னங்கள்பிறந்ததறிந்திலையோ. (உ௨௪)

அவ்வளவிற் சீதை அதுபோய்விடுமே எனவருந்தல்.

முறையும்முடிவும்மிலமொய்யுயிரென்
றிறைவன்னிளையானெடியர்பினனால்
பறையுந்துணையன்னதுபன்னெறிபோய்
மறையும்மெனவேழைவருந்தினளால் (உ௨௫)

* திண்செவி † நெறித்தகாது.

வேறு.

இராமன்சென்றந்தமானைக்காணுதல்.

அனையவள்கருத்தையுன்னுவஞ்சனுக்குன்றமன்னான்
புனையிழைகாட்டதென்றுபோயினன்பொருதசிந்தைக்
கனைகழற்றம்பிபின்புசென்றனன்கடக்கவொண்ணு
வினையெனவந்துநின்றமானெதிர்விழித்ததன்றே. (உஉ௬)

இராமன் அந்தமானைக்கொண்டாடுதலும் அதன்மூலகாரணமும்.

நோக்கியமானைநோக்கி * நுதியிழைமதியினன்றும்
தூக்கிலன்றிதென்றான தன்பொருள்சொல்லலாகும்
† சேக்கையினரவுநீங்கிப்பிறந்ததுதேவர்செய்த
பாக்கியமுடைமையன்றேவன்னதுபழுதுபோமோ. (உஉ௭)

இராமன் இலக்துமணனுக்கு அந்தமானின் அழகையெடுத்துக்காட்டல்.

என்னைக்குமென்னலாகுமிளையவவிதனைநோக்காய்
தன்னைக்குமுவமையல்லாற்றனையொக்குமுவமையுண்டோ
பன்னக்கதரளமொக்கும்பசும்புன்மேற்படருமென்னு
மின்னைக்குஞ்செம்பொன்மேனிவெள்ளியின்விளங்கும்புள்ளி. ()

வரிசிலைமறைவிலோனேமானிதன்வடிவையுற்ற
அரிவையர்மைந்தர்யாரேயாதரங்கூர்கிலாதார்
உருகியமனத்தவாகியூர்வனப்றப்பயாவும்
விரிசுடர்விளக்கங்கண்டவிட்டில்போல்வீழ்வகாணாய். (உஉ௯)

இலக்துமணன் அந்தமானைப்பற்றிப் பராமுகமாகக்கூறல்.

ஆரியனனையகூறவன்னதுதன்னைநோக்கிச்
‡ சீரியதன்றிதென்றுசிந்தையிற்றெளிந்ததம்பி
காரியமென்னையீண்டுக்கண்டதுகனகமானால்
வேரியந்தெரியல்வீரமீள்வதேமேன்மையென்றான். (உ௩0)

சீதை இராமனை அதைப் பிடித்துத்தரும்படி வேண்டுதல்.

அற்றவன்பகராமுன்னமகனையழகியாளும்
கொற்றவன்மைந்தமற்றைக்குழைவுடையுழையைவல்லை
பற்றினைதருதியாயிற்பதியிடையவதியெய்தப்
பெற்றுழியினிதுண்டாடப்பெறற்கருந்தகைமைத்தென்றாள். (உ௩௧)

இராமன் அதனைப்பிடிக்கஉடன்படுதலை இலக்துமணன்தடுத்துக்கூறல்.

ஐய்நுண்மருங்குநங்கையஃதுரைசெய்யவையன்
செய்வெனென்றமையநோக்கித்தெளிவுடைச்செம்மல்செப்பும்

---

* நுதி-நுட்பம் கூர்மை. † சேக்கையினரவு-படுக்கையாகிய ஆதிசேஷன். ‡ சீரியதன்று-நன்மை விளைப்பதன்று.

வெய்யவல்லரக்கர்வஞ்சம்விரும்பினார்வினையிற்செய்த
கைதவமானென்றண்ணல்காணுதிகடையினென்றான். (உ௩உ)

இராமன் இதனைப்பிடிக்கத்தொடங்குதலிற் குற்றமில்லை என்றல்.

மாயமேன்மடிவாமன்றேவாளியின்மடிந்தபோது
காய்சினத்தவரைக்கொன்றுகடன்கழித்தோமுமாதும்
தூயதேற்பற்றிக்கோடுஞ்சொல்லியவிரண்டினுைன்றும்
தீயதேயுரைத்தியென்றான்றேவரையிடுக்கண்டீர்ப்பான். (உ௩௩)

இலக்குமணன் ஆராய்ச்சியின்றி வேட்டையாடச் செல்லல்
தகுதி யன்றெனல்

பின்னின்றானினையரென்றுமுணர்கிலம்பிடித்தமாயம்
என்னென்றுந்தெளிதறேற்றாம்யாவதிதென்றுமோராம்
முன்னின்றார்முறையினின்றார்முனிந்துளவேட்டமுற்றல்
பொன்னின்றவயிரத்தோளாய்புகழுடைத்தாமன்றென்றான். (உ௩௪)

இராமன் அதனைமறுத்துக்கூறல்.

பகையுடையரக்கரென்றும்பலரென்றும்பயிலுமாயம்
மிகையுடைத்தென்றும்பூண்டவிரதத்தைவிடுதுமென்றல்
நகையுடைத்தாகுமன்றேயாதலினன்றீதென்னாத்
* தகையுடைத்தம்பிக்கந்நாட்சதுமுகன்றாதைசொன்னான். (உ௩௫)

இலக்குமணன் நான்சென்று பிடித்துக்கொண்டு வருவேன்என்றல்.

அடுத்தவுமெண்ணிச்செய்தலண்ணலேயமைதியன்றே
விடுத்திதன்பின்னின்றார்கள்பலருளரெனினும்வில்லால்
தொடுத்தவெம்பகழிதூவித்தொடர்ந்தனென்விரைந்துசென்று
படுக்குவெனதுவன்றாயிற்பற்றினென்கொணர்வெனென்றான். ()

சீதை இராமனைநோக்கி நீபிடித்துத்தருவாயல்லைபோலும்என்றல்

ஆயிடையன்னமன்னாளமுதுகுத்தனையசெய்ய
வாயிடை † மழலையின்சொற்கிளியினிற்குழறிமாழ்கி
நாயகநீயேபற்றிநல்கலைபோலுமென்னாச்
சேயரிக்குவளைமுத்தஞ்சிந்துபுசிதறிப்போனாள். (உ௩௭)

இராமன் மானைப்பிடித்தற்குச் செல்லத்தொடங்கல்.

போனவள்புலவிநோக்கிப்புரவலன்பொலன்கொடாராய்
மானிதுநானேபற்றிவல்லையின்வருவெனன்றே
கானியன்பயிலன்னாளைக்காத்தனையிருத்தியென்னா
வேனகுசரமும்வில்லும்வாங்கினன்விரையலுற்றான். (உ௩௮)

---

* தகை-யோக்கியதை, தக்க நற்குண நற்செய்கைகளை யுடைமை.
† மழலை - நிரம்பாமென் சொல்.

அங்ஙனமே இலக்குமணன் சீதையைக்காத்துநிற்றல்.

முன்னமுமகவாய்வந்தமூவரினொருவன்போனான்
அன்னமாரீசனென்றேயயிர்த்தனனிதனையைய
இன்னமுங்காண்டிவாழியேகெனவிருகைகூப்பிப்
பொன்னனாள்புக்கசாலைகாத்தனன்புறத்துநின்றே. (௨௩௯)

இராமன்மானைத்தொடர்தல்

மந்திரத்திளையோன்சொன்னவாய்மொழிமனத்துக்கொள்ளான்
சந்திரற்குவமைசான்றமதனத்தாள் சலத்தைநோக்கிச்
சிந்துரபவளச்செவ்வாய்முறுவலன்சிகரச்செவ்விச்
சுந்தரத்தோளினானம்மானினைத்தொடரலுற்றான். (௨௪௦)

அந்தமான் மிக்கவிரைவாய்ஓடுதல்.

* மித்ததுமெல்லமெல்லவெறித்ததுவெருவிமீதிற் •
குதித்ததுசெவியைநீட்டிக்குரபதமுரத்தைக்கூட்டி
உதித்தெழுமுதையுள்ளமென்றிவையுருவச்செல்லும்
கதிக்கொருகல்விவேறேகாட்டியதொத்ததன்றே (௨௪௧)

இராமன் மிக்கவிசையோடு அந்தமானைத்தொடர்தல்.

நீட்டினானுலகமூன்றுநின்றெடுத்தளந்தபாதம்
மீட்டுநாமுரைத்தற்கம்மாவேறுமோரண்டமுண்டோ
ஓட்டினான்றொடர்ந்ததன்னையொழிவறநிறைந்ததன்மை
காட்டினானன்றியன்றக்கடுமையார்கணிக்கற்பாலார். (௨௪௨)

அந்தமான் ஓடும்வகை.

குன்றிடையிவருமேகக்குழுவிடைக்குதிக்குங்கூடச்
சென்றிடினகலுந்தாழிற்றீண்டலாந்தகைமைத்தாகும்
† நின்றதேபோலநீங்குநிதிவழிநேயநீட்டும்
மன்றலங்கோதைமாதர்மனமெனப்போயிற்றம்மா. (௨௪௩)

இராமன் அதனைமாயமானென்று கருதுதல்.

காயம்வேறாகிச்செய்யுங்கருமம்வேறாகிற்றன்றே
ஏயுமேயென்னின்முன்னமெண்ணமேயிளவற்குண்டே
ஆயுமேலுறுதல்செலலாமரக்கரானவர்கள்செய்த
மாயமேயாயதேநான்வருந்தியதென்றான்வள்ளல். (௨௪௪)

வேறு.

இராமன் மனபோக்கையறிந்து மாரீசன்தப்பியோடி யுய்யமுயலுதல்.

பற்றுவானினியல்லன்பகழியால்
செற்றுவானிற்செலுத்தலுற்றானென

---

* வாயுவேக மனோவேகங்களைக் காட்டிலும் வேகமாய் ஓடிற்று அந்த மான் என்பது கருத்து. † நின்றதே போல நீங்கும் என்றது வரையில் தன்மை நவிற்சியணி.

மற்றமாயவரக்கன்மனக்கொளா
உற்றவேகத்தினும்பரிகேஞெங்கினன். (உசரு

இராமன் அம்புதொடுத்தல்.

அக்கணத்தினிலையனும்வெய்யதன்
சக்கரத்திற்றகைவரிதாயதோர்
செக்கர்மேனிப்பகழிசெலுத்தினன்
புக்கதேயம்புக்கின்னுயிர்போக்கேஞ. (உசசு)

மாரீசன் கதறிக்கொண்டு வுழுந்திறத்தல்.

நெட்டிலைச்சரம்வஞ்சனைநெஞ்சுறப்
பட்டதப்பொழுதேபகுவாயினல்
அட்டதிக்கினுமப்புறமும்புக
விட்டழைத்தொருகுன்றெனவீழ்ந்தனன். (உசஎ)

அதுகண்டு இராமன் இலக்குமணனைக்குறித்துக் கொண்டாடுதல்

வெய்யவன்றனுருவொடுவீழ்தலும்
செய்யதன்றெனச்செப்பியதம்பியை
ஐயன்வல்லனென்னுருயிர்வல்லனன்
உய்யவந்தவன்வல்லனென்றுன்னினன். (உசஅ)

இறந்துவிழுந்த வடிவத்தைப்பார்த்து இராமன் மாரீசனென்றறிதல்

ஆசைநீளத்தரற்றினன்வீழ்ந்தவந்
நீசன்மேனியைநின்றுடனேக்கினன்
மாசின்மாதவன்வேள்வியின்வர்தமா
ரீசனேயிவனென்பதுந்தேறினன். (உசகூ

இவன்கதறியதுரலால் சீதைவருந்துவளேஎன்று இராமன் சிந்தித்தல்.

உழைத்தவாளியுரம்புகப்புல்லியோன்
இழைத்தமாயையினென்குரலாலிசைத்
தழைத்ததுண்டதுகேட்டயர்வெய்யதுமால்
மழைக்கணேழையென்றுள்ளம்வருந்தினன். (உருo)

இலக்குமணன்சீதைக்குத்தேறுதல்சொல்லக் கூடுமென்றுஇராமன்கருதல்

மாற்றமின்னதுமாயமாரீசனென்
றேற்றமுன்னுணர்ந்தானெனிமென்னுடை
ஆற்றநேருமறிவினனுதலான்
தேற்றுமாலிலையோனெனத்தேறினன். (உருக)

இராமன் சிந்தையோடுதிரும்புதல்.

மாள்வதேபொருளாகவந்தானலன்
சூழ்வதோர்பொருளுண்டிவன்சொல்லினல்
மூள்வதேதமதுமுடியாமுனம்
மீள்வதேநலனென்றவன்மீண்டனன். (உருஉ)

எ-வது மாரீசன்வதைப்படலம்முற்றியது.

ஆ திருவிருத்தம். ருசு.

எட்டாவது

## சடாயு நீத்தபடலம்.

கவிக்கூற்று பிராட்டியின்செய்தியைக் கூறத்தொடங்குவோமென்றல்.

சங்கடுத்ததனிக்கடன்மேனியாற்
கங்கடுத்தநிலமையறைந்தனம்
கொங்கடுத்தமலர்க்குழற்கொம்பனாட்
கிங்கடுத்ததகைமையியம்புவாம். (க)

மாயமானின் கூக்குரல்கேட்டபிராட்டி வருந்தியது.

எயிறலைத்துமுழைதிறந்தேங்கிய
செயிர்தலைக்கொண்டசொற்செவிசேர்தலும்
குயிறலைத்திடையுற்றதொர்கொள்கையால்
வயிறலைத்துவிழுந்துமயங்கினாள். (உ)

பிடித்தநவ்வுழையெனப்பேதையேன்
முடித்தனென் * முதல்வாழ்வெனமொய்குழல்
கொடிப்படிந்ததெனநெடுங்கோளரா
இடிக்குடைந்ததெனப்புரண்டேங்கினாள். (௩)

சீதை இலக்குமணனை வெறுத்துக்கூறல்.

குற்றம்வீந்தகுணத்தினெங்கோமகன்
மற்றைவாளரக்கன்புரிமாயையால்
இற்றுவீழ்ந்தனனென்னவுமென்னயல்
நிற்றியோவிளையோயொருநீயென்றாள். (ச)

வேறு.

இலக்குமணன் சீதைக்குத்தேறுதல்கூறல்.

எண்மையாருலகினிலிராமற்கேற்றமோர்
திண்மையாருளரெனல்செப்பற்பாலதோ
பெண்மையாலுரைசெயப்பெறுதிராலென
† உண்மையானவட்குணரக்கூறினான். (ரு)

எழுமேகடலுலகேழுமேழுமே
சூழுமேழ்மலையவைதொடர்ந்தசூழல்வாய்
வாழுமேழையர்சிறுவலிக்குவாளமர்
தாழுமேயிராகவன்றனிமைதையலீர். (சா)

* கொழுநனோடுகூடி வாழும் வாழ்க்கையினும் சிறப்புடைய வாழ்வு வேறு குலமகளிர்க்கு இன்றாதலால் அத்தலைமை விளங்க 'முதல்வாழ்வு, எனப்பட்டது.

† உண்மையான்-ந்யாயவாதீ.

பாரெனக்கனலெனப்புனலெனப் * பகாப்
பேரெனத்திசையெனமுனியிற்பெருமால்
காரெனக்கரியவக்கமலக்கண்ணனை
யாரெனக்கருதியிவ்விடரினுழ்கின்றீர். (எ)

இடைந்துபோய்நிசிசரற்கிராமனெவ்வம்வந்
தடைந்தபோதழைக்குமேயழைக்குமாமெனின்
மிடைந்தபேரண்டங்கண்மேலகீழன
உடைந்துபோமயன்முதலுயிருந்தீயுமால். (அ)

மாற்றமென்பகர்வதுமண்ணும்வானமும்
போற்றலன்றிரிபுரமெரித்தபுங்கவன்
ஏற்றிநின்றெய்தவில்லிற்றதெம்பிரான்
ஆற்றலினமைவதோராற்றலுண்மையோ. (கூ)

காவலனீண்டுநீர்கருதிற்றெய்துவேல்
மூவகையுலகமுமுடியுமுந்துள
தேவருமுனிவருமுதலசெவ்வியோர்
ஏவரும்வீந்துளாரறமுமெஞ்சுமால். (க0)

பரக்கவென்பகர்வதுபகழிபண்ணவன்
துரக்கவங்கதுபடத்தொலேந்துசோர்கின்ற
அரக்கனவ்வுரையெடுத்தாற்றினனதற்
கிரக்கமுற்றிரங்கலிரிருத்திரீண்டென்றான். (கக)

சீதை இலக்குமணனை மீளவும்பழித்தல்.

என்றவனியம்பலுமெடுத்தசீற்றத்தள்
கொன்றனவின்னலள்கொதிக்குமுள்ளத்தள்
நின்றநின்னிலையிதுநெறியிற்றன்றென
லன்றுகண்ணினள்வயிர்த்துக்கூறுவாள். (கஉ)

சீதை நெருப்பில்விழுந்து இறப்பேனென்றல்.

ஒருபகல்பழகினருயிரையீவரால்
பெருமகனுலைவுறுபெற்றிகேட்டுநீ
வெருவலைநின்றனைவெறென்யானினி
எரியிடைவீழ்ந்துயிரிறப்பலீண்டென. (கங)

---

* பகாப்பேர்-என்றது இடைவிடாமல் சஞ்சரிப்பது என்றபொருளை த்தந்து' வாயுவுக்கு ஒருகாரணக்குறியாம்; ஸதாகதி, ஸமீரணன், பகவகன் என்ற வாயுவின் வடமொழிப்பெயர்கள் இப்பொருள்படுவனவாதலால், பகாப்பேர் என்பது அவற்றின்மொழிபெயர்ப்பாய் வந்ததொரு பெயரெனக்கொள்க. பகா-பகாமல் ஈறுகெட்டஎதிர்மறைவினையெச்சம், பெயர் என்ற வினை, பேர் எனமருவிற்று. பகர்பேர்' என்றுபாடமோதி மற்றுஞ் சொல்லப்படுகிற பேர், அதாவது இங்குக் கூறப்படாத காற்று என்பாருமுளர்.

இலக்குமணன் சீதையை வணங்கிவிலக்குதல்.

தாமரைவனத்திடைதாவுமன்னம்போல்
தூமவெங்காட்டெரிதொடர்கின்றுடனேச்
சேமவிற்குமரனும்விலக்கிச்சீறடிப்
பூமுகநெடுநிலம்புல்லிச்சொல்லுவான். (கச)

இலக்குமணன் செல்லவுடன்பட்டுக் கூறுந்தணிவுரை.

துஞ்சவதென்னைநீர்சொற்றசொல்லையான்
அஞ்சுவென்மறுக்கிலெனவலந்தீர்ந்தினி
* இஞ்சிருமடியனேனேகுகின்றனென்
வெஞ்சினவிதியினைவெல்லவல்லமோ. (கரு)

இலக்குமணன் விடைபெறுதல்.

போகின்றேனடியனேன்பொருந்திவந்துகே
டாகின்றதரசன்றனுணைநீர்மறுத்
தேகென்றிரிருக்கின்றீர்தமியிரென்றுபின்
வேகின்றசிந்தையான்விடைகொண்டேகினான். (கசு)

அப்பொழுது இலக்குமணன் அடைந்த சிந்தை.

இருப்பனேலெரியிடையிறப்பராலிவர்
பொருப்பனையானிடைப்போவெனேயெனின்
† அருப்பமில்கேடுவந்தடையுமாருயிர்
விருப்பனேகென்செயலென்றுவிம்மினான். (கஎ)

இலக்குமணன் ஒருவாறுதுணிதல்.

அறந்தனுலழிவிலதாகினுக்கலாம்
இறந்துபாடிவர்க்குறுமிதனினிவ்வழி
துறந்துபோமிதனையேதுணிவென்றெல்வினைப்
பிறந்துபோந்துபடும்பேதையேனெனு. (கஅ)

சடாயு பாதுகாக்குமென்றுசொல்லி இலக்குமணன்செல்லல்.

போவதுபுரிவல்யான்புகுந்ததுண்டெனின்
காவல்செயெருவையின்றலைவன்கண்ணுறும்
ஆவதுகாக்குமென்றறிவித்தவ்வழித்
தேவர்செய்தவத்தினாற்செம்மலேகினான். (ககூ)

---

* இங்கு என்பது இஞ்சு எனத்திரிந்தது' எதுகைநோக்கியதோர் போலிவழக்கு. † அருப்பம்-அரண் "வீங்கு சிறைவியலருப்பம் (புறநானூறு-கஎ) இனி, அருப்பம்-அருமையுமாம் "அடிநிலை தளர்க்கு மருப்பமுமுடைய" (மலைபடுகடாம் உ௨௨)

இராவணன் சந்நியாசிவேடங்கொண்டு சீதையிடத்தில் வருதல்.

இளையவனேகலுமிறவுபார்க்கின்ற
வளையெயிற்றிராவணன் வஞ்சமுற்றுவான்
முளைவரித் * தண்டொருமூன்றுமுப்பகைத்
தளையரிதவத்தவர்வடிவுந் தாங்கினன். (உ०)

ஊணிலனுமெனவுலர்ந்தமேனியன்
சேணெறிவந்ததோர்வருத்தச்செய்கையன்
ப்ராணியினடத்திடைப்படிக்கின்றுனென
வீணையினிசைபடவேதம்பாடுவான். (உக)

பூப்பொதியவிழ்ந்தனநடையன்பூதலம்
தீப்பொதிந்தாமெனமிதிக்குஞ்செய்கையன்
காப்பருநடுக்குறுங்காலன்கையினன்
மூப்பெனும்பருவமுமுனியமுற்றினன். (உஉ)

தாமரைக்கண்ணெடேர்தவத்தின் மாலையன்
ஆமையினிருக்கையன்வளைந்தவாக்கையன்
நாமநூன்மார்பினனணுகினனரோ
தூமனத்தருந்தியிருந்தசூழல்வாய். (உ௩)

இராவணன் பர்ணசாலைவாயிலில்வந்து இதில் உள்ளார் யாரென்றல்

தோமறுசாலையின்வாயிறுன்னினன்
நாமுதற்குழறிடநடுங்குசொல்லினன்
யாவிரிவ்விருக்கையுளிருந்துளீரென்றான்
தேவருமருள்கொளத்தெரிந்தமேனியான். (உச)

சீதை இராவணமுனியை எதிர்கொள்ளுதல்.

தோகையுமிவ்வழித்தோமில்சிந்தனை
சேகறுநோன்பினரென்னுஞ்சிந்தையாள்
பாகியல்கிளவியாள்பவளக்கொம்பர்போன்
றேகுமினீண்டெனவெதிர்வந்தெய்தினள். (உரு)

இராவணன் சீதையைப்பார்த்தல்.

வெற்பிடைமதமெனவியர்க்குமேனியன்
அற்பினற்றிரைபுரளாசைவேலையன்
பொற்பினுக்கணியினைப்புகழின்சேக்கையைக்
கற்பினுக்கரசியைக்கண்ணினேக்கினன். (உசு)

* தண்டொருமூன்று-அரசு, புரசு, மூங்கில் என்னும் மூன்றுவகைக் கோல்களையும் ஒன்றாகமுறுக்கிச் சேர்த்தது திரிதண்டமாம்.

சீதையைக் கண்டவளவிலே இராவணன்

வேட்கைநோய் விஞ்சிப்படும்அவத்தை.

தூங்கலினுருவினைச்சொல்லினும்பரும்
ஓங்கியவழகினாளுருவங்காண்டலும்
ஏங்கினன்மனநிலையாதென்றுன்னுவாம்
வீங்கினமெலிந்தனவீரத்தோள்களே. (௨௭)

புனமயிற்சாயலினெழிலிற்பூநறைச்
சுனைமடுத்துண்டிசைமுரலுந்தும்பியின்
இனமெனக்களித்துளதென்பதென்னவன்
மனமெனக்களித்தது * கண்ணின்மாலையே. (௨௮)

சேயிதழ்த்தாமரைச்சேக்கைதீர்ந்திவண்
மேயவண்மணிநிறமேனிகாணுதற்
கேயுமேயிருபதிங்கிமைப்பினாட்டங்கள்
ஆயிரமில்லையென்றல்லலெய்தினான். (௨௯)

† அரைகடையிட்டமுக்கோடியாயுவும்
புரைதபுதவத்தின்யான்படைத்தபோதுமே
நிரைவளைமுன்கையினின்றநங்கையின்
கரையறுநன்னலக்கடற்கென்றுன்னினான். (௩0)

தேவருமவுணருந்தேவிமாரொடும்
கூவல்செய்தொழிலினர் ‡ குடிமைசெய்திட
மூவுலகமுமிவர்முறையினாளயான்
ஏவல்செய்துய்குவெனினியென்றுன்னினான். (௩௧)

உளைவுறுதுயர்முகத்தொளியிதாமெனின்
முளையெயிறிலங்கிடுமுறுவலென்படும்
தளையவிழ்குழலிவட்கண்டுதந்தவென்
இளையவட்களிப்பெனென்னரசென்றெண்ணினான். (௩௨)

அம்முனிவனுக்குச் சீதைவருகவென்று உபசாரமொழிகூறல்.

¶ ஆண்டையானனையனவுன்னியாசைமேல்
மூண்டெழுசிந்தனைமுறையிலோன்றனைக்
காண்டலுங்கண்ணினீர்துடைத்தகற்பினாள்
ஈண்டெழுந்தருளுமென்றினையகூறினாள். (௩௩)

* கண்களிருபதாதலின், கண்ணின்மாலை எனப்பட்டது.

† அரைகடையிட்டமுக்கோடி - அரையென்னும் எண்ணைக்கடையில் எழுதப்பட்ட மூன்றுகோடி என்க.

‡ குடிமை-பரம்பரையாச்செய்யுமடிமை.

¶ ஆண்டையான்-அவ்விடத்தான்.

சீதைதந்த ஆசனத்தில் அம்முனிவன் வீற்றிருத்தல்.

எத்தினளெய்தலுமிருத்திரீண்டென
வேத்திரத்தாசனம்விதியினல்கினாள்
மாத்திரிதண்டயல்வைத்தவஞ்சனும்
பூத்தொடர்சாலையினிருந்தபோழ்தினே. (ரு௪)

அப்பொழுது சராசரங்கள் அஞ்சிநடுங்கல்.

நடுங்கினமலைகளுமரனுநாவவிந்
தடங்கினபறவையும்விலங்குமஞ்சின
படங்குறைந்தொதுங்கினபாம்புபாதகக்
கடுந்தொழிலரக்கனைக்காணுங்கண்ணினே. (ருரு)

அம்முனிசீதையைநோக்கி இப்பர்ணசாலைக்குரியவர்யார் என்றல்.

இருந்தவன்யாவதிவ்விருக்கையிற்குறை
அருந்தவன்யாவனீர்யாரையென்றலும்
விருந்தினரிவ்வழி * விரகிலாரெனப்
பெருந்தடங்கண்ணவள்பேசன்மேயினாள். (ருசு)

அதற்குச் சீதை விடைகூறுதல்.

தயரதன்றொல்குலத்தலைவன்றம்பியோ
டுயர்குலத்தன்னைசொலுச்சியேந்தினான்
அயர்விலதிவ்வழியுறையுமன்னவன்
பெயரினைத்தெரிகுதிர்பெருமையீரென்றாள். (ருஎ)

அம்முனிவன் சீதையை நீர் யார்மகள் என்றல்.

கேட்டனனன்கண்டிலென்கெழுவுகங்கைநீர்
காட்டிடையொருமுறைநண்ணினேன்மலர்
வாட்டடங்கண்ணிநீர்யாவன்மாமகள்
காட்டிடையரும்பகல்கழிக்கின்றீரென்றான். (ருஅ)

அதற்குச் சீதை விடைகூறுதல்.

அனகமாநெறிபடரடிகளும்மலால்
நினைவதோர்தெய்வம்வேறிலாதநெஞ்சினான்
சனகன்மாமகள்பெயர்சனகிகாகுத்தன்
மனைவியானென்றனண்மறுவில்கற்பினாள். (ருக)

சீதை யம்முனிவனை நீர் எங்குநின்று வருகிறீர் என்றல்.

அவ்வழியனையனவுரைத்தவாயிழை
வெவ்வழிவருந்தினிர்விளைந்தழுப்பினிர்

* விரகிலார்-தம்மை இத்தன்மையாரென்று அறிந்தில்லாதவர். விரகு-அறிவு "விரகறியாளர்" (புறப்பாட்டு-உசுக.)

இவ்வழியிருவினைகடக்கவெண்ணினிர்
எவ்வழிநின்றுமிங்கெய்தினீரென்றாள். (சo)

அதற்கவன் கூறும்விடை.

இந்திரற்கிந்திரனெழுதலாகலாச்
சுந்தரனுன்முகன்மரபிற்றோன்றினன்
அந்தரத்தோடுமெவ்வுலகுமாள்கின்றான்
மந்திரத்தருமறைநவைகுநாவினன். (சக)

ஈசனண்டிருந்தபேரிலங்குமால்வரை
ஊசிவேரொடும்பறித்தெடுக்குமூற்றத்தான்
* ஆசைகள்சுமந்த † பேரௗவில்யானைகள்
பூசல்செய்மருப்பினைப்பொடிசெய்தோளினன். (சஉ)

நிற்பவர்கடைத்தலைநிறைந்துதேவரே
சொற்பகுமர்றவன்பெருமைசொல்லுங்கால்
கற்பகமுதலியநிதியங்கையன
பொற்பகமானநீரிலங்கைப்பொன்னகர். (சஙு)

மேனகைதிலோத்தமைமுதலவேழையர்
வானகந்துறந்துவந்தவன்றன்மாட்சியால்
ஊனமிலடைப்பைகால்வருடலொண்செருப்
பானவைமுதற்றொழிலவரதாகுமே. (சச)

சந்திரனிரவியென்பவர்கடாமவன்
சிந்தனைவழிநிலைதிரிவர்தேசுடை
இந்திரன்முதலியவமரரீண்டவன்
கந்தடுகோயிலின்காவலாளரே. (சரு)

பொன்னகரத்தினும்பொலங்கொணாகர்தம்
தொன்னகரத்தினுந்தொடர்ந்தமாநிலத்
தென்னகரத்தினுமினியவீண்டவன்
நன்னகரத்தனநவையிலாதன. (சசு)

தாளுடைமலருளான்றந்தவந்தமில்
நாளுடைவாழ்க்கையனரிபாகத்தன்
வாளுடைத்தடக்கையன்வாரிவைத்தவெங்
கோளுடைச்சிறையினன்குணங்கண்மேன்மையான். (சஎ)

வெம்மைதீரொழுக்கினன்விரிந்தகேள்வியன்
‡ செம்மையோன்மன்மதன்திகைக்குஞ்செவ்வியன்

* ஆசைகள்-திக்குகள். † பேரௗவில்யானை மிகப்பெரியயானை.
‡ செம்மை-நடுவுநிலைமை. ஞமன்கோலன்னசெம்மைதாங்கி (மதுரைக்காஞ்சி-சஅக.)

எம்மையோரனைவருமிறைவரென்றெனும்
மும்மையோர்பெருமையுமுற்றும்பெற்றியான். (௪௮)

அனைத்துலகினுமழகமைந்தநங்கையர்
எனைப்பலரவன்றனதருளினிச்சையோர்
நினைத்தவருருகவுமுதவநேர்கிலன்
மனக்கினியாளொருமாதவர்நாடுவான். (௪௯)

ஆண்டையானரசுவீற்றிருந்தவந்நகர்
வேண்டியான்சில்பகலுறையவேண்டினேன்
நீண்டனெனிருந்தவற்பிரிந்தநெஞ்சினேன்
மீண்டனெனென்றனன்வினையமுன்னுவான். (௫௦)

அம்முனியைநோக்கிச் சீதைநீவிர்அரக்கநரில்
வாழ்வான் ஏனென்றல்.

வேதமும்வேதியாருளும்வெஃகலாச்
சேதனைமன்னுயிர்தின்னுந்தீவினைப்
பாதகவரக்கர்தம்பதியின்வைகுதற்
கேதுவென்னுடலமுமிகையென்றெண்ணுவீர். (௫௧)

வனத்திடைமாதவர்மருங்குவைகலிர்
புனத்திருநாட்டிடைப்புனிதரூர்புக
நினைத்திலிரறநெறிநினைக்கிலாதவர்
இனத்திடைவைகினிரென்செய்தீரென்றாள். (௫௨)

வேறு.

அதற்கம்முனிவன் விடைகூறுதல்.

மங்கையஃதுரைத்தல்கேட்டவரம்பிலான்மறுவீற்றீர்ந்தார்
வெங்கண்வாளரக்கரென்னவெருவலமெய்ம்மைநோக்கின்
திங்கள்வாண்முகத்தினுயத்தேவரிற்றீயரல்லர்
எங்கள்போலியர்க்குநல்லார்நிருதரேபோலுமென்றான். (௫௩)

சீதைதீயவரைச் சேர்ந்தவரும் தீயவரேஎன்றல்.

சேயிழையன்னசொல்லத்தீயவர்ச்சேர்தல்செய்தார்
தூயவரல்லர்சொல்லிற்றென்கனறிதொடர்ந்தோரென்றாள்
மாயவல்லரக்கர்வல்லர்வேண்டுருவரிக்கவென்ப
தாயவளறிதறேற்றாளாகலினயலொன்றெண்ணாள். (௫௪)

அதற்கு இராவணன் கூறும்சமாதானம்.

அயிர்த்தனளாகுமென்றோருரையுறவகத்துக்கொண்டான்
பெயர்த்ததுதுடைக்கவெண்ணிப்பிறிதுறப்பேசலுற்றான்
மயக்கறுமுலகமூன்றின்வாழ்பவர்க்கனையவல்லோர்
இயற்கையிற்றிரியினல்லாவியற்றலாநெறிபென்னென்றான். (௫௫)

சீதை இனிராமனல் அரக்கர்அழிய உலகு இன்புறும்என்றல்.

திறந்தெரிவஞ்சனச்சொற்செப்பலுஞ்செப்பமிக்காள்
அறந்தருவள்ளலீண்டிங்கருந்தவமுயலுநாளுள்
மறந்தலைதிரிந்தவாழ்க்கையரக்கர்தம்வருக்கத்தோமே
இறந்தனர்முடிவர்பின்னரிடரிலையுலகமென்றாள். (௫௬)

அதற்கு இராவணன் மனிதர் அரக்கரைகொல்லவல்லவரோ என்றல்.

மானவனுரைத்தலோமோனுடரரக்கர்தம்மை
மீனெனமிளிருங்கண்ணாய்வேரறவெல்வரென்னின்
யானையினினத்தையெல்லாமிளமுயல்கொல்லும்பின்னும்
கூனுகிர்மடங்கலேற்றைக்குருளைமான்கொல்லுமென்றான். (௫௭)

அதற்குச் சீதை, விராதன், கரன்முதலியோரை
இராமன்கொன்றதைநீர் அறியீரோஎன்றல்.

மின்திரண்டனைய * பங்கிவிராதனும்வெகுளிபொங்கக்
கன்றியமனத்துவென்றிக்கரன்முதற்கணக்கிலோரும்
பொன்றியபூசலொன்றுங்கேட்டிலிர்போலுமென்றாள்
அன்றவர்க்கடுத்ததுன்னிமழைக்கணீரருவிசோர்வாள். (௫௮)

மற்றும்சீதை அரக்கரனைவரும் விரைவில் அழிவர் என்றல்,

வாளரிவள்ளல்தன்னிலங்கைமாநிருதரெல்லாம்
கேளொடுமறியுமாறும்வானவர்கிளருமாறும்
நாளையேகாண்டிரன்றேநவைவிருணர்கிலீரோ
மீளருந்தருமந்தன்னைவெல்லுமோபாவமென்றாள். (௫௯)

அதுகேட்டு இராவணன் கோபங்கொள்ளுதல்.

தேனிடையமுதளாயவன்னமென்சிலசொன்மாலை
தானுடைச்செவிகளூடுதவழுறத்தளிர்த்துவீங்கும்
ஊனுடையுடம்பினுளுமுருகெழுமானமூன்ற
மானுடர்வலியரென்றமாற்றத்தாற்சீற்றம்வைத்தான். (௬௦)

இராவணனது கோபவார்த்தை.

சீறினனுரைசெய்வானச்சிலைவலிப்புல்லியோர்கட்
கீறொருமனிதன்செய்தானென்றெடுத்தியம்பினையேல்
தேறுதிநாளைரேயவ்விருபதுதிண்டோள்வாடை
வீறியபொழுது † பூளைவீயெனவீவனன்றே. (௬௧)

மேருவைப்பறிக்கவேண்டின்விண்ணினையிடிக்கவேண்டி
னீரினைக்கலக்கவேண்டினெருப்பினையவிக்கவேண்டின்

* பங்கி-ஆண்மயிர். † பூளை-ஓர்செடி;இலவும்பஞ்சுமாம்.

பாரினையெடுக்கவேண்டிற்பலவினைசிலசொல்லேழாய்
யாரெனக்கருதிச்சொன்னயிராவணற்கரிதென்னென்றான். (சுஉ)

அதற்குச்சீதைகூறுந்தக்க சமாதானவார்த்தை.

அரண்டருதிரடோள்சாலவுளவெனின்றற்றலுண்டோ
கரண்டநீரிலங்கைவேந்தைச்சிறைவைத்தகழற்கால்வீரன்
திரண்ட * தோள்வனத்தையெல்லாஞ்சிறியதோர்பருவந்தன்னில்
இரண்டுதோளொருவனன்றேமழுவினலெறிந்தானென்றாள். (சுஙூ)

இராவணன் பெருங்கோபங்கொண்டு
மாயைத்துறவிவேடத்தை விடுத்தல்.

என்றிவளுரைத்தலோடுமெரிந்தனநயனந்திக்கிற்
சென்றனதிண்டோள்வானந்தீண்டினமருடந்திண்கை
ஒன்றோடொன்றடித்தமேகத்துருமெனவெயிற்றினொளி
மென்றனவெகுளிபொங்கவிட்டதுமாயவேடம். (சுச)

சீதைசங்கிக்குமளவில் அவன்தன் உருவங்காட்டல்.

இருவினைதுறந்தமேலோரல்லன்கொலிவனென்றெண்ணி
அரிவையுமையமெய்தாவாரிவன்றனென்றொன்றும்
தெரிவருநிலையளாகத்தீவிடத்தரவந்தானே
உருகெழுசீற்றம்பொங்கிப்பணம்விரித்துயர்ந்ததொத்தான். (சுரு)

அப்பொழுதுசீதை அஞ்சிநடுநடுங்கிய நிலைமை.

ஆற்றவெந்துயரத்தினளாண்டுற்றவலக்கணோக்கின்
ஏற்றமென்னினைக்கலாகுமெதிரெடுத்தியம்பலாகும்
மாற்றமொன்றில்லைசெய்யும்வினையில்லைவரிக்கலாகாக்
கூற்றமவர்துற்றகாலத்துயிரெனக்குலைவுகொண்டாள். (சுசு)

இராவணன் சீதையை வெருட்டிப்பேசுதல்

விண்ணவரேவல்செய்யவென்றவென்வீரம்பாராய்
மண்ணிடைப்புழுவின்வாழுமானுடர்வலியரென்றாய்
பெண்ணெனப்பிழைத்தாயன்றேலுன்னையான்பிசைந்துதின்ன
எண்ணுவெனெண்ணிற்பின்னையென்னுயிரிழப்பெனென்றான். (சுஎ)

உடனேஇராவணன்அவளைச்சமாதானப்படுத்தித்
தன்கருத்தைப் புலப்படுத்தல்.

குலைவுறலன்னமுன்னம்யாரையுங்கும்பிடாவென்
தலைமிசைமகுடமென்னத்தனித்தனியினிதுதாங்கி
அலகில்பூணரம்பைமாதரடிமுறையேவல்செய்ய
உலகமீரேழுமாளுஞ்செல்வத்துளுறைதியென்றான். (சுஅ)

---

* தோள்வனம்-தோளின்தொகுதி.

அதுகேட்டவுடனே சீதை இராவணனை நிந்தித்தல்.

செவிகளைத்தளிர்க்கையாலேசிக்குறச்செமஞ்செய்தாள்
கவினும்வெஞ்சிலைக்கைவென்றிக்காகுத்தன்கற்பினேனைப்
புவியிடையொழுக்கநோக்காப்பொங்கெரிப்புனிதரீயும்
* அவியைநாய்வேட்டதென்னவென்சொனயரக்கவென்று. (சுகூ)

சீதை இராவணனை அதட்டிப்பேசுதல்.

புன்னுனைநீரிறைய்தாப்போதலேபுரிந்துநின்ற
இன்னுயிரிழத்தலஞ்சியிற்பிறப்பழிதலுண்டே
மின்னுயிர்த்துருமிற்சீறும்வெங்கணைவிரவாமுன்னம்
உன்னுயிர்க்குறுதிநோக்கியொளித்தியாலோடியென்றாள். (எ0)

உன்கணவனம்பு என்னையாதுஞ் செய்யமாட்டாது.
என்று இராவணன் கூறுதல்.

என்றவளுரைக்கநின்றவிரக்கமிலரக்கனெய்த
உன்றனைக்கணவனம்பவ்வுயர்திசைசுமந்தவோங்கல்
வன்றிறன்மருப்பினுற்றன்மடித்தவென்மார்பின்வாதால்
குன்றிடைதொளைத்துவிட்டபூங்கணைகொல்லதென்றான். (எக)

இராவணன் மீண்டும் இன்சொற்கூறிச் சீதையைவணங்குதல்.

அணங்கினுக்கணங்கனய்நின்னசையோகத்துப்பொங்க
உணங்கியவுடம்பினேனுக்குயிரினையுதவி † யும்பாக
கணங்குழைமகளிர்க்கெல்லாம்பெரும்பதங்கைக்கொளென்று
வணங்கினனுலகந்தாங்குமலையினுமவலியதோளான். (எஉ)

வேறு

அப்பொழுது பிராட்டி அலரிக்கதறல்,

தறைவாயவன்வந்தடிதாழுதலும்
கறைவாள்படவாவிகலங்கினள்போல்
இறைவாவிளையோயெனவேங்கினளால்
பொறைதானுயிர்போவதுபோற்புகல்வாள். (எங)

இராவணன்சீதையைத் தரையுடனே பெயர்த்தெடுத்தல்.

ஆண்டாயிடைதீயவ ‡ னுயிழையைத்
தீண்டாலெனுமேலுரைசிந்தைசெயாத்
தூண்டாளெனலாமுயர்தோள்வலியாற்
கீண்டானிலம்யோசனைகீழொடுமேல். (எச)

---

* அவி-ஹவிஸ் என்றவடசொல்லின் சிதைவு மந்திரபூர்வமாக அக்கினியில் ஓமஞ்செய்யப்படும் நெய்முதலிய தேவருணவு. † உம்பர்கணங்குழை மகளிர்க்கெல்லாம் பெரும்பதம் என்றது எலலாத்தேவர்களையும் வென்று திரிலோகாதிபத்தியத்தைக்கைக் கொண்ட தனக்குஉரியவளாதலை.
‡ ஆயிழைதேர்ந்தெடுத் தணிந்தசிறந்த ஆபரணங்களை யுடையவள்.

இராவணன் சீதையைத் தரையோடு எடுத்துத் தேரில் வைத்துக்கொண்டு ஆகாயமார்க்கமாக எழுதல்.

*கொண்டானுயர்தேர்மிசைகோல்வளையாள்*
*கண்டாடனதாருயிர்கண்டிலளால்*
*மிண்டானுருமின்னின்மயங்கினளால்*
*விண்டான்வழியாவெழுவான்விரைவான்.* (எரு)

பிராட்டி சோபித்துப் புலம்பலுறல்.

*விடுதேரெனவெங்கனல்வெந்தழியும்*
*கொடிபோல்புரள்வாள்குலைவாளயர்வாள்*
*துடியாவிழுவாடியரா வெழுவாள்*
*கடிதாவறனேயிதுகாவெனுமால்.* (எசு)

சீதை பல்பொருள்களையும் நோக்கி இரங்கிக்கூறும் மொழிகள்.

*மலையேமரனேமயிலேகுயிலே*
*கலையேபிணையேகளிறேபிடியே*
*நிலையாவுயிரேநிலைதேறினர்போய்*
*உலையாவலியாருழைநீருரையீர்.* (எஎ)

*செஞ்சேவகனார்நிலைநீர்தெரிவீர்*
*மஞ்சேபொழிலேவனதேவதைகாள்*
*அஞ்சேலெனநல்குதிரேலடியேன்*
*உஞ்சாலதுதானிழிபோவுரையீர்.* (எஅ)

*நிருதாதியர்வேரறநீண்முகில்போல்*
*சரதாரைகள்வீசினிர்சார்கிலிரோ*
*வரதாவிளையோய்மறுவேதுமிலாப்*
*பரதாவிளையோய்பழிபூணுதிரோ.* (எகூ)

*கோதாவரியேகுளிர்வாய்குழைவாய்*
*மாதாவனையாய்மனனேதெளிவாய்*
*ஓதாதுணர்வாருழையோடினைபோய்*
*நீதான்வினையேனிலைசொல்லலையோ.* (அ0)

*முந்துஞ்சுனைகாண்முழைவாழரிகாள்*
*இந்தந்நிலனோடுமெடுத்தனனா*
*லந்துந்தலைபத்துமலைந்துலையச்*
*சிந்தும்படிகண்டுசிரித்திடுவீர்.* (அக)

வேறு.

இராவணன் சீதைவார்த்தையைப் பரிகசித்தல்.

*என்றின்னபலவும்பன்னியியிசியலுற்றரற்றுவாளைப்*
*பொன்றுன்னுபுணர்மென்கொங்கைப்பொலங்குழாய்போரிலென்னைக்*

கொன்றுன்னைமீட்பர்கொல்லம்மானுடர்கொள்கவென்று
வன்றிண்கையெறிந்துநக்கான்வாழ்க்கைநாள்வறிதுவீழ்வான். (அ௨)

சீதை இராவணனைநோக்கி நீ வல்லவனுயின் தேரைச்
செலுத்தாதே என்றல்.

வாக்கினலன்ஞன்சொல்லமாயையால்வஞ்சமானென்
ருக்கினுயாக்கியுன்னையாருயிருணனுங்கூற்றைப்
போக்கினுய்புகுந்துகொண்டுபோகின்ருய்பொருதுநின்னைக்
காக்குமாகாண்டியாயிற்கடவலுன்றேரையென்ருள். (அ௩)

மற்றும் சீதை இராவணனைநோக்கி நீ அச்சத்தாலேயே
வஞ்சனைசெய்தாய் என்றல்.

மீட்டுமொன்றுரைசெய்வாணீவீரனேல்விரைவின்மற்றுன்
கூட்டராமரக்கர்தம்மைக்கொன்றுங்கைகொங்கைமூக்கும்
வாட்டினுர்வனத்திலுள்ளார்மானுடரென்றவார்த்தை
கேட்டுமிம்மாயஞ்செய்ததச்சத்தின்கிளர்ச்சியன்றே. (அ௪)

மனிதரோடு பொருதல் எனக்கிழிவன்றே ? என்று
இராவணன் கூறல்.

மொழிதருமளவினங்கைகேளிதுமுரணில்யாக்கை
இழிதருமனிதரோடேயான்செருவேற்பலென்ருல்
விழிதருவெற்றியான்றன்வெள்ளிவெற்பெடுத்ததோட்குப்
பழிதருமதனிற்சாலப்பயின்றரும்வஞ்சமென்ருன். (அ௫)

சீதை இராவணனைநிந்தித்தல்

பாவையுமதனைக்கேளாத்தங்குலப்பகைஞர்தம்பால்
போவதுகுற்றம்வாளிற்பொருவதுநாணம்போலாம்
ஆவதுகற்பிஞரைவஞ்சிக்குமாற்றலேயாம்
ஏவமென்பழிதானென்னேயிரக்கமிலரக்கர்க்கென்ருள். (அ௬)

அச்சமயத்தில் சடாயுவந்து எதிர்த்தல்.

என்னுமவ்வேலையின்கணைங்கடாபோவதென்று
நின்னிலென்றிடித்தசொல்லனெருப்பிடைப்பரப்புங்கண்ணன்
மின்னென விளங்கும்வீரத்துண்டத்தன்மேருவென்னும்
பொன்னெடுங்குன்றம்வானின்வருவதேபோலுமெய்யான். (அ௭)

பாழிவன்கிரிகளெல்லாம்பறித்தெழுந்தொன்றேடொன்று
பூழியினுதிரவிண்ணிற்புடையுறக்கிளர்ந்துபொங்கி
ஆழியுமுலகுமொன்ருயழிதரமுழுதும்வீசும்
ஊழிவெங்காற்றிதென்னவிருசிறையூதைமோத. (அ௮)

வேறு.

சாகைவன்றலையொடுமரமுந்தாழமேல்
மேகமும்விண்ணின்மீச்செல்லமீமிசை
மாகவெங்கலுழனும்வருகின்றானென
நாகமும்படமொளித்தொதுங்கிடையவே. (அக)

யானையும்யாளியுமுதலயாவையும்
கானொடுமரத்தொடுநூறுகல்விவை
மேனிறைந்திருசிறைவீச்சினேறலால்
வானமுங்கானமுமாறுகொள்ளவே. (கூ0)

* உத்தமன்றேவியையுலகொடோங்குதேர்
வைத்தனையேகுவதெங்குவாளிஞே
டித்தனைதிசையையுமறைப்பெனீண்டெனப்
பத்திரச்சிறைகளைவிரிக்கும்பண்பினன். (கூக)

வந்தனனெருவையின்மன்னன்மாண்பிலான்
எந்திரத்தேர்செலவொழிக்குமெண்ணினன்
சிந்துரக்கால்சிரஞ்செக்கர்சூடிய
கந்தரக்கைலையைநிகர்க்குங்காட்சியான். (கூஉ

வேறு.

சடாயு சீதைக்கு அபயங்கூறல்.

ஆண்டுற்றவணங்கினையஞ்சலெனாத்
தீண்டுற்றிலனென்றுணர்சிந்தையினன்
மூண்டுற்றெழுவெங்கதமுற்றிலனால்
மீண்டுற்றுரையாடலைமேயினனால். (கூங)

சடாயு இராவணனை நோக்கிக்கூறுங் கோபவார்த்தைகள்.

கெட்டாய்கிளையோடுநின்வாழ்வையெலாம்
சுட்டாயிதுவென்னதொடங்கினைநீ
பட்டாயெனவேகொடுபத்தினியை
விட்டேகுதியால்விளிகின்றிலையால். (கூச)

பேதாய்பிழைசெய்தனைபே † ருலகின்
மாதாவனையாளைமனக்கொடுநீ
யாதாகநினைத்தனையெண்ணமிலாய்
ஆதாரநினக்கினியாருளரோ. (கூரு)

உய்யாமன்மலர்ந்துமராருயிரை
மெய்யாகவிராமன்விருந்திடவே

* உத்தமன்-புருஷோத்தமன். † உலகின்மாதா-லோகமாதா.

கய்யாரமுகர்துகொடந்தகனூர்
அய்யாபுதிதுண்டதறிந்திலேயோ. (௯௬)

கொடுவெங்கரிகொல்லியவந்ததன்மேல்
விடுமுண்டைகடாவவிரும்பினையே
அடுமென்பதுணர்ந்திலையாயினும்வன்
கடுவுண்டுயிரின்னிலைகாணுதியோ. (௯௭)

எல்லாவுலகங்களுமிந்திரனும்
அல்லாதவர்மூவருமந்தகனும்
புல்வாய்புலிகண்டதுபோல்வரலால்
வில்லாளரைவெல்லுமிடுக்குளரோ. (௯௮)

இம்மைக்குறவோடுமிறந்தழியும்
வெம்மைத்தொழிலிங்கிதன்மேலிலையால்
அம்மைக்கருமாநகரந்தருமால்
எம்மைக்கிதமாகவிதெண்ணினைநீ. (௯௯)

முத்தேவரின்மூலமுதற்பொருளாம்
அத்தேவரிம்மானிடராதலினால்
எத்தேவரொடெண்ணுவதெண்ணமிலாப்
பித்தேறினையாதல்பிழைத்தனையால். (௧௦௦)

புரம்பற்றியபோர்விடையோனருளால்
வரம்பெற்றவுமற்றுளவிஞ்சைகளும்
உரம்பெற்றனவாவனவுண்மையிதேனன்
சரம்பற்றியசாபம்விடுந்தனையே. (௧௦௧)

வானுள்பவன்மைந்தன்வளைத்தவிலான்
தானேவரினின்றுதடுப்பரிதால்
நானேயவனுய்ப்பெனிந்நன்னுதலைப்
போநீகடிதென்றுபுகன்றிடலும். (௧௦௨)

இராவணன் மறுத்துக்கூறும் வார்த்தைகள்.

கேட்டானிருதர்க்கிறைகேழ்கிளர்தன்
வாட்டாரைநெருப்புகவாய்மடியா
ஓட்டாயினிநீயுரைசெய்குநரைக்
காட்டாய்கடிதென்றுகனன்றுரையா. (௧௦௩)

வரும்புண்டரம்வாளியின்மார்புருவிப்
பெரும்புண்டிறவாவகைபேருதிநீ
இரும்புண்டநீர்மீள்கினுமென்னுழையிற்
கரும்புண்டசொன்மீள்கிலள்காணுதியால். (௧௦௪)

## வேறு.

அதுகேட்டுச் சீதைமிகவும்வருந்த சடாயு அவட்கு உறுதிகூறல்

என்னும்மளவிற்பயமுன்னினிரட்டியெய்த
அன்னம்மயர்கின்றதுநோக்கியரக்கன்யாக்கை
சின்னம்முறுமிப்பொழுதேசிலையேந்திநங்கள்
மன்னன்மகன்வந்திலனென்றுவருந்தலன்னே. (கoரு)

முத்துக்கனபோன்முகத்தாலிமுலைக்கண்வீழத்
தத்துற்றயரேறலைதாலபலத்தினேலும்
கொத்தொப்பனகொண்டிவன்கொண்டனவென்றவாசை
பத்திற்குமின்றே * பலியீவதுபார்த்தியென்றான். (கoசு)

சடாயுவுக்கும் இராவணனுக்கும் நடந்தபோரைக் கூறுதல்.

இடிப்பொத்தமுழக்கினிருஞ்சிறைறவீசியெற்றி
முடிப்பத்திகளைப்படியிட்டுமுழங்குதுண்டம்
கடிப்பக்கடிதுற்றவன்காண்டகுநீண்டவீணைக்
கொடிப்பற்றியொடித்துயர்வானவராசிகொண்டான். (கoஎ)

அக்காலையரக்கரைக்குருக்கன்னகண்ணன்
எக்காலமுமின்னதொரீடழிவுற்றிலாதான்
நக்கானுலகேழுநடுங்கிடநாகமன்ன
கைக்கார்முகத்தோடுகடைப்புருவங்குனித்தான். (கoஅ)

சண்டப்பிறைவாளெயிற்றான்சரதாரைமாரி
மண்டச்சிறகாலடித்தான்சிலவன்ளுகிரால்
கண்டப்படுத்தான்சிலகாலனுங்காணவுட்கும்
துண்டப்படையாற்சிலதுண்டதுண்டங்கள்கண்டான் (கoகூ)

மீட்டும்மனுகாநெடுவெங்கணைநந்தநாகம்
வாட்டுங்கழலுழனெனவன்றலைபத்தின்மீதும்
நீட்டுந்நெடுமூக்கெனுநேமியன்சேமவிற்கால்
கோட்டும்மளவின்மணிக்குண்டலங்கொண்டெழுந்தான். (ககo)

எழுந்தான்றடமார்பினிலேழிரண்டேழுவாளி
அழுந்தாதுகழன்றிடப்பெய்தெடுத்தார்த்தரக்கன்
பொழிந்தான்புகர்வாளிகண்மீளவும்போர்ச்சடாயு
விழுந்தானெனவஞ்சினர்விண்ணவர்வெய்துயிர்த்தார். (ககக)

புண்ணிற்புதுநீர்பொலியப்பொழிபுள்ளின்வேந்தன்
மண்ணிற்கரனேமுதலோருதிரத்தின்வாரி

---

* பலி-தேவர்க்குஇடும்உணவு.

கண்ணிற்கடலென் றுநுகர்ந்ததுகான் றுமீள
விண்ணிற்பொலிகின் றதொர்வெண்ணிறமேகமென்ன (௧௧௨)

ஒத்தானுடனேயுயிர்தானுருத்தானவன்றேள்
பத்தோடபெத்தினெடும்பத்தியிற்றத்திமூக்கால்
கொத்தாநகத்தாற்குடையாச்சிறையாற்புடையா
முத்தாரமார்பிற்க * வசத்தையுமூட்டறுத்தான். (௧௧௩)

அறுத்தானையரக்கனுமைம்பதொடைம்பதம்பு
செறித்தான் றடமார்பிற்செறித்தலுந்தேவரஞ்சி
வெறித்தார்வெறியாமுனிராவணன் வில்லைப்பல்லால்
பறித்தான்பறவைக்கிறைவிண்ணவர்பண்ணையார்ப்ப. (௧௧௪)

எல்விட்டவெள்ளிக்கைலைப்பொருப்பீசனேடு
மல்விட்டதோளாலெடுத்தான்சிலைவாயின்வாங்கி
வில்விட்டுயர்ந்தநெடுமேகமெனப்பொலிந்தான்
சொல்விட்டவன்றேள்வலியாருளர்சொல்லவல்லார் (௧௧௫)

மீளாநிறத்தாயிரங்கண்ணவன் விண்ணிேைட
வாளாலொறுத்தான்சிலவாயிடைநின் றுவாங்கித்
தாளாலிருத்தான் றழல்வண்ணன் றடக்கைவில்லைத்
தோளாலிருத்தான் றுணைத்தாதைதனன்பிற்றேழன். (௧௧௬)

ஞாலம்படைப்பான் றனதாற்றலுக்கேற்றநல்வில்
மூலம்மொடிப்புண்டதுகண்டுமுனிந்தநெஞ்சன்
ஆலம்மிடற்ருன்புரமட்டதொரம்புபோலும்
சூலம்மெடுத்தானெறிந்தான்மறந்தோற்றிலாதான் (௧௧௭)

ஆற்ருனிவனென் றணராதெனதாற்றல்காணென்
றேற்ருனொருவைக்கிறைமுத்தலையெஃமார்பின்
மேற்ருனிதுசெய்பவர்யாரெனவிண்ணுளோர்கள்
தோற்ருதுநின்ருர்தமதோள்புடைகொட்டியார்த்தார். (௧௧௮)

† பொன்னேக்கியர்தம்புலனோக்கிய * புன்கணேரும்
இன்னேக்கியரில்வழியெய்தியநல்லிருந்தும்
தன்னேக்கியநெஞ்சுடையோகியர்தம்மைசார்ந்த
மென்னேக்கியர்நோக்கமுமாமெனமீண்டதவ்வேல். (௧௧௯)

வேகம்முடன்வேலிழந்தான்படைவேறெடாமுன்
மாகம்மறையும்படிநீண்டவயங்குமான்றேர்ப்

* கவசத்தையு மூட்டறுத்தான் - கவசத்தின் பூட்டுகளைத்துணித்தான்.
† புன்கண் - வாடியகண். பொருளின்மை துன்பத்துள் துன்பமாதலால் வறுயவர் புன்காணேர் எனப்பட்டனர்.

பாகன் றலையைப்பறித்துப்படர்கற்பினுள்பால்
மொகம்படைத்தானுளைவெய்தழுகத்தெறிந்தான். (கஉ0)

எறிந்தானதுநோக்கியிராவணனெஞ்சினுற்றல்
அறிந்தான்முனிந்தாண்டதொராடகத்தண்டுவாங்கிப்
பொறிந்தாங்கெரியின்சிகைபொங்கியெழப்புடைத்தான்
மறிந்தானெருவைக்கிறைமால்வரைபோலமண்மேல். (கஉக)

மண்மேல்விழுந்தான் விழலோடும்வயங்குமான்றேர்க்
கண்மேலொளியுந்தொடராவகைதான்கடாவி
விண்மேலெழுந்தானெழுமெல்லியலாளும்வெந்தீப்
புண்மேனுழையத்துடிக்கின்றனள்போற்புரண்டாள். (கஉஉ)

கொழுந்தேயனையாள்குழைந்தேங்கியகொள்கைகண்டான்
அழுந்தேலவலத்திடையஞ்சலையன்னையென்று
எழுந்தானுயிர்த்தானடவெங்கினிப்போவதென்று
விழுந்தானவன்றேர்மிசைவிண்ணவர்பண்ணையார்ப்ப (கஉ௩)

பாய்ந்தானவன்பன்மணித்தண்டெப்பறித்தெறிந்தான்
ஏய்ந்தார்கதித்தேர்ப்பரியொட்டினொடெட்டுமெஞ்சித்
தீய்ந்தாசறவீசியத்திண்டிறற்றுண்டவாளால்
காய்ந்தான்கவர்ந்தானுயிர்காலனுங்கைவிதிர்த்தான். (கஉ௪)

திண்டோழித்தாங்கவன்றிண்புறஞ்சேர்ந்ததூணி
விண்டான்மறைப்பச்செறிகின்றனவில்விலாமை
மண்டாரமர்தான்வழங்காமையின்வச்சைமாக்கள்
பண்டாரமொக்கின்றனவள்ளுகிராற்பறித்தான் (கஉரு)

* மாச்சிச்சிரம்பாய்ந்தவன்மார்பினுந்தோள்கண்மேலும்
ஓச்சிச்சிறகாற்புடைத்தான்கடித்தானுலையா
மூச்சிற்றவிராவணனும்முடிசாய்ந்திருந்தான்
போச்சித்தனைபோலுமின்றுற்றலெனப்புகன்றான். (கஉசு)

அவ்வேலையினேமுனிந்தான்முனிந்தாற்றலன்ன
வெவ்வேலரக்கன்விடலாம்படைவேறுகாணான்
இவ்வேலையினேயிவனின்னுயிருண்பெனென்றுச்
செவ்வேபிழையாநெடுவாளுறைநீர்த்தெறிந்தான். (கஉ௭)

வலியின்றலைதோற்றிலன்மாற்றருந்தெய்வவாளால்
நலியுந்தலையென்றஃதன்றியும்வாழ்க்கைநாளும்

---

* மாச்சிச்சிரம்-மிக்கவிநோதம், மகாசித்ரம், பெரிய சிச்சிலிக்குருவி என்று பொருள் கூறுதலும் ஈண்டுபொருந்தும் பெருங்கழுகு என்பதும் பொருந்தும் சிச்சிரமென்பது கழுகென்னும் பொருளதாதற்கு மேற்கோள் கிடைத்திலது

மெலியுங்கடைசென்றுளதாகலின்விண்ணின்வேந்தன்
குலிசம்மெறியச்சிறையற்றதோர்குன்றின்வீழ்ந்தான். (கஉஅ)

சடாயுவிழுந்ததைக்கண்ட பிராட்டிபட்ட துயரம்கூறல்.

விரிந்தார்சிறைறகீழுறவீழ்ந்தனன்மண்ணின்விண்ணோர்
இரிந்தாரிழந்தாடணையென்னமுனிக்கணங்கள்
பரிந்தார்படர் * விண்டுவிஞட்டவர்பைம்பொன்மாரி
சொரிந்தாரதுநோக்கியசீதைதுளக்கமுற்றாள். (கஉகூ)

வெள்கும்மரக்கன்னெடுவிண்புகவார்த்துமிக்கான்
தொள்கின்றலையெய்திமானெனச்சோர்ந்துவைாள்
உள்கும்முயிர்க்கும்முயங்கும்மொருசார்வுகாணுள்
கொள்கொம்பொடியக்கொடிவீழ்ந்ததுபோற்குலைந்தாள். (கங0)

வேறு.

வன்றுணையுளனெனவந்தமன்னனும்
பொன்றினனெனக்கினிப்புகலெனென்கின்றாள்
இன்றுணைபிரிந்திரிந்தின்னலெய்திய
அன்றிலம்பெடையெனவரற்றினுளரோ. (கஙக)

பின்னவனுரையினைமறுத்துப்பேதையேன்
அன்னவன்றனைக்கடிதகற்றினேன்பொரு
மன்னவன்சிறையறமயங்கினேன்பொரு
மன்னவன்சிறையறமயங்கினேன்விதி
இன்னமுமெவ்வினையியற்றுமோவெனு. (கஙஉ)

அல்லலுற்றேனைவந்தஞ்சலென்றவிந்
நல்லவன்ருேற்பதேநரகன்வெல்வதே
வெல்வதும்பாவமோவேதம்பொய்க்குமோ
இல்லையோவறமெனவிரங்கியேங்கினுள். (கஙங)

† நாணிலேனுரைகொடுநடந்தநம்பிமீர்
நீணிலையறநெறிநின்றுளோர்க்கெலாம்
ஆணியையுந்தையர்க்கமைந்தவன்பனைக்
காணியவம்மெனக்கலங்கிவிம்மினுள். (கஙச)

கற்பழியாமையென்கடமையாயினும்
பொற்பழியாவலம்பொருந்தும்போர்வலான்
விற்பழியுண்டதுவினையினேன்வந்த
இற்பழியுண்டதென்றிரங்கியேங்கினுள். (கஙரு)

---

* விண்டுவிஞட்டவர்-சித்தியசூரிகள்.

† நாணுவது-செய்யத்தகாதவற்றில் உள்ளமொடுங்குதல்; இலச்சை. தகாதகாரியத்தில் முயலும்படி இராமனைத் தான் தூண்டியதுமன்றி இலக்குமணனையும் தன்னைப் பிரிந்து செல்லும்படி தகுதியில்லாது ஏவியதனுல் 'நாணிலேன்' என்று தன்னைத்தானே பழித்துக் கொண்டாள்.

எல்லியல்விசும்பிடையிருந்தநேமியாய்
சொல்லியலாய்நெறிதொடர்ந்ததோழமை
நல்லியலருங்கடன்கழித்தநம்பியைப்
புல்லுதியோவெனப்பொருமிப்பொங்கினாள். (கநகூ)

அப்பொழுது இராவணன் சீதையுடனேவிரைந்து அப்பாற்செல்லுதல்

ஏங்குவாடன்மையுமிறகிழந்தவன்
ஆங்குறுதன்மையுமரக்கனோக்கினான்
வாங்கினன்றேரிடைவைத்தமண்ணொடும்
வீங்குதோண்மீக்கொடுவிண்ணினேகினான். (கநஎ)

அப்பொழுது சீதை மூர்ச்சித்துத் தரையிற்கிடத்தல்.

விண்ணிடைவெய்யவனேகும்வேகத்தால்
கண்ணொடுமனமவைசுழன்றகற்பினாள்
உண்ணிறையுணர்வழிந்தொன்றுமோர்ந்திலள்
மண்ணிடைத்தன்னையுமறந்துசாம்பினாள். (கநஅ)

இராவணன் அப்பாற் செல்லுதலைக்கண்டசடாயு இரங்கல்

ஏகினனரக்கனுமெருவைவேந்தனும்
மோகவெந்துயர்சிறிதாறிமூர்ச்சியா
மாகமேனோக்கினன்வஞ்சன்வல்லையில்
போகுதல்கண்டகம்புலர்ந்துசொல்லுவான். (கநகூ)

வந்திலர்மைந்தர்நம்மருகிக்கெய்திய
வெந்துயர்துடைத்தனரென்னுமெய்ப்புகழ்
தந்திலர்விதியினார்தருமவேலியைச்
சிந்தினர்மேலினிச்செயலென்னுங்கொலோ. (௧௪0)

வெற்றியருளரெனின்மின்னினுண்ணிடைப்
பொற்றொடிக்கிந்நிலைபுகுதற்பாலதோ
உற்றதையின்னதென்றுணரகிற்றிலேன்
சிற்றவைவஞ்சனைமுடியச்செய்ததோ. (க௪க)

பஞ்சணைபாம்பணையாகப்பள்ளிசேர்
அஞ்சனவண்ணனேயிராமனாதலால்
வெஞ்சினவரக்கனால்வெல்லற்பாலனோ
வஞ்சனையிழைத்தனன்கள்ளமாயையால். (க௪உ)

வேறவரக்கரைவென்றவம்பழி
தீருமென்சிறுவனுந்தீண்டவஞ்சுமால்
ஆரியன்றேவியையரக்கனன்மலர்ப்
பேருலகளித்தவன்பிழைப்பில்சாபத்தால், (க௪ங)

பருஞ்சிறையின்னனபன்னியுன்னுவான்
அருஞ்சிறையுற்றனளாமெனுமனம்
பொருஞ்சிறையிற்றதேர்பூவைகற்பெனும்
இருஞ்சிறையிருந்தெனவிடருநீங்கினன். (கசச)

சடாயுசோர்ந்து துயில்கொள்ளல்.

அருஞ்சிறைகுருதியாலழிந்துசோர்வுற
வஞ்சியைமீட்கிலேனென்னுமானமும்
செஞ்சவேமக்கள்பாற்சென்றகாதலும்
நெஞ்சுறத்துயின்றன * னுணர்வுநீங்கலான். (கசரு)

இராவணன் சீதையைக்கொண்டுபோய்
அசோகவனத்திற் சிறைவைத்தல்.

வஞ்சியையரக்கனும்வல்லைகொண்டுபோய்ச்
செஞ்சவேதிருவுருத்தீண்டவஞ்சுவான்
நஞ்சியலரக்கியர்நடுவணுமிடைச்
சிஞ்சுபவனத்திடைச்சிறைவைத்தானரோ. (கசசு)

இலக்குமணன் செய்தியைக்கூறத் தொடங்கல்.

இந்நிலையினையவன்செயலியம்பினும்
பொன்னிலமானின்பின்றொடர்ந்துபோகிய
மன்னிலையறிகெனமங்கையேவிய
பின்னிளையவனிலைபேசுவாமரோ. (கசஎ)

சீதையின் தனிமைக்காக இலக்குமணன் சிந்தித்தல்.

ஒருமகடனிமையையுன்னியுள்ளுறும்
பருவரன்மீதிடப்பதைக்குநெஞ்சினன்
பெருமகன்றனைத்தனிபிரிந்துபேதுறும்
திருநகர்நீருமப்பரதன்செய்கையான். (கசஅ)

இலக்குமணன் இராஜனைக் காணுதல்.

தெண்டிரைக்கலமெனவிரைவிற்செல்கின்றான்
புண்டரீகத்தடங்காடுபூத்தொரு
கொண்டல்வந்திழிந்தெனக்கோலத்தான்றனைக்
கண்டனன்மனமெனக்களிக்குக்கண்ணினன். (கசகூ)

இராமன் இலக்குமணனைக் காணுதல்.

தண்ணெனுமவ்வுரைதொடரத்தோகையும்
பெண்ணெனும்பேதைமைமயக்கப்பேதினல்

* உணர்வு நீங்கலான் என்றது எப்பொழுதும் நிலைகுலையாத நல்லறிவுடையானென்ற இயல்பை விளக்குவதோடு இப்பொழுது உயிரொழிந்திலனென்ற செய்தியையும் விளக்கும்.

உண்ணிறைகோருமென் றாசலாமேக்
கண்ணனுமிளவலைக்கண் ணுற்ருனரோ. (கஙo)

வேறு.

இலக்குமணன் வருதலின் காரணத்தை
இராமன் உள்ளபடி ஆலோசித்தல்.

புன்சொற்கடந்தபகுவாயரக்கனுரைபொய்யெனுதுபுகல்வாள்
வன்சொற்கடந்துமடமங்கையேவவிலைதேரவந்தமருளே
தன்சொற்கடந்துதளர்கின் றநெஞ்சமுடையேன்மருங்குதனியே
என்சொற்கடந்துமனமுந்தளர்ந்தவிளவீரன்வந்தவியல்பே. (கஙக)

இராமன் இலக்குமணனைத்தழுவிவந்தகாரணத்தை வினவல்.

என்றுன்னியென்னைவிதியார்முடிப்பதெனவெண்ணிநின் றவிறையைப்
பொன்றுன்னுவிற்கையவீரன்வந்துபுனைதாளிறைஞ்சுபொழுதில்
மின்றுன்னுநூலின்மணிமார்பமூழ்ந்தவிரைவோடுபுல்லியுருகா
நின்றுன்னிவந்தநிலையென்கொலென்று*நெடியோன்விளம்பநொடிவான்.

இலக்குமணன்தான்வந்த காரணங்கூறல்.

இல்லாநிலத்தினிசையாதவெஞ்சொலெழவஞ்சியேவமுறையால்
வல்வாயரக்கனுரையாகுமென்னமதியாண்மறுக்கமுறுவாள்
நில்லாதுமற்றிதறிபோதியென்னநெடியோய்புயத்தின்வலியென்
சொல்லான்மனத்தினடையாள்சினத்தின்முனிவோடுநின்றுதுவள்வாள்.()
ஏகாதுநிற்றியெனின்யானெருப்பினிடைவீழ்வெனென் றுமுடுகா
மாகானகத்தினிடையோடலோடுமனமஞ்சிவஞ்சவினையேன்
போகாதிருத்தினிறவாதிருக்கைபுணராவெனக்கொடுணரா
ஆகாதிறக்கையறனன்றெனக்கொடிவண்வந்ததென்னவமலன். (கஙு)

நடந்தசெயலைக்குறித்து இராமன் சிந்தித்தல்.

சாவாதிருத்தலிலளானதுற்றதஃதோதடுக்கமுடியா
ஆவாவலக்கனுறுவாளுரைத்தபொருளோவகத்தினடையாக்
காவாநிலத்தின்வருமேதமற்றதொழியாதுகைக்கொட்கலப்
போவார்பிரிக்கமுயல்வார்புணர்த்தபொருளாமிதென்றுதெருளா. (கஙரு)

இராமன் இலக்குமணனைநோக்கிச் சில கூறல்.

வந்தாய்திறத்தினுளதன்றுகுற்றமடவாண்மறுக்கமுறுவாள்
சிந்தாகுலத்தொடுரைசெய்தசெய்கையதுதீருமென்றுதெளிவாய்
முந்தேதடுக்கவொழியாதெடுத்தவினையேன்முடித்தமுடிவால்
அந்தோகெடுத்ததெனவுன்னியுன்னியழியாதவுள்ளமழிவான். (கஙசு)

---

* நெடியோன்-மூத்தவன், இனி திருக்கலியாண குணகணங்களாற் பெரியவனும், திரிவிக்கிரமாவதாரத்தில் நீண்டு வளர்ந்தவனும் நெடிய விசுவரூபமுடையவனுமாம்.

இனித்தாமதஞ்செய்யலாகாதென்று இராமன்விரைந்து பர்ணசாலைக்கு மீளுதல்.

பாணிக்கநின்றுபயனாவதென்னைபயில்பூவையன்னகுயிலைக்
காணிற்கரந்ததுயர்தீருமன்றியயலில்லையென்றுகடுகிச்
சேணுற்றகன்றநெறியூடுசென்றுசிலைவாளியன்னவிசைபோய்
ஆணிப்பசும்பொன்னையாளிருந்தவவிர்சோலைவல்லையணுகா. (௧௫௭)

வேறு.

அந்தச்சீதையைக் காணாமல் இராமன்வருந்தல்.

ஓடிவந்தனன்சாலையின்சோலையினுதவும்
தோடிவர்ந்தபூஞ்சுரிகுழலாடனைக்காணான்
கூடுதன்னுடையதுபிரிந்தாருயிர்குறியா
நேடிவந்ததுகண்டிலதாமெனநின்றான். (௧௫௮)

கைத்தசிந்தையன்கனங்குழையணங்கினைக்காணா
துய்த்துவாழ்தரவேறொருபொருளிலானுதவ
வைத்தமாநிதிமண்ணொடுமறைந்தனவாங்கிப்
பொய்த்துளோர்கொளத்திகைத்துநின்றானையும்போன்றான். (௧௫௯)

அப்பொழுது உலகத்திலுண்டான் சுழப்பத்தைக்கூறல்.

மண்சுழன்றதுமால்வரைசுழன்றதுமதியோர்
எண்சுழன்றதுசுழன்றதவ்வெறிகடலேழும்
விண்சுழன்றதுவேதமுஞ்சுழன்றதுவிரிஞ்சன்
கண்சுழன்றதுசுழன்றதுகதிரொடுமதியும். (௧௬௦)

அறத்தைச்சீறுங்கொலருளையேசீறுங்கொலமரர்
திறத்தைச்சீறுங்கொன்முனிவரைச்சீறுங்கொறீயோர்
மறத்தைச்சீறுங்கொலென்கொலோமுடிவென்றுமறையின்
நிறத்தைச்சீறுங்கொனெடுந்தகையோனெனநடுங்கா. (௧௬௧)

நீலமேனிநன்னெடியவன்மனநிலைதிரிய
மூலகாரணத்தவனொடுமுடிவுறமுற்றும்
காலமாமெனக்கடையிடுகணிக்கரும்பொருள்கள்
மேலகீழுறக்கீழனமேலுறும்வேலை. (௧௬௨)

சீதையைக்கொண்டுபோனவனைத் தொடர்வோம் என்று இ[illegible]குமணன் கூறல்.

தேரினாழியுந்தெரிந்தனந்தீண்டுதலஞ்சிப்
பாரினோடுகொண்டகழ்ந்ததும்பார்த்தனம்பயனின்
றொருந்தன்மையீதென்னென்பதுரனிலாதவர்போல்
தூரம்போதன்முன்றொடர்துமென்றிளையவன்றொழலும். (௧௬௩)

அதற்கு இராமன் உடன்பட இருவரும்தேர்ச்சுவட்டின்வழியேசெல்லல்.

ஆமதேயினியமைவதென்றமலனுமெய்யில்
தாமவார்கணைப்புட்டிலுமுதலியதாங்கி
வாமமால்வரைமரனிவைமடிதரவயவர்
பூமிமேலவன்றேர்சென்றநெடுநெறிபோனார். (கசுச)

தரையில்தேர்ச்சுவடு மறைந்தமைகண்டு இராமன் திகைத்தல்.

மண்ணின்மேலவன்றேர்சென்றசுவடெலாமாய்ந்து
விண்ணினோங்கியதொருநிலைமெய்யுறவெந்த
புண்ணினூடுறுவேலெனமனமிகப்புழுங்கி
எண்ணினுமினிச்செய்வதென்னிளவலேயென்றான். (கசுரு)

தேர்சென்ற தென்திசையைநோக்கிச் செல்வோமென்று
இலக்குமணன்-கூறல்

தெற்குநோக்கியதெனும்பொருடெரிந்ததத்திண்டோர்
மற்குநோக்கியதிரள்புயத்தண்ணலேவானம்
விற்குநோக்கியபகழியினெடிதன்றவிம்மி
நிற்குநோக்கிதென்பயத்ததென்றிளையவனேர்ந்தான். (கசுசு

அங்ஙனம் தெற்கே செல்லும்வழியில்வீணைக்
கொடிவிழுந்து கிடக்கக்காணுதல்.

ஆகுமன்னதேகருமமென்றத்திசைநோக்கி
ஏகியோசனையிரண்டுசென்றாரிடையெதிர்ந்தார்
மாகமால்வரைகால்பொரமறிந்ததுமானப்
பாகவீணையின்கொடியென்றுகிடந்ததுபார்மேல். (கசுஎ)

கண்டுசங்கிக்கையில் இராமன் ஒன்று கூறலுறல்.

கண்டுகண்டகரோடுமக்காரிகைபொருட்டால்
அண்டராதியர்க்காரமர்விளைந்ததென்றயிர்த்தார்
துண்டவாளினிற்சுடர்க்கொடிதுணிந்ததென்றுணராப்
புண்டரீகக்கண்புனல்வரப்புரவலன்புகல்வான். (கசுஅ)

சடயுபோர் செய்திருப்பாரென்று இராமன் கூறல்.

நோக்கினாலயகொப்திவணெய்தியநுந்தை
மூக்கினாலிதுமுறிந்தமைமுடிந்ததான்மொய்ம்பின்
தாக்கினானவெடுத்ததுதெரிகிலந்தமியன்
யாக்கைதேம்பிடுமெண்ணரும்பருவங்களிறந்தான். (கசுகூ)

ஆயின்விரைவிற்செல்வோம்என்று இலக்குமணன் கூறல்.

நன்றுசாலவுநடுக்கருமிடுக்கினனும்
சென்றுகூடலாம்பொழுதெலாந்தடுப்பதுதிடனால்

வென்றுமீட்கினுமீட்குமால்வேறுறவெண்ணி
நின்றுதாழ்க்தொருபயனிலையென்றலுநெடியோன். (கஎ0)

இராமலக்ஷ்மணர் அப்பாற் செல்லுகையில்
வில்முறிந்து கிடத்தலைக் காணுதல்.

தொடர்வதேநலமாமெனப்படிமிசைச்சுற்றி
படருங்காலெனக்கறங்கெனச்செல்லுவார்பார்த்தார்
மிடல்கொள்வெஞ்சிலைவிண்ணிடுவின்முறிந்தென்னக்
கடலின்மாயிர்திரையெனக்கிடந்ததுகண்டார். (கஎக)

இராமன் அவ்வில்லின் வலிமையையும் அதைத்
தாணித்தவனது ஆற்றலையும் வியந்துகூறல்.

சிலைகிடந்ததாலிலக்குவதேவர்நீர்கடைந்த
மலைகிடந்தெனவலியதேவடிவினன்மதியின்
* கலைகிடந்தெனக்காட்சியளிதுகடித்தொடித்தான்
நிலைகிடந்தவாநோக்கெனநோக்கினனின்றான். (கஎஉ)

அவர்கள்பின்னுஞ் செல்லுகையில் சூலத்தையும்
அம்பறத் தாணிகளையுங் காணுதல்,

நின்றுபின்னருநெடுநெறிகடந்துறநிமிரச்
சென்றுநோக்கினர்திரிசிகைத்திருநெடுஞ்சூலம்
ஒன்றுபல்கணைமழையுறுபுட்டிலோரிரண்டு
குன்றுபோலவட்கிடந்தனகுறுகினருற்றார். (கஎ௩)

அவர்கள்மற்றுஞ் செல்லுகையில் கவசங்கிடக்கல்காணுதல்.

மறித்துஞ்சென்றனர்வானிடைவயங்குறவழங்கி
எறிக்குஞ்சோதிகள்டாவையுந்தொக்கனவெனலாம்
நெறிக்கொள்கானகமறைதராநிருதர்கோனெஞ்சின்
பறித்துவீசியகவசமூங்கிடந்ததுபார்த்தார். (கஎச)

குதிரைகளும் சாரதியும் இரத்தவெள்ளமும்கிடக்கக் கண்டு
சடாயுவிழிந்துகிடக்குமிடத்துக்கு அருகில் வருதல்.

கான்கிடந்ததுமறைதரக்கால்வயக்கலிமாத்
தான்கிடந்துழிசாரதிகிடந்துழிசார்ந்தார்
ஊன்கிடந்ததோளுதிரமுங்கிடந்துளதுலகின்
வான்கிடந்ததுபோல்பவன்கிடந்துழிவந்தார். (கஎரு)

அவர்கள் குண்டலங்களையும் மற்றும்பல அணிகளையுங் காணுதல்.

கண்டலங்குதங்கைத்தலம்விதிர்த்தனர்கவினார்
விண்டலர்ந்துறந்திறுதியின்விரிகதிர்வெய்யோன்

---

* கலை-சந்திரன், பங்கு.

மண்டலம்பலமண்ணிடைக்கிடந்தனமணியின்
குண்டலம்பல * குலமணிப்பூண்களின்குவியல். (கள௬)

இராமன்தம்பியைநோக்கிசடாயுடன்பலர்போருதனர்போலும்என்றல்

தோளணிக்குலம்பலவுளகுண்டலத்தொகுதி
வாளிமைப்பனபலவுளமணிமுடிபலவால்
† நாளனைத்தையுங்கடந்தனன்றமியனந்தாதை
யாளிபோல்பவர்பலருளர்பொருதனரிளையோய். (கஎஎ)

அதற்கு இலக்குமணன் பொருதவன் இராவணன்போலும் என்றல்.

திருவினாயகனுரைசெயச் ‡ சுமித்திரைசிங்கம்
தருவினீளியதோள்பலதலைபலவென்றால்
பொருதுதாதையையித்தனைநெறிக்கொடுபோனான்
ஒருவனேயவனிராவணனாமெனவுரைத்தான். (கஎஅ)

இராமன் சடாயுவிழந்துகிடத்தலைக் காணுதல்.

மடலுணட்டியதாரிளையோன்றனைமதியா
மிடலுணட்டங்கடீயுகநோக்கினன்விரைவான்
உடலுணட்டியகுருதியம்பரவையினும்பர்க்
கடலுணட்டியவரையெனத்தாதையைக்கண்டான். (கஎகூ)

இராமன் சடாயுவின்மேல் விழுந்துபுலம்பல்.

துள்ளியோங்குசெந்தாமரைநயனங்கள்சொரியத்
தள்ளியோங்கியவமலன்றன்றனியுயிர்த்தந்தை
வள்ளியோன்றிருமேனியிற்றழனிறவண்ணன்
வெள்ளியோங்கலிலஞ்சனமலையெனவீழ்ந்தான். (கஅ0)

இராமன் மூர்ச்சித்துத் தெளிந்து புலம்ப லுறுதல்.

உயிர்த்திலனொருநாழிகையுணர்விலன்கொல்லென்
றயிர்த்ததம்பிபுக்கங்கையினெடுத்தனனருவிப்
புயற்கலந்தநீர்தெளித்தலும்புண்டரீகக்கண்
வயர்த்துப்பைப்பயவயர்வுதீர்ந்தினையனபேசும். (கஅக)

வே று.

சடாயுவைக்குறித்து இராமன் புலம்பல்.

தந்தாதையரைத்தனயர்கொலைநேர்ந்தார்
முந்தாரேயுள்ளார்முடிந்தான்முனையொருவன்

---

* குலமணி-உயர்ந்தசாதியிரத்தினம்.

† நாளனைத்தையுங் கடந்தனன்-என்றது மிகமுதிர்ந்த மூப்புடையவரென்றவாறு.

‡ சுமித்திரை-நல்லதோழன் போன்றவனென்று பொருள்.

எந்தாயோவெற்காகநீயுமிறந்தனையோ
அந்தோவினையேனருங்கூற்றமானேனே. (கஅஉ)

பின்னுறுவதோராதேபேதுறவேன்பெண்பாலாள்
தன்னுருவதீர்ப்பான்றனியுறுவதோராதே
உன்னுறவுநீதீர்த்தாயோருறவுமில்லாதேன்
என்னுறுவான்வேண்டியிடருறுவேனென்றயே. (கஅங)

மாண்டேனையன்றேமறையோர்குறைமுடிப்பான்
பூண்டேன்விரதமதனுனுயிர்பொறுப்பேன்
நீண்டேன்மரம்போலநின்றெழிந்தபுன்றெழிலேன்
வேண்டேனிம்மாமாயப்புன்பிறவிவேண்டேனே. (கஅச)

என்றூரம்பற்றுண்ணவேன்றுயைச்சான்றேயைக்
கொன்றுனுநின்றுன்கொலையுண்டுநீகிடந்தாய்
வன்றுட்சிலையேந்திவாளிக்கடல்சுமந்து
நின்றேனுநின்றேனெடுமரம்போனின்றேனே. (கஅரு)

சொல்லுடையாரென்போலினியுளரோதொல்வினையேன்
இல்லுடையாள்காணவிறகுடையாயெண்ணிலாப்
பல்லுடையாயுன்னைப்படையுடையான்கொன்றகல
வில்லுடையேனின்றேன்விறலுடையேனல்லேனே. (கஅசு)

அங்ஙனம்புலம்புகையில் சடாயுசிறிது மூர்ச்சைதெளிதல்.

அன்னுபலபலவும்பன்னியழுமயங்கும்
தன்னேரிலாதானுந்தம்பியுமத்தன்மையனுய்
உன்னுவுணர்வுசிறிதுண்மூளைப்பபுள்ளரசும்
இன்னுவுயிர்ப்பானிருவரையுநோக்கினன். (கஅஎ)

சடாயு இராமலக்ஷ்மணரைக்கண்டதனுல் மகிழ்தல்.

உற்றதுணராதுயிருலையவெய்துயிர்ப்பான்
கொற்றவனைக்கண்டான்றனுள்ளங்குளிர்ப்புற்றுன்
இற்றவிருசிறகுமின்னுயிருமேழுலகும்
பெற்றனனேயொத்தான்பெயர்த்தேன்பழியென்றுன். (கஅஅ)

சடாயு அவர்களை அருகில்அழைத்து உச்சிமோத்தல்.

பாக்கியத்தாலின்றென்பயனில்பழியாக்கை
போக்குகின்றேன்கண்ணுற்றேன்புண்ணியரேவம்மினென்று
தாக்கியரக்கன்மகுடத்தலைதுமித்த
மூக்கினுலுச்சிமுறைமுறையேமோக்கின்றுன். (கஅக)

சடாயு இரங்கிக்கூறும்வார்த்தை.

வஞ்சனையால்வந்தவாவென்பதென்னுடைய
நெஞ்சகமேமுன்னேநினைவித்ததானாலும்
அஞ்சொன்மயிலையருந்ததியைநீங்கினிரோ
எஞ்சலிலாவாற்றலிருவீருமென்றுரைத்தான். (கஙo)

வேறு.

அப்பொழுது இலக்குமணன் நடந்தசெய்தியைத்
தான் அறிந்தவரையில் கூறுதல்.

என்றவனியம்பலுமிளையகோமகன்
ஒன்றுமாண்டுறுபொருளொழிவுறுவகை
வன்றிறன்மாயமான்வந்ததாதியா
நின்றதுநிகழ்ந்ததுநிரப்பினனரோ. (கஙக)

சடாயு அவர்கட்குத்தேறுதல் வார்த்தைகூறத்தொடங்கல்.

* ஆற்றலோனவ்வுரையறையவாணையால்
ஏற்றுணர்ந்தெண்ணியவ்வெருவைவேந்தனும்
மாற்றருந்துயரவர்மனக்கொளாவகை
தேற்றுதனன்றெனவினையசெப்புவான். (கஙஉ)

சடாயு தேறுதல்கூறல்.

† அதிசயமொருவராலமைக்கலாகுமோ
துதியறுபிறவியினின்பதுன்பந்தான்
விதிவயமென்பதைமேற்கொளாவிடின்
மதிவலியான்விதிவெல்லவல்லமோ. (கஙங)

தெரிவுறுதுன்பம்வந்துன்றச்சிந்தையை
யெரிவுசெய்தொழியுமதிழுதைநீரதால்
பிரிவுசெய்துலகெலாம்பெறுவிப்பான்றலை
அரிவுசெய்விதியினர்க்கரிதுண்டாகுமோ. (கஙச)

அலக்கணுமின்பமுமணுகுநாளிவை
விலக்குவமென்பதுமெய்யிற்றுகுமோ
இலக்கமுப்புரங்களையெய்தவில்லியார்
தலைக்கலத்திரந்ததுதவத்தின்பாலதோ. (கஙரு)

பொங்குவெங்கோளராவிசும்புபூத்தன
வெங்கதிர்ச்செல்வனைவிழுங்கிநீங்குமால்
அங்கண்மாஞாலத்தைவிளக்குமாய்கதிர்த்
திங்களுமொருமுறைவளருந்தேயுமால். (கஙசு)

---

* ஆற்றல்-வல்லமை, புத்திபலமுமாம். † அதிசயம்-புதுமை, அதிக முமாம்.

அந்தரம்வருதலுமனையதீர்தலும்
சுந்தரத்தோளினீர்தொன்மைநீரவால்
மந்திரவிமையவர்குருவின்வாய்மொழி
இந்திரனுற்றனவெண்ணவொண்ணுமோ. (௧௯௭)

தடைக்கரும்பெருவலிச்சம்பரப்பெயர்க்
கடைத்தொழிலவுணனைற்குலிசக்கையினுன்
படைத்தனன்பழியதுபகழிவில்வலாய்
துடைத்தனனுந்தைதன்குவவுத்தோளினால். (௧௯௮)

வேறு.

பிள்ளைச்சொற்கிளியனுளைப்பிரிவுறலுற்றபெற்றி
தள்ளுற்றவறமுந்தேவர்துயர்முந்தர்ததேயால்
கள்ளப்போரரக்கரென்னுங்களையினைக்களைந்துவாழ்தி
புள்ளிற்கும்புலனில்பேய்க்குந்தாயன்னபுலவுவேலோய். (௧௯௯)

வடுக்கண்வார்கூந்தலாளையிராவணன்மண்ணினோடும்
எடுத்தனனேகுவானையெதிர்ந்தெனதாற்றல்கொண்டு
தடுத்தனெனுவதெல்லாந்தவத்தரன்றர்தவாளால்
படுத்தனனிங்குவீழ்ந்தேனிதுவின்றுபட்டதென்றான். (௨௦௦)

அது கேட்டவுடனே இராமன்கொண்டகோபம்.

கூறினமாற்றஞ்சென்றுசெவித்தொளைகுறுகாமுன்னம்
ஊறினவுதிரஞ்செங்கணுயிர்த்தனவுயிர்ப்புச்செந்தீ
ஏறினபுருவமேன் * மேலிரிந்தனசுடர்களொங்கும்
கீறினதண்டகோளங்கிழிந்தனகிரிகளெல்லாம். (௨௦௧)

அப்பொழுது பிரபஞ்சத்திலுண்டான தடுமாற்றம்.

† மண்ணகந்திரியகின்றமால்வரைதிரியமற்றைக்
கண்ணகன்புனலுங்காலுங்கதிரொடுந்திரியக்காவல்
விண்ணகந்திரியமேலவிரிஞ்சனுந்திரியவீரன்
எண்ணரும்பொருள்களெல்லாமென்பதுதெரிந்ததன்றே. (௨௦௨)

இராமன் கோபாவேசத்தோடு சிலகூறத்தொடங்கல்.

குறித்தவெங்கோபம்யார்மேற்கொள்ளுறுங்கொல்லென்றஞ்சி
வெறித்துநின்றுலகமெல்லாம்விம்முறுகின்றவேலைப்
பொறிப்பிதிர்படலைச்செந்தீப்புகையொடுபொடிப்பப்போம்மென்
றெறிப்பதோர்முறுவறோன்றவிராமனுமியம்பலுற்றான். (௨௦௩)

* மேலிழிந்தனவென்றும்பாடம். † அப்பொழுது மண்ணகந்திரிதல் முதலியவற்றின் அநுமானத்தால் ஸர்வம் விஷ்ணுமயம்ஜகத் என்றபடி உலகமுழுவதும் எம்பெருமானது சொரூபமாகவேயிருக்குமியல்பு அறியப்பட்டதென்க.

இராமன்கூறும் கோபவார்த்தை.

பெண்டெனியொருத்திதன்னைப்பேதைவாளரக்கன்பற்றிக்
கொண்டனனேகநீயிக்கோளுறக்குலுங்கல்செல்லா
எண்டிசையிறுதியானவுலகங்களிவற்றையின்னே
கண்டவானவர்களோடெங்களையுமாறின்றுகாண்டி. (௨௦௪)

தாரகையுதிருமாறுந்தனிக்கதிர்பிதிருமாறும்
பேரகல்வானமெங்கும்பிறங்கெரிபிறகுமாறும்
நீரொடுநிலனுங்காலுநின்றவுங்கிடந்தயாவும்
வேரொடுமெழியுமாறும்விண்ணவர்விளியுமாறும். (௨௦௫)

இக்கணமொன்றினின்றவேழினேடேழுசான்ற
மிக்கனபோன்றுதோன்றுமுலகங்கள்விளியுமாறும்
திக்குடையண்டகோளப்புறத்தவுந்தீந்துநீரின்
மொக்குளினுடையுமாறுங்காணென முனியும்வேலை. (௨௦௬)

அப்பொழுது சூரியன்மறைய யாவும்அஞ்சுதல்.

வெஞ்சுடர்க்கடவுண்மீண்டுமேருவின்மறையலுற்றான்
எஞ்சலிறிசையினின்றயானையுமிரியல்போய
துஞ்சினவுலகமெல்லாமென்பதென்றுணிந்தநெஞ்சின்
அஞ்சினனிளையகோவுமயலுளோர்க்கவதியுண்டோ. (௨௦௭)

சடாயு இராமனுக்குக்கூறும் தணிவுரை.

இவ்வழிநிகழும்வேலையெருவைகட்கிறைவன்யாதும்
செவ்வியோய்முனியல்வாழிதேவருமுனிவர்தாமும்
வெவ்வலிவீரநின்னால்வெல்லுமென்றேமூற்றுய்வார்
எவ்வலிகொண்டுவெல்வாரிராவணன்செயலையென்றான். (௨௦௮)

நாட்செய்தகமலத்தண்ணல்கினநவையிலாற்றல்
தோட்செய்தவீரமென்னிற்கண்டனைசொல்லுமுண்டோ
தாட்செய்தகமலத்தானேமுதலினர்தலைபத்துள்ளாற்
காட்செய்கின்றார்களன்றியறஞ்செய்கின்றார்கள்யாரே. (௨௦௯)

தெண்டிரையுலகந்தன்னிற்செறுநர்மாட்டேவல்செய்து
பெண்டிரின்வாழ்வரன்றேயிதுவன்றோதேவர்பெற்றி
பண்டுலகளந்தோனல்கப்பாற்கடலமுதமந்நாள்
உண்டிலராயினிந்நாளன்னவர்க்குய்தலுண்டோ. (௨௧௦)

வம்பிழைகொங்கைவஞ்சிவனத்திடைத்தமியள்வைகக்
கொம்பிழைமானின்பின்போய்க்குலப்பழிகூட்டிக்கொண்டீர்
அம்பிழைவரிவிற்செங்கையயன்மீராயுங்காலை
உம்பிழையென்பதல்லாலுலகஞ்செய்பிழையுமுண்டோ. (௨௧௧)

ஆதலான்முனிவாயல்லையருந்ததியனையகற்பிற்
காதலாயெரநீக்கித்தேவர்தங்கருத்துமுற்றி
வேதநூன்முறையின் * யாவும்விதியுளிநிறுவிவேறும்
தீதுளதுடைத்தியென்றான்சேவடிக்கமலஞ்சேர்வான். (உசஉ)

இராமன் உலகந்தாற்மேற்கோண்ட கோபந்தணிதல்.

புயனிறவண்ணனுண்டப்புண்ணியன்புகன்றசொல்லைத்
தயரதன்பணியிதென்னச்சிந்தையிற்றழுவிநின்றான்
அயலினிமுனிவதென்னையரக்கரைவருக்கந்தீர்க்கும்
செயலினிச்செயலென்றெண்ணிக் † கண்ணியசீற்றந்தீர்ந்தான். ()

பின்பு சடாயு உயிர்நீத்தல்.

ஆயபின்னமலன்றனுமையநீயமைதியென்ன
வாயிடைமொழிந்ததன்றிமற்றொருசெயலுமுண்டோ
போயதவ்வரக்கனெங்கேபுகலெனப்புள்ளின்வேந்தன்
ஓய்வினனுணர்வுந்தேயவுரைத்திலனுயிருந்தீர்ந்தான். (உசச)

சடாயு பரமபத மடைதல்.

சீதங்கொண்மலருளோனுந்தேவருமென்பதென்னே
வேதங்கள்காண்கிலாமைவெளிநின்றேமறையும்வீரன்
பாதங்கள்கண்ணிற்பார்த்தான்படிவங்கொணெடியபஞ்ச
பூதங்கள்விளியுநாளும்போக்கிலாவுலகம்புக்கான். (உசரு)

அப்பொழுதனைவருமிரங்கி சடாயுவைநன்குமதித்தல்.

வீடவனெய்தும்வேலைவிரிஞ்சனேமுதலமேலோர்
ஆடவர்க்கரசனோடுதம்பியுமழுதுசோரக்
காடமர்மரமுமாவுங்கற்களுங்கரைந்துசாய்ந்த
சேடரும்பாரினோர்க்குங்காஞ்சிரஞ்சேர்ந்தவன்றே. (உசசு)

பின்பு இராமன் தம்பியைநோக்கிக்கூறிய இரங்கன்மொழி.

அறந்தலைநின்றிலாதவரக்கனிணுண்மைதீர்ந்தேன்
துறந்தனென்றவஞ்செய்கேனோதுறப்பெனோவுயிரைச்சொல்லாய்
பிறந்தனென்பெற்றநின்றபெற்றியார்பெற்றதாதை
இறந்தனனிருந்துளேன்யானென்செய்கேனிளவலென்றான். (உசஎ)

இலக்குமணன் அரக்கரையழித்தலே செய்தற்பாற்றுஎன்றல்

என்றலுமிளையகோவவ்விறையினையிறைஞ்சியாண்டும்
வென்றியாய்விதியின்றன்மைபழியிலவிளைந்ததொன்றோ
நின்றினிநினைவதென்னைநெருக்கியவ்வரக்கர்தம்மைக்
கொன்றபினன்றோவெய்யகொடுந்துயர்குளிப்பதென்றான். (உசஅ)

---

* யாவும் என்றது உலகாளுதல் வேள்விசெய்தல் முதலியவற்றைக் குறிக்கும்.

† கண்ணுதல்-கருதுதல்.

எந்தைநீயியம்பிற்றென்னையெண்மையனுகியேழைச்
சந்தவார்குழலினுளைத்துறந்தனைதணிதியேனும்
உந்தையையுயிர்கொண்டானையுயிருண்ணுமுற்றமில்லாச்
சிந்தையையாகிநின்று * செய்தவஞ்செய்கையென்றான். (உகக)

இராமன் இனிசடாயுவுக்குச் சரமக்கிரியைசெய்வோமென்றல்.

அவ்வழியிளவல்கூறவறிவறிவனுமயர்வுநீங்கி
இவ்வழியினையவெண்ணினேமைமைப்பாலதென்று
வெவ்வழிபொழியுங்கண்ணீர்விலக்கினன்விளிந்ததாதை
செவ்வழியுரிமையாவுந்திருத்துவஞ்சிறுவவென்றான். (உஉ0)

சடாயுவுக்கு இராமன் அந்திமக்கிரியைசெய்தல்.

இந்தனமெனையவென்னக்காரகிலீட்டத்தோடும்
சந்தனங்குவித்துவேண்டுந்தருப்பையுந்திருத்திப்பூவும்
சிந்தினன்மணலின்வேதிதீர்தரவியற்றித்தெண்ணீர்
தந்தனன்றாதைதன்னைத்தடக்கையாலெடுத்துச்சார்வான். (உஉக)

ஏந்தினனிருகைதன்னாலேற்றினனீமந்தன்மேல்
சாந்தொடுமலருநீருஞ்சொரிந்தனன்றலையின்சாரல்
காந்தெரிகனலமூட்டிக்கடன்முறைகடவாவண்ணம்
நேர்ந்தனனிரம்புநன்னூன்மந்திரநெறியின்வல்லான். (உஉஉ)

கிளித்தனகளித்தமேனிதாமரைக்கெழுவுசெம்பூத்
துளித்தனவனையவென்னத்துளிசோர்வெள்ளக்கண்ணன்
குளித்தனன்கொண்டலாற்றுக்குளித்தபின்கொண்டன்னீர்
அளித்தனனரக்கர்ச்செற்றசீற்றத்தானவலந்தீர்ந்தான் (உஉங)

மீட்டினியுரைப்பதென்னேவிரிஞ்சனைமுதலமோகீழ்
காட்டியவுமர்களெல்லாமருந்தினகளித்தபோலாம்
† பூட்டியகைகளாலப்புள்ளினுக்கரசைக்கொள்கென்
றூட்டியநன்னீரையனுண்டநீரொத்ததன்றே. (உஉச)

சூரியாஸ்தமனவருணனை.

பல்வகைத்துறையும்வேதப்பலிக்கடன்பலபூமுற்றி
வெல்வகைக்குமரனின்றவேலையின்வேலைசார்ந்தான்
தொல்வகைக்குலத்தின்வந்தான்றன்பத்தாற்புனலுந்தோய்ந்து
செல்வகைக்குரியவெல்லாஞ்செய்குவானெனன்னவெய்யோன். ()

அ-வது. சடாயுவுயிர்நீத்தபடலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-க0ஙசு.

---

* செய்தவம் சிறந்ததவம், செய்தற்குரியதவம், அன்றி செவ்விய தவமுமாம். † பூட்டியகைகள் சேரவைத்த கைகள், சேரங்கை.

# அயோமுகிப்படலம்.



இராமஇலக்குமணர் ஒருமலையிற்சேர்தலும் இருள்மிகுதலும்.

அந்திவந்தணுகும்வேலையவ்வழியவருநீக்கிச்
சிந்துரச்சென்னித்தாண்டோர்மைவரைச்சேர்கைகொண்டார்
இந்திரற்கடங்கல்செல்லாவிராக்கதரெழுந்ததென்ன
வெய்துயர்க்கூற்றமாயவிரியிருள்வீங்கிற்றன்றே (க)

அவர்கள் அல்விரவில் மிகப்பரிதபித்தல்.

தேனுகவருவிசிந்தித்தெருமரலுறுவபோலக்
கானமுமலையுமெல்லாங்கண்ணினீருகுக்குங்கங்குல்
மானமுஞ்சினமுந்தாதைமரணமுமைந்தர்சிந்தை
ஞானமுந்துயருந்தம்முண்மலையெனநலிந்தவன்றே. (உ)

மெய்யுறவுணர்வுசெல்லாவறிவினைவினையினூக்கும்
பொய்யுறுபிறவிபோலப்போக்கரும்பொங்குகங்குல்
நெய்யுறுநெருப்பின்வீங்கிநிமிர்தரவுயிர்ப்புநீளக்
கய்யறவுறுகின்றாராற்காணலாங்கரையிற்றன்றே. (ஙு)

இராமபிரான் அவ்விரவுமுழுவதுஞ் சிறிதுந்துயில்கோள்ளாமை.

யாமதுதெறிதரேற்றுமின்னகைச்சனகியென்னும்
காமருதிருவைநீத்தோமுகமதிகாண்கிலாதோ
தேமருதெரியல்வீரன்கண்ணெனத்தெரிந்தசெய்ய
தாமரைகங்குல்போதுங்குவியலாத்தன்மையென்னே. (ச)

பெண்ணியற்றீபமன்னபேரெழிலாட்டிமாட்டு
நண்ணியபிரிவுசெய்த * நவையிலாநவையினுள்ளத்
தெண்ணியதறிதரேற்றுமிமைத்திலவிராமனென்னும்
புண்ணியன்கண்ணும்வன்றேட்டம்பிகண்போன்றவன்றே. (ரு)

சந்திரோதயம்.

வண்டுளர்கோதைச்சீதைவாண்முகம்பொலியவானிற்
கண்டனனென்னென்றுவீரற்காங்கொருகாதல்காட்டத்
தண்டமிழ்த்தென்றலென்னுங்கோளராத்தவழுஞ்சாரல்
விண்டலம்விளங்குஞ்செவ்விவெண்மதிவிரிந்ததன்றே. (சு)

நிலவு இராமனை வருத்துதல்.

களியுடையநங்கக்கள்வன்கரந்துறைகங்குற்காலம்
வெளிபடுத்துலகமெங்கும்விளக்கியநிலவின்வெள்ளம்

---

* நவையென்றது சீதையைப் பிரிந்தவருத்தம் தான் காப்பாற்றவேண்டியதருமபத்தினியைப் பிரிந்ததனால் வருந்துவது நியாயமே யென்பதை விளக்கநவையிலாவென்றஅடைமொழி அதற்குக்கொடுக்கப்பட்டது.

களியிருட்பிழம்பென்றீண்டுநெஞ்சொடுகலந்தாகத்
தொளையெயிற்றாண்டலுற்றதாமெனச்சுட்டதன்றே. (எ)

இராமன் சீதையைநினைத்து வருந்துதல்.

இடம்படுமோனத்துன்பமிருடரவெண்ணிற்றீர்ந்தான்
விடம்பரந்தனையதாயவெண்ணிலாவெதுப்பவீரன்
படம்பரந்தனையவல்குற்பால்பரந்தனையவின்சொற்
றடம்படுகண்ணினாடன்றனிமையைநினையலுற்றான். (அ)

வேறு.

மடித்தவாயன்வயங்குமுயிர்ப்பினன்
துடித்துவீங்கியொடுங்குறுதோளினன்
பொடித்ததண்டளிர்ப்பூவொடுமால்கரி
ஒடித்தகொம்பனையாடிறத்துன்னுவான். (கூ)

வாங்கும்வில்லன் * வரும்வருமென்றிரு
பாங்குநீணெறிபார்த்தனளோவெனும்
வீங்கும்வேலைவிரிதிரையாமென
ஓங்கியோங்கியொடுங்குமுயிர்ப்பினான். (க0)

தன்னினைந்திலளென்பதுசாலுமே
மின்னினைந்தவிலங்குமெயிற்றினான்
நின்னிலென்றுநெருங்கியபோதவள்
என்னினைந்தனளோவெனவெண்ணுமால். (கக)

நஞ்சுகாலுநகைநெடுநோக்கத்தின்
வஞ்சவாயின்மதியெனமட்குவாள்
வெஞ்சினஞ்செயரக்கர்தம்வெம்மையை
அஞ்சினான்கொலென்றையுறுமாலென்பான். (கஉ)

பூண்டமானமும்போக்கருங்காதலும்
தூண்டநின்றிடைதோமுறுமாருயிர்
மீண்டுமீண்டுவெதுப்பவெதும்பினான்
வேண்டுமோவெனக்கின்னமும்வில்லென்பான். (கங)

வில்லைநோக்கிநகுமிகவீங்குதோட்
கல்லைநோக்கிநகுங்கடைக்கால்வரும்
சொல்லைநோக்கித்துணுக்கெனுந்தொன்மறை
எல்லைநோக்கினர்யாவருநோக்குவான். (கச)

---

* வரும் வரும் என்ற அடுக்கு - தன்னை மீட்பதற்குஇராமன் வருவது நிச்சயமென்ற கருத்தை விளக்கிற்று.

கூதிர்வாடைவெங்கூற்றினைநோக்கினன்
வேதவேள்விவிதிமுறைமேவிய
சீதையென்வயிற்றீர்ந்தனளோவெனும்
* போதகம்மெனப்பொம்மெனுயிர்ப்பினன். (கரு)

நின்றுபல்லுயிர்காத்தற்குநேர்ந்தயான்
என்றுணைக்குலமங்கையொரேந்திழை
தன்றுயர்க்குத்தகவிலெனுயினேன்
நன்றுநன்றென்வலியெனநாணுமால். (கசு)

சாயுந்தம்பிதிருத்தியதண்டளிர்
தீயுமங்கவைதீர்கெனுஞ்செவ் † விருந்
தாயுமாவிபுழுங்கவழுங்குமால்
வாயுநெஞ்சுபுலரமயங்குவான். (கஎ)

பிரிந்தவேதுகொல்பேரபிமானங்கொல்
தெரிந்ததில்லைதிருமலர்க்கண்ணிமை
பொருந்தவாயிரங் ‡ கற்பங்கள்போக்குவான்
இருந்துகண்டிலன்கங்குலினீறரோ. (கஅ)

வென்றிவேற்கையிளவலைமேலெலாம்
ஒன்றுபோலவுலப்பிலநாள்கடாம்
நின்னுகாண்டியன்றேநெடுங்கங்குறுன்
இன்றுநீள்வதற்கேதுவெனென்னுமால். (ககூ)

சந்திரோபாலம்பனம் (சந்திரனைப்பழித்தல்.)

நீண்டமாலைமதியினைநித்தமும்
மீண்டுமீண்டுமெலிந்தனைவெள்குவாய்
பூண்டபூணவள்வாண்முகம்போதர
ஈண்டுசாலவிளங்கினையென்னுமால். (உ0)

நீணிலாவினிசைநிறைதன்குலத்
தாணியாயபழிவரவன்னது
நாணிநாடுகெடந்தனனுங்கொலோ
சேணுலாந்தனித்தேரவனென்னுமால். (உக)

சுட்டகங்குனெடிதெனச்சோர்கின்றான்
முட்டமைந்தநெடு § முடக்கோனெறி

---

* போதகம்-யானைக்கன்று; பருவப்பெயராகாமல் யானையென்றமாத்திரமாய் நின்றது. † விருந்து-புதுமை. ‡ கற்பம் பிரமனுயுள்.

§ சூரியன் சாரதியான அருணன் துடையில்லாதவனுதலால் முடக்கோன் எனப்பட்டான். இதுபற்றி இவனுக்கு வடமொழியில் அநூரு என்று ஒருபெயர். இவன் கருடனது தமையன்.

கட்டிவாளரக்கன்கதிரோனையும்
இட்டனன்கொலிருஞ்சிறையென்னுமால். (உஉ)

துடியினேரிடைதோன்றலளாமெனிற்
கடியகாரிருட்கங்குலின்கற்பம்போய்
முடிவுமாகின்முடியுமிம்மூரிநீர்
நெடியமானிலமென்னநினைக்குமால். (உங)

திறத்திஞதன * செய்தவத்தோருற
ஒறுத்துஞலாலத்துயிர்தமையுண்டுழல்
மறத்திஞர்கள்வலிந்தனர்வாழ்வரேல்
அறத்திஞலினியாவதெனென்னுமால். (உச)

மன்மதன்செயலைக் கூறுதல்.

தேனின்றெய்வத்திருநெடுநாட்சிலை
பூநின்றெய்யும்பொருகணைவீரனும்
மேனின்றெய்யவிமலனைநோக்கிஞன்
தானுந்தேர்கிலனுய்த்தமொறவான். (உரு)

உழந்தயோகத்தொருமுதல்கோபத்தால்
இழந்தமேனியுமெண்ணியிரங்கிஞன்
கெழுந்தகைக்கொருவன்மைகிடக்குமேல்
பழந்துயர்க்குப்பரிவுறும்பான்மையால். (உசு)

இரவுகழிதல்.

நீலமாயநிறத்தனிளைப்பிடைச்
சூலமாகத்தொலைவுறுமெல்லையின்
மூலமா † மலர்முன்னவன்முற்றுறும்
காலமாமெனக்கங்குல்கழிந்ததே. (உஎ)

வேறு.

இராமன் வருத்தம்.

வெள்ளஞ்சிலம்புபாற்கடலின்விரும்புந்துயிலைவெறுத்தளியும்
கள்ளுஞ்சிலம்பும்பூங்கோதைகற்பின்கடலிற்படிவாற்குப்
புள்ளுஞ்சிலம்பும்பொழில்சிலம்பும்புனலுஞ்சிலம்பும்புனைகோலம்
உள்ளுஞ்சிலம்புஞ்சிலம்பாவாலுயிருண்டாகும்வகையுண்டோ. (உஅ)

மயிலும்பெடையுமுடன்றிரியமானுங்கலையுமருவிவரப்
பயிலும்பிடியும் ‡ கடகரியும்வருவதிரிவபார்க்கின்றான்

* திறத்திஞயினவென்றும் பாடம். † மலர்முன்னவன் முற்றுறுங் காலம்-பிரமகற்பம். இது இங்கு நீக்கநீட்சிக்கு உவமைகூறப்பட்டது.
‡ கடகரி-மதம்பிடித்தயானை; கடம்-கன்னம்; அதிலுண்டாகும் மதத்துக்கு இலக்கணை.

குயிலுங்கரும்புஞ்செழுந்தேனுங்குழலும்யாழுங்கொழும்பாகும்
அயிலுமமுதுஞ்சுவைநீத்தமொழியைப்பிரிந்தாலழியானே. (உ௯)

சூரியோதயம்.

முடிநாட்டியகோட்டேயத்துமுற்றவுற்றான்முதுகங்குல்
விடிநாட்கண்டுங்கிளியிழற்றுமென்சொற்கேளாவீரற்காண்
டடிநாட்செந்தாமரையொதுங்குமன்னமிலளால்யானடைத்த
கடிநாட்கமலத்தெனவவிழ்த்துக்காட்டுவான்போற்கதிர்வெய்யோன். (௩0)

பொழிலைநோக்கும்பொழிலுறையும்புள்ளைநோக்கும்பூங்கொம்பின்
எழிலைநோக்குமிளமயிலினியல்பைநோக்குமியல்பானுள்
குழலைநோக்கிக்கொங்கையிணைக்குவட்டைநோக்கியக்குவட்டின்
தொழிலைநோக்கித்தன்னுடையதோளைநோக்கிநாள்கழிப்பான். (௩௧)

இராமலக்ஷுமணர் தேடிச்செல்லுதல்.

அன்னகாலையிளவீரனடியின்வணங்கிநெடியோயப்
பொன்னைநாடாதீண்டிருத்தல்பொருளோவென்னப்புகழோனும்
சொன்னவரக்கனிருக்குமிடந்துருவியறிதுந்தொடர்ந்தென்ன
மின்னுஞ்சிலையார்மலைதொடர்ந்தவெயில்வெங்கானம்போயினரால். (௩௨)

வேறு.

ஆகைசுமந்தநெடுங்கரியன்னார்
* பாசிலைதுன்றுவனம்பலபின்னுக்
காசறுகுன்றினொடாறுகடந்தார்
யோசனையொன்பதொடொன்பதுசென்றார். (௩௩)

மட்படிசெய்ததவத்தினின்வந்த
கட்படிகோதையைநாடினர்காணார்
உட்படிகோபமுயிர்ப்பொடுபொங்கப்
புட்படியுங்குளிர் † கார்ப்பொழில்புக்கார். (௩௪)

சூரியனஸ்தமனம்.

ஆரியர்சிந்தையலக்கணறிந்தான்
காரிகையெங்கணுநாடினனோடிப்
பேருலகெங்குமுழன்றனன்பின்னை
மேருவைவெங்கதிர்மீளமறைந்தான். (௩௫)

எந்து மிருள்மூடுதல்.

அரண்டருகுஞ்செறியஞ்சனபுஞ்சம்
முரண்டனபோலிருளெங்கணுமுந்தத்
தெருண்டறிவில்லவர்சிந்தையின்முந்தி
இருண்டனமாதிரமெட்டுமிரண்டும். (௩௬)

---

* பாசிலை-பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டது.
† கார்பொழில்-பெரியதொருசோலை; மேகந்தவழும்சோலையுமாம்.

அவ்விருவரும் அந்த ஓர்பளிக்கறையில்தங்குதல்.

* இளிக்கறையின்சொலியைந்தனபூவை
கிளிக்கறையும்பொழில்சிஞ்சுகவேலி
ஒளிக்கறைமண்டிலமொத்துளதாங்கோர்
பளிக்கறைகண்டதில்வைகல்பயின்றார். (௩எ)

இராமன் கட்டளைப்படி இலக்தும்ணன் நீர்கொணரச்செல்லுதல்.

அவ்விடையெய்தியவண்ணலிராமன்
வெவ்விடைபோலிளவீரனைவீர
இவ்விடைநாடினைநீர்கொணர்கென்றான்
தெவ்விடைவில்லவனுந்தனிசென்றான். (௩அ)

அயோமுகி இலக்தும்மணனைக்கண்டு காமுறுதல்.

எங்கணுநாடினனீரிடைகாணான்
சிங்கமெனத்தமியன்றிரிவானை
அங்கவனத்து † ளயோமுகியான
வெங்கணரக்கிவிரும்பினள்கண்டாள். (௪௯)

நன்மதியோர்புகன்மந்திரநாமச
சொன்மதியாவரவிற்றொடர்கிற்பாள்
தன்மதனோடுதன்வெம்மைதணிந்தாள்
மன்மதனுமிவனென்னுமனத்தாள். (௫0)

அழுந்தியசிந்தையரக்கியலக்கண்
எழுந்துயர்காயலின்வந்தெதிர்நின்றாள்
புழுங்குமென்னொடுவெபுல்லுவெனன்றி
விழுங்குவெனோவெனவிம்மலுழன்றான். (௫க)

இரந்தனெனெய்தியபோதிசையாது
கரந்தனனேனனிகொண்டகடந்தென்
‡ முரஞ்சினின்மேவிமுயங்குவெனென்று
விரைந்தெதிர்வந்தனடியினும்வெய்யாள். (௫௩)

அயோமுகியின்தன்மை.

உயிர்ப்பினெருப்புமிழ்கின்றனவொன்ற
எயிற்றின்மலைக்குலமென்றினிதுண்ணும்
வயிற்றுவயக்கொடுமோசுணம்வீசு
கயிற்றினிசைத்தமுலைக்குழிகண்ணாள். (௫௩)

* இளி-ஏழிசைகளிலோன்று. † அயோமுகியென்ற வடமொழிப்பெயர்இரும்பினாலாகியது போன்ற முகமுடையளென்றுபொருள்படும் முஞைஞ்சு என்பது முரஞ்சுஎன எதுகைநோக்கித் திரிந்தது. முரஞ்சுகுகை.

பற்றியகோளரியாளிபணிக்கன்
றெற்றிய * பாதசிலம்புசிலம்ப
இற்றுகயாவையுமீறுறுமந்நாள்
முற்றியஞாயிறுபோலுமுகத்தாள். (கூச)

ஆழிவறக்கமுகக்கவமைந்த
† மூழையெனப்பபொலிமொய்ம்பிலவாளாள்
கூழைபுறத்துவிரிந்ததொர்கொட்பால்
ஊழிநெருப்பினுருத்தனையொப்பாள். (சரு)

தடிதடவத்தலைபலதழுவத்தாள்
நெடிதடையக்குடர்கெழுமுநிணத்தூண்
படிதடவப்பலபாவமிசைக்கும்
கடித்தடவத்தினளுருமுகறிப்பாள். (சகூ)

இவையிறையொப்பனபென்னவிழிப்பாள்
அவைகுளிரக்கடிதழலுமெயிற்றாள்
குவைகுலையக்கடல்குவியவளைப்பாள்
நவையில்புவித்திருநாணநடப்பாள். (சஎ)

நீளரவெச்சரிதாழ்கைநிரைத்தாள்
ஆளரவப்புலியாரமணைத்தாள்
யாளிகளைப்பலதாலியிசைத்தாள்
கோளரியைக்கொடுதாழ்குழையிட்டாள். (சஅ)

இலக்குமணன் அயோமுகியைக் காணுதல்.

நின்றனளானசயினீர்கலுழுங்கண்
குன்றிநிகர்ப்பகுளிர்ப்பவிழிப்பாள்
மின்றிரிகின்றவெயிற்றின்விளக்கால்
கன்றிருளிற்றிரிகோளரிகண்டான். (சகூ)

இலக்குமணன் அவளை யரக்கி என்றறிதல்.

பண்டையினுசியிழந்துபதைக்கும்
திண்டிறலாளொடுதாடகைசீராள்
கண்டகராயவரக்கர்கணத்தோர்
ஒண்டொடியாமிவளென்பதுணர்ந்தான். (ருo)

இலக்குமணன் அயோமுகியை நீயார்என்றுவினவல்.

பாவியராமிவர்பண்பிலர்நம்பால்
மேவியகாரணம்வேறிலையென்பான்

---

* பாதசிலம்பு தரித்தாள் என்றும் பாடம். † மூழை முழைஎன்பதன் நீட்டல் மூழையென்றே கொண்டு அகப்பை யென்று கூறினுமாம் மூழை முகவையுமாம்.

மாவியல்கானின் வயங்கிருள்வந்தாய்
யாவளடியுரைசெய்கடிதென்றான். (௫௧)

அயோமுகிதான் வந்தகாரணத்தைக் கூறுதல்.

பேசினனங்கவள்பேசுறநாணுள்
ஊசலுழன்றழிசிந்தையளுந்தான்
நேசமிலன்பினளாயினுநின்பால்
ஆசையின்வந்தவயோமுகியென்றாள். (௫௨)

பின்னுமுறைப்பவள்பேரெழில்வீரா
முன்னமொருத்தர்தொடாமுலையோடும்
பொன்னின்மணித்தடமார்புபுணர்ந்தென்
இன்னுயிரைக்கடிதீகுதியென்றாள். (௫௩)

அவன் வேண்டுகையை இலக்குமணன் மறுத்தல்.

ஆறியசிந்தையளஃதுரைசெய்யச்
சீறியகோளரிகண்கள்சிவந்தான்
மாறிலவார்கணையிவ்வுரைவாயில்
கூறிடினின்னுடல்கூறிடுமென்றான். (௫௪)

அயோமுகி தலையேற்கைகூப்பி மீண்டு மிலக்குமணனை வேண்டுதல்.

மற்றவனவ்வுரைசெப்பமனத்தால்
செற்றிலள்கைத்துணைசென்னிபின்வைத்தாள்
கொற்றவநீயெனைவந்துயிர்கொள்ளப்
பெற்றிடி * னின்றுபிறந்தனனென்றாள். (௫௫)

வெங்கதமில்லவள்பின்னருமேலோய்
இங்குறுறும்புனனுடுதியேனுன்
அங்கையினுலெனையஞ்சலையென்றால்
கங்கையினீர்கொணர்வென்கடிதென்றாள். (௫௬)

இலக்குமணன் அயோமுகியை அச்சமுறுத்தல்.

சுமித்திரைசேயவள்சொன்னசொலன்ன
கமித்திலனின்னிருகாதொடுநாசி
துமிப்பதன்முன்பகலென்பதுசொல்ல
இமைத்திலனின்றனளின்னநினைந்தாள். (௫௭)

---

* பிறந்து வெகுநாளாயும்: பிறப்பெடுத்தற்குப் பயனுகை இலக்குமணனைக்கூடாது: காலம் வீணேகழித்தமையாற் கீழ்ச்சென்ற காலங்களைப் பிறவாத நாளாகவேவைத்து அவனைக்கூடப்பெறும் அந்த நாளையேதான் புதிதாகப்பிறந்த நாளாகக்கருதி 'இன்றுபிறந்தனென்,' என்றாள். இனி காமநோயால் இறந்ததுபோன்றுள்ள தனது உயிரை இவ்வீரனுடையசேர்க்கையாலேயே பெறுவதாக இவள் நினைத்தமையால் பிழைத்தது 'பிழைத்தது புநர்ஜன்மம்,' என்றபடி 'இன்றுபிறந்தனென்,' என்றாளுமாம்.

அயோமுகி இலக்குமணனை எடுத்துச்செல்லக் கருதுதல்.

எடுத்தனனேகினனென்முறைதன்னுள்
அடைத்திவன்வெம்மையகற்றியபின்னை
உடற்படுமோவுடனேயுறான்மை
திடத்திதுவேகலனென்றயல்சென்றாள். (ருஅ)

அயோமுகி இலக்குமணனை எடுத்துச் செல்லுதல்.

மோகனையென்பதுமுந்திமுயன்றாள்
மாகநெடுங்கிரிபோலியைவௌவா
ஏகினளும்பரினிர்துவொடேகும்
மேகமெனும்படிநொய்தினின்வெய்யாள். (ருக)

மந்தரம்வேலையில்வந்ததும்வானத்
தந்திரனார்பிடியென்னலுமானாள்
வெந்திறல்வேல்கொடுசூரடும்வீரச்
சுந்தரனார்தருதோகையுமொத்தாள். (சுo)

அயோமுகி இலக்குமணனைத் தழுவுதல்.

ஆங்கவண்மார்பொடுகையினடங்கிப்
பூங்கழல்வார்சிலைமீளிபொலிந்தான்
வீங்கியவெஞ்சினவீழ்மதவெம்போர்
ஓங்கலுரிக்குமுருத்திரனொத்தான். (சுக)

இலக்குமணன் வராததுகண்டு இராமன் தேடத் தொடங்குதல்.

இப்படியேகினளன்னவளிப்பால்
அப்பிடைதேடிநடந்தவெனுவித்
துப்புடைமால்வரைதோன்றலனென்று
* வெப்புடைமெய்யுடைவீரன்விரைந்தான். (சுஉ)

இராமன் இலக்குமணனைப்பற்றிப் பலவாறு சிந்தித்துவருந்துதல்.

வேறு.

வெய்தாகியகானிடைமேவருநீ
ரைதாதலினேவயலொன்றளதோ
நொய்தாய்வரவேகமுநொய்திலனால்
எய்தாதொழியானிதுவென்னைகொலாம். (சுங)

நீர்கண்டனையிவ்வழிநேடினைபோய்ச்
சார்கொண்டெனவித்துணைசார்கிலனால்
வார்கொண்டணிகொங்கையைவௌவினர்பால்
போர்கொண்டனனோபொருளுண்டிதெனா. (சுச)

* வெப்பு-விரகதாபமும், தாகதாபமும், தம்பியைக்காணுமையா லானதாபமும்.

அஞ்சொற்கிளியன்னவணங்கினைமுன்
வஞ்சித்தவிராவணன்வெளவினனெ
நஞ்சிற்கொடியானடலைத்தொழிலால்
துஞ்சுற்றனனோவிதியின்றுணிவால். (சுரு)

வரிவிற்கையெனாருயிர்வந்திலனல்
தருசொற்கருதேனெருதையலையான்
பிரிவுற்றனெனென்பதெர்பீழைபெருத்
தெரிவுற்றிடவாவியிழந்தனனோ. (சுசு)

உண்டாகியகாரிருளோடொருவென்
கண்டானயல்வேறொருகண்ணிலனல்
புண்டானுறநெஞ்சுபுழுங்குழவென்
உண்டானிலெனெங்ஙனநாடுகெனோ. (சுஎ)

தள்ளாவினையேன்றனியாருயிராய்
உள்ளாயொருநீயுமொளித்தனையோ
பிள்ளாய்பெரியாய்பிழைசெய்தனையால்
கொள்ளாவுலகுன்னையிதோகொடிதே. (சுஅ)

பேராவிடர்வந்தனபேர்க்கவலாய்
தீராவிடர்தந்தனைதெவ்வர்தொழும்
வீராவெனையிங்ஙன்வெறுத்தனையோ
வாராய்புறமித்துணைவைகுதியோ. (சுகூ)

என்னைத்தருமெந்தையையென்னையரைப்
பொன்னைப்பொருகின்றபொலன்குழையாள்
தன்னைப்பிரிவேனுளனாவதுதான்
உன்னைப்பிரியாதவுயிர்ப்பலவோ. (எ0)

பொற்றோடிவர்கின்றபொலங்குழையாள்
தற்றேடிவருந்துதவம்புரிவேன்
நிற்றேடிவருந்தசிரப்பினையோ
வெற்றேடினைவந்தவிளங்களிறே. (எக)

இன்றேயிறவாதொழியேனெமரோ
பொன்றாதொழியார்புகல்வாருளரோ
ஒன்றாகியவுன்கிளையோரையெலாம்
கொன்றாய்கொடியாயிதுவுங்குணமோ. (எஉ)

மாந்தாமுதன்மன்னவர்தம்வழியில்
வேந்தாகைதுறந்தபின் * மெய்யுறவோர்

---

* 'மெய்யுறவோர் என்றது தந்தைதாய்முதலிய உள்ளன்புடைய சுற்றத்தாரை. தேகபந்துக்களென்ற பொருளில் மெய்யுறவோர் என்றுருமாம்.

தந்தாமொழியத்தமியேனுடனே
போந்தாயெனைவிட்டனைபோயினையோ. (எங)

என்னுவுரையாவெழும்வீழுமிருந்
தன்னுருணர்வோய்வுறுமொன்றலவால்
மின்னுதிடியாதிருள்வாள்விளைவீ
தென்னுவெனுமென்றனிநாயகனே. (எச)

நாடும்பலசூழல்கடோறுநடந்
தோடும்பெயர்சொல்லியுளைந்துயிர்போய்
வாடும்வகைசோறுமயங்குறுமால்
ஆடுங்களுமாமதயானையனுன். (எரு)

காமையாளோடுமென்னுயிர்காவலினின்
றிமையாதவனைத்துணைதாழ்வுறுமோ
சுமையாவுலகூடுழலுறுல்வினையேன்
அமையாதுகொல்வாழ்வறியேனெனுமால். (எசு)

இராமன் தற்கொலை செய்யத்துணிதல்.

அறப்பாலுளதேலவன்முன்னவனுய்ப்
பிறப்பானுறின்வந்துபிறக்கவெனு
மறப்பால்வடிவடிவாள்கொடுமென்னுயிரைத்
துறப்பானுறுகின்றதொடர்ச்சியின்வாய். (எஎ)

இலக்குமணன் அயோமுகியை அங்கபங்கப்படுத்தல்.

பேர்ந்தானெமொணயயினிற்பிரியா
ஈர்ந்தானவனுசிபிடித்திளையோன்
சோர்ந்தாளிடுபூசல்செவித்தொளையில்
சேர்ந்தார்தலுமேதிருமாறெருளா. (எஅ)

வேறு.

இராமன் அக்குரலால் அரக்கியென்று துணிதல்.

பாற்றருகானகத்தரக்கர்பல்கழல்
மூற்றருவெஞ்சபமுரல்கின்றுரெதிர்
உரற்றியவோசையன்றெருத்தியூறுபட்
டாற்றியகுரலவளரக்கியேகொலாம் (எகூ)

இராமன் ஆக்கினேயாஸ்திரத்தையெடுத்து விடமுயலுதல்.

அங்கியினெடும்படைவாங்கியக்கது
செங்கையிற்கரியவன்றிரிக்குமெல்லையில்
பொங்கிருளப்புறத்துலகம்புக்கது
கங்குலும்பகலெனப்பொலிந்துகாட்டிற்றே. (அ0)

நெடுவரைபொடிபடசிவந்தமாமரம்
ஒடிவுறநிலமகளுலேயவூங்கெலாம்
சடசடவெனுமொலிதழைப்பத்தாக்குமா
முடுகினனிராமன்வெங்காலின்மும்மையான். (அக)

இலக்குமணன்வந்த இராமனை வநந்தாதேயென்று சொல்லிக்
கிட்ட இராமன் மகிழ்தல்.

ஒருங்குயர்ந்துலகின்மேலூழிப்பேர்ச்சியுள்
கருங்கடல்வருவதேயனையகாட்சித்தன்
பெருந்துணைத்தம்முனைநோக்கிப்பின்னவன்
வருந்தலேவருந்தலேவள்ளியோயெனு. (அஉ)

வந்தனெனடியனேன்வருந்தல்வாழிநின்
* அந்தமிலுள்ளமென்றறியக்கூறுவான்
சந்தமென்றளிர்புரைசரணஞ்சார்ந்தனன்
சிந்தினநயனம்வந்தனையசெய்கையான். (அங)

ஊற்றுறுகண்ணினீரொழுகநின்றவன்
ஏற்றிளங்கன்றினைப்பிரிவுற்றெங்கணும்
ஆற்றலினுற்றுவதரிதினெய்திய
பாற்றிளம்பான்முலேயாவின்பான்மையான். (அச)

இராமன் இலக்குமணனைநோக்கி மனநெகிழ்தல்.

தழுவினன்பன்முறைதாரைக்கண்ணினீர்
கழுவினனுண்டவன் † கனகமேனியை
வழுவினையாமெனமனக்கொடேங்கினேன்
எழுவெனமலேயெனவிலையந்ததோளினுய். (அரு)

என்னையங்கெய்தியதியம்புவாயென
அன்னவனஃதெலாமறியக்கூறலும்
இன்னலுமுவகையுமிரண்டுமெய்தினுன்
தன்னலாதொருபொருடனுக்குமேலிலான், (அசு)

இராமன் இலக்குமணனைத் தேற்றுதல்.

ஆய்வுறுபெருங்கடலகத்துளேயவன்
பாய்திரைவருதொறும்பரிதற்பாலனும்
தீவினைப்பிறவிவெஞ்சிறையிற்பட்டயாம்
நோயுறுதுயரெனநடுங்கலுன்மையோ. (அஎ)

---

* அந்தமில் உள்ளம்-மயக்கமற்ற மனம், அழிவற்றமனமெனினுமாம்.
† கனகமேனி-சுவணவண்ணன்.

இராமன் இலக்குமணனைப் புனைந்து கூறுதல்.

மூவகையமாருமுலகமும்மையும்
மேவரும்பகையெனக்காகமேல்வரின்
ஏவரேகடப்பவரெம்பிநீயுளை
யாவதேவலியினியாணும்வேண்டுமோ. (அஅ)

பிரிபவர்யாவரும்பிரிகபேரிடர்
வருவனயாவையும்வருகவார்கழற்
செருவலிவீரநிற்றீருமல்லது
பருவடலென்வயிற்பயிலர்பாலதோ. (அகூ)

இராமன் இலக்குமணனை நோக்கி அரக்கியைக் கோல்
லாமையைப்பற்றி வினவல்.

வன்றொழில்வீரபோர்வலியரக்கியை
வென்றபோர்மீண்டனெனன விளம்பினுய்
புன்றொழிலனையவள்புகன்றசீற்றத்தால்
கொன்றிலைபோலுமாற்கூறுவாயென்றான்.  (கூ0)

இலக்குமணன் மறுமொழிகூறல்.

தொளைபடுமூக்கொடுசெவிதுமித்துகத்
தலைமயினகிலொடுநேடிந்துநீக்கிய
அளவையிர்பூசலிட்டாற்றினளென
இளையவன் விளம்பிநின்றிருகை கூப்பினன்.  (கூக)

இராமன்இலக்குமணனைத்தழுவுதல்.

தொல்விருடனைக்கொலத்தொடர்கின்றாளையும்
கொல்லலாசியைக்கொய்துநீக்கினுய்
வல்லைநீ * மனுமுதன்மாபினோயெனப்
புல்லினனுவகையிற்பொருமிவிம்முவான்.  (கூஉ)

இராமலக்குமணர் நீர்பருகி ஒருமலையில் தங்குதல்.

பேருந்துயரறப்பேர்ந்துளோரென
வீரனுந்தம்பியும்விடிவுநோக்குவார்
வாருணங்கினைந்தனர்வான்நீரினுல்
† தாரணித்தங்கொருகிரியிற்றங்கினர்.  (கூங)

* மனு-சூரியனது மகன்; இவனே இச்சூரியகுலத்து அரசர்க்கெல்லாம் முதல்வன்; வைவசுவதமநுவெனப் பிரசித்திபெற்றவன்.

† தாரணித்தல்-உடம்புதரித்தல்

இராமன் பள்ளிகொள்ளல்.

கல்லகல் * வெள்ளிடைக்கானகத்துள
பல்லவமலர்கொடுபடுத்தபாயலின்
எல்லையிறுயரினோடிருந்துசாய்ந்தனன்
மெல்லடியிளையவன்வருடவீரனே. (கூச)

இராமன் விரகவேதனையால் வருந்துதல்.

மயிலியல்பிரிந்தபின்மானநோயினுல்
அயில்விலனொருபொருளவலமெய்தலால்
துயில்விலனென்பதுசொல்லற்பாலதோ
உயிர்நெடிதுயிர்ப்பிடையூசலாடுவான். (கூரு)

இராமன் விரகதாபத்தால் வருந்திக்கூறல்.

மானவண்மெய்யிறைமறக்கலாமையின்
ஆனதோவன்றெனினரக்கர்மாயமோ
கானகமுழுவதுங்கண்ணினோக்குங்கால்
சானகிவுருவெனத்தோன்றுந்தன்மையே. (கூசு)

கருங்குழற்சேயரிக்கண்ணிற்கற்பினோர்க்
கருங்கலமருங்குவர்திருப்பவாசையால்
ஒருங்குறத்தழுவுவாளென்றுங்காண்கிலேன்
மருங்குல்போலானதோவடிவுமெல்லவே. (கூஎ)

புண்டரிகப்புதுமலரிற்றேறன்பொதி
தொண்டையஞ்சேயொளித்துவர்த்த † வாயமு
துண்டனெனீண்டவளுறைழயளல்லளால்
கண்டுயிலன்றியுங்கனவுண்டாகுமோ. (கூஅ)

மண்ணினும்வானினுமற்றைமூன்றினும்
எண்ணினும்பெரியதோரிடர்வந்தெய்தினுல்
தண்ணறுங்கருங்குழற்சனகன்மாமகள்
கண்ணினுநெடியதோகொடியகங்குலே (கூகூ)

சந்திரோ பாலம்பனம்.

அப்புடையலக்குமீனமருமார்கலி
‡ உப்புடையிர்துவென்றுதித்த $ ஊழித்தீ

* வெள்ளிடை-மேல்மறைவில்லாத இடம்.

† வாயமுது உண்ணல்-அகாபானம் பருகல்.

‡ உப்பு-அழகு. $ ஊழித்தீ-பிரளயகாலத்தில் கடலினின்று வெளிக்கிளம்பி உலகத்தையழிக்கும் வடவாமுகாக்கினி,

வெப்புடைவிரிகதிர்விரிப்பமெய்யெலாம்
கொப்புளம்பொடித்ததோகொதிக்கும்வானமே' (கoo)

சூரியோதயம்.

இன்னனவின்னனபன்னியீடழி
மன்னவர்மன்னவன்மதிமயங்கினன்
அன்னதுகண்டனனல்கினனெனத்
துன்னியசெங்கதிர்ச்செல்வன்றோன்றினன். (கoக)

கூ-வது. அயோமுகிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-ககஙஎ.

---

பத்தாவது

## கவந்தன்படலம்.



இராமலக்ஷ்மணர் சீதையைத் தேடிச்செல்லுதல்.

சிலம்பொறையிலதெனநிமிர்ந்த * கற்பினள்
நலம்பொறைகூர்தருமயிலைநாடிய
அலம்புருபறவையுமழுவவாமெனப்
புலம்புறுவிடியலிற்கடிதுபோயினர். (க)

வேறு.

இராமலக்ஷ்மணர்நடுப்பகலில் கவந்தவனமடைதல்.

ஐயைந்தடுத்தயோசனையினிரட்டியடவிபுடைபடுத்த
வையந்திரிந்தார்கதிரவனும்வானினுப்பண்வந்துற்றாள்
எய்யுஞ்சிலக்கையிருவருஞ்சென்றிருந்தேநீட்டியெவ்வுயிரும்
கையின்வளைத்துவயிற்றடக்குங்கவந்தன்வனத்தின்கண்ணுற்றார். ()

வேறு.

அக்கவந்தன் கையில் அகப்பட்டவற்றின் றன்மை.

எறுப்பினங்கடையுறயானையேமுதல்
உறுப்புடையுயிரெலாமுலைந்துசாய்ந்தன
வெறிப்புறுநோக்கினவெருவுகின்றன
பறிப்பருவலையிடைப்பட்டபான்மைய (ங)

மாபுளிசிறுத்திலன்புரக்குமாண்பிலன்
உரனிலானொருவனுட்டுயிர்கள்போல்வன

* கற்பு-கணவனையே தெய்வமென்றுணர்தல்.

வெரிவுவசிந்துவகுவிவவிம்மலோ
டிரிவனமயங்குவவியல்புநோக்கினர். (ச)

‡ மால்வரையுருண்டனவருவமாமரம்
கால்பறிந்திடுவனகானயாறுகள்
மேலுளதிசையொடுவெளிகரப்பன
சூன்முதிர்மேகங்கள்சுருண்டுவீழ்வன. (ரு)

இராமலக்ஷ்மணர் கவந்தன்கையில் அகப்படுதல்.

நாற்றிசைப்பரவையும்மிறுதிநாளுறக்
காற்றிசைத்தெழவெழுந்துலகைக்கால்பரந்
தேற்றிசைதுறந்துவந்திடுங்குகின்றன
போற்றிசைசுற்றியகரத்துப்புக்குளார் (சு)

இராமலக்ஷ்மணர் கவந்தன்கைகளை அரக்கர்சேனையென்று
கருதிமகிழ்தல்.

தேமொழிதிறத்திஞலரக்கர்சேனைவந்
தேமுறவளைந்ததென்றுவகையெய்தினர்
நேமிமால்வரைவரநெருக்குகின்றதே
யாமெனவாயகைம்மதிட்குளாயினர். (எ)

இது அரக்கர்சேனையாதலால் அரக்கருநகிலுள்ளதுபோலும்என்று
இராமன் இலக்குமணனுக்குக் கூறுதல்.

இளவலைநோக்கினனிராமனேழையை
யுளைவுசெயிராவணனுறையுமூருமிவ்
வளவையதாகுதலறிதியையநம்
கிளர்பெருந்துயரமுங்கீண்டதாமென. (அ)

அரக்கர்சேனையன்றென்று இலக்குமணன்கூறுதல்.

முற்றியவரக்கர்தமுழங்குதானைமேல்
எற்றியமுரசொலியேங்குஞ்சங்கிசை
பெற்றிலதாகலிற்பிறிதொன்றுமெனச்
சொற்றனனிளையவன்றொழுதுமுன்னினன். (கூ)

இலக்குமணன் இதுபெருநாகமாயிருக்கலாம்என்று குறித்தல்.

தெள்ளியவமுதெழத்தேவர்வாங்கிய
வெள்ளெயிற்றரவந்தான்வேறொர்நாகந்தான்
தள்ளருவாலொடுதலைபினல்வளைத்
துள்ளுறக்கவர்வதேயொக்குமூழியாய். (க0)

---

இக்குறியிட்ட மேன் மூன்றுகவிகளும் ஒரு தொடர்.

இருவரும் கவந்தனெதிரிற் செல்லுதல்.

என்றிவைவிளம்பிடவிளவல்வாசகம்
நன்றெனநினைந்தனன்னடந்தநாயகன்
ஒன்றிரண்டியோசனையுள்புக்கோங்கரு
னின்றெனவிருந்தவக் * கவந்தனேர்சென்றார். (கக)

கவந்தனது தோற்றங்கூறல்.

வெயிற்சுடரிரண்டினைமேருமால்வரை
குயிற்றியவாமெனக்கொதிக்குங்கண்ணினன்
எயிற்றிடைக்கிடையிருகாதமீட்டிய
வயிற்றிடைவாயெனுமகரவேலையான். (கஉ)

ஈண்டியபுலவரோடவுண † ரிந்துவைத்
தீண்டியநெடுவரைத்தெய்வமத்தினைப்
பூண்டுயர்வடமிருபுடையும்வாங்கலின்
நீண்டெனக்கிடந்தனநிமிர்ந்தகையினான். (கங)

தொகைக்கனற்கருமகன்றுருத்தித்தூம்பெனப்
புகைக்கொடிகனலொடுபொடிக்குமூக்கினான்
டகைத்தகைநெடுங்கடற்பருகும்பாவகன்
சிகைக்கொழுந்திதுவெனத்திருகுநாவினான். (கச)

புரண்டுபாம்பிடைவரவெருவிப்புக்குறை
அரண்டனைநாடியோரருவிமால்வரை
முரண்டொகுமுழைநுழைமுழுவெண்டிங்களை
இரண்டுகூறிட்டெனவிலங்கெயிற்றினான். (கரு)

ஓதநீர்மண்ணிவைமுதலவோதிய
பூதமோரைந்தினிற்பொருந்திற்றன்றியே
வேதநூன்வரன்முறைவிதிக்குமப்பெரும்
பாதகந்திரண்டுயிர்படைத்தபண்பினான். (கசா)

வெய்யவெங்கதிர்களைவிழுங்குவெவ்வராச்
செய்தொழிலிலைதுயில்செவியின் ‡ றொள்ளையான்

---

* வயிற்றுக்குள் தலையடங்கியமைபற்றி கவந்தம்போலத் தோற்றமுடையவனாயிருந்ததனால் இவனுக்குக் கவந்தனென்று பெயர். கவந்தம்என்ற வடசொல்லின் திரிபு இதற்கு-தலையற்றதும் தொழிலுடன் கூடியதுமான உடல் என்று பொருள் † இந்துவைத்தீண்டிய நெடுவரை-சந்திரனை அடைதூணாகக்கொண்ட பெரியமலை; உயர்ச்சியாற் சந்திரமண்டலத்தையளாவிய மலையென்றலும் ஒன்று. ‡ தொள்ளை-தொளை. தொளை-துளை.

பொய்கிளர்வன்மையிற்புரியும்புன்மையோர்
வைகுறுநரகையுநகும்வயிற்றினன். (௧௭)

முற்றியவுயிரெலாமுருங்கவாரித்தான்
பற்றியகரத்தினன்பணைத்தபண்ணையிற்
றுற்றியபுகுதருந்தோற்றத்தால்யமன்
கொற்றவாய்தற்செயல்குறித்தவாயினன். (௧௮)

ஓலமார்கடலெனமுழங்குமோதையான்
ஆலமேயென்விருண்டழன்றவாக்கையான்
நீலமானேமியிற்றலையைநீக்கிய
காலநேமியிற்பெருங்கவந்தக்காட்சியான். (௧௯)

இராமலக்ஷ்மணர் கவந்தனைக்காணுதல்.

தாக்கியதனைப்பில்காலெறியத்தன்னுடை
மேக்குயர்கொடுமுடியிழந்தமேருநேர்
ஆக்கையினிருந்தவன்றன்னையவ்வழி
நோக்கினரிருவருநுணங்குகேள்வியார். (௨௰)

இராமலக்ஷ்மணர் கவந்தன்வாயைக் காணுதல்.

நீர்புகுநெடுங்கடலடங்குநேமிசூழ்
பார்புகுநெடும்பகுவாயைப்பார்த்தனர்
சூர்புகலரியதோரரக்கர்தொன்மதில்
ஊர்புகுவாயிலோவிதுவென்றன்னினர். (௨௧)

இலக்ஷுமணன் கவந்தனைப் பூதமென்றுகருதிக் கவலைகொண்டு
இராமனிடங்கூறல்.

அவ்வழியிளையவனமர்ந்துநோக்கிய
வெவ்வியதொருபெரும்பூதம்வில்வளாய்
வவ்வியதன்கையின்வளைத்துவாய்ப்பெயும்
செய்வதெனிவணெனச்செம்மல்சொல்லுவான். (௨௨)

இராமன் இலக்ஷுமணனை நோக்கிக்கூறல்.

* பாரிடமேயிதுபரவைசுற்றுறும்
† பாரிடமரிதெனப்பரந்தமெய்யது
பாரிடம்வலம்வரப்பரந்தகையது
‡ பாரிடந்தெடுத்தமாவனையபாழியாய். (௨௩)

---

* பாரிடம்-பூதம். † பாரிடம் என்பது பரு இடம் என்று பிரிந்து அகலிடம் என்றுபொருள்படும். ‡ பாரிடம் பூமி.

தோகையும்பிரிந்தனளெந்தைதுஞ்சினன்
வேகவெம்பழிசுமந்துழலவேண்டலேன்
ஆதலின்யானினியிதனுக்காமிட
மேகுதியீண்டுநின்றிளவலேயென்றான் (உச)

ஈன்றவரிடர்பரவெம்பிதுன்புறச்
சான்றவர்துயருறப்பழிக்குஞ்சார்வுமாய்த்
தோன்றலினெனனுயிர்துறந்தபோதலால்
ஊன்றியபெரும்பழிதுடைக்கவொண்ணுமோ. (உரு)

இல்லியல்புடையரீளித்தவின்சொலாம்
வல்லியிவ்வரக்கர்தம்மனையுளாளெனச்
சொல்லிநன்மலையெனச்சுமந்தநாணியென்
வில்லினென்செல்வெனேமிதிலைவேந்தன்பால். (உசு)

தலையவிழ்கோதையைத்தாங்கலாற்றலென்
இளைபுரிந்தளித்தன்மேலிவர்ந்தகாதலேன்
உளனெனவுரைத்தலினும்பரானென
விளைதனன்றாதலின்விளிதனன்றென்றான். (உஎ)

வேறு.

இலக்குமணன் மறுமொழி.

ஆண்டானின்னனபன்னிடவையற்கிளைவீரன்
ஈண்டியானுன்பின்னேகியபின்னிவ்விடர்வந்து
மூண்டான்முன்னேயாருயிரோடுமுடியாதே
மீண்டபோதற்காமெனினன்றென்வினையென்றான். (உஅ)

என்றானென்னுப்பின்னுமிசைப்பானிடர்தன்னை
வென்றானன்றேவீரர்களாவார் * விரவாரின்
தன்றாய்தந்தைதம்முனெனுந்தன்மையர்முன்னே
பொன்றானென்றானீங்குவதன்றோபுகழம்மா. (உகூ)

மானேயன்னுடன்னுடுதம்முன்வரையாரும்
கானேவைகக்கண்டுயில்கொள்ளாதயல்வாத்தற்
கானுனென்னேயென்றவர்முன்னேயவரின்றித்
தானேவந்தானென்றலின்வேறோர்தவறுண்டோ (ஙo)

என்றாயுன்முன்னேவியயாவுமிசையின்னல்
பின்றாதெய்திப்பேரிசையாளற்கழிவுண்டேல்
பொன்றாமுன்னம்பொன்றுதியென்றானுரைபொய்யா
நின்றாலன்றோநிற்பதுவாய்மைநிலையம்மா. (ஙக)

* விரவார்-தன்னோடு கவ்வாதவர்; எனவே பகைவர்.

எற்பெற்ருளும்யானுமெனைத்தோர்வகையாலு
நிற்பெற்ருட்குநிற்குநினைப்புப்பிழையாமல்
நற்பொற்ருேளாய்நல்லவர்பேணாநனிநிற்குஞ்
சொற்பெற்ருன்மற்ருருயிர்பேணித்துறவேமால். (௩௨)

ஓதுங்காலப்பல்பொருண்முற்றுற்ருெருவாத
வேதஞ்சொல்லுந்தேவரும்வீயுங்கடைவீயாய்
* மாதங்கந்தின் றுய்ந்திவ்வனத்தின் றலைவாழும்
பூதங்கொல்லப்பொன் றுதிபோலும்பொருளுண்டோ. (௩௩)

கேட்டார்கொள்ளார்கண்டவர்பேணூர்கிளர்போரில்
தோட்டார்கோதைச்சோர்குழறன்னைத்துவளாமல்
மீட்டானென்னும்பேரிசைகொள்ளான்செருவெல்ல
மாட்டான்மரண்டானென் றபின்மேலும்வசையுண்டோ. (௩௪)

தணிக்குந்தன்மைத்தன்றெனினன் றித்தகைவாளால்
கணிக்குத்தன்மைத்தல்லவிடத்திற்கனல்பூதம்
பிணிக்குங்கையும்பெய்யிலவாயும்பிழையாமல்
துணிக்கும்வண்ணங்காணுதிதுன்பந்துறவென்ருன். (௩௫)

இராமலக்ஷ்மணர் கவந்தனிடத்தில் ஒருவரினும் ஒருவர் முற்பட்டுச் செல்லுதல்.

என்ருமுன்னேசொல்லுமிளங்கோ † விறையோற்கு
முன்னேசெல்லமுன்னவன்ஞனினுமுந்தத்
தன்னேரில்லாந்தம்பிதடுப்பான்பிறரில்லை
யன்ஞேகண்டாரும்பருவெய்துற்றழுதாரால். (௩௬)

வேறு.

யாரென்று கவந்தன்கேட்க இருவரும்கோபங்கொள்ளுதல்.

இனையராகியவிருவருமுகத்திருகண்போற்
கனையும்வார்கழல்வீரர்சென் றணுகலுங்கவந்தன்
வினையினெய்தியவீரர்நீர்யாவர்கொலென்ன
நினையுநெஞ்சினரிமைத்திலருருத்தனர்நின்ருர். (௩௭)

இராமலக்ஷ்மணர் கவந்தனது தோள்களை வெட்டித்தள்ளுதல்.

அழிந்துளாராலரிகழர்தனரென்னையென் றழன்ருன்
பொழிந்தகோபத்தன்புதுப்பொறிமயிர்ப்புறம்பொடிப்ப
விழுங்குவேனெனவீங்கலும்வின்னுறவீரர்
எழுந்ததோள்களைவாள்களாலரிந்தனரிட்டார். (௩௮)

* மாதங்கம் யானை. மதங்கமுனிவரிடத்தினின்று உண்டானதென்றுபொருள். † இறையோன் கடவுள் இதற்கு (யாவர் மனத்திலுந்) தங்குகிறவனென்று பொருள். இறுத்தல்-தங்குதல் இறைமையுடையோனென்றுமாம் இறைமை-தலைமை.

கைகளற்று கவந்தனது தோற்றம்.

கைகளற்றுகுருதியாறொழுகியகவந்தன்
மெய்யின்மேற்கொடுகிழக்குறப்பெருநதிவிரவும்
மையமாநெடுந்தாழ்வரைத்தனிவரைதன்னோ
டையம்நீங்கியபேரெழிலுவமையனானன். (ருகூ)

அரக்கவுருவை யொழித்துக் கவந்தன்
நல்லுருப்பெற்று ஆகாயத்தில்விளங்குதல்.

ஆழுநாயகனங்கை யிற்றீண்டியவதனால்
மூளுஞ்சாபத்தின் முந்தியதீவினை முடித்தான்
தோளும்வாங்கியதோமுடையாக்கையைத்துறவா
நீளநீங்கியபறவையின் விண்ணுறநிமிர்ந்தான். (சுo)

கவந்தன் ஆகாயத்தி னின்று இராமனைத்துதித்தல்.

விண்ணினின்றவன் * விரிஞ்சனேமுதலினர்யார்க்கும்
கண்ணினின்றவனிவனெனக்கருத்துறவுணர்வான்
எண்ணிலன்னவன்குணங்களைவாய்திறந்திசைத்தான்
† புண்ணியம்பயக்கின்றமிழியரியதெப்பொருளே. (சுக)

வேறு.

ஈன்றவனோவெப்பொருளுமெல்லைதீர்நல்லறத்தின்
சான்றவனோதேவர்தவத்தின்றனிப்பயனோ
மூன்றுகடவாய்முளைத்தெழுந்தமூலமோ
தோன்றியிருவினையென்சாபத்திடர்தொடைத்தாய். (சுஉ)

‡ மூலமேயில்லாமுதல்வனேநீமுயலும்
கோலமேயார்க்குந்தெரிவரியகொள்கைத்தால்
ஆலமோவாலினடையோவடைகிடந்த
பாலனோவாதிப்பரனோபகராயே. (சுங)

காண்பார்க்குங்காணப்படுபொருட்குங்கண்ணாகிப்
பூண்பாய்போல்நிற்றியால்யாதொன்றும்பூணாதாய்
மாண்பாலுலகையயிற்றொளித்துவாங்குதியால்
ஆண்பாலோபெண்பாலோவப்பாலோவெப்பாலோ. (சுச)

---

* விரிஞ்சன்-பூதங்களைப் படைக்கிறவனென்றும் (அன்னப்)பறவையால் தாங்கப்படுகிறவனென்றும்அவையவப்பொருள். † புண்ணியமாவது பகவானுடைய அநுக்கிரகம். ‡ மூலமேயில்லா மூதல்வனே யாவும்உன்னிடத்தினினறுதோன்றினவேயன்றி நீ ஒன்றினினறுந்தோன்றாதவன் என்பது கருத்து.

ஆதிப்பிரமனுநீயாதிப்பரமனுநீ
ஓதியுறுபொருளுக்கப்பாலுண்டாயினுநீ
சோதிச்சுடர்ப்பிழம்புநீயென்றுசொல்லுகின்ற
வேதமுறைசெய்தால்வெள்காரோவேறுள்ளார். (சரு)

எண்டிசையுந்திண்சுவராவேழ்நிலைவகுத்த
வண்டப்பெருங்கோயிற்கெல்லாமழகுடைய
மண்டலங்கண்மூன்றின்மே * லென்றுமலராத
புண்டரிகமொட்டின்பொருட்டேபுரையம்மா. (சசு)

மண்பாலமரர்வரம்பருங்காணாத
வெண்பாலுயர்ந்தவெரியோங்குநல்வேள்வி
யுண்பாய்நீயூட்டுவாய்நீயிரண்டுமொக்கின்ற
பண்பாரறிவார்பகராய் † பரமேட்டி. (சஎ)

நிற்குநெடுநீத்தநீரின்முளைத்தெழுந்த
மொக்குளேபோலமுரணிற்றவண்டங்கள்
ஒக்கவுயர்ந்துனுளேதோன்றியொளிக்கின்ற
பக்கமறிதற்கெளிதோபரம்பரனே. (சஅ)

நின்செய்கைகண்டுநினைந்தனவோநீண்மறைகள்
உன்செய்கையன்னவைதான்சொன்னவொழுக்கினவோ
என்செய்தேன்முன்னமறஞ்செய்கையெய்தினார்
பின்செல்வதில்லாப்பெருஞ்செல்வநீதந்தாய். (சகூ)

மாயப்பிறவிமயனீக்கிமாசிலாக்
காயத்தைநல்கித்துயரின்கரையேற்றிப்
பேயொத்தேன்பேதப்பிணக்கறுத்தவெம்பெருமான்
நாயொத்தேனென்னநலனிழைத்தேனென்றான். (ருo)

ஆகாயத்தில் திவ்வியசரீரத்தோடு நின்றகவந்தனைஇராமன்காணுதல்.

என்றாங்கினிதியம்பியின்றறியக்கூறுவனேல்
ஒன்றாதுதேவருறுதிக்கெனவுன்னாத்
தன்றாயைக்கண்ணுற்றகன்றனையதன்மையனாய்
நின்றானைக்கண்டானெறிநின்றார்நேர்நின்றான். (ருக)

*, என்று மலராத-எப்பொழுதும் மலராத, சூரியனால் மலராததுமாம் என்று-சூரியன்: பெயர்ச்சொல்.

† பரமேஷ்டி-பரமே எல்லாவுலகத்திலுஞ் சிறந்ததாகிய பரமபதத்தில், ஸ்தி-இருப்பவனென்பது பொருள்.

இராமன் இலக்குமணனுக்குக் கவந்தனைச் சுட்டிக்காட்ட
அவன் கவந்தனை நீயாரென்று வினவல்.

பாராயிளையவனே பட்டவிவன்வேறேயோர்
பேருளன்றானுயொளியோங்கும்பெற்றியனாய்
நேராகாயத்தின்மிசைநிற்கின்றானீயிவனை
யாராயெனவவனுமார்கொலோநீயென்றான். (௫௨)

வேறு.

கவந்தன் வரலாறு கூறுதல்.

சந்தப்பூணலங்கல்வீரதனுவெனுநாமத்தேனோர்
கந்தர்ப்பன்சாபத்தாலிக்கடைப்படுபிறவிகண்டேன்
வந்துற்றீர்மலர்க்கைதீண்டமுன்னுடைவடிவம்பெற்றேன்
எந்தைக்குமெந்தைநீரேயிசைப்பதுகேண்மினென்றான். (௫௩)

கவந்தன் இராமலக்ஷ்மணரை நோக்கி உங்களுக்குத்
துணை வேண்டும் என்றல்.

கணையுலாஞ்சிலையினீரைக்காக்குநரின்மையேனும்
இணையிலாடன்னைநாடற்கேயனசெய்தற்கேற்கும்
புணையிலாதவற்குவேலைபோக்கரிதன்னதேபோற்
றுணையிலாதவர்க்குமின்னாபகைப்புலந்தொலைத்துநீக்கல். (௫௪)

பழிப்பறுநிலைமையாண்மைபகர்வதென்பதுமபீடத்
துழிப்பெருந்தகைமைசான்றவந்தணனுயிர்த்தவெல்லாம்
அழிப்பதற்கொருவனானவண்ணலுமறிதிரன்றே
ஒழிப்பருந்திறல்பல்பூதகணத்தொடுமுறையுமுண்மை. (௫௫)

கவந்தன் சீதையைத்தேட நல்லுபாயஞ் சொல்லுதல்.

ஆயதுசெய்கையென்பதறத்துறைநெறியினெண்ணித்
தீயவர்ச்சேர்க்கிலாதுசெவ்வியோர்ச்சேர்த்துச்செய்தல்
தாயினுமுயிர்க்குநல்குஞ்சவரியைத்தலைப்பட்டன்னா
ளேயதோர்நெறியினெய்தி * யிரலையின்குன்றமேறி. (௫௬)

கதிரவன்சிறுவனாயகனகவாணிறத்தினானை
எதிரெதிர்தழுவிநட்பினினிதமர்ந்தவனினீண்ட

* இரலையின் குன்றம்-ருசியமுக பருவதம். ருச்யமுகம் என்னும் வடமொழிபெயர்க்கு-கலைமான்கள் ஒலியாமல் வாழப்பெறும் மலை என்று பொருள். அப்பெயர்க்கு ஞாபகமாக அதில் ருசியம் என்னும் முதல்மொழியின் பொருளை மாத்திரம்எடுத்துக்கொண்டு அம்மலையை இரலையின்குன்றம் என்று குறித்தார். இது நாமை கதேசே நாமக்கிரகணத்தின் பாற்படும்-இரலை-கலைமான்.

வெதிர்பொருந்தோளிஞனைநாடுதல்விழுமிதென்றான்
அதிர்கழல்வீரர்தாமுமன்னதேயமைமவதானர். (ருஎ)

கவந்தன் செல்ல இராமலக்ஷ்மணர் அன்றிரவில்
மதங்காச்சிரமம் அடைதல்.

ஆனவன்றொழுதுவாழ்த்தியந்தரமெழுந்துபோனான்
மானவக்குமரர்தாமுமத்திசைவழிக்கொண்டேகிக்
கானமுமலேயுநீங்கிக்கங்குல்வந்திறுத்தகாலே
யானையினிரட்டையென்னமதங்கனதிருக்கைசேர்ந்தார். (ருஅ)

கo-வது. கவந்தன்படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-கக௪கூ.

---

பதினோராவது

## சவரிபிறப்பு நீங்குபடலம்.

மதங்காச்சிரம வர்ணனை

கண்ணியதருதற்கொத்தகற்பகதருவுமென்ன
உண்ணியநல்குஞ்செல்வமுறுநறுஞ்சோலைஞாலம்
எண்ணியவின்பமன்றித்துன்பங்களில்லையான
புண்ணியம்புரிந்தோர்வைகுந்துறக்கமேபோன்றதன்றே. (க)

இராமன் சவரியைக் கண்டு க்ஷேமம் விசாரித்தல்.

அன்னதாமிருக்கைநண்ணியாண்டுசின்றளவில்காலந்
தன்னையேநினைந்துநோற்குஞ் † சவரியைத்தலைப்பட்டன்னாட்
கின்னுரையருளித்தீதின்றிருந்தனைபோலுமென்றான்
முன்னிவற்கிதுவென்றெண்ணலாவதோர்மூலமில்லான். (உ)

சவரி இராமனுக்கு விருந்துசெய்துபசரித்தல்.

ஆண்டவளன்பினேத்தியழுதிழியருவிக்கண்ணள்
மாண்டதென்மாயப்பாசம்வந்ததுவரம்பில்காலம்
பூண்டமாதவத்தின்செல்வம்போயதுபிறவியென்பாள்
வேண்டியகொணர்ந்துநல்கவிருந்துசெய்திருந்தவேலே. (ங)

பிரமன்முதலியோர் தன்னைத் தத்தம் உலகிற்கு வரும்படி
அழைத்தனரென்று சவரிகூறுதல்.

ஈசனுங்கமலத்தோனுமிமையவர்யாருமெந்தை
வாசவன்றானுமீண்டுவந்தனர்மகிழ்ந்துநோக்கி

---

† சவரி-இவள்மதங்கரது சிஷ்யர்களுக்கு உபசாரஞ்செய்துகொண்டு அவ்வாச்சிரமத்திலேயே வசித்து வந்த துறவறம் பூண்ட ஓர் தவப்பெண்

ஆசறுதவத்திற்கெல்லையணுகியதிராமற்காய
பூசனைவிரும்பியெம்பாற்போதுதியென்றுபோனார். (ச)

சவரி இராமனைப்புகழ இராமன் அவளைநோக்கிமுகமன்கூறல்

இருந்தனனெந்தைநீயீண்டெய்துதியென்னுந்தன்மை
பொருந்திடவின்றுதானென்புண்ணியம்பூத்ததென்ன
அருந்தவத்தரசிதன்னையன்புறநோக்கிநங்கள்
வருந்துறுதுயரந்தீர்த்தாயம்மனைவாழியென்றார். (ரு)

சவரி அவர்களுக்குச் சுக்கிரீவனுள்ள விடத்துக்குச் செல்லும் வழியைக்கூறுதல்.

அனகனுமிளையகோவுமன்றவணுறைந்தபின்றை
வினையறுநோன்பினளுமெய்ம்மையிஞேக்கிவெய்ய
துனைபரித்தேரோன்மைந்தனிருந்தவத்துளக்கில்குன்ற
நினைவரிதாயற்கொத்தநெறியெலாநினைந்துசொன்னாள். (சு)

சவரி கூறினவற்றை இராமன் கேட்டல்.

வீட்டினுக்கமைவதானமெய்ந்நெறிவெளியிற்றாகக்
காட்டுறுமறிஞரென்னவன்னவள்கழறிற்றெல்லாங்
கேட்டனனென்பமன்னோகேள்வியாற்செவிகண்முற்றுந்
தோட்டவருணர்வினுண்ணுமமுதத்தின்சுவையாய்நின்றான். (எ)

சவரிமுத்தியடைய இராமலக்ஷ்மணர் அப்பாற்செல்லுதல்.

பின்னவளுழன்றுபெற்றயோகத்தின்பெற்றியாலே
தன்னுடலுறந்துதானத்தனிமையினினிதுசார்ந்தா
ளன்னதுகண்டவீரரதிசயமளவின்றெய்திப்
பொன்னடிக்கழல்களார்ப்பப்புகன்றமாநெறியிற்போனார். (அ)

இராமலக்ஷ்மணர் பம்பைப் பொய்கையை யடைதல்.

தண்ணெனுங்கானுங்குன்றுந்திசைகளுந்தவிரப்போனார்
மண்ணிடைவைகளோறும்வரம்பிலாமாக்களாடக்
கண்ணியவினைகளென்னுங்கட்டழல்கதுவலாலே
புண்ணியமுருகிற்றன்னபம்பையாம் * பொய்கைபுக்கார். (கூ)

கக-வது சவரிபிறப்பு நீங்குபடலம் முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கஉ0ரு.

ஆரணியகாண்டம்.

முற்றுப்பெற்றது.

* பொய்கை-மானிடராக்காத நீர் நிலை.

# ஆரணியகாண்டம்

## படலங்களின் அட்டவணை.



ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

நான்காவது,

# கிட்கிந்தாகாண்டம்.

தெய்வப்புலமைக்

கம்பநாட்டாழ்வார்

அருளிச்செய்தது.

இஃது

சென்னை இராசதானி வித்தியாசாலைத்

தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய

இயற்றமிழாசிரியர்

கோ - இராசகோபால பிள்ளையவர்கள்

மாணாக்கரும்

சென்னை வேப்பேரி எஸ் - பி - ஜி - ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

திருமயிலை - சண்முகம்பிள்ளையவர்களால்

பார்வையிடப்பட்டு

பிருங்கிமாநகரம்

வேம்புலிமுதலியாரவர்கள் குமாரர்

நமசிவாயமுதலியாரவர்களால்

தமது

சென்னை - சூளை

நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1913.



ஹரிஓம்

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்

# ஸ்ரீ மத் கம்ப ரா மா ய ண ம்.

நான்காவது

# கிட்கிந்தாகாண்டம்.

## முதலாவது - பம்பாநதிப்படலம்.

### தனியன்.

தரலாற்றுங்கவிச்சக்கரவர்த்திசெய்யுடாஞழமுடைமைநோக்கி
* வரலாற்றுமுறையிள்மும்மைத்தமிழுணர்ந்தமுதியோருமற்றுளோரும்
மூரலாற்றுங்கடற்பாரிற்கம்பசூத்திரமுதுசொன்மொழிபவன்றேற்
கொலாற்றுமால்சங்கமொக்குமெனின்யாம்வேறெருப்பியம்பலாமால்.

காப்பு.

மூன்றுருவெனக்குணமும்மையாமுதற்
ரேன்றுருவெவையுமிம்முதலைச்சொல்லுதற்
கேன்றுருவமைந்தவுமிடையினின்றவர்
சான்றுருவுணர்வினுக்குலகந்தாயினன். (க)

### நூல்.

இதுமுதலிருபத்தோரு பாடல் பம்பையின்வருணனை.

தேன்படிமலராதுசெங்கண்வேங்கைமாத்
தான்படிகின்றதுதெளிவுசான்றது
மீன்படிமேகமும்படிந்துவேலைநீர்
வான்படிந்துலகிடைக்கிடந்தமாண்பது. (உ)

ஈர்ந்தநுண்பளிங்கெனத்தெளிந்தவீர்ம்புனல்
பேர்ந்தொளிர்நவமணிபடர்ந்த † பித்திகை
சேர்ந்துழிச்சேர்ந்துழிநிறத்தைச்சேர்தலான்
ஓர்ந்துணர்வில்லவருள்ளமொப்பது. (ஙு)

குவான்மணித்தடந்தொறும்பவளக்காலிவர்
கவானரசன்னமும்பெடையுங்காண்டவில்
தவாநெடுகானகந்தயங்குமீனொடும்
உவாமதியுலப்பிலவுதித்ததொப்பது. (ச)

---

* வரலாற்றுமுறையாவது அகத்தியன் வழிவந்த அருந்தமிழ்க் கலைகளை முதுமொழிப் பெரும்புலவர் மாட்டெப்புலமைசிரம்புங்காறும் பயிறல்.
† பித்திகை-கரை.

ஓதநீருலகமுமுயிர்கள்யாவையும்
வேதபாரகரையும்விதிப்பவேட்டநாள்
சீதம்வீங்கு * வரியைச்செகுக்கும்வாறொரு
காதிகாதலன்றருகடலினன்னது. (௫)

எற்பொருநாகர்தமிருக்கையீதெனக்
கிற்பதோர்காட்சியதெளினுங்கீழுறக்
கற்பகமனையவக்கவிஞர்நாட்டிய
சொற்பொருளாமெனத்தோன்றல்சான்றது. (௬)

களனவிலன்னமேமுதலகண்ணகன்
தளமலர்ப்புள்ளொடுதயங்கவின்னதோர்
கிளவியென்றறிவருங்கிளர்ச்சித்தாதலான்
வளநமர்க் † கூலமேபோலுமாண்பது. (௭)

அரிமலர்ப்பங்கயத்தன்னமெங்கணும்
புரிகுழல்புக்கிடம்புகல்கிலாமையாம்
திருமுகநோக்கலமிறந்துதீர்துமென்
றெரிபுகுவனவெனத்தோன்றுமீட்டது. (௮)

காசடைவிளக்கியகாட்சித்தாயினும்
மாசடைபேதைமையினைடமயக்கலான்
ஆசடைநல்லுணர்வனையதாமெனப்
பாசடைவயின்றொறும்பரந்தபண்பது. (௯)

களிப்படாமனத்தவன்காணிற்கற்பெனும்
கிளிப்படாமொழியவள்விழியின்கேளெனத்
துளிப்படாநயனங்களிப்பச்சோருமென்
‡ றொளிப்படாதாயிடையொளிக்குமீனது. (௧௦)

கழைபடுமுத்தமுங்கலுழிக்கார்மத
மழைபடுதாளமுமணியும்வாரிநேர்
இழைபடர்ந்தனையநீரருவியெய்தலான்
குழைபடுமுகத்தியர்கோலமொப்பது. (௧௧)

பொங்குவெங்கடகரிபொதுவிஞடலின்
கங்குலினெதிர்பொருகலவிப்பூசலின்
அங்கநொந்தலசியவிலையினுய்வளை
மங்கையவர்வடிவெனவருந்துமெய்யது. (௧௨

விண்டொடர்நெடுவரைத்தேனும்வேழத்தின்
வண்டுளர்நறுமதமழையுமண்டலான்

* உவரி-கடல். † கூலம்-கடைவீதி. ‡ ஒளிப்படாது-விளங்காமல்.

உண்டவர்பெருங்களியுறலினேதியர்
தொண்டையங்கனியிதழ்த்தோன்றல்சான்றது. (கங)

ஆரியமுதலியபதினெண்பாடையிற்
* பூரியரொருவழிபுகுந்தபோன்றன
ஓர்கிலகிளவிகளொன்றொடொப்பில
சோர்விலவிளம்புபுட்டுவன்றுகின்றது. (கச)

தானுயிருறத்தனிதழுவும்பேடையை
ஊனுயிர்பிரிந்தெனப்பிரிந்தவோதிமம்
வானரமகளிர்தம்வயங்குநூபுரத்
தேனுகும்மழலையைச்செவியினேற்பது. (கரு)

ஈறிடலரியமால்வரைநின்றீர்த்திழி
ஆறிடுவிரையகிலாரமாதியா
ஊறிடவொண்ணகருரைத்தவொண்டளச்
சேறிடு † பாணியிற்றிகழுநேரது. (கசு)

வேறு.

நவ்விநோக்கியரிதழ்நிகர்குமுதத்துநறுந்தேன்
வவ்வுமாந்தரிற்களிமயக்குறுவன ‡ மகரம்
எவ்வநீங்கியபிறப்பினேடிறப்பிலைவயென்னக்
கவ்வுமீனெடுமுழுகுவவெழுவன § கரண்டம். (கஎ)

கவளயானையன்னாற்கந்தக்கடிநறுங்கமலத்
தவளைமீகிலமாவதுசெய்துமென்றருளித்
திவளவன்னங்கடிருநடைகாட்டுவ செங்கண்
குவளைகாட்டுவதுவரிதழ்காட்டுவகுமுதம். (கஅ)

பெய்கலன்களினிலங்கொளிமருங்கொடுபிறழ
வய்கலும்புனல்குடைபவர்வானரமகளிர்
¶ செய்கையன்னங்களேந்தியசேடியரென்னப்
பொய்கையன்னங்களேந்தியபூங்கொம்பர்பொலிய. (ககூ)

எலுநீர்நிழலிடையிடையெறித்தலிற்படிகம்
போலும்வார்புனல்புகுந்துளவாமெனப்பொங்கி
ஆலுமீன்கணமஞ்சினவலம்வரவஞ்சிச்
§ கூலமாமரத்திருஞ்சிறைபுலர்த்துவகுரண்டம். (உ0)

அங்கொர்பாகத்தினஞ்சனமணிநிழலடையப்
பங்குபெற்றொளிர்பதுமராகத்தொளிபரப்பக்

* பூரியர்-இழிஞர். மிக்கோருமாம். † பாணி-நீர். ‡ மகரம்-ஓர்மீன்.
§ கரண்டம்-நீர்க்காகம். ¶ செய்கையன்னம்-அன்னப்பாவை.
§ கூலம் - கரை.

கங்குலும்பகலும்மெனப்பொலிவெய்துகரைய
மங்கைமார்தடமுலேயெனப்பொலிவன * வாளம். (உக)

வலிநடத்தியவாளெனவாளேகள்பாய
நிலேநடத்தியதிரைதொறுமுருள்வனநீர்நாய்
கலிநடைக் † கழைக்கண்ணுளரெனநடங்கவினப்
பொலிவுடைத்தெனத்தேரைகள்புகழ்வனபோலும். (உஉ)

இராமன்பம்பையைக்கண்டு சானகியைநினைந்து புலம்புதல்.

அன்னதாகியவகன்புனற்பொய்கையையணுகிக்
கன்னியன்னமுங்கமலமுமுதலியகண்டான்
தன்னினீங்கியதளிரியற்குருகினன்றளர்வான்
உன்னுநல்லுணர்வொடுங்கிடப்புலம்பிடலுற்றான். (உ௩)

வேறு.

வரியார்மணிக்கால்வாளமேமடவன்னங்காளேனைநீய்கத்
தரியாணடந்தாளில்லவளேற்றளர்ந்தபோதுந்தகவேயாம்
எரியாநின்றவாருயிருக்கிரங்கினலீதிசையன்றே
பிரியாதிருந்தேற்கொருமாற்றம்பேசிற் ‡ பூசல்பெரிதாமோ. (உ௪)

வண்ணநறுந்தாமரைமலரும்வாசக்குவளேநாண்மலரும்
புண்ணினெரியுமொருநெஞ்சம்பொதியுமருந்திற்றரும்பொய்காய்
கண்ணுமுகமுங்காட்டுவாய்வடிவுமொருகாற்காட்டாயோ
உண்ணுமென்னினைஃதுதவாது $ லோவிஞருமுயர்ந்தாரோ. (உ௫)

விரிந்தகுவளேசேதாம்பல்விரைமென்கமலங்கொடிவள்ளே
தரங்கங்கெண்டைவராலாமையென்றித்தகையதமைநோக்கி
மருந்தினனேயாளவயங்களவைநிற்கண்டேன்வல்லரக்கன்
அருந்தியகல்வான்சிந்தினவோவாவியுரைத்தியாமன்றே. (உ௬)

ஓடாநின்றகளிமயிலேசாயற்கொதுங்கியுள்ளழிந்து
கூடாதாரிற்றிரிகின்றனீயுமாகங்குளிர்ந்தாயோ
தேடாநின்றவென்னுயிரைத்தெரியக்கண்டாய்சிந்தையுவந்
தாடாநின்றாயாயிரக்கணுடையாய்க்கொளிக்குமாறுண்டோ. (உ௭)

§ அடையீரெனிமொருமாற்றமறிக்கதுரையீரன்னத்தின்
பெடையீரொன்றும்பேசீரோபிழையாதாற்குப்பிழைத்தீரோ
நடைநீரழியச்செய்தாரேநடுவிலாதார்நனியவரோ
டுடையீர்பகைதானுமைநோக்கிரிவக்குன்றேனைமுனிவீரோ. (உஅ)

---

* வாளம்- சக்ரவாளப்பறவை. கழிக்கூத்தர்.
‡ பூசல்- இரைசல். $ உலோவிஞர் - உலோபகுணமுடையார்.
§ அடையீரெனினும்- அடைகாத்திருப்பவராயினும்.

பொன்பால்பொருவும்விரையல்லிபுல்லிப்பொலிந்தபொலந்தாது
தன்பாற்றழுவுங்குழல்வண்டு * தமிழ்ப்பாட்டிசைக்குந்தாமரையே
என்பாலில்லையப்பாலோவிருப்பாரல்லர்விருப்புடைய
உன்பாலில்லையென்றக்காலொளிப்பாரோடுமுறவுண்டோ. (உகூ)

ஒருவாசகத்தைவாய்திறந்திட்டுதவாய்பொய்கையுள்ளொடுங்கும்
திருவாயனையசேதாம்பற்கயலேகிடந்தசெங்கிடையே
வெருவாவெதிர்நின்றமுதுயிர்க்கும்வீழிச்செவ்விக்கொழுங்கனிவாய்
தருவாயவ்வாயின்னமிழ்துந்தண்ணென்மொழியுந்தாராயோ. (௩0)

அலக்கணுற்றேற்குற்றதவற்கடைவுண்டொன்றேகொடிவள்ளாய்
மலர்க்கொம்பனையமடைச்சீலைதகாதேமற்றென்றில்லையால்
பொலக்குண்டலமுங்கொடுங்குழையும்புனைதாழ்முத்தின்பொற்றோடும்
விலக்கிவந்தாய்விளம்பாதேயின்னும்பூசல்விரும்புதியோ. (௩க)

பஞ்சுபூத்தவிரற்பதுமம்பவளம்பூத்தவடிவாளென்
நெஞ்சுபூத்ததாமரையினிலயம்பூத்தாணிறம்பூத்த
மஞ்சுபூத்தமலர்பூத்தகுழலாள்கண்போன்மணிக்குவளாய்
நஞ்சுபூத்ததாலென்னநகுவாயென்னைநலிவாயோ. (௩௨)

வேறு.

என்றயாவுயிர்க்கின்றவனேடவிழ்
கொன்றையாவிப்புறத்திவைகூறியான்
பொன்றயாதும்புகல்கிலேபோலுமால்
வன்றயாவிலியென்னவருந்தினன். (௩௩)

வாரளித்தழைமாப்பிடிவாயிடைக்
காரளிக்கலுழிக்கருங்கைம்மலை
நீரளிப்பதுநோக்கினனின்றனன்
பேரளிக்குப்பிறந்தவில்லாயினன். (௩௪)

இளையோனிராமனை நீராடிநெடியோற்றொழுகென்றல்.

ஆண்டவள்ளலையன்பெனுமாரணி
பூண்டதம்பிபொழுதுகழிந்ததால்
ஈண்டரும்பினரேய்ந்துன்னிசையென
நீண்டவன்கழுழ்நெடியோயென்றான். (௩௫)

இராமன்பம்பையின்முழ்குதல்,

அரசுமவ்வழிநின்றரிதெய்தியத்
திரைசெய்தீர்த்தமுஞ்செய்தவவுண்மையால்
வரைசெய்மாமதவாரணநாணுற
விரைசெய்பூம்புனலாடனைமேயினன். (௩௬)

* தமிழ்ப்பாட்டு-இனிமையானபாட்டு.

நீத்தநீரினெடியவன்மூழ்கலும்
தீத்தகாமத்தெறுகதிர்த்தீயினால்
* காய்த்திரும்பைக்கருமகக்கம்மியன்
தோய்த்ததண்புனலொத்ததத்தோயமே. (௩௭)

வேறு.

சூரியனஸ்தமித்தல்.

ஆதிநானன்னமாயருமறைகள்பாடினான்
நீடுநீர்முன்னைநாளெறிமுறையி † னேமிதாள்
சூடினான்முனிவர்தந்தொகுதிசேர்சோலைவாய்
மாடுதான்வைகினானெரிகதிரும்வைகினான். (௩௮)

சந்திரனுதித்தல்.

அந்தியாள்வந்துதானணுகவங்கணுகுருச்
சந்தவார்கொங்கையாடனிமைதனிநாயகன்
சிந்தியாநொந்துதேய்பொழுதுதெறுசீதநீர்
இந்துவானூர்ந்துவானெரிகதிரினனென. (௩௯)

வேறு.

அனைத்துயிரு மொடுங்கல்

பூவொடுங்கினவிரவுபுள்ளொடுங்கினபொழில்கள்
மாவொடுங்கினமானுமிலையொடுங்கினகிளிகள்
நாவொடுங்கினமயில்கணடமொடுங்கினகுயில்கள்
கூவொடுங்கினபிளிறுகுரலொடுங்கினகளிறு. (௩௦)

அனைத்துயிருமுறங்கல்.

மண்டுயின்றனநிலையமலைதுயின்றனமறுவில்
பண்டுயின்றனவிரவுபணிதுயின்றனபகரும்
விண்டுயின்றன † கழுதும்விழிதுயின்றனபழுதில்
கண்டுயின்றலநெடியகடறுயின்றனகளிறு (௪௧)

இரவுநீங்குதல்.

பொங்கிமுற்றியவுணர்வுபுணர்தலும்புகையினொடு
பங்கமுற்றனையவினைபரிவுறும்படிமுடிவில்
கங்குலிற்றதுகமலமுகமெடுத்ததுகடலின்
வெங்கதிர்க்கடவுளெழ $ விமலன்வெந்துயரினெழ. (௪௨)

---

* காய்த்து-காய்ச்சு. எதுகைநயநோக்கிச் சகரந்தகரமாகின்றதென்ப
† நேமி-ஈண்டு சந்தியாகாலத்தையுடைய சூரியனென்று பொருள்.
† கழுது-பிசாசு. $ விமலன்-அழுக்கில்லாதவனான இராமன்.

பம்பைக்கரையினின்றும் இராமனுமிளையோனுஞ்
சீதையை நாடிப்போதுதல்.

காலையேகடிதுவரவேகினர்கடல்கவினு
சோலையேமலைதழுவுகானநீணெறிதொலைய
ஆலையேய்துழனியகளுடரார்கலியமிழ்து
போலவேயுரைசெய்புனமானைநாடுதல்புரிஞர், (சந)

க - பம்பாநதிப்படலம் முற்றிற்று.

ஆட திருவிருத்தம். சச.

---

இரண்டாவது.

## அநுமப்படலம்.

---

இராமனுமிளையோனும் வானரரிருந்தமலையேறுதலு மவரஞ்சுதலும்.

எய்தினர்சவரிநேடிதேயமால்வரையெளிதின்
நொய்தினேறினரதனிஞேன்மைசேர் * கவியரசு
செய்வதோர்கிலனிவர்கடெவ்வராமெனவெருவி
உய்துமாமெனவிரைவிஞேடினன்மலைமுழையின். (க)

காலின்மாமதலையிவர்காண்மிஞேகறுவுடைய
வாலியேவலின்வரவினர்கடாம்வரிசிலையர்
நீலமால்வரையனையர்நீதியாயநினைதியென
† மூலமோர்சிலர்மறுகியோடினர்முழையதனின். (உ)

தாரனீலனைமருவுதாமமாருதியைமுதல்
வீரரோடிரவிசுதன்மேருமால்வரையையநிகர்
பாரமாமலையினொருபாகமோடுதல்புரிய
ஆரமார்பருமதனினுகுமாறுறல்கருதி. (ங)

மானைநாடுதல்புரிஞர்வாலியேவலின்வருதல்
ஆனவாறெனமறுகியாவிசோர்சிலையர்தொடர்
ஏனைவானரர்சிலருமேகிமாமுழையின்முழு
ஞானநாதரையறிவிஞுடிமாருதிமொழியும். (ச)

அவ்விடத்தவர்மறுகியஞ்சிநெஞ்சழியமைதி
வெவ்விடத்தினைமறுகுதேவர்தானவர்வெருவல்
‡ தவ்விடத்தினிதருளுந்தாழ்சடைக்கடவுளென
இவ்விடத்திடையிருமினஞ்சலென்றிடையுதவி. (ரு)

---

* கவியரசு சுக்ரீவன். † மூலம்-காரணம். ‡ தவ்விடத்து கொண்டவிடத்து.

அஞ்சனைக்கொருசிறுவனஞ்சனக்கிரியனைய
மஞ்சனைக்குறுகியொரு * மாணவப்படிவமொடு
வெஞ்சினத்தோழிலர்தவமெய்யர்கைச்சிலையரென
நெஞ்சயிர்த்தயன்மறையநின்றுகற்பினினினையும். (௬)

† தேவருக்கொருதலைவராமுதற்றேவரெனின்
மூவர்மற்றிவரிருவர்மூரிவிற்கரரிவரை
யாவரொப்பவருலகின்யாதிவர்க்கரியபொருள்
கேவலத்திவர்நிலைமைதேர்வதெக்கிழமைகொடு. (௭)

சிந்தையிற்சிறிதுதுயர்சேர்வுறத்தெருமரலின்
நொந்தையர்தனரனையர்நோவுயச்சிறியரலர்
அந்தரத்தமரரலர்மானுடப்படிவர்மயர்
சிந்தனைக்குரியபொருடேடுதற்குறுநிலையர். (அ)

தருமமுந்தகவுமிவர்தனமெனுந்தகையரிவர்
கருமமும்பிறிதொர்பொருள்கருதியன்றதுகருதின்
அருமருந்தனையதிடையழிவுவந்துளததனை
இருமருங்கினுநெடிதுதருவுகின்றனரிவர்கள். (௯)

கதமெனும்பொதுமையிலர்கருணையின்கடனையர்
இதமெனும்பொருளலதொரியல்புணர்ந்திலரிவர்கள்
‡ சதமனஞ்சுறுநிலையர்தருமனஞ்சுறுசரிதர்
மதனனஞ்சுறுவடிவர்மறலியஞ்சுறுவிறலர். (௰)

வேறு.

என்பனபலவுமெண்ணியிருவரையெய்தநோக்கி
அன்பினனுருகுகின்றவுள்ளத்தனூர்வத்தோரை
முன்பிரிந்தனையர்தம்மைமுன்னினுனென்னநின்றுன்
தன்பெருங்குணத்தாற்றன்னிற்றுனலதொப்பிலாதான். (௧௧)

தன்கன்றுகண்டவன்னதன்மையதறுகட்பேழ்வாய்
மின்கன்னுமெயிற்றுக் $ கோண்மாவேங்கையென்றினையவேயும்
பின்சென்றுகாதல்கூரப்பேழ்கணித்திரங்குகின்ற
என்கன்றுகின்றவெண்ணிற்பற்பலவிவரையம்மா. (௧௨)

மயின்முதற்பறவையெல்லாமணிநிறத்திவர்கண்மேனி
வெயிலுறற்கிரங்கிமீதாவிருஞ்சிறைப்பந்தர்வீசி
எயில்வகுத்தெய்துகின்றவினமுகிர்கணங்களெங்கும்
பயில்வுறத்திவலைசிந்திப்பயப்பயத்தழுவும்பாங்கர். (௧௩)

* மாணவப்படிவம் பிரமசாரியுருவம். † தேவர்க்கொரு தலைவராகிய முதற்றேவராவார் அயனரியதிரெனன்பார். ‡ சதமன் இந்திரன். சதமன் யுவென்பது சதமனென நின்றது. $ கோண்மாவேங்கை கொலையினையுடைய பெரிய வேங்கை.

காயெரிகன லுங்கற்கள்களுடைமலர்களேபோல்
தூயசெங்கமலபாதந்தோய்தொறுங்குழைந்துதோன்றும்
போயினதிசைகடோறுமரனொடுபுல்லுமெல்லாம்
சாய்வுறுந்தொழுவபோலிங்கிவர்களோதருமமாவார். (கச)

துன்புனைத்துடைத்துமாயத்தொல்வினைதன்னைநீக்கித்
தென்புலத்தன்றமீளாநெறியுய்க்குந்தேவரோதாம்
என்பெனக்குருகினிறதிவர்கின்றதளவில்காதம்
அன்பினுக் * கவதியில்லையடைவென்கொலறிதறேற்றேன். (கரு)

இவ்வழியெண்ணியாண்டவ்விருவருமெய்தலோடும்
செவ்வழியுள்ளத்தானுந்தெரிவுறவெதிர்சென்றெய்திக்
கவ்வையின்றாகநுங்கள்வரவெனக்கருணையோனும்
எவ்வழிநீங்குயோய்நீயாரெனவிளம்பலுற்றான். (கசு)

அனுமான் தன்வரலாறுகூறல்.

மஞ்செனந்திரண்டகோலமேனியமகளிர்க்கெல்லாம்
நஞ்செனத்தகையவாகிநளிரிரும்பனிக்குத்தேம்பாக்
கஞ்சமொத்தலர்ந்தசெய்யகண்ணயான் † காற்றின்வேந்தற்
கஞ்சனைவயிற்றில்வந்தேனுமமுமநுமனென்றான். (கஎ)

இம்மலையிருந்துவாழுமெரிகதிர்ப் ‡ பரிதிச்செல்வன்
செம்மலுக்கேவல்செய்வேன்றேவநும்வரவுநோக்கி
விம்மலுற்றனையானேவவினவியவந்தேனென்றான்
எம்மலைக்குலமுந்தாழவிசைசுமந்தெழுந்ததோளான். (கஅ)

மாற்றமஃதுரைத்தலோடும்வரிசிலைக்குரிசினமைந்தன்
தேற்றமுற்றிவனினுங்குச்செவ்வியோரின்மைதேறி
ஆற்றலுநிறைவுங்கல்வியமைதியுமறிவுமென்னும்
வேற்றுமையிவனோடில்லையாமெனவிளம்பலுற்றான். (கசு)

இராமனிளையவனிடமனுமான்சொல்லாற்றலை
வியந்துகூறல்

இல்லாதவுலகத்தெங்குமிங்கிவனிசைகள்கூரக்
கல்லாதகலையும்வேதக்கடலுமேயென்னுங் § காட்சி
சொல்லாலேதோன்றிற்றன்றேயார்கொலிச்சொல்லின்செல்வன்
வில்லார்தோளிளையவீரவிரிஞ்சனோவிடைவல்லானோ. (உ௦)

§ மாணியாம்படிவமன்றுமற்றிவன்வடிவமைந்த
ஆணியிவ்வுலகுக்கெல்லாமென்னலாமாற்றற்கேற்ற

* அவதி-எல்லை † காற்றின்வேந்தன்-வாயுதேவன். ‡ பரிதிச்செல்வன் செம்மல் சூரியகுமாரனான சுக்கிரீவன். § காட்சி-அற்புதம் § மாணி-பிரமசாரி.

சேணுயர்பெருமைதன்னைச்சிக்கறத்தெளிந்தேன்பின்னர்க்
காணுதிமெய்ம்மையென்றுதம்பிக்குக்கழறிக்கண்ணன். (உக)

மற்றுமிவ்வுலகத்துள்ளமுனிவர்வானவர்களாரிச்
சொற்றிறமுடையார்மற்றைச்சுருதியின்றொகுதியாவும்
முற்றறிதருமிம்மாணிமொழிக்கெதிர்முதல்வராய
பெற்றியிர்மூவர்க்கேயும்பேராற்றலரிதுமன்னே. (உஉ)

அநுமனைச் சுக்கிரீவனைக்காட்டென வீராமன்கேட்டல்

எவ்வழியிருந்தானசொன்னகவிக்குலத்தரசன்யாங்கள்
அவ்வழியவனைக்காணு * மருத்தியாலணுகவந்தேம்
இவ்வழிநின்னைநிற்றவெமக்குநீயின்சொலன்ன
செவ்வழியுள்ளத்தோனைக்காட்டுதிதெரியவென்றான். (உங)

அவ்வாறயிற் சுக்கிரீவன்தவச்செல்வ நல்லதென்றல்.

மாதிரப்பொருப்போடோங்கிவரம்பிலாவுலகின்மற்றிப்
† பூதரப்புயத்துவீரர்நும்மொக்கும்புனிதர்யாரே
ஆதரித்தவனைக்காண்டற்கணுகினிரென்னினன்றான்
தீதவித்தமையைச்செய்தவச்செல்வநன்றே. (உச)

இரவிதன்புதல்வன்றன்னை ‡ யிந்திரன்புதல்வனென்னும்
$ பரிவிலன்சீறப்போந்துபருவரற்கொருவனாகி
அருவியங்குன்றினென்னோடிருந்தனனவன்பாற்செல்வம்
வருவதோரமைவின்வந்தீர்வரையினும்வளர்ந்ததோளீர். (உரு)

அஞ்சினர்க்கபயஞ் மளித்தலே சிறந்ததென்னல்.

ஓடுங்கலிலுலகம்யாவுமுவந்தனவுதவிவேள்வி
தொடங்கினமற்றுமுற்றத்தொல்லறந்துணிவரன்றேல்
கொடுங்குலப்பகைஞனுகிக்கொல்லியவந்தகூற்றை
நடுங்கினர்க்கபயநல்குமதனினுநல்லதுண்டோ. (உசு)

எம்மையேகாத்திரென்றற்கெளிதரோவிமைப்பிலதோர்
தம்மையேமுதலிட்டான்றசராசரஞ்சமைந்தவாற்றல்
மும்மையேமுலகுங்காக்குமுதல்வர்நீர்முருகர்செவ்வி
உம்மையேபுகல்புக்கேமுக்கி § தின்வருமுறுதியுண்டோ. (உஎ)

யாரெனவிளம்புகேனெங்குலத்தலைவற்கும்மை
வீரநீர்பணித்திரென்றான்மெய்ம்மையின்வேலிபோல்வான்
வார்கழலிளையவீரன்மரபுளிவாய்மையாதும்
சோர்விலனிலைமையெல்லாந்தெரிவுறச்சொல்லலுற்றான். (உஅ)

* அருத்தி-விருப்பம். † பூதரம்-மலை ‡ இந்திரன்-புதல்வன் வாலி.
$ பரிவு - அன்பு § இதின்-இதனினும்.

### இதுமுதல் நான்குபாடல் இளையோனனுமானுக்கு இராமன் வரலாறுரைத்தல்.

சூரியன்மரபிற்றோன்றிச்சுடர்நெடுநேமியாண்ட
ஆரியனமரர்க்காகியசுரரையாவியுண்ட
வீரியன்வேள்விசெய்துவிண்ணுலகோடுமாண்ட
காரியன்கருணையன்னகண்ணனக்கவிகைமன்னன். (௨௯)

புயறருமதத்திண்கோட்டுப்புகர்மலைக்கிறையையீர்ந்து
மயறருமவுணர்யாருமடிதரவரிவிற்கொண்ட
இயறரும்புலமைச்செங்கோன்மனுமுதல்யாருமொவ்வாத்
தயரதன்கனகமாடத்தடமதிலயோத்திவேந்தன். (௩௦)

அன்னவன்சிறுவனுமிவ்வாண்டகையன்னையேவத்
தன்னுடையுரிமைச்செல்வந்தம்பிக்குத்தகவினல்கி
நன்னெடுங்கானஞ்சேர்ந்தாஞமமுமிராமனென்பான்
இந்நெடுஞ்சிலைவலானுக்கேவல்செய்யடியன்யானே. (௩௧)

### இராமனடிகளில் அனுமான்வணங்குதல்.

என்றவன்றோற்றமாதியிராவணனிழைத்தமாயப்
புன்றொழிலுறுதியாகப்புகுந்துளபொருள்களெல்லாம்
ஒன்றுமாண்டொழிவுறாமலுணர்த்தினனுணர்தக்கேட்டு
நின்றவக்காலின்மைந்தனெடிதுவந்தடியிற்றாழ்ந்தான். (௩௨)

### அனுமான் றன்னை வாளரரிலொருவனென்றல்.

தாழ்தலுந்தகாதசெய்ததென்னைநீதருமமன்றால்
கேழ்விநூன்மறைவலாளாவென்றனனென்னக்கேட்ட
பாழியந்தடந்தோள்வீரமாருதிபதுமச்செங்கண்
ஆழியாயடியேன்றானு * மரிக்குலத்தொருவனென்றான். (௩௩)

### அனுமான் றன்னுருவெய்திநிற்றல்.

மின்னுருக்கொண்டவில்லோர்வியப்புறவேதநன்னூல்
பின்னுருக்கொண்டதென்னும்பெருமையாம்பொருளுந்தாழப்
பொன்னுருக்கொண்டமேருபுயத்திற்குமுவமைபோதாத்
தன்னுருக்கொண்டுநின்றான்றருமத்தின்றனிமைதீர்ப்பான். (௩௪)

கண்டிலனுகமூன்றுங்காலினுற்கடந்துகொண்ட
புண்டரீகக்கணாழிப்புரவலன்பொலன்கொள்சோதி
குண்டலவதனமென்றாற்கூறலாந்தகைமைத்தன்றால்
பண்டைநூற்கதிரோன்சொல்லப்படித்தனன்படிவமம்மா. (௩௫)

---

* அரி-குரங்கு.

அனுமனுருவினைக் கண்டவிராமன் வியப்பெய்தியுரைத்தல்.

தாட்படாக்கமலமன்ன தடங்கணான் றம்பிக்கம்மா
கேட்படாநின் றகேள்விக்களர்படாதாகியென் றும்
நாட்படாமறைகளாலுநவைபடாஞானத்தாலும்
கோட்படாப் * பதமேயையகுரக்குருக்கொண்டதென்றான். (ங௬)

சுக்கிரீவன்றன்மை சொல்லரிதென்னல்.

நல்லனநிமித்தம்பெற்றேநம்பியைப்பெற்றேநம்பால்
இல்லையேதுன்பமானதின்பமுமெய்திற்றின்னும்
வில்லினுயிவனைப்போலாங்கவிகுலக்கும்சில்வீரன்
சொல்லினாலேவல்செய்வானவனிலைசொல்லறபாற்றே. (ங௭)

அனுமன்விடைபெற்றுச் செல்லுதல்.

என்றகமுவந்துகோலமுகமலர்ந்தினிதினின்ற
குன்றுறழ்தோளினானைநோக்கியக்குரக்குசீயம்
சென்றவன்றன்னையின்னேகொணர்கின்றேன்சிறிதுபோது
வென்றியிரிருத்திரென்றுவிடைபெற்றுவிரைவிற்போனான். (ங௮)

உ-வது அனுமப்படல முற்றிற்று.

ஆ படலம் உ-க்கு திருவிருத்தம் - அக.

---

மூன்றவது.

# நட்புக்கோட்படலம்.



வேறு.

போனமந்தரமணிப்புயநெடும்புகழினான்
ஆனதன்பொழுதினத்தரசன்மாடணுகினான்
யானுமுன்குலமுமிவ்வுலகுமுயந்தனமெனு
மானவன்குணமெலாநினையுமாமதியினான். (க)

வாலியைக்கொல்லுங் காலன் வந்தானென்றல்.

மேலவன்றிருமகற்குரைசெய்தான்விரைசெய்தார்
வாலியென்றளவிலாவலியினானுயிர்தெறக்
காலன்வந்தனனிடர்க்கடல்கடந்தனமெனா
ஆலமுண்டவனினின்றருநடம்புரிகுவான். (உ)

---

* பதம்-பதத்திலுள்ளபொருள்.

இதுமுதற் கங-பாடல்கள் இராமசரிதத்தினை அனுமான்சுக்ரீவற்குணர்த்தல்.

மண்ணுளார்விண்ணுளார்மாறுளார்வேறுளார்
எண்ணுளார்திசையுளாரியலுளாரிசையுளார்
கண்ணுளாராயினார்பகையுளார்மழிநெடும்
புண்ணுளாராருயிர்க்கமிழ்தமேபோலுளார். (௩)

* சூழிமால்யானையார்தொழுகழற்றயாதன்
பாழியாலுலகெலாமொருவழிப்படரவாழ்
ஆழியான்மைந்தர்பேரளிவினாழகினார்
ஊழியாரெளிதினிற்கரசுதந்துதவுவார். (௪)

நீதியார்கருணையின்னெறியினார்நெறிவயிற்
பேதியாநிலைமையாரெவரினும்பெருமையார்
போதியாதளவிலாவுணர்வினார்புகழினார்
காதிசேய்தருகடற்கடவுள்வெம்படையினார். (௫)

வேவிகக்சினவுதாடகைவிளிந்துருளவிற்
கோலியக்கொடுமையாள்புதல்வரைக்கொன்றுதன்
காலியற்பொடியினானெடியகற்படிவமாம்
† ஆலிகைக்கரியபெருருவளித்தருளினான். (௬)

நல்லுறுப்பமையுநம்பியரின்முன்பவனயர்
தெல்லுறுப்பெரியபேரெழுசுடர்க்கடவுடன்
பல்லிறுத்தவன்வலிக்கமைதிரியம்பகமெனும்
வில்லிறுத்தருளினான்மிதிலைபுக்கனையநாள். (௭)

‡ உளைவயப்புரவியானுதவவுற்றொருசொலால்
அளவில்கற்புடையசிற்றவைபணித்தருளலால்
வளையுடைப்புணரிசூழ்மகிதலத்திருவெலாம்
இளையவற்குதவிபித்தலையெழுந்தருளினான். (௮)

○ தெவ்விராவகைநெடுஞ்சிகைவிராமழுவினான்
அவ்விராமனையுமாவலிதொலைத்தருளினான்
இவ்விராகவன்வெகுண்டெழுமிராவனையனும்
வெவ்விராதனையிராவகைதுடைத்தருளினான். (௯)

கரன்முதற்கருணையற்றவர்கடற்படையொடும்
சிரமுகச்சிலைகுனித்துதவுவார்திசையுளார்
பரமுகப்பகைதுமித்தருளுவார்பரமராம்
அரன்முதற்றலைவருக்கதிசயத்திறலினார். (௧0)

* சூழி-முகபடாம். † ஆலிகை-அகலிகை ‡ உளைபுறமயிர் ○ தெவ்-பகை.

ஆயமானுகர்தாழாழியானேயலால்
காயமானுயினுன்யாவனேகாவலா
நீயமானேர்தியானேருமாரீசனுர்
மாயமானுயினுன்மாய * மானுயினன். (கக)

உக்கவந்தமுருடற்பகைதுறந்துயர்பதம்
புக்கவந்தமுநமக்குரைசெயும்புரையவோ
திக்கவந்தரநெடுந்திரள்கரஞ்சினவுதோள்
அக்கவந்தனுநினேந்தமரர்தாழ்சவரிபோல். (கஉ)

முனேவரும்பிறருமேன்முடிவரும்பகலெலாம்
இனேயர்வந்துறுவரென்றியறவம்புரிகுவார்
வினேயெனுஞ்சிறைதுறந்துயர்பதம்விரவினுர்
எனேயரென்றுரைசெய்கேனிரவிதன்சிறுவனே. (கங)

மாயையான்மதியிலாநிருதர்கோன்மனேவியைத்
தீயகாநெறியினுய்த்தனனவட்டேவோர்
நீயையாதவமிழைத்துடைமையானெமேனம்
தூயையாவுடையையாலுறவினேத்துணிகுவார். (கச)

தந்திருந்தனரருட்டகைநெடும்பகைஞனும்
இந்திரன்சிறுவனுக்கிறுதியின்றிசைதரும்
புந்தின்பெருமையாய்போதரென்றுரைசெய்தான்
மந்திரங்கெழுமுதூன்மரபுணர்ந்துதவுவான். (கரு)

சுக்கிரீவன் இராமனேயடைதல்.

அன்னவாமுறையெலாமறிஞிறைலுணர்குவான்
உன்னேயேயுடையவெற்கரியதெப்பொருளரோ
பொன்னேயேபொருவுவாய்போதெனப்போதுவான்
தன்னேயேயனேயவன்சரணம்வந்தனுகினுன். (கசு)

வேறு.

கண்டனனென்பமன்னேகதிரவன்சிறுவன்காமர்
குண்டலந்துறந்தகோலவதனமுங்குளிர்க்குங்கண்ணும்
புண்டரிகங்கள்பூத்துப்புயறழீஇப்பொலிந்ததிங்கள்
மண்டலமுதயஞ்செய்தமரகதக்கிரியனுனே. (கஎ)

நோக்கினுனெடிதுநின்றுனெடிவருங்கமலத்தண்ணல்
ஆக்கியஉலகமெல்லாமன்றுதொட்டின்றுகாறும்
பாக்கியம்புரிந்தவெல்லாம் † குவிந்திருபடிவமாகி
மேக்குயர்தடந்தோள்பெற்றுவீரராய்விளைந்தவென்பான். (கஅ)

* மான்-மகான். † குவிந்து ஒன்றுகி.

தேறினனமரர்க்கெல்லாந் * தேவராந்தேவரன்றே
மாறியிப்பிறப்பில்வந்தார்மானுடராகிமன்னோ
ஆறுகொள்சடிலத்தானுமயனுமென்றிவர்களாதி
வேறுளகுழுவையெல்லாமானுடம்வென்றதன்றே. (கக)

இராமன் சுக்கிரீவனை இருக்கப்பணித்தல்.

எனநினைந்தினையவெண்ணியிவர்கின்றகாதலோதக்
கனைகடற்கரைநின்றேறக்கண்ணிணைகளிப்பநோக்கி
அனகனைக்குறுகினனவ்வண்ணலுமருத்திகூரப்
புனைமலர்த்தடக்கைநீட்டிப்போந்தினிதிருத்தியென்றான். (உ0)

சுக்கிரீவராமர்கள் சந்திரசூரியரை ஒத்தாரென்னல்.

தவாவலியரக்கரென்னுந் † தகாவிருட்பகையைத்தள்ளிக்
குவாலறநிறுத்தற்கேற்றகாலத்தின்கூட்டமொத்தார்
அவாமுதலறுத்தசிந்தையநகனுமரியின்வேந்தும்
உவாவுறவந்துகூடிமுடிபெதியிரவியொத்தார். (உக)

தவமு முயற்சியும் கல்வியு ஞானமு மொத்தாரென்னல்.

கூட்டமொத்திருந்தவீரர்குறித்ததோர்பொருட்குமுன்னாள்
ஈட்டியதவமும்பின்னர்முயற்சியுமியைந்ததொத்தார்
மீட்டும்வாளரக்கரென்னுந்தீவினைவேரின்வாங்கக்
கேட்டுணர்கல்வியோடுஞானமுங்கிடைத்ததொத்தார். (உஉ)

சுக்கிரீவன்யானே தவமுடையேனென்றல்.

ஆயதோரவதியின்கணருக்கன்சேயரசைநோக்கித்
தீய்வினைதீயநோற்றாரென்னின்யார்செல்வநின்னை
நாயகமுலகுக்கெல்லாமென்னலாநலமிக்கோயை
மேயினன்விதியோலல்லின்மேவலாகாதென்னென்றான். (உங)

இராமன்சவரியா லுன்னையுணர்ந்தேய்தினே னென்னல்.

மய்யறுதவத்தின்வந்தசவரியிம்மலையினீவர்
தெய்தினையிருந்ததன்மையியம்பினள்யாங்களுற்ற
‡ கய்யறுதுயரநின்னாற்கடப்பதுகருதிவந்தேம்
அய்யநிற்றீருமென்னவரிகுலத்தரசன்சொல்வான். (உச)

சுக்கிரீவன் யானுனக்கபய மென்றல்.

முரணுடைத்தடக்கையோச்சிமுன்னவன்பின்வந்தேனை
உருணிலைப்புரத்தின்காறமுலகெங்குந்தொடரவிக்குன்

* தேவாரந்தேவர்-தலைவராகிய பரமபதநாதர்.
† தகா-தகுதியற்ற. ‡ கையறுதுயரம்-பிரிதற்றுன்பம்.

றாணுடைத்தாகியுய்ந்தேனருயிர்துறக்கலாற்றேன்
* சரணுனைப்புகுந்தேனென்னைத்தாங்குதருமமென்றான். (உ௫)

என்றவக்குரக்குவேந்தையிராமனுமிரங்கிநோக்கி
உன்றனக்குரியவின்பதுன்பங்களுள்ளமுன்னாள்
சென்றனபோக்கிமேல்வந்துறுவனதீர்ப்பலன்ன
நின்றனவெனக்குநிற்கு † நேரெனமொழியுநேரா. (உ௬)

இராமன் சுக்கிரீவனை நீயே யென்தோழனென்றல்.

மற்றினியுரைப்பதென்னேவானிடைமண்ணினின்னைச்
‡ செற்றவரென்னைச்செற்றார்தீயரேயெனினுமுன்னோ
டுற்றவரெனக்குமுற்றாருன்கிளையெனதென்காதற்
சுற்றமுன்சுற்றநீயேயின்னுயிர்த்துணைவனென்றான். (உஎ)

அம்மொழிகேட்டனைவருமகிழல்.

ஆர்த்தனகுரக்குச்சேனையஞ்சனைச்சிறுவன்மேனி
போர்த்தனபொடித்தரோமப்புளகங்கள்பூவின்மாரி
தூர்த்தனர்விண்ணோர்மேகஞ்சொரிந்தன § வநகன்சொன்ன
வார்த்தையெக்குலத்துளோர்க்குமறையினுமெய்யென்றுன்னா. (உஅ)

ஆண்டெழுந்தடியிற்றாழ்ந்தவஞ்சனைச்சிங்கம்வாழி
தூண்டிரட்டடந்தோண்மைந்ததோழனுநீயும்வாழி
ஈண்டுநுங்கோயிலெய்தியினிதினிருக்கைகாண
வேண்டுநும்மருளென்னென்றான்வீரனும்விழுமிதென்றான். (உ௯)

இராமனுமிளையோனுஞ் சோலைபுகுதல்.

ஏகினனிரவிசேயுமிருவருமரிகளேறும்
ஊகவெஞ்சேனைசூழவறத்தொடர்ந்துவந்துவாழ்த்த
நாகமுநரந்தக்காவுநளினவாவிகளுநண்ணிப்
போகபூமியையுமேசும்புதுமலர்ச்சோலைபுக்கார். (௩௦)

ஆரமுமகிலுந்துன்றியவிர்பளிக் ○ கறையளாவி
நாரநின்றனபோற்றோன்றிநவமலர்த்தடங்களூடும்
பாரமுமருங்குந்தெய்வத்தருவுநீர்ப்பண்ணையாடும்
சூரரமகளிருசறுவன்றியசும்மைத்தன்றே. (௩௧)

வேறு.

அயர்வில்கேள்விசாலறிஞர்வேலைமுன்
பயல்வில்கல்வியார்பொலிவில்பான்மைபோல்

* சரண்-அடைக்கலம். † நேரென-சமானமென்று. ‡ செற்றவர்-சீறினோர்கொன்றோருமாம். § அநகன்-பாவமில்லாதவன், ○ அறை-பாறை.

குயிலுமாமணிக்குழுவுசோதியால்
வெயிலும்வெள்ளிவெண்மதியுமேம்படா. (௩௨)

ஏயவன்னதாமினியசோலைவாய்
மேயமைந்தருங்கவியின்வேந்தனும்
தூயபூவணைபொலிந்துதோன்றினர்
ஆயவன்பினோடளவளாவுவார். (௩௩)

இராமன் நீராடிக் கந்தமூலபலாதியருந்தல்.

கனியுங்கந்தமுங்காயுந்தூயநன்
இனியயாவையுங்கொணரயாரினும்
புனிதன்மஞ்சனத்தொழில்புரிந்துபின்
* இனிதிருந்துநல்விருந்துமாயினன். (௩௪)

இராமன் சுக்கிரீவனை நீயுமனைவியைப்பிரிந்தவனோவெனல்

விருந்துமாகியம்மெய்ம்மையன்பினோ
டிருந்துநோக்கிநின்றிறைவன்சிந்தியாப்
பொருந்துநன்மனைக்குரியபூவையைப்
பிரிந்துளாய்கொலோநீயும்பின்னென்றான். (௩௫)

அனுமான் சுக்கிரீவன் சரிதமுரைத்தல்.

என்றவேலையினெழுந்துமாருதி
குன்றுபோலநின்றிருகைகூப்பினன்
நின்றநீதியாய்நெடிதுகேட்டியால்
ஒன்றுநானுனக்குரைப்பதுண்டெனா. (௩௬)

இதுமுதல்-௩௩ பாடல்களால் வாலியின் வரலாறுணர்த்தல்.

நாலுவேதமாநவையிலார்கலி
வேலியன்னதோர்மலையின்மேலுளான்
† சூலிதன்னருட்டுறையின்முற்றினன்
வாலியென்றுளான்வரம்பிலாற்றலான். (௩௭)

கழறுதேவரோடவுணர்கண்ணினின்
றுழலுமந்தரத்துருவுதேயமுன்
அழலுங்கோளராவகடுதேய்விடச்
சுழலும்வேலையைக்கடையுந்தோளினன். (௩௮)

நிலனுநீருமாய்நெருப்புங்காற்றுமென்
றுலவில்பூதநான்குடையவாற்றலான்
அலையின்வேலைசூழ்கிடந்தவாழிமா
மலையினின்றுமிம்மலையின்வாவுவான். (௩௯)

* இனிதருந்தி-என்றும்பாடம். † சூலி-சிவபெருமான்.

கிட்டினார்பொரக்கிடைக்கினன்னவர்
பட்டநல்வரம் * பாகமெய்துவான்
எட்டுமாதிரத்திறுதிநாளுமுற்
றட்டமூர்த்திதாள்பணியுமாற்றலான். (௪0)

கால்செலாதவன்முன்னர்க்கந்தவேள்
வேல்செலாதவன்மார்பின்வென்றியான்
வால்செலாதவாயலதிராவணன்
கோல்செலாதவன்குடைசெலாதரோ. (௪௧)

மேருவேமுதற்கிரிகள்வேரொடும்
பேருமேயவன் † பேருமேனெடும்
காரும்வானமுங்கதிருநாகமும்
தூருமேயவன்பெரியதோள்களால். (௪௨)

பார்கிடந்தவெம்பன்றிபண்டைநாள்
நீர்கடைந்தபேராமைநேருளான்
‡ மார்பிடந்த § மாவெனினுமற்றவன்
தார்கிடந்ததோட்கையவல்லதோ. (௪௩)

படர்ந்தநீணெடுந்தலைபரப்பிமீ
தடர்ந்துபாரம்வந்துறவநந்தனுங்
கிடந்துதாக்குமிக்கிரியைமேயினான்
நடந்துதாங்குமிப்புவனநாளெலாம். (௪௪)

கட 0 லுளைப்பதுங்கால்சலிப்பதும்
மிடலருக்கர்தேர்மீதுசெல்வதும்
தொடரமற்றவன்சுழியினெற்றலான்
அடலின்வெற்றியாயயலினாவவோ. (௪௫)

வெள்ளமேழுபத்துளதுமேருவைத்
தள்ளலானதோளரிகடானையான்
உள்ளமின்றியவ்வுயிரையஞ்சலால்
வள்ளலேயவன்வாழுவாழுமால். (௪௬)

மழையிடிப்புறுவயவெஞ்சியமா
முழையிடிப்புறுமூரண்வெங்காலுமென்
றழைதுடிப்புறுச்சார்வுறுதவன்
விழைவிடத்தின்மேல்விளிவையஞ்சலால். (௪௭)

---

* பாகம்-பாதி. † பேருமேல்-அசைவானானல். ‡ மார்பிடந்த-இரணியன் மார்பைப்பிளந்த. § மா-சிங்கம் 0 உளைப்பது-ஒலிப்பது.

மெய்க்கொள்வாலிஞன்மிடலிராவணன்
தொக்கதோளுறத்தொடர்படுத்தநாள்
புக்கிலாதவெம்பொழியாத்தநீர்
உக்கிலாதவேறுலகம்யாவதோ. (சஅ)

இந்திரன்றனிப்புதல்வனின்னளிச்
சந்திரன்றழைத்தனையதன்மையான்
அந்தகன்றனக்கரியவாணையான்
முந்திவந்தனனிவதினின்மொய்ம்பிஞய் (சகூ)

அன்னவன்னெமக்கரசனுகவே
பின்னவன் * னிளம்பதமியற்றுநாள்
முன்னவன்குலப்பகைஞன்முட்டிஞன்
மின்னெயிற்றுவாளவுணன்மேன்மையான். (ருo)

முட்டிநின்றவன்முரணுரத்தினேர்
ஒட்டவஞ்சிநெஞ்சுலையவோடிஞன்
வட்டமண்டலத்தரிதுவாழ்வெஞு
எட்டரும்பெரும் † பிலனுளெய்திஞன். (ருக)

எய்துகாலையப்பிலனுளெய்தியான்
நொய்தினங்கவற்கொணர்வெஞென்மையாப்
செய்திகாவனீசிறிதுபோழ்தெஞ
வெய்தினெய்திஞன்வெகுளிமேயிஞன். (ருஉ)

ஏகிவாலியு ‡ மிருதுவேழொடேழ்
வேகவெம்பிலந்தடவிவெம்மையான்
மோகவென்றிமேன்முயல்பின்வைகிடச்
சோகமெய்தினன்றனைதுளங்கிஞன். (ருங)

அழுதழுங்குறுமிவனையன்பினில்
தொழுதிரந்துநின்றெழிலிதாதலால்
எழுதுவென்றியாயரசுசெய்கெனப்
பழுதிதென்றனன்பரியுநெஞ்சிஞன். (ருச)

என்றுதானுமவ்வழியிரும்பிலம்
சென்றுமுன்னவற்றேடுவேனவற்
கொன்றுளான்றனைக்கொலவொணுதெனிற்
பொன்றுவேனெனுப்புகுதன்மேயிஞன். (ருரு)

---

* இளம்பதம்-இளவரசு. † பிலம்-பாதாளம்.

‡ இருதுவேழொடேழ்-இரண்டேகால்வருடம்.

தடுத்துவல்லவர்தணிவுசெய்துநோய்
எடுத்தவேலையோரியைவினவியவர்
தடுத்தகாவலு * மரிகளாணையால்
கொடுத்ததுண்டிவன்கொண்டனன்கொலாம். (ருசு)

அன்னநாளின்மாயாவியப்பிலத்
தின்னவாயினூடெய்துமென்னயாம்
பொன்னின்மால்வரைப்பொருப்பொழித்துவே
றுன்னுகுன்றெலாமுடனடுக்கினேம். (ருஎ)

சேமமவ்வழிச்செய்துசெங்கதிர்க்
கோமகன்றனைக்கொண்டுவந்தியாம்
மேவுகுன்றின்மேல்வைகும்வேலைவாய்
ஆவியுண்டன † னவனையன்னவன். (ருஅ)

ஒளித்தவன்னுயிர்க்கள்ளையுண்டுளம்
களித்தவாவியுங்கடிதினெய்தினன்
விளித்துநின்றுவேறுரைபெறானிருந்
தளித்தவாறுநன்றிளவலாரென. (ருகூ)

வால்விசைத்துவான்வளிகிமிர்ந்தெனக்
கால்விசைத்தவன்கடிதி ‡ னெற்றலும்
நீனிறத்துவிண்ணெடுமுகட்டவும்
வேலைபுக்கவும்பெரியவெற்பெலாம். (சூ௦)

ஏறினனவனெவருமஞ்சுறச்
சீறினனெடுஞ்சிகரமெய்தினன்
வேறிலாதவன்புதல்வமெய்ம்மையால்
ஆறினனும்வந்தடிவணங்கினன். (சூக)

வணங்கியண்ணனின்வரவிலாமையான்
உணங்கியுன்வழிப்படரவுன்னுவேற்
§ கிணங்கரின்மையாலிறைவநும்முடைக்
கணங்கள்காவலுன்கடன்மையென்றனர். (சூ௨)

ஆணையஞ்சிவ்வரசையெய்திவாழ்
நாணிலாதவென்னவையைநல்குவாய்
பூணுலாவுதோளிணைபொருவெனக்
○ கோணினனெடுங்கொடுமைகூறினன். (சூ௩)

* அரிகளாணையால்-வானரங்களின் கட்டளையால்.
† அவனை-அம்மாயாவியை. ‡ எற்றலும்-அடித்தலும். § இணங்கர்-சகாயிகள்.
○ கோணினன்-வணங்கினன் கோபித்தானென்றுமாம்.

அடல்கடந்ததோளவனையஞ்சிவெங்
குடல்கலங்கியெங்குலமொடுங்கமுன்
கடல்கடைந்தவெங்கரதலங்களால்
உடல்கடைந்தனனிவனுலைந்தனன். (சுச)

இவனுலைந்துலைந்தெழுகடற்புறத்
தவனியுங்கடந்தெயிலடைந்தனன்
கவனமொன்றிலான்கால்கடாயென
அவனிவேலையேழரியின்வாலினன். (சுரு)

என்றுகான்மகனியம்ப * வீசனும்
நன்றுநன்றெனுநனிதொடர்ந்துபின்
சென்றவாலிமுன்சென்றசெம்மலுன்
அன்றுவாவுதற்கறிந்தனன்கொலாம். (சுசு)

இராமன் வாலிசுக்கிரீவர்களின் போரினையுரையெனவுரைத்தல்.

இனையவாவியந்திளவறன்றெனும்
வனையும்வார்கழற்கருணைவள்ளல்பின்
பினையவீரர்செய்தமையியம்பெனப்
புனையும்வாகையான்புகறன்மேயினன். (சுஎ)

நக்கரக்கடற்புறத்துநண்ணுநாள்
செக்கர்மெய்த்தனிச்சோதிசேர்கலாச்
சக்கரப்பொருப்பிற்றலைக்குமப்
பக்கமுற்றவன்கடிதுபற்றினன். (சுஅ)

பற்றியஞ்சலன்பழியின்வெஞ்சினம்
முற்றிநின்றதன்முரண்வலிக்கையால்
எற்றுவானெடுத்தெழுதலும்பிழைத்
† தற்றமொன்றுபெற்றிவனகன்றனன். (சுகூ)

எந்தைமற்றவனெயிறதுக்குமேல்
அந்தகற்குமோரரணுமில்லையால்
இந்தவெற்பின்வந்திவனிருந்தனன்
முந்தையுற்றதோர்சாபமுண்மையால். (எ0)

உரிமையென்றிவற்குரியதாரமாம்
அருமருந்தையுமவன்விரும்பினன்
இருமையுந்துறந்திவனிருந்தனன்
சருமமிங்கிதேகடவுளென்றனன். (எக)

---

* ஈசனும்-இராமனும். † அற்றம்-மறைவு.

வேறு.

வாலிசரிதங்கேட்ட விராமன் கோபமெய்தல்.

பொய்யிலாதவன்வரன்முறையிம்மொழிபுகல
அய்யனாயிரம்பெயருடையமலர்க்குமமலன்
வய்யறுங்கியவாயிதழ்துடித்ததுமலர்க்கண்
செய்யதாமரையாம்பலம்போதெனச்சிவந்த. (எஉ)

திறத்துமாமறையய * னொடைம்முகன்பிறர்தேடிப்
புறத்தகத்துணரரியதன்பொலனடிக்கமலம்
உறச்சிவப்பவித்தரைமிசையுறலறமாக்கல்
மறத்தைவீட்டுதலன்றியேபிறிதுமற்றுண்டோ. (எ௩)

ஈரநீங்கியசிற்றவைசொற்றனனென்ன
ஆரம்வீங்குதோட்டம்பிக்குத்தன்னரசுரிமைப்
பாரமீந்தவன் † பரிவிலனொருவன்றனிளையோன்
தாரம்வௌவினனென்றசொற்றரிக்குமாறுளதோ. (எச)

வாலியைக்கொன்ற ரசுந்தாரமு மளிப்பேனென்றல்.

உலகமேழினோடேழும்வந்தவனுயிர்க்குதவி
விலகுமென்னினும்வில்லுடைவாளியின்வீட்டித்
‡ தலைமையோடுநின்றாரமுமுனக்கின்றுதருவேன்
புலமையோயவனுறைவிடங்காட்டென்றுபுகன்றான். (எரு)

சுக்கிரீவாதியர் மந்திராலோசனை செய்தல்.

எழுந்துபேருவகைக்கடற்பெருந்திரையிரைப்ப
அழுந்துதுன்பத்துக்கரைகண்டனனனையான்
விழுந்ததேயினிவாலிதன்வலியெனவிரும்பா
மொழிந்தவீரற்கியாமெண்ணுவதுண்டெனமொழிந்தான். (எசு)

அனுமான் தேற்றங்கூறல்.

அனையவாண்டுரைத்தனுமனேமுதலியவமைச்சர்
நினைவுங்கல்வியுநீதியுஞ்சூழ்ச்சியுநிறைந்தார்
எனையரன்னவரோடும்வேறிருந்தனனிரவி
தனயனவ்வழிச்சமீரணன்மகனுரைதருவான். (எஎ)

உன்னினேனினதுள்ளத்தினுள்ளத்தையுரவோய்
அன்னவாலியைக்காலனுக்களிப்பதோ ○ ராற்றல்
இன்னவீரர்பாலில்லையென்றயிர்த்தனையினியான்
சொன்னகேட்டவைகடைப்பிடிப்பாயெனச்சொன்னான். (எஅ)

* ஐம்முகன்-உருத்திரன், ‡ பரிவிலன்-அன்பிலன்.
‡ தலைமையோடு-அரசுரிமையுடன். ○ ஆற்றல்-வன்மை.

திருமாலேஇராமனெனல்.

சங்குசக்கரக்குறியுள தடக்கையிற்றாளில்
எங்குமித்தனையிலக்கணம்யாவர்க்குமில்லை
செங்கண்விற்கரத்திராமனத்திருநெடுமாலே
இங்குதித்தனனீண்டறநிறுத்துதற்கின்னும். (எக)

செறுக்கும்வன்றிறற்றிரிபுரந்தீயெழச்சினவிக்
கறுக்கும்வெஞ்சினக்காலன்றன் * காலமுங்காலால்
அறுக்கும்புங்கவனாண்டபோராடகத்தனிவில்
இறுக்குந்தன்மையம்மாயவற்கன்றியுமெளிதோ. (அ0)

என்னையீன்றவனிவ்வுலகியாவையுமீன்றான்
தன்னையீன்றவற்கடிமைசெய்தவமஃதையா
உன்னையீன்றவற்குறுபதமுளதெனவுரைத்தான்
இன்னதோன்றலேயவனிதற்கேதுவுண்டிறையோய். (அக)

துன்புதோன்றியபொழுதுடன்றோன்றுவனெவர்க்கும்
முன்புதோன்றலையறிதற்குமுடிவெனன்றியம்ப
அன்புசான்றெனவுரைத்தனனைபவென்யாக்கை
என்புதோன்றலவுருகினவெனிற்பிறிதெவனோ, (அஉ)

மராமரத்தாலிராமன் வலியையளந்து காண்டியெனல்.

பிறிதுமன்னவன்பெருவலியாற்றலைப்பெரியோய்
அறிதியென்னினுண்டுபாயமுமஃதருமரங்கள்
நெறியினின்றனவேழினொன்றுருவவிந்நெடியோன்
† பொறிகொள்வெஞ்சரம்போவதுகாணெனப்புகன்றான். (அங)

நன்றுநன்றெனாநன்னெடுங்குன்றமுநாணும்
தன்றுணைத்தனிமாருதித்தோளிணைதழுவிச்
சென்று ‡ செம்மலைக்குறுகியான்செப்புவதுளதால்
ஒன்றுனக்கெனவிராமனுமுரைத்தியஃதென்றான். (அச)

ஏகவேண்டுமிந்நெறியெனவினிதுகொண்டேகி
மாகநீண்டனகுறுகிடநிமிர்ந்தனமரங்கள்
ஆகவைந்தினோடிரண்டினொன்றுருவநின்னம்பு
போகவேயென்றன்மனத்திடர்போமெனப்புகன்றான். (அரு)

மறுவிலானதுகூறலும்வானவர்க்கிறைவன்
முறுவல்செய்தவன்முன்னியமுயற்சியையுன்னி
எறுழ்வலித்தடந்தோள்களாற்சிலையைநாணேற்றி
அறிவினாலளப்பரியவற்றருகுசென்றணைந்தான். (அசு)

ரு-வது நட்புக்கோட்படலம் முற்றிற்று.

ஆக படலம் ரு-க்கு திருவிருத்தம்-கசுசு.

---

* காலம்-ஆயுள். † பொறிகொள்-பெயரெழுதப்பெற்ற.
‡ செம்மல்-இராமன்.

## நான்காவது

# மராமரப்படலம்.

இதுமுதல் கூ-பாடல்கள் மராமரவருணனை.

ஊழிபேரினும்பேர்விலவுலகங்களுலைந்து
தாழுங்காலத்துந்தாழ்விலதயங்குபேரிருள்சூழ்
ஆழிமாநிலந்தாங்கியவரும்பெருங்கிரிகள்
ஏழுமாண்டுசென்றொருவழிநின்றெனவியைந்த. (க)

கலைகொண்டோங்கியமதியமுங்கதிரவன்றானும்
தலைகண்டோடுதற்கருந்தவந்தொடங்குறுஞ்சாரல்
மலைகண்டோமென்பதல்லதுமலர்மிசையயற்கும்
இலைகண்டோமெனத்தெரிப்பருந்தரத்தனவேழும். (உ)

ஒக்கநாளெலாமுழல்வனவுலைவிலவாக
மிக்கதோர்பொருளுளதெனவேறுகண்டிலமால்
திக்கும்வானமுஞ்செறிந்தவத்தருநிழற்சீதம்
புக்குநீங்கலிற்றளர்விலவிரவிதேர்ப்புரவி. (ங)

நீடுநாள்களுங்கோள்களுமென்னமேனிமிர்ந்து
மாடுதோற்றுவமலரெனப்பொலிகின்றவனப்ப
ஓடுமாச்சுடர்வெண்மதிக்குட்கறுப்புயர்ந்த
கோடுதேய்த்தலிற்களங்குற்றுமன்னகுறிய. (ச)

தீதரும்பெருஞ் * சாகைகடழைக்கின்றசெயலால்
வேதமென்னவுந்தகுவனவிசும்பினுமுயர்ந்த
ஆதியண்டமுன்பளித்தவனுலகினங்கவனூர்
ஓதிமந்தனிப்பெடையொடும்புடையிருந்துறைவ. (ரு)

நாற்றமல்குபோதடைகனிகாய்முதலனை
வீற்றுமண்டலத்தியாவையும்வீழ்கிலயாண்டும்
காற் † றலம்பினுங்கலிநெடுவானிடைக்கலந்த
ஆற்றின்வீழ்ந்துபோயலைகடற்பாய்தருமியல்ப. (சா)

அடியநான்மறையந்தணனடத்துக்கப்பால்
முடியின்மேற்சென்றமுடியனவாதலின்முடியா
நெடியமாலெனுநிலையனநீரிடைக்கிடந்த
படியின்மேனின்றமேருமால்வரையினும்பழைய. (எ)

* சாகை-கிளை. † அலம்பினும்-வீசினும்.

வள்ள * விந்திரன்மைந்தற்கு † தம்பிக்கும்வயிர்த்த
உள்ளமேயெனவொன்றினென் றுள்வயிர்ப்புடைய
தெள்ளுநீரிடைக்கிடந்தபார்சுமக்கின் றசேடன்
வெள்ளிவெண்படங்குடைந்துகீழ்போகியவேர. (அ)

சென்றுதிக்கிளையளந்தனபணைகளிற்றேவர்
என்றுநிற்குமென்றிசைப்பனவிருசுடர்திரியும்
குன்றினுக்குயர்ந்தகன்றனவொன்றினுங்குறுகா
ஒன்றினுக்கொன்றினிடைநெடிதியோசனையுடைய. (க)

இராமன் வின்னாணெறிதல்.

ஆயமாமரமனைத்தையுநோக்கிநின்றமலன்
தூயவார்கணைதுரப்பதோராதரந்தோன்றச்
சேயவானமுந்திசைகளுஞ்செவிடுறத்தேவர்க்
கேய்விலாததோர்பயம்வரச்சிலையைநாணெறிந்தான். (க0)

ஒக்கநின்றதெவ்வுலகமுமங்கங்கேயோசை
பக்கநின்றவர்க்குற்றதுபகர்வதெப்படியோ
திக்கயங்களுமயங்கின திசைகளுந்திகைத்த
புக்கயன்பதிசலிப்புறவொலித்ததப்பொருவில். (கக)

‡ அரிந்தமன்சிலைநாணொடிதார்த்தலுமமரர்
இரிந்துநீங்கினர்கற்பத்தினிறுதியென் றயிர்த்தார்
பரிந்ததம்பியேபாங்குநின் றான்மற்றைப்பல்லோர்
புரிந்ததன்மையையுரைசெயிற்பழியவர்ப்புணரும். (கஉ)

இராமன் மராமரத்திலம்பெய்தல்

எய்தல்காண்டுங்கொலின்னமென் றரிதின்வந்தெய்திப்
பொய்யின்மாருதிமுதலினோர்புகழ்வுறும்பொழுதில்
மொய்கொள்வார்சிலைநாணினைமுறையுறவாங்கி
வெய்யவாளியையாளுடைவில்லியும்விட்டான். (கங)

ஏழுமாமரமுருவிக்கீழுலகமென் றிசைக்கும்
ஏழுமூடுபுக்குருவிப்பின்னுடனடுத்தியன் ற
ஏழிலாமையான்மீண்டதவ்விராகவன்பகழி
ஏழுகண்டபினுருவுமாலொழிவதன் றின்னும். (கச)

ஏழுவேலையிமுலகமேலுயர்ந்தனவேழுப்
ஏழுகுன்றமுமிருடிகளெழுவரும்புரவி
ஏழுமங்கையரெழுவருநடுங்கினவென்ப
ஏழுபெற்றதோவிக்கணைக்கிலக்கமென்றெண்ணி. (கரு)

* இந்திரன்மைந்தன்-வாலி † தம்பி-சுக்ரீவன். ‡ அரிந்தமன்-நாராயணன்.

அன்னதாயினுமறத்தினுக்காருயிர்த்துணைவன்
என்னூர்தன்மையைநோக்கினரியாவருமெவையும்
பொன்னின்வார்கழற்புதுமிறத்தாமரைபூண்டு
சென்னிமேற்கொளுஉவருககன்சேயிவையிவைசெப்பும். (கசு)

வேறு.

வய்யநீவானுநீமற்றுநீமலரின்மேல்
அய்யனீயாழிநீ * யாழிவாழ்மலனீ
செய்யதீவினைதெறுந்தேவுநீநாயினேன்
உய்யவந்துதவினையுலகமுண்டுவினுய். (கஎ)

என்னெனக்கரியதெப்பொருளுமெற்கெளிதலால்
உன்னையித்தலைவிடுத்துதவினர்விதியினர்
அன்னையொப்புடையவுன்னடியருக்கடியன்யான்
மன்னவர்க்கரசவென்றுரைசெய்தான்வசயிலான். (கஅ)

ஆடினர்பாடினரங்குமிங்குங்கலந்
தோடினருவகையின்னறவையுண்டுணர்கிலார்
நேடினம்வாலிகாலனையெனுநெடிதுநாள்
வாடினர்தோளெலாம்வளர † மற்றவரெலாம். (கக)

துந்துபியினுடலைக்காண்டல்.

அண்டமும்மகிலமும்மடையவன்றனலிடைப்
பண்டுவெந்தனநெடும்பசைவறந்திடினும்வான்
மண்டலந்தொவெதம்மலையின்மேன்மலையெனக்
கண்டனன்றுந்துபிக்கடலனுடலரோ. (உ0)

‡ தென்புலக்கிழவனூர் § மகுடமோதிசையின்வாழ்
வன்புலக்கரிமடிந்ததுகொலோமகரநீர்
என்புலப்புறவுலர்ந்ததுகொலோவிதுவென
அன்புலப்பரியநீயுரைசெயாயெனவவன். (உக)

சு-வது. மராமரப்படலம் முற்றிற்று.

ஆ. படலம் -சு-க்கு திருவிருத்தம் சுஅஎ.

---

* ஆழி-கடல். † மற்றவர்-ஏனையவானரவீரர்.
‡ தென்புலக்கிழவன்-யமன். § மகிடம்-எருமைக்கடா.

ஐந்தாவது.

## துந்துபிப்படலம்.



துந்துபிப்பெயருடைச்சுடுசினத்தவுணன்மீ
திந்துவைத்தொடமிர்ந்தெழு * மருப்பிணையினன்
மந்தரக்கினியெனப்பெரியவன்மகரநீர்
சிந்திடக்கருகிறத்தரியினைத்தேடுவான். (க)

அங்குவந்தரியெதிர்த்தமைதியென்னென்றலும்
பொங்குவெஞ்செருவினிற்பொருதியென்றுரைசெயக்
கங்கையின்கணவனக்கறைமிடற்றிறைவனே
உங்கள்வெங்கதவலிக்கொருவனென்றுரைசெய்தான் (உ)

கதிதுசென்றவனுமக்கடவுடன்கைலையைக்
கொடியகொம்பினின்மடுத்தெழுதலுங்குறுகிமுன்
னொடிதிதின்குறையெனென்றலுநவன்றனனரோ
முடிவில்வெஞ்செருவெனக்கருள்செய்வான்முயல்கென. (௩)

மூலமேவீரமேமூடினயோடுபோர்
ஏலுமேதேவர்பாலேகெனவேவினன்
சாலநாள்போர்செய்வாயாதியேற்சாருபோர்
வாலிபாலேகெனவானுளோர்வானுளான். (௪)

அன்னவன்விடவுவந்தவனுவர் † தரிகடம்
மன்னவன்வருகபோர்செய்கெனுமலையினைச்
சின்னபின்னம்படுத்தெய்தலுஞ்சினவியென்
முன்னவன்முன்னர்வந்தவனையவன்முனைதலும். (௫)

இருவருந்திரிவுறும்பொழுதினின்னவர்களென்
றொருவருஞ்சிறிதுணர்ந்திலர்களெவ்வுலகினும்
வெருவருந்தகைவிலார்விழுவர்நின்றெழுவரால்
மருவருந்தகையர்தானவர்கள்வானவர்கடாம். (௬)

தீயெழுந்ததுவிசும்புறகெடுந்திசையெலாம்
போயெழுந்ததுமுழக்குடனெழுந்ததுபுகை
தோயநன்புணரியுஞ்சுடர்தடங்கிரிகளும்
சாயழிந்தனவடித்தலமெடுத்திடுதலால். (௭)

புயலும்வானகமுமப்புணரியும்புணரிசூழ்
அயலும்வீழ்தூளியாலறிவருந்தகையவாம்

---

* மருப்பிணையினன்-இரண்டு கொம்புடையவன்.

† அரிகடம்மன்னவன்-வானரவரசன்.

மயனின்மாமகனும்வாலியுமறத்துடலினர்
இயலுமாமதியமீராறும்வர்தெய்தவே. (அ)

அற்றதாகியசெருப்புரிவுறும்மளவினிற்
கொற்றவாலியுமவன்குவவுதோள்வலியொடும்
பற்றி * யாசையினெடும்பணைமருப்பிணைபறித்
தெற்றினனவனும்வானிடியினின்றுறநினன். (௯)

தலையின்மேலடிபடக்கடிதுசாய்நெடிதுதான்
உலையவாய்முழைதிறந்துதிரவாறெழுகமா
மலையின்மேலுருமிடித்தென்னவான்மண்ணொடும்
குலையமாதிசைகளுஞ்செவிடுலக்குத்தினன். (௧0)

† கவரியிங்கிதுவெனக்கரதலங்கொடுதிரித்
திவர்தலுங்குருதிபட்டிசைதொறுந்திசைதொறும்
துவரணிந்தனவெனப்பொசிதுதைந்தன துணைப்
பவர்நெடும்பணைமதப்பகையின்வன்கரிகளே. (௧௧)

புயல்கடந்திரவிதன் ‡ புகல்கடந்தயலுளோர்
இயலுமண்டிலமிகந்தெனையவுந்தவிரமேல்
வயிரவன்கரதலத்தவன்வலித்தெறியவன்
றுயிரும்விண்படரவிவ்வுடலுமிப்பரிசரோ. (௧௨)

முட்டிவான்முகடுசென்றளவியிம்முடையுடற்
கட்டிமால்வரையைவர்துறதலுங்கருணையான்
இட்டசாபமுமெனக்குதவுமிவ்வியல்யினிற்
பட்டவாமுழுவதும்பரிவினுலுரைசெய்தான். (௧௩)

வேறு.

கேட்டனனமலனுங்கிளந்தவாறெலாம்
வாட்டொழிலிளவலையிதனைமைந்தநீ
ஓட்டெனவவன்கழல்விரவினுந்தினன்
மீட்டதுவிரிஞ்சனுடிற்றுமீண்டதெ. (௧௪)

ஆயிடையரிக்குலமசனியஞ்சுற
வாய்திறந்தார்த்ததுவள்ளலோங்கிய
தூயகற்சோலையிலிருந்தசூழல்வாய்
நாயகவுணர்த்துவதுண்டொனென்ற. (௧௫)

௫-வது. துந்துபிப்படலம் முற்றிற்று.

ஆ படலம் ௫-க்கு திருவிருத்தம் ௨0௨.



* ஆசை-திக்கு. † கவரி-எருமைக்கடா. ‡ புகல்-இருப்பிடம்.

ஆறவது

# கலன்காண்படலம்.

இவ்வழியாயிழையிருந்ததோரிடை
வெவ்வழியிராவணன்கொணரமேலைநாள்
செவ்வழிநோக்கினேன்றேவியேகொலாம்
* கவ்வையினரற்றினள்கழிந்தசேணுளாள். (க)

உழையரினுணர்த்துவதுளவதென்றுன்னியோ
† குழைபொருகண்ணினுள்குறித்ததோர்திலம்
மழைபொருகண்ணிணைவாரியோடுதன
திழைபொதிந்திட்டனள்யாங்கணேற்றனம். (உ)

வைத்தனமிவ்வழிவள்ளனின்வயின்
உய்த்தனதந்தபோதுணர்தியாலெனக்
கய்த்தலத்தன்னவைகொணர்ந்துகாட்டினன்
நெய்த்தலைப்பால்கலந்தனையநேயத்தான். (ங)

தெரிவுறநோக்கினன்றெரிவைமெய்யணி
எரிகனலெய்தியமெழுகின்யாக்கைபோல்
உருகினனென்கிலமுயிருங்கூற்றமாய்ப்
பருகினனென்கிலம்பகர்வதென்கொலாம் (ச)

நல்குவதென்னினிநங்கைகொங்கையைப்
புல்கியபூணுமக்கொங்கைபோன்றன
அல்குலினணிகளுமல்குலாயின
பல்கலன்பிறவுமப்படிவமானவே. (ரு)

விட்டபேருணர்வினைவிளர்தவென்கெனோ
அட்டனவுயிரையவ்வணிகளென்கெனோ
கொட்டினசாந்தெனக்குளிர்ந்தவென்கெனோ
சுட்டனவென்கெனோயாதுசொல்லுகேன். (சு)

மோந்திடாநறுமலரானமொய்ம்பினின்
ஏந்திடவுத்தரியத்தையேய்ந்தன
சாந்தமுமாயொளிதழுவப்போர்த்தலால்
பூந்துகிலாயவப்பூவைபூண்களே. (எ)

ஈர்த்தனசெங்கணீர்வெள்ளம்யானையும்
போர்த்தனமயிர்ப்புறம்புளகும்பொங்குதோள்

* கவ்வை-ஓசை. † குழை-காதணி.

இறங்கினநிறங்கொள்பரியேமமுறவெங்கும்
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலரன்பர்பிரியாதோர்
உறங்கினர்பிணங்கியெதிருடினவரல்லார். (கடுகூ)

வடந்தருகடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தனர்களித்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம். (கசுO)

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்றிறதுகர்ந்தனர்களித்தார்
பூமனறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறைபயின்றிலர்துயின்றார். (கசுக)

பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்ததிருள்வீணைத்
தண்ணிமையடைத்தனதழங்கிசைவழங்கும்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம். (கசுஉ)

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
திரிஞ்சவருதென்றலுயிரின்புடையுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலிநெஞ்சம். (கசுங)

இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பலகைசோரவுயர்வோரின்
அளக்கொடளக்கரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம். (கசுச)

நித்தியமத்தொழிலராய்நிறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர்துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்னும். (கசுரு)

ஆயபொழுதம்மதிலகத்தாசர்வைகும்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன் * வினைப்பகையைவென்றான். (கசுசு)

வேறு.

போரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்

* வினைப்பகை—தீவினைச்செய்கைகளான காமக்குரோதங்கள்.

என்னநொந்தின்னனபன்னி ‡ யீடழிந்
துன்னருந்துயரத்துச்சோர்கின்றான்றனைப்
பன்னருங்கதிரவன்புதல்வன்பையுள்பார்த்
தன்னவெந்துயரெனுமளக்கர்நீக்கினான். (உ௫)

அய்யநீயாற்றலிறாற்றினேனல
துய்யனேயெனக்கினிறுதிவேறுண்டோ
வையகத்திப்பழிதீரமாய்வது
செய்வனின்குறைமுடித்தன்றிச்செய்கலேன். (உ௬)

என்றனனிராகவனினையகாலையில்
வன்றிறன்மாருதிவணங்கினானெடுங்
குன்றிவர்தோளினாய்கூறவேண்டுவ
தொன்றுளத்தனைநீயுணர்ந்துகேளென. (உ௭)

கொடுந்தொழில்வாலியைக்கொன்றுகோமகன்
கடுங்கதிரோன்மகனுக்கிக்கைவளர்
நெடும்படைகூட்டினாலன்றிநேடரி
தடும்படையரக்கர்தமிருக்கையாணையாய். (உ௮)

வானதோமண்ணதோமாறுவெற்பதோ
ஏனைமாநகர்தமிருக்கைப்பாலதோ
தேனுளதெரியலாய்தெரிவதன்றவர்
ஊர்நமக்குற்றுழியுறுதலுண்மையால். (உ௯)

எவ்வுலகங்களுமிமைப்பினெய்துவர்
வவ்வுவரவ்வழிமகிழ்ந்தயாவையும்
வெவ்வினைவஞ்சனைவருவர்மீள்வரால்
அவ்வவருறைவிடமறியற்பாலவோ. (௩0)

ஒருமுறையேபரந்துலகம்யாவையும்
திருவுறைவேறிடந்தேரவேண்டுமால்
வரன்முறைநாடிடவாம்பின்றாலுல
கருமையுண்டளப்பருமாண்டுவேண்டுமால். (௩௧)

எழுபத்தாகியவெள்ளத்தெம்படை
ஊழியிற்கடலெனவுலகம்போர்க்குமால்
ஆழியைக்குடிப்பினுமயன்செயண்டத்தைக்
கீழ்மடுத்தெடுப்பினுங்கிடைத்தசெய்யுமால். (௩௨)

ஆதலாலன்னதேயமைவதாமென
நீதியாய்நினைந்தனேனெனநிகழ்த்தினான்

‡ ஈடழிந்து-நிலைகெட்டு.

சாதுவாமென்றவத்தனுவின்செலவனும்
போதுநாம்வாலிபாலென்னப்போயினர். (௩௩)

## வேறு.

வெங்கணாளியேறுமீளிமாவும்வேகநாகமும்
சிங்கவேறிரண்டொடுந்திரண்டவன்னசெய்கையார்
தங்குசாலமூலமார்தமாலமேலமாலைபோல்
பொங்குநாகமுந்துவன்றுசாரலூடுபோயினர் (௩௪)

உழையுலாநெடுங்கண்மாத * ரூசலூசலல்லவேல்
தழையுலாவுசந்தலர்ந்தசாரல்சாரலல்லவேல்
மழையுலாவுமூன்றிலல்லமன்றனுறுசண்பகக்
குழையுலாவுசோலைசோலையல்லபொன்செய்குன்றமே. (௩௫)

அறங்கணுறுமேனியாரரிக்கணங்களோடுமங்
கிறங்குபோதுமேறுபோதுமீறிலாதவோசையால்
கறங்குவார்கழற்கலன்கலிப்பமுந்துகண்முகிழ்த்
துறங்குமேகநன்குணர்ந்துமாகமீதுலாவுமே. (௩௬)

நீடுநாகமூடுமேகமோடநீருமோடநேர்
ஆடுநாகமோடமானயானையோடவாளிபோம்
மாடுநாகநீடுசாரல்வாளையோடும்வாவியூ
டோடுநாகமோடவேங்கையோடும் † யூகமோடவே. (௩௭)

மருண்டமாமலைத்தடங்கள்செல்லலாவவல்லமால்
தெருண்டிலாமதத்தயானைசீறிநின்றுசிந்தலால்
இருண்டகாரகிற்றடத்தொடித்துலர்ந்தசந்துவந்
துருண்டமோதழிந்ததேனொழுக்குபே ‡ ரிழுக்கினே. (௩௮)

○ மினன்மணிக்குலந்துவன்றிவில்லலர்ந்துமண்குலாய்
அனல்பரப்பவொப்பமீதிமைப்பவந்தவிப்பபோல்
புனல்பரப்பவொப்பிருந்தபொன்பரப்புமென்பரால்
இனையவிற்றடக்கைவீரரேகுகின்றகுன்றமே. (௩௯)

மருவியாடும்வாவிதோறும்வானயாறுபாயும்வந்
திருவியார்தடங்கண்மீனினேறுபாயுமாறுபோல்
அருவிபாயுமொன்றியொன்றினைபாயுமேனவிற்
குருவிபாயுமோடிமந்திகோடுபாயுமாடெலாம். (௪௦)

---

* ஊசலல்லவேல்-ஊசல். ஊசலல்லாதன. † யூகம்-கருங்குரங்கு.
‡ இழுக்கு-வழுக்கல். ○ மினன்மணி-ஒளிவிடுமணி.

தேனிழுக்குசாரல்வாரிசெல்லமீதுசெல்ல * நாள்
மீனிழுக்குமன்றிவானவில்லிழுக்கும்வெண்மதிக்
கூனிழுக்குமற்றுலாவுகோளிழுக்குமென்பரால்
வானிழுக்குமேலவாயமன்றனூறுகுன்றமே. (சுக)

அன்னதாயகுன்றினூறுசென்றவீரரைந்தொடைந்
துன்னலாயடோசணைக்குமும்பரேரியிம்பரில்
† பொன்னினூடிழிந்ததன்னவாலிவாழ்பொருப்பிடம்
துன்னினார்கள்செய்வதென்னையென்றுநின்றுசொல்லுவார். (சுஉ)

சு-வது கலன்காண்படலம் முற்றிற்று.

ஆ படலம் சு-க்கு திருவிருத்தம்-உசச.

ஏழாவது.

## வாலிவதைப்படலம்.



அவ்விடத்திராமனீயமைழத்துவாலியானதோர்
‡ வெவ்விடத்தின்வந்துபோர்விளைக்கு o மேல்வைவேறுநின்
றெவ்விடத்துணிந்தமைந்ததென்கருத்திதென்றனன்
$ தெவ்வடக்கும்வென்றியானுநன்றிதென்றுநிர்தியா. (க)

வார்த்தையன்னதாகவானியங்குதேரினூன்மகன்
நீர்த்தாங்கவேலையஞ்சநீலமேகநாணநேர்
வேர்த்துமன்னுளோரிரிந்துவிண்ணுளோர்கள்விம்மமேல்
ஆர்த்தவோசையீசனுண்டவண்டமுற்றுமுண்டதே. (உ)

இடித்துரப்பிவந்துபோரெதிர்த்தியேலடர்ப்பனென்
றடித்தலங்கள்கொட்டிவாய்மடித்தடுத்தலங்குதோள்
புடைத்துநின்றுளைத்தபூசல்புக்கதென்பமிக்கிடந்
துடிப்பவங்குறங்குவாலிதிண்செவித்தொளைக்கணே (ங)

வேறு.

§ மாற்பெருங்கடகரிமுழக்கம்வாளரி
ஏற்பதுசெவித்தலத்தென்னவோங்கிய
ஆர்ப்பொலிகேட்டனனமளிமேலொரு
பாற்கடல்கிடந்ததேயனையபான்மையான் (ச)

---

* நாள்மீன் நட்சத்திரம் † பொன்னினூடிழிந்தன் சுவர்க்கமே வந்திருந்தாற்போன்ற. ‡ எவிடமென்பது - எவ்விடவென்றாயது. 0 ஏல்வை-சமயம். $ தெவ்-பகை. மால்-மதயக்கம்

உருத்தனன்பொரவெதிர்ந்திளவலுற்றமை
வரைத்தடந்தோளினன்மனத்தினெண்ணினன்
சிரித்தனனவ்வொலிதிசையினப்புறத்
* திரித்ததவ்வுலகமோரேழொடேழையே. (௫)

எழுந்தனன்வல்விரைந்திறுதியூழியிற்
கொழுந்திரைக்கடல்கிளர்ந்தனையகொள்கையான்
அழுந்தியதக்கிரியருகின்மால்வரை
விழுந்தனதோள்புடைவிசித்தகாற்றினே. (௬)

போய்ப்பொடித்தனமயிர்ப்புறத்தவெம்பொறி
காய்ப்பொடுற்றெழுவடகனலுங்கண்கெடத்
தீப்பொடித்தனவிழிதேவர்நாட்டினும்
மீப்பொடித்தனபுகையுயிர்ப்புவீங்கவே. (௭)

கைக்கொடுகைத்தலம்புடைப்பக்கரவலின்
திக்கயங்களுமதச்செருக்குச்சிந்தின
உக்கனவுருமினமுலைந்தவும்பரும்
நெக்கனநெரிந்தனநின்றகுன்றமே. (௮)

வந்தனென்வந்தனெனென்றவாசகம்
† இந்திரிமுதற்றிசையெட்டுங்கேட்டன
சந்திரன்முதலியதாரகைக்குழாம்
சிந்தினமணிமுடிசிகரந்தீண்டவே. (௯)

வீசினகாற்றின்வேர்பறிந்தவெற்பினம்
ஆசையையுற்றனவண்டபித்திகை
பூசினவெண்மயிர்பொடித்தவெம்பொறி
கூசினனந்தகன்குலைந்ததும்பரே. (௧௦)

கடித்தவாயெயிறுகுகனல்கள்கார்விசும்
பிடித்தவாயுருமுகுமினத்திற்சிந்தின
‡ தடித்துவீழ்வனவெனத்தகர்ந்துசிந்தின
வடித்ததோள்வலயத்தின்வயங்குகாசரோ. (௧௧)

ஞாலமுநாற்றிசைப்புனலுநாகரும்
மூலமுமுற்றிடமுடிவிற்றீக்குமக்
காலமுமொத்தனன்கடலிற்றூங்கடை
ஆலமுமொத்தனனெவருமஞ்சவே. (௧௨)

ஆயிடைத்தாரையென்றமிழ்திற்றோன்றிய
வேயிடைத்தோளினளிடைவிலக்கினள்

* இரித்தது-அசைந்து விலகச்செய்தது. † இந்திரி-கிழக்கு.
‡ தடித்து-மின்னல்.

வாயிடைப்புகைவரவாலிகண்வரும்
தீயிடைத்தன்னெடுங்கூந்தறீகின்றாள். (கங)

விலக்கலைவிடுவிடுவிளித்துளானுரம்
கலக்கியக்கடல்கடைந்தமுதுகண்டென
உலக்கவின்னுயிர்குடித்தொல்லைமீல்குவல்
மலைக்குலமயிலெனமடந்தைகூறுவாள். (கச)

கொற்றவநின்பெருங்குவவுத்தோள்வலிக்
கிற்றையனல்லனா * லீடுண்டேகுவான்
பெற்றிலன்பிறந்திலன்பெயர்த்தும்போர்செயற்
குற்றதுநெடுந்துணையுடைமையாலென்றாள். (கரு)

மூன்றெனமுற்றியமுடிவில்பேருல
கேன்றுடனுற்றனவெனக்குநேரெனத்
தோன்றினுந்தோற்றவைதொலையுமென்றலின்
சான்றுளவன்னவைதையல்கேட்டியால். (கசு)

மந்தரநெடுவரைமத்துவாசுகி
அந்தமில்கடைகயிறடைகலாழியான்
சந்திரன்றூணெதிர்தருக்கின் † வாங்குநர்
இந்திரன்முதலியவமரரேனையோர். (கஎ)

பெயர்வுறவலிக்கவு ‡ மிடுக்கில்பெற்றியார்
அயர்வுறலுற்றதைநோக்கியானது
தயிரெனக்கடைந்தவர்க்கமுதந்தந்தவும்
மயிலியற்குயின்மொழிமறக்கலாவதோ. (கஅ)

ஆற்றினெணமருமவுணர்யாவரும்
தோற்றனரெனையவர்சொலற்பாலதோ
கூற்றுமென்பெயர்சொலக்குலையுமாரினி
மாற்றவற்காகிவந்தெதிருமாண்பினோர். (ககூ)

பேதையரெதிர்குவரெனினும்பெற்றுடை
ஊதியவரங்களுமுரமுமுள்திற்
பாதியுமென்னதாற்பகைப்பதெங்ஙனம்
நீதுயரொழிகெனநின்றுகூறினான். (உ0)

அன்னதுகேட்டவளரசவாயவற்
கின்னுயிர்கட்பமைந்திராமனென்பவன்

* ஈடுண்டேகுவான்-தோற்றோடுபவன். † வாங்குநர்-கடைவோர்.
‡ மிடுக்கு-சாமர்த்தியம்.

உன்னுயர்கோடலுக்குடன்வந்தானெனத்
துன்னியவன்பினர்சொல்லினரென்றாள். (உக)

இதுமுதல் ரு-வதுபாடல் இராமனறம்பிழையாதவனெனத்
தாரைக்கு வாலிகூறுதல்.

உழைத்தவல்லிருவினைக்கூறுகாண்கிலா
தழைத்தயருலகினுக் * கறத்தினறெலாம்
இழைத்தவற்கியல்பலவியம்பியென்செய்தாய்
பிழைத்தனைபாவியுன்பெண்மையாலென்றான் (உஉ)

இருமையுநோக்குறுமியல்பினற்கிது
பெருமையோவிங்கிதிற்பெறுவதென்கொலோ
அருமையினின்றுயிரளிக்கு † மாறுடைத்
தருமமேதவிர்க்குமோதன்னைத்தானரோ. (உங)

எற்றபேருலகெலாமெய்தியீன்றவள்
மாற்றவளேவமற்றவடன்மைந்தனுக்
காற்றருமுவகையாலளித்தவையனைப்
போற்றலையின்னனபுகறற்பாலையோ. (உச)

நின்றபேருலகெலாநெருக்கிநேரினும்
வென்றிவெஞ்சிலையலாற்பிறிதுவேண்டுமோ
தன்றுணையொருவருந்தன்னில்வேறிலான்
புன்றொழிற்குரங்கொடுபுணருநட்பனே. (உரு)

தம்பியரல்லதுதனக்குவேறுயிர்
இம்பரினிலதெனவெண்ணியேய்ந்தவன்
எம்பியும்யானுமுற்றெதிர்ந்தபோரிடை
அம்பிடைதொடுக்குமோவருளினாழியான் (உசு)

இருத்திநீயிறையிவணிமைப்பில்காலையில்
உருத்தவனுயிர்குடித்துடன்வந்தாரையும்
கருத்தழித்தெய்துவென்கலங்கலென்றனன்
விரைக்குழல்பினனுரைவிளம்பவஞ்சினள் (உஎ)

வேறு.

ஒல்லைச்செருவேட்டியெர்வல்புயவோங்கலும்பர்
எல்லைக்குமப்பாலிவர்கின்றவிரண்டினோடும்
மல்லற்கிரியின்றலைவந்தனன்வாலிகீழ்பால்
தொல்லைக்கிரியின்றலைதோற்றியஞாயிறென்ன. (உஅ)

---

* அறத்தினறெலாம் இழைத்தவற்கு - தருமமார்க்கமனைத்துஞ் செய்த விராமற்கு.

† ஆறுடை-வழியினையுடைய.

நின்றனெதிர்யாவருநெஞ்சுநடுங்கியஞ்சத்
தன்றோள்வலியாற்றகைமால்வரைசாலும்வாலி
குன்றாவெந்துற்றனன் * கோளவுணன்குறித்த
வன்றாணிடைத்தோன்றியமாநரசிங்கமென்ன. (உக)

ஆர்க்கின்றபின்னோன்றனைநோக்கினன்றானுமார்த்தான்
வேர்க்கின்றவானத்துருமேறுவெறித்துவீழப்
போர்க்கின்றதெல்லாவுலகும்பொதிர்வுற்றபூசல்
கார்க்குன்றமன்னானிலந்தாவியகாலினென்ன. (௩0)

அவ்வேலையிராமனுமன்புடைத்தம்பிக்கைய
செவ்வேசெலநோக்குதிதானவர்தேவர்சிற்க
எவ்வேலையெம்மேகமெக்காலொடெக்காலவெந்தீ
வெவ்வேறுலகத்திவர்மேனியைமானுமென்றான். (௩க)

வள்ளற்கிளையான்பகர்வானிவன்றம்முன்வாழ்நாள்
கொள்ளக்கொடுங்கூற்றுவனைக்கொணர்ந்தான்குரங்கின்
எள்ளற்கரும்போரஃதிசைகலனென்னுமின்னல்
உள்ளத்தினூன்றவுணர்வுற்றிலனென்றுமென்றான். (௩உ)

இளையோன் இராமனிடஞ் சுக்கிரீவனை இகழ்ந்துரைத்தல்.

ஆற்றாதுபின்னும்பகர்வானறத்தாறழுங்கத்
தேற்றாதுசெய்வார்களைத்தேறுதல்செவ்விதன்றால்
மாற்றானெனத்தம்முனைக்கொல்லியவந்துநின்றான்
வேற்றார்கடிறத்திவன்றஞ்சமென்வீரவென்றான். (௩௩)

அத்தாவிதுகேளெனவாரியன்கூறுவானிப்
பித்தாயவிலங்கினொழுக்கினைப்பேசலாமோ
எத்தாயர்வயிற்றினும்பின்பிறந்தார்களெல்லாம்
ஒத்தாற்பரதன்பெரிதுத்தமனாதலுண்டோ. (௩௪)

விற்றாங்குவெற்பன்னவிலங்கெழிற்றோளமெய்ம்மை
உற்றார்சிலரல்லவரேபலரென்பதுண்மை
பெற்றாருழைப்பெற்றபயன்பெறும்பெற்றியல்லால்
அற்றார்நவையென்றலுக்காகுநரார்கொலென்றான். (௩௫)

வாலி சுக்கிரீவயுத்தம்.

வீரத்திறலோரிவையின்னவிளம்பும்வேலை
தேரிற்றிரிவான்மகனிந்திரன்செம்மலென்றிப்
பாரிற்றிரியும்பனிமால்வரையன்னபண்பார்
மூரித்திசையானையிரண்டெனமுட்டினாரே. (௩௬)

* கோளவுணன்-கொலைத்தொழிலினையுடைய இரணியன்.

குன்றோடுகுன்றொத்தனர்கோளரிக்கொற்றவல்லே
ரொன்றோடுசென்றொன்றெதிருற்றனவேயுமொத்தார்
நின்றார்திரிந்தார்நெடுஞ்சாரிகைலந்திரிந்த
வன்றோட்குயவன்றிணிமட்கலத்தாழியென்ன. (௩௭)

தோளோடுதோடேய்த்தலிற்றொன்னிலந்தாங்கலாற்றாத்
தாளோடுதாடேய்த்தலிற்றந்ததழற் * பிறங்கல்
வாளோடுமின்னோடுவேபோனெடுவானினோடும்
கோளோடுகோளுற்றனவொத்தடர்ந்தாற்கொதித்தார். (௩அ)

தந்தோள்வலிமிக்கவர்தம்மொருதாய்வயிற்றின்
வந்தோர்மடமங்கைபொருட்டுமிலைக்கலுற்றார்
† சிந்தோடரியொண்கட்டிலோத்தமைகாதல்செற்ற
சுந்தோபசுந்தப்பெயர்த்தொல்லையினோருமொத்தார். (௩௯)

கடலொன்றினொடொன்றுமலைக்கவுங்காவன்மேருத்
திடலொன்றினொடொன்றமர்செய்யவுஞ்சீற்றமென்ப
துடல்கொண்டிரண்டாகியுடற்றவுங்கண்டிலேநேர்
மிடலிங்கவர்வெந்தொழிற்கொப்புரைவேறுகாணேம். (௬௦)

ஊகங்களினுயகர்வெங்கணுமிழ்ந்ததீயான்
மேகங்களெரிந்தனவெற்புமெரிந்ததிக்கின்
நாகங்கணடுங்கினநானிலமுங்குலைந்த
மாகங்களைநண்ணியவிண்ணவர்போய்மறைந்தார். (௬௧)

விண்மேலினரோநெடுவெற்பின்முகட்டினரோ
மண்மேலினரோபுறமாதிரவீதியாரோ
கண்மேலினரோவெனயாவருங்காணநின்றார்
புண்மேலிரத்தம்பொடிப்பக்கடிப்பார்புடைப்பார். (௬௨)

எழொத்துடனுந்திசையெட்டொடிரண்டுமுட்டும்
ஆழிக்கிளரார்கலிக் ‡ கைம்மடங்கார்பினோசை
பாழித்தடந்தோளினுமார்பினுங்கைகள்பாய
ஊழிக்கிளர்காரிடியொத்ததுகுத்துமோதை. (௬௩)

வெவ்வாயெயிற்றுன்மிடல்வீரர்கடிப்பமேச்சென்
றவ்வாயெழுசோரியதாசைடோறும்வீச
எவ்வாயுமெழுந்தகொழுஞ்சுடர்மீன்கள்யாவும்
செவ்வாயைநிகர்த்தனசெக்கரையொத்தபேகம். (௬௪)

---

* பிறங்கல்மலை † சிந்தோடுகெடலும்பின்னிடுகின்ற.

‡ ஐம்மடங்கு ஐந்துபங்கு.

### வே று.

வெந்தவல்லரும்பிடைநெடும் * கூடங்கள்வீழ்ப்பச்
சிந்தியெங்கணுஞ்சிதருவபோற்பொறிதெறிப்ப
இந்திரன்மகன்புயங்களுமிரவிசேயுரனும்
சந்தவன்னெடுந்தடக்கைகடாக்கலிற்றகர்வ. (சரு)

உரத்தினன்மடுத்தூர்நுவர்பாதமிட்டுதைப்பர்
கரத்தினல்விசைத்தெற்றுவர்கடிப்பர்நின்றிடிப்பர்
மரத்தினலடித்துரப்புவர்பொருப்பினம்வாங்கிச்
சிரத்தின்மேலெறிந்துறக்குவர்தெழிப்பர்தீவிழிப்பர். (சசு)

எடுப்பவர்பற்றியுற்றொருவரையொருவர்விட்டெறிவர்
கொடுப்பவர்வந்துறங்குத்துவர்கைத்தலங்குளிப்பக்
கடுப்பினிற்பெருங்கறங்கெனச்சாரிகைபிறங்கத்
தடுப்பர்பின்றுவரொன்றுவர்தழுவுவர்விழுவர். (சஎ)

வாலினலுரம்வரிந்தனர்நெறிந்துகவலிப்பர்
காலினனெடுங்கால்பிடித்துடற்றுவர்கழல்வர்
வேலினலறவெறிந்தனவிறல்வலி † யுகிரால்
தோலினலுடனெடுவரைமுழையெனத்தொளைப்பர் (சஅ)

மண்ணகத்தனமலைகளுமரங்களுமற்றும்
கண்ணகத்தினிற்றேன்றியயாவையுங்கையால்
எண்ணகப்பறித்தெறிதலினெற்றலினிற்ற
விண்ணகத்தினைமறைத்தனமறிகடல்வீழ்ந்த. (சகூ)

வெருவிச்சாய்ந்தனர்விண்ணவர்வேறென்னைவிளம்பின்
ஒருவர்க்காண்டமரொருவருந்தோற்றிலருடன்று
செறுவிற்றுய்த்தலிற்செங்கனல்வெண்மமிர்செல்ல
மூரிபுற்கானிடையெரிபரந்தனவெனமுனைவார். (ருo)

அன்னதன்மையராற்றலினமர்புரிபொழுதின்
வன்னடுந்தடந்திரள்புயத்தடுதிறல்வாலி
சொன்னதம்பியைத் ‡ தும்பியையரிதொலைத்தென்ன
கொன்னகங்களிற்கரங்களிற்குலைந்துகமலைந்தான். (ருக)

இராமன்சுக்கிரீவனை நும்மையறிந்துகொள்ளக்

கொடிப்பூச்சூடிச் செல்லெனல்.

மலைந்தபோதி § னைந்திரவிசேயையன்மாடணுகி
உலைந்தசிந்தையோடிணங்கினன்வணங்கிடவுள்ளம்

---

* கூடங்கள்சம்மட்டிகள், † உகிரால்நகத்தால்.
‡ தும்பியையானையை. § இனைந்துவருந்தி.

குலைந்திடேலுமைவேற்றுமைதெரிந்திலங்கொடிப்பூ
மிலைந்துசெல்கெனவிடுத்தனனெதிர்த்தனன்மீட்டும். (௫௨)

தயங்குதாரகைநிரைதொடுத்தணிந்தனபோல
வயங்குசென்னியன்வயப்புலிவானவல்லேற்றோ
டியங்குமார்ப்பினனெல்லைவந்தடுதிறல்வாலி
பயங்கொளப்புடைத்தெற்றினன்குத்தினன்பலகால். (௫௩)

* அயிர்த்தசிந்தையனந்தகன்குலைகுலைந்தஞ்சச்
செயிர்த்துநோக்கினன்சினத்தொடுசிறுநகைசெய்யா
வயிர்த்தகையினுங்காலினுங்கதிர்மகன்மயங்க
உயிர்த்தலந்தொறும்புடைத்தனனடித்தனனுதைத்தான். (௫௪)

கக்கினனுயிருயிர்ப்பொடுஞ்செவிகளிற்கண்ணின்
உக்கதாங்கெரிப்படலையோடுதிரத்தினொழுக்கம்
திக்குநோக்கினன்செங்கதிரோன்மகன்செருக்கிப்
புக்குமீக்கொடுநெருக்கினனிந்திரன்புதல்வன். (௫௫)

வாலிமீதிராமன் அம்பெய்தல்.

எடுத்துப்பாரிடையெற்றுவாம்பற்றியென்றிளவல்
† கடித்தலத்தினுங்கழுத்தினுந்தன்னிருகரங்கள்
மடுத்துமீக்கொண்டவாலிமேற்கோலொன்றுவாங்கித்
தொடுத்துநாணொடுதோளிறுத்திராகவன்றுரந்தான். (௫௬)

காரும்வார்சுவைக்கதலியின்கனியினைக்கழியச்
சேருஞ்சூசியிற்சென்றதுநின்றதென்செப்பின்
நிருநீர்தருநெருப்பும்வன்காற்றுங்கீழ்நிமிர்ந்த
பாருஞ்சார்வலிபடைத்தவனுரத்தையப்பகழி. (௫௭)

அலங்குதோள்வலியழிந்தனன்றம்பியை ‡ யருளான்
வலங்கொள்பாரிடையெற்றுவானுற்றபோர்வாலி
கலங்கிவல்விசைக்கால்கிளர்ந்தெறிவுறக்கடைக்கால்
விலங்கன்மேருவும்வேர்பறிந்தாமெனவீழ்ந்தான். (௫௮)

சய்யம்வேரொடுமுருமுறச்சாய்ந்தெனச்சாய்ந்தான்
வய்யமீதிடைக்கிடந்தபோரடுதிறல்வாலி
வெய்யவன்றருமதலையைமிடல்கொடுகவரும்
கய்நெகிழ்ந்தனனெகிழ்ந்திலன்கடுங்கணைகவர்தல். (௫௯)

வெற்றிவீரனதடுகணையவன்மிடலுரத்தூ
டுற்றதப்புறத்துருவமுனுறுவலிக்கரத்தால்

---

* அயிர்த்த-சந்தேகித்த. † கடித்தலம்-இடுப்பினிடம். ‡ அருளான்-காவானாய்.

பற்றிவாலினுங்காலினும்பிணித்தகப்படுத்தான்
கொற்றவெங்கொடு * மறலியுஞ்சிரதலங்குலைந்தான். (சு0)

எழுந்துவான்முகடிடித்துகப்படுப்பலென்றிவரும்
உழந்துபேர்வுழீஇத்திசைதிரிந்திறுப்பலென்றுறுக்கும்
விழுந்துபாரினைவேரொடும்பறிப்பலென்றோரும்
அழுந்துமிச்சரமெய்தவனார்கொலென்றயிர்க்கும். (சுக)

எற்றுங்கையினைநிலத்தொடுமெரிப்பொறிபறப்பச்
சுற்றுநோக்குறுஞ்சுடுசரத்தைத்துணைக்கரத்தால்
பற்றிவாலினுங்காலினும்வலியுறப்பறிப்பான்
† உற்றுறாமையினுலைவுறுமலையெனவுருளும். (சுஉ)

தேவரோவெனவயிர்க்குமத்தேவரிச்செயலுக்
காவரோவவர்க்காற்றலுண்டோவெனுமயலோர்
யாவரோவெனநகைசெயுமொருவனேயிறைவர்
மூவரோடுமொப்பான்செயலாமெனமொழியும். (சுங)

நேமிதான்கொலோநீலகண்டன்னெடுஞ்சூலம்
ஆமிதாங்கொலோவன்றெனிற்குன்றுருவயிலும்
நாமவிந்திரன்வச்சிரப்படையுமென்னடுவட்
போமெனுந் ‡ துணைபோதுமோயாதெனப்புழுங்கும். (சுச)

வில்லினாற்றாரப்பரிதிவ்வெஞ்சரமெனவியக்கும்
சொல்லினானெடுமுனிவரோதாண்டினானென்னும்
பல்லினாற்கடிப்புறும்பலகாலுந்தன்னுரத்தைக்
கல்லியார்ப்பொடுபறிக்குமப்பகழியைக்கண்டான் (சுரு)

சரமெனும்படிதெரிந்ததுபலபடச்சலித்தென்
உரமெனும்பதமுயிரொடுமுருவியவொன்றைக்
கரமிரண்டினும்வாலினுங்காலினுங்கழற்றிப்
பரமனின்னவன்பெயரறிகுவெனெனப்பறிப்பான். (சுசு)

ஓங்கரும்பெருந்திறலுடைமனத்தனுள்ளத்தன்
வாங்கினான்மற்றன்வாளியையாளிபோல்வாலி
ஆங்குநோக்கினரமரருமவுணரும்பிறரும்
வீங்கினார்கடோள்வீரரையார்வியவாதார். (சுஎ)

மோடுதெண்டிரைமுரிதருகடலெனமுழங்கி
ஈடுபேருலகிறந்துளதாமெனற்கெளிதோ

---

* மறலி-யமன். † உற்றுறாமையின்-முயன்றுமுடியாமையின்
‡ துணைபோதுமே-கூர்போதுமானதோ.

காமமானெமவிலங்கல்கள்கடந்தக்கடலின்
ஊமபோதலுற்றதனையொத்துயர்ந்துளதுதிரம். (௬௮)

வாலிமார்பிலிரத்தங்கண்ட சுக்கிரீவன்வருந்தி மயங்கிவிழுதல்.

வாசத்தாரவன்மார்பெனுமலைவழங்கருவி
ஓசைச்சோரியைநோக்கினனுடன்பிறப்பென்னும்
பாசத்தாற்பிணிப்புண்டவத்தம்பியும்பசுங்கண்
நேசத்தாரைகள்சொரிதரநெடுநிலஞ்சேர்ந்தான். (௬௯)

பறித்தவாளியைப்பருஉவலித்தடக்கையாற்பற்றி
இறுப்பனென்றுகொண்டெழுந்தனன்மேருவையிறுப்போன்
முறிப்பெனென்னினுமுறிவதன்றாமெனமொழியாப்
பொறித்தநாமத்தையறிகுவனோக்கினன்புகழோன். (௭௦)

வேறு.

மும்மைசாலுலகுக்கெல்லா * மூலமந்திரத்தைமுற்றும்
தம்மையேதமர்க்குநல்குந்தனிப்பெரும்பதத்தைத்தானே
இம்மையேயெழுமைநோய்க்குமருந்தினையிராமனென்னும்
செம்மைசேர்நாமந்தனைக்கண்களிற்றெரியக்கண்டான். (௭௧)

இல்லறந்துறந்தநம்பியெம்மனோர்க்காகத்தங்கள்
வில்லறந்துறந்தவீரன்றோன்றலால்வேதநூலிற்
சொல்லறந்துறந்திலாதசூரியன்மரபுந்தொல்லை
நல்லறந்துறந்ததென்னாநகைவரநாணுட்கொண்டான் (௭௨)

வெள்கிடமகுடஞ்சாய்க்கும்வெடிபடச்சிரிக்குமீட்டும்
உள்கிமேதுவுந்தானோரோங்கறமோவென்றுன்னும்
முள்கிடுங்குழியிற்புக்கமூரிவெங்களிறல்யானை
தொள்கொடுங்கிடந்ததென்னத்துயருழன்றழிந்துசோர்வான். (௭௩)

இராமன் வாலியெதிரே வருதல்.

இறைதிறம்பினனெலென்னேயிழிந்துளோரியற்கையென்னின்
† முறைதிறம்பினனெலென்றுமொழிகின்றமுகத்தான்முன்னர்
மறைதிறம்பாதவாய்மைமன்னவர்க்குமுன்னஞ்சொல்லும்
துறைதிறப்பாமற்காக்கத்தோன்றினன்வந்துதோன்ற (௭௪)

இராமனைப் பார்த்து வாலியுரைத்தல்.

கண்ணுற்றான்வாலிநீலக்கார்முகில்கமலம்பூத்து
மண்ணுற்றுவரிவில்லேந்திவருவதேபோலுமாலைப்
புண்ணுற்றதனையசோரிப்பொறியொமம்பொடிப்பநோக்கி
எண்ணுற்றாயென்செய்தாயென்றேசுவானியம்பலுற்றான். (௭௫)

* மூலமந்திரம்-தாரகமந்திரம். † முறை-நீதி.

வாய்மையுமரபுங்காத்துமன்னுயிர்துறந்தவள்ளற்
றூயவன்மைந்தனேநீபரதன்முன்றோன்றினுயே
தீமைதான்பிறரைக்காத்துத்தான்செய்தாற்றீங்கன்றாமோ
தாய்மையுமன்றிநட்புந்தருமமுந்தழுவிநின்றாய். (எசு)

குலமிதுகல்வியீதுகொற்றமீதுற்றுநின்ற
நலமிதுபுவனமூன்றுநாயகமுன்னதன்றோ
வலமிதிவ்வுலகந்தாங்கும்வண்மையீதென்றாற்றிண்மை
அலமரச்செய்யலாமோவறிந்திருந் * தயர்ந்துளார்போல். (எஎ)

கோவியற்றருமமுங்கள்குலத்துதித்தோர்கட்கெல்லாம்
ஓவியத்தெழுதவொண்ணுவுருவத்தாயுடைமையன்றோ
ஆவியைச்சனகன்பெற்றவன்னத்தையமிழ்தின்வந்த
தேவியைப்பிரிந்தபின்னைத்திகைத்தனைபோலுஞ்செய்கை. (எஅ)

அரக்கரோரழிவுசெய்துகழிவரேலதற்குவேறோர்
குரக்கினத்தரசைக்கொல்லமனுநெறிகூறிற்றுண்டோ
இரக்கமெங்குகுத்தாயென்பாலெப்பிழைகண்டாயப்பா
பரக்கழியிதுநீபூண்டாற்புகழையார்பரிக்கற்பாலார். (எகூ)

ஒலிகடலுலகந்தன்னினூர்தருகுரங்கின்மாடே
கலியதுகாலம்வந்துபரந்ததோகருணைவள்ளால்
மெலியவர்பாலதேயோவொழுக்கமும்விழுப்பந்தானும்
வலியவர்மெலிவுசெய்தாற்புகழன்றன்றிவசையுமுண்டோ. (அ0)

கூட்டொருவரையும்வேண்டாக்கொற்றபெற்றதாதை
பூட்டியசெல்வமாங்கேதம்பிக்குக்கொடுத்துப்போந்து
நாட்டொருகருமஞ்செய்தாயெம்பிக்கிவ்வரசைநல்கிக்
காட்டொருகருமஞ்செய்தாய் ‡ கருமந்தானிதின்மேலுண்டோ. ()

அறைகழலலங்கல்வீரராயவர்புரிவதாண்மைத்
துறையெனலாயிற்றன்றேதொன்மையினன்னூற்கெல்லாம்
இறைவனீயென்னைச்செய்தநீதெனிலிலங்கைவேந்தன்
முறையலசெய்தானென்றுமுனிதியோமுனிவிலாதாய். (அஉ)

இருவர்போரெதிருங்காலையிருவருநல்லுற்றாரே
ஒருவர்மேற்கருணைதூண்டியொருவர்மேலொளித்துநின்று
வரிசிலைகுழையவாங்கிவாயம்புமருமத்தெய்தல்
தருமமோபிறிதொன்றாமோதகுகிலதென்னும்பக்கம். (அங)

* அயர்ந்துளார்-மறந்தார். † பரக்கழி-நிந்தை. இது திசைச்சொல்.
‡ கருமம்-பாவம்.

### வேறு.

வீரமன்று * விதியன்றுமெய்ம்மையின்
வாரமன்றுநின்மண்ணினுக்கென்னுடல்
பாரமன்றுபகையன்றுபண்பொழிந்
தீரமன்றிதுவென்செய்தவாறுநீ. (அச)

இருமைநோக்கிநின்றியாவர்க்குமொக்கின்ற
அருமையாற்றலன்றோவறங்காக்கின்ற
பெருமையென்பதிதென்பிழைபேணல்விட்
டொருமைநோக்கியொருவற்குதவலோ. (அரு)

செய்யலைச்செற்றபகைதெறுவான்றெரிந்
தயலைப்பற்றித்துணையமைந்தாயெனின்
புயலைப்பற்றுமப்பொங்கரிபோக்கியோர்
முயலைப்பற்றுவதெனமுயற்சியோ. (அசு)

காரியன்றகளங்கநிறத்தொன்மை
ஊரியன்றமதிக்குளதாமெனச்
சூரியன்மரபுக்குமோர்தொன்மறு
† ஆரியன்பிறந்தாக்கினையாமரோ. (அஎ)

மற்றொருத்தன்வலிந்தறைகூவவந்
துற்றவென்னையொளித்துயிருண்டநீ
‡ இற்றையிற்பிறர்க்கும்மிகலேறென
நிற்றிபோலுங்கிடந்தநிலத்தரோ. (அஅ)

நூலியற்கையுநுங்குலத்துந்தையர்
போலியற்கையுஞ்சீலமும்போற்றலை
வாலியைப்படுத்தாயலை § மன்னற
வேலியைப்படுத்தாய்விறல்வீரனே. (அகூ)

தாரமற்றொருவன்கொளத்தன்கையிற்
பாரவெஞ்சினவீரம்பழிப்பதே
நேருநன்றுமறைந்துநிராயுதன்
மார்பினெய்யவோவில்லிகல்வல்லதே, (கூ0)

என்றுதானுமெயிறிபொடிபடத்
தின்றுகான்றுவிழிவழித்தீயுக
அன்றவாலியனையனகூறினன்
நின்றவீரனினையநிகழ்த்தினன். (கூக)

* விதி - நியாயம். † ஆரியன் - அழகனாகியநீ.
‡ இற்றையில் - இன்றுமுதல். § மன்னறவேலி - இராசநீதியாகியவேலி

இராமன் வாலியைத்தான் கொலைபுரிந்ததுநியாயமெனவுரைத்தல்.

பிலம்புக்காய்நெடுநாள்பெயராயெனாப்
புலம்புற்றான்வழிபோதலுற்றான்றனைக்
குலம்புக்கான்றமுதியர்குறிக்கொணீ
அலம்பொற்றாரவனேயரசென்றலும். (௯௨)

வானமாளவென்றம்முனைவைத்தவன்
தானுமாளக்கிளையினிறத்தடிந்
தியானுமாள்வெனிருந்தரசாள்கிலென்
ஊனமானவுரைபகர்ந்தீரென. (௯௩)

பற்றியான்றபடைத்தலைவீரரும்
முற்றுணர்ந்தமுதியருமுன்பரும்
எற்றுநும்மரசெய்துவையாமெனக்
கொற்றநன்முடிகொண்டதக்கோதிலான். (௯௪)

வந்தவுன்னைவணங்கிமகிழ்ந்தனன்
எந்தையென்கணினத்தவராற்றலிற்
றந்தவுன்னரசென்றுதருக்கிலான்
முந்தையுற்றது * சொற்றமுனிந்துநீ. (௯௫)

கொல்லலுற்றனையும்பியைக் † கோதவற்
றில்லையென்பதுணர்ந்துமிரங்கலை
அல்லல்செய்யேலுனக்கபயம்பிழை
புல்லவென்னவும்புல்லலைபொங்கினாய். (௯௬)

உற்றமுற்றுடையானுனக்காரமர்
தோற்றுமென்றுதொழுதுயர்கையனைக்
கூற்றமுண்ணக்கொடுப்பனென்றெண்ணினாய்
நாற்றிசைக்கும்புறத்தையுநண்ணினான். (௯௭)

அன்னதன்மையறிந்துமருளலை
பின்னவனிவனென்பதும்பேணலை
வன்னிதானிடுசாபவரம்புடைப்
பொன்மலைக்கவனண்ணவிற்போகலை. (௯௮)

‡ ஈரமாவதுமிற்பிறப்பாவதும்
வீரமாவதுங்கல்வியின்மெய்ந்நெறி
வாரமாவதுமற்றொருவன்புணர்
தாரமாவதைதாங்குந்தருக்கதோ. (௯௯)

* சொற்ற-உரைத்தன. † கோது-குற்றம். ‡ ஈரம்-இரக்கம்.

மறந்திறம்பல்வலியமெனாமனம்
புறந்திரம்பவெளியவர்ப் * பொங்குதல்
அறந்திறம்பலருங்கடிமங்கையர்
திறந்திறம்பதெளிவுடையோர்க்கெலாம். (௧00)

தருமமின்னதெனுந்தகைத்தன்மையும்
இருமையுந்தெரிந்தெண்ணலையெண்ணினால்.
அருமை † யும்பிதன்னாருயிர்த்தேவியைப்
பெருமைநீங்கினையெய்தப்பெறுதியோ. (௧0௧)

ஆதலானுமவனெனக்காருயிர்க்
காதலானெனலானுநிற்கட்டனென்
‡ ஏதிலாருமெளியரென்றுரையும்
தீதுதீர்ப்பதென்சிந்தைக்கருத்தரோ. (௧0௨)

பிழைத்ததன்மையிதுவெனப்பேரெழில்
தழைத்தவீரனுரைசெயத்தக்கிலா
திழைத்தவாலியியல்பலவித்துணை
விழைத்திறத்தொழிலென்னவிளம்புவான். (௧0௩)

அய்யநுங்களருங்குலக்கற்பினைப்
பொய்யின்மங்கையர்க்கேய்ந்தபுணர்ச்சிபோல்
செய்திலன்னெமைத்தேமலர்மேலவன்
எய்தினெய்தியதாகவியற்றினான். (௧0௪)

மணமுமில்லைமறைநெறிவந்தன
குணமுமில்லைக்குலமுதற்கொத்தன
உணர்வுசென்றுழிச்செல்லுமொழுக்கலால்
நிணமுநெய்யுமிணங்கியநேமியாய். (௧0௫)

பெற்றிமற்றிதுபெற்றதொர்பெற்றியிற்
குற்றமுற்றிலெனீயதுகோடியால்
வெற்றியுற்றதொர்வெற்றியனாயெனாச்
சொற்றசொற்றனைக்குற்றதுசொல்லுவான். (௧0௬)

நலங்கோடேவரிற்றோன்றிநவையறக்
கலங்கலாவறநன்னெறிகாண்டலின்
விலங்கலாமைவிளங்கியதாதலான்
§ அலங்கலார்க்கிதடுப்பதன்றுமவரோ. (௧0௭)

---

* பொங்குதல் சீறுதல். † உம்பி-உன்தம்பி.
‡ ஏதிலார்-பகைவர். § அலங்கலார்-இரக்கமுடையார்.

பொறியின்யாக்கையதோபுலனுக்கிய
அறிவின்மேலதன்றேவறத்தாறுதான்
நெறியு * நோன்மையைநேர்நின் றுணர்ந்தநீ
பெறுதியோபிழையுற்றுறுபெற்றிதான். (க0அ)

மாடெபற்றியிடங்கர்வலித்திடக்
† கோடுபற்றியகொற்றவற்கூயதோர்
பாடுபெற்றவுணர்வின்மயத்தினுல்
வீடுபெற்றவிலங்கும்விலங்கரோ (க0கூ)

சிந்தைநல்லறத்தின்வழிச்சேர்தலால்
பைந்தொடித்திருவின்பரிவாற்றுவான்
வெந்தொழிற்றிறல்வீடுபெற்றெய்திய
‡ எந்தையும் § மெருவைக்கரசல்லனே. (கக0)

நன்றுதீதென்றியதெரிநல்லறி
வின்றிவாழ்வதன்றேவிலங்கின்னிடை
நின்றநின்னெறிநீயறியாநெறி
ஒன்றுமின்மையுன் ¶ வாய்மையுணர்த்துமால். (ககக)

தக்கவின்னதகாதனவின்னவென்
ருெக்கவுன்னலராயினுயர்ந்துள
மக்களும்விலங்கேமனுவின்னெறி
புக்கவேலவ்விலங்கும்புத்தேளிரே. (ககஉ)

காலனுற்றல்கடிந்தகணிச்சியான்
பாலினுற்றியபத்திபயத்தலான்
மாலினுற்றருவன்பெரும்பூதங்கள்
நாலினுற்றலுமாற்றுழிநண்ணினுய். (ககங)

மேவருந்தருமத்துறைமேவினுர்
ஏவரும்பவத்தாலிழிந்தோர்களும்
தாவருந்தவரும்பலதன்மைசால்
தேவரும்முளர்தீமைதிருந்தினுர். (ககச)

இனையதாதலினெக்குலத்தியாவர்க்கும்
வினையினுல்வருமேன்மையுங்கீழ்மையும்
அனையதன்மையறிந்துமழித்தனை
0 மனையின்மாட்சியென்றுமனுநீதியான். (ககரு)

---

* நோன்மை-தவத்திறம். † கோடு-சங்கு.
‡ எந்தையும்-எனது சிறியதந்தையும். § எருவை-கழுகு.
¶ வாய்மை-சொல். 0 மனையின்மாட்சி-இல்லறதருமம்.

வேறு.

அவ்வுரையமயக்கேட்டவரிகுலத்தரசுமாண்ட
செவ்வியோயனையதாகச்செருக்களத்துருத்தெய்யாதே
வெவ்விய * புளிஞரென்னவிலங்கியேமறைந்துவில்லால்
எவ்வியதென்னையென்றானிலக்குவனியம்பலுற்றான் (ககசு)

முன்புநின்றம்பிவந்துசரண்புகமுறையிலோயைத்
தென்புலத்துய்ப்பனென்றுசெப்பினன்செருவினீயும்
அன்பினையுயிருக்காகியடைக்கலமியானுமென்றி
என்பதுகருதியண்ணன்மறைந்துநின்றெய்ததென்றான். (ககஎ)

கவிகுலத்தரசுமன்னன்கட்டுரைமனத்திற்கொண்டான்
அவியுறுமனத்தனாகியறத்திறனழியச்செய்யான்
புவியிடையண்ணலென்பதெண்ணினன்பொருந்திமுன்னே
செவியுறுகேள்விச்செல்வன்சென்னியையிறைஞ்சிச்சொன்னான். ()

தாயெனவுயிர்க்குநல்கித்தருமமுந்தகவுஞ்சால்பும்
நீயெனநின்றநம்பிநெறியினிநோக்குநேர்மை
நாயெனநின்றவெம்பாணவையறவுணரலாமே
தீயெனபொறுத்தியென்றான்சிறியனசிந்தியாதான். (ககக)

இரந்தனன்பின்னுமெந்தையாவதுமெண்ண † தேற்றாக்
குரங்கெனகருதிநாயேன்கூறியமனத்துக்கொள்ளேல்
அறந்தைவெம்பிறவியென்னோய்க்கருமருந்தனையவையா
வரந்தருவள்ளாலொன்றுகேளெனமறுத்துஞ்சொல்வான். (கஉ0)

வேறு.

ஏவுகூர்வாளியாலெய்துநாயடியனேன்
ஆவிபோம்வேலைவாயறிவுதந்தருளினாய்
மூவர்நீமுதல்வனீமுற்றுநீ மற்றுநீ
பாவநீதருமநீபகையுநீயுறவுநீ (கஉக)

புரமெலாமெரிசெய்தோன்முதலினோர் ‡ பொருவிலா
வரமெலாமுருவியென்வசையிலாவலிமைசால்
உரமெலாமுருவியென்னுயிரெலாநுகருநின்
சரமலாற்பிறிதுவேறுளதரோதருமமே. (கஉஉ)

§ மாவலச்சூலியார்வாழ்த்துநர்க்குயர்வரம்
ஓவலற்றுதவனின்றொருதனிப்பெயரியம்
பாவலிப்புடைமையாலாகுமப்பொருளையாம்
தேவநிற்கண்டவெற்கரிதெனோதேரினே (கஉந)

* புளிஞர்-வேடர். † தேற்றா-தெளிவிலாத. ‡ பொருவிலா-ஒப்பற்ற.
§ இப்பாடல் சிலவேடுகளின்மாத்திரங் காணப்படுகின்றது.

யாவருமெவையுமாயிருதுவும்பயனுமாய்ப்
பூவுகல் * வெறியுமொத்தொருவரும்பொதுமையாய்
ஆவனியாவதென்றறிவிஞூருளிஞர்
தாவரும்பதமெனக்கருமையோதனிமையோ. (கஉச)

உண்டெனுந்தருமமேயுருவமாயுடையநிற்
கண்டுகொண்டேனினிக்காணவென்கடவெனோ
பண்டொடின்றளவுமேயென்பெரும்பழவினைத்
தண்டமேயடியனேற்குறுபதந்தருவதே. (கஉரு)

வேறு.

மற்றினியுதவியுண்டோவானினுமுயர்ந்தமானக்
கொற்றவநின்னையென்னைக்கொல்லியகொணர்ந்துதொல்லைச்
சிற்றினக்குரங்கினோடுந்தெரிவுறச்செய்தசெய்கை
வெற்றரசெய்தியெம்பி † வீட்டரசெனக்குவிட்டான். (கஉசு)

ஓவியவுருவநாயேனுளதொன்றுபெறுவதுன்பால்
பூவிய ‡ நறவமாந்திப்புந்திவேறற்றபோது
தீவினையியற்றுமேனுமெம்பிமேற்சீறியென்மேல்
ஏவியபகழியென்னுங்கூற்றினையேவலென்றான். (கஉஎ)

இன்னுமொன்றிரப்பதுண்டாலெம்பியையும்பிமார்கள்
தன்முனைக்கொல்வித்தானென்றிகழ்வரேற்றடுத்திநக்கோய்
முன்முனேமொழிந்தாயன்றேயிவன்குறைமுடிப்பதையா
பின்னவன்வினையின்செய்கையதனையும்பிழைக்கலாமோ. (கஉஅ)

மற்றிலேனெனினுமாயவரக்கனைவாலிற்பற்றிக்
கொற்றவநின்கட்டந்துகுரக்கியற்றொழிலுங்காட்டப்
பெற்றிலேன்கடந்தசொல்லிம்பயனிலைபிறிதொன்றேனும்
முற்றமுசெய்கென்றூலுமுரியனிவ்வநுமனென்றான். (கஉகூ)

அனுமனென்பவனையாழியையநின்செய்யசெங்கைத்
தனுவெனநினைதிமற்றென்றம்பிநின்றம்பியாக
நினைதியோர்துணைவரின்றோரனையவரிலைநீயீண்டவ்
வனிதையைநாடிற்கோடிவானினுமுயர்ந்ததோளாய். (கஙo)

என்றவர்க்கியம்பிப்பின்னரிருந்தனனிளவறன்னை
வன்றனைத்தடக்கைநீட்டிவாங்கினன்றழுவிமைந்த
ஒன்றுனக்குரைப்பதுண்டாலுறுதியஃதுணர்ந்துகோடி
குன்றினுமுயர்ந்ததோளாய்வருந்தலையென்றுகூறும். (கஙக)

---

* வெறி-மணம். † வீட்டரசு-முத்தித்தானங்களுளுயர்ந்த பரமபதம்.
‡ நறவமாந்தி-கட்குடித்து.

மறைகளுமுனிவர்யாருமலர்மிசையயனுமற்றைத்
துறைகளின்முடிவுஞ்சொல்லுந்துணிபொரு * டுணிவிற்றூக்கி
அறைகழலிராமனாகியறநெறிநிறுத்தவந்த
இறையொருசங்கையின்றியெண்ணுதியெண்ணமிக்கோய். (கஉங)

† நிற்கின்றசெல்வம்வேண்டிநெறிநின்றபொருள்களெல்லாம்
கற்கின்றவிவன்றனுமங்கருதுவவிவனைக்கண்டாய்
பொற்குன்றமனையதோளாய்பெர்துநின்றதலைமைநோக்கின்
எற்கொன்றவலியேசாலுமிதற்கொன்றுமேதுவேண்டா. (கஙங)

கைதவமியற்றியாண்டுங்கழிப்பருங்கணக்கிறீமை
வைகலும்புரிந்துளாரும் ‡ வானுயர்நிலையைவள்ளல்
எய்தவர்பெறுவரென்றாலிணையடியிறைஞ்சியேவல்
செய்தவர்பெறுவதையர்செப்பலாஞ்சீர்மைத்தாமோ. (கஙச)

அருமையென்விதியினாரேயுதவுவானமைந்தகாலை
இருமையுமெய்தினாய்மற்றினிச்செயற்பாலதெண்ணின்
திருமறுமார்பனேவல்சென்னியிற்சேர்த்திச்சிந்தை
ஒருமையினிறுவிமும்மையுலகினுமுயர்தியன்றே. (கஙரு)

மதவியல்குரக்குச்செய்கைமயர்வொடுமாற்றிவள்ளல்
உதவியையுன்னியாவியுற்றிடத்துதவுகிற்றி
பதவியையெவர்க்குநல்கும்பண்ணவன்பணித்தயாவும்
§ சிதைவிலசெய்துநொய்திற்றீர்வரும்பிறவிதீர்தி. (கஙசா)

அரசியற்பாரம்பூரித்தயர்ந்தனையிகழாதையன்
மரைமலர்ப்பாதநீங்காவாழுதிமன்னரென்பார்
எரியனற்குரியாரென்றேயெண்ணுதியெண்ணம்யாவும்
புரிதிசிற்றடிமைகுற்றம்பொறுப்பரென்றெண்ணவேண்டா. (கஙஎ)

என்னவித்தகையவாயவுறுதிகள்யாவுமேங்கும்
பின்னவற்கியம்பிநின்றபேரெழிலானைநோக்கி
மன்னவர்க்கரசன்மைந்தமற்றிவன்சுற்றத்தோடும்
உன்னடைக்கலமென்றுந்தியுயர்கரமுச்சிவைத்தான். (கஙஅ)

வைத்தபின்னுரிமைத்தம்பிமாமுகநோக்கிவல்லே
உய்த்தனைகொணர்தியுன்றனேங்கருமகனையென்ன
அத்தலையவனையேவியழைத்தலினணைந்தானென்ப
கைத்தலத்துவரிநீரைக்கலக்கினான்பயந்தகாளை. (கஙகூ)

---

* துணிவினெனற்பாலது · துணிவிலென்றாயது.
† நிற்கின்றசெல்வம் - இடையிலழியாத பரமபதச்செல்வம்.
‡ வானுயர்நிலை - வானத்திலுயர்ந்தவிடம். § சிதைவில-சிதை விலவாக.

சுடருடைமைதியமென்னத்தோன்றினன்றேன்றியாண்டும்
இடருடையுள்ளத்தோரையெண்ணினுமுணர்ந்திலாதான்
மடருடைநறுமென்சேக்கைமலையன்றியுதிரவாரிக்
கடலிடைக்கிடந்தகாதற்றுணைதயைக்கண்ணிற்கண்டான். (கசுO)

கண்டனன்கலுழிநீருங்குருதியுங்காலமாலைக்
குண்டலமலம்புகின்றகுவவுத்தோட்குரிசிறிங்கள்
மண்டிலமுலகில்வந்துகிடந்ததம்மதியின்மீதா
விண்டலந்தன்னினின்றோர் * மீன்விழுந்தென்னவீழ்ந்தான். ()

எந்தையேயெந்தையேயிவ்வெழுதிரைவளாகத்தியார்க்கும்
சிந்தையாற்செய்கையாலோர்தீவினைசெய்திலாதாய்
நொந்தனையதுதானிற்கநின்முகநோக்கிக்கூற்றம்
வந்ததேயன்றேவஞ்சாதாரதன்வலியைத்தீர்ப்பார். (கசுஉ)

தறையடித்ததுபோற்றீராத்தகையவித்திசைகடாங்கும்
கறையடிக்கழிவுசெய்த † கண்டகனெஞ்சமுன்றன்
நிறையடிக்கோலவாலினிலைமையையுன்னுந்தோறும்
பறையடிக்கின்றவந்தப்பயமறப்பறந்தவன்றே. (கசுங)

குலவரைநேமிக்குன்றமென்றுவானுயர்ந்தகோட்டின்
தலைகளுநின்பொற்றோளிற்றழும்பினிற்றவிர்ந்தவன்றே
மலைகொளுமரவுமற்றுமதியமும்பலவுந்தாங்கி
அலைகடல்கடையவேண்டினுரினிக்கடைவரையா. (கசுச)

பஞ்சின்மெல்லடியாள்பாலன்பாதுகமல்லயாவும்
அஞ்சலித்தறியாச்செங்கையாணையாயமரர்யாரும்
எஞ்சலரிருந்தாருன்னாலின்னமுதீந்தநீயோ
துஞ்சினை ‡ வள்ளியோர்களினினியார்சொல்லற்பாலார். (கசுரு)

ஆயனபலவும்பன்னியமுங்கினன்புழுங்கிநோக்கித்
தீயுறுமெழுகிற்சிந்தையலம்வருஞ்செங்கண்வாலி
நீயினியயர்வாயல்லையென்றுதன்னெஞ்சிற்புல்லி
நாயகனிராமன்செய்தசல்வினைப்பயனிதென்றான். (கசுசு)

தோன்றலுமிறத்தருனுந்துகளறத்துணிந்துநோக்கின்
மூன்றுலகத்தினோர்க்குமூலத்தேமுடிந்தவன்றே
யான்றவமுடைமையாலிவ்விறுதிவந்திசைந்ததியார்க்கும்
சான்றெனநின்றவீரன்றான்வந்துவீடுதந்தான். (கசுஎ)

---

* மீன் - நட்சத்திரம். † கண்டகன் - கண்டிராவணன்.

‡ வள்ளியோர்-கொடையாளர்

பாலமைதவிர்நீயென்சொற்பற்றுதியென்னிளைய
மேலொருபொருளுமில்லாமெய்ப்பொருள்வில்லுந்தாங்கிக்
கால்தரைதோயநின்றுகட்புலக்குற்றதம்மா
மால்தரும்பிறவிநோய்க்குமருந்தெனவணங்குமைந்த. (கசஅ)

என்னுயிர்க்கிறுதிசெய்தானென்பதை * யிறையுமெண்ணா
துன்னுயிர்க்குறுதிசெய்தியிவற்கமருற்றதுண்டேல்
பொன்னுயிர்த்தொளிரும்பூணாய்போதுநிநிலைமைநோக்கி
மன்னுயிர்க்குறுதிசெய்வான்மலரடிசுமந்துவாழ்தி. (கசகூ)

என்றனனினையவாயவுறுதிகள்யாவுஞ்சொல்லித்
தன்றுணைத்தடக்கையாரத்தனயனைத்தழுவிச்சாலக்
குன்றினுமுயர்ந்ததிண்டோட்குரக்கினத்தரசன்கொற்றப்
பொன்றிணிவயிரப்பைம்பூட்புரவலன்றன்னைநோக்கி. (கருO)

நெய்யடைநெடுவேற்றானைநீநிறநிருதரென்னும்
துய்யடைக்கனலியன்னதோளினன்றொழிலுந்தூயன்
பொய்யடையுள்ளத்தார்க்குப்புலப்படாப்புலவமற்றான்
† கய்யடையாகுமென்றவ்விராமற்குக்காட்டுங்காலை (கருக)

தன்னடிதாழ்தலோடுந்தாமரைத்தடங்கணானும்
பொன்னுடைவாளைநீட்டிநீயிதுபொறுத்தியென்றான்
என்னலுமுலகமேழுமேத்தினவிறந்துவாலி
அந்நிலைதுறந்துவானுக்கப்புறத்துலகனானான். (கருஉ)

கய்யவணெகிழ்தலோடுங்கடுங்கணைகாலவாலி
வெய்யமார்பகதுட்டங்காலுருவிமேக்குயரமீப்போய்த்
துய்யநீர்க்கடலுட்டோய்ந்துதூய்மலரமரர்சூட்ட
அய்யன்வெவ்விடாதகொற்றத் ‡ தாவம்வந்தடைந்ததன்றே. (கருங)

எ-வது. வாலிவதைப்படலம் முற்றிற்று.

ஆக படலம் எ-க்கு திருவிருத்தம்-ஙகூகூ.

---

* இறையும்-சிறிதும். † கையடை-அடைக்கலம்.
‡ ஆவம்-அம்புக்கூடு.

எட்டாவது

# அரசியற்படலம்.



வாலியுமேகினன்விண்வரம்பிலாவாற்றலோடும்
பாலியாமுன்னர்நின் றபரிதிச்சேய்செங்கைபற்றி
ஆலிலைப்பள்ளியானுமங்கதனோடும்போனன்
வேல்விழித்தாரைகேட்டாள்வந்தவன்மேலின்வீழ்ந்தாள். (க)

குங்குமங்கொட்டியன்னகுவிமுலைக் * குவட்டுக்கொக்கப்
பொங்குவெங்குருதிபோர்ப்பப்புரிகுழல்சிவப்பப்பொற்றாள்
அங்கவனலங்கன்மார்பிற்புரண்டனளகன்றசெக்கர்
வெங்கதிர்விசும்பிற்றோன் றுமின்னெனத்திகழுமெய்யாள். (உ)

வேய்ங்குழல்விழிகொணல்யாழ்வீணையென் றினையநாண
ஏங்கினளிரங்கிவிம்மியுருகினளிருகை † கூப்பித்
தாங்கினடலையிற்சோர்ந்துசரிந்துதாழ்குழல்கடள்ளி
ஓங்கியகுரலாற்பன்னியினையனவுரைக்கலுற்றாள். (ங)

வேறு.

வரைசேர்தோளிடநாளும்வைகுவேன்
கரைசேரா ‡ விடர்வேலைகாண்கலேன்
உரைசேராருயிரேயென்னுள்ளமே
அரைசேயானிதுகாணவஞ்சினேன். (ச)

துயராலேதொலையாதவென்னையும்
$ பயிராயோபகையாதபண்பினாய்
செயிர்தீராய்விதியானதெய்வமே
உயிர்போனாலுடலாருமுய்வரோ (ரு)

நறிதாநல்லமிர்துண்ணநல்கவின்
பிறியாவின்னுயிர்பெற்றபெற்றிதாம்
அறியாரோநமனாரதன்றெனின்
சிறியாரோவுபகாரஞ்சிந்தியார் (சு)

அணங்கார்பாகனையாசைதோறுமுற்
றுணங்காவொண்மலர்கொண்டுளன்பொடும்
இணங்காக்காலமிரண்டொடொன்றினும்
வணங்காதித்துணைவைகவல்லையோ. (எ)

---

* குவடு மலை. † கூப்பி-சேர்த்து.
‡ இடர்வேலை-துக்கசமுத்திரம். $ பயிராயோ-அழையாயோ.

வரையார்தோள்பொடியாடவைகுவாய்
தரைமேலாயுறுதன்மையீதெனக்
கரையாதேனிடுபூசல்கண்டுமொன்
றுரையாயென்வயினூனம்யாவதோ. (அ)

நய்யாநின்றனெனானிருந்திங்ஙன்
மெய்வானோர்திருநாடுமேவினாய்
அய்யாநீயெனதாவியென்பது
பொய்யோபொய்யுரையாதபுண்ணியா. (கூ)

செருவார்தோளநின்சிந்தையுளெனெனின்
* மருவார்வெஞ்சரமெனையும்வெளவுமால்
ஒருவேனுள்ளுளையாகினுய்தியால்
இருவேமுள்ளிருவேமிருந்திலேம். (க0)

எந்தாய்நீயமிழ்தீயயாமெலாம்
உய்ந்தேமென்றுபகாரமுன்னுவார்
நந்தாநாண்மலர்சிந்திநண்பொடு
வந்தாரோவெதிர்வானுளோரெலாம். (கக)

ஓயாவாளியொளித்துநின்றெய்வான்
ஏயாவந்தவிராமனென்றுளான்
வாயாலேயினனென்னின்வாழ்வெலாம்
ஈயாயோவமிழ்தேயுமீகுவாய். (கஉ)

சொற்றேன்முந்துறவன்னசொற்கொளாய்
அற்றானன்னதுசெய்கலானென
உற்றாயும்பியை † யூழிகாணுநீ
இற்றாய்நானுனையென்றுகாண்கெனே. (கங)

நீருமேருவுநீநெருக்கினால்
மாறோர்வாளியுன்மார்பையீர்வதோ
தேறேன்யானிதுதேவர்மாயமோ
வேறோர்வாலிகொலாம்விளிந்துளான். (கச)

தகைநேர்வண்புகழ்நின்றுதம்பியார்
பகைநேர்வாருளரானபண்பினால்
உகநேர்சிந்தியுலர்ந்தழிந்தவால்
மகனேகண்டிலையோநம்வாழ்வெலாம். (கரு)

அருமந்தற்றமகற்றும்வில்லியார்
ஒருமைந்தற்குமடாததுன்னினார்

---

* மருவார்-பகைவர். † ஊழி-அழிவு.

தருமம்பற்றியதக்கவர்க்கெலாம்
கருமங்கட்டளையென்றல் * கட்டதோ. (கசு)

என்றாளின்னனபன்னியின்னலோ
டொன்றாளுணர்வேதுமுற்றிலாள்
நின்றாளந்நிலைநோக்கிநீதிசால்
வன்றாண்மால்வரையன்னமாருதி· (கஎ)

மடவாராலமடந்தைமுன்னர்வாழ்
இடமேவும்படியேவிவாலிபால்
கடன்யாவுங்கடைகண்டுகெண்ணனே
டுடனுவுற்றவெலாமுணர்த்தலும். (க௮)

அகம்வேரற்றுகவீசருக்கனுர்
புகமேலைக்கிரிபுக்கபோழ்தினின்
நகமேயொத்தகுரக்குநாயகன்
முகமேயொத்ததுமூரிமண்டிலம். (கக)

மறைந்தான்மாலையருக்கன்வள்ளியோன்
உறைந்தான்மங்கைதிறத்தையுன்னுவான்
குறைந்தானெஞ்சிகுறைந்தழுங்குவான்
நிறைந்தார்கங்குலின்வேலைநீங்கினுன். (உ0)

புதல்வன்பொன்மகுடம் † பொறுக்கலான்
முதல்வன்பேருவகைக்குமூந்துவான்
உதவும்பூமகள்சேரவொண்மலர்க்
கதவஞ்செய்யகரத்தினீக்கினுன். (உக)

அதுகாலத்தவருட்குநாயகன்
மதிசாறம்பியைவல்லையேவினுன்
கதிரோன்மைந்தனையையகைகளான்
விதியான்மௌலியிலைச்சுவாயென்றான். (உஉ)

அப்போதேயருணின்றவண்ணலும்
மெய்ப்போர்மாருதிதன்னைவீரநீ
இப்போதேகொணரின்னசெய்வினைக்
கொப்பாம்யாவையுமென்றுணர்த்தலும். (உ௩)

‡ மண்ணுந்நீர்முதன்மங்கலங்களும்
எண்ணும்பொன்முடியாதும்யாவையும்

* கட்டதோ-பொய்யோ. † பொறுக்கலான்-தரித்தலால்.
‡ மண்ணும்-அபிடேகிக்கின்ற.

நண்ணும்வேலையினம்பிதம்பியிம்
திண்ணஞ்செய்வனசெய்துசெம்மலே. (உச)

மறையோராசிவழங்கவானுளோர்
நறைதோய்நாண்மலர்தூவநன்னெறிக்
கிறையோன்றன்னிளையோனவ்வேந்தலைத்
துறையோர்நூன்முறைமௌலிசூட்டினன். (உரு)

பொன்மா * மௌலிபுனைந்துபொய்யிலான்
தான்மனக்கழருழும்வேலையின்
நன்மார்பிற்றழுவுற்றநாயகன்
சொன்னான்முற்றியசொல்லினெல்லையான். (உசு)

வேறு.

ஈண்டுநின்றேகிநீநின்னியல்பமையிருக்கையெய்தி
வேண்டுவமரபினெண்ணிவிதிமுறையியற்றிவீர
பூண்டபேரரசுக்கேற்றயாவையும்புரிந்துபோரில்
மாண்டவன்மைந்தனோடும்வாழ்திநற்றிருவின்வைகி. (உஎ)

வாய்மைசாலறிவின்வாய்த்தமந்திரமாந்தரோடும்
தீமைதீரொழுக்கின்வந்ததிறத்தொழின்மறவரோடும்
தூய்மைசால் † புணர்ச்சிபேணித்துகளறுதொழிலையாகிச்
சேய்மையோடணிமையின்றித்தேவரிற்றெரியநிற்றி. (உஅ)

புகையுடைத்தென்னினுண்டுபொங்கனலங்கென்றன்னும்
மிகையுடைத்துலகநூலோர்வினையமும்வேண்டற்பாற்றே
பகையுடைச்சிந்தையார்க்கும்பயனுறுபண்பிற்றீரா
நகையுடைமுகத்தையாகியின்னுரைநல்குநாவால் (உகூ)

தேவருமருடர்கொத்தசெயிரறுசெல்வமஃதுன்
காவலுக்குரியதென்றாலன்னதுகருதிக்காண்டி
ஏவருமினியநண்பரயலவர்விரவாரென்றிம்
மூவகையியல்பிற்றாகுமுனைவர்க்குமுலகமூன்றின். (ஙo)

செய்வனசெய்தல்யாண்டுந்தீயனசிந்தியாமல்
வய்யனவந்துபோதும்வசையிலவினியகூறல்
மெய்யனவழங்கல்யாவுமேவினவெஃகலின்மை
உய்வனவாக்கித்தம்மோடியர்வறவுயர்ந்ததோனாய். (ஙக)

சிறியரென்றிகழ்ந்து ‡ நொய்வுசெய்வனசெய்யன்மற்றிந்
நெறியிகழ்ந்தியானோர்தீமையிழைத்தலாலுணர்ச்சிநீண்டு

---

* மௌலி-மகுடம். † புணர்ச்சிபேணி-கலந்தாலோசித்து.
‡ நொய்வு-இகழ்வு.

குரியதாமேனியாயகூனியாற்குவவுத்தோளாய்
வெறியனவெய்திநொய்தின்வெந்துயர்க்கடலின்வீழ்ந்தேன். (௩௨)

மங்கையர்பொருட்டாலெய்துமாந்தர்க்குமரணமென்றல்
சங்கையின்றுணர்திவாலிசெய்கையாற்சாலுமின்னும்
அங்கவர்திறத்தினேயல்லலும்பழியுமாதல்
எங்களிற்காண்டியன்றேயிதற்குவேறேதியாதோ. (௩௩)

நாயகனல்லனம்மைநனிபயந்தெடுத்துநல்கும்
தாயெனவினிதுபேணத்தாங்குதிதாங்குவாரை
ஆயதுதன்மையேனுமறவரம்பிகவாவண்ணம்
தீயனவந்தபோது * சுடுதியாற்றீமையோரை. (௩௪)

இறத்தலும்பிறத்தலானுமென்பனவிரண்டும்யாண்டும்
திறத்துளிநோக்கிற்செய்தவினைதரத்தெரிந்தவன்றே
புறத்தினியுரைப்பதென்னேபூவின்மேற்புனிதற்கேனும்
அறத்தினதிறுதிவாழ்நாட்கிறுதியஃதுறுதியென்ப. (௩௫)

ஆக்கமுங்கேடுந்தாஞ்செயறத்தொடுபாவமாய
நோக்கிவேறுண்மைதேரார்பொருவரும்புலமைநூலோர்
தாக்கினவொன்றோடொன்றுதருக்குருஞ்செருவிற்றக்கோய்
பாக்கியமின்றிமற்றும்பாவத்தைப்பற்றலாமோ. (௩௬)

இன்னவைதகைமையென்பவியல்புளிமரபினெண்ணி
மன்னரசியற்றியென்கண்வருவழிமாரிக்காலம்
பின்னுறமுறையினுன்றன்பெருங்கடற்சேனையோடும்
† துன்னுதிபோதியென்றான்சுந்தரனவனுஞ்சொல்வான் (௩௭)

ஓங்குறையிருக்கையென்னுங்குற்றமேகுற்றமல்லால்
அரங்கெழுதுறக்கநாட்டுக்கரசெனலாமதன்றே
மரங்கிளரருவிக் ‡ குன்றம்வள்ளனீமனத்தினெம்மை
இரங்கியபணியாமெய்தவிருத்தியாற்சிலநாளெம்பால். (௩௮)

§ அரிந்தமநின்னையண்மியருளுக்குமுரியேமாகிப்
பிரிந்துவேறெய்துஞ்செல்வம்வெறுமையிற்பிறிதொன்றாமால்
கருந்தடங்கண்ணினாளைநாடலாங்காலங்காறும்
இருந்தருடருதியெம்மோடென்றடியிணையின்வீழ்ந்தான். (௩௯)

எந்தலுமிதனைக்கேளாவின்னிளமுறுவ ¶ நாற
வேந்தமையிருக்கையெம்போல்விரதியர்விழைதற்கொவ்வா

---

* சுடுதி-தண்டித்தி. † துன்னுதி அடைவாய். ‡ குன்றம்-குன்றத்தில்
§ அரிந்தம-நாராயணனே. ¶ நாற-தோன்ற.

போந்தவணிருப்பினெம்மைப்போற்றவேபொழுதுபோமால்
சேர்ந்தனைசிற்கமுன்பவ்வரசியற்றருமந்தீர்தி. (௬௰)

ஏழிரண்டாண்டியான்போந்தெரிவனத்திருக்கவென்றேன்
வாழியாயரசர்வைகும்வலநகர்வைக * லொல்லேன்
பாழியந்தடந்தோள்வீரபார்த்திலேபோலுமன்றே
யாழிசைமொழியோடன்றியானுறையின்பமென்றே. (௬௧)

† தேவுவேறரக்கன்வைத்தசேமத்துளிருப்பத்தான்றன்
ஆவிபோற்றுணவரோமெளவிடற்கரியவின்பம்
மேவினனிராமனென்றாலேயவிவ்வெய்யமாற்றம்
மூவகையுலகமுற்றுங்காலத்துமுற்றவற்றே. (௬௨)

இல்லறந்துறந்திலாதோரியற்கையையிழந்துபோரின்
வில்லறந்துறந்துவாழ்வேனெனன்கின்னமேன்மையில்லாச்
சில்லறம்புரிந்துநின்றதீமைகடீருமாறு
நல்லறந்துறந்தநோன்பினவையறநோற்பலென்றான். (௬௩)

அரசியற்குரியயாவுமாற்றுழியாற்றியான்ற
திரைசெயற்குரியசேனைக்கடலொடுந் ‡ திங்களுன்கின்
§ விரைசுகவென்பானின்னைவேண்டினென்வீரவென்றான்
உரைசெயற்கெளிதுமற்கியரிதுமாமொழுக்கினின்றான். (௬௪)

மறித்தொருமாற்றங்கூறான்வானுயர்கொற்றத்தன்னான்
குறிப்பறிந்தொழுகன்மாதோகோதிலாதவென்னா
நெறிப்படர்கண்கள்பொங்கிநீர்வரநெடிதுதாழ்ந்து
பொறிப்பருந்துன்பமுன்னாக்கவிக்குலத்தரசன்போனான். (௬௫)

வாலிகாதலனுமாண்மெலரடிவணங்கினானை
நீலமாமேகமன்னநெடியவனருளினோக்கிச்
சீலநீயுடையையாதலிவன்சிறுதாதையென்னா
மூலமேதந்தநுந்தையாமெனமுறையினிற்றி. (௬௬)

என்னமற்றினையகூறியேகவற்றொடாரவென்றான்
பொன்னடிவணங்கிமற்றைப்புகழுடைக்குரிசில்போனான்
பின்னர்மாருதியைநோக்கிப்பேரெழில்வீரநீயும்
அன்னவனரசுக்கேற்றதாற்றுதியறிவினென்றான். (௬௭)

பொய்த்தலினுள்ளத்தன்புபொழிகின்றபுணர்ச்சியானும்
இத்தலையிருந்துநானேயினவெனக்குத்தக்க

* ஒல்லேன்-கூடாதவனாக இருக்கின்றேன். † தேவி-சானகி.
‡ திங்கள்-மாதம். § விரைசுக-நெருங்குக.

கைத்தொழில்செய்வனென் றுகழலிணைவணங்குங்காலை
மெய்த்தலைநின் றவீரனிவ்வுரைவிளம்பிவிட்டான். (௪அ)

நிரம்பினுனொருவன்காத்தநிறையரசிறுதிநின் ற
வரம்பிலாததனைமற்றோர்தலைமகன்வலிதிற்கொண்டால்
* அரும்புவநலனுந்தீங்குமாகவினையநின்போற்
பெரும்பொறையறிவினோரானிலையினைப்பெறுவதம்மா. (௪௯)

† ஆன் றவற்குரியதாயவரசினைநிறுவியப்பால்
ஏன்றெனக்குரியதாயதானகருமமுமியற்றற்கொத்த
சான் றவர்நின்னினில்லையாதலாற்றருமந்தானே
போன் றநீயானேவேண்டவத்தலைபோதியென்றான். (௫0)

ஆழியானனையகூறவாணையீதாகினஃதே
வழியாய்புரிவனென் றுவணங்கிமாருதியும்போனன்
சூழிமால்யானையன்னதம்பியுந்தானுந்தொல்லை
ஊழிநாயகனும்வேறோருயர்தடங்குன் றமுற்றார். (௫௧)

ஆரியனருளிற்போயவ்வகன்மலையகத்தனுன
சூரியன்மகனுமானத்துணைவருங்கிளையுஞ்சுற்றத்
தாரையைவணங்கியன்னுடாயெனத்தந்தைமுந்தைச்
சீரியன்சொல்லேயென்னச்செவ்விதினரசுசெய்தான். (௫௨)

வளவரசெய்திமற்றைவானரவீரர்யாரும்
கிளைஞரினுதவவாணைகிளர்திசையளப்பக்கேளோ
டளவிலவாற்றலாற்றவசன்மையங்கதன் றங்கள்செல்வத்
திளவரசியற்றவேவியினிதினிநிருந்தானிப்பால். (௫௩)

‡ வள்ளலுமவணின்றேகிமதங்கனதிருக்கையான
வெள்ளவான்குடுமிக்குன் றத்தொருசிறைமேவிமெய்ம்மை
அள்ளுறுகாதற்றம்பியன்பினலமைக்கப்பட்ட
எள்ளவில்சாலையெய்தியினிதினிநிருந்தகாலை. (௫௪)

அ-வது அரசியற்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-௬௫௫.

---

* அரும்புவ-தோன்றுவ. † ஆன் றவர்-உயர்ந்தோர்.
‡ வள்ளல்-வரையாது கொடுப்போன்.

## ஒன்பதாவது.

# கார்காலப்படலம்.

இதுமுதல் ௫௦-பாடல்கள் மழைக்கால வருணனை.

மாவியல்வடதிசைநின்றுவானவன்
ஓவியமேயெனவொளிக்கவின்குலாம்
தேவியைநாடியமுந்தித்தென்றிசைக்
கேவியதாதெனவிரவியேகினான். (௧)

* பய்யணைப்பஃறப்பாந்தளேந்திய
மொய்நிலத்தகளியின்முழங்குநீர்நெயின்
வெய்யவன்விளக்கமாமேருப்பொன்றிரி
மய்யெடுத்தொத்ததுமழைத்தவானமே. (௨)

† நண்ணுதலருங்கடனஞ்சநுங்கிய
கண்ணுதல்கண்டத்தின்காட்சிகாணலாய்
விண்ணகமிருண்டதுவெயிழுன்வெங்கதிர்
தண்ணியமெலிந்தனதழைத்தமேகமே. (௩)

நஞ்சினினளிர்நெடுங்கடலினெங்கையர்
அஞ்சனநயனத்தினவிழ்ந்தகூந்தலின்
வஞ்சனையரக்கர்தம்வடிவிற்செல்கையின்
நெஞ்சினினிருண்டதுநீலவானமே. (௪)

நாட்களினளிர்கடனூரநாவுற
வேட்கையிற்பருகியமேகமின்னுவ
வாட்கைகண்மயங்கிடுசெருவின்வார்மதப்
‡ பூட்கைகணிறைந்தபுண்டிறப்பபோன்றவே. (௫)

நீனிறப்பெருங்கரிநிறைத்தநீர்த்தெனச்
சூனிறமுகிற்குலந்துவன்றிச்சூழ்திரை
மானிறநெடுங்கடல்வாரி ௦ மூரிவான்
மேனிரைத்துளதெனமுழக்கமிக்கதே. (௬)

அரிப்பெரும்பெயரவன்றூதலிறோணி
விரிப்பவுமொத்தனவெற்புமீதுதீ
எரிப்பவுமொத்தனவேசிலாசைகள்
சிரிப்பவுமொத்தனதெரிந்தமின்னெலாம். (௭)

---

* பையணை விடப்பையினையுடைய பாம்பாகிய அணை இஃதாகுபெயர்.
† நண்ணுதலரும்-அருகிலடைதற்கரிய. ‡ பூட்கை யானை-மூரிபெரிய

* மாதிரக்கருமகன் மாரிக்கார்மழை
யாதினுமிருண்டவின்னிருந்தைக்குப்பையின்
கூதிர்வெங்காலெனுந்துருத்திக்கோளமைத்
தூதுவெங்கனலுமிழுலையுமொத்ததே. (௮)

பிரிந்துறைமகளிறும்பிலத்தபாந்தளும்
எரிந்துயிர்நடுங்கிடவிரவியின்கதிர்
அரிந்தனவாமெனவசனிநாவென
விரிந்தனதிசைதொறுமிசையின்மின்னெலாம். (௯)

சூடினமணிமுடித்துகளின்விஞ்சையர்
கூடுறைநீக்கியகுருதிவாட்களும்
ஆடவர்பெயர்தொறுமாசையானையின்
ஓடைகளொளிபிறழ்வனவுமொத்ததே. (௧௦)

எண்வகைநாகங்கடிசைகளெட்டையும்
நண்ணினநாவளைத்தனையமின்னகக்
† கண்ணுண்மெய்வடிவெனக்கருகிக்கார்விசும்
புண்ணிறையுயிர்ப்பென ‡ வூதைபொங்கவே. (௧௧)

தலைமையுங்கீழ்மையுந்தவிர்தலின்றியே
மலையினுமரத்தினுமற்றுமுற்றினும்
விலங்கினந்துளவழிவிலங்கும்வேசையர்
உலைவுறுமனமெனவுலாயதூதையே. (௧௨)

அழுங்குறுமகளிர்த § மன்பர்த்தீர்ந்தவர்
புழுங்குறுபுணர்முலைகொதிப்பப்புக்குலாய்க்
கொழுங்குறைத்தசையெனவீர்ந்துகொண்டது
விழுங்குறுபேயெனவாடைவீங்கிற்றே. (௧௩)

ஆர்த்தெழுதுகள்விசும்படைத்தலானுமின்
கூர்த்தெழுவாளெனப்பிறழுங்கோட்பினும்
தார்ப்பெரும்பணையின்விண்டழங்குதாவினும்
போர்ப்பெருங்களமெனப்பொலிந்ததும்பரே. (௧௪)

இன்னகைச்சனகியைப்பிரிந்தவேந்தன்மேல்
மன்மதன்மலர்க்கணைவழங்கினானெனப்
பொன்னெடுங்குன்றின்மேற்பொழிந்ததாரைகள்
மின்னொடுந்துவன்றினமேகராசியே. (௧௫)

---

* கருமகன்-தொழிலாளி, அவன் கொல்லன்

† கண்ணுதன்மிடறெனக்கருகி என்றும்பாடம்.

‡ ஊதை-ஒருவகைக் காற்று. § அன்பர்-நாயகர்.

கல்லிடைப்படுந்துளித்துவலைகாரிடு
வில்லிடைச்சரமெனவிசையின்வீழ்ந்தன
* செல்லிடைப்பிறந்தசெங்கனலிற்சிந்தின
எல்லிடைமணிசிதர்ந்தழலியற்றல்மேல். (கசு)

† மள்ளர்கண்மறுபடைமானயானைமேல்
வெள்ளிவேலெறிவனபோன்றமேகங்கள்
தள்ளருந்துளிபடத்தகர்ந்துசாய்கிரி
புள்ளிவெங்கடகரிபுரள்வபோன்றவே. (கஎ)

வானிடுதனுநெடுங்கருப்புவின்மழை
மீனெடுங்கொடியவன்பகழிவீழ்துளி
தானெடுஞ்சார்துணைபிரிந்ததன்மையர்
ஊனுடையுடம்பெலாமூழ்கலொத்தவே. (கஅ)

‡ தீர்த்தனுங்கவிகளுஞ்செறிந்துநம்பகை
பேர்த்தனரினியெனப்பேசிவர்னவர்
ஆர்த்தெனவார்த்தனமேகமாய்மலர்
தூர்த்தனவொத்தன துள்ளிவெள்ளமே. (ககூ)

வண்ணவிற்கரதலத்தரக்கன்வாளினன்
விண்ணிடைக்கடிதுகொண்டேகும்வேலையில்
பெண்ணினிற்கருங்கலமனையபெய்வளை
கண்ணெனப்பொழிந்ததுகாலமாரியே. (உ௦)

சிரஞ்சுடர்மதிபுனைதேவன்விண்டொடர்
புரஞ்சுடவிடுசரம்புரையுமின்னினம்
அரஞ்சுடப்பொறிசிமிர § யிழிஞடவர்
உரஞ்சுடவுளைந்தனபிரிந்துளோர்க்கெலாம். (உக)

பொருடரப்போயினர்ப்பிரிந்தபொய்யுடற்
குருடருதேர்மிசையுயிர்கொண்டுய்த்தலான்
மருடருபிரிவினோய் $ மாசுணங்கெடக்
கருடனைப்பொருவினகாலமாரியே. (உஉ)

முழங்கினமுறைமுறைமூரிமேகநீர்
வழங்கினமிடைவனமானயானைகள்
தழங்கினபொழிமதத்திவலைதாழ்தரப்
புழுங்கினவெதிரெதிர்பொருவபோன்றவே. (உங)

* செல்-மேகம். † மள்ளர்-போர்வீரர். ‡ தீர்த்தன்-தூயவன். ஈண்டு ராமன்மேற்று. § அயில்-வேலாயுதம். $ மாசுணம்-பாம்பு.

விசைகொடுமாருதமறித்துவீசலால்
அசைவுறுசிறுதுளியப்புமாரியின்
இசைவுறவெய்வனவியைவவாயிருந்
திசையொடுதிசைசெருச்செய்தசெய்தவே. (உச)

விழைவுறுபொருடரப்பிரிந்தவேந்தர்வந்
துழையுறவுயிருறவுயிர்க்குமாதரின்
மழையுறமாமுகமலர்ந்துதோன்றின
குழையுறப்பொலிந்தன * உலவைக்கொம்பெலாம். (உரு)

வேறு.

பாடலம்வறுமைகூரப்பகலவன்பசுமைகூரக்
கோடல்கள்பெருமைகூரக்குவலயஞ்சிறுமைகூர
ஆடினமயில்கள்பேசாதடங்கினகுயில்களன்பர்த்
தேடுறத்தளர்ந்தார்போன்றுந்திருவுறக்கிளர்ந்தார்போன்றும். (உசு)

நாணிறச்சுரும்பும்வண்டுநன்மணியணியுஞ்சாரற்
றேனுகமலர்ந்துசாய்ந்தசேயிதழ்க்காந்தட்செம்பூ
வேனிலைவென்றதம்மாகாரெனவியந்துநோக்கி
மானிலக்கிழத்திகைகண்மறித்தனபோன்றமன்னோ, (உஎ)

வாளெயிற்றரவம்போலவன்றலைகான்றமானத்
தாளுடைக்கோடறம்மைத்தழீஇயனகாதறங்க
மீளலவவையுமன்னவிழைவனவுணர்வுவீந்த
கோளரவென்னப்பின்னியவற்றொடுங்குழைந்துசாய்ந்த. (உஅ)

எள்ளிடவிடனுமின்றியெழுந்தனவிலங்கு † கோபம்
தள்ளுறத்தலைவர்தம்மைப்பிரிந்தவர்தழீஇயதூமக்
கள்ளுடையோதியார்தங்கலவியிற்பலகாற்கான்ற
வெள்ளடைத்தம்பற்குப்பைசிதர்ந்தெனவிரிந்தமாதோ. (உகூ)

தீங்கனிநாவலோங்குஞ்சேணுயர்குன்றிற்செம்பொன்
வாங்கினகொண்டுபாரின்மண்டுமோல்யாறுமான
வேங்கையின்மலருங்கொன்றைவிரிந்தன்வீயுமீர்த்துத்
தாங்கினகலுழிசென்றுதலைமயக்குறுவதம்மில். (௩௦)

நன்னெடுங்காந்தட்போதினறைவிரிகடுக்கைமென்பூத்
துன்னியகோபத்தோடுந்தோன்றியதோற்றந்தும்பி
இன்னிசைமுரல்வநோக்கியிருகிலமலர்க்கையேந்திப்
பொன்னெடுங்காசையீட்டுக்கொடுப்பதேபோன்றவன்றே. (௩க)

* உலவைக்கொம்பு-பட்டமரக்கிளை.

† கோபம்-இந்திரகோபம்-பட்டுப்பூச்சியென்ப.

கிளைத்துணைமழலைவண்டுகின்னரங்கர்த்தமின்னும்
துளிக்குரன்மேகம்வள்ளார்தூரியந்துவைப்பபோன்ற
வளைக்கையர்போன்றமஞ்ஞைதோன்றிசளரங்கின்மாடே
விளக்கினமொத்தகாண்போர்விழியொத்தவிளையின்மென்பூ. (௩௨)

பேடையு * ஞிமிறும்பாயப்பெயர்வுழிப்பிறக்குமோசை
ஊடுறத்தாக்குந்தோறுமொல்லொலிபிறப்பநல்லார்
ஆடியற்பாணிக்கொக்குமாரியவமிழ்தப்பாடற்
கோடியதாளங்கொட்டன்மலர்ந்தகூதாளமொக்க. (௩௩)

வழைதுறுகானயாறுமாகிலக்கிழத்திமக்கட்
குழைதுறுமலைமாக்கொங்கைசுரந்தபாலொழுக்கையொத்த
விழைவுறுவேட்கைநாலும்வேண்டினர்க்குதவவேண்டிக்
குழைதொறுங்கனகந்தூங்குகற்பகங்கர்த்தகொன்றை. (௩௪)

பூவியல்புறவமெங்கும்பொறிவரிவண்டுயோர்ப்பத்
தீவியகளியவாகிச்செருக்கியகாமச்செவ்வி
ஓவியமரன்கடோறுமுரைத்தறவுரிஞ்சியொன்கேழ்
நாவியசெவ்விநாறக்கலையொடும்புலர்ந்தநவ்வி. (௩௫)

வேறு.

தேரினன்னெடுந்திசைசெலச்செருக்கழிந்தொடுங்கும்
கூரயிற்றருங்கண்ணெனக்குவிந்தனகுவளை
மாரனன்னவர்வரவுகண்டுவக்கின்றமகளிர்
† மூரன்மென்குரு ‡ முறுவலொத்தரும்பினமுல்லை. (௩௬)

களிக்குமஞ்ஞையைக்கண்ணுளரினமெனக்கண்ணுற்
றளிக்குமன்னரிற்பொன்மழைவழங்கினவருவி
வெளிக்கன்வந்தகார்விருந்தெனவிருந்துகண்டுள்ளம்
களிக்குமங்கையர்முகமெனப்பொலிந்தனகமலம். (௩௭)

சரதநாண்மலரியாவையுங்குடைந்தனதடவிச்
சுரதநூறெறிவிடரெனத்தேன்கொண்டுதொகுப்ப
பரதநூன்முறைநாடகம்பயனுறப்பகுப்பான்
இரதமீட்டுறுங்கவிஞரைப்பொருவினதேனீ. (௩௮)

நோக்கினனைமைநோக்கழிகண்டநுண்டநுண்மருங்குற்
ருக்கணங்கருஞ்சீதைக்குத்தரக்கருந்துன்பம்
ஆக்கினனமதுருவினென்றரும்பெறலுவகை.
வாக்கினனுரையாமெனக்களித்தனமான்கள். (௩௯)

---

* ஞிமிறு-ஆண்வண்டு. † மூரல் - நகையினையுடைய.
‡ முறுவல் - பற்கள்.

நீடுநெஞ்சுறுநேயத்தானெடிதுறப்பிரிந்து
வாடுகின்றனமருளுறுகாதலின்மயங்கிக்
கூடுநன்னதித்தடந்தொறுங்குடைந்தபடிவுற்
றூடுகின்றனகொழுநரைப்பெறுவினவன்னம். (௪0)

காரெனும்பெயர்க்கரியவன்மார்பினிற்கதிர்முத்
தாரமென்னவும்பொலிந்தனவளக்கருமளக்கர்
நீர்முகந்தமாமேகத்தினருகுறநிறைத்துக்
கூறும்வெண்ணிறத்திறத்தனபறப்பன * குரண்டம். (௪௧)

மருவிநீங்கல்செல்லாநெடுமாலையவானிற்
பருவமேகத்தினருகுறக்குருகினம்பறப்ப
திருவினாயகனிவனெனத்தேமறைதெரிக்கும்
ஒருவன்மார்பினினுத்தரீயத்தையுமொத்த. (௪௨)

உறவெதுப்புறுங்கொடுந்தொழில்வேனிலானொழியத்
திறநினைப்பருங்காரெனுஞ்செவ்வியோன்சேர
நிறமனத்துறுகுளிர்ப்பினினெடுநிலமடந்தை
புறமயிர்த்தலம்பொடித்தனபோன்றனபசும்புல். (௪௩)

தேனவாமலர்த்திசைமுகன்முதலினர்தெளிந்தோர்
ஞானநாயகனவையுறநோக்கினநல்கக்
கானம்யாவையும்பரப்பியகண்ணெனச்சனகன்
மானைநாடிநின்றழைப்பனபோன்றன † மஞ்ஞை. (௪௪)

செஞ்சேவேலவர்செறிசிலைக்குரிசிலரிருண்ட
குஞ்சிசேயொளிகதுவுறப்புதுநிறங்கொடுக்கும்
பஞ்சிபோர்த்தமெல்லடியெனப்பொலிந்தனபதுமம்
வஞ்சிபோலியர்மருங்கெனநுடங்கினவல்லி (௪௫)

நீயிரன்னவர்குதலையராதலினேடிப்
போயதையலைத்தருதிரென்றிராகவன்புகலத்
தேயமெங்கணுந்திரிந்தனபோந்திடைத்தேடிக்
‡ கூயவாய்க்குரல்குறைந்தபோற்குறைந்தனகுயில்கள். (௪௬)

பொழிந்தமாநிலம்புற்றரக்குமட்டியபுனிற்று
ஒழுந்தவாம்பிகளிடறினசெறிதயிரேய்த்த
மொழிந்ததேனுடைமுகிழ்முலையாய்ச்சியர்முழவிற்
பிழிந்தபால்வழிநுரையெனப்பொருவுவ § பிடவம். (௪௭)

---

* குரண்டம்-வெண்கொக்கு. † மஞ்ஞை-மயில்.
‡ கூய - அழைத்த. § பிடவம்-ஒருமலர்.

வேங்கைநாறினகொடிச்சியர்வடிக்குழல்விரைவண்
டேங்கநாகமுநாறினநுளைச்சியரைம்பால்
ஆங்குநாண்முல்லைநாறினவாச்சியரோதி
ஞாங்கருற்பலமுழத்தியர் * பித்திகைநாற. (சஅ)

தேரைக்கொண்டபேரல்குலாடிருமுகங்காணன்
ஆரைக்கண்டுயிராற்றுவானல்லுணர்வழிந்தான்
மாரற்கெண்ணில்பல்லாயிரமலர்க்கணைவகுத்த
காரைக்கண்டனன்வெந்துயர்க்கொருகரைகாணான். (சகூ)

அளவில்காரெனுமப்பெரும்பருவம்வந்தணைந்தால்
தளர்வரென்மதுதவம்புரிவோருக்குந்தகுமால்
இளவிதேனினுமமிழ்தினுங்கினைத்தவெள்வலைதோள்
வளவியுண்டவன்வருந்துமென்றாலதுவருத்தோ. (ருo)

கார்வளங்கண்ட ராமன் காதலியை நினைந்து வருந்துதல்.

காவியுங்கருங்குவளையுநெய்தலுங்காயாம்
பூவையும்பொருவானவன்புலம்பினன்றளர்வான்
ஆவியுஞ்சிறிதுண்டுகொலாமெனவயிர்த்தான்
தூவியன்னமன்னுடிறத்திவையிவைகொல்லும். (ருக)

வேறு.

வாரேர்முலையாளைமறைக்குநர்வாழ்
ஊரேயறியேனுயிரோடுழல்வேன்
† நீரேயுடையாயருணின்னிலையோ
காரேயெனதாவிகலக்குதியோ. (ருஉ)

வெப்பார்நெடுமின்னினெயிற்றைவெகுண்
டெப்பாலும்விசும்பினிருண்டெழுவாய்
அப்பாதகவஞ்சவரக்கரையே
ஒப்பாயுயிர்கொண்டல ‡ தோவலையோ. (ருங)

அயிலேவிழியார்விளையாரமிழ்தின்
குயிலேமெழியார்க்கொணராய்கொடியாய்
துயிலேனொருவேனுயிர்சோர்வுணர்வாய்
மயிலேயெனைநீவலியாடுதியோ. (ருச)

மழைவாடையொடாடிவலிந்துயிர்மேல்
நுழைமாய்மலர்வாய் § நொடியாய்கொடியே
இழைவாணுதலாளிடைபோலிடையே
குழைவாயெனதாவிகுழைக்குதியோ (ருரு)

---

* பித்திகை-கூந்தல். † நீர்சலமும், நெகிழ்ந்த குணமும்.
‡ ஓவலையோ-ஒழியாயோ. § நொடியாய்பேசுவாயாக.

விழையேன்விழைவானவைமேன்மையினின்
றிழையேனுணர்வேனவையின்மையினல்
பிழையேனுயிரோடுபிரிந்தனரால்
உழையேயவரெவ்வுழையாருரையாய் (ருசு)

பயில்பாடகமெல்லடிபஞ்சனையார்
செயிரேதுமிலாரொடுதீருதியோ
அயிராதுடனேயகல்வாயலேயோ
உயிரேகெடுவாயுறவோர்கிலேயோ. (ருஎ)

ஒன்றைப்பகராய்குழலுக்குடையாய்
வன்றைப்புறநீள்வயிரத்தினையே
கொன்றைக்கொடியாய்கொணர்கின்றிலேயே
என்றைக்குறவாகவிருந்தனையே. (ருஅ)

வேறு.

கூரர்வரும்பனையகூர்வாளெயிற்றுவெங்குருளைநாகம்
விராவுவெங்கடுவிற்கொல்லுமெல் * லிணர்முல்லைவெய்தின்
உராவருந்துயரமூட்டியோய்வறமலைவதொன்றோ
இராவணகோபநிற்கவிந்திரகோபமென்னே. (ருகூ)

ஓடைவாணுதலினளையொளிக்கலாமுபாயமுன்னி
நாடிமாரீசனுரோராடகநவ்வியானர்
வாடையாய்க்கூற்றினுருமுருவினைமாற்றிவந்தார்
கேடுசூழ்வார்க்குவேண்டுமுருக்கொளக்கிடைத்தவன்றே. (சு0)

அருவினையரக்கரென்னவந்தரமதனின்யாரும்
வெருவரமுழங்குகின்றமேகமேமின்னுகின்றாய்
தருவலென்றிரங்கினயோதாமரைமறந்ததையல்
உருவினைக்காட்டிக்காட்டியொளிக்கின்றாயொளிக்கின்றாயால். (சுக)

உண்ணிறைந்துயிர்க்கும்வெம்மையுயிர்சுடவுடலையுள்ளம்
புண்ணுறவாளிதூர்த்தல்பழுதினிப்போதிமாரா
எண்ணுறுகல்வியுள்ளத்திளையவனின்னேயுன்னைக்
கண்ணுறுமாயிற்பின்னையாரவன்சீற்றங்காப்பார். (சுஉ)

வில்லும்வெங்கணையும்வீரர்வெஞ்சமத்தஞ்சினார்மேல்
புல்லுவவல்லவாற்றல்போற்றலர்குறித்தல்போலாம்
அல்லுநன்பகலுநீங்காயநங்கநீயருளிற்றீர்ந்தாய்
செல்லுமென்றெளிவந்தோமேற்செத்தலுஞ்சீர்மைத்தாமோ. (சுங)

---

* இணர்-கொத்து.

என்னவித்தகையபன்னியீடழிந்திரங்குகின்ற
தன்னையொப்பானைநோக்கித் * தகையழிந்தயர்ந்ததம்பி
நின்னையொத்தகையையாகநினைந்தனைநெடியோயென்னுச்
சென்னியிற்சுமந்தகையன்றேற்றுவான்செப்பலுற்றான். (சுச)

வேறு.

காலநீளிதுகாருமாரியும்வந்ததென்றகவர்ச்சியோ
நீலமேனியரக்கர்வீரநினைந்தழுங்கியநேர்மையோ
வாலிசேனைமடந்தைவைகிடநாடவாரலதாமையோ
சாலுநல்லுணர்கேள்விவீரதளர்ந்ததென்னதவத்தினுய் (சுரு)

மறைதுளங்கினுமதிதுளங்கினும்வானுமாழ்கடல்வையமும்
நிறைதுளங்கினுநிலைதுளங்குறுநிலைமைநின்வயினிற்குமோ
பிறைதுளங்குவனையபேரெயிறுடைய † பேதையர்பெருமைநின்
இறைதுளங்குறுபுருவமென்னிலையிடைதுளங்குறவிசையுமோ. (சுசு)

அனுமனென்பவனளவறிந்தனமறிஞனங்கதனுதியோர்
எளையரென்பதொரிறுதிகண்டிலமெழுபதென்றெனுமியல்பினர்
வினையின்வெந்துயர்விரவுதிங்களும்விரைவு சென்றனவெளிதினின்
தனுவெனுந்திருநுதலுவந்தனள் ‡ சாரதம்வன்றுயர்தவிர்தியே. ()

மறையறிந்தவர்வரவுகண்டுமைவலியும்வஞ்சகர்வழியொடும்
குறையவென்றிடர்களைவெனென்றனைகுறைமுடிந்ததுவிதியினுல்
இறைவவங்கவரிறுதிகண்டினிதிசைபுனைந்திமையவர்கடாம்
உரையுமும்பருமுதவிநின்றருளுணர்வழிந்திடலுறுதியோ. (சுஅ)

காதுகொற்றநினக்கலாமைபிறர்க்கெவ்வாறுகலக்குமோ
வேதனைக்கிடமாதல்வீரதையன்றுபேதைமையாமரோ
போதுபிற்படலுண்டிதோர்பொளினன்றியின்றுபுணர்த்தியேல்
யாதுனக்கியலாததெந்தைவருந்தலென்னவியம்பினுன். (சுகூ)

சொற்றதம்பியுரைக்குணர்ந்துயிர்சோர்வொடுங்கியதொல்லையோன்
இற்றவின்னலியக்கமெய்திட § வைகல்பற்பலவேகமேல்
உற்றுநின்றவினைக்கொடும்பிணியொன்றின்மேலுடனென்றுராய்
மற்றும்வெம்பிணிபற்றினுலெனவந்தெதிர்ந்ததுமாரியே. (எ0)

வேறு.

நிறைந்தனநெடுங்குளனெருங்கினதரங்கம்
குறைந்தனகருங்குயில்குளிர்ந்தவுயர்குன்றற்

* தகையழிந்து நிலைமைகெட்டு. † பேதையர் அறிவிலிகளான அசுரர்.
‡ சரதம்-உண்மை. § வைகல்-நாள்.

மறைந்தன தடந்திசைவருந்தினர்பிரிந்தார்
உறைந்தன * வகன்றிலுட † னன்றிலுயிரொன்றி. (எக)

பாசிழைமடந்தையர்பழிப்பிலகலல்குற்
றூசுதொடரூசனனிவெம்மைதொடர்வுற்றே
வீசியதுவாடையெரிவெந்தவிரிபுண்வீழ்
ஆசிலயில்வாளியெனவாசைபுரிவார்மேல். (எ௨)

வேலைநிறைவுற்றனவெயிற்கதிர்வெதும்பும்
சீலமழிவுற்றபுனலுற்றருகுசெப்பின்
காலமறிவுற்றுணர்தல் ‡ கன்னலளவல்லால்
மாலைபகனுற்றதெனவோர்வரிதுமாதோ. (எங)

நெற்கிழியநெற்பொதிசிரம்பினசிரம்பாச்
சொற்கிழியநற்கிளிகடோகையவர்தூய்மின்
பற்கிழிமணிப்படர்திரைப்பாதர்முன்றில்
பொற்கிழிவிரித்தனசினைப்பொதுள்வபுன்னை. (எச)

நிறங்கருகுகங்குல்பகனின்றநிலைநீங்கா
அறங்கருதுசிந்தைமுனியந்தணரினலிப்
பிறங்கருநெடுந்துளிபடப்பெயர்வில்குன்றின்
உறங்கலில்விலங்கலிலசின்றவுயர்வேழம். (எரு)

சந்தினடையிற்படலைவேதிகைதடந்தோ
றந்தியிடகிற்புகைநுழைந்தகுளிரன்னம்
மந்தியிலுற்றமுழைவன்கவே ¶ னெங்கத்
திந்தியமவித்தனியோகரினிருந்த. (எசு)

ஆசில்சுனைவாலருவியாயிழையரைம்பால்
வாசமணநாறலிலவானமணிவன்கால்
ஊசல்வறிதானவிதனெண்மணிகள்விண்மேல்
வீசலிலவானினெடுமாரிதுளிவீச. (எஎ)

கருந்தகையதண்சினையனகதைமடல்காதல்
தருந்தகையபோதுகிளையிற்புடைதயங்கப்
பெருந்தகையபொற்சிறையொடுங்கியுடல்பேரா
திருந்தகுருகின்பெடைபிரிந்தவர்களென்ன. (எஅ)

---

* அகன்றில்ஒருசாதிப்பறவை. † அன்றில்ஒருசாதிப்புள்.
‡ கன்னல்நாழிகைவட்டில். ¶ அங்கத்திந்தியமவித்த உடலிலுள்ள பஞ்சேந்திரியங்களை ஒடுக்கிய.

*பதங்கமுழ † வொத்தவிசைபன்ஞிமிறுபன்ன
விதங்களினடித்திடுவிகற்பவழிமேவும்
மதங்கியரையொத்தமயில்வைகுமரமூலத்
தொதுங்கினமலைழக்குலமுழக்க. (எகூ)

விளக்கொளியகிற்புகைவிழுங்கமளிமென்கொம்
பிளைக்குமிடைமங்கையருமைந்தர்களுமேறத்
தளத்தகுமலர்த்தவிசிகந்துநகுசந்தின்
றுளைத்துயிலுவந்துதுயில்வுற்றகுளிர்தும்பி. (அ0)

தாமரைமலர்த்தவிசுசிந்துதகையன்னம்
மாமரநிரைத்தொகுபொதும்பருழைவைகத்
தேமரனடிக்கிதணிடைச்செறிகுரம்பைத்
தூமருவெயிற்றியரொடன்பர்துயில்வுற்றார். (அக)

வள்ளிபுடைசுற்றியுயர்சிற்றிலைமரந்தோ
றெள்ளருமறிக்குருளொடண்டர்களிருந்தார்
கள்ளரிஞெளித்துழனெடுங்கழுதொடுங்கி
முள்ளெயிறுதின்றுபசிமூழ்கிடவிருந்த. (அஉ)

சரம்பயினெடுந்துளிமிமிர்ந்தபுயல்சார
உரம்பெயர்வில்வன்கரிகரந்துறவொடுங்கா
வரம்பகனெடும்பிரசம்வைகல்பலவைகும்
முரம்பினினிரம்பலமுழைஞ்சிடைநுழைந்த (அங)

இத்தகையமாரியிடைதுன்னியிருளெய்த
மைத்தகுமணிக்குறுநகைக்சனகன்மான்மேல்
உய்த்தவுணர்வத்தினனெருப்பிடையுயிர்ப்பான்
வித்தகனிலக்குவனைமுன்னினன்விளம்பும். (அச)

## வேறு.

மழைக்கருமின்னெயிற்றரக்கன்வஞ்சனை
இழைப்பருங்கொங்கையுமெதிர்வுற்றின்னலின்
உழைத்தனளுலைந்துயிருலக்குமொன்றினும்
பிழைப்பரிதெனக்குமிதென்னபெற்றியோ. (அரு)

தூங்கிறச்சுடுசுரந்துணிதூங்கிட
வானுறப்பிறங்கியவயிரத்தோளொடும்
யானுறக்கடவதேயிதுவுமிங்கிலே
வேனிறத்தூற்றதொத்துழியும்வீகிலேன். (அசு)

* பதங்கம்-விட்டுவிட்டொலிக்குமொருவகைப்பறவை, சிள்வீடுமாம்
† ஒத்த-அடிக்க.

தெரிகணை மலரொடுந்திறந்தநெஞ்சொடும்
அரியவன் றுயரொடும்யானும்வைகுவேன்
எரியுமின்மினிமணிவிளக்கினின் றுணைக்
குரீஇயினம்பெடையொடுந்துயில்வகூட்டினுள். (அஎ)

வானகமின்னினுமழைமுழங்கினும்
யானகமெலிகுவேனெயிற்றராவெனக்
கானகம்புகுந்தியான் முடித்தகாரியம்
மெனகுங்கீழ்நகுமினியென்வேண்டுமால். (அஅ)

மறந்திருந்துய்கலேன்மாரியீதெனின்
இறந்துவிண்சேர்வது * சரதமிப்பழி
பிறந்துபின் றீர்வலோபின்னரன்னது
துறந்துசென் றுறுவலோதுயரின்வைகுவேன். (அகூ)

ஈண்டுநின் றரக்கர்தமிருக்கையாமினிக்
காண்டலிற்பற்பலகாலங்காண்டுமால்
வேண்டுவதன்றிதுவீரநோய்தெற
மாண்டனனென்றதுமாட்சிப்பாலதால். (கூ0)

† செப்புருக்கனையவிம்மாரிச்சீகரம்
வெப்புறப்புரஞ்சுடவெந்துவீவதோ
அப்புருக்கொண்டவாணெடுங்கணும்பிழை
துப்புருக்குமுதவாய்நுகர்ந்துதுய்த்தயான். (கூக)

நெய்யடைதீயெதிர்நிறுவிநிற்கவள்
கய்யடையென்றவச்சனகன்கட்டுரை
பொய்யடையாக்கிய ‡ பொறியிலேனொடு
மெய்யடையாதினிவிளிதனன்றரோ. (கூஉ)

தேற்றுவாய்நீயுளையாகத்தேறிநின்
றூற்றுவேனுனுளனுகவாய்வளை
தோற்றுவாளல்லளித்துன்பமாரினி
மாற்றுவார்துயர்க்கொருவரம்புண்டாகுமோ. (கூங)

விட்டபோர்வாளிகள்விரிஞ்சன்விண்ணையும்
சுட்டபோதிமையவர்முதலதொல்லையோர்
பட்டபோதுலகமுமுயிரும்பற்றறக்
கட்டபோதல்லதுமயிலைக்காண்டுமோ. (கூச)

---

* சரதம்-உண்மை. † செப்புருக்கனைய-செம்புருகினாற்போன்ற.
‡ பொறி-அறிவு.

தருமமென்றொருபொருடன்னையஞ்சியான்
றெருமருகின்றதுசெறுநர்தேவரோ
டருமையின்வீந்தனரென்னுமஃகுதலால்
உருமெனவொலிபடு * முரவிலோயென்றான். (கூரு)

இளவலுமுரைசெய்வானெண்ணுநாளினும்
உளவலகூடிருமிறுதியுற்றதால்
களவுசெய்தவ † ருறைகாணுங்காலமீ
தளவியலாகியதானையாழியாய். (கூசு)

திரைசெயத்திண்கடலமிழ்தஞ்செங்கணான்
உரைசெயத்தரினுமத்தொழிலுவந்திலன்
வரைமுதற்கலப்பைகண்மாடோட்டித்தன்
குரைமலர்த்தடக்கையாற்கடைந்துகொண்டனன். (கூஎ)

மனத்தினினுலகெலாம்வகுத்துவாய்ப்பெயும்
நினைப்பினனுயினுநேமியானெடு
மெனைப்பலபடைக்கலமேந்தியாரையும்
வினைப்பெருஞ்சூட்சியிற்பொருதுவெல்லுமால். (கூஅ)

கண்ணுடைநுதலினன் ‡ கணிச்சிவானவன்
விண்ணிடைப்புரஞ்சுடவெகுண்டமேலைநாள்
எண்ணியசூழ்ச்சியுமீட்டிக்கொண்டவும்
அண்ணலேயொருவராலறியற்பாலவோ. (கூகூ)

ஆகுநர்யாரையுந்துணைவராக்கிப்பின்
ஏகுறுநாளிடையெய்தியெண்ணுவ
சேகறப்பன்முறைதெருட்டிச்செய்தபின்
வாகையென்றொருபொருள்வழுவற்பாலதோ. (க00)

அறத்துறைதிறம்பினரரக்கராற்றலர்
மறத்துறைநமக்கெனவலிக்கும்வன்மையோர்
திறத்துறைநன்னெறிதிறம்பலுண்டெனின்
புறத்தினியார்திறம்புகழும்வாகையும். (க0க)

பைந்தொடிக்கிடர்களைபருவம்பையவே
வந்தடுத்துளதினிவருத்தநீங்குவாய்
அந்தணர்க்காகுநாமரக்கர்க்காகுமோ
சுந்தரத்தனுவலாய்சொல்லுநீயென்றான். (க0உ)

* உரவிலோய் - வலியவில்லினையுடையாய்.
† உறை - இருப்பிடம். ‡ கணிச்சி மழு.

உறுதியஃதேயெனவுணர்ந்தவூழியான்
இறுதியுண்டேகொலிம்மாரிக்கென்பதோர்
தெறுதுயருழந்தனன்றேயத்தேய்வுசென்
றறுதியையடைந்தப்பருவமாண்டுபோய். (கoரு)

மள்கலில்பெருங்கொடைமருவிமண்ணுளோர்
உள்கியபொருளெலாமுதவியற்றபோ
தெள்கலிலிரவலர்க்கீவதின்மையால்
வெள்கியமாந்தரின்வெளுத்தமேகமே. (கoச)

தீவினைநல்வினையென்னத்தேற்றிய
பேர்வினைப்பொருடனையறிந்துபெற்றதோர்
ஆய்வினைமெய்யுணர்வணுகவாசறு
மாயையின்மாய்ந்ததுமாரிப்பேரிருள். (கoரு)

மூளமர்தொலைவுறமுரசவிந்தபோல்
கோளமைக்கொண்முகில்குமுறலோவின
நீளடுகணையெனத்துளியுநீங்கின
வாளுறையுற்றெனமறைந்தமின்னெலாம். (கoசு)

தடுத்தாணெடுந்தடங்கிரிகடாழ்வரை
அடுத்தநீரொழிந்தனவருவிதூங்கின
வெடுத்தநூலுத்தரியத்தொடெய்திகின்
றடுத்தவாணிறத்துகிலொழிந்தபோலுமே. (கoஎ)

மேகமாமலைகளின்புறத்துவீதலால்
* மாகயாறியாவையும்வாரியற்றன
வாகையாற்றகவழுந்தழிவினன்பொருள்
போகவாறெழுகலான்செல்வம்போன்றவே. (கoஅ)

கடந்திறந்தெழுகளிறனையகார்முகில்
இடந்திறந்தேகலிற்பொலிந்ததிந்துவும்
நடந்திறனவில்வுறுநங்கைமார்முகம்
படந்திறந்துருவலிற்பொலியும்பான்மைபோல். (கoகூ)

பாசிழைமடந்தையர் ‡ பகட்டுவெம்முலை
பூசியசாந்தினைப்புலர்த்துகுங்குமம்
மூசினமுயங்குசேறெழியமொண்டுற
வீசியநறுமலர்விண்டுவாடையே. (ககo)

---

* மாகயாறு-ஆகாயவழி. † கடம்-மத்தாரை.
‡ பகட்டு-தோற்றம்.

மன்னவன் றலைமகன்வருத்தமாற்றுவான்
அந்நெறிப்பருவம்வந்தணுகிற்றாகலால்
பொன்னினைநாடியபோதுமென்பபோல்
அன்னமுந்திசைதிசையகன் றவிண்ணின்வாய். (ககக)

தஞ்சிறையொடுக்கினதழுவுமின்னல
நெஞ்சுறுபயனிலகினைப்புநீண்டன
மஞ்சுறுநெடுமெழைபிரிந்தமாமயில்
அஞ்சினமிதிலைநாட்டன்ன்மன்னவாய். (ககஉ)

வஞ்சனைதீவினைமறந்தமாதவர்
நெஞ்செனத்தெளிந்தனநீரநீர்தொறும்
பஞ்செனச்சிவக்குமென்பாதப்பேதையர்
அஞ்சனக்கண்ணெனப்பிறழ்ந்தவாடன்மீன். (ககங)

வாடியமடந்தையர்வதனமொத்தன
தாடொகமலர்ந்தனமுதிர்ந்ததாமரை
கூடினர்துவரிதழ்க்கோலங்கொண்டன
சேடுறுநறுமுகைவிரிந்தசெங்கிடை. (ககச)

கல்வியிற்றிகழ் * கணக்காயர்கம்பலை
பல்விதச்சிறுஅரெனப்பகர்வபல்லரி
செல்விறுத்தல்லதொன்றுரைத்தல்செய்கலா
நல்லறிவாளரினவிந்தநாவெலாம். (ககரு)

செறிபுனற்பூந்துகிறிரைக்கையாற்றிரைத்
துறுதுணைக்கான்மடுத்தொத்தவோதநீர்
எறுழ்வலிக்கணவனையெய்தியாறெலாம்
முறுவலிக்கின்றனபோன்றமுத்தெலாம். (ககசு)

சொன்னிறைகேள்வியிற்றொடர்ந்தமாந்தரின்
இன்னிறப் † பசலையுற்றிருந்தமாதரின்
தன்னிறம்பயப்பயநீங்கித்தள்ளரும்
பொன்னிறம்பொருந்தினபூகத்தாறெலாம். (ககஎ)

பயின்றுடல்குளிர்ப்பவும்பழனநீத்தவண்
இயன்றனலவிளவெயிலேந்தமெய்யன
வயின்றொறும்வயின்றொறுமடித்தவாயன
துயின்றனவிடங்கர்மாத்தடங்கடோறுமே. (ககஅ)

---

* கணக்காயர்-உபாத்தியாயர்.

† பசலை-மகளீர்மாட்டுக்காமங்கைமிக்க காலத்துக்காணுமொருவகை நிறம்.

கொஞ்சுறுங்கிளிநெடுங்குதலைகூடின
அஞ்சிறையறுபதமளகவோளிய
ஏஞ்சலில்குழையனவிடைநுடங்குவ
வஞ்சிகள்பொலிந்தனமகளிர்மாலைபோல். (௧௧௯)

அளித்தனமுத்தினந்தோற்பமானனூர்
0 வெளித்தெதிர்விழிக்கவும்வெள்கிமேன்மையால்
ஒளித்தனவாமெனவொடுங்குகண்ணன
குளித்தனமண்ணிடைக்கூனனந்தெலாம். (௧௨௦)

மழைபடப்பொதுளியமருதத்தாமரை
தழைபடப்பேரிலைப்புரையிற்றங்குவ
விழைபடப்பெடையொடுமெள்ளி * னள்ளிகள்
புழையடுத்தொடுங்கின † வச்சைமாக்கள்போல். (௧௨௧)

௯-வது. கார்காலப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௫௭௪.

---

பத்தாவது

## கிட்கிந்தைப்படலம்.



அன்னகாலமகலுமளவினில்
முன்னவீரனிளவலைமொய்ம்பினேய்
சொன்னவெல்லையினூங்குமத் ‡ தூங்கிய
மன்னன்வந்திலனென்செய்தவாறரோ. (௧)

பெறலருந்திருப்பெற்றுதவிப்பெருந்
திறனினைந்திலன்சீர்மையிற்றீர்ந்தனன்
அறமறந்தனனன்புகிடக்கநம்
மறனறிந்திலன்வாழ்வின்மயங்கினான். (௨)

நன்றிகொன்றருநட்பினைநாரறுத்
தொன்றுமெய்ம்மைசிதைத்துரைபொய்த்துளாற்
கொன்றுநீக்குதல்குற்றத்தி $ னீங்குமால்
சென்றுமற்றவன்சிந்தையைத்தேர்குவாய். (௩)

---

0 இளிங்கெதிர் விழிக்கலமென்று வெள்கியே. என்றும்பாடம்
* நள்ளிகள்-நண்டுகள். † வச்சைமாக்கள் உலோபிகள்.
‡ தூங்கிய-தாமதஞ்செய்த. $ நீங்கும்-கழியும்.

வெம்புகண்டகர்விண்புகவேறுத்
திம்மர்நல்லறஞ்செய்யவெடுத்தவிற்
கொம்புமுண்டருங்கூற்றமுமுண்டுங்கள்
அம்புமுண்டென்றுசொல்லுநம்மாணையே. (ச)

நஞ்சமன்னவரைநலிந்தாலது
வஞ்சமன்றுமனுவழக்காதலான்
* அஞ்சிலம்பதிலொன்றறியாதவன்
நெஞ்சினின்றுநிலாவநிறுத்துவாய். (ரு)

ஊருமாளுமரசுநுஞ்சுற்றமும்
நீருமாளுதிரென்பதுநேர்ந்தநாள்
வாரும்வாரலிராமெனின்வானரப்
பேருமாளுமெனும்பொருள்பேசுவாய். (சு)

இன்னுநாடுதுமிங்கிவர்க்கும்வலி
துன்னினாரையெனத்துணிந்தாரெனின்
† உன்னைவெல்லவுலகொருமூன்றினும்
நின்னலாற்பிறரின்மைநிகழ்த்துவாய். (எ)

நீதியாதிநிகழ்த்திணைநின்றது
வேதியாதபொழுதுவெகுண்டவண்
சாதியாதவர்சொற்றரத்தக்கனே
போதியாதியென்றான்புகழ்ப்பூணினான். (அ)

ஆணைசூடியடிதொழுதாண்டிறை
‡ பாணியாதுபடர்வெரிந்பாழ்படாத்
தூணிபூட்டித்தொடுசிலைதொட்டருஞ்
சேணினீங்கினன்சிந்தையுணீங்கலான். (கூ)

மாறுநின்றமரனுமலைகளும்
நீறுசென்றுநெடுநெறிநீங்கிட
வேறுசென்றனன்மென்மையனாயினும்
§ ஆறுசென்றிலனாணையினேகுவான். (க0)

விண்ணுறத்தொடர்மேருவின்சீர்வரை
மண்ணுறப்புக்கழுந்தினமாதிரம்
கண்ணுறத்தெரிவுற்றதுகட்செவி
உண்ணிறக்கழற்சேவடியூன்றலால். (கக)

* அஞ்சியல்லதொன்றறிவாரவர் என்றும் அஞ்சிலம்பதில் என்றும் பாடம். † உன்னை-என்றதிலக்குமணனை. ‡ பாணியாது காலதாமதஞ் செய்யாமல். § ஆறு-வழி.

வெம்புகானிடைப்போகின்றவேகத்தால்
உம்பர்தோயுமராமரத்தூடுசெல்
அம்பிற்சென்றனன்றடல்வாலிதன்
தம்பிமேற்செலு * மானவன்றம்பியே. (௧௨)

மாடுவென்றியொர் † மாதிரயானையின்
சேடுசென்றசெடிலொருதிக்கின்மா
நாடுகின்றதுநண்ணியகால்பிடித்
தோடுகின்றதுமொத்துளனாயினான். (௧௩)

உருக்கொளொண்கிரியொன்றினின்ஞொன்றினைப்
‡ பொருக்கவெய்தினன்பொன்னொளிர்மேனியான்
அருக்கன்மாவுதயத்தினின்றத்தமாம்
பருப்பதத்தினையெய்தியபண்பினால். (௧௪)

தன்றுணைத்தவையன்றனிவாளியிற்
சென்றுசேணுயர்கிட்கிந்தைசேர்ந்தவன்
குன்றினின்றொருகுன்றினிற்குப்புறும்
பொன்றுளங்குளைச் § சீயமும்போன்றனன். (௧௫)

கண்டவானரங்காலனைக்கண்டபோல்
மண்டியோடினவாலிமகற்கையா
கொண்டசீற்றத்தினையோன்குறுகினான்
சண்டவேகத்தினாலென்றுசாற்றலும். (௧௬)

அன்னதோன்றலுமாண்டொழிலான்வர
வின்னதென்றறிவான்மருங்கெய்தினான்
மன்னன்மைந்தன்மனக்கருத்துட்கொளாப்
பொன்னின்வார்கழற்றூதையிற்போயினான். (௧௭)

நளனியற்றியநாயகக்கோயிலுள்
தளமலர்த்தகப்பள்ளியிற்றாழ்குழல்
இளமுலைச்சியரேந்தடிவைதவா
விளைதுயிற்குவிருந்துவிரும்புவான். (௧௮)

தெள்ளியோருதவப்பெருஞ்செல்வமாம்
கள்ளினாலதிகங்களித்தான்கதிர்ப்
புள்ளிமாநெடுப்பொன்வரைபுக்கதோர்
வெள்ளிமால்வரையென்னவிளங்குவான். (௧௯)

---

* மானவன்-போர்வீரன். † மாதிரம்-திக்கு.
‡ பொருக்க-விரைவாக. § சீயம்-சிங்கம்.

* சிந்துவாரத்தருநறைதேக்கநில்
சந்தமாமயிற்சாயலர்தாழ்குழற்
கந்தமாமலர்க்காடுகடாவிய
மந்தமாருதம்வந்துறலைகுவான். (உ0)

தித்தியாநின்றசெங்கிடைவாச்சியர்
முத்தவாண்முகைமுள்ளெயிற்றூறுதேன்
பித்துமாலும்பிறவும்பெருக்கலான்
மத்தவாரணமென்னமயங்கினான். (உக)

மகுடகுண்டலமேமுதன்மண்டலத்
தகுநெடுஞ்சுடர்க்கற்றையுலாவலால்
பகலவன்சுடர்பாய்பனிமால்வரைத்
தகமலர்ந்துபொலிந்துதயங்குவான். (உஉ)

கிடந்தனன்கிடந்தானைக் † கிடைத்திரு
தடங்கைகூப்பினன்றூரைமுன்னூட்டந்த
மடங்கல்வீரனம்மாற்றம்விளம்புவான்
தொடங்கினனவனைத்துயினீக்குவான். (உங)

எந்தைகேளவ்விராமற்கிளையவன்
சிந்தையுண்ணெடுஞ்சீற்றத்திருமுகம்
தந்தளிப்பத்தடுப்பரும்வேகத்தன்
வந்தனனுன்மனக்கருத்தியாதென்றான். (உச)

இனையமாற்றமிசைத்தனனென்பதோர்
நினைவிலானெடுஞ்செல்வநெருக்கவும்
நனைநறுந்துளிநஞ்சுமயக்கவும்
தனையுணர்ந்திலன்மெல்லணைதங்கினான். (உரு)

ஆதலோடுமரசிளங்கோளரி
யாதுமுன்னின்றியற்றுவதிண்மையால்
கோதில்சிந்தையநுமனைக்கூவுவான்
‡ போதமேயினன்போதகமேயனான். (உசு)

மந்திரத்தனிமாருதிதன்னொடும்
வெந்திறற்படைவீரர்விராய்வர
அந்தரத்தின்வந்தன்னைதன்கோயிலை
இந்திரற்குமகன்மகனெய்தினான். (உஎ)

* சிந்துவாரத்தருநறை - அரும்நறை சிந்துஆரத்துஎன்று கொண்டு கூட்டுக. † கிடைத்தது-அடைந்தது.
‡ போத-போக. $ இந்திரற்குமகன் மகன்-அங்கதன்.

எய்திமேற்செயத்தக்கதென்னென்றலும்
செய்திர்செய்தற்கருநெடுந்தீயன
நொய்திலன்னவைநீக்கவுநோக்குதிர்
உய்திர்போலுமுதவிகொன்றீரெனு. (உஅ)

மீட்டுமொன்றுவிளம்புகின்றுள்படை
கூட்டுமென்றுமைக்கொற்றவன்கூறிய
நாட்டிறம்பி * னுந்நாட்டிறம்பும்மெனக்
கேட்டிலீரினிக்காண்டிர்கிடைத்திரால். (உகூ)

வாலியாருயிர்காலனும்வாங்கவிற்
கோலிவாலியசெல்வங்கொடுத்தவர்
போலுமாலும்புறத்திருப்பாரிது
சாலுமாலுங்கடன்மையினேர்க்கெலாம். (௩0)

தேவிநீங்கவத்தேவரிற்சீரியன்
ஆவிநீங்கினன்போலயர்வானது
† பாவியாதுபருகுதிர்போலுனும்
காவிநாண்மலர்க்கண்ணியர்காதனீர். (௩க)

திறம்பினீர்மெய்சிதைத்திருதவியை
நிறம்பொலீஇருங்கடவினைநேர்ந்ததால்
மறஞ்செய்வானுறின்மாளுதிர்மற்றினிப்
புறஞ்செய்தாவதெனென்கிறபோதின்வாய். (௩உ)

கோளுறுத்தற்கரியகுரக்கினம்
நீளுழத்தொடருநெடுவாயிலைத்
தாளுறுத்தித்தடவரைதந்தன
மூளுறுத்தியடுக்கினமொய்ம்பினல். (௩௩)

சிக்குறக்கடைசேமித்தசெய்கைய
தொக்குறுத்தமரத்ததுவன்றின
புக்குறுக்கிப்புடைத்துமெனப்புறம்
மிக்கிறுத்தனவெற்புமிறுத்தன. (௩௪)

காக்கவோகருத்தென்றுகதத்தினல்
பூக்கமூரற்புரவலர்புங்கவன்
தாக்கணங்குறைதாமரைத்தாளினல்
நூக்கினனக்கதவினைநொய்தினின். (௩௫)

---

* நுந்நாள்-உமது வாழ்நாள். † பாவியாது-கருதாது.
‡ தாங்கணங்கு-வீரலட்சுமி.

காவன்மாமதிலுங்கதவுங்கடி
மேவும்வாயிலடுக்கியவெற்பொடும்
தேவுசேவடிதீண்டலுந்தீண்டரும்
பாவமாமெனப்பற்றழிந்திற்றவால். (௩௬)

நொய்தினேன்கதவும்முதுவாயிலும்
செய்தகன்மதிலுந்திசையோசனை
அய்யிரண்டினளவடியற்றுக
வெய்துநின்றகுரக்கும்வெருக்கொள. (௩௭)

பரியமாமதிலும்படர்வாயிலும்
சரியவீழ்ந்ததடித்திலிடித்தலை
நெரியநெஞ்சுபிளக்கநெடுந்திசை
இரியலுற்றனவிற்றிலவின்னுயிர். (௩௮)

பகரவேயுமரிதுபரித்தெழு
புகரில்வானரமஞ்சியபூசலான்
* சிகரமால்வரைசென்றுதிரிந்துழீஇ
மகரவேலையையொத்ததுமாநகர். (௩௯)

வானரங்கள்வெருவிமலையொரீஇக்
கானெருங்குபடரவக்கார்வரை
மீனெருங்கியவானகமீனெலாம்
போனபின்பொலிவற்றதுபோன்றதே. (௪0)

அன்னகாலையினண்டகையாழியான்
பொன்னினன்னகர்வீதியிற்புக்கனன்
சொன்னதாரையைச்சுற்றினர்நின்றவர்
என்னசெய்குவதெய்தினனென்றனர். (௪௧)

அனையனுள்ளமுமாய்வளையாயலாம்
மனையின்வாயில்வழியினைமாற்றினான்
நினையும்வீரனநீணெறிநோக்கலன்
வினையமீதென்றநுமன்விளம்பினான். (௪௨)

நீரெலாமயனீங்குமினேர்ந்தியான்
வீரனுள்ளம்விளங்குவலென்றலும்
பேரநின்றனர்யாவரும்பேர்கலாத்
தாரைசென்றனடார்குழலாரொடும். (௪௩)

உரைசெய்வானரவீரருவந்துறை
அரைசர்வீதிகடந்தகன்கோயிலைப்

---

* சிகரமால்வரை-கொடுமுடிகளையுடைய பெரியமலை.

புரைசையானையன்ஞன்புகலோமெவ்
விரைசெய்வார்குழற்றுரைவிலக்கினள். (௪௪)

விலங்குமெல்லியல்வெண்ணகைவெண்மதி
இலங்குநுண்ணிடையேந்திளமென்முலைக்
குலங்கடோகைமகளிர்குழாத்தினல்
வலங்கொள்வீதிநெடுவழிமாற்றினள். (௪௫)

வில்லும்வாளுமணிதொறுமின்னிட
மெல்லரிக்குரன்மேகலையார்த்தெழப்
பல்வகைப்புருவக்கொடிபம்பிட
* வல்லியாயம்வலத்தினில்வந்ததே. (௪௬)

வேறு.

ஆர்க்குநூபுரங்கள்பேரியல்குலாந்தடந்தேரொத்த
வேற்கண்வெம்புருவம்போர்வின்மெல்லியர்வளைந்தபோது
பெர்க்கருஞ்சீற்றம்பேரமுகம்பெயர்ந்தொதுங்கிற்றல்லால்
பார்க்கவுமஞ்சினனப்பணையினுமுயர்ந்ததோளான். (௪௭)

தாமரைவதனஞ்சாய்த்துத்தனுநெடுந்தரையினூன்றி
மாமியர்குழுவின்வந்தானுமெனமைந்தனிற்பப்
பூமியிலணங்கனுர்தம்பொதுவிடைப்புகுந்துபொற்றேள்
தூமனநெடுங்கட்டாரைநடுங்குவாளினையசொன்னள். (௪௮)

அந்தமில்காலநோற்றவாற்றலுண்டாயினன்றி
இந்திரன்முதலினோரெய்தலாமியல்பிற்றன்றே
மைந்தநின்பாதங்கொண்டெம்மனைவரப்பெற்றுவாழ்ந்தேம்
உய்ந்தனம்வினையுந்தீர்ந்தேமுறுதிவேறினிநங்குண்டோ. (௪௯)

† வெய்தினீவருதனேக்கிவெருவுநுஞ்சேனைவீர
செய்திதானுணர்கிலாதுதிருவுளந்தெரித்தியென்றாள்
அய்யநீயாழிவேந்தனடியிணைபிரிகலாதாய்
எய்தியதென்னையென்றாளிசையினுமினியசொல்லாள். (௫௦)

ஆர்கொலோவுரைசெய்தாரென்றருள்வரச்சீற்றமஃகாப்
பார்குலாமுழுவெண்டிங்கள்பகல்வந்தபடிவம்போலும்
ஏர்குலாமுகத்தினளையிறைமுகமெடுத்துநோக்கித்
தார்குலாமலங்கன்மார்பன்றாயரைநினைந்துநைந்தான். (௫௧)

‡ மங்கலவணியைநீக்கிமணியணிதுறந்துவாசக்
கொங்கலர்கோதைமாற்றிக்குங்குமஞ்சாந்தங்கொட்டாப்

* வல்லியாயம்-மடவார்கூட்டம். † வெய்தில்-விரைவாக.
‡ மங்கலவணி-மங்கலசூத்திரம்.

பொங்குமெம்முலைகள்பூகக்கழுத்தொடுமெறையப்போர்த்த
நங்கையைக்கண்டவள்ளனயனங்கள்பனிப்பநின்றான். (௫௨)

இனையராமென்னையின்றவிருவருமென்னவந்த
நினைவினையர்ப்புச்சென்றநெஞ்சினனெடிதுநின்றான்
வினவினுட்கெதிரோற்மாற்றும்விளம்பவும்வேண்டுமென்றப்
புனைகுழலாட்குவந்தகாரியம்புகல்வதானான். (௫௩)

சேனையும்யானுந்தேடித்தேவியைத்தருவனென்று
மானவற்குரைத்தமாற்றமறந்தனனருக்கன்மைந்தன்
ஆனவனமைதிவல்லையறியெனவருளின்வந்தேன்
மேனிலைபனையான்செய்கைவிளைந்தவாவிளம்புகென்றான். (௫௪)

* சீறுவாயல்லையையசிறியவர்தீமைசெய்தால்
ஆறுவாய்நீயலான்மற்றருளரயர்ந்தானல்லன்
வேறுவேறுலகமெங்குந்தூதரைவிடுத்தவெல்லை
ஊறுமாநோக்கித்தாழ்த்தானுதவிமாறுதவியுண்டோ. (௫௫)

ஆயிரகோடிதூதரரிக்கணமழைப்பவானை
போயினர்புகுதுநாளும்புகுந்ததுபுகல்புக்கோர்க்குத்
தாயினுநல்லநீரேதணிதிராற்றருமஃதால்
தீயனசெய்யாராயின்யாவரேசெறுநராவார். (௫௬)

அடைந்தவர்க்கபயநீவிரருளியவளவில்செல்வம்
தொடர்ந்துநும்பணியிற்றீர்ந்தாலதுவுந்தொழிலேயன்றே
மடந்தைதன்பொருட்டால்வந்தவாளமர்க்களத்துமாண்டு
கிடந்திலரென்னிற்பின்னுநிற்குமோகேண்மையம்மா. (௫௭)

செம்மைசேருள்ளத்தீர்கள்செய்தபேருதவிதீரா
வெம்மைசேர்பகையுமாற்றியரசுவீற்றிருக்கவிட்டீர்
உம்மையேயிகழ்வரென்னினெளிமையாயொழிவதொன்றே
இம்மையேவறுமையெய்தியிருமையுமிழப்பான்றே. (௫௮)

ஆண்டுபோர்வாலியற்றன்மாற்றியதம்பொன்றுயின்
வேண்டுமோதுணைவர்நும்பால்வில்லினுமிக்கதுண்டோ
தேண்டுவார்த்தேடுகின்றீர்தேவியையதனைச்செவ்வே
பூண்டுநின்றுய்தற்பாலார்நுங்கழல்புகுந்துளோரும். (௫௯)

என்றவளுரைத்த † மாற்றம்யாவையுமினிதுகேட்டு
நன்றுணர்கேள்வியாளனருள்வரானுட்கொண்டான்
நின்றனனிற்றலோடுநீத்தனள்முனிவென்றுன்னு
வன்றுணைவயிரத்திண்டோண்மாருதிமருங்கின்வந்தான். (௬0)

* சீறுவாயல்லை-கோபங்கொள்ளாதே. † மாற்றம்-சொல்.

வந்தடிவணங்கிநின் றமாருதிவதனநோக்கி
அந்தமில்கேள்விநீயுமயர்த்தனை யாகுமன்றே
முந்தினசெய்கையென்றான் முனிவினுமுளைக்குமன்பான்
எந்தைகேட்டருளுகென் றனவியம்பினனியம்பவல்லான். (௬௧)

சிதைவகல்காதற்றாயைத்தந்தையைக்குருவைத்தெய்வப்
பதவியந்தணரையாவைப்பாலரைப்பாவைமாரை
* வதைபுரிகுநர்க்குமுண்டாமாற்றலாமாற்றன் மாயா
உதவிகொன்றார்க்கென்றேனுமொழிக்கலாமுபாயமுண்டோ. (௬௨)

ஐயநும்மோடுமெங்களரிக்குலத்தரசனோடும்
மெய்யுறுகேண்மையாகமேலைநாள்விளைவதாய
செய்கையென் செய்கையன்றோவன்னதுசிதையுமாயின்
உய்வகையெவர்க்குமுண்டோவுணர்வு † மாசுண்டதன்றோ. (௬௩)

தேவருந்தவமுஞ்செய்யுநல்லறத்திறமுமற்றும்
யாவருநீரேயென்பதென்வயிற்கிடந்ததெந்தாய்
ஆவதுநிற்கச்சேரு ‡ மரணுண்டோவருளுண்டன்றே
மூவகையுலகுங்காக்குமொய்ம்பினீமுனிவுண்டானால். (௬௪)

மறந்திலன்கவியின்வேந்தன்வயப்படைவருவிப்பாரைத்
திறந்திறமேவியன்னான்செம்மையிற்சிறியனானன்
அறந்துணைநமக்குத்தான்றன்வாய்மையையழிக்குமாயின்
பிறந்திலனன்றேயன்றோநரகமும்பிழைப்பதன்றால். (௬௫)

§ உதவாமலொருவன்செய்தவுதவிக்குக்கைம்மாறாக
மதவானையனையமைந்தமற்றுமுண்டாகவற்றோ
சிதையாதசெருவிலன்னான்முன்சென்றுசெறுநர்மார்பின்
உதையானேலுதையுண்டாவியுலையானேலுலகின்மன்னோ. (௬௬)

ஈண்டினிநிற்றலென்பதனியதோரியல்பிற்றன்றால்
வேண்டலரறிவரேனுங்கேண்மைதீர்வினையிற்றாமால்
ஆண்டகை ○ யாளிமொய்ம்பினையநீரளித்தசெல்வம்
காண்டியாலுன்முன்வந்தகவிக்குலக்கோனென்றான். (௬௭)

மாருதிமாற்றங்கேட்டமலைபுரைவயிரத்தோளான்
தீர்வினைசென்றுநின்றசீற்றத்தான்சிந்தைசெய்தான்
ஆரியனருளிற்றீர்ந்தாரல்லர்வந்தடுத்தசெல்வம்
பேரிதாகச்செய்தசிறுமையானென்னும்பெற்றி. (௬௮)

---

* வதைபுரிகுநர் - கொலைபுரிவோர் † மாசுண்டது அழுக்கடைந்தது.
‡ அரண் காவல். § உதவாமல் தானொன்றுஞ் செய்யாமல்.
○ யாளி-சிங்கம். யானையாளியுமாம்.

அனைய துகருதிப்பின்ன ரரிக்குலத் தலைனநோக்கி
வினையொருமாற் றமின்னே நிகழ்த் துவ துள துநின் பால்
இனையனவுரைத்தற்கேற் றவெண் ணுதியிவைநீயென் று
வனைகழல்வயிரத்திண்டோண் மன்னிளங்குமரன் சொல்வான். (கூகூ)

தேவியைக்குறித் துச்செய்தசீற் றமுமானத் தீயும்
ஆவியைக்குறித் துநின் றதையனையதனைக்கண்டேன்
கோவியற்றருமநீங்கக்கொடுமையோடுறவுகூடிப்
பாவியர்க்கேற் றசெய்கைகருதுவல்பழியும்பாரேன். (எ௦)

ஆயினுமென்னையானேயாற் றிநின் றுவியுற் று
நாயகன் றனையுந்தேற் றநாள்பலகழிந்தவன் றேல்
தீயுமிவ்வுலகமூன் றுந்தேவரும்வீவரொன் றோ
வீயுநல்லறமும்போகாவிதியதுவிலக்கற்பாலார். (எக)

உன்னைக்கண்டுங்கோன் றன்னையுற் றிடத் துதவும்பெற் றி
என்னைக்கண்டன்னதோர்ந் திந்நாளிடைநெடி துவைகித்
தன்னைக்கொண்டிருந்தே தாழ்த்தானன்றெனிற் றனுவொன் றாலே
மின்னைக்கண்டளையாடன்னைநாடுதல்விலக்கற்பாற் றோ. (எஉ)

ஒன் றுமோவானமின் றியுலகமும்பதினுலுள்ள
வென் றிமாக்கடலுமேமேழ்மலையுள்ளவெண்ணவேயாய்
நின் றதோரண்டத்துள்ளேயெனின துநெடியதொன் றோ
அன் றுநீர்சொன்ன * மாற் றந்தாழ்வித்த றருமமன் றால். (எங)

தாழ்வித்தீரல்லீர்பன்னுடருக்கியவரக்கர்தம்மை
வாழ்வித்தீரிமையோர்க்கின்னல்வருவித்தீர்மரபிற் றீராக்
கேள்வித்தீயாளர் துன்பங்கிளர்வித்தீர்பாவந்தன்னை
மூள்வித்தீர் முனியாதானைமுனிவித்தீர்முடிதிரென் றான். (எச)

தோன் றலஃதுரைத்தலோடுமாருதிதொழுதுதொல்லை
ஆன் றநூலறிஞபோயபொருண்மனத் † தடைப்பாயல்லை
என் றதுமுடியேமென்னிறத்துமித்திறத் துக்கெல்லாம்
சான்றெனவறவோய்போந் துன் றம்முனைச்சார் தியென் றான். (எரு)

முன் னுநீசொல்லிற் றன் றோமுயன் றதுமுயற்சிதானும்
இன் னுநீயிசைத்தசெய்வானியைந்தனமென் றுகூறி
அன்னதோரமைதியான் றனருள்சிறி தறிவானோக்கிப்
பொன்னின்வார்சிலையினுனுமாருதியோடும்போனன். (எகூ)

---

* மாற் றம்-சொல். † அடைப்பாயல்லை-வையாதே.

அயில்விழிக்குமுதச்செவ்வாய்ச்சிலைநுதலன்னப் * போக்கின்
மயிலியற்கொடித்தோல்குன்மணிநகைத்திணிவேய்மென்றோட்
குயின்மொழிக்கலசக்கொங்கைமின்னிடைக்குமிழோமூக்கின்
புயலியற்கூந்தன்மாதர்குழாத்தொடுந்தாரைபோனாள். (௭௭)

வல்லமந்திரியரோடுவாலிகாதலனுமைந்தன்
அல்லியங்கமலமன்னவடிபணிந்தச்சந்தீர்ந்தான்
வில்லியுமவனைநோக்கிவிரைவினென்வரவுவீர
சொல்லுதிநுந்தைக்கென்றானன்றெனத்தொழுதுபோனான். (௭௮)

போனபின்றாதைகோயில்புக்கவன்பொலங்கொள்பாதம்
தானுறப்பற்றிமுற்றுநுந்தைவந்ததடக்கைவீரன்
மானவற்கிளையோன்வந்துன்வாசலின்புறத்தான்சீற்றம்
மீனுயர்வேலைமேலும்பெரிதிதுவிளைந்ததென்றான். (௭௯)

அறிவுற்றுமகளிர்வெள்ளமனைவருமவனைப்பற்றிப்
பிறிவற்றமயக்கத்தான்முந்துற்றதோர்பெற்றியோரான்
செறிபொற்றாரலங்கல்வீரசெய்திலங்குற்றநம்மைக்
கறுவுற்றபொருளுக்கென்னேகாரணங்கண்டதென்றான். (௮௦)

இயைந்தநாளெல்லைநீசென்றெய்தலைசெல்வமெய்தி
வியந்தனையுதவிகொன்றாய்மெய்யிலையென்னவீங்கி
உயர்ந்ததுசீற்றமற்றதுற்றதுசெய்கைதானும்
நயந்தெரியநுமன்வேண்டநல்கினனம்மையின்னும். (௮௧)

வருகின்றவேகநோக்கிவானரவீரர்வானைப்
பொருகின்றநகரவாயிற்பொற்கதவடைத்துக்கார்க்குன்
றருகொன்றுமில்லாவண்ணம் † வாங்கினரடுக்கிமற்றும்
தெரிகின்றசினத்தீபொங்கச்செருச்செய்வானமைந்துநின்றார். (௮௨)

ஆண்டகையதனைநோக்கியம்மலர்க்கமலத்தாளிற்
றீண்டினன்றீண்டாமுன்னந்தெற்கொடுவடக்குத்தெய்வ
நீண்டகன்மதிலுங்கொற்றவாயிலுநிரைத்தகுன்றும்
கீண்டனதகர்ந்துபின்னைப்பொடியொடுங்கெழீஇயவன்றே. (௮௩)

அந்நிலைகண்டதிண்டோளரிக்குலத்தனிகமம்மா
எந்நிலையுற்றதென்கேன்யாண்டுபுக்கொளித்ததென்கேன்
இந்நிலைகண்டவன்னையேந்திழையாயத்தோடு
மின்னிலைவேலினானைவழியெதிர்விலக்கிநின்றாள். (௮௪)

* போக்கு-நடை. † வாங்கினர்-எடுத்து.

மங்கையர்மேனிநோக்கான்மைந்தனுமனத்துவந்த
பொங்கியசீற்றம்பற்றிப்புகுந்திலன்பொருமிநின்றான்
நங்கையுமினிதுகூறிநாயகநடந்ததென்னோ
எங்கள்பாலென்னச்சொன்னாளண்ணலுமினையசொன்னான். (அரு)

அதுபெரிதறிந்தவன்னையன்னவன்சீற்றமாற்றி
விதிமுறைமறந்தானல்லன்வெஞ்சினச்சேனைவெள்ளம்
கதுமெனக்கொணருந்தூதுகல்லதர்செல்லவேவி
எதிர்முறையிருந்தானென்றாளிதுவிங்குப்புகுந்ததென்றான். (அசு)

சொற்றலுமருக்கன்றோன்றல்சொல்லுவான்மண்ணின்விண்ணின்
நிற்குரியார்கள்யாவரனையவர்சினத்தினேர்ந்தால்
விற்குரியாரித்தன்மைவெகுளியின்விரைவினெய்தின்
எற்குரையாதுநீரிதியற்றியதென்கொலென்றான். (அஎ)

உணர்த்தினேன்முன்னர்நீயஃதுணர்ந்திலையுணர்விற்றீர்ந்தாய்
புணர்ப்பதொன்றின்மைநோக்கிமாருதிக்குரைப்பான்போனேன்
* இணர்த்தொகையீன்றபொற்றாரெறுழ்வலித்தடந்தோளெந்தாய்
கணத்திடையவனைநீயுங்காணுதல்கருமமென்றான். (அஅ)

உறவுண்டசிந்தையானுமுரைசெய்வானொருவர்க்கின்னம்
பெறலுண்டேயவராலீண்டியான்பெற்றபேருதவியுற்ற
திறலுண்டோவென்னிற்றீர்வானிறந்தபேரிடரையெல்லாம்
† நறவுண்டுமறந்தேன்காணநாணுவன்மைந்தவென்றான். (அகூ)

ஏயினவிதுவலான்மற்றேழைமைப்பாலதென்னோ
தாயிவண்மனைவியென்னுந்தெளிவன்றேற்றருமமென்னும்
தீவினையந்தினொன்றாமன்றியுந்திருக்குரீங்கா
மாயையின்மயங்குகின்றாமயக்கின்மேன்மயக்கும்வைத்தாம். (கூ0)

தெளிந்துதீவினையைத்தீர்ந்தோர்பிறவியைத்தீர்வரென்று
விளிந்திலாவுணர்விளொரும்வேதமும்விளம்பவேயும்
நெளிந்துறைபுழுவைநீக்கிநறவுண்டுசிறைகின்றேனால்
‡ அளிந்தகத்தெரியுந்தீயைநெய்யினாலவிக்கின்றாரில். (கூக)

தன்னைத்தானுணரத்தீருந்தகையறுபிறவியென்ப
தென்னைத்தான்மறையுமற்றதுறைகளுமிரைத்தவெல்லாம்
முன்னைத்தான்றன்னையோராமுழிப்பிணியழுக்கின்மேலே
பின்னைத்தான்பெறுவதம்மாநறவுண்டுதிகைக்கும்பித்தோ. (கூஉ)

* இணர்த்தொகை-கொத்தின்கூட்டம். † நறவுண்டு-கட்குடித்து.

‡ அளிந்து-கனிந்து.

அளித்தவரஞ்சுநெஞ்சினடைந்தவரறிவுமூழ்கிக்
குளித்தவரின்பதுன்பங்குடைந்தவர்குடைந்தவேரி
ஒளித்தவருண்டுமீண்டிவ்வுலகெலாமுணரவோடிக்
களித்தவரெய்திநின்றகதியொன்றுகண்டதுண்டோ. (௯௩)

செற்றதும்பகைஞர்நட்டார்செய்தபேருதவிதானும்
கற்றதுங்கண்கூடாகக்கண்டதுங்கலைவலாளர்
சொற்றதுமானம்வந்துதொடர்ந்ததும்படர்ந்ததுன்பம்
உற்றதுமுணராராயி * னிறுதிவேறிதனினுண்டோ. (௯௪)

வஞ்சமுங்களவும்பொய்யுமயக்கமுமரபில் † கொட்பும்
தஞ்சமென்றோரைநீக்குந்தன்மையுங்களிப்புந்தாக்கும்
கஞ்சமெல்லணங்குந்தீருங்கள்ளினாலருந்தினோரை
நஞ்சமுங்கொல்வதல்லானரகினைநல்காதன்றே. (௯௫)

கேட்டனனறவாற்கேடுவருமெனக்கிடைத்தவச்சொல்
காட்டியதனுமனீதிக்கல்வியாற்கடந்ததல்லால்
மீட்டினியுரைப்பதென்னேவிரைவின்வந்தடைந்தவீரன்
மூட்டியவெகுளியானுன்முடிவதற்கையமுண்டோ. (௯௬)

அய்யநானஞ்சினேனிந்நறவினினரியகேடு
கப்பினாலன்றியேயுங்கருதுதல்கருமமன்றால்
‡ வெய்யதாமதுவையின்னும்விரும்பினேனென்னின்வீரன்
செய்யதாமரைகளன்னசேவடிசிதைக்கவென்றான். (௯௭)

என்றுகொண்டியம்பியண்ணற்கெதிர்கொளற்கியைந்தவெல்லாம்
நன்றுகொண்டின்னுநீயேநணுகெனவனையேவித்
தன்றுணைத்தேவிமாருந்தமரொடுந்தழுவத்தானும்
நின்றனனெடியவாயிற்கடைத்தலைநிறைந்தசீரான். (௯௮)

உரைத்தசெஞ்சாந்தும்பூவுஞ்சுண்ணமும்புகையுமூழின்
நிரைத்தபொற்குடமுந்தீபசாலமுநிகழ்ந்தமுத்தும்
குரைத்தெழுவிதானத்தோடுதொங்கலுங்கொடியுஞ்சங்கும்
இரைத்துமிழ்முரசுமுற்றுமியங்கினவீதியெல்லாம். (௯௯)

தூயதிண்பளிக்கிற்செய்தசுவர்களிற்றலத்திற்சுற்றில்
நாயகமணியிற்செய்தநனிநெடுந்தூணினுப்பண்
சாயைபுக்குறலாற்கண்டோரயர்வுறக்கைவிலோடும்
ஆயிரமைந்தர்வந்தாருளரெனப்பொலிந்ததவ்வூர். (௧00)

அங்கதன்பெயர்த்தும்வந்தாண்டடியிணைதொழுதானைய
எங்கிருந்தானுங்கோமானென்றலுமெதிர்கோளெண்ணி

---

* இறுதி-அழிவு. † கொட்பு-சுழற்சி. அது-தலைச்சுற்று.
‡ வெய்யதாம்-கொடிதாகிய.

மங்குறோய்கோயில்கொற்றக்கடைத்தலைமருங்குநின்றான்
சிங்கவேறனையவீரசெய்தவச்செல்வனென்றான். (கoக)

சுண்ணமுந்தாசும்வீசிச்சூடகத்தொடிக்கைமாதர்
கண்ணகன்கவரிக்கற்றைறக்காலுறக்கலைவெண்டிங்கள்
விண்ணுறவளர்ந்ததென்னவெண்குடைவிளங்கவீர
வண்ணவிற்கரத்தான்முன்னர்க்கவிகுலத்தரசன்வந்தான். (கoஉ)

அருக்கியமுதலவாயவருச்சனைக்கமைந்தயாவும்
முருக்கிதழ்மகளிரேந்தமுரசினமுகிலினார்ப்ப
இருக்கினமுனிவரோதவிசைதிசையளப்பயாணர்த்
திருக்கிளர்செல்வநோக்கித்தேவருமருளச்சென்றான். (கoங)

வெம்முலைமகளிர்வெள்ளமீனெனவிளங்கவிண்ணிற்
சும்மைவான்மதியங்குன்றிற்றோன்றியதெனவுந்தோன்றிச்
செம்மலையெதிர்கொண்டதிருவொடுமலர்ந்தசெல்வன்
அம்மலையுதயஞ்செய்த * தாதையுமனையனானான். (கoச)

வேறு.

தோற்றியவரிகுலத்தரசைத்தோன்றலும்
ஏற்றெதிர்நோக்கினனெழுந்ததவ்வழி
சீற்றமங்கதுதனைத்தெளிந்தசிந்தையால்
ஆற்றினன்றருமத்தினமைதியுன்னுவான். (கoரு)

எழுவினுமலையினுமெழுந்ததோள்களால்
தழுவினரிருவருந்தழுவித்தையலார்
குழுவொடும்வீரர்தங்குழாத்திரேடும்புக்
கொழிவிலாப்பொற்குழாத்துறையுளெய்தினர். (கoசு)

அரியணையமைந்ததுகாட்டியையவீண்
டிருவெனக்கவிகுலத்தரசனேவலும்
திருமகட்கலைமகன் † புல்லிற்சேரவெற்
குரியதோவிஃதெனமனத்தினுன்னுவான். (கoஎ)

கல்லணைமனத்தினையுடைக்கைகேசியால்
எல்லணைமணிமுடிதுறந்தவெம்பிரான்
புல்லணைவைகயான்பொன்செய்பூத்தொடர்
மெல்லணைவைகவும்வேண்டுமோவென்றான். (கoஅ)

என்றவனுரைத்தலுமிரவிகாதலன்
நின்றனன்விம்மினன்மலர்க்கணீருகக்

* தாதை-சூரியன் † புல்லில்-தருப்பாசனத்தில்.

குன்றெனவுயர்ந்தவக்கோயிற் * குட்டிம
வான்றலத்திருந்தனன்மனுவின்கோமகன். (க0கூ)

மைந்தருமுதியருமகளிர்வெள்ளமும்
அந்தமிலேனைக்கினரழுதகண்ணினர்
இந்தியமவித்தவரெனவிருந்தனர்
நொந்தனர்தளர்ந்தனர்நுவல்வதோர்கிலர். (கக0)

மஞ்சனவிதிமு றைமாமிஞனுடினை
எஞ்சலினின் மிழ்தருர்தின் யாமெலாம்
உஞ்சனமினியெனவரசவரைத்தலும்
அஞ்சனவண்ணனுக்கனுசன்கூறுமால். (கக்க)

வருத்தமும்பழியுமேவயிறுமீக்கொள
அருத்துமென்றூலெமக்கினியதியாவாதோர்
அருத்தியுண்டாயினு மவலந்தான்றழீஇக்
கருத்துவேறுற்றபினமிழ்துங்கைக்குமால். (ககஉ)

மூட்டியபழியெனுமுருங்குதீயவித்
தாட்டினைகங்கைநீரரசன்றேவியைக்
காட்டினையெனினெமைக்கடலினூமிழ்
துட்டினையாற்பிறிதுயிருமில்லையால். (ககங)

பச்சிலைகிழங்குகாய்பரமனுங்கிய
† மிச்சிலேநுகர்வதுவேறுதாஞென்று
நச்சிலேனச்சினேஞயிஞயுண்ட
எச்சிலேயதுவிதற்கேதுவில்லையால். (ககச)

அன்றியுமொன்றுளதையயாளினிச்
சென்றனனென்கொ ளர்ந்திடைதிருத்திஞலது
நுன்றணேக்கோமகனுகர்வதாதலான்
இன்றிறைதாழ்த்தலுமினிதன்றுமென்றான். (ககரு)

வானரவேந்தனுமினிதின்வைகுதற்
மானவர்தலைமகனிடரின்வைகவே
ஆனதுகுரக்கினத்தெமர்கட்காமெஞு
மேனிலையழிந்துயிர்விம்மிஞனரோ. (ககசு)

எழுந்தனன்பொருக்கெனவிரவிகான்முளை
விழுந்தகண்ணீரினன்வெறுத்தவாழ்வினன்
அழிந்தயர்சிந்தையனனுமற்காண்டொன்று
மொழிந்தனன்வரன்முறைபோதன்முன்னுவான். (ககஎ)

---

* குட்டிமவன்றலம்-கற்படுத்ததரை.
† மிச்சில்-உண்டமிகுதி-எச்சிலென்ப.

பொயின தூதரிற்புகுதுஞ்சேனையை
நீயுடன்கொணருதிநெறிவலோயென
ஏயினனனுமனையிருத்தியீண்டென
நாயகனிருந்துழிக்கடிதுநண்ணுவான். (௧௧௮)

அங்கதனுடன்செலவரிகண்முன்செல
மங்கையருள்ளமும்வழியும்பின்செலச்
சங்கையிலிலக்குவற்றழுவித்தம்முனிற்
செங்கதிரோன்மகன்கடிதுசென்றனன். (௧௧௯)

ஒன்பதினுயிரகோடி * யூகந்தன்
முன்செலப்பின்செலமருங்குமொய்ப்புற
மன்பெருங்கிளைஞருமருங்குசுற்றுற
மின்பொருபூணினுன்செல்லும் † வேலையில். (௧௨0)

கொடிவனமிடைந்தன ‡ குமுறுபேரியின்
இடிவனமிடைந்தனபணிலமேங்கின
தடிவனமிடைந்தனதயங்குபூணொளி
பொடியெழுந்தனபடிவானம்போர்த்ததே. (௧௨௧)

பொன்னினின்முத்தினிற்புனைமென்றூசினின்
மின்னினின்மணியினிற்பளிங்கின்வெள்ளியிற்
பின்னினவிசும்பினும்பெரியபெட்புறத்
துன்னினசிவிகைவெண்கவிகைசுற்றின. (௧௨௨)

வீரனுக்கிளையவன்விரும்புஞ்சேவடி
பாரினிற்சேறலிற்பரிதிமைந்தனும்
தாரினிற்பொலங் $ கழறழங்கத்தாரணித்
தேரினிற்சேன்றனன்சிவிகைபின்செல. (௧௨௩)

எய்தினன்மானவனிருந்த ¶ மால்வரை
நொய்தினிற்சேனைபின்பொழியநோன்கழல்
அய்யவிற்குமரனுந்தானுமங்கதன்
கய்தொடர்ந்தயல்செலக்காதன்முன்செல. (௧௨௪)

கண்ணியகணிப்பருஞ்செல்வக்காதல்விட்
டண்ணலையடிதொழவணையுமன்பினுல்
நண்ணியகவிக்குலத்தரசனுடொறும்
புண்ணியற்றெருழுகழற்பரதன்போன்றனன். (௧௨௫)

* யூகம்-குரங்கு. † வேலை-சமயம். ‡ குமுறும்-இரைகின்ற. $ கழறழங்க-கழல் முழங்க. ¶ மால்வரை-பெருமலை.

பிறிவருந்தம்பியும்பிரியப்பேருல
கிறுதியிற்றானெனவிருந்தவேந்தலை
அறைமணித்தாரினோடாரம்பார்தொடச்
செறிமலர்ச்சேவடிமுடியிற்றீண்டவே. (௧௨௬)

தீண்டலுமார்பிடைத்திருவுநோவுற
நீண்டபொற்றடக்கையானெடிதுபுல்லினான்
மூண்டெழுவெகுளிபோயொளிப்பமுன்புபோல்
ஈண்டியகருணைதந்திருக்கையேவியே. (௧௨௭)

அயலினிதிருத்திநின்னரசுமாணையும்
இயல்பினினியைந்தவேபினிதின்வைகுமே
புயல்பொருதடக்கைநீபுரக்கும்பல்லுயிர்
வெயிலிலதேகுடையெனவிளம்பினான். (௧௨௮)

பொருளுடையவ்வுரைகேட்டபோழ்துவான்
உருளுடைத்தேரினோன்புதல்வனாழியின்
இருளுடையுலகினுக்கிரவியன்னநின்
* அருளுடையேற்கவையரியவோவென்றான். (௧௨௯)

பின்னரும்விளம்புவான்பெருமையோய்நின
தின்னருளுதவியசெல்வமெய்தினேன்
மன்னவநின்பணிமறுத்துவைகியென்
† புன்னிலைக்குரக்கியல்புதுக்கினேனென்றான். (௧௩௦)

பெருந்திசையனைத்தையும்பிசைந்துநேடினேன்
தருந்தகையமைந்துமத்தன்மைசெய்திலேன்
திருந்திழைதிறத்தினாற்றெளிந்தசிந்தைநீ
வருந்தினையிருப்பயான்வாழ்வின்வைகினேன். (௧௩௧)

இனையனயானுடையியல்புமெண்ணமும்
நினைவுமென்றலினிநின்றியான்செயும்
வினையுநல்லாண்மையும்விளம்பவேண்டுமோ
வனைகழல்வரிசிலைவள்ளியோயென்றான். (௧௩௨)

திருவுறைமார்பனுந்தீர்ந்ததேயும்வர்
தொருவருங்காலமுன்னுரிமையோருரை
தருவினைத்தாகையிற்றாழ்விற்றாகுமோ
பரதனீயினையனபகரற்பாலையோ. (௧௩௩)

ஆரியன்பின்னருமமைந்தநன்குணர்
மாருதியெவ்வழிமருவினானெனச்

* அருள் - தயவு. † புன்னிலை - இழிந்தசெயல்.

சூரியன்கான்முளைதோன்றுமாலவன்
நீரறும்பரவையினெடிதுசேனையான். (கஙௗ)

கோடியோராயிரங்குறித்தகோதிறு
தோடினநெடும்படைகொணரலுற்றவால்
நாடறக்குறித்ததுமின்றுநாளையவ்
* வாடலந்தானையோடவனுமெய்துமால் (கஙரு)

ஒன்பதினுயிரகோடியுற்றது
நின்பெருஞ்சேனையங்கெடியசேனைக்கு
நன்பெயரவதிநாணுளைநண்ணிய
பின்செயத்தக்கதுபேசற்பாற்றென்றான். (கஙகூ)

விரும்பியவிராமனும்வீரநிற்கதோர்
அரும்பொருளாகுமோவமைதிநன்றெனுப்
பெரும்பகலிறந்ததுபெயர்திநின்படை
பொருந்துதியெனவவன்றொழுதுபோயினன். (கஙஎ)

அங்கதற்கினியனவருளியையபோய்த்
தங்குதியுர்தையோடென்றுதாமரைச்
செங்கணன்றம்பியுந்தானுஞ்சிந்தையின்
மங்கையுமவ்வழியன்றுவைகினன். (கஙஅ)

சேயுயர்கீர்த்தியான்கதிரின்செம்மல்பாற்
போயதுமவ்வயிற்புகுந்தயாவையும்
ஒய்வுறுதுணர்த்தெனவுணர்த்தினனரோ
வாய்மையாவுணர்வுறுவலியமொய்ம்பினேன். (கஙகூ)

அன்றவணிறுத்தன † வலரிகீட்டிசைப்
பொன்றிணிநெடுவரைபொலிவுறுதமுன்
வன்றிறற்றூதுவர்கூவவானரக்
குன்றுறழ்நெடும்படையடைந்தகூறுவாம். (கசo)

கo-வது. கிட்கிந்தைப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-எகச.

---

* ஆடல்-வெற்றி அலலதுபோர். † அலரி-சூரியன்.

பதினேன்றவது

## தானைகாண் படலம்.



சதவலிவருதல்.

ஆனையாயிரமாயிரத் * தெறுழ்வலிக்கமைந்த
வானராதிபராயிரருடன்வரவகுத்த
கூனன்மாக்குரங்கையிரண்டாயிரகோடித்
தானையோடமெச்சதவலியென்பவன்சார்ந்தான். (க)

சுசேடணன் வருதல்.

ஊன்றிமேருவையெடுக்குறுமிடுக்கினுக்குரிய
தேன்றெரிந்துண்டுதெளிவுறுவானரச்சேனை
† ஆன்றபத்துநூறுயிரகோடியோடமையத்
தோன்றினன்வந்துசுசேடணனெனும்பெயர்த்தோன்றல். (உ)

உரோமை தந்தைவருதல்.

ஈறில்வேலையையிமைப்புறுமளவினிற்கலக்கிச்
சேறுகாண்குறுந்திறல்கெழுவானரச்சேனை
ஆறெறுயிரகோடியதுடன்வரவமிழ்தம்
மாறிலாமொழியுருமையைப்பயந்தவன்வந்தான். (ங)

கேசரி வருதல்.

ஐம்பதாயநூறுயிரகோடியெண்ணமைந்த
மொய்ம்புமால்வரைபுரைநெடுவானரமொய்ப்ப
இம்பர்ஞாலத்தும்வானத்துமெழுதியசீர்த்தி
‡ நம்பனைத்தந்தகேசரிகடலெனநடந்தான். (ச)

இடும்பன்வருதல்.

மண்கொள்வாளெயிற்றேனத்தின்வலியெனவயிரத்
திண்கொண்மால்வரைமயிர்ப்புறத்தனவெனத்திரண்ட
கண்கொளாயிரகோடியினிரட்டியிற்கணித்த
எண்கினீட்டங்கொண்டெறுழ்வலியிடும்பன்மந்திறுத்தான். (ரு)

கவாட்சன்வருதல்.

முனியுமாமெனினருக்கனைமுரணறமுருக்கும்
தனிமைதாங்கியவுலகையுஞ்சலம்வரிற்குமைக்கும்
குனியமாக்குரங்கீண்டியதாயிரகோடி
அனிகமுன்வரவான்பெயர்க்கண்ணன்வந்தடைந்தான். (சு)

* எறுழ்வலி-மிக்கவலி. † ஆன்ற-மிகுந்த. ‡ நம்பனை-அனுமானை.

பனசன் வருதல்.

தனிவருந்தடங்கிரியெனப்பெரியவன்சலத்தால்
நினையுநெஞ்சிறவுருமெனவுறுக்குறுநிலையன்
பனசனென்பவன்பன்னிரண்டாயிரகோடிப்
புனிதவெஞ்சினவானரப்படைகொண்டுபுகுந்தான். (எ)

நீலன் வருதல்.

இடியுமாக்கடன்முழக்கமும்வெருக்கொளவிசைக்கும்
முடிவில்பேருறுக்குடையனவிசையனமுரண
கொடியகூற்றையுமொப்பனப்பனபதிற்றைந்துகோடி
நெடியவானரப்படைகொண்டுபுகுந்தனனீலன் (அ)

ததிமுகன் வருதல்.

மாகரத்தனவுரத்தனவலியனநிலைய
வேகரத்தவெங்கண்ணுமிழ்வெயுலனமலையின்
* ஆகரத்தினும்பெரியனவாறைந்துகோடி
சாகரத்தொடுந்ததிமுகனென்பவன்சார்ந்தான். (கூ)

கயன் வருதல்.

இணைத்துவேறொருமாநிலம்வேண்டுமென்றிரங்க
முளைத்தமுப்பதினாயிரகோடியின்முற்றும்
விளைத்தவெஞ்சினத்தரியினம்வெருவுறவிரித்த
அளக்கரோடுமெக்கயனெனும்பெயரான்வந்தடைந்தான் (கo)

சாம்பன் வருதல்.

ஆயிரத்தறுநூறுகோடியிற்கடையமைந்த
பாயிரப்பெரும்படைகொண்டுபரவையிற்றிரையிற்
றூயுருத்துடனேவரத்தடநெடுவரையை
ஏயுருப்புயச்சாம்பனென்பவனும்வந்திறுத்தான். (கக)

துன்முகன் வருதல்.

வகுத்ததாமரைமலரயனிசிசரர்வாணாள்
உகுத்தநீயெனப்பொருவரும்பெருவலியுடையான்
பகுத்தபத்துநூறாயிரப்பத்தியினிரட்டி
தொகுத்தகோடிவெம்படைகொண்டுதுன்முகன்றொடர்ந்தான் (கஉ)

துமிந்தன் வருதல்.

கோடிகோடிநூறாயிரவெண்ணெனக்குவிந்த
நீடுவெஞ்சினத்தரியினமிருபுடைநெருங்க

* ஆகாரம்-உருவம்.

மூடுமும்பருமிம்பரும்பூழியின் மூழ்கத்
தோடிவர்ந்ததார்க்கிரிபுரை துமிந்தனுந்தொடர்ந்தான். (கங)

மயிந்தனும் மந்கசனும் கோழகனும் வருதல்.

இயைந்தபத்து நூறுயிரப்பத்தெனுங்கோடி
உயர்ந்தவெஞ்சினவானரப்படையொடுமொருங்கே
சயந்தனக்கொருவடிவெனத்திறல்கொடுதழைத்த
மயிந்தன்மற்கசகோமுகன் றன்னொடும்வந்தான். (கச)

குமுதன் வருதல்.

* கறங்குபோல்வனகாற்றினுங்கூற்றினுங்கடிய
பிறங்குதெண்டிரைக்கடல்புடைபெயர்ந்தெனப்பெயர்வ
மறங்கொள்வானரமொன்பதுகோடியெண்வகுத்த
திறங்கொள்வெஞ்சினப்படைகொடுகுமுதனுஞ்சேர்ந்தான். (கரு)

பதுமுகன் வருதல்.

ஏழினேழுநூறுயிரகோடியென்றிசைந்த
பாழிநன்னெடுந்தோள்கிளர்படைகொண்டுபரவை
ஊழிபேரினுமூலவிலவுலகினிலுயர்ந்த
பூழிவிண்புகப்பதுமுகனென்பவன்புகுந்தான். (கசு)

இடபன் வருதல்.

ஏழுமேழுமென் றுரைக்கின்றவுலகங்களவையும்
தாழுங்காலத்துந்தாழ்விலாத்தடவரைக்குலங்கள்
சூழுந்தோற்றத்தவலிகொடொள்ளாயிரகோடிப்
பாழிவெம்புயத்தரியொடுமிடபனும்படர்ந்தான். (கஎ)

தீர்க்கபாதனும் வினதனும் சரபனும்வருதல்.

தீர்க்கபாதனும்வினதனுஞ்சரபனுந்திரைக்கும்
ஆர்க்கருங்கடற்குயர்ந்துளமைம்முகத்தனீகம்
ஆர்க்குமெண்ணருங்கோடிகொண்டண்டமும்புறமும்
போர்க்கும்பூழியின்மறைதரமூறையினிற்புகுந்தார். (கஅ)

அனுமான் வருதல்

கய்யஞ்சாயுதமுடையவக்கடவுளைக்கண்டு
மெய்யஞ்சாதவன்மாதிரஞ்சிறிதெனவிரிந்த
வய்யஞ்சாய்தரத்திரிதருவானரச்சேனை
அய்யஞ்சாயிரகோடிகொண்டநுமன்வந்தடைந்தான். (கக)

* கறங்கு-காற்றாடி.

நளன் வருதல்.

* நொய்திற்கூடியசேனை நூறுயிரகோடி
எய்தத்தேவருமென்கொலோமுடிவென்பதெண்ண
மய்யற்சிந்தையாலந்தகன் மறுக்குற்றுமயங்கத்
தெய்வத்தச்சன்மெய்த்திருநெடுங்காதலன் சேர்ந்தான். (உ0)

கும்பனுஞ்சங்கனும் வருதல்.

கும்பனுங்குலச்சங்கனுமுதலினர்குரங்கிற்
றம்பெரும்படைத்தலைவர்கடரவந்ததானை
இம்பர்நின்றவர்க்கெண்ணரிதிராகவனுமத்
தம்பெனுந்துணைக்குரியமாறுரைப்பரிதளவே. (உக)

வானரசேனையின் மிகுதியுரைத்தல்.

தோயினூழியோரேழுநீர்சுவறிவெண்டுகளாம்
சாயினண்டமுமேருவுமொருங்குடன்சாயும்
ஏயின்மண்டலமெள்ளிடவிடமின்றிபிரியும்
காயின்வெங்கனற்கடவுளுமிரவியுங்கரியும். (உஉ)

வானரசேனையை அளவிடமுடியாதெனல்.

எண்ணினுன்முகரெழுபதினுயிரர்க்கியலா
உண்ணினண்டங்களோர்பிடியுண்ணவுமுதவா
கண்ணினேக்குறிற்கண்ணுதலானுக்குங்கதுவா
மண்ணின்மேல்வந்தவானரச்சேனையின்வரம்பே. (உங)

வானரசேனையின் ஆற்றல்கூறல்.

ஓடிக்குமேல்வடமேருவைவேரொடுமொடிக்கும்
இடிக்குமேனெடுவானகமுகட்டையுமிடிக்கும்
பிடிக்குமேற்பெருங்காற்றையுங்கூற்றையும்பிடிக்கும்
குடிக்குமேற்கடலேழையுங்குடங்கையிற்குடிக்கும். (உச)

சேனுதிபதிகள் தொகைகூறுதல்.

ஆறுபத்தெழுகோடியர்வானரர்க்கதிபர்
கூறுதிக்கினுக்கப்புறங்குப்புறற்குரியார்
மாறில்கொற்றவனினைத்தனமுடிக்குறும்வலியர்
ஊறுமிப்பெருஞ்சேனைகொண்டெளிதின்வந்துற்றூர். (உரு)

சேனுதிபதிகள் சுக்கிரீவனை வணங்குதல்

எழுமாகடற்பரப்பினும்பரப்பெனவிசைப்பச்
சூழும்வானரப்படையொடவ்வீரருந் † துவன்றி

* நொய்தில்-விரைவில். † துவன்றி-நெருங்கி.

ஆழிமாபரித்தேரவன்காதலனடிகள்
வாழிவாழியென்றுரைத்தலர் தூவினர்வணங்கி. (உ௬)

சுக்கிரீவன் இராமனை வானரசேனைகளைக் காணுமாறு வேண்டுதல்.

அனையதாகியசேனைவந்திறுத்தலுமருக்கன்
தனையனெய்தினிற்றயாதன்புதல்வனைச்சார்ந்தான்
நினையுமுன்னம்வந்தடைந்ததுநின்பெருஞ்சேனை
வினையின்கூற்றுவகண்டருணீயெனவிளம்ப. (உ௭)

சேனைகளைக்காண மலைச்சிகரத்தில் ஏறுதல்.

அய்யனும்முவந்தகமெனமுகமலர்ந்தருளித்
தய்யலாள்வரக்கண்டனனுமெனத்தளிர்ப்பான்
எய்தினனங்கோர்நெடுவரைச்சிகரத்தினிருக்கை
வெய்யவன்மகன்பெயர்த்துமச்சேனையின்மீண்டான். (உ௮)

சுக்கிரீவன் வானரப்படைகளை அழைத்துவருதல்.

அஞ்சொடையிரண்டியோசனையகலத்ததாகிச்
* செஞ்சவவடதிசைநின்றுந்தென்றிசைசெல்ல
எஞ்சலில்பெருஞ்சேனையையெழுகெனவேவி
வெஞ்சினப்படைவீரரையுடன்கொண்டுமீண்டான். (உ௯)

வந்தசேனையைக் காணுமாறு சுக்கிரீவனுரைத்தல்.

மீண்டிராமனையடைந்திகல்வென்றிவேல்வீர
காண்டிநீயெனவரன்முறைதெரிவுறக்காட்டி
ஆண்டிருந்தனனூர்த்துளைத்தெழுந்ததையன்றே
ஈண்டுசேனைபாலெறிகடனெறிபடர்ந்தென்ன. (௩0)

எட்டுத்திக்கையுமிருநிலப்பரப்பையுமிமையோர்
வட்ட † விண்ணையுமறிகடலனைத்தையுமறையத்
தொட்டுமேலெழுந்தோங்கியதூளியிற்பூழி
அட்டிச்செம்பியனிறைகுடமொத்ததவ்வண்டம் (௩௧)

அத்தியொப்பெனினன்னவையுணர்ந்தவருளரால்
வித்தகர்க்கினியுரைக்கலாமுவமைவேறியாதோ
பத்திரட்டிநன்பகலிரவொருவலர்பார்ப்பார்
எத்திறத்தினுநவேகண்டிலர்முடிவென்றே. (௩௨)

விண்ணிற்றீம்புனலுலகத்தினுகரின்வெற்றி
எண்ணிற்றன்னலதொப்பிலனெனநின்றவிராமன்

* செஞ்சவே-நேரே. † விண்-சுவர்க்கம்.

கண்ணிற்சிந்தையிற்கல்வியின்ஞானத்திற்கருதி
அண்ணற்றம்பியைநோக்கினனுரைசெய்வதானன். (௩௩)

அடல்கொண்டோங்கியசேனைக்குநாமுநம்மறிவான்
உடல்கண்டோமினிமுடிவுளகாணுமாறுளதோ
மடல்கொண்டோங்கியவலங்கலாய்மண்ணிடைமாக்கள்
கடல்கண்டோமென்பர்யாவரேமுடிவுறக்கண்டார். (௩௪)

* ஈசன்மேனியையீரைந்துதிசைகளையீண்டிவ்
வாசில்சேனையையைம்பெரும்பூதத்தையறிவைப்
பேசும்பேச்சினைச்சமயங்கள்பிணக்குறும் † பிணக்கை
வாசமாலையாயாவரேமுடிவெண்ணவல்லார். (௩௫)

இன்னசேனையைமுடிவுறவிருந்திவணோக்கிப்
பின்னைக்காரியம்புரிதுமேனுள்பலபெயரும்
முன்னைச்செய்கைமேலொருப்படலுறவதேயுறுதி
என்னவீரனைக்கைதொழுதிளையவன்விளம்பும். (௩௬)

யாவதெவ்வுலகத்தினினிங்கிவர்க்கியற்றல்
ஆவதாகுவதரியதொன்றுளதெனலாமே
தேவ ‡ தேவியைத்தேடுவதென்பதுசிறிதால்
பாவந்தோற்றதுதருமமேயென்றதிப்படையால். (௩௭)

$ தரங்கநீரெழுதாமரைநான்முகன்றந்த
வரங்கொள்பேருலகத்தினின்மற்றைமன்னுயிர்கள்
உரங்கொண்மால்வரையுயிர்படைத்தெழுந்தனவொக்கும்
குரங்கின்மாப்படைக்குறையிடப்படைத்தனன்கொல்லாம். (௩௮)

ஈண்டுதொழ்க்கின்றதென்னினியெண்டிசைமருங்கும்
§ தேண்டுவோர்களைவல்லையிற்செலுத்துவதல்லால்
நீண்டநூல்வலாயென்றனனிளையவனெடியோன்
பூண்டதேரவன்காதலற்கொருமொழிபுகலும். (௩௯)

௧௧-வது. தானைகாண்படலம் முற்றிற்று.

ஆ_ திருவிருத்தம்-எ௫௩.

---

* ஈசன்-கடவுள். † பிணக்கு-விரோதம். ‡ தேவ-தேவனே.
$ தரங்கம்-அலை. § தேண்டுவோர்-தேடுவோர்.

பன்னிரண்டாவது

## நாடவிட்டபடலம்.



இராமன் சுக்கிரீவனைப்பார்த்து நின்சேனைக் களவில்லையென்றல்.

வகையுமானமுமாறெதிர்ந்தாற்றுறு
பகையுமின்றிநிரைந்துபரந்தெழு
தகைவில்சேனைக்கமைதிசமைந்ததோர்
தொகையுமுண்டுகொலோவெனச்சொல்லினன். (க)

ஏற்றவெள்ளமெழுபதினிற்றவென்
றூற்றலாளரிவினமைந்ததோர்
மாற்றமுண்டதுவல்லதுமற்றுமோர்
தோற்றமென்னிதற்கெண்ணிமுன்சொல்வரோ. (௨)

நீலன் தூற்றலைவியத்தல்.

ஆறுபத்தெழுகோடியனீகருக்
கேறுகொற்றத்தலைவரிவர்க்குமுன்
கூறுசேனைப்பதிகொடுங்கூற்றையும்
நீறுசெய்திடுநீலனென்றோதினன். (ங)

சுக்கிரீவனை இராமன் ஆக்கவேண்டியகாரியத்தினைச் செய்யெனல்.

என்றுரைத்தவெரிகதிர்மைந்தனை
வென்றிவிற்கையிராமன் விருப்பினன்
நின்றினிப்பலபேசியென்னோநெறி
சென்றிழைப்பனசிந்தனைசெய்கென்றான். (ச)

சுக்கிரீவன் அனுமனைப்பார்த்துரைத்தல்.

அவனு * மண்ணலநுமனையையநீ
புவனமூன்றுநின்றூதையிற்புக்குழல்
தவனவேகத்தையோர்கிலைதாழ்த்தனை
கவனமாக்குரங்கின்செயல்காட்டியோ. (ரு)

ஏகியேந்திழைதன்னையிருந்துழீஇ
நாகநாகெநானிலனுகெ
போகபூமிபொருந்திடவல்லநின்
வேகமீண்டுவெளிப்படவேண்டுமால். (சா)

* அண்ணல்-பெருமை.

சுக்ரீவன் இராவணநகரந் தென்றிசையிலெனக்கூறக்கேட்டேனெனல்

தென்றிசைக்கணிராவணன்சேணகர்
என்றிசைக்கின்றதென்னறிவின்னணம்
வன்றிசைக்கினிமாருதிநீயலால்
வென்றிசைக்குரியார்பிறர்வேண்டுமோ (எ)

பிறர்கூறுமாறே யானுநினைக்கின்றேனெனல்.

வள்ளறேவியைவஞ்சித்துவௌவிய
கள்ளவாளரக்கன்செலக்கண்டது
தெள்ளியோயதுதென்றிசையென்பதோர்
உள்ளமும்மெனக்குன்டெனவுன்னுவாய். (அ)

அங்கதனுடன் இரண்டுவெள்ளஞ் சேனையோடேகென
அநுமனுக்கிசைத்தல்.

தாரைமைந்தனுஞ்சாம்பனுந்தாமுதல்
வீரர்யாவருமேம்படுமேன்மையாற்
சேர்கநின்னொடுந்திண்டிறற்சேனைகள்
பேர்கவெள்ளமிரண்டொடும்பெற்றியால். (௯)

மேற்கிற் சுசேடணனும் வடக்கில் சதவலியும் கிழக்கில்.
விநதனும் செல்கவென்றல்.

குடதிசைக்கட்சுசேடணன்குபேன்வாழ்
வடதிசைக்கட்சதவலிவாசவன்
இடதிசைக்கண்விநதன்விறற்றரு
படையொடுற்றுப்படர்கெனப்பன்னினான். (௧0)

ஒருமாதத்திற்குள் வருதிரென்றல்.

வெற்றிவானரவெள்ளமிரண்டொடும்
சுற்றியோடித் * துருவியொருமதி
முற்றுறுதமுன்முற்றுதிரிவ்விடை
கொற்றவாகையினீரெனக்கூறினான். (௧௧)

விந்தமலைக்குச் செல்லுங்களெனல்.

ஈண்டுநின் † திறந்தீரைந்துநூறெழில்
தூண்டுசோதிக்கொடுமுடிதோன்றலால்
நீண்டநேமிகொலாமெனநேர்தொழ
வேண்டும்விந்தமலையினைமேவுவீர். (௧௨)

நருமதைக்குச் செல்லுங்களெனல்.

தேடியவ்வழிதீர்ந்தபின்றேவரும்
ஆடுகின்றதறுபதமைந்திணை

* துருவி-தேடி. † இறந்து-கடந்து.

பாடுகின்றதுபன்மணிபாயிருள்
காடுகின்றருமதைநாடுவீர். (௧௩)

ஏமகூடமெய்துதிரெனல்.

* வாமமேகலைவானரமங்கையர்
காமப்பூசற்களியிசைக்கள்ளினால்
தூமமேனியசுணர்துயில்வுறும்
எமகூடமெனுமலையெய்துவீர். (௧௪)

நொய்தினம்மலைநீங்கிநுமரொடும்
பொய்கையின்கரைபிற்படப்போதிரால்
செய்யபெண்ணுக்கரியபெண்ணைச்சில
வைகறேடிக்கடிதுவழிக்கொள்வீர். (௧௫)

தண்டகம்புகுங்களெனல்.

தாங்குவாரிற்றருவளர்சந்தனம்
வீங்குவேலிவிதர்ப்பமுமெல்லென
நீங்குநாடுநெடியனபிற்படத்
தேங்குவார்புனற்றண்டகஞ்சேர்திரால். (௧௬)

முண்டகத்துறையென்னுஞ்சோலைக்குச்செல்லுதிரெனல்.

பண்டகத்தியன்வைகியதாப்பகர்
தண்டகத்ததுதாபதர்தம்மையுட்
கண்டகத்துயர்தீர்வதுகாண்டிரால்
முண்டகத்துறையென்றொருமொய்ம்பொழில். (௧௭)

ஞாலநல்லறத்தோருன்னுநற்பொருள்
போலநின்றுபொலிவதுபூம்பொழில்
சீலமங்கையர்வாயெனத்தீங்கனி
காலமின்றிக்கனிவதுகாண்டிரால். (௧௮)

நயனநன்கிமையார்துயிலார்நனி
அயனமில்லையருக்கனுக்கல்வழி
சயனமாதர்கலவித்தலைதரும்
பயனுமின்பமுநீரும்பயக்குமால். (௧௯)

பாண்டுகிரிக் கேதுங்களெனல்.

ஆண்டிறந்துபின்னந்தரத்திந்துவைத்
தீண்டுகின்றதுசெங்கதிர்ச்செல்வனும்
ஈண்டுறைந்தலதேகலனென்பது
பாண்டுவின்மலையென்னும்பருப்பதம். (௨0)

* வாமம்-அழகு.

வேறு.

கோதாவியடையுங்கள் எனல்.

முத்தீர்த்துப்பொன்றிரட்டிமணியுருட்டிமுதுநீத்தமுன்றிலாயர்
மத்தீர்த்துமானீர்த்துமலையீர்த்துமானீர்த்துவருவதியார்க்கும்
* புத்தீர்த்திட்டலையாமற்புலவர்நாடுதெவுவதுபுனிதமான
அத்தீர்த்தமகன்கோதாவிரியென்பரம்மலையினருகிற்றம்மா. (உக)

சுவணம் புகுதிரெனல்.

அவ்வாறுகடந்தப்பாலநத்தாறேயெனத்தெளிந்தவருளினறும்
வெவ்வாறுமெனக்குளிர்ந்துவெயிலியங்காவகையியங்கும்விரிபூஞ்சோலை
எவ்வாறுமுறத்துவன்றியிருளோடமணியிமைப்பதியையோர்வேண்டத்
தெவ்வாறுமுகத்தொருவன்றனிக்கிடந்தசுவணத்தைச்சேர்திர்மாதோ. ()

சூரியகாந்தி சந்திரகாந்தி கோங்கணகுலிந்தங்களை யடைதிரெனல்.

சுவணத்தைக்கடந்தப்பாற்சூரியகாந்தகமென்னத்தோன்றிமாதர்
கவணுமிழ்கல்வெயிலியங்குங்கனவரையுஞ்சந்திரகாந்தகமுங்காண்பீர்
அவணவைநீத்தேகியபின்னகனுபெலகடந்தாலநந்தனென்பான் [தோ
உவணப்திக்கொளித்துரையுங்கொங்கணமுங்குலிந்தமுஞ்சென்றுதிர்மா

அருந்ததிகிருயை யடைதிரெனல்.

அரனதிகனுலகளந்தவரியதிகனென்றுரைக்குமறிவிலோர்க்குப்
பரகதிசென்றடைவரிய † பரிசேபோற்புகலரியபண்பிற்றுமால் (லாம்
சுரநதியினயலதுவான்றேய்குடுமிச்சுடர்த்தொகையதொழுதோர்க்கெல்
வரனதிகர்தருந்தகைவருந்ததியாநெடுமலையைவணங்கியப்பால். (உச)

மரகதகிரியை யெய்துதிரெனல்.

அஞ்சிவருஞ்வெஞ்சுரனுமாறுமகன்பெருஞ்சுனையுமகிலோங்கார
மஞ்சிவருநெடுங்கிரியும்வளநாடும்பிற்படப்போய்வழிமேற்சென்றால்
நஞ்சுவருமிடற்றரவுக்கமிழ்துநனிகொடுத்தாயைக்கலுழனண்ணும்
எஞ்சின்மரகதப்பொருப்பையிறைஞ்சியதன்புறஞ்சாரவேகிர்மாதோ (உரு)

வெங்கட மடைகிரெனல்.

வடசொற்குந்தென்சொற்கும்வரம்பாகுநான்மறையுமற்றைநூலும்
இடைசொற்றபொருட்கெல்லாமெல்லையதாய்நல்லறத்துக்கீறாய்வேறு
புடைசுற்றுந்துணையின்றிப்புகழ்பொதிந்தமெய்யேபோர்பூத்துநின்ற
உடைசுற்றுந்தண்சாரலோங்கியவேங்கிடத்திற்சென்றுறுதிர்மாதோ (உசு)

வேங்கடத்து ஞானியரைப் புகழ்தல்.

இருவினையுமிடைவிடாவெவ்வினையுமியற்றுதேயிமையோரேத்தும்
திருவினையுமிடுபதந்தேர்சிறுமையையுமுறையொப்பத்தெளிந்துநோக்கி

* புத்து-ஒருநரகம். † பரிசேபோல்-தன்மைபோல.

கருவினையதிப்பிறவிக்கென்றுணர்ந்தங்கதுகளையுங்கடையின்ஞானத்
தருவினையின்பெரும்பகைராண்டுளரீண்டிருந்துமடிவணங்கற்பாலார். ()

வேங்கடத்தின் தன்மை.

சூதகற்றுந்திருமறையோர்துரையாடுநிறையாறுஞ்சுருதித்தொன்னூல்
மாதவத்தோருறைவிடனுமழையுறங்குமணித்தடனும்வானமாதர்
கீதமொத்தகின்னரங்களின்னரம்புவருடுதொறுங்கிளக்குமோதை
போதகத்தின்மழக்கன்றும்புலிப்பறழுமுறங்கிடனும்பொருந்திற்றம்மா. ()

தொண்டைநாட்டின்வழி காவிரியிந்த மெய்துதிரெனல்.

* கோடுறுமால்வரையதனைக்குறுகுதிரோலுங்கெடியகோடுமைநீங்கி
வீடுறுதிராதலான்விலங்குதிரப்புறத்துணீர்மேவுதொண்டை
நாடுறுதிருத்தனைநாடியதற்பின்னையவைநளிர்நீர்ப்பொன்னிச்
சேடுறுதண்புனற்றெய்வத்திருநதியினிருகரையுஞ் சேர்திர்மாதோ (உக)

சோணாடுமேலை நாடு தமிழ்நாடுகளிற் புகுதிரெனல்.

துக்கமுற்றூர்மனமென்னத்துறைகெழுநீர்ச்சோணாடுகடர்தாற்றொல்லை
மறக்கமுற்றுனதனயலேமறைந்துறைவரவ்வழிநீர்வல்லையேகி
உறக்கமுற்றூர்கனவுற்றாரெனுமுணர்வினோடுமொதுங்கிமணியாலோங்கர்
பிறக்கமுற்றமலைசாரனாடியகன்லமிழ்நாட்டிற்பெயர்திர்மாதோ. (௩O

மயேந்திரமுங்கடலுங் காண்டிரென்றல்.

தென்றமிழ்நாட்டகன்பொதியிற்றிருமுனிவன்றமிச்சங்கஞ்சேர்கிற்றிரேல்
என்றுமவனுறைவிடமாமாதலானம்மலையையிடத்திட்டேகிப் (கக்
பொன்றிணிர்தபுனல்பெருகும்பொருநையெனுந்திருநதியின்யொழியநா
கன்றுவளர்தடஞ்சாரன்மயேந்திரமாநெடுவரையுங்கடலுங்காண்டிர். (௩க)

அனுமானை இராமன் தனியேயழைத்து சீதை இலக்கணமுரைத்தல்.

ஆண்டுகடந்தப்புறத்துமெப்புறத்துமொருதிங்களவதியாகத்
தேண்டியிவண்வந்தடைதிர்விடைகொடீர்கடிதென்னச்செப்பும்வேலை
நீண்டவனுமாருதியைநிறையருளாலுறநோக்கிநீதிவல்லோய்
காண்டியெனுற்குறிகேட்டியெனவேறுகொண்டிருந்துகழறலுற்றான். ()

வே று.

சீதையின் பாதவருணனை.

பாற்கடற்பிறந்தசெய்யபவளத்தைப்பஞ்சியூட்டி
மேற்படமதியஞ்சூட்டிவிளங்குறநிரைத்தமெய்ய
காற்றகைவிரல்களையகமலமும்பிறவுங்கண்ட
எற்பிலவென்பதன்றியிணையடிக்குவமையென்றே. (௩௩)

* கோடு-சிகரம்.

புறவடித்திறம் புகறல்.

நீமையாயுணர்தியையநிரைவளைமகளிர்க்கெல்லாம்
வாய்மையாலுவமையாகமதியறிபுலவர்வைத்த
ஆமையாமென்றபோதுமல்லனசொல்லினாலும்
யாமயாழ்மழலையாடன்புறவடிக்கிழக்கமன்றே. (நுச)

கணைக்காற்றிறமுரைத்தல்.

வனைவராலரியகோதைபேதைமென்கணைக்கான்மெய்ய
நினைவராலரியவின்னநேர்படப்புலவர்போற்றும்
சினைவராற்பகழியாவநெற்சினையென்னுஞ்செப்பம்
எனைவராற்பகருமீட்டயானுரைத்தின்பமென்னே. (நுரு)

தொடைத்திறஞ்சொல்லல்.

* அரம்பையென்றற்குமாதர்குறங்கினுக்கமைந்தவொப்பின்
வரம்பையுங்கடந்தபோதுமற்றுரைவகுக்கலாமோ
நரம்பையுமமிழ்தநாறுநறவையுநன்னீர்ப்பண்ணைக்
கரும்பையுங்கடந்தசொல்லாள்கவாற்கிதுகருதுகண்டாய். (நுசு)

கடிதடத்திறங்கட்டுரைத்தல்.

வாராழிக்கலசக்கொங்கைவஞ்சிபோன்மருங்குலாடன்
தாராழிக்கலைசாரல்குறடங்கடற்குவமைதக்கோய்
பாராழிபிடரிற்றங்கும்பாந்தளும்பனிவெண்றேங்கும்
ஓராழித்தேருங்கண்டவுனக்குநானுரைப்பதென்னே. (நுஎ)

இடைத்திறம் இசைத்தல்.

† சட்டகந்தன்னைநோக்கியாரையுஞ்சமைக்கத்தக்காள்
இட்டிடையிருக்குந்தன்மையியம்பக்கேட்டுணர்தியென்னின்
கட்டுரைத்துவமைகாட்டக்கட்பொறிகதுவாதையிற்
றொட்டவெற்குணரலாமற்றுண்டெனுஞ்சொல்லுமில்லை. (நுஅ)

வயிற்றின்திறம்வகுத்தல்.

ஆலிலைப்படிவந்தீட்டுமையநுண்பலகைநொய்ய
பால்நிறத்தட்டம்வட்டக்கண்ணடிபலவுமின்ன
போலுமென்றுரைத்தபோதும்பூனைந்துரைபொதுமைபார்க்கின்
ஏலுமென்றிசைக்கினேலாவிதுவயிற்றியற்கையின்னும். (நுகூ)

நாபியின்றிறத்தை நவிலுதல்.

சிங்கலில்சிறு ‡ கூதாளிநந்தியின்றிரட்பூச்சேர்ந்த
பொங்குபொற்றுளையென்றாலும்புல்லிதுபுதுமைத்தாமால்

* அரம்பை-வாழை. † சட்டகம்-வடிவம்.
‡ கூதாளி-ஒருவகைத்தாளி.

அங்கவளுந்தியொக்குஞ்சுழியெனக்கணித்ததுண்டால்
கங்கையைநோக்கிச்சேறிகடலினுநெடிதுகற்றோய். (சo)

உரோமரேகைத்திறம் உரைத்தல்.

மயிரொழுக்கெனவொன்றுண்டால்வல்லிசேர்வயிற்றீன்மற்றென்
உயிரொழுக்கதற்குவேண்டுமுவமையொன்றுரைக்கவேண்டின்
செயிரில்சிற்றிடையாயுற்றசிறுகொடிநுடக்கந்தீரக்
குயிலுறுத்தமையவைத்தகொள்கொம்பென்றுணர்ந்துகோடி. (சக)

வயிற்றிலுள்ள மூன்றிரேகைகளைக்குறித்துரைத்தல்.

* அல்லியூன்றிடுமென்றஞ்சியரயிந்தத்துறந்தாட்கம்பொன்
வல்லிமூன்றுளவாற்கோலவயிற்றின்மற்றவையுமார
வில்லிமூன்றுலகின்வாழுமாதருந்தொற்றமெய்ம்மை
சொல்லியூன்றியவாம்வெற்றிவரையெனத்தோன்றுமன்றே. (சஉ)

தனபாரத்திறஞசாற்றல்.

செப்பென்பென்கலசமென்பென்செவ்விளநீருந்தேர்வென்
† துப்பொன்றுதிரள்சூதென்பன்சொல்லுவென்றும்பிக்கொம்பைத்
தப்பின்றிப்பகலின்வந்தசக்கரவாகமென்பென்
ஒப்பொன்றுமுலகிற்காணேன்பலநினைந்துலவெனின்னும். (சங)

தோட்டிறஞ்சொல்லல்.

கரும்புகண்டாலும்மாலைக்காம்புகண்டாலுமாலி
அரும்புகண்டாரைசோரவழுங்குவேனறிவதுண்டோ
சுரும்புகண்டானுங்கோதைதோணினைந்துவமைசொல்ல
இரும்புகண்டனையநெஞ்சமெனக்கிலையிசைப்பதென்னே. (சச)

முன்கைகளின் தன்மைகூறுதல்

முன்கையேயொப்பதொன்றுமுண்டுமூன்றுலகத்துள்ளும்
என்கையேயிழுக்குமன்றேயியம்பினுங்காந்தளென்றல்
வன்கையாழ்மணிக்கையென்றன்மற்றொன்றையுணர்தலன்றி
நன்கையாடக்கையாமோநலத்தின்மேனலமுண்டாமோ, (சரு)

கைகளின்தன்மை ஒப்பற்றதெனல்.

ஏலக்கொண்டென்ற ‡ பிண்டியிளந்தளிர்கிடக்கயாணர்
காலைக்கற்பகத்தின்காமர்குழைபடுங்கமலமென்பூ
தூலொக்குமருங்குலாட ஞாபுரம்புலம்புங்கோலக்
காலுக்குத்தொலையுமென்றூர்கைக்கொப்புவைக்கலாமோ. (சசு)

---

* அல்லி-அகவிதழ். † துப்பு-தூய்மை.
‡ பிண்டி-அசோகு.

ந்கங்களின்தன்மைகூறல்.

வெள்ளியமுறுவற்செவ்வாய்விளங்கிழையிளம்பொற்கொம்பின்
* வள்ளுகிர்க்குவமைநம்மான் மயர்வறவகுக்கலாமோ
எள்ளுதிர்நீரேழுக்கையென் றுகொண்டிவறிப்பின்னும்
கிள்ளைகண்முருக்கின்பூவைக்கிழிக்குமஃதழிக்கலாமோ. (சஎ)

கழுத்தின்தன்மைகழறுதல்

அங்கையுமடியுங்கண்டாலரவிந்தமினையுமாபோல்
செங்களிசிதறிநீலஞ்செருநகியதெய்வவாட்கண்
மங்கைதன்கழுத்தைநோக்கிவளரிளங்கமுகும்வாரிச்
சங்கமுமினைதியாயினவையென் றுதுணிதிநக்கோய். (சஅ)

அதரமுறுந்திறமறைதல்.

பவளமுங்கிடையுங்கொவ்வைப்பழனும்பைங்குமுதப்போதும்
துவளிலவங்கங்கோபமுருக்கென்றித்தொடக்கஞ்சாலத்
தவளமென் றுரைக்கும்வண்ணஞ்சிவந்துதேன் றதும்புமாகின்
குவளையுண்கண்ணிவண்ணவாயதுகுறியுமஃதே. (சகூ)

வாயின்திறம்வகுத்தல்.

சிவந்ததோரமிழ்தமில்லைத்தேனில்லையுளவென்றாலும்
கவர்ந்தபோதன்றியுள்ளமினைப்பவோர்களிப்புநல்கா
பவர்ந்தவானுதலினுடன்பவளவாய்க்குவமைபாவித்
துவர்போதுவர்தவண்ணமுரைத்தபோதுரைத்ததாமோ. (ருO)

பற்களின்தன்மைபகர்தல்.

முல்லையுமுருந்துமுத்துமுறுவலென் றுரைத்தபோது
சொல்லையுமமிழ்தும்பாலுந்தேனுமென் றுரைக்கத்தோன் றும்
அல்லதொன் றுவதில்லையமிழ்திற்குமுவமையுண்டோ
வல்லையேலறிந்துகோடிமாறிலாவாறுசான்றோய். (ருக)

மூக்கின்திறமுரைத்தல்.

ஓதியுமெள்ளுந்தொள்ளைக்குமிழுமூக்கொக்குமேற்ற
சோதிசெம்பொன்னுமின்னுமணியும்போற்றுளங்கித்தோன்று
எதுவுமில்லைவல்லாரெழுதுவார்க்கெழுதவொண்ணு
நீதியைநோக்கிநீயேமினைதியானெடிதுகாண்பாய். (ருஉ)

காதின்தன்மைகழறுதல்.

† வள்ளைகத்தரிகைவாமமயிர்வினைக்கருவியென்னப்
பிள்ளைகளுரைத்தவொப்பைப்பெரியவருரைக்கிற்பித்தாம்

* வள்ளுகிர்-கூரியநகம். † வள்ளை-ஒருகொடி.

வெள்ளைவெண்டோடுசெய்தவிழுத்தவம்விளைந்ததென்றே
உள்ளுதியுலகுக்கெல்லாமுவமைக்குமுவமையுண்டோ. (௫௨.)

கண்களின்திறங்கள்கூறுதல்

பெரியவர்ப்பரவையொவ்வாபிறிதொன்றுமினைந்துபேச
உரியவாயொருவருள்ளத்தடங்குவவல்லவுண்மை
தெரியவாயிரக்காணோக்கிற்றேவர்க்குந்தெய்வமென்னக்
கரியவாய்வெளியவாகும்வாட்டடங்கண்களம்மா. (௫௪)

புருவங்களின் தன்மைகூறுதல்

கேளாக்குமன்றியொன்றுகிளத்தினாற்கீழ்மைத்தாமே
கோளொக்குமென்னினல்லாற்குறியொக்கக்கூறிற்றன்றால்
வாளொக்கும்வடிக்கணுடன்புருவத்துக்குவமைவைக்கின்
தாளொக்க † வளைந்துநிற்பவிரண்டில்லையநங்கசாபம். (௫௫)

முகம்நெற்றிஇவைகளையுரைத்தல்.

நன்னாளுநளினநாணுமுகத்தினைநுதலைநாடிப்
பன்னாளும்பன்னியாற்றுமதியெனும்பண்பதாகி
முன்னாளின்முளைவெண்டிங்கண்முறைநாளுங்குறைவேயாகி
என்னாளும்வளர்ந்ததென்னினிறையொக்குமியல்பிற்றுமே (௫௬)

பின்னுமுகத்தின்திறங்கூறுதல்.

வனைபவரில்லையன்றேவனத்துணும்வந்தபின்னை
அனையனவெனினுந்தாந்தமழகுக்கோரழிவுண்டாகா
வினைசெயக்குழன்றவல்லவிதிசெயவிளைந்தநீலம்
புனைமணிப்பவளமின்னும்புதுமையாமுவமைபூணா. (௫௭)

முகத்தின் தன்மையுரைத்தல்.

கொண்டலின்குழவியாம்பல்குனிசிலைவள்ளைகொற்றக்
கெண்டையொண்டரளமென்றிக்கேண்மையகிடந்ததிங்கண்
மண்டிலவதனமென்றுவைத்தனன்விதியேநீயப்
புண்டரீகத்தையுற்றபொழுததுபொருந்தித்தேர்வாய். (௫௮)

கூந்தலின்திறங் கூறுதல்.

காரினைக்கழித்துக்கட்டிக்கள்ளினோடாவிகாட்டிப்
பேரிருட்பிழம்புதோய்ந்துநெறிவுறீஇப்பிறங்குகற்றைச்
சோர்குழற்றொகுதிச்சூழல்சும்மைசெய்தனையதம்மா
நேர்மையைப்பருமைசெய்தநிறைநறுங்கூந்தனீத்தம். (௫௯)

† வளர்ந்தே என்றும்பாடம்.

* புல்லிதழ்கமலத்தெய்வப்பூவிற்குமுண்டுபொற்பின்
எல்லைசூழ்மதிக்குமுண்டாங்களங்கமென்றுரைக்குமேதம்
அல்லவுஞ்சிறிதுகுற்றமகன்றிலவன்னமன்ன
நல்லியலாளுக்கெல்லாநலனன்றிப்பிறிதுண்டாமோ. (௬௦)

திரிமகளினுஞ் சீதை இலக்கணநிரம்பினவள்எனல்.

மங்கையர்க்கோதிவைத்தவிலக்கணம்வண்ணவாசப்
பங்கயத்தவட்குமையாரிரம்பலபற்றிநோக்கின்
செங்கயற்கருங்கட்செவ்வாய்த்தேவரும்வணங்குந்தெய்வக்
கொங்கையைக்குயிலுக்கொன்றுங்குறைவிலகுறியுமஃதே. (௬௧)

சொல்லின்தன்மைசொல்லுதல்.

குழல்படைத்தியாழைச்செய்துகுயிலொடுகிளியுங்கூட்டி
மழலையும்பிறவுந்தந்துவடித்தகைம்மலரின்மேலான்
இழைபொருமுலையினுடனின்சொற்களியையச்செய்தான்
பிழையிலனுவமைகாட்டப்பெற்றிலன்பெறுங்கொலின்னும். (௬௨)

மொழிக்குவமையிலையெனல்.

வானின்றவுலகமூன்றும்வரம்பின்றிவளர்ந்தவேனும்
நானின்றசுவைமற்றொன்றேவமிழ்தன்றிநல்லதில்லை
மீனின்றகணணினுடன்மென்மொழிக்குவமைவேண்டின்
தேனென்றேவமிழ்தமொன்றேவகைசெவிக்கின்பஞ்செய்யா. (௬௩)

நடத்திறங்கூறுதல்.

பூவருமழலையன்னம்புனைமடப்பிடியென்றின்ன
தேவருமருளத்தக்கசெலவினவெனவுந்தேரேன்
பாவருங்கிழமைத்தொன்மைப்பருணிதர்தொடுத்தபத்தி
நாவருங்கிளவிச்செல்விநடைவருநடையணல்லோய். (௬௪)

நிறத்தின்தன்மைகூறுதல்,

என்னிறமுரைக்கேன்மாவினினநிறமுதிருமற்றைப்
பொன்னிறங்கறுக்குமென்றுண்மணிநிறமுவமைபோதா
மின்னிறநாணியெங்கும்வெளிப்படாவொளிக்கும்வேண்டின்
தன்னிறந்தானேயொக்குமலர்நிறஞ்சமழ்க்குமன்றே (௬௫)

எம்மங்கையும் இவட்கொப்பன்றெனல்,

மங்கையரவளையொப்பார்மற்றுளரில்லையென்னும்
† சங்கையிலுள்ளந்தானேசான்றெனக்கொண்டுசொன்றேய்
அங்கவணிலமையெல்லாமளந்தறிந்தருகுசார்ந்து
திங்கள்வாண்முகத்தினுட்குச்செப்பெனப்பின்னுஞ்செப்பும். (௬௬)

* புல்லிதழ்-புறவிதழ். † சங்கையில்-சந்தேகமற்ற

வே று

கன்னிமாடத்திடைக்கண்டதுகூறெனல்.

முன்னைநான்முனியொடும்முதியநீர்மிதிலைவாய்ச்
சென்னிநீண்மாலையான்வேள்விகாணியசெல
அன்னமாடுறைநயுளுக்கருகுநின்ருளையக்
கன்னிமாடத்திடைக்கண்டதுங்கழறுவாய். (சுஎ)

சனகன்சபையில் கண்டதை யுரையெனல்.

* சூழிமால்யானையின்றுனைமருப்பிணைபெனக்
கேழிலாவனமுலைக்கிரிசுமந்திடைவதோர்
வாழிவான்மின்னிளங்கொடியின்வந்தாளையன்
ருழியானரசவைக்கண்டதும்மறைகுவாய் (சு

வில்லிறுத்தவன்வேறெநவனேல்உயிர்விடுவேனென்றதையுரையெனல்

வரைசெய்தாள்வில்லிறுத்தவனமாமுனியொடும்
விரசினனல்லனேல்விடுவல்யானுயிரெனுக்
கரைசெயாவேலையிற்பெரியகற்பினடெரிந்
துரைசெய்தாளஃதெலாமுணரநீயுரைசெய்வாய்- (சுகூ)

வனத்துக்குவந்து துன்பந்தரித்தியோ வென்றேனதனையுரையெனல்.

முன்புநாநதிகிலாமுளிநெடுங்கானிலே
என்பினேபோதுவாய்நினைதியோவேழைநீ
இன்பமாயாருயிர்க்கினியையாயினையினித்
துன்பமாய்முடிதியோவென்றதுஞ்சொல்லுவாய். (எ0)

யானலாதனவேலா மினியவோவெனக் கேட்டதையுரையெனல்.

ஆனபோரரசிழந்தடவிசேர்வாயுனக்
கியானலாதனவேலாமினியவோவினியெனு
மீனுலாநெடுமலர்க்கண்கணீர்விழவிழுந்
தானிலாவுயிரின்வந்தயர்வதும்முரைசெவ்வாய். (எக)

மதிற்கதவுகடத்தற்கு முன்னரோ கான்மெங்ஙனென்றதையுரையெனல்.

† மல்லன்மாநகர்துறந்தேகுநாண்மதிதொடும்
கல்லின்மாமதின்மணிக்கடைகடந்திடுதன்முன்
எல்லைதீர்வரியவெங்கானம்யாதோவெனுச்
சொல்லினளஃதெலாமுணரநீசொல்லுவாய். (எ௨)

* சூழி-முகபடாம். † மல்லல்-வளம்

மோதிரமளித்தல்.

இனையவாறுரைசெயாவினிதினேகுதியெனு
வனையுமாமணிநன்மோதிரமளித்தறிஞரின்
வினையெலாமுடிகெனுவிடைகொடுத்துதவலும்
புனையும்வார்கழலினனருளொடும்போயினன். (எரு)

சீதையைத்தேட வானரவீரர் போதல்.

அங்கதக்குரிசிலோட்டுசினத்துழவராம்
வெங்கதத்தலைவரும்விரிகடற்படையொடும்
பொங்குவிற்றலைவரைத்தொழுதுமுன்போயினர்
செங்கதிர்ச்செல்வனைப்பணிவுறுஞ்சென்னியார். (எசு)

கஉ-வது. நாடவிட்டப்படலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் அஉஎ.

---

பதின்மூன்றவது.

## பி ல நீ ங் கு ப ட ல ம்.



போயினர்போயபின்புறநெடுந்திசைகடோ
றேயினனிரவிகாதலனுமேயினபொருட்
காயினரவரையங்கன்னநாளவதியிற்
றாயினருலகினைத்தகைநெடுந்தானையார். (க)

குன்றிசைத்தனவெனக்குவவுதோள்வலியினர்
மின்றிகைத்திடுமிடைக்கொடியைநாடினர்வீராய்
வன்றிசைப்படருமாறொழியவண்டமிழுடைத்
தென்றிசைச்சென்றுளார்திறனெடுத்துரைசெய்வாம். (உ)

வானரர் விந்தபர்வதமடைதல்.

சிந்துராகத்தொடுந்திரண்மணிச்சுடர்செறிந்
தந்திவானத்தினின்றவிர்தலானரவினோ
டிந்தியாறெய்தலானிறைவன்மாமௌலிபோல்
விந்தைநாகத்தின்மாடெய்தினர்வெய்தினால். (ங)

சீதையை விந்தத்திற்றேடுதல்.

அந்நெடுங்குன்றமோடவிர்மணிச்சிகரமும்
பொன்னெடுங்கொடுமுடிப்புரைகளும்புடைகளும்

கன்னெடுந்தாழ்வரைநாடினர் * நவையிலார்
பன்னெடுங்காலமாமென்னவோர்பகலிடை. (௫)

மல்லன்மாஞாலமோர்மறுவுருவகையினச்
† சில்லலோதியையிருந்துறைவிடந்தேடுவார்
புல்லினுருலகினைப்பொதுவிலாலகையினுல்
எல்லைமாகடல்களேயாகுமாயெய்தினர்' (௬)

விண்டுபோயிழிவர்மேனிமிர்வர்விண்படர்வர்வேர்
உண்டமாமரனினம்மலையும்வாயுறையுநீர்
மண்பொரதனின்வாழுயிர்களம்மதியினர்
கண்டிலாதனவயன்கண்டிலாதனகொலாம். (௬)

வேறு.

வானரர்நருமதைநதியையடைதல்.

ஏகினர்யோசனையேழொடேழுபார்
சேகரத்தென்றிசைக்கடிதுசெல்கின்றார்
மேகமாலையினெடும்விரவிமேதியின்
நாகுசேர்நருமதையாறுநண்ணினர். (௭)

வானரர்நருமதைக்கரைகளிலுந் துறைகளிலுந்தேடுதல்.

அன்னமர்டிடங்களுமமரர்நாடியர்
துன்னியாடிடங்களுந் துறக்கமேயவர்
முன்னியாடிடங்களுஞ் ‡ சுரும்புமூசுதேன்
பன்னியாடிடங்களும்பாரந்துசுற்றினர். (௮)

பெறலருஞ் § தெரிவையைநாடும்பெற்றிடார்
அறனறுங்கூந்தலுமளகவண்டுசூழ்
நிறைநறுந்தாமரைமுகமுநித்தில
முறுவலுங்காண்பரான்முழுதுங்காண்கிலார் (௯)

செருமதயாக்கையர்திருக்கில்சிந்தையர்
தருமதயாவிவைதழுவுந்தன்மையர்
பொருமதயானையும்பிடியும்புக்குழல்
நருமதையாமெனுநதியைநீங்கினர். (௧௦)

வானரர் ஏமகூடமலையையடைதல்.

தாமகூடத்திரைத்தீர்த்தசங்கமும்
காமகூடப்பெருந்திசையையநல்கிய

* நவையிலார்-குற்றமிலாதார். † சில்லலோதி-தகட்டணி நீத்தகூந்தல்'
‡ சுரும்புமூசும-வண்டுகள்மொய்க்கும். § தெரிவை-சனகி.

வாமகூடச்சுடர்மணிவயங்குறும்
ஏமகூடத்தடங்கிரியையெய்தினர். (கக)

இதுமுதல் ச-பாடல் ஏமகூடத்திறமுரைத்தல்.

மாடுறுகிரிகளுமரனுமற்றவும்
சூடுறுபொன்னெனப்பொலிந்துதோன்றுறப்
பாடுறுசுடரொளிபரப்புகின்றது
வீடுறுமுலகினும்விளங்குமெய்யது (கஉ)

பறவையும்பல்வகைவிலங்கும்பாடமைந்
துறைவனகனகநுண்பூழியொட்டலான்
நிறைநெடுமேருவைச்சேர்ந்தகீரவாய்ப்
பொறைநெடும்பொன்னொளிமுழுதும்போர்ப்பது. (கங)

பரவியகனகநுண் * பராகம்பாடுற
எரிசுடர்ச்செம்மணியீட்டத்தோடிழி
அருவியுநதிகளுமலங்குதீயிடை
உருகுபொன்பாய்வபோன்றொழுகுகின்றது. (கச)

விஞ்சையர்பாடலும்விசும்பின்வெள்வளைப்
பஞ்சின்மெல்லடியினராடற்பாணியும்
குஞ்சரமுழக்கமுங்குமுறுபேரியின்
மஞ்சினமுற்றலும்வயங்குமாண்பது. (கரு)

இதுமுதல் ச-பாடல் அவ்வேமகூடத்தில் சீதையைத்தேடுதல்.

அனையதுநோக்கினரமிர்தமாமயில்
இனையவேலிராவணனிருக்கும்வெற்பெனும்
நினைவினருவந்துயர்ந்தோங்குநெஞ்சினர்
சினமிகக்கனற்பொறிசிந்துசெங்கணர். (கசு)

இம்மலைகாணுதுமேழைமானையச்
செம்மலைநீக்குதுஞ்சிந்தைத்தீவினை
விம்மலுற்றுவகையின்விளங்குமுள்ளத்தார்
அம்மலையேறினராச்சநீங்கினர். (கஎ)

இரிந்தனகரிகளும்யாளியீட்டமும்
விரிந்த † கோளரிகளும்வெருவிநீங்கின
திரிந்தனரெங்கணுந்திருவைக்காண்கிலார்
பரிந்தனசிந்தனைபரிகின்றுமென. (கஅ)

ஐம்பதிற்றிரட்டிகாவதத்தினலகன்
றும்பரைத்தொடுவதொத்துயர்விளோங்கிய

* பராகம்-பொடி. † கோளரி-சிங்கம்.

செம்பொனற்கிரியையோர்பகலிற்றேடினார்
கொம்பினைக்கண்டிலர்குப்புற்றேகினார். (௧௯)

வெள்ளமோரிரண்டெனவிரிந்தசேனையைத்
தெள்ளுநீருலகெலாந்தெரிந்துதேடினார்
எள்ளருமகேந்திரத்தெம்மிற்கூடுமென்
றுள்ளினாருயர்நெடுமோங்கனீங்கினார். (௨0)

வானரர் பாலைவனமடைதல்.

மாருதிமுதலியவயிரத்தோள்வயப்
போர்கெழுவீரரேகுழுமிப்போகின்றார்
நீரெனும்பெருமந்நெறியினீங்கலால்
சூரியன்வெருவுமோர்சுரத்தைநண்ணினார். (௨௧)

இதுமுதன் மூன்றுபாடல் பாலைத்திறம்.

புள்ளடையாவிலங்கரிதுபுல்லொடும்
கள்ளடைமரனிலகல்லுந்தீந்தக
உள்ளிடையரவநுண்பொடியொடொட்டலின்
வெள்ளிடையல்லதொன்றரிதவ்வெஞ்சுரம். (௨௨)

நன்புலனடக்குறவுணர்வுநாமறப்
பொன்பொலியாக்கைகள்புழுங்கிப்பொங்குவார்
தென்புலத்தங்கெரிநரகிற்சிந்திய
* என்பில்பல்லுயிரெனவெம்மையெய்தினார். (௨௩)

நீட்டியநாவினர்நிலத்திற்றீண்டுதோ
றூட்டியவெம்மையாலுலையுங்காலினர்
காட்டினுங்காய்ந்ததங்காயந்தீதலால்
சூட்டகன்மேலெழும்பொரியிற்றுள்ளினார். (௨௪)

வானரர் பிலவழியடைதல்.

ஒதுங்கலாநிழலினைக்காண்கிலாதுயிர்
பிதுங்கலாமுடலினர்முடிவில் † பீழையார்
பதங்கடைப்பருசிடப்பதைக்கின்றார்பல
விதங்கொளாநெடும்பிலவழியின்மேவினார். (௨௫)

பிலத்தினுட் புகுதல்.

மிச்செலவரிதினிவிளியினல்லது
தீச்செலவொழியவுந்தடுக்குந்திண்பில

---

* என்பில்பல்லுயிர்-எலும்பற்ற பலவகைக்கீடமாதியவுயிர். கீடம்புழு
† பீழையார்-துன்பத்தினார்.

வாய்ச்செலனன்றெனமனத்தினெண்ணினர்
போய்ச்சிலவறிதுமென்றதனிற்போயினர். (உசு)

பிலத்தினுட்புரைக்கூட்புகுதல்.

அக்கணத்திப்பிலத்தந்தமெய்தினர்
திக்கினெலெகுறச்செறிந்ததேங்கிருள்
எக்கியகதிரவற்கஞ்சியேமுறப்
புக்கதேயனையதோர்புரைபுக்கெய்தினர். (உஎ)

இருட்டினால் மூச்சுமுட்டுதல்.

எழுகிலர்காலெடுத்தேகுமெண்ணிலர்
வழியுளதாமெனுமுணர்வுமாற்றினர்
இழுகியநெய்யெனுமிருளினேகத்துள்
முழுகியமெய்யன * வுயிர்ப்புமுட்டினர். (உஅ)

வானரர் அனுமனைத் தம்மைக்காக்கவேண்டுதல்.

நின்றனர்செய்வதோர்நிலைமைநோக்கலர்
பொன்றினராமெனப்பொருமும்புந்தியர்
வன்றிறன்மாருதிவல்லையோவெமை
இன்றிதுகாக்கவென்றிரந்துகூறினர். (உகூ)

அனுமான்தன்வாலை வானரரைப்பிடிக்கச்செய்துகையாற்
தடவிப்போதல்.

உய்வுறுத்துவென்மனமூலையிருழின்வால்
மெய்யுறப்பற்றுதிர்விடுகிலீரென
அய்யனக்கணத்தினின்றகலுநீணெறி
கய்யினிற்றடவிவெங்காலினேகினன். (௩0)

பன்னிரண்டியோசனைபடர்ந்தமெய்யினன்
மின்னிரண்டனையகுண்டலங்கள்வில்லிடத்
துன்னிருடொலைந்திடத் † துருவியேகினன்
பொன்னெடுங்கிரிநிகர்பொலிந்ததோளினன். (௩க)

பிலத்துளோரு நகரங்காணுதல்.

கண்டனர் ‡ கடிநகர்கமலத்தொண்கதிர்
மண்டலமறைந்துறைந்தனையமாண்பது
விண்டலநாணுறவிளங்குகின்றது
புண்டரிகத்தவள்வதனம்போன்றது. (௩உ)

* உயிர்ப்பு-சுவாசம். † துருவி-ஆராய்ந்து. ‡ கடி-ஒளி.

இதுமுதலத்துபாடல் பிலநகர்வருணனை.

கற்பகக்கானதுகமலக்காடது
பொற்பெருங்கோபுரப் * புரிசைபுக்கது
அற்புதவமரருமெய்தலாவது
சிற்பமுமயன்மனம்வருந்திச்செய்தது. (௩௩)

இந்திரநகரமுரிகரிலாதது
மந்திரமணியினிற்பொன்னின்மண்ணினின்
அந்தரத்திழிசுடரவையின்றுயினும்
உந்தருமிருளேர்ந்தொளிரநின்றது. (௩௪)

புவிபுகழ்சென்னிபேரமலன்றோள்புகழ்
கவிகடமனையெனக்கனகராசியும்
சவியுடைத்துசுமென்சாந்துமாலையும்
அவிரிழைக்குப்பையுமளவிலாதது. (௩௫)

பயில்குரற்கிண்கிணிபரந்தபாவையர்
இயல்புடைமைந்தரென் † றியக்கிலாமையால்
துயிலவுநோக்கவுந்துணையதன்றியும்
உயிரிலாவோவியமென்னவொப்பது. (௩௬)

அமிழ்துலையயினியையடுத்தவுண்டியம்
தமிழ்நிகர்நறவுநந்தணிதண்டேறலும்
இமிழ்கனிப்பிறக்கமும்பிறவுமின்னன
கமழ்வுறத்தோன்றியகணக்கில்கொட்பது (௩௭)

வேறு.

இஃதிராவணநகரமென வானரர் கருதிச்செல்லுதல்

கன்னிநெடுமாநகரமன்னதெதிர்கண்டார்
இந்நகரவாமிகலிராவணனதூரென்
றுன்னியுரையாடினருவந்தனர்வியர்ந்தார்
பொன்னினெடுவாயிலதனூடுநனிபுக்கார். (௩௮)

அந்நகரினுள் மனிதர்முதலிய எவ்வுயிருமில்லாமைகாணுதல்.

புக்கநகரத்தினிதுநாடினர்புகுந்தார்
மக்கள்கடைதேவர்தலைவானுலகின்வையத்
தொக்கவுறைவோருருவமோவியமலான்மற்
றெக்குறியினுள்ளவுமெதிர்ந்திலர்திரிந்தார். (௩௯)

* புரிசை-மதில். † இயக்கிலாமைபால்-சஞ்சாரமின்மையால்.

வாவியுளபொய்கையுளவாசமணநாறும்
காவுமுளகாவிவிழியார்மொழிகளென்னக்
கூவுமிளமென்குயில்கள்பூவைகிளிகோலத்
தூவிமடவன்னமிலையுள்ளசுவடில்லை. (௬0)

அந்நகரினை மாயாசாலமோ அல்லதுசுவர்க்கமோவென அவர்நினைதல்.

ஆயநகரத்தினியல்புள்ளுறவறிந்தார்
மாயைகொலெனக்கருதிமற்றுநினைவுற்றார்
தீயபிலனுட்பிறவிசென்றவிவையொன்றோ
தூயதுறக்கமெனநெஞ்சுதுணிவுற்றார். (௬க)

என்செய்வதேன் வானரர்மயங்குதல்.

இறந்திலமிதற்குரியதெண்ணியிலமேது
மறந்தில * மயிர்ப்பினொடிமைப்புளமயக்கம்
பிறந்தவர்செயற்குரியசெய்தல்பிழையின்றால்
திறந்தருவதென்னெனவிசைத்தனர்திகைத்தார். (௬உ)

சாம்பன் இது இராவணனமைத்த தந்திரமெனல்.

சாம்பனவனொன்றுரைசெய்வானெழுசலத்தால்
காம்பனையதோளியையொளித்தபடுகள்வன்
நாம்புகவமைத்தபொறிநன்றுமுடிவின்றால்
ஏம்பலினிமேலைவிதியான்முடியுமென்றான். (௬௩)

அனுமன் சீற்றங்கொண் டுரைத்தல்.

இன்றுபிலனீதிடையினேறரிதெனிற்பார்
தின்றுசகரர்க்கதிகமாகிநனிசேறும்
அன்றதெனின்வஞ்சனையரக்கரையடங்கக்
கொன்றெழுதுமஞ்சலெனமாருதிகொதித்தான். (௬௪)

அந்நகருள் சடையோடுகூடிய் மாதொருத்தி இருக்ககாண்டல்

மற்றவருமற்றதுமனக்கொளவலித்தார்
உற்றனர்புரத்திடையவ்வொண்சுடரினுள்ளோர்
நற்றவமனைத்துமுருநண்ணியொளிபெற்ற
கற்றைவிரிபொற்சடையிளுளையெதிர்கண்டார். (௬௫)

அவள்நாசிநுனி விழியுடைமளாயிருத்தல்.

† மருங்கலசவற்கலைவரிந்துவரிவாளம்
பொருங்கலசமொக்குமுலைமாசுபுடைபூசிப்
பெருங்கலைமதித்திருமுகத்தள்பிறழ்செங்கேழ்
கருங்கயல்களிப்புறவுமூக்கினுதிகண்ணாள். (௬௬)

---

* அயிர்ப்பினொடு-சந்தேகத்துடன்.
† மருங்கு-இடை-அலச-வருந்த-வற்கலை-மரவுரி- வரிந்து-கட்டி.

அவள் திருப்பின்றிறமுரைத்தல்.

தேரனையவல்குல்செறிதிண்கதலிசெப்பும்
ஊருவினொடொப்புறவொடுக்கியுறவொல்கும்
நேரிடைசலிப்பறநிதித்திகிமிர்கொங்கைப்
பாரமுளொடுக்குளவுயிர்ப்பிடைபரிப்ப. (சஎ)

அவள்கரங்கள் தொடையிற் பொருந்தியிருத்தலுரைத்தல்.

தாமரைமலர்க்குவமைசால்புறுதளிர்க்கைப்
பூமருவுபொற்செறிகுறங்கிடைபொருந்தக்
காமமுதலுற்றபகைகாறளரவாசை
நாமமறியப்புலனுகல்லறிவுபுல்க. (சஅ)

அவள்விழிகளில் கருணையிருக்கக்காண்டல்.

நெறிந்துகிமிர்கற்றைநிறையோதிநெடுநீலம்
செறிந்தசடையுற்றநுதலத்தினெறிசெல்லப்
பறிந்துவினைபற்றறமனப்பெரியபாசம்
பிறிந்துபெயரக்கருணைகண்வழிபிறங்க. (சகூ)

அவளைச் சீதையென வானரர் கருதல்.

இருந்தனளிருந்தவளையெய்தினரிறைஞ்சா
அருந்ததியெனத்தகையசீதையவளாகப்
பரிந்தனர்பதைத்தனர்பணித்தகுறிபண்பிற்
றெரிந்துணர்திமற்றிவள்கொறேவியெனலோடும். (ருo)

சங்குமணிமுத்துமணியானல் இவளுஞ்சானகியாகலாமெனல்.

எக்குறியொடெக்குணமெடுத்திவனுரைக்கேன்
இக்குறியுடைக்கொடியிராமன்மனையாளோ
* அக்கின்மணிமுத்தமணியாரமதினேர்கின்
றொக்குமெனிளுெக்குமெனமாருதியுரைத்தான். (ருக)

அப்பெண் இவரைநீவிர் யாவரெனல்.

அன்னபொழுதின்கணவணங்குமறிவுற்றாள்
முன்னனையர்சேறன்முறையன்றெனமுனிந்தாள்
துன்னரியபொன்னகரியின்னுறைவிரல்லீர்
என்னவரவியாவருரைசெய்மெனவிசைத்தாள். (ருஉ)

வானரர்தாம் வந்தசெயலுரைத்தல்.

வேதனையரக்கரொருமாயைவிளைவித்தார்
சீதையையொளித்தனர்மறைத்த † புரைதேர்வுற்

---

* அக்கின்மணி-சங்குமணி-கவடியுமாம். † புரை-வீடு, இடமுமாம்.

*றேதமிலறத்துறைநிறுத்தியவிராமன்*
*தூதருலகிற்றிரிதுமென்னுமுரைசொன்னர்.* (ருங)

அதுகேட்டு மகிழ்ந்தவவள் நும்வரவு நல்வரவாகவென்றல்.

*என்றலுமிருந்தவளெழுந்தனளிரங்கிக்*
*குன்றனையதாயதொருபேருவகைகொண்டாள்*
*நன்றுவரவாகநடனம்புரிவலென்று*
*நின்றனணெடுங்கணிணைநீர்கலுழிகொள்ள.* (ருச)

அவள்இராமன் எவ்விடத்தானெனலிம் மாருதிகூறுதலும்.

*எவ்வுழையிருந்தனனிராமனென * யாணர்ச்*
*செவ்வுழைநெடுங்கணவள்செப்பிதலோடும்*
*அவ்வுழைநிகழ்ந்ததனையாதியினொடந்தம்*
*வெவ்விழைவில்சிந்தைநெடுமொருதிவிரித்தான்* (ருரு)

பாத்யாதியளித் துபசரித்தல்.

*கேட்டவளுமென்னுடையகேடிறவமின்னே*
*காட்டியதுவீடெனவிரும்பிகனிகானீர்*
*ஆட்டியமிழ்தன்னசுவையின்னடிசிலன்போ*
*டூட்டிமனனுள்குளிரவின்னுரையுரைத்தாள்.* (ருசு)

அனுமனவளைவணங்கி இந்நகர்த்தலைவர் யாவர்நின்பெயர்யாது எனுவினவுதல்.

*மாருதியுமற்றவண்மலர்ச்சரண்வணங்கி*
*யாரிநகருக்கிறைவர்யாதுநி † னியற்பேர்*
*பார்புகழ்தவத்தினைபணித்தருளுகென்றான்*
*சோர்குழலுமற்றையவணுற்றபடிசொன்னாள்.* (ருஎ)

அயன்மனுக்காக அமைத்ததிந்நகரமெனல்

*நூண்முகநுனித்தநெறிநூறுவரனொய்தாய்*
*மேன்முகசிமிர்த்துவெயில்காலொடுவிழுங்கா*
*‡ மான்முகமுகத்தவன்மயன்செய்ததவத்தால்*
*நான்முகனளித்துளதிமாநகரநல்லோய்.* (ருஅ)

அரம்பையருளொருத்தியை அவன்விருப்பத்திற் கிணங்கியாளிவண் சேர்த்தேனெனல்.

*அன்னதிதுதானவரம்பையருளாங்கோர்*
*நன்னுதலினுண்முலைநயந்தனனநல்லாள்*

---

* யாணர் - அழகிய. † இயற்பெயர்-நாமகரணகாலத்திட்டு வழங்கும் பெயர் அல்லது வழங்கும் பெயருமாம்.
‡ மான்முகமுகத்தவன். மானின்முகம்போலு முடையவன்.

என்னுயிரனுளவளையானவனிரப்பப்
பொன்னுலகினின்றியல்பிலத்திடைபுணர்த்தேன். (ருக)

அவனுமவளுந்தானு மிங்கிருந்தேமெனல்.

புணர்ந்தவளுமன்னவனுமன்றில்விழைபோகத்
துணர்ந்திலர்செடும்பகலிம்மாநகருறைந்தார்
கணங்குழையினுளொடுயர்காதலொருவாதுற்
றிணங்கிவருபாசமுடையேனுடனிருந்தேன். (சு0)

அவளைத்தேடிக்கொண்ட விந்திரன்மயனைக் கொன்றரம்பையைச்
சீறினனெனல்.

இருந்துபலநாள்கழியுமெல்லையினின்வல்லோய்
திருந்திழையைநாடிவருதேவரிறைசீறிப்
பெருந்திறலினனையுயிருண்டுபிழையென்றம்
முருந்துநிகர்மூரனகையாளையுமுனிந்தான். (சுக)

இந்திரனிந்நகருக்கென்னைக் காவலாக்கினனெனல்.

முனிந்தவளையுற்றமுறைமுற்றுமொழிகென்னக்
கனிந்துவர்வாயவளுமென்னையிவள் * கண்ணால்
இனிந்தைமுடிவுற்றதெனவண்ணலுமிதெல்லாம்
நினைந்திவணிருத்திநகர்வானினதென்றான். (சுஉ)

இந்திரனிந்நகரவழியை யிருளாமாறு சபித்தானெனல்.

என்றனனிருத்தியிருளாகநெறியென்ன
ஒன்றுரையெனக்குமுடிவென்றுரைசெயாமுன்
வன்றிலவ்வானரமிராமனருள்வந்தால்
அன்றுமுடிவாகுமிடரென்றவனகன்றான். (சுங)

யான் உம்மைக்காணுமாறு தவஞ்செய்தேனெனல்.

உண்ணவுளபூசவுளசூடவுளவொன்றோ
வண்ணமணியாடையுளமற்றுமுளபெற்றேன்
அண்ணலவைவிட்டுமையடைந்திடுதல்வேண்டி
எண்ணரியபல்பகலிருந்தவமிழைத்தேன். (சுச)

சுவர்க்கம்புகமார்க்க முளதேல் நீயுங்களெனல்.

அய்யிருபதோசனையமைந்தபிலமையா
மெய்யுளதுமேலுலகமேறுநெறிகூறு
உய்யுநெறியுண்டுதவுவீரெனினுபாயம்
செய்யும்வகையுண்டெனினினைத்திர்சிறிதென்றாள். (சுரு)

* கண்ணால்-நினைவால்.

அனுமானவ்ளைவணங்கி நினக்கிச்சுவர்க்க மளிப்பலெனல்.

* அன்ன குறித்தரிவைகூறவநுமானும்
மன்னுபுலன்வென்றுவருமாதவண்மலர்த்தாள்
சென்னியின்வணங்கினனிவானவர்கள்சேரும்
பொன்னுலகமீகுவனினக்கெனல்புகன்றான். (சுசு)

வானரர் அனுமானைப்பிரத்தினீங்க வழிதேடெனல்.

முழைத்தலையிருட்கடலின்மூழ்கிமுடிவேமைப்
பிழைத் † துயிருயிர்க்கவருள்செய்தபெரியோனே
இழைத்திசெயலாயவினையென்றனரிரந்தார்
வழுத்தரியமாருதியுமன்னதுவலிப்பான். (சுஎ)

அஞ்சலிரேன்றனுமன் விசுவரூபங் கோள்ளுதல்.

நடுங்கன்மினெனச்சோலைநவின்றுநகைநாற
மடங்கலினெழுந்துமழையேறரியவானத்
தொடுங்கலில்பிலந்தலைதிறந்துலகொடொன்ற
நெடுங்கைகள்சுமந்துநெடுவானுறநிமிர்ந்தான். (சுஅ)

அனுமன் ஆதிவராகத்தை யொத்தானெனல்.

எருத்துறுசுடர்ப்புயமிரண்டுமெயினென்ன
மருத்துமக ‡ னிப்படியிடந்துறவளர்ந்தான்
கருத்துநிமிர்கணணினெதிர்கண்டவர்கலங்க
உருத்துலகெடுத்த § கருமாவினையுமொத்தான். (சுகூ)

அனுமனுயர்ந்து வாமனன்சேவடியையொத்தானெனல்.

மாவடிவுடைக்கமலநான்முகன்வகுக்கும்
தூவடிவுடைச்சுடர்கொள்விண்டலைதொளைக்கும்
மூவடிகுறித்துமுறையீரடிமுடித்தான்
பூவடிவுடைப்பொருவில்சேவடிபுரைந்தான். (எ0)

பிலத்தின்மேற்றட்டை அனுமன்கடலிலெறிந்து கர்ச்சித்தானெனல்.

ஏழிருபதோசனையிடந்துபடியின்மேல்
○ ஊழுறவெழுந்தெனையும்பருமொடுங்கப்
பாழிகெடுவன்பிலனுண்ணின்றுபடர்மேல்பால்
ஆழியினெறிந்தநுமன்மேகமெனவார்த்தான். (எக)

அனைவரும் பிலத்தினின்றும்வெளிப்படுத்தல்.

இன்றுமுளமேல்கடலியக்கில்பிலநீவா
நின்றநிலைபெற்றனதுநீணுதலியோடும்

---

* அன்னது-சுயம்பிரபைகூற. என்றும்பாடம். † உயிருயிர்க்க-உயிருண்டாக
‡ இப்படியிடந்துற-இப்பூமிபிளக்க. § கருமா-பன்றிப்பொதுப்பெயர்.
○ ஊழுற-நேராக.

குன்றபுரைதோளவரொழுந்துநெறிகொண்டார்
பொன்றிணிவிசும்பினிடைநன்னுதலிபோனள். (எஉ)

பிலத்துளிருந்த பெண்ணின்பெயர் சுயம்பிரபையெனல்.

* மேருவரைமாமுலையண்மென்சொலினள்விஞ்சு
மாருதீயினைப்பலவுவந்துமகிழ்வுற்றே
ஏருறுசுயம்பிரபையேமைநெறியெய்தத்
தாருவளர்பொற்றலனிடைக்கடிதுசார்ந்தாள். (எங)

வானரர் சக்கரதீர்த்தக்கரையையடைதல்.

மாருதிவலித்தகைமைபேசி † மறவோரும்
பாரிடைகடந்துபகலெல்லைபடரப்போய்
நீருடையபொய்கையெனுநேமீயிடைநின்றார்
தேருடைநெடுந்தகையுமேலைமலைசென்றான். (எ௪)

கங-வது பிலநீங்குபடலம் முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் ௬0௧.

பதினான்காவது

## ஆறுசெல்படலம்.

வானரநுறங்குங்காலத்தில் அரக்கன்வருதல்

கண்டார்பொய்கைக்கண்ணகன்னீர்க்கரைகாமுற்
றுண்டார்தேனுமொண்கனிகாயுமொருசூழல்
கொண்டாரன்றேவின்றுயில்குன்றிற்குறியெய்தித்
தண்டார்வென்றித்தானவன்வந்தான்றகைவில்லான். (௧)

அவ்வரக்கனுநுவத்திற யாதியவுரைத்தல்.

மலையேபோல்வான்மால்கடலொப்பான்மறமுற்றக்
கொலையேயொப்பான்கூற்றைநிகர்ப்பான்கொடுமைக்கோர்
நிலையேபோல்வானீர்மையிலாதானியிர்திங்கட்
கலையேபோலுங்காலவெயிற்றுன்கல்கண்ணான். (உ)

வேறு.

‡ கருவிமாமழைகடாவிமீ
துருவமேனிசென்றுலவியொற்றலால்

* இந்த எங-ம் பாடல் பலபிரதிகளிற் காணப்படவில்லை.
† மறவோர்-வானவீரர்.
‡ கருவிமாமழை-உலகபாலனத்திற்குபகரணமாகவுள்ள சிறந்தமேகம்.

பொருவின்மாரிமேலொழுதிபொற்பினல்
அருவிபாய்தருங்குன்றமேயனுன். (ரு)

வானவர்க்குமற்றவர்வலிக்குநேர்
தானவர்க்குமேயரியதன்மையான்
ஆனபுட்கலன்மகனோடாடவே
றேனயர்க்குமொன்றெண்ணவொண்ணுமோ. (ச)

அரக்கன் வானரரைச் சமீபித்தல்.

பிறங்குபங்கிபான்பெயரும்பெட்பினிற்
கறங்குபோன்றுளான்பிசையுங்கையினன்
அறங்கொள்சிந்தையார்நெறிசலோய்வினல்
உறங்குவாரைவந்தொல்லையெய்தினன். (ரு)

அரக்கன்என்துளத்தருகிலெய்தினரியாவரெனஅங்கதன்மார்பிலறைதல்

பொய்கையென்னதென்றுணர்ந்தும்புல்லியோர்
எய்தினர்கள்யாரிதுவெனுவெனு
அய்யனங்கதனலங்கன்மார்பினிற்
கய்யின்மோதினன்காலனேயனுன் (சு)

அங்கதன்வனை இராவணனென்க்கருதி அடித்தலுமவனிறத்தலுங்கூறல்.

மற்றிமைந்தனுமுறக்கமாறினன்
இற்றிவன்கொலாமிலங்கைவேந்தனு
எற்றினனேரெற்றினனவன்
முற்றினனிகற்காதிமூர்த்தியான். (எ)

வானரதுறக்க நீங்குதல்.

இடியுண்டாங்கஞேலோங்கலிற்றதொத்
தடியுண்டான்றளர்ந்தலறிவீழ்தலும்
தொடியின்றோள்விசைத்தெழுந்துசுற்றினர்
பிடியுண்டாரெனத்துயிலும்பெற்றியார். (அ)

அனுமனங்கதனை இவன்யாவனெனலு மவனறியேனெனலும்.

யார்கொலாமிவனிழைத்ததென்னெனுத்
தரைசேயினைத்தனிவினயினன்
* மாருதேயன்மற்றவனும்வாய்மையால்
ஆரியாதெரிந்தறிகிலேனென்றான். (கூ)

சாம்பவன்பெயர் தூமிரனெனல்

யானிவன்றனைத்தெரியவெண்ணினேன்
தூங்கிவந்தவேற்றுமிரனென்னும்பே

* மாருதேயன் - வாயுகுமாரன்.

ஞானிவ்வழிப்புனற்பொய்கையாளுமோர்
தானவன்னெனச்சாம்பன்சாற்றினான். (க0)

பின்னருறங்கா திருத்தல்.

வேறுமெய்துவாருளர்கொலாமெனாத்
தேறியின்றுயிற்செலவுதீர்ந்துளார்
வீறுசெஞ்சுடர்க்கடவுள்வேலைவாய்
* நாறுகாண்மலர்ப்பெண்ணைநாடுவான். (கக)

வானரர் பெண்ணையையடைதல்.

† புண்ணைவெம்முலைப்புளினமேய்தடத்
துன்னவாம்பலின்னமிழ்தமூறுவாய்
வண்ணவெண்ணகைத்தாளவாண்முகப்
பெண்ணைநண்ணினார்பெண்ணைநாடுவார். (கஉ)

பெண்ணையிற் சீதையைத்தேடுதல்.

துறையுந்தோகைநின்றுசூழலும்
குறையுஞ்சோலையுங்குளிர்ந்தசாரனீர்ச்
சிறையுந்தெள்ளுபூந்தடமுந்தெண்பளிக்
கரையுந்தேடினாரறிவின்கோடியார். (கந)

அணிகொழித்துவந்தெவருமாடினார்
பிணிகொழித்தவெம்பிறவிவேரின்வன்
றுணிகொழித்தருஞ்சுழிகடோறுநன்
மணிகொழித்திடுந்துறையின்வைகினார். (கச)

வானரர் த்சனவநாடடைதல்.

ஆடு ‡ பெண்ணைநீராறுமேறினார்
காடுநண்ணினார்மலைகடந்துடார்
வீடுநண்ணினாரென்னவீசு $ நீர்
$ நாடுநண்ணினார்நாடுநண்ணினார். (கரு)

வானரர் விதர்ப்பநாடு புகுதல்.

§ தசன்வப்பெயர்த்தரளசண்பகத்
¶ தசனவப்பிரந்தகனகாடொரீஇ
உசனவப்பெயர்க்கவியுதித்தபேர்
இசைவிதர்ப்பநாடெளிதினெய்தினார். (கசு)

---

* நாறுநாள்-உதிக்குங்காலத்தில். † புண்ணை-ஒப்பின்மையால் சக்ரவாகப்புள்வருந்துகின்ற. ‡ பெண்ணை-உத்தரபினாகி. $ நீர்நாடு-தசாவமென்னுநாடு. § நாடுநண்ணினார்-தேடுதலுக்காக வந்தவர்கள்.
¶ சரளசண்பகம்-வரிசையாகிய சண்பகமரங்களுடன்.

விதர்ப்பநாட்டில் முனிவர்வேடங்கொண்டு வானரர் சீதையைநாடுதல்.

* வைதருப்பமண்டலனில்வந்துபுக்
செய்தருப்பமத்தனையுமெய்தினர்
மெய்தருப்பைநூல்பிறழுமேனியார்
செய்தவத்துளார்வடிவிற்றேடினர். (கஎ)

வானரர் தண்டகாரணியம் எய்துதல்.

அன்னதன்மையாலறிஞர்நாடியச்
செக்நெல்வேலிசூழ்திருநன்னடொரீஇத்
தன்னையெண்ணுமத்தகைபுகுந்தளார்
துன்னுதண்டகங்கடிதுதுன்னினர். (கஅ)

சீதையை தண்டகத்திற்றேடிக்காணது முண்டகத்துறை யெய்துதல்.

உண்டகத்துளாருறையுமைம்பொறிக்
கண்டகர்க்கருங்காலனாயினர்
தண்டகத்தையுந்தடவியேகினர்
† முண்டகத்துறைகடிதுமுற்றினர். (கக)

முண்டகத்துறைத்தன்மை.

அளவனீரெலாமமரர்மாதரார்
கொள்ளைமாமுலைக்கலவைகோதையிற்
கள்ளுநாறலிற்கமலவேலிவாழ்
புள்ளுவீனுணப்புலவுதீர்தலால். (உ0)

குஞ்சரங்குடைந்தொழுகுகொட்பதால்
விஞ்சைமன்னர்பால்விரகமங்கைமார்
நஞ்சுவீணையினடத்துபாடலான்
அஞ்சுவார்கணீரருவியாறரோ. (உக)

கமுகவார்நெடுங்கனகவூசலிற்
குமுதவாயினர்குயிலையேசுவார்
சமுகவாளியுந்தனுவும்வாண்முகத்
தமுதபாடலார்மருவியாடுவார். (உஉ)

இனையவாயவொண்டுறையையெய்தினர்
நினையும்வேலைவாய்நெடிதுதேடுவார்
வினையவார்குழற்றிருவைமேவலார்
புனையுகோயினர்கடிதுபோயினர். (உங)

---

* வைதருப்பம்-விதர்ப்பசம்பந்தம்.

† முண்டகத்துறை-ஒருதீர்த்தம்; சிலர் கடற்றுறைஎன்ப.

வானரர் பாண்டுகிரியெய்தல்.

நீண்டமேனியானெடியதாளினின்
நீண்டகங்கைவந்திழிவதென்னலாய்ப்
பாண்டுவெம்மலைபடர்விசும்பினைத்
தீண்டுகின்றதண்சிகரமெய்தினார். (உச

பாண்டுகிரித்தன்மை.

இருளுறுத்துமீதெழுந்ததெண்ணிலா
மருளுறுத்துவண்சுடர்வழங்கலால்
அருளுறுத்திலாவடலரக்கன்மேல்
உருளுறுத்ததிண்கயிலையொத்தலால். (உரு)

வேறு

சீதையையங்குத் தேடிக்காணாது வருந்துதல்.

விண்ணுறநிவந்தசோதிவெள்ளியங்குன்றமேவிக்
கண்ணுறநோக்கலுற்றார்களியுறக்கனிந்தகாமர்ப்
பண்ணுறுகிளவிச்செவ்வாய்ப்படையுறுநோக்கினாளை
எண்ணுறுதிறத்துங்காணாரிடருறுமனத்தரெய்த்தார். (உசு)

வானரர் கோதாவிரியடைதல்.

ஊதைபோல்விசையன்வெங்கணுழுவைபோல்வயவரோங்கல்
ஆதியையகன்றுசெல்வாரரக்கனால்வஞ்சிப்புண்ட
சீதைபோகின்றாள்கூந்தல்வழீஇவந்துபுவனஞ்சேர்ந்த
கோதைபோற்கிடந்தகோதாவிரியினைக்குறுகிச்சென்றார். (உஎ)

கோதாவிரித்திறம்.

எழுகின்றகிரியிற்றாகியிழிகின்றமணிநீர்யாறு
தொழுகின்றசனகன்வேள்விதொடங்கியசுருதிச்சொல்லால்
உழுகின்றபொழுதினீன்றவொருமகட்கிரங்கிஞாலம்
அழுகின்றகலுழிமாரியாமெனப்பொலிந்ததன்றே. (உஅ)

ஆசில்பேருலகிற்காண்போ * ரளவைநூலெனலுமாகிக்
காசொடுகனகந்தூவிக்கவினுறக்கிடந்தகான்யா
றேசில்போரரக்கன்மார்பினிடைபறித்தெருவைவேந்தன்
வீசியவடகமீக்கோளீதெனவிளங்கிற்றன்றே. (உகூ)

வானரர் சுவணகத்துறையெய்துதல்.

அந்நதிமுழுதுநாடியாய்வளமயிலையாண்டும்
† சந்நிதியுற்றிலாதார்நெடிதுபின்றவிரச்சென்றார்
இன்னதீதிலாததீதென்றியாவையுமெண்ணுங்கோளார்
சொன்னதீவினைகடீர்க்குஞ்சுவணகத்துறையிற்புக்கார். (௩0)

* அளவைநூல்-ஏற்றநூல், அளக்குநூலுமாம், † சந்நிதி-சமுகம்.

வானரர் குலிந்தங்கடந்துபோதல்.

சுரும்பொடுதேனும்வண்டுமுன்னமுரந்துவன்றிப்புள்ளும்
கரும்பொடுசெங்நெற்காடுங்கமலவாவிகளுமல்கிப்
பெரும்புனன் மருதஞ்சூழ்ந்தகிடக்கைபின்கிடக்கச்சென்றார்
குரும்பைநீர்முரஞ்சுஞ்சோலைக்குலிந்தமும்புறத்துக்கொண்டார். ()

அருந்ததிமலையை வானரரடைதல்.

கொங்கணமேழுநீங்கிக்குடகடற்றரளக்குப்பைச்
சங்கணிபானனெய்தறண்புனறவிரவேகித்
திங்களின்கொழுந்துசுற்றுஞ்சிமயநீள்கோட்டுத்தேவர்
அங்கைகள்கூப்பநின்றவருந்ததிக்கருகரானார். (ஙஉ.)

வானரர்வேங்கிடகிரியெய்துதல்.

அருந்ததிக்கருகுசென்றூண்ட * மூகினுக்கழகுசெய்தாள்
இருந்ததிக்குணர்திலாதாரேகினாரிடையர்மாதர்
பெருந்ததிக்கருந்தேன்மாறுமரகதப்பெருங்குன்றெய்தி
இருந்ததிற்றீர்ந்துசென்றார்வேங்கடத்திறுத்தகாலை. (ஙங)

முனிவருமறைவலோருமுந்தைநாட்சிந்தைமூண்ட
வினைவருநெறியைமாற்றுமெய்யுணர்வோரும்விண்ணோர்
எனைவருமமரர்மாதர்யாவருஞ்சித்தரென்போர்
அனைவருமருவிநன்னீர்நாளும்வந்தாடுகின்றார். (ஙச)

வேறு.

பெய்தவைம்பொறியும்பெருங்காமமும்
வய்தவெஞ்சொலின்மங்கையர்வாட்கணின்
எய்தவைம்பெருவாளியிணைண்ணறச்
செய்தவம்பலசெய்குநர்தேவரால். (ஙரு)

வலங்கொ † ணேமிம்மழைநிறவானவன்
அலங்குதாளிணைதாங்கியவம்மலை
விலங்கும்வீடுறுகின்றனமெய்ந்நெறிப்
புலன்கொள்வார்கட்கனையதுபொய்க்குமோ. (ஙசு)

ஆயகுன்றினையெய்தியருந்தவம்
மேயசெல்வரைமேவினர்மெய்ந்நெறி
நாயகன்றனைநாளும்வணங்கிய
தூயநற்றவர்பாதங்கள்சூடினார். (ஙஎ)

---

* அழகினுக்கழகுசெய்தாள்-சீதை. † நேமி-சக்கரத்தினையுடைய.

வானரர்வேங்கடத்திற் சீதையைக்காணுது தண்டகநாடு புகுவான் பார்ப்பனவேடமெய்துதல்.

சூடியாண்வச்சுரிகுழற்றேகையைத்
தேடிவார்புனற்றெண்டிரைத்தண்டக
நாடேண்ணுகின்றார்மறைநாவலர்
வேடமேயினர்வேண்டுருமேவுவார். (௩அ)

தொண்டைநாட்டின் றன்மை.

குன்றுசூழ்ந்தகடத்தொடுங்கோவலர்
முன்றில்சூழ்ந்தபடப்பையுமொய்புனல்
சென்றுசூழ்ந்தகிடக்கையுந்தெண்டிரை
மன்றுசூழ்ந்தபரப்புமருங்கெலாம். (௩௯)

சூலடிப்பலவின்சுளைதூங்குதேன்
கோலடிப்பவெரீஇக்குலமள்ளரேர்ச்
சாலடித்தருஞ்சாலியின்வெண்முளை
தோலடிக்கிளையன்னர்துவைப்பன. (௪0)

செருகுறுங்கணிற்றேங்குவளைக்குலம்
அருகுறங்கும்வயன்மருங்காய்ச்சியர்
இருகுறங்குபிறங்கியவாழையிற்
குருகுறங்குங்குயிலுந்துயிலுமால். (௪௧)

தெருவினூர்ப்புறம்பல்லியந்தோர்மயில்
கருவிமாமழையென்றுகளிப்புறு
பொருநர்தண்ணுமைக்கன்னமும்போகிலா
மருவினர்க்குமயக்கமுண்டாங்கொலோ. (௪௨)

* தேரைவன்றலைத்தெங்கிளம்பாளையை
நாரையென்றிளங்கெண்டைநடுங்குவ
தாரைவன்றலைத்தண்ணிளவாம்பலைச்
சேரையென்றுபுலம்புவதேரையே. (௪௩)

கள்ளிவாங்குகடையிளநவ்வியர்
வெள்ளிவால்வளைவீசியவெண்மணி
புள்ளிநாரைசினைபொரியாமையென்
றுள்ளியாமைமுதுகினுடைப்பரால் (௪௪)

சேட்டிளங்கவென்சிறுபுன்கையிற்
கோட்டதேம்பலவின்கனிக்கூன்சுளை

* தேரைவன்றலை-முற்றியழகிய வலியதலையையுடைய.

தோட்டமைந்தபொதும்பரிற்றூங்குதேன்
ஈட்டமென்னச்சென்றீயினமொய்ப்பன. (சரு)

செல்வரென்றும்வடகலைதென்றமிழ்ச்
சொல்வரம்பினரென்றுஞ்சுளிபடக்
கொல்வரென்றுங்கொடுப்பனரென்றுமவ்
* வில்வரம்பிலிறைவனையேத்துவார். (சசா)

வானரர் சோழநாடுபுகுதல்.

அன்னதண்டகசாகெடந்தகன்
பொன்னிநாடுபொருவிலரெய்தினர்
செந்நெலுங்கரும்புங்கமுகுஞ்செறிந்
தின்னல்செய்யுநெறியரிதேகுவார். (சஎ)

சோழநாட்டின் றன்மைகூறல்.

கொடுறுதாங்கியவாய்க்குழூநாரைவாழ்
தடறுதாங்கியகூனிளந்தாழையின்
மிடறுதாங்கும்விருப்புடைத்தீங்கனி
இடறுவார்நறுந்தேனினிழுக்குவார். (சஅ)

குழுவுமீன்வளர் † குட்டமெனக்கொளா
எழுவுபாடலிமிழ் ‡ கருப்பேந்திரத்
தொழுகுசாறகன்கூவையினூழ்முறை
முழுகிநீர்க்கருங்காக்கைமுளைக்குமே. (சகூ)

பூநெருங்கியபுள்ளுறுசோலைகள்
தேனெருங்குசொரிதவிற்றேர்வில
மீனெருங்குறும்வெள்ளம்வெரீஇப்பல
வானரங்கண்மரங்களின்வைகுமால். (ருo)

தாறுநாறுவதாழைகடாழையின்
சோறுநாறுவதும்பிழிமாங்கனி
நாறுநாறுவநாறுவளர்க்குறும்
சேறுநாறுவசெங்கழுநீரரோ. (ருக)

வானரர்தென்றமிழ் நாடெய்துதல்.

அனையபொன்னியகன்புனனூடொரீஇ
மனையின்மாட்சிகுலாமலைமண்டலம்
வினையினீங்கியபண்பினர்மேயினர்
இனையதென்றமிழ்நாடுசென்றெய்தினர். (ருஉ)

---

* வில்வரம்பினர்க்கிதேனுமீட்டதே எனவும் பாடம்.
† குட்டமெனக்கொளா-குளமென்றுநினைத்து.
‡ கருப்பேந்திரம்-கரும்பாலை.

அத்திருத்தகுநாட்டினையண்டர்நா
டொத்திருக்குமென்றுலுரையொக்குமோ
எத்திறத்தினுமேழுலகும்புகழ்
முத்துமுத்தமிழுந்தந்துமுற்றமோ. (ருக)

தென்றமிழ்நாட்டினுஞ் சீதையைக்காணுது வருந்திச்செல்லுதல்,

என்றதென்றமிழ்நாட்டினையெங்கணும்
சென்றுநாடித்திரிந்துதிருந்தினர்
பொன்றுவாரிற்பொருந்தினர்போயினர்
துன்றலோதியைக்கண்டிலர்துன்பினர். (ருச)

வன்றிசைக்களிறன்னமகேந்திரக்
குன்றிசைத்ததுவல்லேயிற்கூடினர்
தென்றிசைக்கடற்சீகரமாருதம்
நின்றிசைக்குநெடுநெறிநீங்கினர். (ருரு)

கஉ-வது. ஆறுசெல்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-கருக.

பதினைந்தாவது

## சம்பாதிப்படலம்.

மழைத்தவிண்ணகமெனமுழங்கிவானுற
விழைத்தவெண்டிரைக்கரமெடுத்திலங்கையாள்
உழைத்தடங்கண்ணியென்றுரைத்திட்டேழின்வந்
தழைப்பதேகடுக்குமவ் * வாழிநோக்கினர். (க)

மற்றைவானரரு மகேந்திரமெய்தல்.

விரிந்துநீரெண்டிசைமேவிமேன்மையால்
பொருந்துதிர்மகேந்திரத்தென்றுபோக்கிய
அருந்துணைக்கவிகளாமளவில்சேனையும்
பெருந்திரைக்கடலெனப்பெரிதுகூடிற்றே. (உ)

யாவருமவ்வெயினெளிதினெய்தினர்
பூவருபொலங்குழற்பொருவில்கற்புடைத்
தேவியைக்காண்கிலார்செய்வதோர்கிலார்
நாவியல்குழறிடநவில்கின்றாரரோ. (ங.)

* ஆழிநோக்கினர்-கடல்கண்டார்.

அற்றதுநாள்வரையவதியாட்சியும்
உற்றிலமிராகவனுயிரும்பொன்றுமால்
கொற்றவனுணையுங்குறித்துநின்றனம்
இற்றதுநஞ்செயலினியென்றெண்ணினர். (ச)

அருந்தவம்புரிதுமோவன்னதன்றெனின்
* மருந்தரு † நெடுங்கடுவுண்டுமாய்துமோ
திருந்தியதியாததுசெய்துதீர்துமென்
றிருந்தனர்தம்முயிர்க்கிறுதியெண்ணுவார். (ரு)

கரைபொருகனைகடல்கனகமால்வரை
நிரைதுவன்றியவெனநெடிதிருந்தவர்க்
குரைசெயும்பொருளுளதெனவுணர்த்தினன்
அரைசிளங்கோளரியருஞ்சிந்தையான். (சு)

நாடிநாங்கொணருதுநளினத்தாளைவான்
மூடியவுலகினைமுற்றுமுட்டியென்
றூடவர்திலகனுக்கன்பினரெனப்
‡ பாடவம்விளம்பினம்பழியின்மூழ்குவான். (எ)

செய்துமென்றமைந்ததுசெய்துதீர்ந்திலம்
நொய்துசென்றுற்றதுநுவலகிற்றிலம்
எய்தும்வந்தென்பதோ § றிறையுங்கண்டிலம்
உய்துமென்றுலிதோருரிமைத்தாகுமோ. (அ)

அங்கதனுயிர் விடுவேனெனல்.

எந்தையுமுனியுமெம்மிறையிராமனும்
சிந்தனைவருந்துமச்செய்கைகாண்குறேம்
§ நுந்துவெனுயிரினைநுணங்குகேள்வியீர்
புந்தியினன்னதுபுகல்விராமென்றான். (கூ)

சாம்பன் மறுத்தல்.

விழுமியதுரைத்தனைவிசயம்வீற்றிருந்
தெழுவொடுமலையொடுமிகலுந்தோளினாய்
அழுதுமோவிருந்துநம்மன்புபாழ்படத்
தொழுதுமோசென்றெனச்சாம்பன்சொல்லினன். (கo)

மீண்டினியொன்றுநாம்விளம்பமிக்கதென்
மாண்டுறுவதுநலமெனவலித்தனம்

* மருந்தரும்-பிரதிவிஷமான மருந்தற்ற. † நெடுங்கடு-கொடியவிஷம்.
‡ பாடவம்-சாமர்த்தியம். § இறையும்-சிறிதும். § நுந்தவன்-விடுகின்றேன்.

ஆண்டகையரசிளங்குமரவன்னது
வேண்டலினின்னுயிர்க்குறுதிவேண்டுமோல். (௧௧)

அங்கதன் நீவிரிறக்கயான்போதல் தகுயோவேனல்.

என்றவனுரைத்தலுமிருந்தவாலிசேய்
குன்றுறழ்ந்தெனவளர்குவவுத்தோளினீர்
பொன்றினீர்மடியயான்போவனேலது
நன்றதோவுலகமுநயக்கற்பாலதோ. (௧௨)

சான்றவர்பழியுரைக்கஞ்சித்தன்னுயிர்
போன்றவர்மடிதரப்போந்துளானென
ஆன்றபெருகுலவளோரறைதன்முன்னம்யான்
வான்றொடர்குவெனெனமறித்துங்கூறுவான். (௧௩)

வேறு.

எல்லோம்மிறுதியாய்க்குமெந்தைக்கும்யாவரேனும்
சொல்லவுங்கூடுங்கேட்டாற்றுஞ்சவுமடுக்குங்கண்ட
வில்லியுமிளையகோவும்வீவதுதிண்ணமச்சொல்
மல்லனீரயோத்திபுக்கால்வாழ்வரோபரதன்மற்றோர் (௧௪)

பரதனும்பின்னுளோனும்பயந்தெடுத்தவருமூவரும்
சரதமேமுடிவர்கெட்டேன்சனகியென்றுலகஞ்சாற்றும்
விரதமாதவத்தின்மிக்கவிளக்கினுலுறகத்தியார்க்கும்
கரைதெரிவிலாததுன்பம்விளைந்தவாவெனக்கலுழ்ந்தான். (௧௫)

பொருப்புறழ்வயிரத்திண்டோட்பொருசினத்தாளிபோல்வான்
* தரிப்பிலாதுரைத்தமாற்றந்தடுப்பருந்தகைத்ததாய
நெருப்பையேவிளைத்தபோலநெஞ்சமுமறுகக்கேட்டு
விருப்பினுலவனைநோக்கிவிளம்பினனெண்கின்வேந்தன் (௧௬)

வேறு.

சாம்பன் சமாதானமுரைத்தல்.

நீயுநின்றுணையுநீங்கநின்குலத்
தாயம்வந்தவரொடுந்தனயரில்லையால்
ஆயதுகருதினமன்னதன்றெனின்
நாயகரிறுதியுநவிலற்பாலதோ. (௧௭)

ஏகுநீயவ்வழியெய்தியிவ்வழி
தோகையைக்கண்டிலாவகையுஞ்சொல்லியெஞ்

* தரிப்பிலாது-சகிக்கமாட்டாமல்.

* சாகையுமுணர்த்துதிதவிர்திசோகம்போர்
வாகையாயென்றனன்வரம்பிலாற்றலான். (க௯)

அநுமன் நும்மொழி சரியன்றெனல்.

அவனவையுரைத்தபின்னநுமன்சொல்லுவான்
புவனமூன்றினுமொருபுடையிற்புக்கிலம்
தவனமாண்டவரெனத்தருக்கிலாரெனக்
கவனவேகத்துநீர்கழிதிரோவென்றான். (கக)

பின்னருங்கூறுவான்பிலத்தில்வானத்தில்
பொன்வரைக்குமியிற்புறத்துளண்டத்தில்
நன்னுதற்றேவியைக்காண்குநாமெனிற்
சொன்னநாளவதியையிறைமன்சொல்லுமோ. (உ௦)

நாடுதலேநலமென்னுநாடியத்
தோடலர்குழலிதன்றுயரிற்சென்றமர்
வீடியசடாயுவைப்போலவீடுதல்
பாடவமல்லது † பழியிற்றாமென்றான். (உக)

வானரரெதிரே சம்பாதிவ்ருதல்.

என்றலுங்கேட்டனனெருவைவேந்தன்றன்
பின்றுணையாகியபிழைப்பில்வாய்மையான்
பொன்றினனென்றசொற்புலம்புநெஞ்சினன்
குன்றெனநடந்தவர்க்குறுகன்மேயினான். (உஉ)

முறையுடையெம்பியார்முடிந்தவாறெனுப்
பறையிடுநெஞ்சினன்பதைக்குமேனியன்
இறையுடைக்குலிசவேலெறிகலாதமுன்
சிறையுடைமலையெனச்செல்லுஞ்செய்கையான். (உ௩)

மிடலுடையெம்பியைவீட்டும்வெஞ்சினப்
படையுளராயினார்போலும்பாரெனு
உடலினைவழிந்துபோயுவகிநீருகக்
கடலினைப்புரையுறமருவிக்கண்ணினான். (உ௪)

உழுங்கதிர்மணியணியுமிழுமின்னினான்
மழுங்கியநெடுங்கணின்வழங்குமாரியான்
புழுங்குவானழுங்கினான்புடவியாரென
முழங்கிவந்திழிவதோர்முகிலும்போல்கின்றான். (உ௫)

* சாகையும்-மரணத்தையும். † பழியிற்றாம்-இதுபழியாகும்.

வள்ளியுமரங்களுமலையுமண்ணுறத்
தெள்ளுநுண்பொடிபடக்கடிதுசெல்கின்முன்
தள்ளுவன்கால்பொரத்தரணியிற்றனி
வெள்ளியம்பெருமலைபொருவுமேனியான். (உசு)

சம்பாதியை அரக்கனென வனுமன்கருதுதல்.

எய்தினனிருந்தவரிரியல்போயினர்
அய்யனைம்மாருதியழலுங்கண்ணினன்
கய்தவநிசிசரக்கள்ள * வேடத்தை
உய்திகொலினியெனவுருத்துமுன்னின்முன். (உஎ)

வெங்கதம்வீசியமனத்தன்விம்மலன்
பொங்கியசோரிநீர்பொழியுங்கண்ணினன்
சங்கையிற் † சழக்கிலனென்னுந்தன்மையை
இங்கிதவகையினலெய்தநோக்கினன் (உஅ)

சம்பாதி சடயுவைக்கொன்றவ ரியாவருரைமினென்றல்.

நோக்கினனின்றனனுணங்குகேள்வியான்
வாக்கினலொருமொழிவழங்கலாதமுன்
மூக்கருஞ்சடாயுவைத்தருக்கினலுயிர்
நீக்கினரியாரதுநிறப்புவீரென்முன். (உகூ)

சம்பாதி தனது வரலாறுரைத்தல்.

உன்னைநீயுள்ளவாறுரைப்பினுற்றதைப்
பின்னையா ‡ னிரப்புதல்பிழைப்பின்முதலால்
என்னமாருதியெதிரருவைவேந்தனும்
தன்னையான்தன்மையைச்சாற்றன்மேயினன். (நூ0)

மின்பிறந்தாலெனவிளங்கெயிற்றினய்
என்பிறந்தார்க்கிடையெய்தலாதவென்
பின்பிறந்தான்றுணைபிரிந்தபேதையேன்
முன்பிறந்தேனெனமுடியக்கூறினன். (நூக)

இராவணன்வாளால் சடாயுவிறந்தானெனல்.

கூறியவாசகங்கேட்டுக்கோதிலான்
ஊறியதுன்பத்தினுவரியுட்புகா
ஏறினனுணர்த்தினனிகலிராவணன்
வீரியவாளிடைவீளிந்ததாமென்முன். (நூஉ)

* வேடத்தை-வேடத்தினையுடையாய். † சழக்குகை-தவமாகியவஞ்சனை.
‡ நிரப்புதல்-தெரிவித்தல்.

சம்பாதி வருந்துதல்.

அவ்வுரைகேட்டலுமசனியேற்றினான்
* தவ்வியகிரியெனத்தரையின்வீழ்ந்தனன்
வெவ்வுரையிராவுயிர்பதைப்பவிம்மினான்
இவ்வுரையிவ்வுரையெடுத்தியம்பினான். (௩௩)

வேறு.

இளையாநின்சிறகின்றிவெந்துகத்
தளையானேனுயிர்போதறக்கதோ
வளையாநேமியன்வன்மைசால்வலிக்
கிளையானேயிதுவென்னமாயமோ. (௩௪)

மலரோனின்றுளன்மண்ணும்விண்ணுமுண்
டுலையாநீடறமின்னுமுண்டரோ
நிலையார்கற்பமுநின்றதின்றுநீ
இலையானாயிதுவென்னதன்மையோ. (௩௫)

உடனேயண்டமிரண்டுமுய்ந்துயிர்த்
திடனுள்வந்திருவோருமெய்தினோம்
விடநீயேதனிச்சென்றவீரமும்
கடனேவெங்கலுழற்குமேன்மையோய். (௩௬)

ஒன்றுமூன்றுலகத்துலோரையும்
வென்றானென்னினும்வீரநிற்குநேர்
நின்றானேயவ்வரக்கனின்னையும்
கொன்றானேயிதுவென்னகொள்கையோ. (௩௭)

என்றென்றேங்கியிரங்கியின்னலாற்
பொன்றுந்தன்மைபுகுந்தபோதவற்
† கொன்றுஞ்சொற்கொடுணர்ச்சிநல்கினான்
வன்றிண்டோள்வரையன்னமாருதி. (௩௮)

தேற்றத்தேறியிருந்தசெங்கணான்
கூற்றொப்பான்கொலைவாளரக்கனோ
டேற்றுப்போர்செய்த ‡ தென்னிமித்தெனக்
காற்றின்சேயிதுகட்டுரைக்குமால். (௩௯)

சடாயுஇராவணனோடு பொருதற்குக் காரணங்கூறல்.

எங்கோமானவ்விராமனில்லுளாள்
செங்கோலான்மகள்சீதைசெவ்வியாள்

* தவ்விய-மோதிய. † அவற்கொன்றுஞ்சொல்கொண்டு - அச்சாம்பாதிக் கேற்ற வசனத்தினால். ‡ என்னிமித்தென-யாதுகாரணத்தாலென,

வெங்கோல்வஞ்சன் வினைத்தமாயையால்
தங்கோனைப்பிரிவுற்றதன்மையாள். (சO)

கொண்டேகுங்கொலைவாளரக்கனைக்
கண்டானும்பியறங்கடக்கிலான்
வண்டார்கோதையைவைத்துநீங்கெனுத்
திண்டோரானெதிர்சிந்தைசீறினன். (சக)

சீறித்தீயவனேறுதேரையும்
கீறித்தோள்கள்கிழித்தழித்தபின்
தேறித்தேவர்கடேவன்றெய்வவாள்
வீறப்பொன்றினன்மெய்ம்மையோனென்றான். (சஉ)

விளித்தானன்னதுகேட்டுமெய்ம்மையோய்
தெளித்தாடத்தகுதீர்த்தன்மாட்டுயிர்
அளித்தானேயதுநன்றுநன்றெனுக்
களித்தான்வாரிகலுழ்ந்தகண்ணினன். (சங)

பைந்தாரெங்களிராமன்பத்தினி
செந்தாள்வஞ்சிதிறத்திறந்தவன்
மய்ந்தாவெம்பிவரம்பில்சீர்த்தியோ
டெய்ந்தானல்லதுலந்ததுண்மையோ. (சச)

அறமன்னனுடனெம்பியன்பினே
டுறவுன்னூஉயிரொன்ற * வோவினன்
பெறவொண்ணுதநோர்பெற்றிபெற்றவற்
கிறவென்னுமிதினின்பமியாவதோ. (சரு)

என்றென்றேங்கியிரங்கி † யின்புனற்
சென்றங்காடுதல்செய்துதீர்ந்தபின்
வன்றிண்டோள்வலிமாறிலாதவன்
துன்றுந்தாரவர்க்கின்னசொல்லினன். (சசு)

வாழ்வித்தீரெனைரெனைமைந்தர்வந்துநீர்
ஆழ்வித்தீரவிர்துன்பவாழியால்
கேழ்வித்தீவினைகீறினீரிருள்
போழ்வித்தீருரைபொய்யினீங்கினீர். (சஎ)

சம்பாதி அனைவரும் இராமநாமமுரைத்த ரேன்சிறைமுளைக்குமெனல்.

எல்லீரும்மவ்விராமநாமமே
சொல்லீரென்சிறைதோன்றுஞ்சோர்விலா

* ஓவினன்-நீங்கினன். † இன்புனல் சென்றங்காடுதல்செய்து-சகோதரனது மரணஞ்சமொழிய இனியநீரிற் குளித்து.

நல்லீரப்பயனன்னுநல்லசொல்
வல்லீர்வாய்மைவளர்க்கும்மாண்பினீர். (சஅ)

வானரர் இராமநாமோச்சாரணம்புரிதலும் இறகுவளர்தலும்.

என்றானன்னதுகாண்டும்யாமெனு
நின்றார்நின்றழிநீலமேனியான்
நன்றாநாமநவின்றுநல்கினர்
வன்றோளான்சிறைவானந்தாயவே. (சகூ)

சிறைபெற்றான்றிகழ்கின்றமேனியான்
முறைபெற்றாமுலகெங்குமூடினன்
நிறைபெற்றாவிநெருப்புயிர்க்கும்வாள்
உறைபெற்றாலெனலாமுறுப்பினான். (ரு௦)

தெருண்டான்மெய்ப்பெயர்செப்பலோடும்பந்
திருண்டானுற்றபடத்தையுன்னினர்
மருண்டார்வானவர்கோனைவாழ்த்தினர்
வெருண்டார்சிந்தைவியந்துவிம்முவார். (ருக)

வானரர் நின்பூருவசரித முரையெனல்.

அன்னானைக்கடிதஞ்சலித்துநீ
முன்னாளுற்றதுமுற்றுமோதெனச்
சொன்னார்சொற்றதுசிந்தைதோய்வுறத்
தன்னாலுற்றதுதான்விளம்புவான். (ருஉ)

வேறு.

சம்பாதி தனதுபிறப்புமுதலிய உரைத்தல்.

தாயெனத்தகையநண்பீர்சம்பாதிசடாயுவென்போஞ்
சேயொளிச்சிறையவேகக்கழுகினுக்கரசுசெய்வோம்
பாய்திரைப்பரவைஞாலம்படரிருள்பருகும்பண்பின்
ஆய்கதிர்க்கடவுட்டேரூரருணனுக்கமைந்தமைந்தர். (ருந)

ஆயுயரும்பர்நாடுகாண்டுமென்றறிவுதள்ளி
மீயுயர்விசும்பினூடுமேக்குறச்செல்லும்வேலை
காய்கதிர்க்கடவுட்டேரைக்கண்ணுற்றுங்கண்ணுறாமுன்
தீயையுந்தீக்குந்தெய்வச்செங்கதிர்செல்வன்சீறி. (ருச)

முந்தியவெம்பிமேனிமுருங்கழன்முடுகும்வேலை
எந்தைநீகாத்தியென்றான்யானிருஞ்சிறையுமேந்தி
வந்தனென்மறைதலோடுமெற்றவன்மறையப்போனான்
வெந்துமெய்யிறகுதீர்ந்துவிழுந்தனென்விளிகிலாதேன். (ருரு)

மண்ணிடைவிழுந்தவென்னைவானிடைவயங்குவள்ளல்
கண்ணிடைநோக்கியுற்றகருணையான்சனகன்காதற்

பெண்ணிடையீட்டின்வந்தவானரரிராமரர்மன்பேரை
எண்ணிடையுற்றகாலத்திறகுபெற்றெழுதியென்றான். (ருசு)

தாழ்ந்தமாதவத்தி * லோகசாரங்கனுரையுஞ்சாரல்
வீழ்ந்தனென்சிறைகடியவெவ்வுயிர்த்துளமுமெய்யும்
போழ்ந்தனதுன்பமூன்றவுயிர்ப்பொறைபோற்றகில்லா
தாழ்ந்தனெனாழ்ந்தவென்னையருந்துதவனெதிர்ந்துதேற்றி. (ருஎ)

கற்றிலார்போலவுள்ளக்களிப்பினலமரர்காப்பூ
டேற்றிடக்கருதிமீப்போயாதபத்துனதுமேனி
முற்றழன்முருங்கமண்ணைமுயங்கினையினியென்சின்னாள்
மற்றுநின்னுயிரையோம்பாதிகழ்வதுமாலத்தன்றால். (ருஅ)

களித்தவர்கெடுதறிண்ணஞ்சனகியைக்கபடன்வெளவி
ஒளித்தவாய்துருவியுற்றவானரரிராமநாமம்
விளித்திடச்சிறைவந்தோங்கும்வெவ்வுயிர்த்தயரலென்றன்
றளித்தனனதனலாவியாற்றினேனாற்றன்மொய்ம்பீர். (ருகூ)

அன்றியுமலருள்வைகுமயனைநேர்முனிவன்வாய்மை
நன்றிகொளீசற்காண்பானனுகலும்வினையேனுற்ற
தொன்றொழிவுறாமற்கேட்டதியோகத்தினுணர்ச்சிபேணிப்
பொன்றுதலொழிமின்யானேபுகல்வதுகேண்மினென்றான். (சுO)

தசரதராமன்றேவர்தவத்தினாற்றும்சொற்றுங்கிக்
கசரததுரகமின்றிக்கானிடையிறுத்தகாலை
வசைதருமிலங்கைவேந்தன்வெளவியதிருவைநாடித்
திசைதிரிகவிகலுற்றாற்சிறகுபெற்றெழுதியென்ன. (சுக)

எம்பியுமிடரின்வீழ்வானேயதுமறுக்கவஞ்சி
அம்பரத்தியங்குமாணைக்கழுகினுக்கரசனான்
நம்பிமீரீதென்றன்மைநீரிவணடைந்தவார்த்தை
உம்பருமுவக்கத்தக்கீருணர்த்துமினுணரவென்றான். (சுஉ)

என்றலுமிராமன்றன்னையேத்தினரிறைஞ்சியெந்தாய்
புன்றொழிலரக்கன்மற்றத்தேவியைக்கொண்டுபோந்தான்
தென்றிசையென்னவுன்னித்தேடிநாம்வந்துமென்றார்
நன்றுநீர்வருந்தல்வேண்டாநானிதுநவில்வலென்றான். (சுங)

இராவணன் சீதையைக்கொண்டு சென்று
சிறைவைத்தானென்று சம்பாதிகூறியது.

பாகொன்றுகுதலையாளைப்பாதகவரக்கன்பற்றிப்
போகின்றபொழுதுங்கண்டேன்புக்கனனிலங்கைபுக்கு

* லோகசாரங்கன்-ஒருதவசியின்பெயர்.

வேகின்றவுள்ளத்தானை வெஞ்சிறையகத்துவைத்தான்
ஏகொன்றிற்காண்டிரந்திலிருந்தனளிறைவியின்னும். (௬௪)

யோசனையொருநூறுண்டாலொலிகடலிலங்கையவ்வூர்
பாசவெங்கரத்துக்கூற்றுங்கட்புலன்பரப்பவஞ்சும்
நீசனவ்வரக்கன்சீற்றநெருப்புக்குநெருப்புநீங்கள்
ஏசறுங்குணத்தீர்சேறலெப்பரிசியையவென்றான். (௬௫)

நான்முகத்தொருவன்மற்றைநாரியோர்பாகனிற்க
பான்முகப்பரவைப்பள்ளிப்பரம்பன்பணியென்றாலும்
காலனுக்கேயுஞ்சேறலரிதிதுகடலின்றன்மை
மேலுமக்குறுவதெண்ணிச்செல்லுமின்விளிவினுளீர். (௬௬)

எல்லீருஞ்சேறலென்பதெளிதன்றவ்விலங்கைமூதூர்
வல்லீரேலொருவரேகிமறைந்தவணுழுகிவாய்மை
சொல்லீரேதுயரைநீக்கித்தோகையைத்தெருட்டிமீடிர்
அல்லீரேலென்சொற்றேறியுணர்த்துமினழகற்கம்மா. (௬௭)

நாக்குநரின்மையாலக்கழுக்கினமுழுதுங்கன்றிச்
சேக்கைவிட்டிரியல்போகித்திரிதருமதனைத்தீர்ப்பான்
போக்கெனக்கடுத்தநண்பீர்நல்லதுபுரிமினென்னா
மேக்குறவிசையிற்சென்றான்சிறையினால்விசும்புபோர்ப்பான். (௬௮)

கரு-வது. சம்பாதிப்படலம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம் ௪0௨௪.

பதிறுறவது.

# மகேந்திரப்படலம்.



பொய்யுரைசெய்யான் * புள்ளரசென்றேபுகலுற்றார்
கய்யுறைநெல்லித்தன்மையினெல்லாங்கரைகண்டாம்
உய்யுரைபெற்றாநல்லவையெல்லாமுறவெண்ணிச்
செய்யுமினென்றேசெய்வகைநோய்திற்செயவல்லீர். (௧)

சூரியன்வெற்றிக்காதலனேடுஞ்சுடர்விற்கை
ஆரியனைச்சென்றேதொழுதுற்றதறைகிற்பீர்
சீருதன்முற்றுந்தேருதல்கொற்றச்செயலம்மா
வாரிகடப்போர்யாவரெனத்தம்வலிசொல்வார். (௨)

* புள்ளரசு-கழுகு அரசு.

மாளவலித்தேமென் றுமிமாளாவசையொடு
மீளவுமுற்றேமன்னவைதீரும்வெளிபெற்றேம்
காளநிறத்தோடொப்பனவிங்நேர்கடருவுற்
ருளுநலத்தீராளுயினெம்மாருயிரம்மா. (ந)

நீலன்முதற்பேர்போர்கெழுகெழுகொற்றநெடுவீரர்
சாலவுரைத்தார்வாரிகடக்குந்தகவின்மை
வேலைகடப்பன்மீளமிடுக்கின்றெனவிட்டான்
வாலியளிக்கும்வீரவயப்போர்வசையில்லான். (ச)

வேதமனைத்துந்தேர்தரவொட்டாவொருமெய்யன்
பூதலமுற்றுமீரடிவைத்துப்பொலிபோழ்தியான்
மாதிரமெட்டுஞ்சூழ்பறைவைத்தேவரமேரு
மோதவிளைத்தேதாளுலைவுற்றேன்விறன்மொய்ம்பீர். (ரு)

ஆதலினிப்பேரார்கலிகுப்புற்றகழிஞ்சி
மீதுகடத்தித்தீயவருட்கும்வினையொடும்
சீதைதனைத்தேராவரமுற்றுந்திறனின்றென்
றோதியிஅத்தா * ஞலுமுகத்தானுதவுற்ருன். (சு)

யாமினியிப்போதாரிடர்துய்த்திங்கினியாரைப்
போமெனவைப்பேமென்பதுபுன்மைப்புகழன்றே
கோமுதல்வர்க்கேருகியகொற்றக்குமராநம்
நாமநிறுத்திப்பேரிசைதைக்குநவையில்லோன். (எ)

ஆரியன்முன்னர்ப்போதுறவுற்றவதனுனும்
காரியமெண்ணிச்சோர்வறமுற்றுங்கடனுனும்
மாருதியொப்பார்வேறிலையென்னுவயன்மைந்தன்
சீரியன்மற்றோளாண்மைதெரிப்பானிவைசெப்பும். (அ)

மேலைவிரிஞ்சன்வீயினும்வீயா † மிகைநாளீர்
நூலைநயந்துநுண்ணிதுணர்ந்தீர்துவமக்கீர்
காலனுமஞ்சுங்காய்சினமொய்ம்பூர்கடனின்றீர்
ஆலநுகர்ந்தானன்னவயப்போரடர்கிற்பீர். (கூ)

வெப்புறுசெந்தீநீர்வளியாலும்விளியாதீர்
செப்புறுதெய்வப்பல்படையாலுஞ்சிதையாதீர்
ஒப்புறினொப்பார்நும்மலதில்லீரொருகாலே
குப்புறினண்டத்தப்புறமேயுங்குதிகொள்வீர். (கo)

---

* நாலுமுகத்தானுதவுற்ருன்-சாம்பவன்.
† மிகைநாளீர்-அதிகமானநாளுடையீர்.

நல்லவுமொன்றோதியவுநாடிநவைதீரச்
சொல்லவும்வல்லீர்காரியநீரேதுணிவுற்றீர்
வெல்லவும்வல்லீர்மீளவும்வல்லீர் * மிடலுண்டேல்
கொல்லவும்வல்லீர்தோள்வலியென்றுங்குறையாதீர். (கக)

மேருகிரிக்குமீதுறநிற்கும்பெருமெய்யீர்
மாரிதுளிக்குந்தாரை † யிடுக்கும்வரவல்லீர்
பாரையெடுக்குநோன்மைவலத்தீர்பழியற்றீர்
சூரியனைச்சென்றேண்கையகத்தூர்தொடவல்லீர் (கஉ)

அறிந்துதிறத்தாறெண்ணியறத்தாரழியாமை
மறிந்தருளப்போர்வாலியைவெல்லு ‡ மதிவல்லீர்
பொறிந்திமையாக்கோன்வச்சிரபாணம்புகமூழ்க
எறிந்துழிமற்றோர்புன்மயிரெனுமிழவாதீர். (கங)

போர்முனைதிர்ந்தான்மூவுலகேனும்பொருளாகா
ஓர்வில்வலங்கொண்டொல்கலில்வீரத்துயர்தோளீர்
பாருலகெங்கும்பேரிருள்சீக்கும்பகலோன்முன்
தேர்முனடந்தே $ யாரியநூலுந்தெரிவுற்றீர். (கச)

நீதியினின்றீர்வாய்மையமைந்தீர்நினைவானும்
மாதர்நலம்பேணுதுவளர்ந்தீர்மறையெல்லாம்
ஓதியுணர்ந்தீரூழிகடந்தீருலகினும்
ஆதியயன்றானேயெனயாதுமறைகின்றீர். (கரு)

அண்ணலமைந்தற்கன்புசிறந்தீரதனானே
கண்ணியுணர்ந்தீர் கருமநுமக்கேகடனென்னத்
திண்ணிதமைந்தீர்செய்துமுடிப்பீர்சிதைவின்றால்
புண்ணியமொன்றேயென்றுநிலைக்கும்பொருள்கொண்டீர். (கசு)

அடங்கவும்வல்லீர்காலமதன்றேலமர்வந்தால்
மடங்கன்முனிந்தாலன்னவலத்தீர்மதிநாடித்
தொடங்கியதொன்றோமுற்றுமுடிக்குந்தொழிலல்லால்
இடங்கெடவெவ்வாயூறுகிடைத்தாலிடையாதீர். (கஎ)

ஈண்டியகொற்றத்திந்திரனென்பான்முதல்யாரும்
பூண்டுநடக்குநன்னெறிசாபப்பொறையானும்
பாண்டிதர்நீரேயஃதினியுய்க்கும்படிவல்லீர்
வேண்டியபோதேவேண்டியதுய்க்கும்வினைவல்லீர். (கஅ)

---

* மிடலுண்டேல்- எதிரிகள் போர்வன்மை யுடையவர்களானல்.
† இடுக்கும்-சந்திலும். ‡ மதி-புத்திசாலித்தனம்,
$ ஆரியநூலும்-தேவபாடைநூல்களும்.

ஏகுமினேகியெம்முயிர்நல்கியிசைகொள்வீர்
ஓகைகொணர்ந்தும்மன்னையுமின்னற்குறையில்லாச்
சாகரமுற்றுந்தாவிடுநீரிக்கடலூவும்
வேகமமைந்தீரென்றுவிருஞ்சன்மகன் * விட்டான். (கக)

சாம்பனியம்பத்தாழ்வதனத்தாமரைநாப்பண்
ஆம்பல்விரிந்தாவன்னகிரிப்பானறிவாளன்
கூம்பலொடுஞ்சேர்க்கைக்கமலத்தன்குலமெல்லாம்
† எம்பல்வரத்தன்சிந்தைதெரிப்பானிவைசொன்னான். (உ0)

வேறு.

இலங்கையையிடந்துவேரோடிவ்வயிற்றருகென்றாலும்
‡ விலங்கினர்தம்மையெல்லாம்வேரொடும்விளியநூறிப்
பொலன்குழைமயிலைக்கொண்டுபோகதனம்புகன்றிட்டாலும்
கலங்கலீருரைத்தமாற்றமுடிக்குவல்கடிதுகாண்டிர். (உக)

யோசனையொன்றிநூறுமுள்ளடியுள்ளதாக
ஈசன்மண்ணளந்ததேய்ப்பவிருங்கடலினிதுதாவி
வாசவன்முதலோர்வந்துமலையினுமிலங்கைவாழும்
நீசரையெல்லாநூறிவினைத்ததுமுடிப்பல்பின்னும். (உஉ)

நீயிரேகினையின்முன்னேநெடுந்திரைப்பரவையேழும்
தாயுலகனைத்தும்வென்றுதையலைத்தருதற்கொத்தீர்
போயிதுபுரிதியென்றுபுலமைதீர்புன்மைகாண்டற்
கேயினிரென்னிலென்னிற்பிறந்தவர்யாவரின்னும். (உங)

முற்றுநீருலகமுற்றும்விழுங்குவான்முழங்கிமுந்நீர்
உற்றதேயெனினுமண்டமுடைந்துபோயுயர்ந்ததேனும்
இற்றைநும்மருளுமெங்கோனேவலுமிரண்டுபாலும்
கற்றைவார்சிறைகளாகக்கலுழனிற்கடப்பல்காண்டிர். (உச)

இலங்கைசெல்வான் அனுமான் மயேந்திரத்தினுச்சியிலெய்துதல்.

ஈண்டினிதுறையின்யானேயெறிகடலிலங்கையெய்தி
மீண்டிவண்வருதல்காறும்விடைதம்மின்விரைவினென்ன
ஆண்டவருவந்துவாழ்த்தவலர்மழையமரர்தூவச்
சேண்டொடர்சிமயத்தெய்வமகேந்திரத்தும்பர்ச்சென்றான். (உரு)

அனுமன் பேருருவெய்திநிற்றல்.

பொருவருவேலைதாவும்புந்தியான்புவனந்தாய
பெருவடிவுயர்ந்தமாயோன்மேக்குறப்பெயர்ந்ததாள்பேரல்

---

* விட்டான்-சொல்லிமுடித்தான். † எம்பல்வர-இன்பமுடையனவாக.
‡ விலங்கினர்-பகைவர்.

உருவறிவடிவினும்பரோங்கினனுவமையாலும்
திருவடியென்னுந்தன்மையாவர்க்குந்தெரியநின்றான். (உசு)

பார்நிழல்பரப்பும்பொற்றேர்வெயிற்கதிர்ப்பரிதிமைந்தன்
போர்நிழல்பரப்புமேலோர்புகழெனவுலகம்புக்குத்
தார்நிழல்பரப்புந்தோளான் றடங்கடறாவாமுன்னம்
நீர்நிழலுவரிதாவியிலங்கைமேற்செல்லநின்றான். (உஎ)

பருவாயமடங்கல்வைகும்படர்வரைமுழுதுமூழ்க
உருவாயவிடங்கொணுகத்தொத்தவால்சுற்றியூழின்
நெருவாயசிகரகோடிநெரிவனதெரியநின்றான்
மகவுாமைமுதுகிற்றோன்றுமந்தரமெனலுமானான். (உஅ)

மின்னெடுங்கொண்டறுவின்வீக்கியகழலினார்ப்பத்
தன்னெடும்தோற்றம்வானோர்கட்புலத்தெல்லைதாவ
வன்னெடுஞ்சிகரகோடிமகேந்திரமண்டந்தாங்கும்
பொன்னெடுந்தூணின்பாதச்சிலையெனப்பொலிந்துநின்றான். (உகூ)

கசு வது மகேந்திரப்படலம் முற்றிற்று.

ஆகூ திருவிருத்தம்-சஂ௦௫௫.

---

## கிட்கிந்தாகாண்டம் முற்றிற்று.

ஆஞ்சநேயர்திருவடிகளேசரணம்.

கம்பநாட்டாழ்வார்திருவடிகளேசரணம்.

# கிட்கிந்தாகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.

ஸ்ரீ

ஸ்ரீமத்வரவரமுநயேநம:

# ஸ்ரீமத்கம்பராமாயணம்.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.

தெய்வப்புலமைக்

**கம்பநாட்டாழ்வார்**

அருளிச்செய்தது.

இஃது

சென்னை இராஜதானி வித்தியாசாலைத்

தமிழ்த்தலைமைப் புலமை நடாத்திய

இயற்றமிழாசிரியர்

**கோ - இராஜகோபால பிள்ளையவர்கள்**

மாணாக்கரும்

சென்னை வேப்பேரி எஸ் - பி - ஜி - ஹைஸ்கூல்

தமிழ்ப்பண்டிதருமாகிய

**திருமயிலை - சண்முகம்பிள்ளையவர்களால்**

பரிசோதித்ததை,

பிருங்கிமாநகரம்.

வேம்புலி முதலியாரவர்கள் குமாரர்

**நமசிவாயமுதலியாரவர்களால்**

தமது

சென்னை - சூளை,

நிரஞ்சனவிலாச அச்சியந்திரசாலையிற்

பதிப்பிக்கப்பட்டது.

1912.

# சுந்தரகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.









    

ஹரிஓம் நன்றாக குருவாழ்க குருவே துணை.

கம்பநாட்டாழ்வார் திருவடிகளே சரணம்.

# ஸ்ரீமத் கம்பராமாயணம்.

ஐந்தாவது

# சுந்தரகாண்டம்.

## முதலாவது - கடறவுபடலம்.

### காப்பு.

அலங்கலிற்றோன்றும்பொய்ம்மையரவெனப்பூதமைந்தும்
விலங்கிய * விகாரப்பாட்டின்வேறுபாடுற்றவீக்கம்
கலங்குவதெவரைக்கண்டாலவரென்பர்கைவிலேந்தி
இலங்கையிற்பொருதாரன்றேமறைகளுக்கிறுதியாவார். (க)

### நூல்.

† ஆண்டகையாண்டவ்வானோர்துறக்கநாடருகர்கண்டான்
ஈண்டிதுதான்கொல்வேலையிலங்கையென்றையமெய்தா
வேண்டருவிண்ணாடென்னுமெய்ம்மைகண்டுள்ளமீட்டான்
காண்டகுதோகையும்பரில்லெனக்கருத்துட்கொண்டான். (உ)

---

* விகாரப்பாட்டின் வேறுபாடு—அறுவகை விகாரப்படுதலுடைய தேவமனுஷ்ய திரியக்ஸ்தாவர வேறுபாடு. அவையாவன, ஊறுபடவொன்றிலே பிறத்தல், பிறந்துளவாதல், வேறுபட வளர்தல், வளர்ந்தயலொன்றாய் விளைந்தமைத்தல், மாறுபடத் தேய்தல், அறமாய்தல்.

† ஆண்டகை—ஆண்மையிற் சிறந்தவரான ஸ்ரீ ஆஞ்சநேயரை, இப்பாட்டால் தேவருலகளவு உயரமும் அவ்வுலகுமுழுதும் பார்க்கும்பார்வையுமுடையரானார் சிறிய திருவடியென்க. சிறிய திருவடி எனினும் ஆஞ்சநேயரெனினும் அனுமானெனினும் ஒக்கும்.

கண்டனனிலங்கைமூதூர்க்கடிபொழிற்கனகநாஞ்சில்
மண்டிலமதிலுங்கொற்றவாயிலுமணியிற்செய்த
வெண்டளக்கனகமாடவீதியும்பிறவுமெல்லாம்
அண்டமுந்திசைகளெட்டுநடுங்கத் * தோள்கொட்டியார்த்தான். (௩)

வன்றந்தவரிகொளுகம்வயங்கனலுமிழும்வாய
பொன்றந்த † முழைகடோறும்புறத்துராய்ப்புரண்டுபோவ
நின்றந்தமில்லானூன்றநெரிந்துகீழழுந்திநீலக்
குன்றந்தன்வயிறுகீறிப்பிதுங்கினகுடர்கண்மான. (௪)

புகலருமுழையுட்டுஞ்சும்பொங்குளைச்சீயம்பொன்றி
உகலருங்குருதிகக்கியுள்ளுறநெரிந்தவூழின்
அகலிரும்பரவைநாணவரற்றுறுகுரலவாகிப்
பகலொளிகரப்பவானைமறைத்தனபறவையெல்லாம். (௫)

மொய்யுறுசெவிகடாவிமுதுகுறமுறைகாறள்ள
மய்யுறுவிசும்பினூடுநிமிர்ந்தவாலதியமஞ்சின்
மெய்யுறத்தழீஇயமெல்லென்பிடியொடும்வெருவலோடும்
கய்யுறமரங்கள்சுற்றிப்பிளிறினகளி ‡ நல்யானை. (௬)

பொன்பிறழ்சிமயக்கோடுபொடியுறப்பொறியுஞ்சிந்த
மின்பிறழ்குடுமிக்குன்றம்வெரிநுறவிரியும்வேலை
புன்புறமயிரும்பூவாக்கட்புலம்புறத்துநாறு
வன்பறழ்வாயிற்கவ்விவல்லிய § மிரிந்தமாதோ. (௭)

தேக்குறுசிகரக்குன்றந்திரிந்துமெய்ந்நெரிந்துசிந்தத்
தூக்குறுதோலர்வாளர்துரிதத்தினெழுந்ததோற்றம்
தாக்குறுசெருவினோரார்தாளறவீசத்தாவி
மேக்குறவிசைத்தாரென்னப்பொலிந்தனர்விஞ்சைவேந்தர். (௮)

தாரகைசுடர்கண்மேகமென்றிவைதவிரத்தாழ்ந்து
பாரிடையழுந்துகின்றபடர்நெடும்பனிமாக்குன்றம்
கூருகிர்க்குவவுத்தோளான்கூம்பெனக்குமிழிபொங்க
ஆர்கலியழுவத்தாழுங்கலமெனலாயிற்றன்றே. (௯)

தாதுகுநறுமென்சந்தங்குங்குமங்குவிகந்தண்ணென்
போதுகுபொலன்றூதென்றித்தொடக்கத்தயாவும்பூசி
மீதுறுசுனைநீராடியருவியோடுலகின்வீழ்வ
ஓதியகுன்றங்கீண்டுகுருதிநீர்சொரிந்தாலொத்த. (௧௦)

* தோள்கொட்டியார்த்தான் என்றது தான் காணப்போகிறவூரை அந்த மயேந்திரகிரியினின்றே கண்டதனாலென்க.

† முழைகள்—பிலத்துவாரங்கள். ‡ நல்—நலம்—சுகம். § இரிதல்—ஓடல்.

கடலுறுமத்திதென்னக்கருவரைதிரியுங்காலை
மிடலுறுபுலன்கள்வென்றமெய்த்தவர்விசும்பினுற்ருர்
திடலுறுகிரியிற்ருந்தஞ்செய்வினைமுற்றிமுற்ரு
துடலுறுபாசம்வீசாதும்பர்செல்வாருமொத்தார். (கக)

வெயிலியற்குன்றங்கீண்டுவெடித்தலுநடுக்கமெய்தி
மயிலியற்றேவிமார்கடழீஇக்கொளப்பொலிந்தவானோர்
அயிலெயிற்றரக்கனள்ளத்திரிந்தநாளணங்குபுல்லக்
கயிலையினிருந்ததேவைத்தனித்தனிக்கடுத்தல்செய்தார். (கஉ)

ஊறியநறவுமுற்றகுற்றமுமுணர்வையுண்ணச்
சீறியமனத்தர்தெய்வமடந்தையரூடறீர்வுற்
ருறினரஞ்சுகின்ருரன்பரைத்தழுவியும்பர்
ஏறினரிட்டுநீத்தபைங்கிளிக்கிரங்குகின்ருர். (கங)

இத்திறநிகழும்வேலையிமையவர்முனிவர்மற்றை
முத்திறத்துலகத்தாருமுறைமுறைவிரைவின்மொய்த்தார்
தொத்துறுமலருஞ்சாந்துஞ்சுண்ணமுமணியுந்தூவி
வித்தகசேறியென்ருர்வீரனும்விரைவதானுன். (கச)

குறுமுனிகுடித்தவேலைகுப்புறுங்கொள்கைத்தாதல்
வெறுவிதுவிசயம்வைகும்விலங்கற்ருேளலங்கல்வீர
சிறுவிதென்றிகழற்பாலையல்லைநீசேறியென்ஞு
உறுவலித்துணைவர்சொன்னுரொருப்பட்டான்பொருப்பையொப்பான். ()

* இலங்கையினளவிற்றன் † ருலிவ்வுருவெடுத்ததோற்றம்
விலங்கவுமுளதன்றென்றுவிண்ணவர்வியந்துநோக்க
அலங்கரு ழ்மார்பன்முன்ருழ்ந்தடித்துணையழுத்தலோடும்
பொலன்கெழுமலையுந்தாளும்பூதலம்புக்கமாதோ. (கரு)

வால்விசைத்தெடுத்துவன்ருண்மடக்கிமார்பொடுக்கி ‡ மானத்
தோல்விசைத்துணைகள்பொங்கக்கழுத்தினைச்சுருக்கித்தூண்டும்
கால்விசைத்தடக்கைநீட்டிக்கட்புலங்கதுவாவண்ணம்
மேல்விசைத்தெழுந்தானுச்சிவிரிஞ்சினுடூரிஞ்சவீரன். (கஎ)

ஆயவனெழுதலோடுமரும்பணைமரங்கடாமும்
வேயுயர்குன்றும்வென்றிவேழமும்பிறவுமெல்லாம்
நாயகன்பணியிதென்ஞுநளிர்கடலிலங்கைதாமும்
பாய்வனவென்னவானம்படர்ந்தளவெழுவமான. (கஅ)

---

* இலங்கையின் என்பதில் இன்சாரியை. † ஆல் அதிசயக்குறிப்பு.
‡ மானத்தோள் என்றும் பாடம்.

இசையுடையண்ணல்சென்றவேகத்தாலெழுந்தகுன்றும்
பசையுடை * மரனுமாவும்பல்லுயிர்க்குலமும்வல்லே
திசையுறச்சென்றுசென்றுசெறிகடலிலங்கைசேரும்
விசையிலவாகத்தள்ளிவீழ்ந்தனவென்னவீழ்ந்த. (கக)

மாவொடுமரனுங்கல்லும்வல்லியுமியாவுமற்றும்
போவதுபுரிந்தவீரன்விசையினற்புணரிபொங்கத்
தாவினகீழுமேலுந்தூர்த்தனசுருதியன்ன
சேவகன்சீருமுன்னஞ்சேதுவுந்தெரிந்தமாதோ. (உ0)

கீண்டது † வேலைநன்னீர்கீழுறக்கிடந்தநாகர்
வேண்டியவுலகமெங்கும்வெளிப்படமணிகண்மின்ன
ஆண்டகையதனைநோக்கியரவினுக்கரசர்வாழ்வும்
காண்டகுதவத்தனேனியானெனக்கருத்துட்கொண்டான். (உக)

வெய்தின்வான்சிறையினன்னீர்வேலையைக்கிழியவீசி
நொய்தினமுதங்கொண்டநோன்மையேநுவலுநாகர்
உய்துநாமென்பதென்னேயுறுவலிக்கலுழனூழின்
எய்தினனென்றஞ்சிமறுக்கமுற்றிரியல்போனர். (உஉ)

துள்ளியமகரமீன்கடுப்பறச்சுறவுதூங்க
ஒள்ளியபனைமீன்றுஞ்சுந்திவலையவூழிக்காலின்
வள்ளுகிர்வீரன்செல்லும்விசைபொருமறுகிவாரி
தள்ளியதிரைகண்முந்துற்றிலங்கைமேற்றவழ்ந்தமாதோ. (உங)

இடுக்குறுபொருள்களென்னுமெண்டிசைசுமந்தயானை
நடுக்குறவிசையிற்செல்லுநாயகன்றூதனாகம்
எடுக்குறுகாலவன்காற்றிடியொடுமொடியவர்நாள்
முடுக்குறக்கடலிற்செல்லு ‡ முத்தலைக்கிரியுமொத்தான். (உச)

கொட்புறுபுரவித்தெய்வக்கூர்நுதிக்குலிசத்தாற்கும்
கட்புலங்கதுவலாகாவேகத்தாற்கடலுமண்ணும்
உட்பதங்கூட்டியண்டமுறவுளசெலவினொற்றைப்
புட்பகவிமானந்தானவ்விலங்கைமேற்போவதொத்த. (உரு)

விண்ணவரேத்தவேதமுனிவரார்வியந்துவாழ்த்த
மண்ணவரிறைஞ்சச்செல்லுமாருதிமறமுட்கூர

* மரனும்-மரங்களும். † கடலுக்கு நன்னீர்மையாவது வற்றுதிருத்தல்.

‡ முத்தலைக்கிரி-திருவடி தோள்களிரண்டும் தலை ஒன்றும் கூட மூன்று சிகரத்தையுடைய ஒரு மலையையும் ஒத்தானெனவுமாம்.

அண்ணல்வாளரக்கன்றன்னையமுக்குவாமின்னமென்னுக்
கண்ணுதலொழியச்செல்லுங் * கைலையங்கிரியுமொத்தான். (உசு)

† மாணியசம்வேடந்தாங்கிமலரயற்கறிவுமாண்டோர்
ஆணியாயுலகுக்கெல்லாமறம்பொருணிரப்புமண்ணல்
சேணுயர்நெடுநாடீர்ந்ததிரிதலைச்சிறுவன்றன்னைக்
காணியவிரைவிற்செல்லுங்கனகமால்வரையுமொத்தான். (உஎ)

மழைகிழித்துதிரமீன்கண்மறிகடல்பாயவானம்
குழைவுறத்திசைகள்கீறமேருவுங்குலுங்கக்கோட்டின்
முழையுடைக்கிரிகண்முற்றமுடுக்குவான்முடிவுக்காலத்
தழிவுறக்கடுக்கும்வேகத்தானையுமனையனுனன். (உஅ)

தடக்கைநாலைந்துபத்துத்தலைகளுமுடையான்றனே
அடக்கியைம்புலன்கள்வென்றதவப்பயனறுதலோடும்
கொடக்குறியாகமாகங்கிழக்கெழுவழக்குநீங்கி
வடக்கெழுந்திலங்கைசெல்லும்பரிதிவானவனுமொத்தான். (உகூ)

புறந்துறலஞ்சிவேறோரரணம்புக்குறைதல்போக்கி
மறத்தொழிலரக்கர்வாழுமாநகர்மனுவின்வந்த
திறத்தகையிராமனென்னுஞ்சேவகற்பற்றிச்செல்லும்
அறத்தகையரசன்றிண்போராழியுமனையனுனன். (௩௦)

கேழுலாமுழுநிலாவிற்கிளரொளியிருளைக்கீறப்
பாழிமாமேருநாணவிசும்புறப்படர்ந்ததோளான்
ஆழிசூழுலகமெல்லாமருங்கனன்முருங்கவுண்ணும்
ஊழிநாள்வடபாற்றோன்றுமுழுமுழுமதியுமொத்தான். (௩க)

அடலெலாந்திகிரிமாயற்கமைந்தனனுற்றல்காட்டக்
குடலெலாமவுணர்சிந்தக்குன்றெனக்குறித்துநின்ற
திடலெலாந்தொடர்ந்துசெல்லச்சேண்விசும்பொதுங்கத்தெய்வக்
கடலெலாங்கலங்கத்தாவுங்கலுழனுமனையனுனன். (௩உ)

நாலினேடுலகமூன்றுநடுக்குறவடுக்கிநாகர்
மேலின்மேனின்றகாறுஞ்சென்றகூலத்தின்விண்டு
காலினுலளந்தவானமுகட்டையுங்கடக்கக்கால
வாலினுலளந்தானென்றுவானவர்மருளச்சென்றான். (௩௩)

விளித்துப்பின்வேலைதாவும்வீரன்வால்வேதமெய்க்கும்
அளித்துப்பினருமனென்னுமறத்துணைபெற்றதாயும்

* வெள்ளிமலை-சிறந்தமலைப்பு. † மாணி-பிரமசாரி.

களித்துப்புன்ருழின்மேனின்றவரக்கர்கண்ணுறுவ * ராமென்
ருளித்துப்பின்செல்லுங்காலபாசத்தையொத்ததன்றே. (நடச)

மேருவைமுழுதுஞ்சூழ்ந்துமீதுற்றவேகநாகம்
கார்நிறத்தண்ணலேவக்கலுழன்வந்துற்றகாலை
சோர்வுறுமனத்ததாகிச்சுற்றியசுற்றுநீங்கிப்
பேர்வுறுகின்றவாறுமொத்ததப்பிறங்குபேர்வால். (நடரு)

குன்ருடுகுணிக்குங்கொற்றக்குவவுத்தோட்குரக்குச்சீயம
சென்றுறுவேகத்திண்காலெறிதரத்தேவர்வைகும்
மின்ருடர்வானத்தானவிமானங்கள்விசையிற்றம்மின்
ஒன்ருடொன்றுடையத்தாக்கிமாக்கடலுற்றமாதோ. (நடசு)

வலங்கையின்வயிரவேதிவைத்தவன்வைகுநாடும்
கலங்குவதேகுவான்றன்கருத்தெனக்கொலென்னுங்கற்பான்
விலங்கையிலெயிற்றுவீரன்முடுக்கியவேகம்வெய்யோன்
இலங்கையினளவன்றென்னுவிம்பர்நாடிரிந்ததிப்பால். (நடஎ)

ஓசனையுலப்பிலாதவுடம்பமைந்துடையவென்னத்
தேசமுநூலுஞ்சொல்லுந்திமிங்கிலகிலங்களோடும்
ஆசையையுற்றவேலைகலங்கவன்றண்ணல்யாக்கை
வீசியகாலின்வீந்துமிதந்தனமீன்களெல்லாம். (நடஅ)

பொருவருமுருவத்தன்னுன்போகின்றபொழுதவேகம்
தருவனதடக்கைதள்ளாநிமிர்ச்சியதம்முளொப்ப
ஒருவருங்குணத்துவள்ளலோருயிர்த்தம்பியோடும்
இருவருமுன்னர்ச்சென்ருலொத்தவவ்விரண்டுபொலும். (நடக)

## வேறு.

இந்நாகமன்னுனெறிகாலெனவேகும்வேலை
† திந்நாகமாவிற்செறிகீட்டிசைக்காவல்செய்யும்
கைந்நாகமந்நாள்கடல்வந்ததொர்காட்சிதோன்ற
மைந்நாகமென்னுமலைவானுறவந்ததன்றே. (சுo)

மீயோங்குசெம்பொன்முடியாயிரமின்னிமைப்ப
ஓயாவருவித்திரளுத்தரியத்தையொத்த
தீயோருளராகியதாலவர்தீமைதீர்ப்பான்
‡ மாயோன்மகாக்கடனின்றெழுமாண்பதாகி. (சுக)

---

* ஆம்-சாரிகை.

† திக்குநாகம்திந்நாகமெனக்கடைக்குறையாய்மரீஇயது தொகுத்தலெனவுமாம்.

‡ மாயோன்-ஆச்சரியகுண சேஷ்டிதனுன எம்பெருமான்.

நூலேந்துகேள்விநுகராப்புலனோக்கலுற்றார்
போலேந்துநின்றதனியான்மெய்பொறாதுநீங்கக்
காலாழ்ந்தழுந்திக்கடல்புக்குழீஇக்கச்சமாகி
மாலேந்தவோங்குநெடுமந்தரமேயுமான. (௬௨)

தள்ளற்கருநற்சிறைமாடுதழைப்பொடோங்க
என்னற்கருநன்னிறமெல்லையிலாதபுல்ல
வள்ளற்கடலைக்கெடநீக்கிமருந்துவெளவி
உள்ளூற்றெழுமோருவணத்தரசேயுமொத்த. (௬௩)

ஆன்றாநெடுநீரிடையாதியொடந்தமாகித்
தோன்றாதுநின்றானருடோன்றிடமுந்துதோன்று
மூன்றாமுலகத்திடைமுற்றுயிராயமற்றும்
ஈன்றானையீன்றசுவணத்தனியண்டமென்ன. (௬௪)

இந்நீரினென்னைத்தருமெந்தையையெய்தியன்றிச்
செந்நீர்மைசெய்யேனெனச்சிந்தனைசெய்துநொய்தின்
அந்நீரில்வந்துமுதலந்தணனாதிநாளம்
முந்நீரின்மூழ்கித்தவமுற்றிமுளைத்தவாபோல். (௬௫)

பூவாலிடையூறுபுகுந்தபொறாதநெஞ்சின்
கோவாமுனிசீறிடவாரிகுளித்தவெல்லாம்
மூவாமுதனாயகன்மீளமுயன்றவந்நாள்
தேவாசுரர்வேலையில்வந்தெழுதிங்களென்ன. (௬௬)

நிறங்குங்குமமொப்பனநீணிறம்வாய்த்தநீரின்
இறங்கும்பவளக்கொடிசுற்றினசெம்பொனேய்ந்த
பிறங்குஞ்சிகரப்படர்மூன்றிறொறும்பிணாவோ
டுறங்கும்மகரங்களுயிர்ப்பொடுணர்ந்துலாவ. (௬௭)

கூன்சூன்முதி * ரிப்பிகுரைக்கநிரைத்தபாசி
வான்சூழ்மழையொப்பவயங்குபளிங்குமுன்றி
றான்சூலநாளிற்றகைமுத்தமுயிர்த்தசங்கம்
மீன்சூழ்வருமம்முழுவெண்மதிவீறுகீற. (௬௮)

பல்லாயிரமாயிரங் †காசினம்பாடிமைக்கும்
கல்லார்சிமயத்தடங்கைத்தலநீண்டுகாட்டத்
தொல்லார்கலியுட்புகமூழ்கிவயங்குதோற்றத்
தெல்லாமணியீட்டமுகந்தெழுகின்றதென்ன. (௬௯)

---

* இப்பிகுரைத்தலே மேககர்ச்சிதமாகவும், பாசியே மேகமாகவும், பளிங்குப் பாரையே நிலாப்பரவின ஆகாயமாகவும், முத்துக்களேநட்சத்திரங்களாகவும், சங்கே பூரணச்சந்திரனாகவும், சுக்கிலபட்சத்தாகாயம்போல் மலைவந்ததென்க.

† காசினம்-இரத்தினவகை.

மனையிற்பொலிமாகநெடுங்கொடிமாலையேய்ப்ப
வினையிற்றிரள்வெள்ளருவித்திரடேங்கிவீழ
நினைவிற்கடலூடெழலோடுமுணர்ந்துநீங்காச்
சுனையிற்பனைமீன்றிமிலோடுதொடர்ந்துதுள்ள. (௫௰)

கொடுநாலொடிரண்டுகுலப் * பகை † குற்றமூன்றும்
சுடுஞானம்வெளிப்படவுய்த்ததுயக்கிலார்போல்
விடநாகமுழைத்தலைவிம்மலுழன்றுநீங்க
நெடுநாள்பொறையுற்றவுயிர்ப்புநிமிர்ந்துநிற்ப. (௫௧)

எழுத்தோங்கிவிண்ணொடுமண்ணொக்கவிலங்குமாடி
உழுந்தோடுகாலத்திடையும்பரிணிம்பரெங்கும்
கொழுந்தோடிநின்றகொழுங்குன்றைவியந்துநோக்கி
அழுங்காமனத்தண்ணலிதென்கொலெனாவயிர்த்தான். (௫௨)

நீர்மேற்படராநெடுங்குன்றுநிமிர்ந்துநிற்றல்
சீர்மேற்படராதெனச்சிந்தையுணர்ந்துசெல்வான்
வேர்மேற்படவன்றலைகீழ்ப்படநூக்கிவிண்ணோர்
ஊர்மேற்படராக்கடிதும்பரின்மீதுயர்ந்தான். (௫௩)

உந்தாமுனுலைந்துயர்வேலையொளித்தகுன்றும்
சிந்தாகுலமுற்றதுபின்னருந் † தீர்விலன்பால்
வந்தோங்கியாண்டோர்சிறுமானுடவேடமாகி
எந்தாயிதுகேளெனவின்னவிசைத்ததன்றே. (௫௪)

வேற்றுப்புலத்தோனெனலையவிலங்கலெல்லாம்
மாற்றுச்சிறையென்றரிவச்சிமாணவோச்ச
வீற்றுப்படநூறியவேலையின்வேலையுய்த்துக்
காற்றுக்கிறைவனெனைக்காத்தனன்புகாக்க. (௫௫)

அன்னானருங்காதலனாதலினன்புதூண்ட
என்னாலுனக்கீண்டுசெயற்கரிதாயதின்மை
பொன்னார்சிகரத்திவையாறினைபோதியேனும்
உன்னாலுயர்ந்தேனுயர்விற்குமுயர்ந்ததோளாய். (௫௬)

கார்மேகவண்ணன் $ பணிபூண்டருங்காலின்மைந்தன்
தேர்வான்வருகின்றதுசீதையைத்தேவருய்யப்
பேர்வானயல்சேறியிதிற்பெரும்பேறிலென்ன
நீர்வேலையுமென்னையுரைத்ததுநீதிநின்றாய். (௫௭)

* பகை-ஈண்டு காமக்குரோத லோபமோக மதமாச்சரியங்களை.
† குற்றமூன்று-ஐயம், திரிபு, அறியாமை.
‡ தீர்வில்-விடுதலில்லாத. $ பணி-கட்டளை.

நற்றுயினுநல்லனெனக்கிவனென்றுநாடி
இற்றே * யிறையெய்திளையெய்ந்தது † கோடியென்னுல்
பொற்றுரகன்மார்பதம்மில்லுழைவந்தபோதே
உற்றூர்செயன்மற்றுமுண்டோவெனவுற்றுரைத்தான். (ரு௮)

உரைத்தானுரையாலிவனூறிலனென்பதுன்னி
விரைத்தாமரைவாண்முகவிட்டுவிளங்குவீரன்
சிரித்தானளவேசிரித்துத்திசைசெல்லநோக்க
வரைத்தாணெடும்பொற்குடுமித்தலைமாடுகண்டான். (ருகூ)

வருந்தேனதுவென்றுணைவானவன்வைத்தகாதல்
அருந்தேனினியாதுமென்னுசைசிரப்பினல்லால்
பெருந்தேன் ‡ பொழிசாரனின்னன்புபிணித்தபோதே
இருந்தேனுகர்ந்தேனிதினூஉங்கினியீவதுண்டே. (சூ0)

0 முன்பிற்சிறந்தா ¶ ரிடையுள்ளவர்காதன்முற்றப்
§ பின்பிற்சிறந்தார்குணநன்றிதுபெற்றயாக்கைக்
கென்பிற்சிறந்தாயதொரூற்றமுண்டென்னலாமே
அன்பிற்சிறந்தாயதொர்பூசனையார்கணுண்டே. (சூக)

ஈண்டியான்கடிதேகியிலங்கைவிலங்கலெய்தி
ஆண்டானடிமைத்தொழிலாற்றலினூற்றலுண்டேல்
மீண்டியானுகர்வென்னல்விருந்தெனவேண்டிமெய்ம்மை
பூண்டானவன்கட்புலம்பிற்படமுந்துபோனுன். (சூஉ)

செவ்வான்கதிருங்குளிர்திங்களுந்தேவர்வைகும்
வெவ்வேறுவிமானமுமீனுடுமேகமற்றும்
எவ்வாயுலகத்தவுமீண்டியிருந்ததம்மின்
ஒவ்வாதனவொத்திடவூழிவெங்காலுமொத்தான். (சூ௩)

$ நீர்மாக்கடன்மேனிமிர்கின்றநிமிர்ச்சிநோக்காப்
பார்மேற்றவழ்சேவடிபாய்நடவாப்பதத்தே
தேர்மேற்குதிகொண்டவனித்திறன்சிந்தைசெய்தான்
ஆர்மேற்கொலென்றெண்ணியருக்கனுமையமுற்றுன். (சூச)

வாளொத்தொளிர்வாலெயிறூழின்மருங்கிமைப்ப
நீளொத்துயர்வாலின்விசும்புசிரம்புமெய்யன்
கோளொத்தவன்மேனிவிசும்பிருகூறுசெய்த
நாளொத்ததுமேலொளிகீழிருளுற்றஞாலம். (சூரு)

---

* இறை - கொஞ்சம். † கோடி- அங்கீகரிக்கிறது. ‡ மொழிசாரலின் - என்றும் பாடம், 0 முதல்வள்ளல்கள் - இல்லையென்னுமற்கொடுப்பவர். ¶ இடைவள்ளல்கள் - வேண்டக்கொடுப்பவர். § கடைவள்ளல்கள் - புகழக்கொடுப்பவர்.

$ நீர்—ஈண்டு ஊற்றுநீர், ஆற்றுநீர், மேகநீர் ஆக முந்நீரென்க.

மூன்றுற்றதலத்திடைமுற்றியதுன்பம்வீப்பான்
என்றுற்றுவந்தான்வலிமெய்ம்மையுணர்த்துநீயென்
றூன்றுற்றவானோர்குறைநேரவரக்கியாகித்
தோன்றுற்றுநின்றாள்சுரசைப்பெயர்ச்சிந்தைதூயாள். (சுசு)

பேழ்வாயொராரக்கியுருக்கொடுபெட்பினோங்கிக்
கோழ்வாயரியின்குலத்தாய்கொடுங்கூற்றுமுட்க
வாழ்வாயெனக்காமிடமாய்வருவாய்கொலென்னு
* நீழ்வாய்விசும்பின்றனதுச்சிநெருங்கிநின்றாள். (சுஎ)

தீயேயெனலாயபசிப்பிணிதீர்த்தல்செய்வாய்
ஆயேவிரைவுற்றெனையண்மினைவண்மையாள
நீயேயினிவந்தெனிணங்கொள்பிணங்கெயிற்றின்
வாயேபுகுவாய்வழிமற்றிலைவானிஎன்றாள். (சுஅ)

பெண்பாலொருநீபசிப்பீழையொறுக்கநொந்தாய்
உண்பாயெனதாக்கையையானுதவற்குநேர்வல்
விண்பாலவர்நாயகனேவலிழைத்துமீண்டால்
நண்பாலெனச்சொல்லியநல்லறிவாளனக்கான். (சுகூ)

காய்ந்தேழுலகங்களுங்காணநின்யாக்கைதன்னை
ஆய்ந்தேபசிதீர்வெனின்றுணையென்றனள்சொன்னாள்
ஓர்ந்தானுமிகழ்ந்தொருவேனிதூழில்பேழ்வாய்
சேர்ந்தேகுகின்றேன்வலையாமெனிற்றின்னியென்றான். (எ0)

அக்காலையரக்கியுமண்டமநந்தமாகப்
புக்கானிறையாதபுழைப்பெருவாய்திறந்தா
விக்காதுவிழுங்கநின்றாளதுநோக்கிவீரன்
திக்காவவள்வாய்சிறிதாம்வகைசேணினீண்டான். (எக)

நீண்டானுடனேசுருங்காநிமிர்வாள்வயிற்றின்
ஊண்டானெனவுற்றொருயிர்புயிராதமுன்னர்
மீண்டானதுகண்டனர்விண்ணுறைவோர்களெம்மை
ஆண்டான்வலனென்றலக்தூஉய்நெடிதாசிசொன்னார். (எஉ)

மின்மேற்படர்நோன்மையனுயுடல்வீங்கிநீங்கத்
தன்மேனியளாயவடாயினுமன்புதாழ
என்மேன்முடியாதனவென்றினிதேத்திநின்றாள்
பொன்மேனியனுநெடிதாசிபுனைந்துபோனான். (எங

வேதங்களிசைத்தனர்கின்னரர்கீதநின்ற
பேதங்களியம்பினர்பேதையராடல்பின்னர்ப்
பூதங்கடொடர்ந்துபுகழ்ந்தனபூசுரேசர்
வேதங்களியம்பினர்தென்றல்விருந்துசெய்த. (எச)

* நீள்—நீழ், என்பதிணவெதுகை.

மந்தாரமுந்துமகரந்தமணந்தவாடை
செந்தாமரைவாண்முகத்திற்செறிவேர்சிதைப்பத்
தந்தாமுலகத்திடைவிஞ்சையர்பாணிதள்ளும்
கந்தாரவீணைக்களிசெஞ்செவிக்காதுநுங்க. (எரு)

வேறு.

வெங்கார்நிறப்புணரிவேறேயுமொன்றைப்
பொங்கார்கலிப்புனறரப்பொலிவதேபோல்
இங்கார்கடத்திரெனவென்றெவெழுந்தாள்
அங்காரதாரைபெரிதாலாலயன்னாள். (எசு)

* காதக்கடுங்குறிகணக்கிறுதிகண்ணாள்
பாதச்சிலம்பிறெலிவேலையொலிபம்ப
வேதக்கொழுஞ்சுடரைநாடிநெறிமேனாள்
ஓதத்தின்மேவுமதுகைடவரையொத்தாள். (எஎ)

துண்டப்பிறைத்துணையெனச்சுடரெயிற்றாள்
கண்டத்திடைக்கறையுடைக்கடவுள்கைம்மா
முண்டத்துரித்தவுரியாண்முளரிவந்தான்
அண்டத்தினுக்குறையமைத்தபிலவாயாள். (எஅ)

நின்றாணிமிர்ந்தலைநெடுங்கடலினீர்தன்
வன்றாளலம்பமுடிவான்முகடுவௌவ
அன்றாய்திறத்தவனறத்தையருளோடும்
இன்றாளொருத்தியிவளென்பதுதெரிந்தான். (எகூ)

பேழ்வாயகத்தலதுபேருலகமூடும்
நீழ்வானகத்தினிடையேகுநெறிநேரா
வாழ்வானனுக்கனவளாழ்பிலவயிற்றைப்
போழ்வானினைத்தினையவாய்மொழிபுகன்றான். (அ0)

சாயாவரந்தழுவினாய்தழியபின்னும்
ஓயாதுவந்தவிசைகண்டுணரகில்லாய்
வாயாலளந்துநெடுவான்வழியடைத்தாய்
நீயாரையென்னையிவணின்றநிலையென்றான். (அக)

பெண்பாலெனக்கருதுபெற்றியொழியுற்றால்
விண்பாலவர்க்குமுயிர்வீடுறுதன்மெய்யே
கண்பாலடுத்தவுயிர்காலன்வருமேனும்
உண்பானருத்தியதொழிப்பரியதென்றாள். (அஉ)

* காதவழி தூரத்திலுள்ள எப்பொருளாயினும் அப்பொருளினிழலை யிழுக்கும் அளவுமுடியுள்ள கண்ணாளென்பதனாலே சாயாக்கிராஹி-நிழலையிழுக்கிறவள்என்றும் அவளுக்கொருபெயர்.

திறந்தாளெயிற்றையவளண்ணலிடைசென்றான்
அறந்தானரற்றியதயர்த்தமரரெய்த்தார்
இறந்தானெனக்கொடொரிமைப்பதனின்முன்னம்
பிறந்தானெனப்பெரியகோளரிபெயர்ந்தான். (அரு)

* கள்வாயரக்கிகதறக்குடர்கணத்தில்
கொள்வார்தடக்கையின்விசும்பைமிசைகொண்டான்
முள்வாழ்பொருப்பின்முழைமெய்திமிகநொய்தின்
உள்வாளரக்கொடமுதிண்கலுழனொத்தான். (அச)

சாகாவரத்தலைவரிற்றிலகமன்னான்
ஏகாவரக்கிகுடர்கொண்டுடனெழுந்தான்
மாகாலசைப்பவடமண்ணினுறவாலோ
டாகாயமுற்றகதலிக்குவமையானான். (அரு)

ஆர்த்தனர்கள்வானவர்கடானவரழுங்கா
வேர்த்தனர்விரிஞ்சனும்வியந்துமலர்வெள்ளம்
தூர்த்தனனகன்கைலையிற்றலைவிலோனும்
பார்த்தனன்முனித்தலைவராசிகள்பகர்ந்தார். (அசு)

மாண்டாளரக்கியவள்வாய்வயிறுகாறும்
கீண்டானிமைப்பினிடைமேருகிரிக்ழா
நீண்டான்வயக்கதிரினைப்பிணைடிதென்னைப்
பூண்டானருக்கனுயர்வானின்வழிபோனான். (அஎ)

சொற்றார்கள்சொற்றதொகையல்லதுணையொன்றோ
முற்றாமுடிந்தநெடுவானினிடைமுந்நீர்
இற்றாவியெற்றெனினும்யானினியிலங்கை
உற்றால்விலங்குமிடையூறெனவுணர்ந்தான். (அஅ)

ஊறுகடிதூறுவனவூறிலறமுன்னாத்
தேறிலியரக்கர்புரிதீமையவைதீர
வேறுவகையாண்டையவிராமனெனவெல்லாம்
மாறுமதின்மாறுபிறிதில்லெனவலித்தான். (அகூ)

வேறு.

தசும்புடைக்கனகநாஞ்சிற்கடிமதிறரித்துநோக்கான்
அசும்புடைப்பிரசத்தெய்வக்கற்பகநாட்டையண்மி
விசும்பிடைச்செல்லும்வீரன்விலங்கிவேறிலங்கைமூதூர்ப்
பசுஞ்சுடர்ச்சோலைத்தாங்கோர்பவளமால்வரையிற்பாய்ந்தான். (கூ0)

* கள்வாய்—கள்ளை ஒழுகவிடுகிறவாய் என உருபும் முடிக்குஞ்சொல்லுந் தொக்க தொகை.

மேக்குறச்செல்வோன்பாயவிலங்கிநீரிலங்கைவெற்பு
நூக்குறுத்தங்குமிக்குந்தள்ளுறநுடங்குநோன்மை
போக்கினுக்கிடையூறுகப்புயலொடுபொதிந்தவாடை
தாக்குறத்தளர்ந்துசிந்துங்கலமெனத்தக்கதன்றே. (௬௧)

மண்ணடியுற்றுமீதுவானுறவரம்பின்றன்மை
எண்ணடியுற்றகுன்றத்தவத்துநின்றெய்தநோக்கி
விண்ணிடையுலகமென்னுமெல்லியன்மேனிநோக்கக்
கண்ணடிவைத்ததன்னவிலங்கையைத்தெரியக்கண்டான். (௬௨)

நன்னகரதனைநோக்கிநளினக்கைமறித்துநாகர்
பொன்னகரிதனையொக்குமென்பதுபுல்லி * தம்மா
அந்நகரிதனினன்றேயண்டத்தைமுழுதுமாள்வான்
இந்நகரிருந்துவாழ்வானிதுவதற்கேதுவென்றான். (௬௩)

மாண்டதோர்நலத்திற்றுமென்றுணர்த்துதல்வாய்மைத்தன்றால்
வேண்டியவேண்டினெய்திவெறுப்பின்றிவிழைந்ததுய்க்கும்
† ஈண்டரும்போகவின்பமீறிலதியாண்டுக்கண்டாம்
ஆண்டதுதுறக்கமஃதேயருமறைத்துணிவுமம்மா. (௬௪)

உட்புலனெழுநூறென்பர்யோசனையுலகமூன்றில்
தெட்புறுபொருள்களெல்லாமிதனுழைச்செறிந்தவென்றால்
நுட்புலனுணங்குகேள்விநுழைவிலரெனினுநோக்கும்
கட்புலன்வரம்பிற்றுமேகாட்சியுங்கரையிற்றுமே. (௬௫)

௧ - வது கடறவுபடலம் - முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-௬௫.)

---

## ௨ - வது ஊர்தேடுபடலம்.

பொன்கொண்டிழைத்துமணியைக்கொடுபொதிந்த
மின்கொண்டமைத்தவெயிலைக்கொடுசமைத்த
என்கொண்டியற்றியவெனத்தெரிகிலாத
வன்கொண்டல்விட்டுமதிமுட்டுவனமாடம். (௧)

நாகாலயங்களொடுநாகருலகுந்தம்
பாகார்மருங்குதுயில்வென்னவுயர்பண்ப
ஆகாயமஞ்சவசன்மேருவையனுக்கும்
மாகால்வழங்குசிறுதென்றல்வரநின்ற. (௨)

---

* அம்மா—அசை, அதிசயக்குறிப்பாவதோரிடைச்சொல்.
† ஈண்டரும்—கிடைக்கவரிதான.

மாகாரின்மின்கொடிமடக்கினரடுக்கி
மீகாரமெங்கணுநறுந்துகள்விளக்கி
ஆகாயகங்கையினையங்கையினினள்ளிப்
பாகாயசெஞ்சொலவர்வீசுபடகாரம். (ரு)

வேறு.

பஞ்சியூட்டியபாட்டிசைக்கிண்கிணிப்பதுமச்
செஞ்செவிச்செழும்பவளத்தின்கொழுஞ்சுடர்சிதறி
மஞ்சினஞ்சனநிறமறைத்தரக்கியர்வடித்த
அஞ்சலோதியோடுவமையவர்க்குறுமுவமை. (சா)

நானநாண்மலர்க்கற்பகநறுவிரைநாறப்
பானம்வாயுறவெறுத்ததாளாறுடைப்பறவை
தேனவாவிரைச்செழுங்கழுநீர்த்துயில்செய்ய
வானயாறுதம்மரமியத்தலந்தொறுமடுத்த. (எ)

குழலும்வீணையும்யாழுமென்றினையனகுழைய
மழலைமென்மொழிகிளிக்கிருந்தளிக்கின்றமகளிர்
சுழலுநன்னெடுந்தடமணிச்சுவர்தொறுந்துவன்றும்
நிழலுந்தம்மையுமெய்ம்மைநின்றறிவருநிலைய. (அ)

இனையமாடங்களிந்திரற்கமைவரவெடுத்த
மனையின்மாட்சிமைவென்னினச் * சொல்லுமாசுண்ணும்
அனையதாமெனினரக்கர்தந்திருவுக்குமளவை
நினையலாமன்றியுவமையுமன்னதாநிற்கும். (எ)

மணிகளெத்துணைபெரியவுமாறிருமார்பின்
அணியுங்காசினுக்ககன்றனவுளவெனலரிதால்
திணியுநன்னகர்த்திருமனைதெய்வமாதச்சன்
துணிவின்வந்தனன்றொட்டழகிழைத்தவத்தொழில்கள். (அ)

வாழுமன்னுயிர்யாவையுமொருவழிவாழ
ஊழிநாயகன்றிருவயிற்றொத்துளதிவ்வூர்
ஆழியண்டத்தினருக்கன்றனலங்குதேர்ப்புரவி
எழுமல்லனவீண்டுளகுதிரையுமெல்லாம். (கூ)

மரமடங்கலுங்கற்பகமனையெலாங்கனகம்
அரமடந்தையர்சிலதியாரக்கியர்க்கமரர்
உரமடங்கிவந்துழையராயுழல்பவரொருவர்
தரமடங்குவதன்றிதுதவஞ்செய்ததவமால். (க0)

---

* தோஷமில்லாதசொற்களைத்தோஷமுள்ளபொருள்மேல் ஆரோபிக்க லாகாதென்பார் சொல்லுமாசுண்ணுமென்றார்.

போரியைந்தனதோற்றவென்றிகழ்தலிற்புறம்போய்
நேரியன்றவன்றிசைதொறுநின்றமாநிற்க
ஆரியந்தனியைங்கரக்களிறுமோராழிச்
சூரியன்றனித்தேருமேயிந்நகர்தொகாத. (கக)

தேவரென்பவர்யாருமித்திருநகர்க்கிறைவற்
கேவல்செய்கிலாரேவரேயெண்வகையுருவின்
மூவர்தம்மினுமதிகனென்றாலவன்முயலும்
தாவின்மாதவமல்லதுபிறிதொன்றுதருமோ. (கஉ)

தழங்குபேரியினர்கலிதகைநெடுங்களிறு
முழங்குமோதையுமூரிநீர்முழக்கொடுமுழங்கும்
கொழுங்குழற்புதுக்குதலையர்நூபுரக்குரலின்
வழங்குமப்பெருந்துழனிகள்வயின்றொறுமறையும். (கங)

மரகதத்தினுமற்றுளமணியினும்வனைந்த
குரகதத்தடந்தேரினமனைவபயில் * கொட்டில்
இரவிவெள்கநின்றிமைக்கின்றவியற்கையவென்றால்
நரகமொக்குமானன்னெடுந்துறக்கமிந்நகர்க்கு. (கச)

திருகுறுஞ்சினத்தரக்கருங்கருநிறந்தீர்ந்தார்
அருகுபோகின்றதிங்களுமறுவற்றதழகைப்
பருகுமிந்நகர்த்துன்னொளிபாய்தலிற்பசும்பொன்
உருகுகின்றதுபோன்றுளதுலகுசூழுவரி. (கரு)

அண்டமூற்றவும்வீங்கிருளகற்றுநின்றலரி
கண்டவாற்றினிக்கடிநகர்நெடுமனைக்கதிர்கள்
உண்டவாற்றினென்றுரைப்பரிதொப்பிடிற்றன்மூன்
விண்டவாய்ச்சிறுமின்மினியென்னவும்விளங்கா. (கசு)

† தேனுஞ்சாந்தமுமான்மதஞ்செறிநறுஞ்சேறும்
வானநாண்மலர்க்கற்பகமலர்களும்வயமாத்
தானவாரியுநீரொடுமடுத்தவிற்றழீஇய
மீனுந்தானுமோர்வெறிமணங்கமழுமாம்வேலை. (கஎ)

தெய்வத்தச்சனைப்புகழ்துமோசெங்கணவாளரக்கன்
மெய்யொத்தாற்றியதவத்தையேவியத்துமோவிரிஞ்சன்
அய்யப்பாடிலாவரத்தையேமதித்துமோவறியாத்
‡ தொய்யற்சிந்தையாம்யாவரையாதென்றுதுதிப்பாம். (கஅ)

---

* கொட்டில்-சாலைகள்,காடிகாறு. † தேன்-ஈண்டு அத்தர். ‡ தொய்யல்-நைதல்.

வேறு.

வானுங்கிலனும்பெறுமாறினிமற்றுமுண்டோ
கானும்பொழிலும்மிவைசெங்கனகத்தினுலும்
ஏனம்மணியாலுமியற்றியவேனும்யாவும்
தேனும்மலருங்கனியுந்தரச்செய்தசெய்கை. (க௯)

வேறு.

நீரும்வையமுநெருப்புமேனிமிர்நெடுங்காலும்
வாரிவானமும்வழங்கலவாகுந்தன்வளர்ச்சி
ஊரினிந்நெடுங்கோபுரத்துயர்ச்சிகண்டுணர்ந்தால்
மேருவெங்ஙனம்விளர்க்குமோமுழுமுற்றும்வெள்கி. (உ0)

முன்னம்யாவருமிராவணன்முனியுமென்றெண்ணிப்
பொன்னின்மாநகர்மீச்செலான்கதிரெனப்புகல்வார்
கன்னியாரையினொளியினிற்கண்வழுக்குறுதல்
உன்னிநாடொறும்விலங்கினன்போதலையுணரா. (உக)

தீயசெய்குநர்தேவராலனையவர்சேரும்
வாயிலல்லதோர்வாம்பமைக்குவமெனமதியாக்
காயமென்னுமக்கணக்கறுபதத்தையுங்கடக்க
எயுநன்மதிலிட்டனன்கைலையையெடுத்தான். (உஉ)

கறங்குகால்புகாகதிரவனொளிபுகாமறலி
மறம்புகாதினுவானவர்புகாரென்கைவம்பே
* திறம்புகாலத்துள்யாவையுஞ்சிதையினுஞ்சிதையா
அறம்புகாதிந்தவணிமதிட்கிடக்கைநின்றகத்தின். (உங)

கொண்டவான்றிரைக்குரைகடலிடையதாய்க்குடுமி
எண்டவாவிசும்பெட்டநின்றிமைக்கின்றவெழிலால்
பண்டைநாகணைப்பள்ளியானுந்தியிற்பயந்த
அண்டமேயுமொத்திருந்ததவ்வகனகரமைதி. (உச)

பாடுவார்பலரென்னின்மற்றவரினும்பலரால்
ஆடுவார்கண்மற்றவரினும்பலருள † ரமைதி
கூடுவாரிடையின்னியங்கொட்டுவார்முட்டில்
வீடுகொண்குறுந்தேவரால்விழுநடங்காண்பார். (உரு)

வானமாதரோடிகலுவர்விஞ்சையர்மகளிர்
ஆனமாதரோடாடுவரியக்கியரவரைச்
சோனைவார்குழலரக்கியர்தொடர்குவர்தொடர்ந்தால்
ஏனைநாடியரருநடக்கிரியையாய்ந்திருப்பார். (உசு)

---

* திறம்புகாலம்—அழியுங்காலம். † அமைதிகூடுதலாவது—கல்யாணம் உற்சவங்கள் முதலானவை நடக்கிற இடங்களில் ஒருசேரக்கூடுதல்.

* இழையுமாலையுமாடையுஞ்சாந்தமுமேந்தி
உழையரென்னநின்றுதவுவநிதியங்களொருவர்
விழையும்போகமேயிங்கிதுவாய்கொடுவிளம்பின்
குழையுநெஞ்சினனினையினுமாசென்றுகொள்ளும். (உஎ)

பொன்னின்மால்வரைமேன்மணிபொழிந்தனபொருத்தி
உன்னுநான்முகத்தொருவனின்றாழ்முறையுரைக்கப்
பன்னிநாள்பலபணியுழன்றறிதினிற்படைத்தான்
சொன்னவானவர்தச்சனுமிந்நகர்துதிப்பான். (உஅ)

மகரவீணையின்மந்திரகீதத்தின்மறைந்த
சகரவேலையினூர்கலிதிசைமுகன்றடவும்
சிகரமாளிகைத்தலந்தொறுந்தெரிவையர்நிவந்த
அகருதூபத்தினழுந்தினமுகிற்குலமனைத்தும். (உகூ)

பளிக்குமாளிகைத்தலந்தொறுமிடந்தொறும்பசுந்தேன்
துளிக்குங்கற்பகத்தண்ணறுஞ்சோலைகடோறும்
அளிக்குந்தேறலுண்டாடுநர்பாடுநராகிக்
களிக்கின்றாரலாற்கவல்கின்றாரொருவரைக்காணேன். (௩0)

தேறன்மாந்தினர்தேனிசைமாந்தினர்செவ்வாய்
ஊறன்மாந்தினரின்னுரைமாந்தினரூடல்
கூறன்மாந்தினரனையவர்த்தொழுதெழுகோபத்
தாறன்மாந்தினரரக்கியர்க்குயிரன்னவரக்கர். (௩க)

எறித்தகுங்குமத்திளமுலையெழுதியதொழில்கள்
கழுத்தமேனியிற்பொலிந்தனரூடலிற்கனன்று
மறித்துநோக்கியர்மலரடிமஞ்சுளப்பஞ்சி
குறித்தகோலங்கள்பொலிந்தனவரக்கர்தங்குஞ்சி. (௩உ)

† விளரிச்சொல்லியவர்வாயினன்வேலையுண்மிடைந்த
பவளக்காடெனப்பொலிந்ததுபடைநெடுங்கண்ணால்
குவளைக்கோட்டகங்கடுத்ததுகுளிர்முகக்குழுவான்
முளரிக்கானமுமானதுமுழங்குநீரிலங்கை. (௩௩)

வேறு.

எழுந்தனர்திரிந்துவைகுமிடத்ததாயின்றுகாறும்
கிழிந்திலதண்டமென்னுமிதனையேகிளப்பதல்லால்
அழுந்திநின்றுவதென்னேயலருளோனுதியாக
ஒழிந்தபேருயிர்களெல்லாமரக்கருக்குறையும்போதா. (௩௪)

---

* இழை-ஆபரணம். † விளரி-விளரிப்பண்.

3

காயத்தாற்பெரியர்வீரங்கணக்கிலருலகங்கல்லும்
ஆயத்தார்வரத்தின்றன்மையளவற்றாரறிதறேற்றும்
மாயத்தார்நகர்க்கெங்கேனும்வரம்புமுண்டாமேமற்றோர்
தேயத்தார்தேயஞ்சேறநெருவிலோர்தெருவின்சேறல். (கரு)

கழலிலாக்காலுங்காலவயிலிலாக்கையுங்காந்தும்
அழலிலாக்கண்ணுமில்லாவாடவரில்லையன்னார்
குழலுலாங்களிவண்டார்க்குங்குஞ்சியாற்பஞ்சிகுன்றா
மழலையாழ்க்குதலைச்செவ்வாய்மாதருமில்லைமாதோ. (கசு)

கள்ளுறக்கனிந்த * பங்கியரக்கரைக்கடுத்தகாதல்
புள்ளுறத்தொடர்வமேனிபுலாலுறக்கடிதுபோவ
வெள்ளுறுப்பெயிற்றசெய்யதலையனகரியமெய்ய
உள்ளுறக்களித்தகுன்றினுயர்ச்சியவோடையானை. (கஎ)

வள்ளிநுண்மருங்குலன்னவானவர்மகளிருள்ளம்
தள்ளுறப் † பாணிதள்ளாநடம்புரிதடங்கண்மாதர்
வெள்ளிவெண்மூறுவறோன்ற ‡ மடந்தையர்வெள்குகின்றார்
கள்ளிசையரக்கர்மாதர்களியிடுகுரவைகாண்பார். (கஅ)

ஒறுத்தலோகிற்சமற்றெம்முயர்படைக்கொருங்கிவ்வூர்வந்
திறுத்தலுமெளிதாமற்றும்யாவர்க்குமியக்கமுண்டே
கறுத்தவாளரக்கிமாருமரக்கருங்கழித்துவீசி
வெறுத்தபூண்வெறுக்கையாலேதூருமிவ்வீதியெல்லாம். (கக)

வடங்களுங்குழையும்பூணுமாலையுஞ்சாந்தும்யானைக்
கடங்களுங்கலினமா § விலாழியுங்கணக்கிலாத
இடங்களுமிடங்கடோறும்யாற்றொடுமெடுத்தவெல்லாம்
அடங்கியதென்னிலென்னேயாழியிலாழ்ந்ததுண்டோ. (சo)

விற்படைபெரிதென்கோயான்வேற்படைமிகுமென்கோயான்
மற்படையுளதென்கோயான்வாட்படைவலிதென்கோயான்
கற்பணந்தண்டுபிண்டிபாலமென்றினையகாந்தும்
நற்படையுடைத்தென்கோயானுயகற்குரைக்குநாளில். (சக)

என்றனனிலங்கைநோக்கியினையனபலவுமெண்ணி
நின்றவாளரக்கர்வந்துநேரினுநேர்வரென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கியச்சாளச்சாரற்
குன்றிடையிருந்தான்வெய்யோன்குரைகடல்குளிப்பதானான். (சஉ)

---

* பங்கி-உரோமம். † பாணி-இசைப்பாட்டு. ‡ மடந்தையர்-மூடத்தன்மையுள்ளவர், மடம்-அறியாமையாகலால் மடந்தையரென்றதுதற்குறிப்பு. § விலாழி-வாய்நுரை.

## வேறு.

ஏய்வினை * யிறுதியிற்செல்வமெய்தினன்
ஆய்வினைமனத்திலானறிஞர்சொற்கொளான்
வீவினைநினைக்கிலானொருவன்மெய்யிலான்
தீவினையெனவிருள்செறிந்ததெங்குமே. (சஙு)

கரித்தழூன்றெயிலுடைக்கணிச்சிவானவன்
எரித்தலையந்தணரிழைத்தயானையை
உரித்தபேருரிவையாலுலகுக்கோருறை
புரித்தனனுமெனப்பொலியும்பொற்பதே. (சச)

அணங்கரவரசர்கோனளவிலாண்டெலாம்
பணங்களின்றலைதொறுமுயிர்த்தபாய்விடம்
உணங்கலிலுலகெலாமுறையினுண்டுவெந்
திணங்கெரிபுகையொடுமெழுந்ததென்னவே. (சரு)

வண்மைநீங்காநெடுமரபின்வந்தவன்
பெண்மைநீங்காதகற்புடையபேதையைத்
திண்மைநீங்காதவன்சிறைவைத்தானெனும்
வெண்மைநீங்கியபுகழ்விரிந்ததென்னவே. (சசு)

அவ்வழியவ்விருள்பரந்தவாயிடை
எவ்வழிமருங்கினுமரக்கரேகினர்
செவ்வழிமந்திரத்திசையராயினும்
வெவ்வழியிருடரமிதித்துமீச்செல்வார். (சஎ)

இந்திரன்வளநகர்க்கேகுவாரிகற்
சந்திரனுலகினைச்சார்குவார்கலித்
தந்தகனுறையுளையணுகுவாரியல்
வெந்தொழிலரக்கனதேவன்மேயினர். (சஅ)

பொன்னகர்மடந்தையர்விஞ்சைப்பூவையர்
பன்னகவனிதையரியக்கர்பாவையர்
முன்னினபணிமுறைமாறமுந்துவார்
மின்னினமிடைந்தெனவிசும்பின்மீச்செல்வார். (சகூ)

தேவருமவுணருஞ்செங்கணுகரும்
மேவருமியக்கரும்விஞ்சைவேந்தரும்
யாவரும்விசும்பிருளிரியவீண்டினர்
தாவரும்பணிமுறைதழுவுந்தன்மையார். (ருo)

† சித்திரப்பத்தியிற்றேவர்சென்றனர்
இத்துணைதாழ்ந்தனமுனியுமென்றுதம்

* இறுதி-கெடுதி. † கண்ணிமையாமையால் சித்திரப்பத்தி என்றார்.

முத்திரங்களுமுடியின்மாலையும்
உத்தரீயங்களுமிரியவோடுவார். (ருக)

நீண்டருந்தீவினைநீக்கத்தீந்துபோய்
மாண்டறவுலர்ந்ததுமாருதிப்பெயர்
ஆண்டகைமாரிவந்தளிக்கவாயிடை
ஈண்டறமுளைத்தெனமுளைத்ததிந்துவே. (ருஉ)

வந்தனனிராகவன்றூதன்வாழ்ந்தனன்
எந்தையேயிந்திரனுமென் * றேமுறு
அந்தமில்கீட்டிசையளகவானுதற்
சுந்தரிமுகமெனப்பொலிந்துதோன்றிற்றே. (ருங)

கற்றைவெண்கவரிபோற்கடலின்வெண்டிரை
சுற்றுநின்றலமரப்பொலிந்துதோன்றிற்றால்
இற்றதெம்பகையெனவிழுந்தவிந்திரன்
கொற்றவெண்குடையெனக்குளிர்வெண்டிங்களே. (ருச)

தெரிந்தொளிர்திங்கள்வெண்குடத்திறற்றிரை
முரிந்துயர்பாற்கடன்முகந்துமுரிவான்
சொரிந்ததேயாமெனத்துள்ளிமீனொடும்
விரிந்ததுவெண்ணிலாமேலுங்கீழுமே. (ருரு)

† அருந்தவன்சுரபியேயாதிவானமா
விரிந்தபேருதயமேமடிவெண்டிங்களா
வருந்தலின்முலைகதிர்வழங்குதாரையாச்
சொரிந்தபாலொத்ததுநிலவின்றோற்றமே. (ருசு)

எண்ணுடையநுமன்மேலிழிந்தபூமழை
மண்ணிடைவீழ்கிலமறித்தும்போகில
அண்ணல்வாளரக்கனையஞ்சியாய்கதிர்
விண்ணிடைத்தங்கினபோன்றமீனெலாம். (ருஎ)

எல்லியினிமிரிருட்குறையுமவ்விருள்
கல்லியகிலவின்வெண்முறியுங்கள்வன
புல்லியபகையெனப்பொருவபோன்றன
மல்லிகைமலர்தொறும்பொதிந்தவண்டெலாம். (ருஅ)

வீசுறுபசுங்கதிர்க்கற்றைவெண்ணிலா
ஆசறவெங்கணுநுழைந்தளாயது
‡ காசுறுகடிமதிலிலங்கைக்காவலூர்த்
தூசுறையிட்டதுபோன்றுதோன்றிற்றே. (ருகூ)

---

* ஏமுறு—சந்தோழமாகி. † அருந்தவன்—ஈண்டுவசிட்டர். ‡ காசு—ரத்னங்கள்.

இகழ்வரும்பெருங்குணத்திராமனெய்தவோர்
பகழியின்செலவெனவநுமன்பற்றினால்
அகழ்புகுந்தரண்புகுந்திலங்கையன்னவன்
புகழ்புகுந்துலாயதோர்பொலிவும்போன்றதே. (௬0)

அவ்வழியநுமனுமணுகலாம்வகை
எவ்வழியென்பதையுணர்வினெண்ணினன்
செவ்வழியொதுக்கினன்றேவரேத்தப்போய்
வெவ்வழியரக்கரூர்மேவன்மேயினான். (௬க)

வேறு.

ஆழியகழாகவரிதாயமரர்வாழும்
ஏழுலகின்மேலைவெளிகாறுமுகடேறிக்
கேழறியபொன்கொடுசமைத்தகிளர்வெள்ளத்
தாழிதிரிநாளுமுலையாமதிலையுற்றான். (௬உ)

கலங்கலில்கடுங்கதிர்கண்மீதுகடிதேகா
அலங்கலயில்வஞ்சகனையஞ்சியெனினன்றால்
இலங்கைமதிலிங்கிதனையேறலரிதென்றே
விலங்கியகல்கின்றனன்விரைந்தெனவியந்தான். (௬௩)

தெவ்வளவிலாதவிறைசேறலுளதென்றால்
அவ்வளவதன்றரணமண்டமிடையாக
எவ்வளவிலுண்டுவெளியீறுமதுவென்று
வெவ்வளவரக்கனைமனக்கொளவியந்தான் (௬௪)

மடங்கலரியேறுமதமால்களிறுநாண
நடந்துதனியேபுகுதுநம்பிநனிமூதூர்
அடங்கரியதானையயிலந்தகனதானைக்
கடுந்திறலின்வாயனையவாயிலெதிர்கண்டான். (௬௫)

மேருவைநிறுத்திவெளிசெய்ததுகொல்விண்ணோர்
ஊர்புகவமைத்தபடிகால்கொலுலகேழும்
சோர்விலநிலைக்கநடுவிட்டதொருதூணோ
நீர்புகுகடற்குவழியோவெனநினைந்தான். (௬௬)

ஏழுலகின்வாழுமுயிர்யாவையுமெதிர்ந்தால்
ஊழின்முறையன்றியுடனேபுகுதலுண்டே
வாழியரியங்குவழியீதெனவகுத்தால்
ஆழியுளவேழினளவன்றுபகையென்றான். (௬எ)

வெள்ளமொருநூறொடொருநூறுமுடைவீரக்
கள்ளவினைவெவ்வலியரக்கரிருகையும்

முள்ளெயிறும்வாளுமுறமுன்னமுறைநின்றார்
எள்ளரியகாவலினையண்ணலுமெதிர்ந்தான். (௬அ)

சூலமழுவாளொடயிலோமுசலக்கை
காலவறிவிற்பகழிகற்பணமுசுண்டி
கோல்கணையநேமிகுலிசஞ்சுரிகைகுந்தம்
வாலமுதலாயுதம்வலித்தனர்வலத்தார். (௬௬)

அங்குசநெடுங்கவணயிற்சிலைவழங்கும்
வெங்குசையபாசமுதல்வெய்யபயில்கையார்
செங்குருதியன்னசெறிகுஞ்சியர்சினத்தோர்
பங்குனிமலர்ந்தொளிர் * பலாசவனமொப்பார். (எ0)

அளக்கவரிதாகியகணக்கொடயனிற்கும்
விளக்கினமிருட்டனை விழுங்கிவெளிகால
உளக்கடியகாலன்மனமுட்குமணிவாயில்
இளக்கமில்கடற்படையிருக்கையையெதிர்ந்தான். (எக)

எவ்வமரரெவ்வுண † ரெவ்வருளரென்னே
கவ்வைமுதுவாயிலினெடுங்கடைகடப்பார
தெவ்வரிவர்சேமமிதுசேவகனும்யாமும்
வெவ்வமர்தொடங்கிடினெனுய்விலையுமென்றான். (எ௨)

கருங்கடல்கடப்பதரிதன்றுநகர்காவற்
பெருங்கடல்கடப்பதரிதெண்ணமிறைபேரின்
அருங்கடன்முடிப்பதரிதாமமர்கிடைக்கின்
நெருங்கமர்கிடக்குநெடுநாளெனநினைந்தான். (எ௩)

வாயில்வழிசேரலரிதன்றியும்வலத்தோர்
ஆயிலவர்வைத்தவழியேகலழ ‡ கன்றால்
காய்கதிரியக்கின்மதிலைக்கடிதுதாவிப்
போயிநகர்புக்கிடுவெனென்றுரையல்போனான். (எ௪)

வேறு.

நாணளுந்தானல்கியகாவனனி $ மூதூர்
வாணளந்நாள்போவதின்மேலேவழிநின்றாள்
தூணுமென்னுந்தோளுடையானைச்சுடரோனைக்
காணவந்தகட்செவியென்னக்கனல்கண்ணாள். (எரு)

---

* பலாசவனம்-செம்முருக்கவனம். † எவர்—எவ்வரெனவிரித்தல் விகாரம்.

‡ அன்று—ஒருமைமுடிபு, அல்ல பன்மைமுடிபு, என்பதுணர்க.

$ மூதூர்வாழ்நாளன்னாள் என்றும் பாடம் பெரியவூரிலே வர்த்திக்கிறகாலத்தில் அந்நாள் என்றும் அவ்வூருக்கு ஆயுள்போன்றவள் என்றும் ஆகவே இவள் முடிந்தால் அவ்வூரும் முடிந்தழியுமென்பது கருத்து.

எட்டுத்தோளானுலுமுகத்தாளுலகேழும்
தொட்டுப்பேருஞ்சோதிநிறத்தாள்சுழல்கண்ணள்
முட்டிப்பேரின் * மூவுலகத்தைமுதலோடும்
கட்டிச்சீறுங்காவல்வலத்தாள் † கமையில்லாள். (எசு)

பாராநின்றாளெண்டிசைதோறும்பலரப்பால்
வாராநின்றாரோவெனமாரிமழையேபோல்
ஆராநின்றானூபுரமச்சந்தருதாளாள்
வேராமெய்யாண்மின்னினிமைக்குமிளிபூணாள். (எஎ)

வேல்வாள்சூலம்வெங்கதைபாசம் ‡ விளிசங்கம்
கோல்வாள்குந்தங்கொண்டகரத்தாள்வடகுன்றம்
போல்வாடிங்கள்போழினெயிற்றாள்புகைவாயில்
கால்வாள்காணிற்காலனுமுட்குங்கதமிக்காள். (எஅ)

$ அஞ்சுவணத்தினுடையுடுத்தாளரவெல்லாம்
¶ அஞ்சுவணத்தின்வேகமிகுத்தாளருளில்லாள்
§ அஞ்சுவணத்தினுத்தரியத்தாளலையாரும்
o அஞ்சுவணத்தின்முத்தொளிராரத்தணிகொண்டாள். (எகூ)

சிந்தாரத்தின்செச்சையணிந்தாடெளிநூல்யாழ்
அந்தாரத்தினேர்வருசொல்லாளறைதம்பி
கந்தாரத்தினின்னிசைபாடிக்களிகூரும்
மந்தாரத்தின்மாலையலம்புமகுடத்தாள். (அ௦)

எல்லாமுட்குமாழியிலங்கையிகன்மூதூர்
நல்லாளவ்வூர்வைகுறையொக்குநயனத்தாள்
நில்லாய்நில்லாயென்றுரைநோவாணியையாமுன்
வல்லேசென்றாண்மாருதிகண்டான்வருகென்றான். (அக)

ஆகாசெய்தாயஞ்சலைபோலுமறிவில்லாய்
சாகாமூலந்தின்றுழல்வார்பாற்சலமென்னும்
பாகாரிஞ்சிப்பொன்மதிளுவிப்பதையாதே
போகாயென்றாள்பொங்கனலென்னப்புகைகண்ணாள். (அஉ)

களியாவுள்ளத்தண்ணன்மனத்திற்கதமூழ்க
விளியாநின்றேநீதிநலத்தின்வினையோர்வான்
அளியாலிவ்வூர்காணுநலத்தினணைகின்றேன்
எளியேனுற்றால்யாவதுனக்கிங்கிழவென்றான். (அ௩)

---

* மூவுலகத்தை-இராவணனுடைய உட்கோட்டையான மூன்றரணையும்.
† கமை-பொருமை. ‡ விளி-ஒலிக்கின்ற. § அஞ்சுவண்ணத்தின்-பஞ்சவர்ணங்களுள்ள. ¶ அஞ்சுஉவணத்தின்-பயப்படும்படியான கருடனைப்போல. § அம்சுவணத்தின்-அழகான சுவர்ணத்தாலான. o அம்சுவள்நத்தின்-நீரிலுள்ள நல்ல பிரகாசமுடைய சங்கினுண்டான.

என்னுமுன்னமேகெனவேகாதெதிர்மாற்றம்
சொன்னயேநீயாவனடாதொல்புரமாட்டான்
அன்னரேனுமஞ்சுவரெய்தற்களியுற்றால்
உன்னலெய்துமூர்கொலிவ்வூரென்றுறநக்காள். (அச)

நக்காளைக்கண்டையன்மனத்தோர்நகைகொண்டான்
நக்காய்நீயார்யார்சொலவந்தாயுனதாவி
உக்காலேதாமோடலையென்றாளினியிவ்வூர்
புக்காலன்றிப்போகிலெனென்றான்புகழ்கொண்டான். (அரு)

வஞ்சங்கொண்டான்வானரமல்லன்வருகாலன்
துஞ்சுங்கண்டாலென்னையிவன்சூழ்திரையாழி
நஞ்சங்கொண்டகண்ணுதலைப்போனகுகின்றான்
நெஞ்சங்கண்டேகல்லெனநின்றேநினைவுற்றாள். (அசு)

கொல்வாமன்றேற்கோளுறுமிவ்வூரெனல்கொண்டாள்
வெல்வாய்நீயேவென்றியெனத்தன்விழிதோறும்
வல்வாய்தோறும்வெங்கனல்பொங்கமதில்வாயில்
செல்வாயென்னுமூவிலைவேலைச்செலவிட்டாள். (அஎ)

தடித்தாமென்னத்தன்னெதிர்செல்லுந்தழல்வேலைக்
கடித்தாருகம்விண்ணின்முரிக்குங்கருளன்போல்
ஒடித்தான்கையாலும்பருவப்பவுயர்காலம்
பிடித்தாணெஞ்சந்துண்ணெனவெண்ணம்பிழையாதான். (அஅ)

இற்றுச்சூலநீறெழுகாலத்தெரியொப்பாள்
மற்றுத்தெய்வபல்படைகொண்டுமேலவாண்மேல்
உற்றுக்கையாலாயுதமெல்லாமொழியாமல்
பற்றிக்கொள்ளாவிண்ணிலெறிந்தான்பழியோர்வான். (அகூ)

வழங்குந்தெய்வப்பல்படைகாணுண்மலைவான்மேல்
முழங்கும்மேகமென்னவுரப்பிமுதிர்கின்றாள்
கழங்கும்பந்துங்குன்றுகொடாடுங்கரமோச்சித்
தழங்குஞ்செந்தீச்சிந்தவடித்தா * டகவில்லாள். (கூ0)

அடியாமுன்னமங்கையனைத்துமொருகையால்
பிடியாவென்னேபெண்ணிவள்கொல்விற்பிழையென்னு
ஒடியாநெஞ்சத்தோரடிகொண்டானுயிரோடும்
இடியேறுண்ட † நாகமெனப்பாரிடைவீழ்ந்தாள். (கூக)

விழுந்தாணொந்தாள்வெங்குருதிச்செம்புனல்வெள்ளத்
தழுந்தாநின்றாணைன்முகனார்தம்மருளன்றி

* தகவில்லாள்-புத்தியில்லாதவள். † நாகம்-மலை.

எழுந்தாள்யாரும்யாவையுமெல்லாவுலகத்தும்
தொழுந்தாள்வீரன்றூதுவன்முன்னின்றிவைசொன்னாள். (கூஉ)

வேறு.

ஐயகேள்வையநல்குமயனருளமைதியாக
எய்தியிம்மூதூர்காப்பெனிலங்கைமாதேவியென்பேர்
செய்தொழிலிழுக்கியுள்ளந்திகைத்திந்தச்சிறுமைசெய்தேன்
உய்தியென்றளிதியாயினுணர்த்துவலுண்மையென்றாள். (கூங)

எத்தனைகாலங்காப்பல்யானிந்தமூதூரென்று
* முத்தனைவினவினேற்குமுரண்வலிக்குரங்கொன்றுன்னைக்
கைத்தலமதனாற்றீண்டிக்காய்ந்தவன்றென்னைக்காண்டி
சித்திரநகரம்பின்னைச்சிதைவதுதிண்ணமென்றான். (கூச)

அன்னதேமுடிந்ததையவறம்வெல்லும்பாவந்தோற்கும்
என்னுமீதியம்பவேண்டுந்தகையதோவினிமற்றுன்னால்
உன்னியவெல்லாமுற்றுமுனக்குமுற்றாததுண்டோ
பொன்னகர்புகுதியென்னாப்புகழ்ந்தவளிறைஞ்சிப்போனாள். (கூரு)

வீரனும்விரும்பிநோக்கிமெய்ம்மையேவினையுமஃதென்
றூரியன்கமலபாதமகத்துறவணங்கியாண்டப்
பூரியரிலங்கைமூதூர்ப்பொன்மதிருவிப்புக்கான்
சீரியபாலின்வேலைசிறுபிரைதெறித்ததன்னான். (கூசு)

† வான்றொடர்மணியிற்செய்தமையறுமாடகோடி
ஆன்றபேரிருளைச்சீத்துப்பகல்செய்தவழகைநோக்கி
ஊன்றியவுதயத்துச்சியொற்றைவானுருளைத்தேரோன்
தோன்றினன்கொல்லோவென்னாவறிவனுந்துணுக்கங்கொண்டான்.

மொய்ம்மணிமாடமூதூர்முழுதிருளகற்றுந்தானே
மெய்ம்மையேயுணரினாணுமிகையெனவிலங்கிப்போனான்
இம்மதிலிலங்கைநாப்பணெய்துமேற்றன்பாலெய்து
மிம்மினியல்லனோவவ்வெயிற்கதிர்வேந்தனென்றான். (கூஅ)

பொசிவுறுபசும்பொற்குன்றிற்பொன்மதினடுவெட்பூத்து
வசையறவிளங்குஞ்சோதிமணியினாலமைந்தமாடத்
தசைவிலவிலங்கைமூதூராரிருளின்மையாலே
‡ நிசிசரராயிற்றம்மாநெடுநகர்நிருதரெல்லாம். (கூகூ)

என்றனனியம்பிவீதியேகுதலிழுக்கமென்னாத்
தன்றகையனையமேனிசுருக்கிமாளிகையின்சாரல்

* முத்தனை—பிரமனை. † வான்தொடர்மணி-வானிலேசெல்லுகிறதினாலே அந்தரமணி, விண்மணியென்று சூரியனுக்குப்பெயர்.

‡ நிசிசரர்-இராக்காலத்திலும் சஞ்சரிக்கிறவர்கள்.

சென்றனனென்பமன்னோதேவருக்கமுதமீந்த
குன்றெனவயோத்திவேந்தன் புகழெனக்குவவுத்தோளான். (௧௦௦)

ஆத்துறுசாலைதோறுமானையின் கூடந்தோறும்
மாத்துறுமாடந்தோறும்வாசியின்பந்திதோறும்
காத்துறுகடைகடோறுங்கருங்கடல்கடந்தகாலால்
பூத்தொறுமவாவிச்செல்லும்பொறிவரிவண்டிற்போனான். (௧௦௧)

பெரியநாளொளிகொண்ணுவிதமணிப்பித்திப்பத்தி
சொரியுமாநிழல்களாங்குச்சுற்றலாற்காலின்றோன்றல்
கரியனுய்வெளியனுகிச்செய்யனுய்க்காட்டுங்காண்டற்
கரியனுமெளியனுய்த்தன்னகத்துறையழகனேபோல். (௧௦௨)

கானகமயில்களென்னக்களி * மடவன்னமென்ன
ஆனகைமலப்போதுபொலிதரவரக்கர்மாதர்
தேனுகுசரளச்சோலை † தெய்வநீராற்றிற்றெண்ணீர்
வானவர்மகளிராட்டமஞ்சனமாடுவாரை. (௧௦௩)

ஈட்டுவார்தவமலான்மற்றீட்டினுலியைவதின்மை
காட்டினார்விதியாரஃதுகாண்கிற்பார்க்காண்மினம்மா
பூட்டுவார்முலைபொருதபொய்யிடைநையப்பூநீர்
ஆட்டுவாரமரர்மாதராடுவாரரக்கர்மாதர். (௧௦௪)

‡ இலக்கணமரபிற்கேற்றவெழுவகைநரம்பினல்யாழ்
அலத்தகத்தளிர்க்கைநோவவளந்தெடுத்தமைந்தபாடல்
கலக்குறமுழங்கிற்றென்றுசேடியர்கன்னிமார்கள்
மலர்க்கையான்மாடத்தும்பர்மழையின்வாய்பொத்துவாரை. (௧௦௫)

சந்தப்பூம்பந்தர்வேய்ந்ததமனியவரங்கிற்றத்தம்
சிந்தித்ததுவுந்தெய்வமணிவிளக்கொளிருஞ்சேக்கை
வந்தொத்துந்துரிதமாக்கள்விளம்பிதநெறிவழாமை
கந்தர்ப்பமகளிராடுநாடகங்காண்கின்றாரை. (௧௦௬)

திருத்தியபளிக்குவேதித்தெள்ளியவேல்களென்னக்
கருத்தியல்புரைக்குமுண்கட்கருங்கயல்செம்மைகாட்ட
வருத்தியகொழுநர்தம்பால்வரம்பின்றிவளர்ந்தகாம
வருத்தியபயிர்க்குநீர்போலருநறவருந்துவாரை. (௧௦௭)

கோதறுங்குவளைநாட்டங்கொழுநர்கணாட்டங்கொள்ளத்
தூதுளங்கனியையென்றதுவர்த்தவாய்வெண்மைதோன்ற
மாதருமைந்தர்தாமுமொருவர்மேலொருவர்வைத்த
காதலங்கள்ளுண்டார்போன்முறைமுறைகளிக்கின்றாரை. (௧௦௮)

---

* மடவன்னம்-முக்தபருவமுள்ள அம்சம். † தெய்வநீர்-தெய்வத்தன்மை.
‡ இலக்கணமரபு-இலக்ஷணக்ரமம்.

* விற்படர்பவளப்பாதத்தலத்தகமெழுதிமேனி
பொற்பளவில்லாவாசப்புனைநறுங்கலவைபூசி
அற்புதவடிக்கண்வாளினஞ்சனமெழுதியந்தில்
கற்பகங்கொடுக்கவாங்கிக்கலன்றெரிந்தணிகின்றாரை. (௧௦௯)

புலியடுமதுகைமைந்தர்புதுப்பிழையுயிரைப்புக்கு
நலிவிடவமுதவாயானச்சுயிர்த்தயிற்கணால்லார்
மெலிவுடைமருங்குன்மின்னினலமரச்சிலர்புவிம்மி
ஒலிபடவுதைக்குந்தோறுமயிர்புளகுதிக்கின்றாரை. (௧௧௦)

உள்ளுடைமயக்காலுண்கண்சிவந்றுவாய்வெண்மையூறித்
துள்ளிடைப்புருவங்கோட்டித்துடிப்பவேர்பொடிப்பத்தாய
வெள்ளிடைமருங்குலார்தம்மதிமுகம்வேறொன்றாகிக்
கள்ளிடைத்தோன்றநோக்கிக்கணவரைக்கவல்கின்றாரை. (௧௧௧)

ஆலையின்மலையின்சாரன்முழையினிலமுதவாரிச்
சோலையிற் † றுவசரில்லிற்சோனகர்மனையிற்றூய
வேலையிற்கொளவொணுதவேற்கணுர்குமுதச்செவ்வாய்
வாலெயிற்றூறுதீந்தேன்மாந்தினர்மயங்குவாரை. (௧௧௨)

நலனுறுகணவர்தம்மைநவையுறப்பிரிந்துநல்கு
முலையுறுகலவைதீயமுள்ளிலாமுளரிச்செங்கேழ்
மலர்மிசைமலர்பூத்தென்னமலர்கையால்வதனந்தாங்கி
உலவருமுயிரினேடுநெடிதிரிந்துயிர்க்கின்றாரை. (௧௧௩)

ஏதியங்கொழுநர்தம்பாலெய்தியசலத்தர்வைகும்
தாதியங்கமளிச்சேக்கையுயிரிலாவுடலிற்சார்வார்
மாதுயர்க்காதறூண்டவழியின்மேல்வைத்தகண்ணுர்
தூதியர்முறுவனேக்கியுயிர்வந்துதுடிக்கின்றாரை (௧௧௪)

சங்கொடுசிலம்புநூலும் ‡ பாதசாலகமுந்தாழப்
பொங்குபன்முரசமார்ப்பவில்லுறைதெய்வம்பேணிக்
கொங்கலர்கூந்தற்செவ்வாயரம்பையர்பாணிகொட்டி
மங்கலகீதம்பாடமறிப்பலிவகுக்கின்றாரை. (௧௧௫)

இழைதொடர்வில்லும்வாளுமிருளொடுமலையயாணர்க்
§ குழைதொடர்நயனக்கூர்வேல்குமரர்நெஞ்சுருவக்கோட்டி
முழைதொடர்சங்கம்பேரிமுகிலெனமுழங்கமூரி
மழைதொடர்மஞ்ஞையென்னவிழாவொடுவருகின்றாரை. (௧௧௬)

பள்ளியின்மைந்தரோடுமூடியபண்புநீங்கி
ஒள்ளியகலவிப்பூசலுடற்றுதற்குருத்தநெஞ்சர்

---

* விற்படர்-ஒளிபரவுவதான. † துவசர்—சாணுர். ‡ பாதசாலகம்—பாதசரம்.
§ குழை—குண்டலமணிந்தகாதென்க.

மெள்ளவேயிமையைநீக்கியஞ்சனவிழுதுவேய்ந்த
கள்ளவாளெடுங்கணென்னும்வாளுறைகழிக்கின்றாரை. (கக எ)

ஓவியமனையமாதருடினருணர்வோடுள்ளம்
மேவியகரணமற்றுங்கொழுநரோடொழியயாணர்த்
தூவியம்பேடையென்னமின்னெனத்துவளவேகி
ஆவியுந்தாமுமேசென்றருங்கதவடைக்கின்றாரை. (கக அ)

* கின்னரமிதுனம்பாடவெண்மழைகிழித்துத்தோன்று
மின்னெனத்தாளம்வேய்ந்தவெண்ணிறவிமானமூர்ந்து
பன்னகமகளிர்சுற்றிப்பலாண்டிசைபரவப்பண்ணைப்
பொன்னகர்வீதிதோறும்புதுமனைபுகுகின்றாரை. (கக கூ)

கோவையுங்குழையுமின்னக்கொண்டலின்முரசமார்ப்பத்
தேவர்வந்தாசிகூறமுனிவர்சோபனங்கள்செப்பப்
பாவையர்குழாங்கள்சூழப்பாட்டொடுவானநாட்டுப்
பூவையர்பலாண்டுகூறப்புதுமணம்புணர்கின்றாரை. (க உ ய)

இயக்கியரரக்கிமார்களுகியரெஞ்சில்விஞ்சை
முயற்கறைமலராத்திங்கண்முகத்தியர்முதலினோரை
மயக்கறநாடியேகுமாருதிமலையின்வைகும்
கயக்கமிறுயிற்சிக்கும்பகருணைக்கண்ணிற்கண்டான். (க உ க)

வேறு.

ஓசனையேழகன்றுயர்ந்தவும்பரின்
வாசவன்மணிமுடிகவித்தமண்டபம்
ஏசறவிளங்கியதிருவையெண்வகை
† ஆசையினிலைகெடவலைக்கலான்றது. (க உ உ)

அன்னதனடுவணோரமளிமீமிசைப்
பன்னகவரசெனப்பரவைதானெனத்
துன்னிருளொருவழிதொக்கதாமென
உன்னருந்தீவினையுருக்கொண்டென்னவே. (க உ ங)

முன்னியகனைகடன்முழுகிமூவகைத்
தன்னியல் ‡ கதியொடுதழுவித்தாதுகு
மன்னெடுங்கற்பகவனத்துள்வைகிய
இன்னிளந்தென்றல்வந்திழுகியேகவே. (க உ ச)

வானவர்மகளிர்கால்வருடமாமதி
ஆனனங்கண்டமண்டபத்துளாய்கதிர்க்

---

* கின்னரமிதுனம் - இரட்டைக்கின்னரம். † ஆசையினிலைகெட - திக்குகளிலும்நிலையில்லாமற்போக.

‡ கதிமூன்று அதாவது மந்தகதி, தீவிரகதி, அதிதீவிரகதி.

கானகுகாந்தமீக்கான்றகாமர்நீர்
தூநிறநறுந்தளிமுகத்திற்றேற்றவே. (கஉரு)

மூசியவுயிர்ப்பெனுமுடுகுவாதமும்
வாசலின்புறத்திடைநிறுவிவன்மையான்
நாசியினளவையினடத்தக்கண்டவன்
கூசினன்குதித்தனன்விதிர்த்தகையினன். (கஉசு)

பூழியின்றொகைவிசும்பணவப்போய்ப்புகும்
கேழில்வெங்கிளர்கிடையுயிர்ப்புக்கேடிலா
வாழியவுலகெலாந்துடைக்குமாருதம்
ஊழியின்வரவுபார்த்துழல்வதொத்ததே. (கஉஎ)

பகையெனமதியினைப்பகுத்துப்பாடுற
வகையில்பேழ்வாய்மடுத்தருந்துவானெனப்
புகையொடுமுழங்குபேருயிர்ப்புப்பொங்கிய
நகையிலாமுழுமுகத்தெயிறுநாறவே. (கஉஅ)

தடைபுகுமந்திரந்தகைந்தநாகம்போல்
இடைபுகலரியதோருறக்கமெய்தினன்
கடையுகமுடிவெனுங்காலம்பார்த்தயல்
புடைபெயராநெடுங்கடலும்போலவே. (கஉகூ)

வேறு.

ஆவதாகியதன்மையவரக்கனையரக்கர்
கோவெனுநின்றருணமிலியிவனெனக்கொண்டான்
காவனட்டங்கள்பொறியுகக்கனலெனக்கனன்றான்
ஏவனோவிவன்மூவரினொருவனோமீட்டான். (கஙo)

குறுகிநோக்கிமற்றவன்றலையொருபதுங்குறித்த
இறுகுதிண்புயமிருபதிங்கிவனிலனென்னு
மறுகியேறியமுனிவெனும்வடவைவெங்கனலை
அறிவெனும்பெரும்பரவையம்புனலினாலவித்தான். (கஙக)

அவித்துநின்றவனயினுமாகவென்றங்கை
கவித்துநீங்கிடச்சிலபகலென்பதுகருதாச்
செவிக்குத்தேனெனவிராகவன்புகழினைத்திருத்தும்
கவிக்குநாயகனனையவனுறையுளைக்கடந்தான். (கஙஉ)

மாடகூடங்கண்மாளிகையோளிகைமகளிர்
ஆடரங்குக * ளம்பலந்தேவராலயங்கள்
பாடல்வேதிகைபட்டிமண்டபமுதற்பலவும்
நாடியேகினனிராகவன்புகழெனுநலத்தான். (கஙங)

* அம்பலம்-பொதுச்சாவடி.

மணிகொள் * வாயிலுட்சாளரத்தாள்களின்மலரில்
கணிகொளுளத்திற்காலினும்புகையினுங்கலக்கும்
நுணுகும்வீங்குமற்றவனிலையாவரேநவல்வார்
அணுவின்மேருவினுழியானெனச்செலுமநுமன். (௧௩௪)

ஏந்தலிவ்வகையெவ்வழிமருங்கினுமெய்திக்
காந்தண்மெல்விரன்மடந்தையர்யாரையுங்காண்பான்
வேந்தர்வேதியர்மேலுளோர்கீழுளோர்விரும்பப்
போந்தபுண்ணியன்கண்ணகன்கோயிலுட்புக்கான். (௧௩௫)

பளிக்குவேதிகைப்பவளத்தின்கூடத்திற்பசுந்தேன்
துளிக்குங்கற்பகப்பந்தரிற் † கருநிறத்தோரை
வெளித்துவைகுவதரிதெனவவருருமேவி
ஒளித்துவாழ்கின்றதருமமன்னுன்றனையுற்றான். (௧௩௬)

உற்றுநின்றவனுணர்வைத்தன்னுணர்வினுலுணர்ந்தான்
குற்றமில்லதோர்குணமுளனிவனெனக்கொண்டான்
செற்றநீங்கியமனத்தினனொருசிறைசென்றான்
பொற்றைமாடங்கள்கோடியோர்நொடியிடைப்புக்கான். (௧௩௭)

முந்தரம்பையர்முதலினர்முழுமதிமுகத்துச்
சிந்துரம்பயில்வாய்ச்சியர்யாரையுந்தெரிந்து
மந்திரம்பலகடந்தவன்மனத்தின்முன்செல்வான்
இந்திரன்சிறையிருந்தவாயிலின்கடையெதிர்ந்தான். (௧௩௮)

ஏதியேந்தியதடக்கையர்பிறையெயிறிலங்க
மூதுரைப்பெருங்கதைகளும்பிதிர்களுமொழிவார்
ஓதிலாயிரமாயிரமுணர்விலியரக்கர்
காதுவெஞ்சினக்களியினர்காவலைக்கடந்தான். (௧௩௯)

முக்கணோக்கினன்முதன்மகனறுவகைமுகனும்
திக்குநோக்கியபுயங்களுஞ்சிலகரந்தனையான்
ஒக்கநோக்கியர்குழாத்திடையுறங்குகின்றானைப்
புக்குநோக்கினன்புகைபுகாவாயிலும்புகுவான். (௧௪௦)

வளையும்வாளெயிற்றரக்கனோகணிச்சியான்மகனோ
அளையில்வாளரியனையவன்யாவனோவறியேன்
இளையவீரனுமேந்தலுமிருவரும்பலநாள்
உளையவுள்ளபோரிவனொடுமுளதெனவுணர்ந்தான். (௧௪௧)

இவனையின்றுணையுடையபோரிராவணனென்னே
புவனமூன்றையும்வென்றதோர்பொருளெனப்புகறல்

---

* வாயில்—இல்வாய் முன்றில்-இல்முன் எனப்போல், † கருநிறத்தோரைஒளித்தெனக்கூட்டி கருநிறத்தோருக்குப் பயந்து மறைந்துவைகியதருமம் எனக்கொள்க.

சிவனைநான்முகத்தொருவனைத்திருநெடுமாலாம்
அவனையல்லவர்நிகர்ப்பவரென்பதுமறிவோ. (கசஉ)

என்றுகைம்மறித்திடைநின்றுகாலத்தையிகப்ப
தன்றுபோவதென்றுயிரமாயிரத்தடங்காத்
துன்றுமாளிகையோளிகடுரிசறத்துருவிச்
சென்றுதேடினனிந்திரசித்தினைத்தீர்ந்தான். (கசந)

அக்கன்மாளிகைகடந்துபோய்மேலதிகாயன்
றொக்ககோயிலும்பொருநர்களில்லமுந்துருவித்
தக்கமந்திரத்தலைவர்கண்மனைகளுந்தாவிப்
புக்குநீங்கினனிராகவன்கழலெனப்புகழோன். (கசச)

இன்னராமிரும்பெரும்படைத்தலைவர்களிருக்கைப்
பொன்னின்மாளிகையாயிரகோடியும்புக்கான்
* கன்னிமாநகர்ப்புறத்தகன்கரந்துறைகாண்பான்
சொன்னமூன்றினுநடுவணத்தகழியைத்தொடர்ந்தான். (கசரு)

தனிக்கடக்களிறெனவொருதுணையிலான்றூய
பனிக்கடற்பெருங்கடவுடைபரிபவந்துடைப்பான்
இனிக்கடப்பதன்றேழ்சடல்கிடந்ததென்றிசைத்தான்
கனிக்கடற்கதிர்தொடர்ந்தவனகழியைக்கண்டான். (கசசு)

பாழிநன்னெடுங்கிடங்கெனப்பகர்வரேற்பல்லோர்
ஊழிகாலநின்றுலகெலாங்கல்லினுமுலவா
ஆழிவெஞ்சினத்தரக்கனையஞ்சியாழ்கடல்கள்
ஏழுமிந்நகர்சூலாயதுகொலாமெனவிசைத்தான். (கசஎ)

ஆயதாகியவசன்புனலகழியையடைந்தான்
தாயவேலையினிருமடிவிசைகொடுதாவிப்
போயகாலத்தும்போக்கரிதென்பதுபுகன்றுன்
நாயகன்புகழ்கடந்தபேருலகெலாநடந்தான். (கசஅ)

வேறு.

மேக்குநால்வகைமேகமுங்கீழ்விழத்
தூக்கினலன்னதோயத்ததாய்த்துயர்
ஆக்கினன்படையன்னவகழியை
வாக்கினுலுரைவைக்கலுமாகுமோ. (கசகூ)

ஆனைமும்மதமும்பரியாழியும்
வானமங்கையர்குங்குமவாரியும்
நானமாதர்நறக்குழலாவியும்
தேனுமாரமுந்தேய்வையுநாறுமால். (கரு0)

---

* கன்னி-அழியாத.

உன்னுநாரைமகன்றிபுதாவுளில்
அன்னங்கோழிவண்டானங்களாழிப்புள்
கின்னரங்குரண்டங்கிலுக்கஞ்சிரல்
சென்னங்காகங்குணலஞ் * சிலம்புமே. (கருக)

நலத்தமாதர்நறையகிஞவியும்
அலத்தகக்குழம்புஞ்செறிந்தாடிய
விலக்கணக்கரியோடிளமென்னடைக்
குலப்பிடிக்குமோருடல்கொடுக்குமால். (கருஉ)

நறவுநாறியநாணறுந்தாமரை
துறைகடோறுமுகிழ்த்தனதோன்றுமால்
சிறையினெய்தியசெல்விமுகத்திஞே
† டுறவுதாமுடையாரொடுங்கார்களோ. (கருங)

பளிங்குசெற்றிக்குயிற்றியபாயொளி
விளிம்பும்வெள்ளமுமெய்தெரியாதுமேல்
தெளிந்தசிந்தையருஞ்சிறியார்களோ
டளிந்தபோதறிதற்கெளிதாவரோ (கருச)

நீலமேமுதனன்மணிநித்திலம்
மேலகீழபல்வேறொளிவீசலால்
பாலின்வேலைமுதற்பலவேலையும்
கால்கலந்தனவோவெனக்காட்டுமே. (கருரு)

அன்னவேலையகழியையார்கலி
என்னவேகடந்திஞ்சியும்பிற்படத்
துன்னருங்கடிமாநகர்துன்னிஞன்
பின்னரெய்தியதன்மையும்பேசுவாம். (கருசு)

கரியநாழிகைபாதியிற்காலனும்
வெருவியோடுமரக்கர்தம்வெம்பதி
ஒருவனே ‡ யொருபன்னிருயோசனைத்
தெருவுமும்மைநூறுயிரந்தேடிஞன். (கருஎ)

வேறு.

வேரியுமடங்கின $ நெடுங்கடல்விளம்பும்
§ பாரியுமடங்கினதடங்கியதுபாடல்
காரியமடங்கினர்கள்கம்மியர்கண்மும்மைத்
தூரியமடங்கினதொடங்கியதுறக்கம். (கருஅ)

* சிலம்பும்-ஒலிக்கும். † உறவு-ஒப்பு. ‡ ஒரு-ஒப்பற்ற.
$ நெடுங்கடல் என்றதஞனே நீண்டவீதிகளெல்லாம் ஜனசந்தடிஅடங்கின என்க.
§ பாரித்தல் - பரவுதல்—பாரி முதனிலைத்தொழிற்பெயர்.

இறங்கினவிறங்கொள்பரிமேலழுநல்வெக்கும்
கறங்கினமறங்கொளெயில்காவலர்துடிக்கண்
பிறங்கினர்நறுங்குழலரன்பர்பிரியாதோர்
உறங்கினர்பிணங்கியெதிரூடினவரல்லார். (கசகூ)

வடந்தருகடங்கொள்புயமைந்தர்கலவிப்போர்
கடந்தனரிடைந்தளர்களித்தமயில்போலும்
மடந்தையர்கடந்தனமுகட்டிடைமயங்கிக்
கிடந்தனர்நடந்ததுபுணர்ச்சிதருகேதம். (கரு0)

வாமநறையின்றுறைமயங்கினர்மறந்தார்
காமநறையின்றிறதுகர்ந்தனர்களித்தார்
பூமனறைவண்டறையலங்கமளிபுக்கார்
தூமநறையின்றுறைபயின்றிலர்துயின்றார். (கருக)

பண்ணிமையடைத்தபலகட்பொருநர்பாடல்
விண்ணிமையடைத்தனவிளைந்திருள்வீணைத்
தண்ணிமையடைத்தனதழங்கிசைவழங்கும்
கண்ணிமையடைத்தனவடைத்தனகபாடம். (கருஉ)

விரிந்தனநரந்தமுதல்வெண்மலர்விளாகத்
திரிஞ்சவருதென்றலுயிரின்புடைபுலாவச்
சொரிந்தனகருங்கண்வருதுள்ளிதருவெள்ளம்
எரிந்தனபிரிந்தவர்தமெஞ்சுதலினெஞ்சம். (கருந)

இளக்கரிழுதெஞ்சவிழுமெண்ணருவிளக்கைத்
துளக்கியதுதென்றல்பகைசோரவுயர்வோரின்
அளக்கரொடளக்கரியவாசையுறவீசா
விளக்கினம்விளக்குமணிமெய்யுறுவிளக்கம். (கருச)

நித்தநியமத்தொழிலராய்மறையுஞானத்
துத்தமருறங்கினர்கள்யோகியர்துயின்றார்
மத்தமதவெங்களிறுறங்கினமயங்கும்
பித்தருமுறங்கினரினிப்பிறரிதென்றோம். (கருரு)

ஆயபொழுதம்மதிலகத்தரசர்வைகும்
தூயதெருவொன்றொடொருகோடிதுருவிப்போய்த்
தீயவனிருக்கையயல்செய்தவகழிஞ்சி
மேயதுகடந்தனன் * வினைப்பகையைவென்றான். (கருசு)

## வே று.

போரியற்கையிராவணன்பொன்மனை
சீரியற்கைநிரம்பியதிங்களாத்

* வினைப்பகை—தீவினைச்செய்கைகளான காமக்குரோதங்கள்.

தாரகைக்குழுவிற்றழுவித்தொடர்
பாரியர்க்குறைவாயிடநன்னிருளை. (௧௬௭)

முயற்கருங்கறைநீங்கியமொய்மதி
அயர்க்கும்வாண்முகத்தாரமுதன்னவர்
இயக்கர்மங்கையர்யாவருமீண்டினார்
நயக்குமாளிகைவீதியைநண்ணினான். (௧௬௮)

தழைந்தமொய்யொளிபெய்மணித் * தாழ்தொறும்
இழைத்தநூலினுமின்னிளங்காலினும்
நுழைந்துநொய்தினினமெய்யுறநோக்கினான்
விழைந்தவெவ்வினைவேரறவீசினான். (௧௬௯)

அத்திரம்புனையானையரக்கன்மேல்
வைத்தசிந்தையர்வாங்குமுயிர்ப்பினர்
பத்திரம்புரைநாட்டமபதைப்பறச்
சித்திரங்களெனவிருந்தார்சிலர். (௧௭௦)

வள்ளல்வெஞ்சரமாரனையஞ்சியோ
மெள்ளவேகனவின்பயன்வேண்டியோ
கள்ளமென்கொலறிந்திலங்கண்முகிழ்த்
துள்ளமின்றியுறங்குகின்றார்சிலர். (௧௭௧)

பழுதின்மன்மதன்வெங்கணைபன்முறை
உழுதகொங்கையருசலுயிர்ப்பினர்
அழுதுசெய்வதென்னணையரக்கனை
எழுதலாங்கொலென்றெண்ணுகின்றார்சிலர். (௧௭௨)

ஆவதொன்றருளாயெனதாவியைக்
கூவுகின்றிலைகூறலையென்றெனப்
பாவைபேசுவபோற்கண்பணிப்புறப்
† பூவையோடும்புலம்புகின்றார்சிலர். (௧௭௩)

ஈரத்தென்றலிழுகமெலிந்துதம்
பாரக்கொங்கையைப்பார்த்தனர்பாதகன்
வீரத்தோள்களின்வீக்கமினைந்துயிர்
சோரச்சோரதுளங்குகின்றார்சிலர். (௧௭௪)

நக்கசெம்மணிநாறியநாணிழல்
பக்கம்வீசுறுபள்ளியிற்பல்பகல்
ஒக்கவாசையுலக்கவுலந்தவர்
செக்கர்வான்றருதிங்களொத்தார்சிலர். (௧௭௫)

* தாழ்தொறும்—தாழ்க்கோல் "திறவுகோல்" செல்லுமிடங்களெல்லாம்.
† பூவை—நாகணவாய்ப்புள்.

வாளினாற்றெளிகற்பகவல்லியர்
தோளினாற்றியதூங்கமளித்துயில
நாளினாற்செவியிற்புகநாமயாழ்த்
தோளினாற்றிசைப்பெய்துநின்றார்சிலர். (கஎசு)

கவ்வுதிக்கணைமேருவைக்கால்வளைத்
தெவ்வினான்மலையேந்தியவேந்துதோள்
வவ்வுசாந்துதம்மாமுலைவெளவிய
செவ்விகண்டுகுலாவுகின்றார்சிலர். (கஎஎ)

கூடிநான்குயர்வேலையுங்கோக்கரின்
றாடினான்புகழங்கைநரம்பினால்
நாடினாற்பெரும்பண்ணுநயப்புறப்
பாடினான்பெயர்பாடுகின்றார்சிலர். (கஎஅ)

இனையதன்மையியக்கியரெய்திய
மனையொராயிரமாயிரகோடியாம்
அனையவன்குலத்தாயிழையாரிடம்
வினைவினெய்தினனீதியினெய்தினான். (கஎகூ)

வேறு.

எரிசுடர்மணியின்செங்கேழிளவெயிலிடைவிடாது
விரியிருள்பருகிநாளும்விளக்கின்றிவிளங்குமாடத்
தரிவையர்குழுவுநீங்கவாசையும்தாமுமேயாய்
ஒருசிறையிருந்துபோனவுள்ளத்தோடுவாரும். (கஅ0)

நகையெரிக்கற்றைநெற்றிநாவிதோய்ந்தனையவோதி
புகையெனத்தும்பிசுற்றப்புதுமலர்பொங்குசேக்கை
பகையெனவேகியான்றபளிங்குடைச்சீதப்பள்ளி
மிகையொடுங்காத * காமவிம்மலின்வெதும்புவாரும். (கஅக)

† சவிபடுதகைசால்வானந்தானொருமேனியாகக்
குவியுமீனாரமாகமின்கொடிமருங்குலாகக்
கவிரொளிச்செக்கர்க்கற்றையோதியாமழையுண்கண்ணா
அவிர்மதிநெற்றியாகவந்திவாணொக்கின்றாரும். (கஅஉ)

பானலுண்கண்ணும்வண்ணப்படி ‡ முறைமாறப்பண்ணைச்
சோனைபோன்றளிகள்பம்புஞ்சுரிகுழற்கற்றைசோர
மேனிமிர்ந்தெழுந்தமாடவெண்ணிலாமுன்றினண்ணி
வானமீன்கையின்வாரிமணிக்கழங்காடுவாரும். (கஅங)

உழையுழைபரந்தவானயாற்றுநின்றும்பர்நாட்டுக்
குழைமுகத்தாயந்தந்தபுனல்குளிர்ப்பிலவென்றாடி

---

* காமவிம்மல்-காமமிகுதி. † சவி-சூரியன். ‡ முறைமாறல்-தமதுநிலைகுலைதல்.

இழைதொடுத்திலங்குமாடமிடைதடுமாறவேறி
மழைபொதுத்தொழுகுநீரான்மஞ்சனமாடுவாரும். (௧௮௪)

பன்னகவரசர்செங்கேழ்ப்பணாமணிவலிதிற்பற்றி
இன்னுயிர்க்கணவனீந்தானும்மெனவிருத்திவிஞ்சை
மன்னவர்முடியும்பூணுமாரமும்பணயமாகப்
பொன்னணிபலகைசூதுதுயில்கிலர்பொருகின்றாரும். (௧௮௫)

தென்னகுருடமுட்பாடல்சித்தியரிசைப்பத்தீஞ்சொற்
பன்னகமகளிர்வன்வார்த் * தண்ணுமைபாணிபேணப்
பொன்னகர்த்தவளப்பந்தர்கற்பகப்போதும்பர்பொற்றோள்
இன்னகையரம்பைமாரையாடல்கண்டிருக்கின்றாரும். (௧௮௬)

ஆணியிற்கிடந்தகாதலகஞ்சுடவருவியுண்கண்
சேணுயருறக்கந்தீர்ந்தசிந்தையர்செய்வதோரார்
வீணையுங்குழலுந்தத்தமிடறும்வேற்றுமையுந்தீர்ந்த
பாணிகளளந்தபாடலமிழ்துகப்பாடுவாரும். (௧௮௭)

தண்டலைவாழையன்னகுறங்கிடையல்குற்றட்டில்
கொண்டபூந்துகிலுங்கோவைகலைகளுஞ்சோரக் † கூர்ங்கள்
உண்டலமந்தகண்ணேசேலிட்டுலாவுகின்ற
குண்டலந்திருவில்வீசக்குரவையிற்குழற்றுவாரும். (௧௮௮)

நச்செனக்கொடியநாகக்கள்ளொடுகுருதிநக்கிப்
பிச்சரிற்பிதற்றியல்குற்பூந்துகில்கலாபம்பீறிக்
குச்சரித்திறத்திறைசைகளங்கொளக்குழுக்கொண்டுண்டிச்
சச்சரிப்பாணிகொட்டிகிறைதடுமாறுவாரும். (௧௮௯)

தயிர்கிறத்துறுகளுள்ளந்தள்ளுறவறிவுதள்ளிப்
பயிர்வுறத்தெய்வமென்மேற்படிந்ததுபார்மினென்று
உயிருயிர்த்திரண்டுகையுமுச்சிமேலுயரநீட்டி
மயிர்சிலிர்த்துடலுங்கூசிவாய்விரித்தொடுங்குவாரும். (௧௯0)

இத்திறத்தரக்கியார்களீரிருகோடியீட்டப்
பத்தியருறையுந்தெய்வப்படர்நெடுந்தெருவும்பார்த்தான்
சித்தியருறையுமாடத்தெருவும்பின்னுகச்சென்றான்
‡ உத்திசைவிஞ்சைமாதருறையுளாமுறையினுற்றான். (௧௯௧)

வேறு.

வளர்ந்தகாதலர்மகரிகைநெடுமுடியரக்கனைவரககாணார்
தளர்ந்தசிந்தைதம்மிடையினுநடுங்கிடவுயிரொடுதடுமாறிக்
களந்தவாநெடுங்கருவியிற்கைகளிற் § செயிரியர்கலைக்கண்ணுல்
அளந்தபாடல்வெவ்வேறுதஞ்செவிபுகவலமாலுறுகின்றார். (௧௯௨)

---

* தண்ணுமைபாணிபேணல்-மத்தளங்களை கைகளாலே முழக்கல்.
† கூர்ங்கள்-மிகவும் மயக்கமுள்ளமது. ‡ உத்திசை-அப்புறமான திக்கு.
§ செயிரியர்-பாடகர்கள்.

புரியுநன்னெறிமுனிவரும்புலவரும்புகலிலாப்பொறைகூர
எரியும்வெஞ்சினத்திகலடுகொடுந்திறலிராவணற்கெஞ்ஞான்றும்
பரியுநெஞ்சினரிவரெனவயிர்த்ததோர்பகைகொடுபனித்திங்கள்
சொரியும்வெங்கதிர்துணைமுலைக்குவைசுடக்கொடிகளிற்றுடிக்கின்றார். ()

சிறுகாலங்களுழிகளாம்வகைதிரிந்துசிந்தனைசிந்த
முறுகுகாதலின்வேதனையுழப்பவர்முயங்கினர்முலைமுன்றில்
இறுகுசாந்தமுமெழுதுநற்குறிகளுமின்னுயிர்ப்பொறையா
மறுகுவாட்கண்கள்சிவப்புறநோக்கினர்வயிர்த்தனருயிர்க்கின்றார். (௧௬௪)

ஆயவிஞ்சையர்மடந்தையருறைவிடமாறிரண்டமைகோடி
தாயமாளிகைநெடுந்தெருத்துருவிப்போய்த்தொலைவின்மூன்றுலகிற்கும்
நாயகன்பெருங்கோயிலைநண்ணுவான்சண்டனனளிர்திங்கள்
மாயநந்தியவாண்முகத்தொருதனிமயன்மகளுறைமாடம். (௧௬௫)

கண்டுகண்ணொடுகருத்தொடுகேடாவினனகாரணங்கடைகின்ற
துண்டுவேறொருசிறப்பெங்களுயகற்குயிரினுமுரியாளைக்
கொண்டுபோந்தவன்வைத்ததோருறையுள்கொல்குலமணிமனைக்கெல்லாம்
விண்டுவின்றடமார்பினின்மணியொத்ததிதுவெனவியப்புற்றான். (௧௬௬)

அரம்பைமேனகைதிலோத்தமையுருப்பசியாதியர்மலர்க்காமன்
சரம்பெய்தூணிபோற்றளிரடிதாந்தொடச்சாயலைபணிமாறக்
கரும்பையுஞ்சுவைகைப்பித்தசொல்லியர்காமரங்கனியாழின்
நரம்பினின்னிசைசெவிபுகநாசியிற்கற்பகவிரைநாற. (௧௬௭)

விழைவுநீங்கியமேன்மையோராயினுங்கீழ்மையோர்வெருளுற்றால்
பிழைகொனன்மைகொல்பெறுவதென்றையுறுபீழையாற்பெருந்தென்றல்
உழையர்கூவப்புக்கேதெனப்பெயர்வதோருசலினுளதாகும்
பழையம்யாமெனப்பண்பிலசெய்வரோபரிணிதர்பயரோர்வார். (௧௬அ)

இன்னதன்மையிலொரிமணிவிளக்கங்களெழில்கெடப்பொலிகின்ற
தன்னதின்னொளிதழைப்புறத்துயிலுறுமையலைத்தகைவில்லான்
அன்னளாகியசானகியிவளெனவயிர்த்தகத்தெழுவெந்தீ
துன்னுமாருயிருடலொடுசுடுவதோர்துயருழந்திவைசொன்னான். (௧௬௯)

எற்புவான்றொடர்யாக்கையாற்பெறும்பயனிகந்தனனிதுநிற்க
* அற்புவான்றனையிற்பிறப்பதனொடுமிகழ்ந்துதன்னருந்தெய்வக்
கற்புநீங்கியகனங்குழையிவளெனிற்காகுத்தன்புகழோடும்
பொற்பும்யானுமிவ்விலங்கையுமாக்கரும்பொன்றுதுமின்றென்றான். (௨00)

மானுயர்திருவடிவினளவளிவண்மாறுகொண்டனள்கூறின்
தானியக்கியோதானவர்தையலோவைபுறுந்தகையாளுள்

* அன்பு—அற்பெனத்திரிந்தது.

காணுயர்த்தாரிராமன்மேனோக்கியகாதல்காரிகையார்க்கு
மீனுயர்த்தவன்மருங்குதான்மீளுமோவினைந்துமிகையென்றான். (௨௦௧)

இலக்கணங்களுஞ்சிலவுளவென்னினுமெல்லைசென்றிருக்கில்லா
அலக்கணெய்துவதவ்வியதுண்டென்றெடுத்துரைகுவதிவள்யாக்கை
மலர்க்கருங்குழல்சோர்ந்துவாய்வெரீஇச்சிலமாற்றங்கள்பறைகின்றாள்
உலக்குமிங்கிவளகனைவனுமழிவும்வியனகர்க்குளதென்றான். (௨௦௨)

என்றுணர்ந்துநின்றேமுறுமிந்நிலைமிற்கவித்திறனென்னாப்
பின்றுசிந்தையன்பெயர்ந்தனனெடுமனைபிற்படப்பெருமேருக்
குன்றுகுன்றியதகையுறவோங்கியகொற்றமாளிகைதன்னில்
சென்றுபுக்கனனிராவணற்கெடுப்பருங்கிரியெனத்திரடோளான். (௨௦௩)

நிலந்துடித்தனநெடுவரைபொடித்தனநிருதர்தங்குலமாதர்
பொலந்துடிக்கமைமருங்குல்போற்கண்களும்புருவமும்பொற்றோளும்
வலந்துடித்தன * மாதிரந்துடித்தனதுடித்தின்றிமதிவானம்
கலந்திடித்தனவெடித்தனபூரணமங்கலகலசங்கள். (௨௦௪)

புக்குநின்றுதன்புலன்கொடுநோக்கினன்பொருவருந்திருவுள்ளம்
நெக்குநின்றனனீங்குமந்தோவிந்தநெடுநகர்த்திருவென்னா
எக்குலங்களின்யாவரேயாயினுமிருவினையெல்லோர்க்கும்
ஒக்குமூழ்முறையல்லதுவலியதொன்றில்லெனவுணர்வுற்றான். (௨௦௫)

ஆற்பெருங்கடனுணங்கியகேள்வியனோக்கினனியனென்றாள்
வேர்பெருங்கடல்புடைபரந்தீண்டியவெள்ளிடைவியன்கோயில்
பாற்பெருங்கடற்பன்மணிப்பஃறிரைப்பரப்புடைப்படர்வேலை
மாற்பெருங்கடல்வதிந்ததேயனையதோர்வளப்பினன்றுயில்வானை. (௨௦௬)

குழவிஞாயிறுகுன்றிவர்ந்தனையனகுருமணிநெடுமோலி
இழைகளோடுநின்றிளவெயிலெறித்திடவிரவெனும்பொருள்வீய
முழைகொண்மேருவின்பொகுட்டிடைக்கனகனைமுருக்கியமுரட்சீயம்
தழைகொடோளொடுதலைபலபரப்பிமுன்றுயில்வதோர்தகையானை. (௨௦௭)

ஆயபொற்கலத்தாய்வளையரம்பையராயிரரணிநின்று
தூயபொற்கவரித்திரளியக்கிடச்சுழிபடுபசுங்காற்றின்
வீயகற்பகத்தேன்றுளிவிராயனவீழ்தொறுநெடுமேனி
தீயநற்றொடிச்சீதையைநினைதொறுமுயிர்த்துயிர்தேய்வானை. (௨௦௮)

குழந்தைவெண்மதிக்குடுமியனெடுவரைகுலுக்கியகுலத்தோளைக்
கழிந்துபுக்கிடைகரந்தன † வங்கன்னெவங்கடுங்கணைபலபாய
உழந்தவெஞ்சமத்துயர்திசையானையினொளிமருப்புற்றிற்ற
பழந்தழும்பினுக்கிடையிடையேசிலபசும்புண்களசும்பூற. (௨௦௯)

---

* மாதிரம்-திசை. † அநங்கன்-தேகமில்லாதவன், மன்மதன்.

சாந்தளாவியகலவைமேற்றவழ்வுறுதண்டமிழ்ப்பசுந்தென்றல்
எந்துகாமவெங்கனலினுக்குயிழதட்டுருத்தியினுயிர்ப்பேறக்
காந்தண்மென்விரற்சனகிமேன்மனமுதற்கரணங்கள்கடிதோடப்
பாந்தணீங்கியமுழையெனக்குழைவுறுநெஞ்சுபாழ்பட்டானே. (௨௧௦)

## வேறு.

கொண்டபேருக்கழகாத்திரைதொறுங்குறித்தமேனும்
மண்டியசெருவின்வீரத்தோள்களால்வாரிவாரி
உண்டதுதெவிட்டிப்பேழ்வாய்க்கடைகடோறொழுகிப்பாயும்
அண்டர்தம்புகழிற்றோன்றும்வெள்ளியிற்றமைதியானே. (௨௧௧)

வெள்ளிவெண்சேக்கைவெந்துபொறியெழவெதும்புமேனி
புள்ளிவெண்மொக்குளென்னப்பொடித்துவேர்கொதித்துப்பொங்கக்
கள்ளவிழ்மாலைத்தும்பிவண்டொடுங்கரிந்துசாம்ப
ஒள்ளிணர்மாலைதீயவுயிர்க்கின்றவுயிர்ப்பினானே. (௨௧௨)

தேவியனேமியானிற்சிந்தைமெய்த்திருவினைகப்
பூவியலமளிமேலாப்பொய்யுறக்குறங்குவானைக்
காவியங்கண்ணிதன்பாற்கண்ணியகாதனீரின்
ஆவியையுயிர்ப்பென்றோதுமம்மியிட்டரைக்கின்றானே. (௨௧௩)

மிகுந்தகைநினைப்புமுற்றவுருவெளிப்பட்டவேலை
நகுந்தகைமுகத்தன்காதனடுக்குறுமெய்யன்வார்தேன்
உகுந்தகைமொழியாண்முன்னமொருவகையுறையுருள்ளோ
புகுந்தனளன்றோவென்றுமயிர்புறம்பொடிக்கின்றானே. (௨௧௪)

மென்றொழிற்கலாபமஞ்ஞைவேட்கைமீக்கூருமேனும்
குன்றொழித்தொருமாக்குன்றினரிதிற்சேர்கொள்கைபோல
வன்றொழிற்கொற்றப்பொற்றோண்மணந்தருமயிலேயன்னார்
ஒன்றொழித்தொன்றினேகவரியதோவொழுக்கினானே. (௨௧௫)

## வேறு.

தழுவாநின்றகருங்கடன்மீதுதயகிரியிற்சுடர்தயங்க
எழுவாவென்னமின்னிமைக்குமாரம்புரளுமியல்பிற்றாய்
முழுவானவராயுலகமொருமூன்றுங்காக்கு * முதற்றேவர்
மழுவாணேமிகுலிசத்தின்வாய்மைதுடைத்தமார்பானே. (௨௧௬)

## வேறு.

தோடுழுதண்டார்வண்டுந்திசையானைமதந்துதைந்தவண்டுஞ்சுற்றி
மாடுழுதநறுங்கலவைவயக்களிற்றின்சிந்தூரத்தைமாறுகொள்ளக்

---

* முதற்றேவரென்றது ஈண்டு (நான்முகனிவனுக்குறவாகலால்) உருத்திரன், விஷ்ணு, இந்திரனை என்க.

கோடுழுதமார்பானைக்கொலையுழுதவடிவேலின்கொற்றமஞ்சித்
தாடொழுதபகைவேந்தர்முடியுழுததழும்பிருந்தசரணத்தானை. (௨௧௭)

வேறு.

கொண்டதோருருவமாயன்குறளினுங்குறுகநின்றான்
நீண்டலைபத்துந்தோள்களிருபதுந்தெரியநோக்கிக்
கண்டனன்காண்டலோடுங்கருத்தின்முன்காலச்செந்தீ
விண்டனகண்கள் * கீண்டுவெடித்தனகீழுமேலும். (௨௧௮)

வேறு.

தோளாற்றலென்னாகுமேனிற்குஞ்சொல்லென்னாம்
வாளாற்றகண்ணாளைவஞ்சித்தான்மணிமுடியென்
தாளாற்றலாலிடித்துத்தலைபத்துந்தகர்த்தென்றன்
ஆளாற்றல்காட்டேனாலடியேனாய்முடியேனே. (௨௧௯)

நடித்துவாழ்தகைமையதோவடிமைதானன்னாதலைப்
பிடித்தவாளரக்கனார்யான்கண்டும்பிழைப்பரோ
ஒடித்துவான்றோளனைத்துந்தலைபத்துமுதைத்துருட்டி
முடித்திவ்வூர்முடித்தான்மேன்முடிவதெலாமுடிந்தொழிக. (௨௨௦)

என்றாக்கியெயிறுகடித்திருகரனும்பிசைந்தெழுந்து
நின்றாக்கியுணர்ந்துரைப்பானேமியோன்பணியன்றால்
ஒன்றாக்கியொன்றிழைத்தலுணர்வுடைமைக்குரித்தன்றால்
பின்றாக்கினிதுசாலப்பிழையாகுமெனப்பெயர்ந்தான். (௨௨௧)

ஆலம்பார்த்துண்டவன்போலாற்றலமைந்துளரெனினும்
சீலம்பார்க்குறியோர்களெண்ணாதுசெய்பவோ
மூலம்பார்க்குறினுலகைமுற்றுவிக்குமுறைதெரினும்
காலம்பார்த்திறைவேலைகடவாதகடலொத்தான். (௨௨௨)

இற்றைப்போர்ப்பெருஞ்சீற்றமென்னோடுமுடிந்திடுக
கற்றைப்பூங்குழலாளைச்சிறைவைத்தகண்டகனை
முற்றப்போர்முடித்ததொருகுரங்கென்றான்முனைவீரன்
கொற்றப்போர்ச்சிலைத்தொழிற்குக்குறைவுண்டாமெனக்குறைந்தான்

அந்நிலையான்பெயர்ந்துரைப்பானாய்வளைக்கையணியிழையார்
இந்நிலையானுடன்றுயில்வாருளரல்லரிவணிலையும்
புன்னிலையகாமத்தாற்புலர்கின்றநிலைபூவை
நன்னிலையினுளளென்னாநலனெனக்குநல்குமால். (௨௨௪)

என்றெண்ணியீண்டினியோர்பயனில்லையெனநினையாக்
குன்றன்னதோளவன்றன்கோமனைபிற்படப்பெயர்ந்தான்

* கீழ்கீண்டு—மேல்வெடித்தன எனக்கூட்டுக.

நின்றெண்ணியுன்னுவானந்தோவிந்நெடுநகரம்
பொன்றானுமணிப்பூணாரிலரென்னப் * பொருமுவான். (உஉரு)

கொன்றானோகற்பழியாக்குலமகளைக்கொடுந்தொழிலால்
தின்றானோவப்புறத்தேசெறித்தானோசிறையறியேன்
ஒன்றானுமுணரகிலேன்மீண்டினிப்போயென்னுரைக்கேன்
பொன்றாதபொழுதெனக்குக்கொடுந்துயரம்போகாதால். (உஉசு)

கண்டுவருமென்றிருக்குங்காகுத்தன்கவிகுலத்தோன்
கொண்டுவருமென்றிருக்கும்யானிழைத்தகோளிதுவால்
† புண்டரிகநயனத்தான்பாலின்னம்போவேனோ
‡ விண்டவரோடுடன்வீயாதியான்வாளாவிளிவேனோ. (உஉஎ)

§ கண்ணியநாள்கழிந்துளவாற்கண்டிலெனாற்கனங்குழையை
விண்ணடைதுமென்றாரையாண்டிருத்திவிரைந்தயான்
எண்ணியதுமுடிக்ககிலேன்யான்முடியாதிருப்பேனோ
புண்ணியமென்றொருபொருளென்னுழைநின்றும்போயதால். (உஉஅ)

ஏழுநூறோசனைசூழ்ந்தெயில்கிடந்ததிவ்விலங்கை
வாழு § மாமன்னுயிர்யான்காணாதமற்றில்லை
ஊழியான்பெருந்தேவியொருவரையும்யான்காணேன்
ஆழிதாயிடராழியிடையேவீழ்ந்தழிவேனோ. (உஉகூ)

வல்லரக்கன்றனைப்பற்றிவாயாறுகுருதியுகக்
கல்லரக்குங்கரதலத்தாற்காட்டென்றுகாண்கேனோ
எல்லரக்குமயினுதிவேலிராவணனுமிவ்வூரும்
மெல்லரக்கினுருக்கியுகவெந்தழலால்வேய்கேனோ. (உ௩0)

வானவரேமுதலோரைவினவுவெனேல்வல்லரக்கன்
தானொருவனுளனாகவுரைசெய்யுந்தருக்கிலரால்
ஏனையர்களெங்குரைப்பாரெவ்வண்ணந்தெரிகேனோ
ஊனழியநீங்காதவுயிர்சுமந்தவுணர்வில்லேன். (உ௩க)

எருவைக்குமுதலாயசம்பாதியிலங்கையிலத்
திருவைக்கண்டனனென்றானவனுரையுஞ்சிதைந்ததால்
¶ கருவைக்குநெடுநகரைக்கடலிடையேகரையாதென்
உருவைக்கொண்டின்னமுநானுளனாகியுழல்கேனோ. (உ௩உ)

வடித்தாய்பூங்குழலாளைவானறியமண்ணறியப்
பிடித்தானிவ்வடலரக்கனெனுமாற்றம்பிழையாதால்

* பொருமுவான்-துக்கிக்கலானான், † புண்டரிகநயனத்தான்-தாமரைக்கண்ணன்,
‡ விண்டவர்-விட்டவர், § கண்ணியநாள்-கெடுவுசெய்தனுப்பின காலவளவு,
§ மாமன்னுயிர்-பெருமையும் சரமும் நிலைமையும் அசரமுமான உயிர்களில்,
¶ கரு-தெய்வக்கம்மாளன்.

எடுத்தாழியிலங்கைதனையிருங்கடலினிட்டிவனை
முடித்தாலேயான்முடிதன்முறைமன்றவென்றுணர்வான். (உருரு)

எள்ளுறையுமொழியாமல்யாண்டையுளுமுளனாய்த்தன்
உள்ளுறையுமழகனைப்போலெம்மருங்குமுலாவினான்
புள்ளுறை * யுய்யானத்தையுறநோக்கியயல்போவான்
கள்ளுறையுமலர்ச்சோலையயலொன்றுகண்ணுற்றான். (உருச)

ஊர்தேடு படலம் - முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-ருரு௦.)

---

## ரு - வது காட்சிப்படலம்.

### பிராட்டியைக்கண்டது.

மாடுநின்றவம்மணிமலர்ச்சோலையைமருவித்
தேடியவ்வழிகாண்பெனேற்றீருமென்சிறுமை
ஊடுசெண்டிலெனினிற்பின்னருரியதொன்றில்லை
வீடுவேன்மற்றிவ்விலங்கன்மேவிலங்கையைவீட்டி. (க)

என்றுசோலைபுக்கெய்தினனிராகவன்றூதன்
ஒன்றுவானவர்பூமழைசொரிந்தனருவந்தார்
அன்றவாளரக்கன்சிறையவ்வழிவைத்த
துன்றலோதிதன்னிலையினைச்சொல்லுதாம்றுணிந்தாம். (உ)

வன்மருங்குல்வாளரக்கியர் † நெருக்கவங்கிருந்தாள்
கன்மருங்கெழுந்தென்றுமோர்துளிவரக்காணா
நன்மருந்துபோனலனறவுணங்கியநங்கை
மென்மருங்குல்போல்வேறுளவங்கமுமெலிந்தாள். (ரு)

துயிலெனக்கண்களிமைத்தலுமுகிழ்த்தலுந்துறந்தாள்
வெயிலிடைத்தந்தவிளக்கெனவொளியிலாமெய்யாள்
மயிலியற்குயின்மழலையாண்மானிளம்பேடை
அயிலெயிற்றுவெம்புலிக்குழாத்தகப்பட்டதன்னாள். (ச)

விழுதல்விம்முதன்மெய்யுறவெதும்புதல்வெருவல்
எழுதலேங்குதலிரங்குதலிராமனையெண்ணித்
தொழுதல்சோருதறுளங்குதறுயருழந்துயிர்த்தல்
அழுதலன்றிமற்றயலொன்றுஞ்செய்குவதறியாள். (ரு)

---

* உய்யானம்—தோப்பு, சோலை, † நெருக்க—ஈண்டு வருத்தப்படுதல்,

தழைத்தபொன்முலைத்தடங்கடந்தருவிபோய்த்தாழப்
புழைத்தபோலநீர்நிரந்தரம்பொழிகின்றபொலிவால்
இழைக்குநுண்ணியமருங்குலாளிணைநெடுங்கண்கள்
மழைக்கணென்பதுகாரணக்குறியெனவகுத்தாள். (௬)

அரியமஞ்சினோடஞ்சனமுதலிவையதிகம்
கரியகாண்டலுங்கண்ணினீர்கடல்புகக்கலுழ்வாள்
உரியகாதலினொருவரோடொருவரையுலகில்
பிரிவெனுந்துயருருவுகொண்டாலனபிணியாள். (௭)

துப்பினாற்செய்தகைகொடுகால்பெற்றதுளிமஞ்
சொப்பினன்றனைநினைதொறுநெடுங்கண்களுகுத்த
அப்பினனைந்தருந்துயருயிர்ப்புடையாக்கை
வெப்பினாற்புலர்ந்தொருநிலையுறாதமென்றுகிலாள். (௮)

* அரிதுபோகவோவிதிவலிகடத்தலென்றஞ்சிப்
பரிதிவானவன்குலத்தையும்பழியையும்பாராச்
சுருதிநாயகன்வரும்வருமென்பதோர்துணிவால்
கருதி † மாதிரமனைத்தையுமளக்கின்றகண்ணாள். (௯)

கமையினாடிருமுகத்தயல்கதுப்புறக்கவ்விச்
சுமையுடைக்கற்றைநிலத்திடைக்கிடந்ததூமதியை
அமையவாயிற்பெய்துமிழ்கின்றவயிலெயிற்றரவிற்
குமையுறத்திரண்டொருசடையாகியகுழலாள். (௧௦)

ஆவியந்துகில்புனைவதொன்றன்றிவேறறியாள்
தாவியன்னமென்புனலிடைத்தோய்கிலாமெய்யாள்
தேவுதெண்கடலமிழ்துகொண்டநங்கவேள்செய்த
ஓவியம்புகையுண்டதேயொக்கின்றவுருவாள். (௧௧)

கண்டிலன்கொலாமிளவலுங்கனைகடனடுவண்
உண்டிலங்கையென்றுணர்ந்திலருலகெலாமொறுப்பான்
கொண்டிறந்தமையறிகிலராமெனக்குழையாப்
புண்டிறந்ததினெரிநுழைந்தாலெனப்புகைவாள். (௧௨)

மாண்டுபோயின ‡ னெருவைகட்கரசன்மன்மற்றோர்
யாண்டையென்னிலையறிவுறுப்பார்களிப்பிறப்பில்
காண்டலோவரிதென்றென்றுவிம்முறுங்கலங்கும்
மீண்டுமீண்டுபுக்கெரிநுழைந்தாலெனமெலிவாள். (௧௩)

என்னைநாயகனிளவலையெண்ணலாவினையேன்
சொன்னவார்த்தைகேட்டறிவிலளெனத்துறந்தானோ

---

* அரிது-விதிவலிகடத்தல் தானேசெல்லமாட்டாமையாற்போக அரிவென்றும் தன்னாலொன்றுஞ் செய்யக்கூடாமையால் விதிவலிகடப்பதென்றுங் கூறினாள்என்க.
† மாதிரம்—திக்கு. ‡ எருவைகட்கரசன்-சடாயு,

முன்னையூழ்வினைமுடிந்ததோவென்றென்றுமுறையால்
பன்னவாய்புலர்ந்துணவுதேய்ந்தாருயிர்பதைப்பாள். (கசு)

அருந்துமெல்லடகாரிடவருந்துமென்றழுங்கும்
விருந்துகண்டபோதென்னுறுமோவென்றுவிம்மும்
மருந்துமுண்டுகொல்யான்கொண்டநோய்க்கென்றுமயங்கும்
இருந்தமாநிலஞ்செல்லரித்திடவுமாண்டெழாதாள். (கரு)

வன்கண்வஞ்சனையரக்கரித்துணைப்பகல்வையார்
தின்பரென்னினிச்செயத்தக்கதென்றுதீர்ந்தானே
* தன்குலப்பொறைதன்பொறையெனத்தணிந்தானே
என்கொலெண்ணுவேனென்னுமங்கிராப்பகலில்லாள். (கசு)

பெற்றதாயருந்தம்பியும்பெயர்த்தும்வந்தெய்திக்
கொற்றமாநகர்கொண்டிறந்தார்களோகுறித்துச்
சொற்றவாண்டெலாமுறைந்தன்றியந்நகர்துன்னான்
உற்றதுண்டெனப்படருழந்துருதநோயுறுவாள். (சஎ)

முரனெனத்தகுமொய்ம்பினோர்முன்பொருதவர்போல்
வரனுமாயமும்வஞ்சமும்வரம்பிலவல்லார்
பொரநிகழ்ந்ததோர்பூசலுண்டாமெனப்பொருமாக்
கரனெதிர்ந்ததுகண்டனளாமெனக்கவல்வாள். (கஅ)

வேறு.

தெம்மடங்கியசேணிலங்கேகயர்
தம்மடந்தையுன்றம்பியதாமெனு
மும்மடங்குபொலிந்தமுகத்தினன்
வெம்மடங்கலையுன்னிவெதும்புவாள். (கசு)

மெய்த்திருப்பதமேவென்றபோதினும்
இத்திருத்துறந்தேகென்றபோதினும்
சித்திரத்தினலர்ந்தசெந்தாமரை
ஒத்திருந்தமுகத்தினையுன்னுவாள். (உ0)

தேங்குகங்கைத்திருமுடிச்செங்கணான்
வாங்குகோலவடவரைவார்சிலை
† ஏங்குமாத்திரத்திற்றிரண்டாய்விழ
வீங்குதோளினைநந்துமெலிந்துளான். (உக)

இன்னலம்பரவேந்தற்கியற்றிய
பன்னலம்பதினுலாயிரம்படை

* தன்குலப்பொறை-தணித்தானே-உலகையாளுகிறது தன்குலப்பொறை ஆக லால் இப்போதாள் வோரில் லாமைப்பற்றித் தனதுசுமையென்று போயினரோவென் று கருத்து, † ஏங்குமாத்திரத்து-துக்கிக்குமளவில்.

கன்னன்மூன்றிற்களப்படக்கால்வளை
வின்னலம்புகழ்ந்தேற்றிவெதும்புவாள். (௨௨)

ஆழநீர்க்கங்கையம்பிகடாவிய
ஏழைவேடனுக்கெம்பிநின்றம்பிநீ
தோழன்மங்கைகொழுந்தியெனச்சொன்ன
வாழிநண்பினையுன்னிமயங்குவாள். (௨௩)

மெய்த்ததாதைவிரும்பினனீட்டிய
கைத்தலங்களைக்கைகளினீக்கிவே
றுய்த்தபோது * தருப்பையிலொண்பதம்
வைத்தவேதிகைச்செய்திமனக்கொள்வாள். (௨௪)

உரங்கொடேமலர்ச்சென்னியுரிமைசால்
வரங்கொள்பொன்முடிதம்பிவனைந்திலன்
திரங்குசெஞ்சடைகட்டியசெய்வினைக்
கிரங்குயேங்குவதெண்ணியிரங்குவாள். (௨௫)

பரித்தசெல்வமொழியப்படருநாள்
அருத்திவேதியர்க்கான்குலமீந்தவர்
கருத்திறைசைக்கரையின்மைகண்டிறை
சிரித்தசெய்கைநினைந்தழுஞ்செய்கையாள். (௨௬)

மழுவின்வாளினன்மன்னரை † மூவெழு
பொழுதினூறிப்புலவுறுபுண்ணினீர்
முழுகினுன்றவமொய்ம்பொடுமூரிவில்
தழுவுமேன்மைநினைந்துயிர்சாம்புவாள். (௨௭)

ஏகவாளியவ்விந்திரன்காதன்மேல்
போகவேவியதுகண்பொடித்தநாள்
காகமுற்றுமோர்கண்ணிலவாக்கிய
வேகவென்றியைத்தன்றலைமேற்கொள்வாள். (௨௮)

வெவ்விராதனைமேல்வருந் ‡ தீவினை
வவ்வியமாற்றருஞ்சாபமுமாற்றிய
அவ்விராமனையுன்னித்தன்னுருயிர்
செவ்விராதுணர்வோய்ந்துடறேம்புவாள். (௨௯)

வேறு.

இருந்தனடிரிசடையென்னுமின்சொலில்
திருந்திழைளொழியமற்றிருந்ததீவினை

* தருப்பையில் என்பது அசம்ஹியப்படாமல் பரிசுத்தமுள்ளதை யெடுக்கிறது போல் எடுத்து அம்மிமேல் வைத்த குணத்தைமனக் கொள்வாளென்க.

† மூவெழுபொழுதின்-இருபத்தொரு வம்சத்தளவும். ‡ தீவினை ஈண்டு—ஆகாமிய கர்மங்களனைத்தும்.

அருந்திறலரக்கியரல்லுநள்ளுறப்
பொருந்தலுந்துயினறைக்களிபொருந்தினர். (௫0)

ஆயிடைத்திரிசடையென்னுமன்பினள்
தாயினுமினியவடன்னைநோக்கினள்
தூயைநீகேட்டியென்றுணைவியாமெனு
மேயதோர்கட்டுரைவிளம்பன்மேயினள். (௫௧)

நலந்துடிக்கின்றதோநான்செய்தீவினைச்
சலந்துடித்தின்னமுந்தருவதுண்மையோ
பொலந்துடிமருங்குலாய்புருவங்கண்முதல்
வலந்துடிக்கின்றிலவருவதோர்கிலேன். (௫௨)

முனியொடுமிதிலையின்முதல்வன்முந்துநாள்
துனியருபுருவமுந்தோளுநாட்டமும்
இனியனதுடித்தனவீண்டுமாண்டென
நனிதுடிக்கின்றனவாய்ந்துநல்குவாய். (௫௩)

மறந்தனெனிதுவுமோர்மாற்றங்கேட்டியால்
அறந்தருசிந்தையென்னுவிநாயகன்
பிறந்தபார்முழுவதுந்தம்பியேபெறத்
துறந்துகாண்புகுந்தநாள் * வலந்துடித்ததே. (௫௪)

நஞ்சனையான்வனத்திழைக்குநாளிடை
வஞ்சனையால்வலந்துடித்தவாய்மையால்
எஞ்சலவீண்டுதாமிடந்துடித்ததால்
அஞ்சலென்றிரங்குதற்கடுப்பதியாதென்றாள். (௫௫)

என்றலுந்திரிசடையியைந்தசோபனம்
நன்றிதுநன்றெனநபந்தசிந்தையாள்
உன்றுணைக்கணவனையுறுதலுண்மையால்
† அன்றியுங்கேட்டியென்றறைதன்மேயினள். (௫௬)

உன்னிறம்பசப்புறவுயிருயிர்ப்புற
இன்னிறத்தேனிசையினியநண்பினல்
மின்னிறமருங்குலாய்செவியின்மெல்லெனப்
பொன்னிறத்தும்பிவந்தூதிப்போயதால். (௫௭)

ஆயதுதேரினுன்னுவிநாயகன்
ஏயதுதூதுவந்தெதிர்தலுண்மையால்
தீயதுதீயவர்க்கெய்தறிண்ணமென்
வாயதுகேளெனமறித்துங்கூறுவாள். (௫௮)

* வலந்துடித்தல் பெண்களுக்கு கெடுதியையும் புருஷர்களுக்கு நன்மையையும் பயக்கும். † அன்றியுமென்றது தனக்குத் தோற்றினகுறிகளை.

துயிலிலவாதலிற்கனவுதோன்றல
அயில்விழியொருகனவமைந்துநோக்கினேன்
பயில்வனபழுதிலபழுதிறுடென
வெயிலிலு * மெய்யனவுரைத்தன்மேயினுள். (௩௯)

எண்ணெய்பொன்முடிதொறுமிழுகியீறிலாத்
திண்ணெடுங்கழுதைபேய்பூண்டதேரின்மேல்
அண்ணலவ்விராவணனரத்தவாடையன்
நண்ணினன்றென்புலனவையில்கற்பினுய். (௪0)

மக்களுஞ்சுற்றமுமற்றுளோர்களும்
புக்கனரப்புலம்போந்ததில்லையால்
சிக்கறநோக்கினென்றீயவின்னமும்
மிக்கனகேட்கெனவிளம்பன்மேயினுள். (௪௧)

ஆண்டகையிராவணன்வளர்க்குமவ்வனம்
† ஈண்டனவிறந்தவாலினங்கொள்செஞ்சிகை
தூண்டருமணிவிளக்கழலுந்தொன்மனை
தீண்டதால்வானவேறெறியக்கீழைநாள். (௪௨)

பிடமதம்பிறந்தனபிறங்குபேரியும்
இடியெனமுழங்குமாலிரட்டலின்றியே
‡ தடியுடைமுகிற்குலமின்றித்தாவில்வான்
வெடிபடவதிருமாலுதிருமீனெலாம். (௪௩)

விற்பகலின்றியேயிரவுவிண்டற
எற்பகவெரிந்துளமெதன்னத்தோன்றுமால்
மற்பகமலர்ந்ததோண்மைந்தர்சூடிய
கற்பகமாலையும்புலவுகாலுமால். (௪௪)

திரியுமாலிலங்கையுமதிலுந்திக்கெலாம்
எரியுமாற் $ கந்தர்ப்பநகரமெங்கணும்
தெரியுமான்மங்கலகலசஞ்சிந்தின
விரியுமால்விளக்கினைவிழுங்குமாவிருள். (௪௫)

தோரணமுறிந்தனதுணியச்சூழிமால்
வாரணமுறியுமால்வலத்தவாண்மருப்
பாரணமந்திரத்தறிஞர்நாட்டிய
பூரணகுடத்துநீர்நறவுபொங்குமால். (௪௬)

விண்டொடர்மதியினைப்பிளந்து ¶ மீனெழும்
புண்டொடர்குருதியிற்பொழியும்போர்மழை

---

* வெய்யன வென்றும் பாடம். † ஈண்ட-மரக்கூட்டத்துடனே. ‡ தடி-மின்னல்.
$ கந்தர்ப்பநகரம்—மன்மதபுரம் பெண்குறி.
¶ மீன் எழும் எனில்கடலிலுள்ள மீன்கள் துள்ளுமென ஆம். மின்னெழும் எனப்பாடமாயின் மின்னல் விளங்குமென பொருள்கொள்க.

தண்டொடு திகிரிவாடனுவென்றின்னன
மண்டமர்புரியுமாலாழிமாறுற. (சஎ)

மங்கையர்மங்கலத்தாலிமற்றையோர்
அங்கையின்வாங்கினரெவருமன்றியே
கொங்கையின் வீழ்ந்தனகுறித்தவாற்றினல்
இங்கிதனற்புதமின்னுங்கேட்டியால். (சஅ)

மன்னவன்றேவியம்மயன்மடந்தைதன்
பின்னவிழோதியும் * பிறங்கிவீழ்ந்தன
துன்னிருஞ்சுடர்சுடச்சுறுக்கொண்டேறின
இன்னலுண்டெனுமிதற்கேதுவீதெனு. (சகூ)

என்றனளியம்பிவேறிசைப்பக்கேட்டியால்
இன்றிவணிப்பொழுதியைந்ததோர்கனு
வன்றனைக்கோளரியிரண்டுமொறிலாக்
குன்றிடையுழுவையங்குழுக்கொண்டிண்டியே. (ருய)

வரம்பிலாமதகரியுறையுமவ்வனம்
நிரம்புறவளைந்தனநெருக்கிநேர்ந்தன
குரம்பறுபிணம்படக்கொன்றமாறிலாப்
புரம்புகவிருந்ததோர்மயிலும்போயதால். (ருக)

ஆயிரந்திருவிளக்கமையமாட்டிய
சேயொளிவிளக்கதொன்றேந்திச் † செய்யவள்
நாயகன்றிருமனைநின்றுநண்ணுதல்
மேயினள்வீடணன்கோயின் ‡ மென்சொலாய். (ருஉ)

பொன்மனைபுக்கவப்பொருவில்போதினில்
என்னைநீயுணர்த்தினைமுடிந்ததில்லென
அன்னையேயதன்குறைகாணென்றுயிழை
இன்னமுந்துயில்கெனவிருகைகூப்பினள். (ருங)

§ இவ்விடையண்ணலவ்விராமனேவிய
வெவ்விடையனையபோர்வீரத்தூதனும்
அவ்விடையெய்தினனரிதினேக்குவான்
நொவ்விடைமடந்தைதன்னிருக்கைநோக்கினன். (ருச)

அவ்வயினரக்கியரறிவுற்றம்மவோர்
செவ்வையிறுயினமைச்செருத்தறீதெனு
எவ்வயின்மருங்கினுமெழுந்துவீங்கினர்
வெவ்வயின்மழுவெழுச்சூலவெங்கையார். (ருரு)

---

* பிறங்கி-சுழன்று, † செய்யவள்-ராஜலட்சுமி. ‡ மென்சொலாய் - மிருதுபாஷி.
§ இவ்விடையென்பதற்கு பிராட்டியும் திரிசடையும் பேசிக்கொண்டிருக்கிற இத்தருணத்திலென்று கொள்க.

வயிற்றிடைவாயினர்வளைந்தநெற்றியின்
குயிற்றியவிழியினர்கொடியநோக்கினர்
எயிற்றினுக்கிடையிடையானையாளிபேய்
துயிற்கொள்வெம்பிலனெனத்தொட்டவாயினர். (௫௬)

ஒருபதுகையினரொற்றைச்சென்னியர்
இருபதுதலையினரிரண்டுகையினர்
வெருவருதோற்றத்தர்விகடவேடத்தர்
பருவரையெனமுலைபலவுநாற்றினர். (௫எ)

சூலம்வாள்சக்கரந்தோட்டிதோமரம்
காலவேல்கற்பணங்கற்றகையினர்
ஆலமேயுருவுகொண்டனையமேனியர்
* வாலமேதரித்தவன்வெருவும்வண்மையர். (௫அ)

கரிபரிவேங்கைமாக்கரடியாளிபேய்
அரிநரிநாயெனவணிமுகத்தினர்
வெரிநுறுமுகத்தினர்விழிகண்மூன்றினர்
புரிதருகொடுமையர்புகையும்வாயினர் (௫௯)

எண்ணினுக்களவிடலரியவீட்டினர்
கண்ணினுக்களவிடலரியகாட்சியர்
பெண்ணெனப்பெயர்கொடுதிரியும்பெற்றியர்
துண்ணெனத்துயிலுணர்ந்தெழுந்துசுற்றினர். (௬0)

ஆயிடையுரையழிந்தழகன்றேவியும்
தீயினையவர்முகநோக்கித்தேம்பினள்
நாயகன்றூதனும்விரைவினண்ணினன்
ஒய்விலதுயர்மரப்பணையினும்பரான். (௬க)

அரக்கியரயின்முதலேந்துமங்கையர்
நெருக்கியகுழுவினர்துயிலுநீங்கினர்
இருக்குநர்பலரிதற்கேதுவென்னெனப்
பொருக்கெனவவரிடைப்பொருந்தநோக்கினன். (௬உ)

விரிமழைக்குலங்கிழித்தொளிருமின்னெனக்
கருநிறத்தரக்கியர்குழுவிற்கண்டனன்
உருநிறத்தொருதனிக்கொண்டலூழியான்
இருநிறத்துற்றவெற்கியைந்தகாந்தத்தை. (௬௩)

தொடற்கருமரக்கியர்காவல்சுற்றுளாள்
மடக்கொடிச்சீதையாமாதரேகொலாம்

* வாலம்-சுத்தஜலம்.

கடற்றுணைநெடியதன் கண்ணினீர்ப்பெருந்
தடத்திடையிருந்ததோரன்னத்தன்மையாள். (சுச)

வீடினதன்றறன்யானும்வீகலேன்
தேடினென்கண்டனென்றேவியேயெனு
ஆடினன்பாடினனுண்டுமீண்டும்பாய்ந்
தோடினனுலாவினனுவகைத்தேனுண்டான். (சுரு)

எள்ளருமுருவினவ்விலக்கணங்களும்
வள்ளறன்னுரையொடுமொறுகொண்டில
* கள்ளவாளரக்கனற்கமலக்கண்ணனூர்
உள்ளுறையுயிரினையொளித்துவைத்தவா. (சுசு)

மூவகையுலகையுமுறையினீக்கிய
பாவிதன்னுயிர்கொள்வானிழைத்தபண்பிதால்
ஆவதேயையமிலரவினீங்கிய
தேவனேயவனிவள்கமலச்செல்வியே. (சுஎ)

மாசுண்டமணியனுள்வயங்குவெங்கதிர்த்
தேசுண்டதிங்களுமென்னத்தேய்ந்துளான்
காசுண்டகூந்தலாள்கற்புங்காவலும்
ஏசுண்டதில்லையாலறத்துக்கீறுண்டோ. (சுஅ)

புனைகழலிராகவன்புயத்தையோபுகழ்
வனிதையர்திலகத்தின்மனத்தின்மாண்பையோ
வனைகழலரசரின்வண்மைவீக்கிடும்
சனகர்தங்குலத்தையோயாதைச்சாற்றுகேன். (சுகூ)

தேவரும்பிழைத்திலர்தெய்வவேதியர்
ஏவரும்பிழைத்திலரறமுமீறின்றால்
யாவதிங்கினிச்செயலரியதெம்பிராற்
காவவென்னடிமையும்பிழைத்தின்றுமன்றே. (எ0)

† கேழிலாணிறையிறைகீண்டதாமெனின்
ஆழியான்முனிவெனுமாழிமீக்கொள
ஊழியினிறுதிவந்துறுமென்றுன்னினேன்
வாழியருலகினிவரம்பினுளெலாம். (எக)

வெங்கனன்முழுகியும்புலன்கள்வீக்கியும்
நுங்குவவருந்துவநீக்கினோற்றவர்
எங்குளர்குலனில்வந்தில்லின்மாண்புடை
நங்கையர்மளத்தவநவிலற்பாலதே. (எஉ)

* அரக்கனுறென்றது-இழிவுகுறிப்பு, கமலக்கண்ணனூர்என்றதுஉயர்வுகுறிப்பு.
† கேழ்இலாள்-ஒப்பில்லாத.

பேணநோற்றதுமனைப்பிறவிபெண்மைபோல்
நாணநோற்றுயர்ந்ததுநங்கைதோன்றலால்
மாணநோற்றீண்டிவளிருந்தவாறெலாம்
காணநோற்றிலனவன்கமலக்கண்களால். (எங)

முனிபவராக்கியர்முறையினீங்கினார்
இனியவடானலாதியாருமில்லையால்
தனிமையும்பெண்மையுந்தவமுமின்னதே
வனிதையர்க்காகநல்லறத்தின்மாண்பெலாம். (எச)

தருமமேகாத்ததோசழக்கன்றன்வினைக்
கருமமேகாத்ததோகற்பின்காவலோ
அருமையேயருமையேயாரிதாற்றுவார்
ஒருமையேயெம்மனோர்க்குரைக்கற்பாலதே. (எரு)

செல்வமோவதுவவர்தீமையோவிது
அல்லினும்பகலினுமமராட்செய்வார்
ஒல்லுமோவொருவர்க்கீதுறுகண்யாதினி
வெல்லுமோதீவினையறத்தைமெய்ம்மையால். (எசு)

என்றிவையினையனவெண்ணிவண்ணவான்
பொன்றிணிநெடுமரப்பொதும்பர்புக்கவண்
நின்றனனவ்வழிநிகழ்ந்ததென்னெனின்
துன்றுபூஞ்சோலைவாயரக்கன்றோன்றினான். (எஎ)

ங - வது - காட்சிப்படலம் - முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-சOஎ.)

## ச - வது நிந்தனைப்படலம்.

### பிராட்டி ராவணனைத் தூஷித்தல்.

சிகரவண்குடுமிநெடுவரையெவையுமொருவழிதிரண்டனசிவண
மகரிகைவயிரகுண்டலமலம்புந்திண்டிற்றோள்புடைவயங்கச்
சகரவேலையினீர்தழுவியகதிரிற்றலைதொறுந்தலைதொறுந்தயங்கும்
வகையபன்மகுடமிளவெயிலெறிப்பக்கங்குலும்பகல்படவந்தான். (க)

* உருப்பசியுடைவாளெடுத்தனடொடரமேனகைவெள்ளடையுதவச்,
செருப்பினைத்தாங்கித்திலோத்தமைசெல்ல வரம்பையர்குழாம்புடைசுற்றக்,
கருப்புரஞ்சாந்துங்கலவையுமலருங்கலந்துமிழ்பரிமளகந்தம், மருப்புடைப்
பொருப்போர்மாதிரக்களிற்றின்வரிக்கைவாண்மூக்கிடைமடுப்ப. (உ)

* ஊரு-தொடை, தொடையிற்பிறந்தவள், ஊருவசி.

நானநெய்விளக்கநாலிருகோடிநங்கையரங்கையிலெடுப்ப
மேனிவெக்தெழுந்தமணியுடையணியின்விரிகதிரிருளெலாம்விழுங்கக்
கான்முதற்றொடர்ந்தநூபுரஞ்சிலம்பக்கிண்கிணிகலையொடுங்கலிப்பப்
பானிறத்தன்னக்குழாம்படர்ந்தென்னப்பற்பலமழலையும்பகர. (௩)

அந்தரம்புகுந்ததுண்டெனமுனிவுற்றருந்துயினீங்கினானண்டைச்
சந்திரவதனத்தருந்ததியிருந்ததண்ணறுஞ்சோலையின்றனையோ
மந்திரம்யாதோயாரொடும்போமோவென்றுமாமனமறுக்குறலால்
இந்திரன்முதலோரிமைப்பிலாநாட்டமுகிழ்த்தனருயிர்ப்பவிந்திருப்ப. (௪)

நீனிறக்குன்றினெடிதினிற்றாழ்ந்தநீத்தவெள்ளருவியினிமிர்ந்த
பானிறப்பட்டின்மாலையுத்தரியம்பண்புறப்பசும்பொனாரத்தின்
மானிறப்புடவியுடையுறப்பரந்தவளர்கதிரிளவெயில்பொருவச்
சூனிறக்கொண்மூக்கிழித்திடைதுடிக்குமின்னெனமார்பினாறுளங்க. (௫)

தோடொறுந்தொடர்ந்தமகரிகைவயிரக்கிம்புரிவலயமாச்சுடர்கள்
நாடொறுஞ்சுடருங்கலிகெழுவிசும்பினாளொடுகோளினைநக்கத்
தாடொறுந்தொடர்ந்ததழங்குபொற்கழலின் றகையொளிநெடுநிலந்தடவக்
கேடொறுந்தொடர்ந்தமுறுவல்வெண்ணிலவின்முகமலரிரவினுங்கிளர. ( )

தன்னிறத்தோடுமாறுதந்திமைக்குநீவியந்தழைபடவுடுத்த
பொன்னிறத்தூசுகருவரைமருங்கிற்றழுவியபுதுவெயில்பொருவ
மின்னிறக்கதிரிற்சுற்றியபசும்பொன்விரற்றலையவிரொளிக்காசின்
கன்னிறக்கற்றைநெடுநிழல்பூத்தகற்பகமுழுவனங்கவின. (௭)

* சன்னவீரத்தகோவைவெண்டரளமூழியினிறுதியிற்றனித்த
பொன்னெடுவரையிற்றோற்றியகோளுநாளுமொத்திடையிடைபொலிய
மின்னொளிமௌலியுதயமால்வரையின்மீப்படர்வெங்கதிர்ச்செல்வர்
பன்னிருவரினுமிருவரைத்தவிர்வுற்றுதித்ததோர்படியொளிபரப்ப. (௮)

பயிலெயிற்றிரட்டைப்பணைமருப்பொடியப்படியினிற் † பரிபவஞ்சுமந்த
மயிலடித்தொழுக்கினனையமாமதத்தமாதிரக்காவன்மால்யானை
கயிலையிற்றிரண்டமுரண்டொடர்தடந்தோட்கனகனதுயர்வரங்கடந்த
அயிலெயிற்றரியின்சுவடுதன்கரத்தாலளைந்தமாக்கரியினின்றஞ்ச. (௯)

அங்கயற்கருங்கணியக்கியர்துயக்கிலரம்பையர்விஞ்சையர்க்கமைந்த
மங்கையர்நாகமடந்தையர்சித்தர்நாரியரரக்கியர்முதலாக்
குங்குமக் ‡ கொங்கைக்குவிமுலைக்கனிவாய்க்கோகிலந்துயர்ந்தமென்குதலை
மங்கையரீட்டமால்வரைதழீஇயமஞ்ஞையங்குழுவெனமயங்க. (௧௦)

---

* சன்னவீரம்-கழுத்திலணிகிறஒருவகைமாலை இக்காலத்து முந்நூலென்ப.
† பரிவம்-துன்பம், ‡ கொங்கு வாசனை, ஐ-சாரியை என்க.

தொளையுறுபுழைவேய்த்தூக்கிசைக்கானந்துயலுறுவொருநிலைபடா
இளையவர்மிடறுமிந்நிலையிசைப்பக்கிந்நரர்முறைநிறுத்தெடுத்த
கிளையுறுபாடல் * சில்லரிப்பாண்டிறழுவியமுழவொடுகெழுமி
அளையுறுமரவும்முழுதுவாயுகுப்பவண்டமும்வையமுமளப்ப. (கக)

அன்னபூஞ்சதுக்கஞ்சாமரை † யுக்கமாதியாம்வரிசையிற்கமைந்த
உன்னரும்பொன்னின்மணியினிற்புனைந்தவிழைக்குலமுழைக்குலமனைய
மின்னிடைச்செவ்வாய்க்குவிமுலைப்பணைத்தோள்வீங்குதேரல்குலார்தாங்கி
நன்னிறக்காரின்வரவுகண்டுவக்குநாடகமயிலெனநடப்ப. (கஉ)

தந்திரிநெறியிற்றூக்குறுகருவிதூக்கினரெழுவிதச்சதியின்
முந்துறுகுணிலோடியையுறுகுறட்டிற்சில்லரிப்பாண்டிலின்முறையின்
மந்திரகீதத்திசைப்பதந்தொடரவகையுறுகட்டளைவழாமல்
அந்தரவானத்தரம்பையர்கரும்பிற்பாடலாருருகுவந்தகவ. (கங)

அந்தில்வே ‡ ளநங்கனழல்படத்துரந்தவயின்முகப்பகழிவாயறுத்த
வெந்துறுபுண்ணின்வேனுழைந்தாங்குவெண்மதிப்பசுங்கதிர்விரவ
மந்தமாருதம்போய்மலர்தொறும்வாரிவயங்குநீர்மம்மரின்வருதேன்
சிந்துநுண்டுளியின்சீகரத்திவலையுருக்கியசெம்பெனத்தெரிப்ப. (கச)

இழைபுரைமருங்குலிறுமிறுமெனவுமிறுகலாவனமுலையிரட்டை
$ உழைபுகுசெப்பினொளிதாமறைத்தவுத்தரியத்தினரொல்கிக்
குழைபுகுகமலங்கோட்டினர்நோக்குங்குறுநகைக்குமுதவாய்மகளிர்
மழைபுரைதடங்கட்செங்கடையீட்டமார்பினுந்தோளினுமலைய. (கரு)

மாலையுஞ்சாந்துங்கலவையும்பூணும்வயங்குநுண்டூசொடுகாசும்
சோலையின்றொழுதிக்கற்பகத்தருவுநிதிகளுங்கொண்டுபின்றொடரப்
பாலின்வெண்பாவைத்திரைகருங்கிரிமேற்பரந்தெனச்சாமரைபதைப்ப
வேலைநின்றுயருமுயலில்வெண்மதியின்வெண்குடைமீதுறவிளங்க. (கசு)

ஆர்தருமகழியருவரையிலங்கையடிபெயர்ந்திடுதொறுமழுந்தி
நேர்தரும்பாவைப்பிறழ்திரைதவழ்ந்துநெடுந்தடந்திசைதொறுநிமிரச்
சார்தருங்கடுவினையிறுடைப்பகுவாயநந்தனுந்தலைதடுமாற
மூரிநீராடையிருநிலமடந்தைமுதுகுளுக்குற்றனண்முரல. (கஎ)

கேடகத்தோடுமழுவெழுச்சூலமங்குசங்கற்பணங்கிடுகோ
டாடகச்சுடர்வாளயில்சிலைகுலிசமுதலியவாயுதமனைத்தும்
தாடகைக்கிரட்டியெறுழ்வலிக்கமைந்தகைமையர்தடவரைபொறுக்கும்
சூடகத்தடக்கைச்சுடுசினத்தடுபோரரக்கியர்தலைதொறுஞ்சுமப்ப. (கஅ)

---

* சில்லரி-நாகசுரம் பாண்டில்-பிரமதாளம், † உக்கம்-விசிறி.

‡ அநங்கன்—உருவமில்லாதவன், மன்மதன், $ உழை-எழனுருபு கச்சினிடத்தே என்க.

விரிதளிர்முகைபூக்கொம்படைமுதல்வேரிவையெலாமணிபொனல்விரிந்த
தருவுயர்சோலைதிசைதொறுங்கரியத்தழலுமிழுயிர்ப்புமுன்றவழத்
திருமகளிருந்ததிசையறிந்திருந்துந்திகைப்புறுசிந்தையன்கெடுத்த
தொருமணிநெடும்பற்பஃறலையறவினுழைதொறுமுழைதொறுமுலாவ. (கக)

இனையதோர்தன்மையெறுழ்வலியரக்கரேந்தல்வந்தெய்துகின்றானை
அனையதோர்தன்மையஞ்சனைச்சிறுவன்கண்டனனமைவுறநோக்கி
வினையமுஞ்செயலுமேல்விளைபொருளுமிவ்வழிவிளங்குமென்றெண்ணி
வனைகழலிராமன்பெரும்பெயரோதியிருந்தனன்வந்தயன்மறைந்தே. (உ0)

ஆயிடையரக்கனரம்பையர்குழுவுமல்லவும்வேறயலகல
மேயினன்பெண்ணின்விளக்கெனுந்தகையாளிருந்துழியாண்டவள்வெருவி
போயினவுயிராளாமெனநடுங்கிப்பொறிவரியெறுழ்வலிப்புகைக்கட் [ப்
காய்சினவுழுவைதின்னியவந்தகலையிளம்பிணையெனக்கரைந்தாள். (உக)

வேறு.

கூடியாவிகுலைவுறுவாளையும்
ஆசையாலுயிராசழிவானையும்
காசில்கண்ணிணைசான்றெனக்கண்டனன்
ஊசலாடியுளையுமுளத்தினன். (உஉ)

வாழிசானகிவாழியிராகவன்
வாழிநான்மறைவாழியரந்தணர்
வாழிநல்லறமென்றுறவாழ்த்தினன்
ஊழிதோறும்புதிதுறுங்கீர்த்தியான். (உ௩)

அவ்விடத்தருகெய்தியரக்கன்றான்
எவ்விடத்தெனக்கின்னருளீவது
நொவ்விடைக்குயிலேநுவல்கென்றனன்
வெவ்விடத்தையமிழ்தெனவேண்டுவான். (உச)

ஈசற்காயினுமீட்டழிவுற்றிறை
வாசிப்பாடழியாதமனத்தினன்
ஆசைப்பாடுமெந்நாணுமடர்த்திடக்
கூசிக்கூசியினையனகூறினன். (உ௫)

இன்றிறந்தனநாளையிறந்தன
என்றிறந்தருந்தன்மையீதாலெனைக்
கொன்றிறந்தபின்கூடுதியோகுழை
சென்றிறங்கிமறந்தருசெங்கணாய். (உசு)

உலகமொன்றொடிரண்டொருங்கோம்புமென்
அலகில்செல்வத்தரசியலாணையில்

திலகமேயுன் றிறத்தநங்கன் றரு
கலகமல்லதெளிமையுங்காண்டியோ. (உஎ)

பூந்தண்வார்குழற்பொற்கொழுந்தேபுகழ்
ஏந்துசெல்வமிகழ்ந்தனையின்னுயிர்க்
காந்தன்மாண்டிலன்காடுகடந்துபோய்
வாழ்ந்தவாழ்வதுமானுடர்வாழ்வன்றே. (உஅ)

நோற்கின்றார்களுநண்பொருணுண்ணிதின்
பார்க்கின்றாரும்பெறும்பயன் பார்த்தியேல்
வார்க்குன்றாமுலையென்சொன்மௌலியால்
ஏற்கின்றாரொடேனுறையின்பமால். (உக)

* பொருளும்யாழும்விளரியும்பூவையும்
மருளுநாளுமழலைவழங்குவாய்
தெருளுநான்முகன்செய்ததுன்சிந்தையின்
அருளுமின்மருங்கும்மரிதாக்கியோ. (ந௦)

ஈண்டுநாளுமிளமையுமீண்டில
மாண்டுமாண்டுபிறிதுறுமாலைய
வேண்டுநாள்வெறிதேவிளிந்தாலினி
யாண்டுவாழவ்விடருழன்றாழ்தியோ. (நக)

இழவெனக்குயிர்க்செய்திலுமெய்தக
குழைமுகத்துநின்சிந்தனைகோடினல்
பழகரிற்புறம்பண்பிவைகாமத்தோ
டழகினுக்கினியாருளராவரே. (நஉ)

† பெண்மையும்மழகும்பிறழாமனத்
திண்மையும்முதல்யாவையுஞ்செய்யவாய்க்
கண்மையும்பொருந்திக்கருணைப்படர்
வண்மையென்கொல்சனகரின்மாண்டவா. (நந)

வீட்டுங்காலத்தலறிய ‡ மெய்க்குரல்
கேட்டுங்காண்டற்கிருத்திகொல்கிள்ளைநீ
நாட்டுங்கானெடுநல்லறத்தின்பயன்
ஊட்டுங்காலத்திகழ்வதுறுங்கொலோ. (நச)

தக்கதென்னுயிர்வீடெனிற்றாழ்கிலா
தொக்கசெல்வமுலையுமொருத்திநீ

---

* பொருள்—பிள்ளை, † பெண்ணுக்குள்ள நற்குணங்களெல்லா முன்னிடத்திலேயிருந்தும் தாக்ஷண்ணியமும் ஈகையுமில்லையென்கிறான் என்றால்யெனக்குஉயிர்பலிதவேணுமென்கை, :பலி-பச்சை.

‡ மாரீசன்-ராமன்குரலாக ஆலட்சுமணா யென்றது மெய்க்குறல்.

புக்குயர்ந்ததெனும்புகழ்போக்கிவே
றுக்கதென்னுமுறுபழி * கோடியோ. (௩௫)

தேவர்தேவியர்சேவடிகைதொழும்
தாவின்மூவுலகின்றனிநாயகம்
மேவுகின்றது நுன்கண்விலக்கினை
யாவரேழையர்நின்னினிலங்கிழாய். (௩௬)

குடிமைமூன்றுலகுஞ்செயுங்கொற்றத்தென்
அடிமைகோடியருளுதியாலெனு
முடியின்மீதுமுகிழ்த்துயர்கையினன்
படியின்மேல்விழுந்தான்பழிபார்க்கலான். (௩௭)

வேறு.

காய்ந்தனசலாகையன்னவுரைவந்துகதுவாமுன்னம்
தீய்ந்தனசெவிகளுள்ளந்திரிந்ததுசிவந்தசோரி
பாய்ந்தனகண்களொன்றும் † பரிந்திலளுயிர்க்கும்பெண்மைக்
கேய்ந்தனவல்லாவெய்யமாற்றங்களிவையசொன்னாள். (௩௮)

மல்லடுதிரடோள்வஞ்சன்மனம்பிறிதாகும்வண்ணம்
கல்லொடுந்தொடர்ந்தநெஞ்சங்கற்பின்மேற்கண்டதுண்டோ
இல்லொடுந்தொடர்ந்தமாதர்க்கேய்வனவல்லவெய்ய
சொல்லிதுதெரியக்கேட்டிதுரும்பெனக்கனன்றுசொன்னாள். (௩௯)

மேருவையுருவல்வேண்டின்விண்பிளந்தேகல்வேண்டின்
நீரெழுபுவனம்யாவுமுற்றுவித்திடுதல்வேண்டின்
‡ ஆரியன்பகழிவல்லதறிந்திருந்தறிவிலாதாய்
சீரியவல்லசொல்லித்தலைபத்துஞ்சிந்துவாயோ. (௪0)

அஞ்சினையாதலானன்றாரியனற்றநோக்கி
மஞ்சனைமானனென்றேவிமாயையான்மறந்துவந்தாய்
உய்ஞ்சனைபோதியாகின்விடுதியுன்குலத்துக்கெல்லாம்
நஞ்சினையெதிர்ந்தபோதுநோக்குமேயினதுநாட்டம். (௪௧)

பத்துளதலையுந்தோளும்பலபலபகழிதூவி
வித்தகவில்வினற்குத்திருவிளையாடற்கேற்ற
சித்திரவிலக்கமாகுமல்லதுசெருவிலேற்கும்
சத்தியைபோலின்மேனள்சடாயுவாற்றரையின்வீழ்ந்தாய். (௪௨)

தோற்றனைபறவைக்கன்றுதுள்ளுநீர்வெள்ளஞ்சென்னி
ஏற்றவன்வாளால்வென்றாயன்றெனினிறத்தியன்றே

---

* கொள்தி-கோடி.

† பரிந்திலள் என்றது—அவள்பேசுகிறது பெண்கள்போலன்று ஆண்கள்போல் பேசுகிறாளென்க, தன்வுயிர்க்குப்பரிந்திலளெனவுமாம். ‡ ஆரியன்-ஸ்ரீராமன்.

நோற்றநோன்புடையவாழ்நாள் வரமிவை நுனித்தவெல்லாம்
கூற்றினுக்கன்றேவீரன்சரத்திற்குங்குறித்ததுண்டோ. (சங)

பெற்றுடைவாளுநாளும்பிறந்துடையுரனும்பின்னும்
மற்றுடையெவையுந்தந்தமலரயன்முதலோர்வார்த்தை
விற்றொடையிராமன்கோத்துவிடுதலும்விலக்குண்டெல்லாம்
இற்றிடைந்திருதன்மெய்யேவிளக்கின்முன்னிருளுண்டாமோ. (சச)

குன்றுநீயெடுத்தநாடன்சேவடிக்கொழுந்தாலுன்னை,
வென்றவன்புரங்கள்வேவத்தனிச்சரந்துரந்தமேரு
என்றுணைக்கணவனாற்றற்குரனிலாதிற்றுவீழ்ந்த
அன்றெழுந்துயர்ந்தவோசைகேட்டிலைபோலுமம்மா. (சரு)

வேறு.

மலையெடுத்தெண்டிசைகாக்குமாக்களை
நிலைகெடுத்தேனெனுமாற்றநேருநீ
சிலையெடுத்திளையவனிற்கச்சேர்ந்திலை
தலையெடுத்தின்னமுமகளிற்றாழ்தியோ. (சசு)

* ஏழைநின்னொளித்துறையின்னதாமென
வாழியெங்கோமகனறியவந்தநாள்
ஆழியுமிலங்கையுமழியத்தாழுமோ
ஊழியுந்தீயுமுன்னியிரொடோயுமே. (சஎ)

வெஞ்சினவரக்கரைவிளித்துவீயுமோ
வஞ்சனைநீசெயவள்ளல்சீற்றத்தால்
எஞ்சவிலுலகெலாமெஞ்சுமெஞ்சுமென்
றஞ்சுகின்றேனிதற்கறனுஞ்சான்றரோ. (சஅ)

அங்கண்மாஞாலமும்விசும்புமஞ்சவாழ்
வெங்கணாய்புன்றொழில்விலக்கிமேற்கொளாய்
செங்கண்மானான்முகன்சிவனென்றேகொலோ
எங்கணாயகனையுநினைந்ததேழைநீ. (சகூ)

மானுயரிவரெனமனக்கொண்டாயெனின்
† கானுயர்வரைநிகர்காத்தவீரியன்
தானொருமனிதனாற்றளர்ந்துளானெனின்
தேனுயர்தெரியலான்றன்மைதேர்தியால். (ருo)

இருவரொன்றிகழ்ந்தனையென்னின்யாண்டெல்லை
ஒருவனன்றேயுலகழிக்குமூழியான்
செருவருங்காலையென்மெய்ம்மைதேர்தியால்
பொருவருந்திருவிழந்தநாயம்பொன்றுவாய். (ருக)

---

* ஏழை ஈண்டு அறிவில்லாதவன், † கானுயர்—காத்தவீரியன்—விருக்ஷசாதிகள் போற் கைகளும் மலைபோற் காத்தவீரியனுமாகக் கொள்க.

பொற்கணன்றம்பியென்றிணையபோர்த்தொழில்
விற்கொணணைபொருவுதோளவுணர்வேறுளார்
நற்கணார்நல்லறந்துறந்தநாளினும்
இற்கணலிறந்திலரிறந்துநீங்கினர். (௫உ)

வேறு.

* பூவிலோனுதியாகப்புலன்கள்போநெறியிற்போகாத்
தேவரோவவுணர்தாமோநிலைநின்றவினையிற்றீர்ந்தார்
ஏவலெவ்வுலகுஞ்செய்யச்செல்வநிற்கிசைந்தவென்றால்
பாவமோமுன்னீசெய்ததருமமோதெரியப்பாராய். (௫௩)

† இப்பெருஞ்செல்வநின்கணீந்தபேரீசன்யாண்டும்
அப்பெருஞ்செல்வர்துய்ப்பானின்றுமாதவத்தினன்றே
ஒப்பருந்திருவுநீங்கியுறவொடுமுலக்கவுன்னித்
தப்புதியறத்தையேழாய்தருமத்தைக்காமியாதே. (௫௪)

மறந்திறம்பாததோலாவலியினரெனினுமாண்டார்
அறந்திறம்பினருமக்கட்கருடிறம்பினருமன்றே
பிறந்திருந்துழலுபாசப்பிணக்குடைப்பிணியிற்றீர்ந்தார்
துறந்தரும்பகைகண்மூன்றுந்துலடத்தவர்பிறர்யார்சொல்லாய். (௫௫)

தென்றமிழுரைத்தோன்முன்னுடைதீர்முனிவர்யாரும்
புன்றொழிலரக்கர்க்காற்றேநோற்கிலம்புகுந்தபோதே
கொன்றருணின்னுலனுகுறைவது ‡ சாதங்கோவே
என்றனர்யானேகேட்டேனீயிதறகியையவசெய்தாய். (௫௬)

உன்னையுங்கேட்டுமற்றுன்னூற்றமுமுடையநாளும்
பின்னையிவ்வரக்கர்சேனைப்பெருமையுமுனிவர்பேணிச்
சொன்னபினுங்கைமூக்குமும்பியர்தோளுந்தாளும்
சின்னபின்னங்கள்செய்தவதனைநீசிந்தியாயோ. (௫௭)

ஆயிரந்தடக்கையானின்னைநான்குகாமும்பற்றி
வாய்வழிகுருதிசோரக்குத்திவான்சிறையில்வைத்த
தூயவன்வயிரத்தோள்கடுணித்தவன்றொலைந்தமாற்றம்
நீயறிந்திலையோவேகுநெறியறிந்திலாதநீசா. (௫அ)

கடிக்கும்வல்லரவுங்கேட்குமந்திரங்களிக்கின்றேயை
அடுக்குமீதடாதென்றுன்றவேதுவோடறிவுகாட்டி
இடிக்குநரில்லையுள்ளாரெண்ணியதெண்ணியுன்னை
முடிக்குநரென்றபோதுமுடிவன்றிமுடிவதுண்டோ. (௫௯)

---

* பூவிலோன் பூவேவீடாகவுடைய பிரமன். † இப்பெருஞ்செல்வநின் கணிந்த தோரீசன் யாண்டுமப்பெருஞ் செல்வந்துய்ப்பானினது மாதவத்தினன்றே எனப்பாடமேதமும் உண்டு. ‡ சாதம்—சத்தியம்.

தாள்களாற்பலர்தடக்கைகளாற்பலர்தாக்கும்
தோள்களாற்பலர்சுடர்விழியாற்பலர்தொடரும்
கோள்களாற்பலர்குத்துகளாற்பலர்தத்தம்
வாள்களாற்பலர்மரங்களினாற்பலர்மடிந்தார். (௩௪)

ஈர்க்கப்பட்டனர்சிலர்சிலரிடிப்புண்டுபட்டார்
பேர்க்கப்பட்டனர்சிலர்சிலர்பிடியுண்டுபட்டார்
ஆர்க்கப்பட்டனர்சிலர்சிலரடியுண்டுபட்டார்
பார்க்கப்பட்டனர்சிலர்சிலர்பயமுண்டுபட்டார். (௩௫)

ஓடிக்கொன்றனன் * சிலவரையுடனுடன்றேறும்
கூடிக்கொன்றனன்சிலவரைக்கொடிநெடுமரத்தால்
சாடிக்கொன்றனன்சிலவரைப்பிணந்தொறுந்தடவி
தேடிக்கொன்றனன்சிலவரைக்கறங்கெனத்திரிவான். (௩௬)

முட்டினார்படமுட்டினான்முறைமுறைமுடுகிக்
கிட்டினார்படக்கிட்டினான்கிரியெனநெருங்கிக்
கட்டினார்படக்கட்டினான்கைகளின்மெய்யின்
தட்டினார்படத்தட்டினான்மலையெனத்தகுவான். (௩௭)

மறக்கினுங்கொல்லுமுனரினுக்கொல்லுமால்விசும்பின்
பறக்கினுங்கொல்லுமபடரினுங்கொல்லுமின்படைக்கை
நிறக்கருங்கழலரக்கர்கணெரிதொறும்பொறிகள்
பிறக்கநின்றெரிபடைகளைத்தடக்கையாற்பியையும். (௩௮)

சேறும்வண்டலுமூளையுநிணமுமாய்த்திண்ணிய
நீறுசேர்நெடுந்தெருவெலாநித்தமாய்நிரம்ப
ஆறுபோல்வருங்குருதியவ்வநுமனலைப்புண்
டூறில்வாய்தொறுமுமிழ்வதேயொத்ததவ்விலங்கை. (௩௯)

கருதுகாலினுங்கையினும்வாலினிற்கட்டிச்
சுருதியேயன்னமாருதிமரத்திடைதுரப்பான்
நிருதரொந்திரத்திடுகரும்பாமெனநெரிவார்
குருதிசாறெனப்பாய்வதுகுரைகடற்கூனில். (௪0)

எடுத்தரக்கரையெறிதலுமவருடலெற்றக்
கொடித்திண்மாளிகையிடிந்தனமண்டபங்குலைந்த
தடக்கையானைகண்மறிந்தனகோபுரந்தகர்ந்த
பிடிக்குலங்களும்புரவியுமவிந்தனபெரிய. (௪௧)

தத்தமாடங்கடம்முடலாற்சிலர்தகர்த்தார்
தத்தமாதரைத்தங்கழலாற்சிலர்சமைத்தார்
தத்தமாக்களைத்தம்படையாற்சிலர்தடிந்தார்
எற்றிமாருதிதடக்கைகளான்விசித்தெறிய. (௪௨)

---

* சிலவரை-சிலரை-

ஆடன்மாக்களிற்றனையவனரக்கியக்கருளி
வீடுநோக்கியேசெல்கென்றுசிலவரைவிட்டான்
கூடினார்க்கவருயிரெனச்சிலவரைக்கொடுத்தான்
ஊடினார்க்கவர்மனைதொறுஞ்சிலவரையுய்த்தான். (௪௩)

தருவெலாமுடறெற்றியெலாமுடல்சதுக்கத்
திருவெலாமுடலுவரியெலாமுடலுள்ளோர்க்
கருவெலாமுடல்காயமெலாமுடலரக்கர்
தெருவெலாமுடறேயமெலாமுடல்சிதறி. (௪௪)

ஊனெலாமுயிர்கவருறுங்காலனேய்ந்துலந்தான்
தானெலாரையுமாருதிசாடுகைதவிரான்
மீனெலாமுயிர்மேகமெலாமுயிர்மேன்மேல்
வானெலாமுயிர்மற்றுமெலாமுயிர்சுற்றி. (௪௫)

ஆகவிச்செறுவிளைவுறுமமைதியினரக்கர்
மோகமுற்றனராமெனமுறைமுறைமுனிந்தார்
மாகமுற்றவுமாதிரமுற்றவும்வளைந்தார்
மேகமொத்தனர்மாருதிவெய்யவனொத்தான். (௪௬)

அடலரக்கருமார்த்தலினலைத்தலினயரப்
புடைபெருத்துயர்பெருமையிற்கருமையிற்பொலிவின்
மிடலயிற்படைமீனெனவிலங்கலிற்கலங்கும்
கடனிகர்த்தனர்மாருதிமந்தரங்கடுத்தான். (௪௭)

கரதலத்தினுங்காலினும்வாலினுங்கதுவ
நிரைமணித்தலைநெரிந்துகச்சாய்ந்துயிர்நீப்பார்
சுரர்நடுக்குறவமுதுகொண்டெழுந்தநாடொடரும்
உரகரொத்தனரநுமனுங்கலுழனையொத்தான். (௪௮)

மானமுற்றதம்பகையினான்முனிவுற்றுவளைந்த
மீனுடைக்கடலுலகினினுளவெலாமிடைந்த
ஊனறக்கொன்றுதுகைக்கவுமொழிவிலாநிருதர்
ஆனையொத்தன * ராளரியொத்தனனநுமன். (௪௯)

எய்தவெற்றினவெறிந்தனவீர்த்தனவிகலின்
பொய்தகுத்தினபொதுத்தனதொளைத்தனபோழ்ந்த
கொய்தசுற்றினபற்றினகுடைந்தனபொலிந்த
அய்யன்மற்பெரும்புயத்தனபுண்ணளப்பரிதாள். (௫௦)

கார்க்கருந்தடங்கடல்கருமழைமுகிற்கண்ணும்
வேர்க்கவெஞ்செருவிளைத்தெழும்வெள்ளெயிற்றரக்கர்
போர்க்குழாம்படிபூசலினையனைப்புகழ்வுற்
றார்க்கும்விண்ணவ † ரமலையேயுயர்ந்ததன்றமரில். (௫௧)

---

* ஆளரி—நரசிங்கம். † அமலை-சத்தம்.

மேவும்வெஞ்சினத்தரக்கர்கண்முறைமுறைவிசையால்
ஏவும்பல்படையெத்தனைகோடிகளெனினும்
தூவுந்தேவருமகளிருமுனிவருஞ்சொரிந்த
பூவும்புண்களுந்தெரிந்திலமாருதிபுயத்தில். (௫௨)

பெயர்க்குஞ்சாரிகைகறங்கெனத்திசைதொறும்பெயர்வின்
உயர்க்கும்விண்மிசையோங்கலின்மண்ணின்வக்துறலின்
அயர்த்துவீழ்ந்தனரழிந்தனராக்கராயுள்ளார்
வெயர்த்திலன்மிசை * யுயிர்த்திலனல்லறைவீரன். (௫௩)

எஞ்சலக்கணத்தறிந்திலமிராவணனேவ
நஞ்சமுண்டவராமெனவநுமன்மேனடந்தார்
துஞ்சினால்லதியாவருமறத்தொடுந்தொலைவுற்
றஞ்சினாரில்லையரக்கரில்வீரர்மற்றியாரோ. (௫௪)

வந்தவிங்கர † ரேயெனுமாத்திரைமடிந்தார்
நந்தவானத்துநாயகரோடினர்நடுங்கிப்
பிந்துகாவினர்கையினர்பெரும்பயம்பிடரின்
உந்தவாயிரம்பிணக்குவைமேல்விழுந்துளைவார். (௫௫)

விரைவினுற்றனர்விம்மலுற்றியாதொன்றும்விளம்பார்
கரதலத்தினுற்பட்டதுங்கட்டுரைக்கின்றார்
தரையினிற்கிலர்திசைதொறுநோக்கினர்சலிப்பார்
அரைசன்மற்றவரலக்கணேயுரைத்திடவறிந்தான். (௫௬)

இறந்துநீங்கினரோவின்றெனுணையையிகழ்ந்து
துறந்துநீங்கினரோவன்றிவெஞ்சமர்தொலைந்தார்
மறந்துநீங்கினரோவென்கொல்வந்ததென்றுரைத்தான்
திறஞ்செருக்குறவாய்தொறுநெருப்புமிழ்கின்றான். (௫௭)

வேறு.

சலந்தலைக்கொண்டனராயதன்மையார்
அலந்திலர்செருக்களத்தஞ்சினாரலர்
புலந்தெரிபொய்க்கரிபுகலும்புன்கணார்
குலங்களினவிந்தனர்குரங்கினாலென்றார். (௫௮)

ஏவலினெய்தினரிருந்தவேண்டிசைத்
தேவரைநோக்கினனுஞ்சிந்தையான்
யாவதென்றறிந்திலிர் ‡ போலுமாலென்றான்
மூவகையுலகையும்விழுங்கமூள்கின்றான். (௫௯)

* உயிர்த்திலன்—மூச்சுவிடுதலுமிலன். † ஏயெனுமாத்திரை-உம்மென்னுமளவில். ‡ போலும்-ஆல், அசைகள்.

மீட்டவருரைத்திலர்பயத்தின்விம்முவார்
தோட்டலரினமலர்த்தொங்கன்மோலியன்
வீட்டியதரக்கரையென்னும்வெவ்வுரை
கேட்டதோகண்டதோகிளத்துவீரென்றான். (சுo)

கண்டனமொருபுடைநின்றுகண்களால்
தெண்டிரைக்கடலெனவளைந்தசேனையை
மண்டலந்திரிந்தொருமரத்தினாலடி
உண்டதக்குரங்கினமொழிவதன்றென்றார். (சுக)

அ - வது - கிங்கரர்வதைப்படலம் - முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-அககசு.)

---

## கூ - வது. சம்புமாலிவதைப்படலம்.

கூம்பினகையனின்றகுன்றெனக்குவவுத்திண்டோட்
பாம்பிவர்தறுகட்சம்புமாலியென்பவனைப்பாரா
வாம்பரித்தானையோடுவளைத்ததன்மறனைமாற்றித்
தாம்பினிற்பற்றித்தந்தென்மனச்சினந்தணித்தியென்றான். (க)

ஆயவன்வணங்கிவீரமளக்கருமளக்கர்முன்னர்
நீயிதுமுடித்தியென்றுநேர்ந்தனைநினைவினெண்ணி
எயினையென்னப்பெற்றாலென்னின்யாருயர்ந்தாரொன்றைப்
போயினனிலங்கைவேந்தன்போர்ச்சினமபோவதொப்பான். (உ)

தன்னுடைத்தானையோடுந்தயமுகன்றருகென்றேய
மன்னுடைச்சேனையோடுந்தாதைவந்தீந்தவாளின்
மின்னுடைப்பரவையோடும் * வேறுளோர்சிறப்பின்விட்ட
பின்னுடையனிகத்தோடும்பெயர்ந்தனன்பெரும்போர்பெற்றான். ()

உருமொத்தமுழக்கிற்செங்கண்வெள்ளெயிற்றோடைநெற்றிப்
பருமித்தகிரியிற்றோன்றும்வேழமும்பதமத்தண்ணல்
நிருமித்தவெழிவிமுற்றிற்றென்னலாநிலையநேமி
சொரிமுத்தமாலைசூழுந்துகிற்கொடித்தடந்தேர்சுற்ற. (ச)

காற்றினைமருங்கிற்கட்டிக்கால்வகுத்துயிருங்கூட்டிக்
கூற்றினையேற்றியன்னகுலப்பரிகுழுவக்குன்றின்
தூற்றினினெழுப்பியாண்டுத்தொகுத்தெனச்சுழல்வைபங்கண்ண
வேற்றினப்புலியேயென்னவியந்தெழும்பதாதியீட்டம். (ரு)

---

* வேறுளோர்-இவனுக்குச்சரியான ராக்ஷஸ ராஜர்கள்.

தோமரமுலக்கைகூர்வாள்சுடர்மழுக்குலிசந்தோட்டி
தாமரந்தின்றகூர்வேறழலொளிவட்டஞ்சாபம
காமர்தண்டெழுக்கள்காந்துங்கற்பணங்காலபாசம்
மாமரம்வலயம்வெங்கோன்முதலியவயங்கமாதோ. (௬)

எத்தியவயில்வேல் * குந்தமெழுக்கழுமுதலவேந்திக்
குத்தியதிளைப்பமீதிறகுழுவினமழைமாக்கொண்டல்
பொத்துகுபொருவினன்னீர்சொரிவனபோவபோலச
சித்திரப்பதாகையீட்டந்திசைதொறுஞ்செறிவசெல்வ. (௭)

பல்லியந்துவைப்பநன்மாப்பணிலங்கண்முரலப்பொன்றேர்ச்
சில்லிகளிடிப்பவாசிசிரித்திடச்செறிபொற்றும்
வில்லுகின்றிசைப்பயானைமுழக்கம்விட்டார்ப்பவிண்டோய்
ஒல்லொலிவானிற்றேவருரைதெரிவொழிக்கமன்னோ, (௮)

மின்னகுகிரிகள்யாவுமேருவின்விளங்கித்தோன்றத்
தொன்னகர்பிறவுமெல்லாம்பொலிந்தனதுறக்கமென்ன
அன்னவன்சேனைசெல்லவார்கலியிலங்கையாய
பொன்னகர்தகர்ந்துபொங்கியார்த்தெழுதூளிபோர்க்க. (௯)

ஆயிரமைந்தொடைந்தாமாழியந்தடந்தேரத்தேர்க்
கேயினவிரட்டியானையானையினிரட்டிபாய்மா
போயினபதாதிசொன்னபுரவியினிரட்டிபோலாம்
தீயவன்றடந்தேர்சுற்றித்தெற்றெனச்சென்றசேனை. (௧0)

வின்மறைக்கிழவர்நானுவிஞ்சையர்வரத்தின்மிக்கார்
வன்மறக்கண்ணராற்றல்வரம்பிலாவயிரத்தோளார்
தொன்மறக்குலத்தர் † தூணிதூக்கியபுறத்தர்மார்பின்
கன்மறைத்தொளிருஞ்செம்பொற்கவசத்தர்கடுந்தோட்கள். (௧௧)

பொருதிசையானையூரும்புனிதனைப்பொருவும்பொற்பர்
சுரிபடைத்தொழிலுமற்றையங்குசத்தொழிலுந்தொக்கார்
நிருதியிற்பிறந்தவீரர்நெருப்பிடைபரப்புங்கண்ணர்
பரிதியிற்பொலியுமெய்யர்படுமதக்களிற்றின்பாகர். (௧௨)

ஏர்கெழுதிசையுஞ்சாரிபதினெட்டுமியல்பினெண்ணிப்
போர்கெழுபடையுங்கற்றவித்தகப்புலவர்போரில்
தேர்கெழுமறவர்யானைச்சேவகர்சிரத்திற்செல்லும்
தார்கெழுபுரவியென்னுந்தம்மனந்தாவப்போனர். (௧௩)

அந்நெடுந்தானைசுற்றவமரரையச்சஞ்சுற்றப்
பொன்னெடுந்தேரிற்போனன்பொருப்பினைநெருப்பிற்பொங்கிற்
தன்னெடுங்கண்கள்காந்தத்தாழ்பெருங்கவசமார்பின்
மின்னிடவெயிலும்வீசவில்லிடுமெயிற்றுவீரன். (௧௪)

* குந்தம்-எறியீட்டி. † தூணி-அம்பறாத்தூணி.

நந்தனவனத்துணின்றநாயகன்றூதன்றானும்
வந்திலரரக்கரென்னுமனத்தினன்வழியைநோக்கிச்
சந்திரன்முதலவானமீனெலாந்தழுவநின்ற
இந்திரதனுவிற்றேன்றுந்தோரணமிவர்ந்துநின்றான். (௧௫)

கேழிருமணியும்பொன்னும்விசும்பிருள்கிழித்துவீங்க
ஊழிருங்கதிர்களோடுந்தோரணத்தும்பர்மேலான்
சூழிருங்கதிர்களெல்லாந்தோற்றிடச்சுடருஞ்சோதி
ஆழியினடுவட்டோன்றுமருக்கனேயனையனானான். (௧௬)

செல்லொடுமேகஞ்சிந்தத்திரைக்கடல்சிலைப்புத்தீரக்
கல்லளைகிடந்தநாகமுயிரொடுவிடமுங்காலக்
கொல்லியலரக்கர்நெஞ்சிற்குடிபுகவச்சம்வீரன்
வில்லெனவிடிக்கவிண்ணோர்நடுக்குறவீரனார்த்தான். (௧௭)

நின்றனதிசைக்கண்வேழநெடுங்களிச்செருக்குநீங்கத்
தென்றிசைநமனுமுள்ளந்துணுக்கெனச்சிந்திவானில்
பொன்றலின்மீன்களெல்லாம்பூவெனவுதிரப்பூவும்
குன்றமும்பிளக்கவேலைதுளக்குறக்கொட்டினானேள். (௧௮)

அவ்வழியரக்கரெல்லாமலைநெடுங்கடலினார்த்தார்
செவ்வழிச்சேறலாற்றூர்பிணைப்பெருங்குன்றந்தெற்றி
வெவ்வழிகுருதிவெள்ளம்புடைமிடைந்துயர்ந்துவீங்க
எவ்வழிச்சேறுமென்றூர்தமருடம்பிடறிவீழ்வார். (௧௯)

ஆண்டுநின்றரக்கன்வெவ்வேறணிவகுத்தனிகந்தன்னை
மூண்டிருபுடையுமுன்னுமுறைமுறைமுசவேவித்
தூண்டினன்றானுந்திண்டேர்த்தோரணத்திருந்ததோன்றல்
வேண்டியதெதிர்ந்தாமென்னவீங்கினன்விசயத்திண்டோள். (௨0)

அய்யனுமமைந்துநின்றானாழியானளவினாமம்
நெய்சுடர்விளக்கிற்றேன்றுநெற்றியேநெற்றியாக
மொய்ம்மயிர்ச்சேனைபொங்கமுரணயிலுகிர்வாண்மொய்த்த
கய்களேகைகளாகக்கடைக்கூழைதிருவாலாக. (௨௧)

வயிர்கள்வால்வளைகள்விம்மவரிசிலைப்பமாயப்
பயிர்களார்ப்பெடுப்பமூரிப்பல்லியங்குமறப்பற்றிச்
செயிர்கொள்வாளரக்கர்சீற்றஞ்செருக்கினர்படைகள்சிந்தி
வெயில்கள்போலொளிகள்வீசவீரன்மேற்கடிதுவிட்டார். (௨௨)

வேறு.

கருங்கடலரக்கர்தம்படைக்கலங்கரத்தால்
பெருங்கடலுறப்புடைத்திறுத்துகப்பிசைந்தான்

விரிந்தனபொறிக்குலநெருப்பெனவெகுண்டாண்
டிருந்தவன்கிடந்ததொரொழுத்தெரிந்தெடுத்தான். (உ௩)

இருந்தனனெழுந்தனனிழிந்தனனுயர்ந்தான்
திரிந்தனன்புரிந்தனனெனனநனிதெரியார்
விரிந்தவர்குவிந்தவர்விலங்கினர்கலந்தார்
பொருந்தினர்நெருங்கினர்களப்படப்புடைத்தான். (உ௪)

* எறிந்தனவெய்தனவிடியுருமேன்மேல்
செறிந்தனபடைக்கலமிடக்கையிற்சிதைத்தான்
முறிந்தனதெறுங்கரிமுடிந்தனதடந்தேர்
மறிந்தனபரிநிரைவலக்கையின்மலேந்தான். (உ௫)

இழந்தனநெடுங்கொடியிழந்தனவிருங்கோ
டிழந்தனநெடுங்கரமிழந்தனவியன்றாள்
இழந்தனமுழங்கொலியிழந்தனமதம்பா
டிழந்தனபெருங்கதமிருங்கவுளியானை. (உ௬)

நெரிந்தனதடஞ்சுவர்நெரிந்தனபெரும்பார்
நெரிந்தனநுகம்புடைநெரிந்தனவதன்கால்
நெரிந்தனகொடிஞ்சில்கணெரிந்தனவியன்றூர்
நெரிந்தனகடும்பரிநெரிந்தனநெடுந்தேர். (உ௭)

ஒடிந்தனவுருண்டனவுலந்தனபுலந்த
இடிந்தனவெரிந்தனநெரிந்தனவெழுந்த
மடிந்தனமறிந்தனமுறிந்தனமலேபோல்
படிந்தனமுடிந்தனகிடந்தனபரிமா. (உ௮)

வெருண்டனர்வியந்தனர்விழுந்தனரெழுந்தார்
மருண்டனர்வயங்கினர்மறிந்தனரிறந்தார்
உருண்டனருலேந்தனருழைத்தனர்பிழைத்தார்
சுருண்டனர்புரண்டனர்தொலேந்தனர்மலேந்தார். (உ௯)

வேறு.

கரிகொடுகரிகளேக்களப்படப்புடைத்தான்
பரிகொடுபரிகளேத்தலத்திடைப்படுத்தான்
வரிசிலேவயவரைவயவரின்மடித்தான்
நிரைமணித்தேர்களேத்தேர்களினிரைத்தான். (௩௦)

மூளேயுமுதிரமுமுழங்கிருங்குழம்பாய்
மீளிருங்குழைபடக்கர்விழுந்தழுந்தத்
தாளொடுந்தலேயுகத்தடநெடுங்கிரிபோல்
தோளொடுநெருதரைவாளொடுந்துகைத்தான். (௩௧)

* எறிந்தன-எறிந்தசஸ்திரங்களும். எய்தன-எய்த அஸ்திரங்களும்.

மல்லொடுமலைமலைத்தோளரைவளைவாய்ப்
பல்லொடுநெடுங்கரப்பகட்டொடும்பருந்தாள்
வில்லொடுமெயிலொடும்வெயிலொடும்விளிக்கும்
சொல்லொடுமுயிரொடுநிலத்தொடுந்துகைத்தான். (௩௨)

* புகைநெடும்பொறிபுகுந்திசைதொறும்பொலிந்தான்
சிகைநெடுஞ்சுடர்விடுந்தேர்தொறுஞ்சென்றான்
தகைநெடுங்கரிதொறும்பரிதொறுஞ்சரித்தான்
நகைநெடும்படைதொறுந்தலைதொறுநடந்தான். (௩௩)

வென்றிவெம்புரவியின்வெரிநினும்வீரவார்
மன்றலந்தாரணிமார்பினுமணித்தேர்
ஒன்றினின்றொன்றினுமுயர்மதமழைதாழ்
குன்றினுங்கடையுகத்துருமெனக்குதித்தான். (௩௪)

பிரிவருமொருபெருங்கோலெனப்பெயரா
இருவினைதுடைத்தவரறிவெனவெவர்க்கும்
வருமுலைவிலைக்கெனமதித்தனர்வழங்கும்
தெரிவையர்மனமெனக்கறங்கெனத்திரிந்தான். (௩௫)

அண்ணலவ்வரியினுக்கடியவரவன்சீர்
நண்ணுவரெனும்பொருணவையறத்தெரிப்பான்
மண்ணினும்விசும்பினுமருங்கினும்வலித்தார்
கண்ணினு † மனத்தினுந்தனித்தனிக்கலந்தான். (௩௬)

கொடித்தடந்தேரொடுங்குரகதக்குழுவை
அடித்தொருதடக்கையினிலத்தினிட்டரைத்தான்
இடித்துநின்றதிர்கதத்தெயிற்றுவன்பொருப்பைப்
பிடித்தொருதடக்கையினுயிருகப்பிழிந்தான். (௩௭)

கறுத்தெழுநிறத்தினவெயிற்றினர்கயிற்றார்
செறுத்தெரிவிழிப்பவர்சிகைக்கழுவலத்தார்
மறுத்தெழுமறலிகளிவரெனவதிந்தார்
ஒறுத்துருத்திரனெனத்தனித்தனியுதைத்தான். (௩௮)

சக்கரந்தோமரமுலக்கைதண்டயில்வாள்
மிக்கெனதேர்பரிகுடைகொடிவிரவி
உக்கனகுருதியம்பெருந்திரையுருட்டிப்
புக்கனகடலிடைநெடுக்கரப்பூட்கை. (௩௯)

---

* புகைநெடும்பொறிபுகுந்திசைதொறுமென்பது-தனக்குக்கோபமூண்டஇடமெல்லாஞ்சென்று விளங்கினானென்க.

† மனத்தினும் யென்பதனால் மனோவேகத்திலும் அதிகமாய்அவ்விடங்களெல்லாம்கலந்தானெனவுமாம்.

எட்டினவிசும்பினை யெழுப்படவெழுந்த
முட்டினமலைகளைமுயங்கின திசையை
ஒட்டினவொன்றையொன்றூட்டித்துதைந்து
தட்டுமுட்டாடின தலையொடு தலைகள். (௬0)

## வேறு.

கானேகாவல்வேழக்கணங்கள்கதவாளரிகொன்ற
வானேயெய்தத்தனியேநின்றமதமால்வரையொப்பான்
தேனேபுரைகண்கனலேசொரியச்சீற்றஞ்செருக்கினான்
தானேயானான்சம்புமாலிகாலன்றன்மையான். (௬௧)

காற்றிற்கடியகலினப்புரவிநிருதர்களத்துக்கார்
ஆற்றுக்குருதிநிணத்தோடடுத்தவள்ளற்பெருங்கொள்ளைச்
சேற்றிற்சொல்லாத்தேரினுழியாழுநிலைதோரா
வீற்றுச்செல்லும்வெளியோவில்லையளியன்விரைகின்றான். (௬௨)

* எதியொன்றூற்றேருமஃதாலெனியோருயிர்கோடல்
நீதியன்றாலுடன்வந்தாலரக்காக்குநிலையில்லாய்
சாதியன்றேறபிறிதென்செய்தியவர்பின்றனிநின்றாய்
போதியென்றான்பூத்தமரம்போற்புண்ணாற்பொலிகின்றான். (௬௩)

நன்றானன்றன்கருணையென்னாநெருப்புநகைக்கான்
பொன்றவாரிநொருவனென்றால்போலுமெனையென்னா
வன்றிண்சிலையின்வயிரக்காலால்வடித்திண்சுடர்வாளி
ஒன்றுபத்துநூறுநூறாயிரமுமுதைப்பித்தான். (௬௪)

செய்திசெய்தீசிலைகைக்கொண்டால்வெறுங்கைதிரிவோரை
நொய்தின்வெல்வதரிதோவென்னாமுறுவலுகநக்கான்
அய்யனங்குமிங்குங்காலாலழியுமழையென்ன
எய்தவெய்தபகழியெல்லாமெழுவால்வழுவித்தான். (௬௫)

முற்றமுனிந்தானிருதன்முனியாமுன்னும்பின்னுஞ்சென்
றுற்றபகழியுறாதுமுறியாவுதிர்கின்றதையுன்னாச்
சுற்றுநெடுந்தேரோட்டித்தொடர்ந்தான்றொடருந்தூறைகாணான்
வெற்றவெழுவைம்முவாயம்பாலறுத்துவீழ்த்தினான். (௬௬)

சலித்தானையன்கையாலெய்யுஞ்சரத்தையுகச்சாடி
ஒலித்தாரமரர்கண்டாரார்ப்பத்தேரினுட்புக்குக்
கலித்தான்சிலையைக்கையால்வாங்கிக்கழுத்தினிடையிட்டு
வலித்தான்பகுவாய்மடித்தமலைபோற்றலைமண்ணிடைவீழ. (௬௭)

---

* எதியொன்றுதேரொன்றென்றதனுலே, ஒரே அடிக்குத்தான்காணும்ஓடிப்போ
வென்றுகருத்து.

குதித்துத்தேருங்கோல்கொள்ளாளும்பரியுங்குழம்பாக
மிதித்துப்பெயர்த்துநெடுந்தோரணத்மைதவீரன்மேற்கொண்டான்
கதித்துப்பழித்துக்கழிந்தார்பெருமைகண்டுகணத்தஞ்சி
உதித்துப்புலர்ந்ததோல்போலுருவத்தமரரோடினர். (சஅ)

பிரிந்துபுலம்புமகளிர்காணக்கணவர்பிணம்பற்றி
விரிந்தகுருதிப்போரறீர்த்துமனைகடொறும்வீச
இரிந்ததிலங்கையெழுந்தழுகையின்றிங்கிவனாலே
சரிந்ததரக்கர்வலியென்றெண்ணியநமுந்தளிர்த்ததால். (சகூ)

புக்காரமரர்பொலந்தாரரக்கன்பொருவில்பெருங்கோயில்
விக்காநின்றார்விளம்பலாற்றார்வெருவிவிம்முவார்
நக்கானரக்கனடுங்கலென்றானையநமெல்லாம்
உக்கார்சம்புமாலியுலந்தானென்றேகுரங்கென்றார். (ரு0)

என்னுமளவினெரிந்துவீங்கியெழுந்தவெகுளியான்
• உன்னவுன்னவுதிரக்குமிழிவிழியூடுமிழ்கின்றான்
சொன்னகுரங்கையானைபிடிப்பன்கடிதுதொடர்ந்தென்று
அன்னதுணர்ந்தசேனைத்தலைவரைவரறிவித்தார். (ருக)

கூ-வது சம்புமாலிவதைப்படலம் - முற்றிற்று.

(ஆ. திருவிருத்தம்-அகூஎ.)

---

## க0-வது. பஞ்சசேனபதிகள் வதைப்படலம்.

* சிலந்தியுண்பதோர்குரங்கின்மேற்சேறியேற்றிறலோய்
கலந்தபோரிடைக்கட்புலன்கடுங்கனல்கதுவ
உலந்தமால்வரையருவியாறொழுக்கற்றவொக்கப்
புலர்ந்தமாமதம்பூக்குமன்றேதிசைப்பூட்கை. (க)

இலங்குவெஞ்சினத்தஞ்சிறையெறுழ்வலிக்கலுழன்
உலங்கின்மேலுருத்தன்னநீகுரங்கின்மேலுருக்கின்
அலங்கன்மாலைநின்புயங்ஙினைந்தலுநன்பகலும்
குலுங்கும்வன்றுயர்நீங்குமால்வெள்ளியங்குன்றம். (உ)

உறுவதென்கொலோவானிழிவென்பதொன்றுடையார்
பெறுவதியாதொன்றுங்காண்கிலர்கேட்கிலர்பெயர்ந்தார்
சிறுமையீதொப்பதியாதுநீகுரங்கின்மேற்சேறின்
முறுவல்பூக்குமன்றேநின்றமூவர்க்குமுகங்கள். (ங)

---

* சிலம்பி-நூல்நூற்கிற ஒருவகைச்சென்து அதை எட்டுக்காற்பூச்சியுமென்பர்.

அன்றியும்முனக்காளின்மைதோன்றுமாலரச
வென்றியில்லவர்மெல்லியோர்தமைச்செலவிட்டாய்
நன்றியின்றொன்றுகாண்டியேலெமைச்செலநயத்தி
என்றுகைதொழுதிறைஞ்சினாரக்கனுமிசைந்தான். (ச)

உலகமூன்றிற்குமுதன்மைபெற்றொரெனவுயர்ந்தார்
திலகமண்ணுறவணங்கினர்கோயிலற்றீர்ந்தார்
அலகிறேர்பரிகரியொடாண்மிடைந்தபேராக்கர்
தொலைவிலாதனகதுமெனவருகெனச்சொன்ஞர். (ரு)

ஆனைமேன்முரசறைந்தனர்வள்ளுவரமைந்தார்
* பேனவேலையிற்புடைபரந்ததுபெருஞ்சேனை
சோனைமாமழைமுகிலெனப்போர்ப்பணைதுவைப்ப
மீனவானிடைமின்னெனப்படைக்கலமிடைந்த. (சு)

தானைமாக்கொடிமழைபொதுத்துயர்நெடுந்தாள
மானமாற்றருதிமுனியநாளுலந்து
போனமாற்றலர்புகழெனக்கால்பொரப்புரண்ட
வானயாற்றுவெண்டிரையெனவரம்பிலபரந்த. (எ)

விரவுபோர்க்கழல்விசித்தினர்வெரிநுற்றுவிளங்கச்
சரமொடேக்கினபுட்டிலுஞ்சாத்தினர்சமையக்
கருவிபுக்கனாரக்கர்மாப்பல்லணங்கவினப்
புரவியிட்டதேர்பூட்டினபருமித்தபூட்கை. (அ)

ஆறுசெய்தனவானையின்மதங்களவ்வாற்றைச்
சேறுசெய்தனதேர்களின்சில்லியச்சேறலை
நீறுசெய்தனபுரவியின்குரமற்றைநீற்றை
வீறுசெய்தனவப்பரிக்கலினமாவிலாழி. (கூ)

வழங்குதேர்களினிப்பொலிவொசியினார்ப்பும்
முழங்குவெங்களிற்றதிர்ச்சியுமொய்கழலொலியும்
தழங்குபல்லியத்தமலையுங்கடையுகத்தாழி
முழங்குமோதையின்மும்மடங்கெழுந்ததுமுடுகி. (கO)

ஆழித்தேர்த்தொகையைம்பதினுயிரமஃதே
சூழிப்பூட்கைக்குத்தொகையவற்றிரட்டியின்றொகைய
ஊழிக்காற்றன்னபுரவிமற்றவற்றினுக்கிரட்டி
பாழித்தோணெடும்படைக்கலப்பதாதியின்பகுதி. (கக)

கூய்த்தருந்தொறுந்தறுந்தொருந்தானைவெங்குழுவின்
நீத்தம்வந்தியங்கிடமிடனின்றிநெருங்கக்
காய்த்தமைந்ததெங்கதிர்ப்படையொன்றொன்றுகதுவித்
தேய்த்தெழுந்தனபொறிக்குலமழைக்குலந்தீய. (கஉ)

* பேனம்—நுரை.

பண்மணிக்குலம்யானையின்புடைதொறும்பரந்த
ஒண்மணிக்குலமழையிடையுருமெனவொலிப்பக்
கண்மணிக்குலங்கனலெனக்காந்துவகதுப்பின்
தண்மணிக்குலமழையெழுகதிரெனத்தழைப்ப. (கங)

தொக்கதாம்படைசுரிகுழன்மடந்தையர்தொடிக்கை
மக்கடாயர்மற்றியாவருந்தடுத்தனர்மறுகி
ஒக்கவேகுதுங்குரங்கினுக்குயிர்தரவொருவர்
புக்குமீண்டிலரென்றழுதிரங்கினர்புலம்பி. (கச)

கய்பரந்தெழுசேனையங்கடலிடைக்கலந்தார்
செய்கைதாம்வருந்தேரிடைக்கதுரெனச்சொல்வார்
மெய்கலந்தமாதிகர்வருமுவமையைவென்றார்
அய்வரும்பெரும்பூதமோரைந்துமொத்தமைந்தார். (கரு)

முந்தியம்பலகறங்கிடமுறைமுறைபொறிகள்
சிந்தியம்புறுகொடுஞ்சிலையுறுமெனத்தெறிப்பார்
வந்தியம்புறுமுனிவர்க்குமமரர்க்கும்வலியர்
இந்தியம்பகையாயவையைந்துமொத்தியைந்தார். (கசு)

வாசவன்வயக்குலிசமும்வருணன்றன்கயிறும்
ஏசின்றென்றிசைக்கிழவன்றனெரிமுளையெழுவும்
ஈசன்வன்றனிச்சூலமுமென்றிவையொன்றும்
ஊசிபோல்வதோர்வடுச்செயாநெடும்புயமுடையார். (கஎ)

சூர்தடிந்தவன்மயிலிடைப்பறித்தவன்றோகை
பார்பயந்தவனன்னத்தினிறகிடைப்பறித்த
மூரிவெஞ்சிறகிடையிட்டுத்தொடுத்தன்முறுக்கி
* வீரசூடிகைநெற்றியினயலிட்டுவிசித்தார். (கஅ)

பொன்றிணிந்ததோளிராவணன்மார்பொடும்பொருத
அன்றிழந்தகோடரிந்திமெழகுறுகுழையர்
நின்றவன்றிசை † நெடுங்களியானையினெற்றி
மின்றிணிந்தனவோடையின்வீரபட்டத்தர். (ககூ)

வேறு.

நிதிநெடுங்கிழவனைநெருக்கிநீணகர்ப்
பதியொடும்பெருந்திருப்பறித்தபண்டைநாள்
விதியொடுமன்னவன்விழுந்துவெந்திடப்
‡ பொதியொடும்வாரிரபொலன்கொள்பூணினார். (உ0)

* வீரசூடிகை-வீரத்தினாலே உச்சிக்கொண்டையிலே சேர்த்துக்கட்டுகிற இறகுகள் மயில்வாலும் அன்னத்திறகுமென்க.

† நெடுங்களி-அதிகமதமயக்கங்கொண்ட திக்கஜங்களென்க.

‡ பொதி-பொதியப்படுதல்.

இந்திரனிசையிழந்தேகுவானிகற்
றந்திமுன்கடாவினன்முடுகத்தாமதன்
மந்தரவாலடிபிடித்துவல்லையேல்
உந்துதியெனவலிந்தவூற்றத்தார். (உ௧)

பாணிறத்தந்தணன்பணியனுகினின்
கோணனைத்துலனெனவுலகங்கூறலும்
நீணிறத்திராவணன்முனிவுநீக்குவான்
காலனைக்காலினிறகையிறகட்டினர். (உ௨)

மலைகளைநகுந்தடமார்பர்மால்கடல்
அலைகளைநகுநெடுந்தோளரந்தகன்
கொலைகளைநகுநெடுங்கொலையர்கொல்லனூ
துலைகளைநகுமனனுமிழுங்கண்ணினர். (உ௩)

தோல்கிளர்திசைதொறுமுலகைச்சுற்றிய
சால்கிளர்முழங்கெரிதழங்கியேறினும்
கால்கிளர்ந்தோங்கினுங்காலங்கையுற
மால்கடல்கிளரினுஞ்சரிக்கும்வண்மையார். (உ௪)

இவ்வகையனைவருமெழுந்தானையர்
மொய்கிளர்தோரணமதனைமுற்றினர்
* கய்யொடுகையுறவணியுங்கட்டினர்
அய்யனுமவர்நிலையமையநோக்கினன். (உ௫)

அரக்கர்தாற்றலுமளவில்சேனையின்
தருக்கமம்மாருதிதனிமைத்தன்மையும்
பொருக்கெனநோக்கியபுரந்தராதியர்
இரக்கமுமவலமுந்துளக்குமெய்தினர். (உ௬)

இற்றனரரக்கரிப்பகலுளேயெனக்
கற்றுணர்மாருதிகளிக்குஞ்சிந்தையான்
முற்றுறச்சுலாவியமுடிவிருனையைச்
சுற்றுறநோக்கித்தன்றோளைநோக்கினன். (உ௭)

புன்றலைக்குரங்கிதுபோலுமாலமர்
வென்றதுவிண்ணவர்புகழைவேரொடும்
தின்றவல்லரக்கரைத்திருகித்தின்றதால்
என்றனரயிர்த்தனர்நிருதரெண்ணிலார். (உ௮)

ஆயிடையநுமனுமமரர்கோனகர்
வாயினின்றவ்வழிகொணர்ந்துவைத்தமாச்
சேயொளித்தோரணத்தும்பர்ச்சேணெடு
மீயுயர்விசும்பையுங்கடக்கவீங்கினன். (உ௯)

* கையொடுகையுறுதல்—வகுப்போடுவகுப்புச்சேர்ந்துநிற்றல்.

வீங்கியவீரனைவியந்துநோக்கிய
தீங்கியலரக்கருந்திருகினார்சினம்
வாங்கியசிலையினர்வழங்கினார்படை
ஏங்கியசங்கினமிடித்தபேரியே. (ந௰)

எறிந்தனரெய்தனரெண்ணிறந்தன
பொறிந்தெழுபடைக்கலமரக்கர்போக்கினார்
செறிந்தனமயிர்ப்புறந்தினவுதீர்வுறச்
சொறிந்தனவெனவிருந்தையன்றாங்கினான். (நக)

உற்றுடன்றரக்கருமுருத்துடற்றினர்
செற்றுறநெருக்கினர்செருக்குஞ்சிந்தையர்
மற்றையர்வரும்பரிசிவரைவல்விரைந்
தெற்றுவனெனவெழுவநுமனேந்தினான். (நஉ)

ஊக்கியபடைகளுமுருத்தவீரரும
தாக்கியபரிகளுந்தடுத்ததேர்களும்
மேக்குயர்கொடியிடைமேகமாலைபோல்
தூக்கியகரிகளும்புரளநூக்கினான். (நந)

வார்மதக்கரிகளின்கோடுவாங்கிமாத்
தேர்படப்புடைக்குமத்தேரின்சில்லியால்
வீரரையுருட்டுமவ்வீரர்வாளினால
தாருடைப்புரவியைத்துணியத்தாக்குமால். (நச)

இரண்டுதேரிரண்டுகைத்தலத்துமேந்திவே
றிரண்டுமால்யானைபட்டுருளவெற்றுமால்
இரண்டுமால்யானைகையிரண்டினேந்திவே
றிரண்டுபாலினும்வரும்பரியையெற்றுமால். (நரு)

மாயிருநெடுவரைவாங்கிமண்ணினிட்
டாயிரந்தேர்படவரைக்குமாலழித்
தாயிரங்களிற்றையோர்மரத்தினாலடித்
தேயெனுமாத்திரையெற்றிமுற்றுமால். (நசா)

உதைக்கும்வெங்கரிகளையுழக்குந்தேர்களை
மிதிக்கும்வன்புரவியைத்தேய்க்கும்வீரரை
மதிக்கும்வல்லெழுவினாலரைக்குமண்ணிடைக்
குதிக்கும்வன்றலையிடைக்கடிக்குங்குத்துமால். (நஎ)

விசையின்மான்றேர்களுங்களிறும்விட்டகன்
றிசையுமாகாயமுஞ்செறியச்சிந்துமால்
குசைகொள்பாய்பரியொடுங்கொற்றவேலொடும்
பிசையுமாலரக்கரைப்பெருங்கரங்களால். (நஅ)

தீயுறுபொறியிடைச்செங்கண்வேங்கைமா
மீயுறத்தடக்கையால்வீரன்வீசுதோ
ருய்பெருங்கொடியனகடலினுழ்வன
பாயுடைநெடுங்கலம்படுவபோன்றவே. (௩௯)

தாரொடுமுருளொடுந்தடக்கையாற்றனி
வீரன்விட்டெறிந்தனகடலின்வீழ்வன
வாரியினெழுஞ்சுடர்க்கடவுள்வானவன்
தேரினைநிகர்த்தனபுரவித்தேர்களே. (௪0)

மீயுறவிண்ணிடைமுட்டிவீழ்வன
வாய்பெருந்திரைக்கடலழுவத்தாழ்வன
ஓய்வனபுரவிவாயுதிரங்கால்வன
வாயிடையெரியுடைவடவைபோன்றவே. (௪௧)

வரிந்துறவல்லிதிற்சுற்றிவாலினல்
விரிந்துறவீசலிற்கடலின்வீழ்குநற்
திரிந்தனர்செறிகயிற்றரவினுற்றிரி
அருந்திரன்மந்தரமனையராயினர் (௪௨)

வீரன்வன்றடக்கையாலெடுத்துவீசிய
வார்மதகரியினிற்றேரின்வாசியின்
மூரிவெங்கடல்புகக்கடிதின்முந்தின
ஊரின்வெங்குருதியாறீர்ப்பவோடின. (௪௩)

பிறக்கடையெயிற்றினபிலத்தின்வாயின
கறைப்புனல்பொறிகளோடுமிழுங்கண்ணின
உறைத்தபுபடையினவுதிர்ந்தயாக்கைகள்
மறைத்தனமகரதோரணத்தைவானுற. (௪௪)

குன்றுளமாமுளகுலங்கொள்பேரெழு
ஒன்றலபலவுளவுயிருண்பானுள
அன்றினர்பலருளரையன்கையுள
பொன்றுவதல்லதுபுறத்துப்போவரோ. (௪௫)

முழுமுதற்கண்ணுதன்மருகன்றாதைகை
மழுவெனப்பொலிந்தோளிர்வயிரவான்றனி
எழுவினிற்பொலங்கழலரக்கரீண்டிய
குழுவினைக்களப்படக்கொன்றுநீக்கினன். (௪௬)

வேறு.

உலந்ததுதானையுவந்தனரும்பர்
அலைந்தலையுற்றதவ்வாழியிலங்கை
கலந்தழுங்குரலின்கடலோதை
வலந்தருதோளவரைவரும்வந்தார். (௪௭)

ஈர்த்தெழுசெம்புனலெக்கரிழுக்கத்
தேர்த்துணையாழியழுந்தினர்சென்றூர்
ஆர்த்தனராயிரமாயிரமம்பால்
தூர்த்தன ரஞ்சனைதோன்றலுநின்றான். (சஅ)

எய்தகடுங்கணையாவையுமெய்தா
னொய்தகலும்படிகைகள்'னூறுப்
பொய்தகடொன்றுபொருந்திநெடுந்தேர்
செய்தகடும்பொறியொன்றுசிதைத்தான். (சகூ)

உற்றுறுதேர்சிதையாமுனுயர்ந்தான்
முற்றினவீரனைவானின்முனிந்தான்
பொற்றிரணீளெழுவொன்றுபொறுத்தான்
எற்றினனஃதவன்வில்லினினேற்றான். (இ0)

முறிந்தது * மூரிவிலம்முறியேகொ
டெறிந்தவரக்கனெர்வெற்பையெடுத்தான்
அறிந்தமனத்தவனவ்வெழுவேகொ
டெறிந்தவரக்கனையின்னுயிருண்டான். (இக)

ஒழிந்தவர்நால்வருமூழியுருத்த
கொழுந்துறுதீயெனவெய்துறகொட்பர்
பொழிந்தனர்வாளிபுகைந்தனகண்கள்
விழுந்தனசோரியவ்வீரன்மணித்தோள். (இஉ)

ஆயிடைவீரனுமுள்ளமழன்றான்
மாயவரக்கர்வலத்தையுணர்ந்தான்
மீயெரியுய்ப்பதொர்கட்செலவிட்டான்
தீயவரச்சிலையைப்பொடிசெய்தார். (இங)

தொடுத்ததொடுத்தசரங்கடொரந்த
அடுத்தகன்மார்பினழுந்தியகன்ற
மிடற்றெழிலான்வியதேரொடுநொய்தின்
எடுத்தொருவன்றனைவிண்ணினெறிந்தான். (இச)

எய்ந்தெழுதேரிமிழ்விண்ணினையெல்லாம்
நீந்தியதோடிநிமிர்ந்ததுவேகம்
ஓய்ந்ததுவீழ்வதன்முன்னுயர்பாரில்
பாய்ந்தவன்மேலுடன்மாருதிபாய்ந்தான். (இரு)

மதித்தகளிற்றினின்வாளரியேறு
கதித்ததுபாய்வதுபோற்கதிகொண்டு
குதித்தனன்மால்வரைமேனிகுழம்ப
மிதித்தனன்வெஞ்சினவீரருள்வீரன். (இசு)

* மூரிவில்—பெரியவில்.

மூண்டசினத்தவர்மூவர்முனிந்தார்
தூண்டியதேரர்சரங்கடரந்தார்
வேண்டியவெஞ்சமம்வேறுவிளைப்பார்
யாண்டினியேகுதியென்றெதிர்சென்றார். (ருஎ)

திரண்டுயர்தோளிணையஞ்சனைசிங்கம்
அரண்டருவிண்ணுறைவார்களுமஞ்ச
முரண்டருதேரவையாண்டொருமூன்றின்
இரண்டெிரண்டுகையிற்கொடெழுந்தான். (ருஅ)

தூங்கியபாய்பரிசூதருலைந்தார்
வீங்கியதோளவர்விண்ணின்விசைத்தார்
ஆங்கதுகண்டவர்போயகலாமுன்
ஓங்கியமாருதியொல்லையினுற்றான். (ருக)

கானிமிர்வெஞ்சிலைகையினிறுத்தான்
ஆனவர்தூணியும்வாளுமகைத்தான்
ஏனையவெம்படையில்லமரெஞ்சார்
வானிடைநின்றுயர்மல்லின்மலைந்தார். (சுo)

வெள்ளையெயிற்றர்கறுத்துயர்மெய்யர்
பிள்ளவிரித்தபிலப்பெருவாயர்
கொள்ளவுருத்தடர் * கோளரவொத்தார்
ஒள்ளிகல்வீரனருக்கனையொத்தான். (சுக)

தாம்பெனவாலின்வரிந்துயர்தாளோ
டேம்பலிலாரிருதோள்களிறுத்தான்
பாம்பெனநீங்கினர்பட்டனர்வீழ்ந்தார்
ஆம்பனெடும்பகைபோல்பவனின்றான். (சுஉ)

நின்றனனேனையனின்றதுகண்டான்
குன்றிடைவாவுறுகோளரிபோல
மின்றிரிவன்றலைமீதுகுதித்தான்
பொன்றியவன்புவிதேரொடுபுக்கான். (சுங)

வேறு.

வஞ்சமுங்களவும்வெஃகிவழியலாவழிமேலோடி
நஞ்சினுங்கொடியராகிநவைசெயற்குரியநீரார்
வெஞ்சினவரக்கரைவரொருவனேவெல்லப்பட்ட
அஞ்செனும்பலன்களொத்தாரவனுநல்லறிவையொத்தான். (சுச)

நெய்தலையுற்றவேற்கைநிருதரைச்செருவினேர்ந்தார்
உய்தலையுற்றுமீண்டாரொருவருமில்லையுள்ளார்

* கோளரவு-இராகுகேதுக்களே.

கய்தலைப்பூசல்பொங்கக்கடுகினர்காலனுட்கும்
அய்வருமுலந்ததன்மையனைவருமமையக்கண்டார். (௫௫)

இறக்குறுமின்னேநம்மைக்குரங்கெனவிரங்கியேங்கி
மறுக்குறுகின்றநெஞ்சின்மாதரைவைதுநோக்கி
உறக்குறுசொல்லருழித்தீயெனவுலகமேழும்
சுறுக்கொளநோக்குவான்றன்செவிததொளைதீயச்சொன்னார். (௫௬)

தானையுமுலந்ததைவர்தலைவருஞ்சமைந்தார்தாக்கப்'
போனபின்மீள்வேம்யாமேயதுவும்போர்புரிகிலாமை
வானையும்வென்றுளோரைவல்லையின்மடியநூறி
ஏனையரின்மைசோம்பியிருந்ததக்குரங்குமென்றார். (௫௭)

**க0 - வது-பஞ்சசேனாபதிகள் வதைப்படலம் - முற்றிற்று.**

(ஆக திருவிருத்தம்-கூ௩ ச.)

---

## கக - வது. அட்சகுமாரன் வதைப்படலம்.

---

கேட்டலும்வெகுளிவெந்தீக்கிளர்ந்தெழுமுயிர்ப்பனுகித்
தோட்டலர்தெரியன்மாலைவண்டொடுஞ்சுறுக்கொண்டேற
ஊட்டரக்குண்டபோலுநயனத்தானொருப்பட்டானைத்
தாட்டுணைதொழுதுமைந்தன்றடுத்திடைதருதியென்றான். (க)

முக்கணனூர்தியன்றேன்மூன்றுலகடியிற்றாயோன்
ஒக்கவூர்பறவையன்றேலவன்றுயிலுரகமன்றேல்
திக்கயமல்லதேற்புன்குரங்கின்மேற்சேறிபோலாம்
இக்கடனடியேற்கீதியிருத்தியீண்டினிதினெந்தாய். (உ)

அண்டர்கோன்றன்னைப்பற்றித்தருகெனுவடியேனிற்கக்
கொண்டனையென்முன்றன்னைப்பணியெனநெஞ்சங்கோடல்
உண்டதுதீருமன்றேயுரனிலாக்குரங்கொன்றேனும்
எண்டிசைவென்றநீயேயேவுதியென்னையென்றான். (௩)

கொய்தளிர்கோதும்வாழ்க்கைக்கோடரத்துருவுகொண்டு
கய்தவமியற்றியீண்டோர்சிறுபழியிழைக்குங்கற்பான்
எய்தினனிமையாமுக்கணீசனேயென்றபோதும்
நொய்தினின்வென்றுபற்றித்தருகுவெனெடியினுன்பால். (ச)

துண்டத்தூணதனிற்றோன்றுங்கோளரிசுடர்வெண்கோட்டு
மண்டொத்தகிமிராண்கேழலாயினுமலைதலாற்றா
தண்டத்தைக்கடந்துபொங்கியப்புறத்தகலினென்பால்
தண்டத்தையிடுதியன்றேநின்வயிற்றந்திலேனால். (௫)

எனவிவையியம்பியீதிவிடையெனவிறைஞ்சிநின்ற
வனைகழல்வயிரத்திண்டோண்மைந்தனை மகிழ்ந்துநோக்கித்
தனைபறித்தேர்மேலேறிச்சேறியென்றினையசொன்னான்
புனைமலர்த்தாரினானும் * போரணியணிந்துபோனான். (சு)

ஏறினனென்பமன்னேவிந்திரனிகலினிட்ட
நூறொடுநூறுபூண்டநொறில்வயப்புரவிநோன்றேர்
கூறினாரக்கராசிகுழுறினமுரசக்கொண்மூ
ஊறினவுரவுத்தானையூழிபேர்கடலையொப்ப. (எ)

பொருகடன்மகரமெண்ணினெண்ணலாம்பூட்கைபொங்கித்
திரிவனமீன்களெண்ணினெண்ணலாஞ்செம்பொற்றிண்டேர்
உருவுறுமணலையெண்ணினெண்ணலாமுரவுத்தானை
வருதிரைமரபினெண்ணினெண்ணலாம்வாவும்வாசி. (அ)

ஆறிரண்டடுத்தவெண்ணினாயிரங்குமராரவி
வேறிலாத்தோழர்வென்றியரக்கர்தம்வேந்தர்மைந்தர்
ஏறியதேரர்சூழ்ந்தாரிறுதியின்யாவுமுண்பான்
சீறியகாலத்தீயின்செறிசுடர்ச்சிகைகளன்னார். (கூ)

மந்திரக்கிழவர்மைந்தர்மதிநெறியமைச்சர்மக்கள்
† தந்திரத்தலைவரீனறதநயர்கள்பிறருந்தாதைக்
கந்தரத்தரம்பைமாரிற்றோன்றினராதியாயோர்
எந்திரத்தேரர்சூழ்ந்தாரீரிரண்டிலக்கம்வீரர். (க0)

தோமரமுலக்கைசூலஞ்சுடர்மழுக்குலிசந்தோட்டி
ஏமருவரிவில்வேல்கோலீட்டிவாளெழுவிட்டேறு
மாமரம்வீசுபாசமெழுமுளைவயிரத்தண்டு
காமருகணையங்குந்தங்கற்பணங்காலநேமி. (கக)

என்றிவைமுதலயாவுமெறிதருபடைகளீண்டி
மின்றிரண்டனையவாகிவெயிலொடுநிலவுவீசத்
துன்றிருந்தூளிபொங்கித்துறுதலாலிறுதிசெல்லாப்
பொன்றிணியுலகமெல்லாம்பூதலமாயமாதோ. (கஉ)

காகமுங்கழுகும்பேயுங்காலனுங்கணக்கில்காலம்
‡ சேகுறவினையிற்செய்ததீமையுந்தொடர்ந்துசெல்லப்
பாகியல்கிளவிச்செவ்வாய்ப்படைவிழிப்பணைத்தவேய்த்தோட்
டோகையர்மனமுந்தொக்கதும்பியுந்தொடர்ந்துசுற்ற. (கந)

உழைக்குலநோக்கினார்களுவந்தவர்க்குரியமாதர்
அழைத்தழுகுரலின்வேலையமலையினரவச்சேனை

* போரணி-யுத்தவேஷம். † தந்திரம்-நண்டு சாம, பேத, தான, தண்டமென சதுர்விதவுபாயம். ‡ சேகுஉற-சஞ்சிதமாயிருக்க.

தழைத்தெழுமொலியினுனைப்பல்லியந்துவைத்தலால்விண்
மழைக்குரலிடியிற்சொன்னமாற்றங்களொழிப்பமன்னோ. (கசு)

வெயிற்கரமணிகள்வீசும்விரிகதிர்விழுங்கவெய்ய
அயிற்கரமணிகள்காலுமவிரொளிடருகவஃகா
எயிற்றிளம்பிறைகளீன்றவிலங்கொளியொதுங்கயாணர்
உயிர்க்குலவிரவுமன்றுபகலன்றென்றுணர்வுதோன்ற. (கரு)

ஓங்கிருந்தடந்தேர்பூண்டவுளவயப்புரவியொல்கித்
தூங்கியவீரத்தோளுங்கண்களுமிடத்துத்துள்ள
வீங்கினமேகமெங்குங்குருதிநீர்த்துள்ளிவீழ்ப்ப
ஏங்கினகாகமார்ப்பவிருளில்விண்ணிடிப்பமாதோ. (கசு)

வெள்ளவெஞ்சேனைசூழவிண்ணுளோர்வெருவிவிம்ம
உள்ளநொந்தனுங்கிவெய்யகூற்றமுமுறுவதுன்னத்
துள்ளியசுழல்கட் * பேயடோள்புடைத்தார்ப்பத்தோன்றும்
கள்ளவிழலங்கலானைக்காற்றின்சேய்வரவுகண்டான். (க௭)

இந்திரசித்தோமற்றவ்விராவணனேயோவென்னுச்
சிந்தையினுவகைகொண்டுமுனிவுற்றகுரக்குச்சீயம்
வந்தனன்முடிந்ததன்றேமனக்கருத்தென்னவாழ்த்திச்
சுந்தரத்தோளைநோக்கியிராமனைத்தொழுதுசொன்னான். (க௮)

எண்ணியவிருவர்தம்முளொருவனல்யான்முன்னேற்ற
புண்ணியமுளதாலெங்கோன்றவத்தொடும்பொருந்தினனே
நண்ணினனனுநின்றேன்காலனுநணுகிநின்றான்
கண்ணியகருமமின்றேமுடிக்குவென்கடிதின்னென்றான். (கக)

பழியிலதுருவென்றாலும்பஃறலையரக்கனல்லன்
விழிகளாயிரமுங்கொண்டவேந்தைவென்றானுமல்லன்
மொழியின்மற்றவர்க்குமேலான்முரட்டொழினமுருகனல்லன்
அழிவிலொண்குமரன்யாரோவஞ்சனக்குன்றமன்னான். (உ0)

என்றவனுவந்துவிண்டோயிந்திரசாபமென்ன
நின்றதோரணத்தினும்பரிருந்ததோர்நீதியானை
வன்றொழிலரக்கனேக்கிவாளெயிறிலங்கநக்கான்
கொன்றதிக்குரங்குபோலாமரக்கர்தங்குழாத்தையென்னு. (உக)

அன்னதாமச்சொற்கேட்டசாரதியையகேண்மோ
இன்னதாமென்னலாமோவுலகியலிகழ்தலம்மா
மன்னனேடெதிர்ந்தவாலிகுரங்கென்றான்மற்றுமுண்டோ
சொன்னதுதுணிவிற்கொண்டுசேறியென்றுணரச்சொன்னான். (உஉ)

---

* பேய்கடோள் எனப் பாடமுமுண்டு.

விடந்திரண்டனையமெய்யானவ்வுரைவியம்பக்கேளா
இடர்புகுந்தினையசெயதவிதனுஞ்சீற்றமெஞ்சத்
தொடாந்துமசென்றுலகமூன்றுந் * துருவினெனுழிவுறாமல்
கடந்துபின்குரங்கென்றுதுங்கருலவையுங்களைவெனென்றான். (உ௩)

ஆர்த்தெழுந்தரக்கர்சேனையஞ்சனைக்குரியகுன்றைப்
போர்த்ததுபொழிந்ததமமாபொருபடைப்பருவமாரி,
வேர்த்தனர்திசைகாப்பாளர்சலித்ததுவிண்ணுமண்ணும்
தார்த் † தனிவீரன்றானுந்தனிமையும்வரமேற்சார்ந்தான். (உ௪)

எறிந்தனநிருதர்வெய்தினெய்தனபடைகள்யாவும்
முறிந்தனவீரன்மேனிமுட்டினமொகரயானை
மறிந்தனமடிந்ததேரும்வாவுமாக்குழுவுமற்றும்
நெறிந்தனவரம்பில்யாக்கையிலங்கைதன்னிலையிற்பேர. (உ௫)

காயெரிமுளிபுற்கானிற்கலந்தெனக்காற்றின்செம்மல்
ஏயெனுமளவிற்கொல்லுநிருதர்க்கோரெல்லையில்லை
போயவருயிரும்போகித்தென்புலம்படர்தல்பொய்யா
தாயிரகோடிதூதருளர்கொலோநமனுக்கம்மா. (உ௬)

வரவுற்றார்வாராநின்றார்வந்தனர்வரம்பில்வெம்போர்
பொரவுற்றபொழுதுவீரன்மும்மடங்காற்றல்பொங்கி
எரியிறபோய்க்கதிரோனூழியிறுதியினெனனலானன்
உரவுத்தோளரக்கரெல்லாமென்பிலாவுயிர்களொத்தார். (உ௭)

வேறு.

பிள்ளப்பட்டனநுதலோடைக்கரிபிறழ்பொற்றேர்பரிபிழையாமல்
அள்ளப்பட்டழிகுருதிப்பொருபுனலாறுகப்படிசேறுக
வள்ளப்பட்டனமகரக்கடலெனமதில்சுற்றியபதிமறலிக்கோர்
கொள்ளைப்பட்டுளவுயிரென்னும்படிகொன்றானைம்புலன்வென்றானே. ()

தேரேபட்டனவென்றார்சிலர்சிலர்தெறுகட்செம்முகவயிரத்தோள்
பேரேபட்டனவென்றார்சிலர்சிலர்பரியேபட்டனபெரிதென்றார்
காரேபட்டனநுதலோடைக்கடகரியேபட்டனகடிதென்றார்
நேரேப்பட்டனர்பட ‡ மாடேதனிநில்லாவுயிரொடுநின்றாரே. (உ௯)

ஆழிப்பொருபடைநிருதப்பெருவலியடலோராய்மகளடுபேழ்வாய்த்
தாழிப்படுதயிரொத்தார்மாருதிதனிமத்தென்பதொர்தகையானன்
ஏழிப்புவனமுமிடைவாழுயிர்களுமெறிவேலிளையவரினமாக
ஊழிப்பெயர்வதொர்புனலொத்தாரனலொத்தான்மாருதமொத்தானே. ()

கொன்றானுடன்வருகுழுவைச்சிலர்பலர்குறைநின்றாருடல்குலைநின்றார்
பின்றாநினரநருதிரப்பெருநதிபெருகாநின்றனபருகாரும்

* துருவுதல்-தேடுதல், † தனி-ஒப்பிலாத, ‡ மாடு-பக்கம்.

நின்றார்நின்றிலர்தனிநின்றானொருநேமித்தேரொடுமவனேரே
சென்றான்வன்றிறலயில்வாயம்புகடெரிகின்றான்விழியெரிகின்றான். (௩௧)

உற்றானிந்திரசித்துக்கிளையவனொருகாலேபலருயிருண்ணக்
கற்றானும்முகமெதிர்வைத்தானதுகண்டார்விண்ணவர் * கசிவுற்றார்
எற்றாமாறுதிசிலையென்பாரினியிமையாவிழியிணையிவையொன்றா
பெற்றாமல்லதுபெற்றாமென்றனர்பிறியாதெதிரெதிர்செறிகின்றார். (௩௨)

எய்தான்வாளிகளெரிவாயுமிழ்வனவீரேழெதிரவைபார்சோரப்
பொய்தான்மணியெழுவொன்றாலன்றதுபொடியாயுதிர்வுறவடிவாளி
வெய்தாயினபலவிட்டான்வீரனும்வேறோர்படையிலன்மாறாவெங்
கய்தானேபொருபடையாகத்தொடர்காலார்தேரதன்மேலானான். (௩௩)

தேரிற்சென்றெதிர்கோல்கொள்வானுயிர்தின்றனப்பொருசெறிதிண்டேர்
பாரிற்சென்றதுபரிபட்டனவவன்வரிவிற்சிந்தியபகழிக்கோல்
மார்பிற்சென்றனசிலபொற்றோளிடைமறைவுற்றனசிலமறவோனும்
நேரிற்சென்றவன்வயிரக்குனிசிலைபற்றிக்கொண்டெதிருறநின்றான். (௩௪)

ஒருகையாலவன்வயிரத்திண்சிலையுற்றுப்பற்றலுமுரவோனும்
இருகையாலிவன்வலியாமுன்னமதிற்றோடியதிவர்பொற்றோளான்
சுரிகையாலவனுருவிக்குத்தலுமதனைச்சொற்கொடுவருதூதன்
பொருகையாலிடைபிதிர்வித்தானமுதிர்பொறியோடும்படிபறியாவே. ()

வாளாலேபொரலுற்றானிற்றதுமண்சேராமுனவ்வயிரத்திண்
தோளாலேபொரமுடுகிப்புக்கிடைதழுவிக்கோடலுமுடன்முற்றும்
நீளாரயிலெனமயிர்தைத்திடமணிநெடுவாலவனுடனிமிர்வுற்று
மீளாவகைபுடைசுற்றிக்கொண்டதுபற்றிக்கொண்டனன்மேலானான். ()

பற்றிக்கொண்டவன்வடிவாளெனவொளிர்பல்லிற்றுகநிமிர்படர்கையால்
எற்றிக்கொண்டலினிடைநின்றுமிழ்சுடரினமின்னினம்விழுவனவென்ன
முற்றிக்குண்டல † முதலாமணியுகமுழைநாலாவிவர்குடர்நாலக்
கொற்றத்திண்சுவல்வயிரக்கைகொடுகுத்திப்புடையொருகுதிகொண்டான்

நீத்தாயோடினவுதிரப்பெருநதிநீராகச்சிலைபாராகப்
போய்த்தாழ்செறிதசையரிசித்தினபடிபொங்கப்பொருமுயிர்போகாமுன்
மீத்தாநிமிர்சுடர்வயிரக்கைகொடுபிடியாவிண்ணொடுமண்காணத்
தேய்த்தானாழியினுலகேழ்தேயினுமொருதன்புக ‡ ழிறைதேயாதான். ()

புண்டாழ்குருதியின்வெள்ளத்துயிர்கொடுபுக்கார்சிலர்சிலர்பொதிபேயின்
பண்டாரத்திடையிட்டார்தம்முடல்பட்டார்சிலர்சிலர்பயமுந்தத்
திண்டாடித்திசைபறியாமறுகினர்செற்றார்சிலர்சிலர்செலவற்றார்
கண்டார்கண்டதொர்திசையேவிசைகொடுகால்விட்டார்படைகைவிட்டார்,

* கசிவுறுதல்-மனமிளகுதல். † முதல்-எழனுருபு. ‡ இறை-கொஞ்சம்.

மீனாய்வேலையையுற்றார்சிலர்சிலர்பசுவாய்வழிதொறுமேய்வுற்றார்
ஊனார்பறவையின்வடிவுற்றார்சிலர்சிலர்நான்மறையவருருவானார்
மானார்கண்ணிளமடவாராயினர்முன்னேதங்குழல்வகிர்வுற்றார்
ஆனார்சிலர்சிலரையாநின்சரணென்றார்நின்றவரரியென்றார். (௪௦)

நந்தாமுழுமுதுகிளையுந்தமையெதிர்சருவுந்தொறுநுமசமரல்லேம்
வந்தேம்வானவரென்றேகினர்சிலர்சிலர்மானுயரெனவாய்விட்டார்
மந்தாரங்கிளர்பொழில்வாய்வண்டுகளானார்சிலர்சிலர்மருள்கொண்டார்
இந்தாரெயிறுகளிறுவித்தார்சிலரெரிபோற்குஞ்சியையிருள்வித்தார். (௪௧)

வேறு.

குண்டலக்குழைமுசக்குங்குமக்கொங்கையர்
வண்டலைத்தெழு * குழற்கற்றைகால்வருடவாய்
விண்டலத்தகவிரைக்குமுதவாய்விரிதலால்
அண்டமுற்றுளதவூரழுதபேரமலையே. (௪௨)

கதிரெழுந்தனையசெந்திருமுகக்கணவன்மா
டெதிரெழுந்தடிவிழுந்தழுதுசோரிளநலார்
அதிநலங்கோதைசேரோதியோடன்றவூர்
உதிரமுந்தெரிகிலாதிடைபரந்தொழுகியே. (௪௩)

தாவில்வெஞ்செருநிலத்திடையுலர்ந்தவர்தமேல்
ஓவியம்புரைநலார்விழுதொறுஞ்சிலருயிர்த்
தேவுகண்களுமிமைத்திலர்களாமிதுவெலாம்
ஆவியொன்றுடலிரண்டாயதாலேகொலாம். (௪௪)

ஓடினாயிர்களுடல்கள்போலுதவியால்
வீடினார்வீடினார்மிடலுடற்குவைகள்வாய்
நாடினார்மடநலார்நவையிலாநண்பரைக்
கூடினாருடினாரும்பர்வாழ்கொம்பனார். (௪௫)

தீட்டுவாளனையகட்டெரிவையோர்திருவனான்
ஆட்டிநின்றயர்வதோரறுதலைக்குறையினைக்
கூட்டிநீயோருயிர்த்துணைவனெங்கோவினைக்
காட்டுவாயாதியென்றழுதுகைகூப்பினாள். (௪௬)

ஏந்தினாடலையையோரெழுதருங்கொம்பனாள்
காந்தனின்றுவானுயர்கவந்தத்தினை
வேந்தனீயலசினாயவிடுதியானடமெனப்
பூந்தளிர்க்கைகளான்மெய்யுறப்புல்லினாள். (௪௭)

---

* குழற்கற்றைகால்வருடலாவது தலைமயிரவிழ்ந்து காலளவுந்தொங்க யுத்தகளத்துக்குவந்து கணவர்மேல் விழுந்தழுகிறார்களெனக்கொள்க, அவ்வூரிலே பெண்களழுத பேரமலையெனவுமாம்.

நாடினார்காடியோ நனைவருங்கொம்பனார்
வாடினார்கணவர்தம்மார்புறத்தழுவியே
வீடினாரவ்வயின்வெருவிவிண்ணவர்கடாம்
ஓடினாரரசன்மாட்டணுகிநின்றுரைசெய்வார். (சஅ)

வேறு.

கயன்மகிழ்கண்ணிணைகலுழிகான்றுகப்
புயன்மகிழ்புரிகுழல்பொடியளாவுற
அயன்மகன்மகன்மகனடியின்வீழ்ந்தனன்
மயன்மகள்வயிறலைத்தலறிமாழ்கினாள். (சக)

தாவருந்திருநகர்த்தையலார்முதல்
ஏவருமிடைவிழுந்திரங்கியேங்கினார்
காவலன்கான்மிசைவிழுந்துகாவன்மாத்
தேவருமழுதனர்களிக்குஞ்சிந்தையார். (ரு௦)

கக-வது அட்சகுமாரன்வதைப்படலம் - முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-கஅச.)

---

## கஉ-வது. பாசப்படலம்.

அவ்வழியவ்வுரைகேட்டவாண்டகை
வெவ்விழியெரியுகவெகுளிவீங்கினான்
எவ்வழியுலகமுங்குலையவிந்திரத்
தெவ்வழிதரவுயர்விசயச்சீர்த்தியான். (க)

அரஞ்சுடர்வேற்றன * தனுசனிற்றசொல்
உரஞ்சுடவெரியுயிர்த்தொருவனேங்கினான்
புரஞ்சுடவரிசிலைப்பொருப்புவாங்கிய
பரஞ்சுடரொருவனைப்பொருவும்பான்மையான். (உ)

ஏறினன்விசும்பினுக்கெல்லைகாட்டுவ
ஆறிருநூறுபேய்பூண்டவாழித்தேர்
கூறினகூறினசொற்கள்கோத்தலால்
பீறினநெடுந்திசைபிளந்தவண்டமே. (ங)

வேறு.

ஆர்த்தனகழலுந் † தாரும்பேரியுமசனியஞ்ச
வேர்த்துயிர்குலையமேனிவெதும்பினனமரர்வேந்தன்
சீர்த்ததுபோருமென்னாத்தேவர்க்குந்தேவராய
மூர்த்திகடாமுந்தத்தம்யோகத்தின்முயற்சிவிட்டார். (ச)

---

* அநுஜன்-தம்பி, † தார்-மாலை. சேனையெனவுமாம்.

தம்பியையுன்னுந்தோறுந்தாரைநீர்ததும்புங்கண்ணன்
வம்பியல்சிலையைநோக்கிவாய்மடித்துருத்துநக்கான்
கொம்பியன்மாயவாழ்க்கைக்குரங்கிநாற்குரங்காவாற்றல்
எம்பியோதேய்ந்தானெந்தைபுகழன்றோதேய்ந்ததென்றான். (ஞ)

வேறிரண்டனவும்வில்லுமிடைந்தவும்வெற்பென்றாலும்
கூறிரண்டாக்கும்வாட்கைக்குழுவையுங்குணிக்கலாற்றேம்
சேறிரண்டருகுசெய்யுஞ்செறிமதச்சிறுகண்யானை
ஆறிரண்டஞ்சுநூற்றினிரட்டிதேர்த்தொகையுமஃதே. (சு)

ஆயமாத்தானைதான்வந்தண்மியதன்மவேனைத்
தீயவாணிருதர்வேந்தர்சேர்ந்தவர்சேரத்தேரின்
ஏயெனுமளவின்வந்தானிராவணனிருந்த * யாணர்
வாயிறோய்கோயில்புக்கானருவிசோர்வயிரக்கண்ணான். (எ)

தாளிணைவிழுந்தான்றம்பிக்கிரங்கினன்றறுகணானும்
தோளிணைபற்றியேந்தித்தழுவினனழுதுசோர்ந்தான்
வாளிணைநெடுங்கண்மாதர்வயிறலைத்தலறிமாழ்க
மீளிபோன்மொய்ம்பினானும்விலக்கினன்விளம்பலுற்றான். (அ)

ஒன்றுநீயுறுதியோராயுற்றிருந்துளையகிற்றி
வன்றிறற்குரங்கினாற்றன்மரபுளியுணர்ந்துமன்னு
சென்றுநீர்பொருதிரென்றுதிறத்திறஞ்செலுத்தித்தேயக்
கொன்றனைநீயேயன்றோவரக்கர்தங்குழுவையென்றான். (கூ)

இங்கரர்சம்புமாலிகேடிலாவைவரென்றிப்
பைங்கழலரக்கரோடுமுடன்சென்றபகுதிச்சேனை
இங்கொருவருமீண்டார்தாமில்லையேற்குரங்கதெந்தாய்
சங்கரனயன்மாலென்பார்தாமெனுந்தகையதாமே. (கய)

திக்கயவலியுமேனுடிரிபுரந்தீயச்செற்ற
முக்கணன்கைலையோடுமூலகொருமூன்றும்வென்றாய்
அக்கனைக்கொன்றுநின்றகுரங்கினையாற்றல்காண்டி
புக்கினிவென்றுமென்றாற்புலம்பன்றிப்புலமைத்தாமோ. (கக)

ஆயினுமையநொய்தினண்டொழிற்குரங்கையானே
ஏயெனுமளவிற்பற்றித்தருகுவெனிடரெண்றொன்றும்
நீயினியுழக்கற்பாலையல்லைநீடிருத்தியென்னாப்
போயினனமரர்கோவைப்புகழொடுகொண்டுபோந்தான். (கஉ)

உடைந்தவலிருணேற்றுப்பலுருக்கொடக்கதிர்க்குழாங்கள்
மிடைந்தனமிலைச்சியாங்குமெய்யணிபலவுமின்னக்
குடைந்துவெம்பகைவருண்றோய்கொற்றப்போர்வாள்வில்வீச
அடைந்தகாரரக்கர்தானையசலிடமிடமின்றென்ன. (கந)

* யாணர் - அழகான.

ஆழியந்தேருமாவுமாக்கருமுருக்குங்செங்கட்
குழிவெங்கோபமாவுந்துவன்றியநிருதர்சேனை
ஊழிவெங்கடலிற்சுற்றவொருதனிநடுவணின்ற
பாழிமாமேருவொத்தான்வீரத்தின்பான்மைதீர்ப்பான். (கச)

சென்றனனென்பமன்னேதிசைகளோடுலகமெல்லாம்
வென்றவனிவனென்ருலுமவீரத்தநின்றவீரன்
அன்றதுகண்டவாழியநுமனையமரிறைற்றல்
நன்றெனவுவகைகொண்டான்யாவருநடுக்கமுற்ருர். (கரு)

இலைகுலாம்பூணினைனுமிரும்பிணக்குருதியீரத்
தலகில்வெம்படைகடெற்றியளவிடற்கரியவாகி
மலைகளுங்கடலும்யாறுங்காணமும்பெற்றுமற்ருேர்
உலகமேயொத்ததம்மாபோர்ப்பெருங்களமென்றுன்ற. (கசு)

வெப்படைகில்லாநெஞ்சிற்சிறியதோர்விம்மல்கொண்டான்
அப்படைவேலையன்னபெருமையாராற்றலோடும்
ஒப்படைகில்லாரெல்லாமுலந்தனர்குரங்குமொன்றே
எப்படைகொண்டுவெல்வதிராமன்வந்தெதிர்க்கினென்றுன். (கஎ)

கண்ணனுருயிரேயொப்பார்கைப்படைக்கலத்திற்காப்பார்
எண்ணலாந்தகைமையில்லாரிறந்திடைக்கிடந்தார்தம்மை
மண்ணுளேநோக்கிநின்றுவாய்மடித்துருத்துமாயாப்
புண்ணுளேகோலிட்டன்னமானத்தாற்புழுங்குகின்றுன். (கஅ)

கானிடையத்தைக்குற்றகுற்றமுங்கரனூர்பாடும்
யானுடையெம்பிவீந்தவிடுக்கணும்பிறவுமெல்லாம்
மானுடரிருவரானும்வானரமொன்றினுனும்
ஆனிடத்துளவெவ்வீரமழகிற்றேயம்மவென்றுவி. (கக)

நீப்புண்டருயிரவாகிநெருப்புண்டநிறத்திற்றேன்றி
ஈப்புண்டற்கரியவாயபிணக்குவடிடறச்செல்வான்
தேய்ப்புண்டதம்பியாக்கைசிவப்புண்டகண்கடையில்
காய்ப்புண்டசெம்பிற்றேன்றக்கறுப்புண்டமனத்தன்கண்டான். (உ0)

தாருகன்குருதியன்னகுருதியிற்றனிமாச்சீயம்
கூருகிர்கிளைத்தகொற்றக்கனகன்மெய்க்குழம்பிற்றேன்றத்
தேருகக்கையின்வீரச்சிலையுகவயிரச்செங்கண்
நீருகக்குருதிசிந்தநெருப்புகவயிர்த்துநின்றுன். (உக)

வெவ்விலையயில்வேலுந்தைவெம்மையைக்கருதிநோக்கி
வவ்வுதல்கூற்றுமாற்றுன்மாறுமாறுலகின்வாழ்வார்
அவ்வுலகத்துளாருமஞ்சுவரொளிக்கவையா
எவ்வுலகத்தையுற்றுயெம்மைநீத்தெளிதினெந்தாய். (உஉ)

ஆற்றலனனையனுகியறிவழிந்தயரும்வேலை
சீற்றமென்ருன்றுதானேமேனிமிர்செலவிற்ருகித்
தோற்றியதுன்பநோயையுள்ளுறத்துரந்ததம்மா
ஏற்றஞ்சாலாணியாணியெதிர்செலக்கடாயதென்ன. (உ௩)

வேறு.

ஈண்டிவைநிகழ்வுளியிரவிதேரெனத்
தூண்டுறுதேரின்மேற்ருேன்றுந்தோன்றலை
மூண்டுமுப்புரஞ்சுடமுடுகுமீசனின்
ஆண்டகைவளைகழலநுமனேக்கினுன். (உ௪)

வேறு.

வென்றேனிதன்முன்சிலவீரரையென்னும்வெம்மை
அன்றேமுடுகிக்கடிதெய்தவழைத்ததம்மா
ஒன்றேயினிவெல்லுதலோற்பதடுத்ததுள்ளத்
தின்றேசமையுமிவனிந்திரசித்துவென்பான். (உ௫)

* கட்டேறுநறுங்கமழ்கண்ணியிக்காளையென்கைப்
பட்டாலதுவேயவிராவணன்பாடுமாகும்
கெட்டோமெனவெண்ணியக்கேடருங்கற்பினளை
† விட்டேகுமதன்றியரக்கரும்வெம்மைதீர்வார். (உ௬)

ஒன்ருேவிதனுன்வருமூதியமொண்மையானைக்
கொன்றேனெனிவிந்திரனுந்துயர்க்கோளுநீங்கும்
இன்றேகடிகெட்டதரக்கரிலங்கையானே
வென்றேனவிராவணன்றன்னையும்வேரொடென்ருன். (உ௭)

அக்காலையரக்கருமானையுந்தேருமாவும்
முக்காலுலகம்மொருமூன்றையும்வென்றுமுற்றிப்
புக்கானின்முன்புக்குயர்பூசல்பெருக்கும்வேலை
மிக்கானும்வெகுண்டோர்மராமரங்கொண்டுமிக்கான். (உ௮)

வேறு.

உதைப்புண்டனயானையுருண்டனயானையொன்ருே
மிதிப்புண்டனயானைவிழுந்தனயானைமேன்மேல்
புதைப்புண்டனயானைபுரண்டனயானைபோரால்
வதைப்புண்டனயானைமறிந்தனயானைமண்மேல். (உ௯)

வேறு.

முடிந்ததேர்க்குலமுறிந்தனதேர்க்குலமுரணிற்
றிடிந்ததேர்க்குலமிற்றனதேர்க்குலமச்சிற்
றொடிந்ததேர்க்குலமுக்கனதேர்க்குலநெக்குப்
படிந்ததேர்க்குலம்பறிந்தனதேர்க்குலம்படியில். (௩௦)

* கட்டேறுநறுங்கமழ்-நறுங்கள்-தேறு-தெளிவு-கமழென்பதுமாம்,
† விட்டேகும்-விட்டுப்போவான்.

சிரனெரிந்தவுங்கண்மணிசிதைந்தவுஞ்செறிதாட்
டரனெரிந்தவுமுதுகிறச்சாய்ந்தவுந்தார்ப்பூண்
உரனெரிந்தவுமுதிரங்களுமிழ்ந்தவுமொண்பொற்
குரனெரிந்தவுங்கொழுங்கழுத்திழந்தவுங்குதிரை. (ருக)

பிடியுண்டார்களும்பிளத்தலுண்டார்களும்பெருந்தோள்
ஒடியுண்டார்களுந்தலையுடைந்தார்களுமுருவக்
கடியுண்டார்களுங்கழுத்திரந்தார்களுங்கரத்தால்
அடியுண்டார்களுமச்சமுண்டார்களுமரக்கர். (ருஉ)

வட்டவெஞ்சிலையோட்டியவாளியும்வயவர்
விட்டவிட்டவெம்படைகளும்வீரன்மேல்வீழ்ந்த
சுட்டவல்லிரும்படைகளைச்சுடுகலாதனபோல்
பட்டபட்டனதிசையொடும்பொறியொடும்பறந்த. (ருந)

சிகையெழுஞ்சுடர்வாளிகளிந்திரசித்து
மிகையெழுஞ்சினத்தநுமன்மேல்விட்டனவெந்து
புகையெழுந்தனவெரிந்தனகரிந்தனபோக
நகையிழந்தனவழிந்தனவானுளோர்நாட்டம். (ருச)

தேரும்யானையும்புரவியுமரக்கருஞ்சிந்திப்
பாரின்வீழ்தலுந்தானொருதனிநின்றபணைத்தோள்
வீரவீரனுமுறுவலும்வெகுளியும்வீங்க
வாரும்வாருமென்றழைக்கின்றவநுமன்மேல்வந்தான். (ருரு)

புரந்தரன்றலைபொதிரெறிந்திடப்புயல்வானில்
பரந்தபல்லுருமேற்றினம்வெறித்துயிர்பதைப்ப
* நிரந்தரந்தலைநெடுநிலஞ்சுமந்தபேருரகன்
சிரந்துளங்கிடவரக்கன்வெஞ்சிலையைநாணெறித்தான். (ருசு)

ஆண்டநாயகன்றூதனுமயனுடையண்டம்
கீண்டதாமெனக்கிரியுகநெடுநிலங்கிழிய
நீண்டமாதிரம்வெடிபடவவனெடுஞ்சிலையில்
பூண்டநாணிறத்தன்னெழிற்றோள்களைப்புடைத்தான். (ருஎ)

நல்லைநல்லையிஞ்ஞாலத்துநின்னொக்கநல்லார்
இல்லையில்லையாலெறுழ்வலிக்கியாரொடுமிகல
வல்லைவல்லையின்றுகுநீபடைத்துளவாழ்நாட்
கெல்லையெல்லையென்றிந்திரசித்துவுமிசைத்தான். (ருஅ)

நாளுக்கெல்லையுநிருதராயுலகத்தைநலியும்
† கோளுக்கெல்லையுங்கொடுந்தொழிற்கெல்லையுங்கொடியீர்
வாளுக்கெல்லையும்வந்தனவகைகொண்டுவந்தேன்
தோளுக்கெல்லையொன்றில்லையென்றநுமனுஞ்சொன்னான். (ருகூ)

* நிரந்தரம்-எப்போதும். † கோளுக்கு-கொள்கைக்கு.

இச்சிரத்தையைத்தொலைம்பெனென்றிந்திரன்பகைஞன்
பச்சிரத்தவந்தொழுகிடவானவர்பதைப்ப
வச்சிரத்தனும்வலியனவயிரவான்கணைகள்
அச்சிரத்தினுமார்பினுமழுத்தலுமநுமன், (௪0)

குறிதுவானென்றுகுறைந்திலனெஞ்சினங்கொண்டான்
மறியும்வெண்டிரைமாகடலுலகெலாமவழங்கிச்
சிறியதாய்சொன்னதிருமொழிசென்னியிற்சூடி
நெறியினின்றதன்னுயகன்புகழெனநிமிர்ந்தான். (௪க)

பாகமல்லதுகண்டிலனநுமனைப்பார்த்தான்
மாகவன்றிசைபத்தொடும்வரம்பிலாவுலகிற்
கேகநாதனையெறும்வலித்தோள்பிடித்தீர்த்த
மேகநாதனுமயங்கினனுமெனவியந்தான். (௪உ)

நீண்டவீரனுநெடுந்தடக்கைகளைநீட்டி
ஈண்டுவெஞ்சரமெய்தனவெய்திடாவண்ணம்
மீண்டுபோய்விழவீசியாங்கவன்மிடற்றடந்தேர்
பூண்டமாவொடுசாரதிதரைப்படப் * புடைத்தான். (௪௩)

ஊழிக்காற்றன்னவொருபரித்தேரவனுதவப்
பாழித்தோளவனத்தடந்தேர்மிசைப்பாய்ந்தான்
ஆழிப்பல்படையனையனவளப்பருஞ்சரத்தால்
வாழிப்போர்வலிமாருதிமேனியைமறைத்தான். (௪௪)

உற்றவாளிகளுரத்தடங்கினவுகவுதருக்
கொற்றமாருதியனையவன்றேர்மிசைகுதித்துப்
பற்றிவன்கையாற்பறித்தெழுந்துலகெலாம்பலகால்
முற்றவென்றபோர்மூரிவெஞ்சிலையினைமுறித்தான். (௪௫)

முறிந்தவில்லின்வல்லோசைபோய்முடிவதன்முன்னர்
மறிந்துபோரிடைவழிக்கொள்வான்வயிரவாட்படையால்
செறிந்தவான்பெருமலைகளைச்சிறகறச்செயிரா
எறிந்தவிந்திரனிட்டவார்சிலையினையெடுத்தான். (௪௬)

நூறுநூறுபோர்வாளியோர்தொடைகொடுநொய்தின்
மாறில்வெஞ்சினத்திராவணன்மகன்சிலை † வளைத்தான்
ஊறுதன்னெடுமேனியிற்பலபடவொல்கி
ஏறுசேவகன்றூதனுஞ்சிறிதுபோதிருந்தான் (௪௭)

ஆர்த்தவானவராவலங்கொளீஇயறிவழிந்தார்
பார்த்தமாருதிதாருவொன்றங்கையிற்பற்றித்
தூர்த்தவாளிகண்முறைமுறைதுணிபடச்சுற்றிப்
போர்த்தபொன்னெடுமணிமுடித்தலையிடைப்புடைத்தான். (௪அ)

---

* புடைத்தானென்றும்பாடம். †வளைத்தானென்பதை வளைத்தெய்தானெனக்கூட்டுக

பாரமாமரமுடியுடைத்தலையிடைப்படலும்
தாரையின்னெடுங்கற்றைகள்சொரிவன தயங்க
ஆரமால்வரையருவியினழிகொழுங்குருதி
சோரநின்றடருளங்கினனமரரைத்தொலைத்தான். (௪௯)

நின்றுபோதம்வந்துறதலுநிறைபிறையெயிற்றைத்
தின்றுதேவருமுனிவருமவுணருந்திகைப்பக்
குன்றுபோனெடுமாருதியாகமுங்குலுங்க
ஒன்றுபோல்வனவாயிரம்பகழிகோத்துய்த்தான். (௫௦)

உய்த்தவெஞ்சரமுரத்தினுங்கரத்தினுமொளிப்பக்
கய்த்தசிந்தையன்மாருதிநனிதவகனன்றான்
வித்தகன்சிலைவிடுகணைவிசையினுங்கடுகி
அத்தடம்பெருந்தேரொடுமெடுத்தெறிந்தார்த்தான். (௫௧)

கண்ணின்மீச்சென்றவிமையிடை * கலப்பதன்முன்னே
எண்ணின்மீச்சென்றவெறுழ்வலித்திறலுடையிகலோன்
புண்ணின்மீச்சென்றுபொழிபுனல்பசும்புலால்பொடிப்ப
விண்ணின்மீச்சென்றுதேரொடும்பார்மிசைவீழ்ந்தான். (௫௨)

விழுந்தபாரடையாமுனமின்னெனுமெயிற்றான்
எழுந்துமாவிசும்பெய்தினனிடையவன்படையில்
செழுந்தண்மாமணித்தேர்க்குலம்யாவையுஞ்சிதைய
உழுந்துபேர்வதன்முன்னெடுமாருதியுதைத்தான். (௫௩)

ஏறுதேரிலனெதிர்நிற்குமாணிலனெரியின்
சீறுவெஞ்சினந்திருகுகின்றான்றிரிவானும்
வேறுசெய்வதோர்வினைபிறிதின்மையின்விரிஞ்சன்
மாறிலாப்பெரும்படைக்கலந்தொடுப்பதாய்மதித்தான். (௫௪)

பூவும்பூசிற † வயினியுந்தீபமும்புகையும்
தாவில்பாவனையாற்கொடுத்தருச்சனைசமைத்தான்
தேவியாவையுமுலகமுந்திருத்தியதெய்வக்
கோவினான்முகன்படைக்கலந்தடச்கையிற்கொண்டான். (௫௫)

கொண்டகொற்றவெஞ்சிலை ‡ நெடுநாணொடுகூட்டிச்
சண்டவேகத்தமாருதிதோளொடுஞ்சாத்தி
மண்டுளங்கிடமாதிரந்துளங்கிடமதிதோய்
விண்டுளங்கிடமேருவுந்துளங்கிடவிட்டான். (௫௬)

தணிப்பரும்பெரும்படைக்கலந்தழலுமிழ்தறுகட்
பணிக்குலங்களுக்கரசினதுருவினைப்பற்றித்

---

* கலப்பதன்முன்னே-கூடுவதன்முன்னே என்றால் இமைக்குமுன்னே.
† அயினியும்-பிரசாதவெண்சோறும்; ‡ நெடுநாண்-நீண்டநாரி.

துணுக்கமுற்றுயர்கலுழனுகெக்குறச்சுற்றிப்
பிணித்ததப்பெருமாருதிதோள்களைப்பிறங்க. (ருஎ)

திண்ணென்யாக்கையைத்திசைமுகன்படைசென்றுதிருக
அண்ணன்மாருதியன்றுதன்பின்சென்றவறத்தின்
கண்ணினீரொடுங்கனகதோரணத்தொடுங்கடைநாள்
தண்ணென்மாமதிகோளொடுஞ்சாய்ந்தெனச்சாய்ந்தான். (ரு௮)

சாய்ந்தமாருதிசதுமுகன்படையெனுந்தன்மை
ஆய்ந்துமற்றிதனுணையயவமதித்தகறல்
ஏய்ந்ததன்றெனவெண்ணினன்கண்முகிழ்த்திருந்தான்
ஓய்ந்ததாமிவன்வலியெனவரக்கன்வர்துற்றான். (ருக)

உற்றகாலையினுயிர்கொடுதிசைதொறுமொதுங்கி
அற்றநோக்கினர்நிற்கின்றவாளெயிற்றரக்கர்
சுற்றும்வந்துடல்சுற்றியதொளையெயிற்றரவைப்
பற்றியீர்த்தனரார்த்தனர்தெழித்தனர்பலரால். (சு௦)

குரக்குநல்வலங்குறைந்ததென்றுவலங்கொட்டி
இரைக்குமாநகரெறிகடலொத்ததெம்மருங்கும்
திரைக்குமாசுணம்வாசுகியொத்ததுதேவர்
அரக்கரொத்தனர்மந்தரமொத்தனனநுமன். (சுக)

கறுத்தமாசுணங்கனகமாமேனியைக்கட்ட
அறத்துக்காங்கொருதனித்துணையாநின்றவநுமன்
மறத்துமாருதம்பொருதநாள்வாளராவரசு
புறத்துச்சுற்றியமேருமால்வரையையும்போன்றான். (சுஉ)

வந்திரைத்தனர்மைந்தருமகளிருமழைபோல்
* அந்தரத்தினும்விசும்பினுந்திசைதொறுமார்ப்பார்
முந்தியுற்றதோருவகைக்கோர்கரையிலைமொழியின்
இந்திரன்பிணிப்புண்டநாளொத்ததவ்விலங்கை. (சுங)

கஉ-வது-பாசப்படலம்-முற்றிற்று.

(ஆ_ திருவிருத்தம்-க௦சஎ.)



---

* அந்தரத்தினும் விசும்பினும்—அவ்விடத்தினும் ஆகாசத்தினும்.

## கரு-வது பிணிவீட்டுப்படலம்.

அனுமானைக்கட்டினதுவிடுதல்.

வேறு.

எய்யுமீனீருமின்னெறிமின்போழுமின்
கொய்யுமின்குடர்களைக்கூறுகூறுகள்
சொய்யுமினுலகிடைத்தேய்மின்றின்னுமின்
உய்யுமேலில்லைநம்முயிரென்றோடுவார். (க)

மைத்தடங்கண்ணியர்மைந்தர்யாவரும்
பைத்தலையரவெனக்கனன்றுபைதலை
இத்தனைபொழுதுகொண்டிருப்பதோவெனு
மொய்த்தனர்கொலைசெயமுயல்கின்றார்சிலர். (உ)

நச்சடைபடைகளானவியுமீட்டதோ
வச்சிரமுடன்மறிசடலின்வாய்மடுத்
துச்சியினழுத்துகுனுருத்ததென்றெனின்
இச்சிடையிடுமெனக்கிளக்கின்றார்சிலர். (௩)

எந்தையையெம்பியையெம்முன்னோர்களைத்
தந்தனைபோகெனத்தடுக்கின்றார்பலர்
அந்தரத்தமரர்தமாணையாலிவன்
வந்ததென்றுயிர்கொளமறுகினார்பலர். (௪)

ஓங்கலம்பெருவலியுயிரினன்பமை
நீங்கலமின்றொடுநீங்கினுமினி
எங்கலமிவன்சிரத்திருந்தலாற்றிரு
வாங்கலமென்றழுமாதரார்பலர். (௫)

கொண்டனவெதிர்செலுங்கொற்றமாநகர்
அண்டமுற்றதுநெடிதார்க்குமாறப்பது
கண்டமுற்றுளவருங்கணவர்க்கேங்கிய
குண்டலமுகத்தியர்க்குவகைகூறவே. (௬).

வடிவுடைக்கனற்படைவயவர்மால்கரி
கொடியுடைத்தேர்பரிகொண்டுவீசலின்
இடிபடச்சிதைந்தமால்வரையினில்லெலாம்
பொடிபடக்கிடந்தனகண்டுபோயினான். (௭)

* முயிறலைத்தெழுமுதுமரத்தின்மொய்ம்புதோள்
கயிறலைப்புண்டதுகண்டுகாண்கிலா

* முயிறு—ஒருவகைச்செவ்வெறும்புகள்.

17

தெயிறலைத்தெழுமிதழரக்கரேழையர்
வயிறலைத்திரியலின்மயங்கினார்பலர். (அ)

ஆர்ப்புறவஞ்சினரடங்கினார்பலர்
போர்ப்புறச்செயலினைப்புகல்கின்றார்பலர்
பார்ப்புறப்பார்ப்புறப்பயத்தினூற்பதைத்
தூர்ப்புறத்திரியலுற்றோடுவோர்பலர். (க)

காந்துறுகதழெயிற்றரவின்கட்டொரு
பூந்துணர்சேர்த்தெனப்பொலியும்வாண்முகம்
தேர்ந்துறுபொருள்பெறவெண்ணிச்செய்யுமின்
வேந்தறல்பழுதெனவிளம்புவார்சிலர். (க0)

ஒளிவருநாகத்துக்கொல்கியன்றுதன்
இளிவரலின்றுபின்னெண்ணம்வேறெனக்
களிவருசிந்தையாற்காண்டிநங்களைச்
சுளிகிலையாமெனத்தொழுகின்றார்சிலர். (கக)

பைங்கழலநுமனைப்பிணித்தபாந்தளைக்
கிங்கரரொருபுடைகிளர்ந்துபற்றினர்
ஐம்பதினாயிரரளவிலாற்றலர்
மொய்ம்பினிவெனறுழ்வலிக் * சருளன்மும்மையார். (கஉ)

திண்டிறலரக்கர்தஞ்செருக்குஞ்சிந்துவான்
தண்டலிறன்னுருக்கரந்ததன்மையான்
மண்டமர்தொடங்கினன்வானரத்துருக்
கொண்டனனந்தகன்கொல்லென்றார்பலர். (கங)

அரமியத்தலந்தொறுமம்பொன்மாளிகைத்
தரமுறுநிலைதொறுஞ் † சாளரந்தொறும்
முரசெறிகடைதொறுமிரைத்துமொய்த்தனர்
நிரைவளைமகளிருநிரைந்தமைந்தரும். (கச)

கயிலையினொருதனிக்கணிச்சிவானவன்
மயிலியற்சீதைதன்கற்பின்மாட்சியான்
எயிலுடைத்திருநகர்சிதைப்பவெய்தினன்
அயிலெயிற்றொருருகுரங்காயென்பார்பலர். (கரு)

அரம்பையர்விஞ்சைநாட்டளகவல்லியர்
நரம்பினுமினியசொனாகநாடியர்
கரும்பியல்சித்தியரியக்கர்கன்னியர்
வரம்பறுசும்மையார்தலைமயங்கினார். (கசு)

---

* சருளன்—கருடன், † சாளரம்—சன்னல்.

நீரிடைக்கண்டுயினெடியநேமியும்
தாருடைத்தனிமலருலகின்றூதையும்
ஒருடர்கொண்டுதம்முருவமாற்றினர்
பாரிடைப்புகுந்தனர்பகைத்தென்பார்பலர். (௧௭)

அரக்கருமரக்கியர்குழாமுமல்லவர்
கரக்கிலாநெடுமழைக்கண்ணினீரது
விரைக்குழற்சீதைதன்மெலிவுநோக்கியோ
இரக்கமோவறத்தினதெண்மையேகொலோ. (௧௮)

ஆண்டொழிலநுமனுமவரோடேகினன்
மீண்டிலன்வேறிலன்விரும்பலுற்றிலன்
ஈண்டிதுவேதொடர்ந்திலங்கைவேந்தனைக்
காண்டலேநலனெனக்கருத்தினெண்ணினன். (௧௯)

எந்தையதருளினுமிராமன்சேவடி
சிந்தைசெய்நலத்தினுஞ்சீதைவானவர்
தந்துளவரத்தினுந்தறுகட்பாசமும்
சிந்துவெனயர்வுறுசிந்தைசீரிதால். (௨௦)

வளையெயிற்றரக்கனையுற்றுமந்திரத்
தளவுறுமுதியருமறியவாணையால்
விளைவினைவிளம்பினன்மிதிலைநாடியை
இளகினனென்வயினீதலேயுமால். (௨௧)

அல்லதூஉமவனுடைத்துணைவராயினர்க்
கெல்லையுந்தெரிவுறுமெண்ணுந்தேறலாம்
வல்லவனிலைமையுமனமுந்தேறலாம்
சொல்லுகமுகமெனுந்தூதுசொல்லவே. (௨௨)

வாலிதன்னிறுதியுமரத்துக்குற்றதும்
கூலவெஞ்சேனையின் * குணிப்பிலாமையும்
மேலவன்காதலன்வலியுமெய்ம்மையான்
நீனிறத்திராவணனெஞ்சினிற்குமால். (௨௩)

ஆதலானரக்கனையெய்தியாற்றலும்
நீதியுமனக்கொளசிறுவிசின்றவும்
பாதியின்மேற்செலநூறிப்பைப்பையப்
போதலேகருமமென்றநுமன்போயினன். (௨௪)

கடவுளர்க்கரசனைக்கடந்ததோன்றலும்
புடைவரும்பெரும்படைப்புணரிபோர்த்தெழ

* குணிப்பிலாமை-அளவிலாமை.

விடைபிணிப்புண்டதுபோலும்வீரனைக்
குடைகெழுமன்னனிற்கொண்டுபோயினன். (உரு)

தூதுவரோடினர்தொழுதுதொல்லைநாள்
மாதிரங்கடந்தவறகுறுங்மன்னநின்
காதலன்மரைமலாககடவுள்வாளியால்
ஏதில்வானரம்பிணிப்புண்டாமென்றார். (உசு)

கேட்டலுங்கிளர்சுடர்செட்டவாளென
வீட்டிருள்விழுங்கியமார்பன்யானையின்
கோட்டெடிர்பெருதபேராரங்கொண்டெதிர்
நீட்டினனுவகையினிமிர்ந்தநெஞ்சினன். (உஎ)

எல்லையிலுவகையாலிவர்ந்ததோளினன்
புல்லுறமலர்ந்தகட்குமுதப்பூவினன்
ஒல்லையினேடிநீருரைத்ததன்றனையால்
கொல்லவிர்தருகெனக்கூறவீரன்றான். (உஅ)

அவ்வுரைதூதருமானையால்வரும்
தெவ்வுரைநீக்கினனறியச்செப்பினர்
இவ்வுரைநிகழ்வுழியிருந்தசீதையாம்
வெவ்வுரைநீங்கினணிலவிளம்புவாம். (உகூ)

இறுத்தனன்கடிபொழிலெண்ணிலோர்பட
ஒறுத்தனனென்றுகொண்டுவக்கின்றாளுயிர்
வெறுத்தனள்சோர்வுறவீரற்குற்றதைக்
கறுத்தலில்சிந்தையாள்கவன்றுகூறினள். (௩0)

வேறு.

ஓவியம்புகையுண்டதுபோலொளிர்
பூவின்மெல்லியன்மேனிபொடியுறப்
பாவிவேடன்கைப்பார்ப்புறப்பேதுறும்
தூவியன்னமன்னளிவைசொல்லினள். (௩க)

உற்றுண்டாயவிசும்பையுருவினாய்
முற்றுண்டாய்கலைபாவையுமுற்றுறக்
கற்றுண்டாயொருகள்ளவரக்கனால்
பற்றுண்டாயிதுவோவறப்பான்மையே. (௩உ)

கடர்கடந்துபுகுந்தனை * கண்டகர்
உடர்கடந்துநின்றூழிகடந்திலை
அடர்கடந்ததிரள்புயத்தைநீ
இடர்கடந்தனைவந்திடர்மேலுமே. (௩௩)

* கண்டகர்-வஞ்சகர்.

ஆழிகாட்டியென்னுருயிர்காட்டினாய்க்
கூழிகாட்டுவேனென்றுரைத்தனது
வாழிகாட்டுமென்றூண்டுன்வரைப்புயப்
பாழிகாட்டியரும்பழிகாட்டினாய். (ஙச)

கண்டுபோயினானீணெறிகாட்டிட
மண்டுபோரினரக்கனைமாய்த்தனைக்
கொண்டுமன்னவன்பாற்றனுங்கொள்கையைத்
* தண்டினாயெனக்காருபிரதந்தநீ. (ஙரு)

ஏயப்பன்னினளினைதன்னுயிர்
தேயக்கன்றுபிடியுறத்தீங்குறு
தாயைப்போலத்தளர்ந்துமபர்ந்தனள்
தீயைச்சுட்டதொர்சற்பெனுந்தீயினாள். (ஙசு)

பெருந்தகைப்பெரியோனைப்பிணித்தபோர்
முருந்தன்மற்றையுலகொருமூன்றையும்
அருந்தவப்பயனாலரசாள்கின்றான்
இருந்தவப்பெருங்கோயில்சென்றெய்தினான். (ஙஎ)

வேறு.

† தலங்கண்மூன்றிற்கும்பிறிதொருமதிதழைத்தென்ன
அலங்கல்வெண்குடைதண்ணிழலவிரொளிபரப்ப
வலங்கொடோளினான்மண்ணின்றுவானுறவெடுத்த
பொலங்கொண்மாமணிவெள்ளியங்குன்றெனப்பொலிய. (ஙஅ)

புள்ளுயர்த்தவன்றிகிரியும்புரந்தரனயிலும்
தள்ளின்முக்கணான் ‡ கணிச்சியிற்றுக்கியதழும்பும்
கள்ளுயிர்க்குமென்குழலியர்முகிழ்விரற்கதிர்வாள்
வள்ளுகிர்ப்பெருங்குறிகளும்புயங்களின்வயங்க. (ஙகூ)

துன்றுசெம்மயிர்ச்சுடர்நெடுங்கற்றைகள்சுற்றி
நின்றுதிக்குறநிரல்படக்கதிர்குழாநிமிர
ஒன்றுசிற்றத்தினுயிர்ப்பெனுமெபருப்புகையுயிர்ப்பத்
தென்றிசைக்குமோர்வடவனறிருத்திபதென்ன. (சo)

மரகதக்கொழுங்கதிரொடுமாணிக்கநெடுவாள்
நரகதேயத்துண்டுக்குறுவிருளையுநக்கச்
சிரமனைத்தையுந்திசைதொறுந்திசைதொறுஞ்செலுத்தி
உரகர்கோனினிதரசுவீற்றிருந்தனனெனப்ப. (சக)

* தண்டினாய்—தடைசெய்தாய்.
† தலங்கண்மூன்று-திரிலோகம், ‡ கணிச்சி-சூலாயுதம்.

குவித்தபன்மணிக்குப்பைகள்கலையொடுங்கொழிப்பச்
சவிச்சுடர்க்கலனணிந்தபொற்றேரொடுதயங்கப்
புவித்தடம்படர்மேருவைப்பொன்முடியென்னக்
கவித்துமாவிருங்கருங்கடலிருந்ததுகடுப்ப. (௪௨)

சிந்துராகத்தின்செறிதுகிற்கச்சொடுசெறியப்
பந்திவெண்முத்தினணிகலன்முழுநிலாப்பரப்ப
இந்துவெண்குடைநீழலிற்றாரகையினம்பூண்
டந்திவானுடுத்தலவீற்றிருந்ததாமென்ன. (௪௩)

வண்மைக்குந்திருமறைகட்கும்வானினும்பெரிய
திண்மைக்குந்தனியுறையுளாமுழுமுதற்றிசையின்
கண்மைக்குந்தொழுங்களிற்றொடுமாதிரங்காக்கும்
எண்மர்க்கும்மற்றை * யிருவர்க்கும்பெரும்பயமியற்ற. (௪௪)

† ஏகநாயகன்றேவியையெதிர்ந்ததற்பின்னை
நாகர்வாழ்விடமுதலெனநான்முகன்வைகும்
மாகமால்விசும்பீறெனநடுவணவளாப்பில்
தோகைமாதர்கண்மைந்தரிற்றோன்றினர்சுற்ற. (௪௫)

வானரங்களும்வானவரிருவருமனிதர்
ஆனபுன்றொழிலோரெனவிகழ்கின்றவவரும்
ஏனைநின்றவரிருடியர்சிலரொழிந்தியாரும்
தானவின்றவேலரக்கர்தங்குழுவொடுஞ்சுற்ற. (௪௬)

நரம்புகண்ணகத்துள்ளுறைநறைநிறைபாண்டில்
கரம்புசில்லரிப்பாணியுங்குறடுநின்றிசைப்ப
அரம்பைமங்கையரமிழ்துகுத்தாலன்னபாடல்
வரம்பிலின்னிசைசெவிதொறுஞ்செவிதொறும்வழங்க. (௪௭)

கூடுபாணியினிசையொடுமுழவொடுங்கூடத்
தோடுசேரடிவிழிமனங்கையொடுதொடரும்
ஆடலேக்குறினருந்தவமுனிவர்க்குமமைந்த
வீடுமீட்குறுமேனகைமேனகைவிளங்க. (௪௮)

ஊடினார்முகத்துறுநறையொருமுகமுண்ணக்
கூடினார்முகக்களிநறையொருமுகங்குடிப்பப்
பாடினார்முகத்தாரமுதொருமுகம்பருக
ஆடினார்முகத்தணியமுதொருமுகமருந்த. (௪௯)

தேவரோடிருந்தரசியலொருமுகஞ்செலுத்த
மூவரோடுமோமந்திரமொருமுகமுயலப்

---

* இருவர்-சேடன் கருடன், † ஏகநாயகன்-ஒன்றானகடவுள்.

பாவகாரிதன்பாவகமொருமுகம்பயிலப்
பூவைசானகியுருவொடுமொருமுகம்பொருந்த. (௫0)

காந்தண்மெல்விரற்சனகிதன்கற்பெனுங்கடலை
நீந்தியேறுவதெங்ஙனனென்றொருமுகநினையச்
சாந்தளாவியகொங்கைநன்மகளிர்தற்சூழ்ந்தார்
ஏந்துமாடியிலொருமுகமியல்புடனிலங்க. (௫க)

பொதும்பர்வைகுதேன்புக்கருந்துதற்ககம்புலரும்
மதம்பெய்வண்டெனச்சனகிமேன்மனஞ்செலமறுகி
வெதும்புவாரகம்வெந்தழிவார்நகில்விழிநீர்
ததும்புவார்விழித்தாரைவேறொடொறுந்தாக்க. (௫௨)

மாறளாவிய † மகரந்தநறவுண்டுமகளிர்
வீறளாவியமுகுண்முலைமெழுகியசாந்தின்
சேறளாவியசிறுநறுஞ்சீகரத்தென்றல்
ஊறளாவியகடுவெனவுடலிடைநுழைய. (௫௩)

திங்கள்வாணுதன்மடந்தையர்சேயரிக்கிடந்த
அங்கயர்தடந்தாமரைக்கலரியோனுகி
வெங்கண்வானவர்தானவரென்றிவர்விரியாப்
பொங்குகைக்கடற்றுமரைக்கிந்துவேபோன்றும். (௫௪)

இருந்தவெண்டிசைக்கிழவனைமாருதியெதிர்ந்தான்
கருந்திறைகத்தைநோக்கியகலுழனிற்கனன்றான்
திருந்துதோளிடைவீக்கியபாசத்தைச்சிந்தி
உருந்துநஞ்சுபோல்பவன்வயிற்பாய்வெனென்றுடன்றான். (௫௫)

உறங்குகின்றபோதயிருண்டல்குற்றமென்றொழிந்தேன்
பிறங்குபொன்மணியாசனத்திருக்கவும்பெற்றேன்
திறங்களென்பலசிந்திப்பதிவன்றலைசிதறி
அறங்கொள்கொம்பினைமீட்டெனகல்வெனென்றமைந்தான். (௫௬)

தேவர்தானவர்முதலினர்சேவகன்றேவி
காவல்காண்டிவணிருந்தவாகட்புலன்கதுவப்
பாவகாரிதன்முடித்தலைபறித்திலெனென்றால்
ஏவதியானினிமேற்செயுமாள்வினையென்றான். (௫௭)

மாடிருந்தமற்றிவன்புணர்பங்கையர்மயங்கி
ஊடிரிந்திடமுடித்தலைதிசைதொறுமுருட்டி
ஆடல்கொண்டுநின்றார்க்கின்றதுநொடிதமமா
தேடிவந்ததோர்குரங்கெனும்வாசகஞ்சிறிதோ. (௫அ)

---

* பூவை-நாகணவாய்ப்புள் சொல்லுக்குவமை.
† மகரந்தநறவு—வாசனையுள்ளகள்.

நீண்டவாளெயிற்றரக்கனைக்கண்களினேரே
காண்டல்வேண்டியிவ்வுயிர்சுமந்தெதிர்சிலகழறி
மீண்டபோதுண்டுவசைப்பொருள் வென்றிலனெனினும்
மாண்டபோதினும் புகழன்றிமற்றுமொன்றுண்டோ. (ருக)

என்றுதோளிடையிறுகியபாசமிறநேகக்
குன்றினமேலேபூகோளரியேறெனக்குதியின்
சென்றுகூடுவலென்பதுசிந்தனைசெய்யா
நின்றுகாரியமன்றெனநீதியினினைந்தான். (கு0)

வேறு.

கொல்லலாம்வலத்தனுமல்லன்கொற்றமும்
வெல்லலாந்தரத்தனுமல்லன்மேலைநாள்
அல்லெலாந்திரண்டனநிறத்தனற்றலை
வெல்லலாமிராமனுக்கிறருக்கெல்வரோ. (குக)

என்னையும்வெலற்கரிதிவனுக்கீண்டிவன்
தன்னையும்வெலற்கரிதெனக்குந்தாக்கினால்
அன்னவேகாலங்கள்கழியுமாதலான்
துன்னருஞ்செருத்தொழிறொடங்கலாயதோ. (குஉ)

ஏழுயருலகங்கள்யாவுமின்புறப்
பாழிவன்புயங்களோடரக்கன்பஃறலைப்
பூழியிற்புரட்டலென்பூணிப்பாமெனை
ஊழியான்விளம்பியவுரையுமொன்றுண்டால். (குங)

இங்கொருதிங்களேயிருப்பல்யானெனை
* அங்கணுயகன்றனதானைகூறிய
மங்கையுமின்னுயிர்துறத்தல்வாய்மையால்
பொங்குவெஞ்செருவிளைப்பொழுதுபோக்கினால். (குச)

ஆதலானமர்த்தொழிலழகிற்றன்றருந்
தூதனுந்தன்மையேதூய்தென்றுணனினுன்
வேதநாயகன்றனித்துணைவன்வென்றிசால்
ஏதில்வாளரக்கன்றிருக்கையெய்தினான். (குரு)

தீட்டியவாளெனத்தெறுகட்டேவியர்
ஈட்டியகுழுவிடையிருந்தவேந்தற்குக்
காட்டினனநுமனைக்கடலினூழ்
தூட்டியயும்பலையுலையவோட்டினான். (குசு)

புவனமெத்தனையவையனைத்தும்போர்கடந்
தவனையுற்றறியுருவானவாண்டகை

* அங்கண்—அப்போது அழகியகண்.

சிவனெனச்செங்கணனென்னச்சேவகன்
இவனெனக்கூறிநின்றிருகைகூப்பினன். (கூ௭)

நோக்கிய * கட்பொறிநுவன்றவாய்களில்
தூக்கியபொறியொடுமெயிர்சுறுக்கொளத்
தாக்கியவுயிர்ப்பொடுந்தவழவெம்புகை
வீக்கினனவ்வுடல்சித்தபாம்பினே. (கூ௮)

அன்னவேோர்வெருளியனமராதியர்
துன்னியதுன்னலர்த்துணுக்கஞ்சுற்றுற
என்னிவண்வரவுநீயாரையென்றவன்
தன்மையைவினவினன்கூற்றின்றன்மையான். (கூகூ)

நேமியோகுலிசியோநெடுங்கணிச்சியோ
தாமரைக்கிழவனோதறுதட்பஃறலைப்
பூமிதாங்கொருவனேபொருதுமுற்றுற
நாமமுமுருவமுங்கரந்துநண்ணினய். (௭௦)

நின்றிசைத்துயிர்கவர்நீலக்காலனோ?
குன்றிசைத்தயிலுறவெறிந்தகொற்றனோ?
தென்றிசைக்கிழவனேதிசைநின்றாட்சியர்
என்றிசைக்கின்றவர்யாருள்யாவனீ. (௭க)

அந்தணர்வேள்வியினுக்கியானையின்
வந்துறவிடுத்ததோர்வயவெம்பூதமோ?
முந்தொருமலருளோனிலங்கைமுற்றுறச்
சிந்தெனத்திருத்தியதிகிரித்தெய்வமோ? (௭உ)

ஆரைநீயென்னையிங்கெய்துகாரணம்
ஆருனைவிடுத்தவரறியவானையால்
சோர்விலைசொல்லுதியென்னச்சொல்லினன்
வேரொடுமமரர்தம்புகழ்விழுங்கினன். (௭௩)

சொல்லியவனைவருமல்லெலன்சொன்னவப்
புல்லியவலியினேரேவல்பூண்டிலென்
அல்லியங்கமலமேயனையசெங்கணோர்
வில்லிதன்றூதன்யானிலங்கைமேயினேன். (௭௪)

அனையவன்யாரெனவறிதியாதியேல்
முனைவருமமாருமூவர்தேவரும்
எனையவரெனையவர்யாவர்யாவையும்
நினைவருமிருவினைமுடிக்கநின்றுளோன். (௭௫)

* கட்பொறி—கண்ணாகிய அறிவு.

வேறு.

ஈட்டியவலியுமேனுளியற்றியதவமும்யாணர்
கூட்டியபடையுந்தேவர்கொடுத்தநல்வரமுங்கோட்டும்
தீட்டியபிறவுமெய்திச்திருத்தியவாழ்வுமெல்லாம்
நீட்டியபகழியொன்றான்முதலொடுநீக்கநின்றான். (எசு)

தேவரும்பிறருமல்லன்றிசைக்களிறல்லன்றிக்கிற்
காவலரல்லனீசன்கைலையங்கிரியுமல்லன்
மூவருமல்லன்மற்றை * முனிவருமல்லனெல்லைப்
பூவலயத்தையாண்டபுரவலன்புதல்வன்போலாம். (எஎ)

போதமும்பொருந்துகேள்விப்புரையறுபயனும்பொய்தீர்
மாதவஞ்சார்ந்ததீராவரங்களுமற்றுமுற்றும்
யாதவனினைந்தானன்னபயத்தனவேதுவேண்டின்
வேதமுமறனுஞ்சொல்லுமெய்யறமூர்த்திவில்லோன். (எஅ)

காரணங்கேட்டியாயிற்கடையிலாமறையின்கண்ணும்
ஆரணங்காட்டமாட்டாவறிவினுக்கறிவுமன்னோன்
போரணங்கிடங்கொள்வப்பொதுநின்றமுதலேயென்ற
வாரணங்காக்கவந்தானமரரைக்காக்கவந்தான். (எகூ)

மூலமுநடுவுமீறுமில்லதோர்மும்மைத்தாய
காலமுங்கணக்குநீத்தகாரணங்கைவிலேந்திச்
சூலமுந்திகிரிசங்குங்கரகமுந்துறந்துதொல்லை
ஆலமுமலரும்வெள்ளிப்பொருப்பும்விட்டயோத்திவந்தான். (அ0)

அறந்தலைநிறுத்திவேதமருள்சுரந்தறைந்தநீதித்
திறந்தெரிந்துலகம்பூணச்செந்நெறிசெலுத்தித்தீயோர்
இறந்துகநூறித்தக்கோரிடர்துடைத்தேகவீண்டு
† பிறந்தனன்றன்பொற்பாதமேத்துவார்பிறப்பறுப்பான். (அக)

அன்னவற்கடிமைசெய்வேனாமமுமநுமனென்பேன்
நன்னுதறன்னைத்தேடிநாற்பெருந்திசையும்போந்த
மன்னரிற்றென்பால்வந்ததானைக்குமன்னன்வாலி
தன்மகனவன்றன்றூதன்வந்தனனென்றனியெனென்றான். (அஉ)

என்றலுமிலங்கைவேந்தனெயிற்றினமெழிலினாப்பண்
மின்றிரிந்தனையநக்குவாலிசேய்விடுத்ததூத
வன்றிதுவாயவாலிவலம்படுகோலத்தின்வாழ்க்கை
நன்றுகொலென்னவேலைநெடுநாயகன்றூதனக்கான். (அங)

அஞ்சலையரக்கவார்விட்டந்தாரடைந்தானன்றே
வெஞ்சினவாலிமீளானவனுமப்போயவிளிந்தன்றே

* முனிவர்-சனகாதியர். † ஈண்டுபிறந்தனனென்றால் இவ்வுலகத்தவதரித்தானதன்பொற்பாதமேத்துவார் பிறப்பறுக்க வல்லவன் என்க.

அஞ்சனமேனியான்றனடிகளையொன்றான்மாழ்கித்
துஞ்சினனெங்கள்வேந்தன்சூரியன்றோன்றலென்றான். (அச)

என்னுடையீட்டினாலவ்வாலியையெறுழ்வாயம்பால்
இன்னுயிருண்டதிப்போதியாண்டையானிராமனென்பான்
அன்னவன்றேவிதன்னையங்கதனுடனுற்ற
தன்மையையுரைசெய்கென்னச்சமீரணன்றனயன்சொல்வான். (அரு)

தேவியைநாடிவந்தசெங்கணாற்கெங்கள்கோமான்
ஆவியொன்றாகநட்டானருந்துயர்துடைத்தியென்ன
ஓவியர்க்கெழுதவொண்ணாவுருவத்தனுருமையோடும்
கோவியற்செல்வமுன்னேகொடுத்துவாலியையுங்கொன்றான். (அசு)

ஆயவன்றன்னோடாண்டோர் * திங்களோர்நான்கும்வைகி
மேயவெஞ்சேனைசூழவீற்றினிதிருந்தவீரன்
போயினிர்நாடுமென்னப்போந்தனன்புகுந்ததீதென்
றேயவன்றூதன்சொன்னானிராவணனிதனைச்சொன்னான். (அஎ)

உங்குலத்தலைவன்றன்னோடொப்பிலாவுயர்ச்சியோனை
வெங்கொலையம்பிற்கொன்றாற்காட்டொழின்மேற்கொண்டீரேல்
எங்குலப்புறனுஞ்சேர்த்திநம்மொடுமியைந்ததென்றால்
மங்குலிற்பொலிந்தஞாலமாதுமையுடைத்துமாதோ. (அஅ)

தம்முனைக்கொல்வித்தன்னாறகொன்றவற்கன்புசான்ற
உம்மினத்தலைவனேவயானெக்குணர்த்தலுற்ற
தெம்முனைத்தூதுவந்தாயிகல்புரிதன்மையென்னே?
நும்மினைக்கொல்லாநெஞ்சமஞ்சலைநுவறியென்றான். (அகூ)

வேறு.

துணர்த்ததாரவன்சொல்லியசொற்களைப்
புணர்த்துநோக்கப்பொதுவின்றநீதியை
உணர்த்தினாலதுறுமெனவுன்னருங்
குணத்தினானுமினையனகூறினான். (கூ0)

தூதுவந்ததுசூரியன்கான்முளை
ஏதுவொன்றியநீதியியைந்தன
சாதுவென்றுணர்கிற்றியேற்றக்கன
கோதிறந்தனநின்வயிற்கூறுவாம். (கூக)

வறிதுவீழ்த்தனைவாழ்க்கையைமன்னறம்
சிறிதுநோக்கலைதீமைதிருத்தினாய்
இறுதியுற்றுளதாயினுமின்னுமோர்
உறுதிகேட்டியுயிர்நெடிதோம்புவாய். (கூஉ)

* திங்களோராறு எனப் பாடமுமுண்டு.

கொன்மினென்றனன்கொல்லியர்சேர்தலும்
நின்மினென்றனன் * வீடணனீதியான். (ககo)

ஆண்டெழுந்துநின்றண்ணலரக்கனை
நீண்டகையன்வணங்கினனீதியான்
மூண்டகோபமுறையதென்றுமென
வேண்டுமெய்யுரையையவிளம்பினான். (ககக)

வேறு.

அந்தணனுலகமூன்றுமாதியினறத்தினாற்றல்
தந்தவனன்புக்கான்றதவநெறியுணர்ந்துதக்கோய்
இந்திரன்கருமமாற்றுமிறைவனீயியம்புதூது
வந்தனெனென்றபின்புங்கொல்லியோமறைகள்வல்லோய். (ககஉ)

பூதலப்பரப்பினண்டப்பொருட்டினுட்புறத்துட்பொய்தீர்
வேதமுற்றியங்குவைப்பின்வேறுவேறிடத்துவேந்தர்
மாதரைக்கொலைசெய்தார்களுலரெனவரினும்வந்த
தூதரைக்கொன்றுளார்கள்யாவரேதொல்லைநல்லோர். (ககங)

பகைப்புலனாகியுய்த்தார்பகர்ந்ததுபகர்ந்துபற்றார்
மிகைப்புலனடக்கிமெய்ம்மைவிளம்புதல்விரதம்பூண்ட
தகைப்புலக்கருமத்தோரைக்கோறலிற்றக்கார்யார்க்கும்
நகைப்புலன்பிறிதுண்டாமேநங்குலநவையுண்டாமே. (ககச)

முத்தலையெஃகன்மற்றைமூராந்தகன்முனிவன்முன்னா
அத்தலைநம்மைநோனாவமரர்க்குநகையிற்றாமால்
எத்தலையுலகங்காக்குமவேந்தநீவெற்றோரேவ
இத்தலையெய்தினானைக்கொல்லுதலிழுக்கமின்னும். (ககரு)

இளையவடன்னைக்கொல்லாதிருசெவிமூக்கொடீந்து
விளைவுரையென்றுவிட்டார்வீரராய்மெய்ம்மையோர்வார்
களைதியேலாவிநம்பாலிவன்வந்துகண்ணிற்கண்ட
உளவுரையாமற்செய்தியாதியென்றமையச்சொன்னான். (ககசு)

வேறு.

நல்லதுரைத்தாய்நம்பியிவனவைசெய்தானேயானாலும்
கொல்லல்பழுதேபோயிடைநீகூறிக்கொணர்திகடிதென்னாத்
தொல்லைவாலைமூலமறச்சுட்டுநகரைச்சூழ்போக்கி
எல்லைக்கடக்கவிடுமின்களென்றானின்றாரிரைத்தெழுந்தார், (ககஎ)

ஆயகாலத்தயன்படையோடிருப்பவாகாதனவிடுதல்
தூயபாசமெனப்பலவுங்கொணர்ந்துபிணிமின்றோளென்னா

* விபீஷணன் (சித்தியத்திற்கஞ்சி) பலவிதமாகப் பயப்படுபவன்,

மெய்தெய்வப்படைக்கலத்தைவிட்டானமரர்போர்வென்றான்
ஏயெனுமுன்னிடைபுக்குத்தொடைவன்கயிற்றாற்பிணித்தீர்த்தார். ()

நாட்டினகரினடுவுள்ளகயிறுநவிலுந்தகைமையவே
வீட்டினூசனெடும்பாசமற்றதேருய்விசிதுறந்த
மாட்டும்புரவியாயமெலாமருவிவாங்குந்தொடையழிந்த
பூட்டும்வல்லின்முட்கோடும்புரசையிழந்தபோர்யானை. (கககூ)

மண்ணிற்கண்டவானவரைவலியிற்கவர்ந்தவரம்பெற்ற
எண்ணற்கரியவேனையரையிகலிற்பறித்ததமக்கியைந்த
பெண்ணிற்கிசையுமங்கலத்திற்பிணித்தகயிறேயிடைபிழைத்த
கண்ணிற்கண்டவன்பாசமெல்லாமிட்டுக்கட்டினார். (கஉ0)

கடவுட்படையைக்கடந்தறத்தினுணைகடந்தேனகாமே
விடுவித்தளித்தார் * தெவ்வரேவென்றேனன்றோவிவர்வென்று
சுடுவிக்கின்றதிவ்வூரைச்சுடுகென்றுரைத்ததுணிவென்று
நடுவுற்றமையவுறநோக்கிமுற்றுமுவந்தானவையற்றான். (கஉக)

நொய்யபாசப்புறம்பிணிப்பநோன்மையிலன்போலுடனுணங்கி
வெய்யவரக்கர்புறத்தலைப்பவீதிபுணர்ந்தேவிரைவில்லா
அய்யன் † விஞ்சைதனையறிந்துமறியாதான்போலவிஞ்சையெனு
பொய்யைமெய்போனடிக்கின்றயோகிபோன்றானபோகின்றான். ()

வேந்தன்கோயில்வாயிலொடுவிரைவிற்கடந்துவெள்ளிடையின்
போந்துபுறநின்றிரைக்கின்றபொறைதீர்மறவர்புறஞ்சுற்ற
ஏந்துநெடுவால்கிழிசுற்றிமுற்றுந்தோய்த்தாரிழுதெண்ணெய்
காந்துகடுந்தீக்கொளுத்தினாரார்த்தாரண்டங்கடிகலங்க. (கஉங)

ஒக்கவொக்கவுடன்விசித்தவுலப்பிலாதவுரப்பாசம்
பக்கம்பக்கமிருகூறாய்நூறாயிரவர்பற்றினார்
புக்கபடைஞர்புடைகாப்போர் ‡ புணரிக்கணக்கர்புறஞ்செல்வோர்
திக்கினளவாலயனின்றுகாண்போர்க்கெல்லைதெரிவரிதால். (கஉச)

அந்தகருங்கடிகாவுமழிவித்தக்கன்முதலாயோர்
சிந்தநூறிச்சீதையொடும்பேசிமனிதர்திறஞ்செப்ப
வந்தகுரங்கிற்குற்றதனைவம்மின்காணவம்மென்று
தந்தந்தெருவும்வாயிறொறும்யாருமறியச்சாற்றினார். (கஉரு)

ஆர்த்தாரண்டத்தப்புறத்துமறிவிப்பார்போலங்கோடிங்
கீர்த்தார்முரசமெற்றினாரிடித்தார்தெழித்தாரெம்மருங்கும்
பார்த்தார்தாரோடிச்சானகிக்குப்பகர்ந்தாரவளுமுயிர்பதைத்தாள்
வேர்த்தாளுலந்தாள்விம்மினாள்விழுந்தாளழுதாள்வெய்துயிர்த்தாள்.

---

* தெவ்வர்—பகைவர். † விஞ்சை—ஞானம். ‡ புணரி—சமுத்திரம்—பத்துலக்ஷங்கோடி.

தாயேயனையகருணையான் * றுணையேயேதுந்தகைவில்லா
நாயேயனையவல்லரக்கர்நலியக்கண்டானல்காயோ
நீயேயுலகுக்கொருசான்றுநிற்கேதெரியுங்கற்பதனில்
தூயேனென்னிற்றெழுகின்றேனெரியேயவனைச்சுடலென்றாள். ()

## வேறு.

வெளுத்தமென்னகையவள்விளம்புமேல்வையின்
ஒளித்தவெங்கனலவனுள்ளமுட்கினன்
தளிர்த்தனமயிர்புறஞ்சிலிர்ப்பத்தண்மையால்
குளிர்த்தவக்குரிசில்வாலென்புகூரவே. (கஉஅ)

## வேறு.

மற்றினிப்பலவென்வேலைவடவனல்புவியளாய
† கற்றையங்கனவிமற்றைக் ‡ காயத்திமுனிவர்காக்கும்
முற்றுறு $ மும்மைச்செந்தீமுப்புரமுருங்கச்சுட்ட
கொற்றவனெற்றிக்கண்ணின்வன்னியுங்குளிர்ந்தவன்றே. (கஉகூ)

அண்டமுங்கடந்தானங்கையனலியுங்குளிர்ந்ததங்கிக்
குண்டமுங்குளிர்ந்தமேகத்துருமெலாங்குளிர்ந்தகொற்றச்
சண்டவெங்கதிரவாகித்தழங்கிருள்விழுங்குந்தாவில்
மண்டலங்குளிர்ந்தமீளாநரகமுங்குளிர்ந்தமாதோ. (கங0)

வெற்பினுவியன்றதன்னமேனியைவிழுங்கிவெந்தீ
நிற்பினுஞ்சுடாதுநின்றநீர்மையைநினைவினோக்கி
அற்பினாருதசிந்தையநுமனுஞ்சனகன்பாவை
கற்பினுவியன்றதென்பான்பெரியதோர்களிப்பனான். (கஙக)

அற்றையவ்விரவிற்றான்றனறிவினுன்முழுதுமுன்னப்
பெற்றிலெனெனினுமாண்டொன்றுள்ளதுபிழையுறாமே
மற்றுறுபொறிமுன்செல்லமறைந்துசெல்றிவுமானக்
கற்றிலாவரக்கர்தாமேகாட்டிவிற்றெரியக்கண்டான். (கஙஉ)

முழுவதுந்தெரியநோக்கிமுற்றுமூர்முடிவிற்சென்றான்
வழுவுறுகாலமீதென்றெண்ணினன்வலிதிற்பற்றித்
தழுவினனிரண்டுநூறாயிரம்புயத்தடக்கைத்தாம்போ
டெழுவெனாலவிண்மேலெழுந்தனன்விழுந்தவெல்லாம். (கஙங)

இற்றவாளரக்கர்நூறாயிரவருமிழந்ததோளார்
முற்றினருலந்தாரையன்மொய்ம்பினோடுலைமூழ்கச்

* அக்கினிக்குச்சகாயன்வாயு வாகலாலே வாயுபுத்திரனுக்கு நீ துணையாகவேண்டுமென்று துணையே யென்றாள், † கற்றையங்கனவி—பௌமமென்னும் சுவாலாக்கினி.
‡ காயத்தீ - ஔதாரியமென்னு மக்கினி, $ மும்மைச்செந்தீ - காருகபத்தியம் ஆகவனீயம் தெக்ஷணக்கினி.

சுற்றியகயிற்றினோடெங்கோன்றுவான ரவின்சுற்றம்
பற்றியகலுழனென்னப்பொலிந்தனன்விசும்பின்பாலான். (கநு.ச)

துன்னலர்புரத்தைமுற்றுஞ்சுடுதொழிற்றொல்லையோனும்
பன்னினபொருளுநாணப்பாதகரிருக்கைபற்ற
மன்னனைவாழ்த்திப்பின்னைவயங்கெரிமடுப்பனென்னுப்
பொன்னகர்மீதேதன்போர்வாலினைப்போகவிட்டான். (கநு.ரு)

தன்னிறைக்குறுகண்வெய்யோர்தாமியற்றலுங்கேட்டின்னே
அன்னவர்க்கிறுதியாகவணிநகரழிப்பலென்னுச்
செந்நிறச்சிகையவெம்போர்மழுப்பின்னர்ச்சேறலொக்கும்
அன்னிறத்தெண்ணறுதனனல்கெழுகொற்றநீள்வால். (கநு.சு)

அப்புறம்வேலைகாறுமலங்குபேரிலங்கைதன்னை
எப்புறத்தளவுந்தீயவொருகணததெரித்தகோட்பால்
துப்புறழ்மேனியண்ணன்மேருவிற்குழையத்தோளால்
முப்புரத்தெய்தகோலேயொத்ததம்மூரிப்போர்வால். (கநு.எ)

உகக்கடையுலகம்யாவுமுணங்குறவொருதன்னாட்டம்
சிகைக்கொழுங்கனலைவீசுஞ்செயன்முனம்பயில்வான்போல
மிகைத்தெழுதீயராயோர்விரிநகர்வீயப்போர்வால்
தகைத்தலினேன்மைசாலுந்தனிவீரன்சேணிலுய்த்தான். (கநு.அ)

வெள்ளியிற்பொன்னினுவிளங்குபொன்மணியின்விஞ்சை
தெள்ளியகடவுட்டச்சன்கைமுயன்றரிதிற்செய்த
தள்ளருமனைகடோறுமுறைமுறைதாவிச்சென்றுன்
ஒள்ளரியோடெங்குன்றத்தூழிவீழுருமொடப்பான். (கநு.கூ)

நீனிறநிருதரீண்டுநெய்பொழிவேள்விநீங்கிப்
பால்வருபசியனென்பான்மாருதிவாலைப்பற்றி
ஆலமுண்டவனன்றூட்டவுலகெலாமழிவினுண்ணும்
காலமேயென்னமன்னோகனலியுங்கடிதினுண்டான். (கசo)

கநு-வது-பிணிவீட்டுப்படலம்-முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-ககஅஎ.)

---

## கச-வது. இலங்கையெரியூட்டுப்படலம்.

கொடியைப்பற்றிவிதானங்கொளுத்தித்தான்
நெடியதூணைத்தழுவிநெடுஞ்சுவா
முடியச்சுற்றிமுழுதுமுருக்கிற்றல்
தடியமாமனைதோறுங்கடுங்கனல். (க)

வாசலிட்டவெரிமணிமாளிகை
மூசமுட்டிமுழுதுமுருக்கலால்
* ஊசலிட்டனவோடியுலைந்துளைப்
பூசலிட்டவிரியற்புரமெலாம். (உ)

மணியினுயவயங்கொளிமாளிகை
பிணியிற்செஞ்சுடர்க்கற்றைபெருக்கலால்
திணிகொடியுற்றதற்றிலதேர்கிலார்
அணிவளைக்கைநல்லாரலமந்துளார். (௩)

வானகத்தைநெடும்புகைமாய்த்தலால்
போனதிக்கறியாதபுலம்பினர்
தேனகத்தமலர்பலசிந்திய
கானகத்துமயிலன்னகாட்சியார். (௪)

கூய்க்கொழுங்கனல்குஞ்சியிற்கூந்தலில்
மீச்சொரிந்தனமாதரும்வீரரும்
ஏய்த்ததன்மையினுலெரியின்மையும்
தீக்கொளுந்தினவுந்தெரிகின்றிலர். (௫)

இல்லிற்றங்குவயங்கெரியாவையும்
சொல்லிற்றீர்ந்தனபோல்வனதொல்லுருப்
புல்லிக்கொண்டனமாயைப்புணர்ப்பறக்
கல்வித்தம்மியல்பெய்துங்கருத்தர்போல். (௬)

ஆயதங்கொர் † குறளுருவாயடித்
தாயளந்துலகங்கடரக்கொள்வான்
மீயெழுந்தகரியவன்மேனியில்
போயெழுந்துபரந்ததுவெம்புகை. (௭)

நீலநின்றநிறத்தனகீழ்நிலை
மாலின்வெஞ்சினயானையைமானுவ
மேல்விழுந்தெரிமுற்றும்விழுங்கலால்
தோலுரிந்தகழன்றனதோலெலாம். (௮)

மீதிமங்கலர்தாலன்னவெம்புகை
சோதிமங்கலத்தீயொடுசுற்றலால்
மேதிமங்குலின்வீழ்புனவீழ்மட
வோதிமங்களின்மாதரொதுங்கினர். (௯)

பொடித்தெழுந்துபெரும்பொறிபோவன
இடிக்குலங்களின்வீழ்தலுமெங்கணும்

*ஊசலிட்டன மௌமம-நெருப்புக்குப்பயந்து வெளியே போகிறதும் பின்னேமுதலியவைகளை நினைந்து திரும்பவருகிறது மாயினவென்க. † குறளுரு—வாமனவடிவு.

வெடித்தவேலைவெதும்பிடமீன்குலம்
துடித்துவெந்துபுலர்ந்துயிர்சோர்ந்தவால். (௧0)

பருகுதீமடுத்துள்ளுறப்பற்றலால்
அருகுநீடியவாடகத்தாரைகள்
உருகிவேலையினூடுபுக்குற்றன
திருகுபொன்னெடுந்தண்டிற்றிரண்டவால். (௧௧)

உரையின்முந்துலகுண்ணுமெரியதால்
வரைநிவந்தனபன்மணிமாளிகை
நிரையினீணெடுஞ்சோலையினிற்குமோ
தரையும்வெந்ததுபொன்னெனுந்தன்மையால். (௧௨)

கல்வினும்வலிதாம்புகைக்கற்றையால்
எல்லிபெற்றதிமையவர்நாடியல்
வல்லிகோலிநிவந்தனமாமணிச்
சில்லியோடுந்திரண்டனதேரெலாம். (௧௩)

பேயமன்றினினின்றுபிறங்கெரி
மாயருண்டநறவுமடுத்ததால்
தூயரென்றவர்வைகிடந்துன்னினால்
தீயரன்றியுந்தீமையுஞ்செய்வ * ரால். (௧௪)

தழுவிலங்கைதழங்கெரிதாய்ச்செலீஇ
வழுவில்வேலையுலையின்மறுகின
எழுமெழுஞ்சுடர்க்கற்றைசென்றெய்தலால்
குழுவுதண்புனன்மேகங்கொதித்தவே. (௧௫)

ஊனிலோடுமெரியொடுங்குவார்
கானிலோடுநெடும்புனல் † காணெனு
வானிலோடுமகளிர்மயங்கினர்
வேனிலோடருந்தேரிடைவீழ்ந்தனர். (௧௬)

தேனவாம்பொழிறீப்படச்சிந்திய
சோனைமாமலர்த்தும்பிதொடர்ந்தயல்
போனதிச்சுடர்புண்டரிகத்தடங்
கானமாமெனவீழ்ந்துகரிந்தவே. (௧௭)

நற்கடனிதுநம்முயிர்நாயகன்
மற்கடந்தெறமாண்டனன்வாழ்விலம்
இற்கடந்தினியேகலம்யாமெனு
விற்கடந்தறுதற்சிலர்வீடினர். (௧௮)

* ஆல்-இது ஆச்சரியம், † காண்-முன்னிலையசை.

பூக்கரிந்துமுறிபொறியாயடை
நாக்கரிந்துசினைநறுஞ்சாம்பராய்
மீக்கரிந்துநெடும்பணைவேருறக்
காக்கரிந்துகருங்கரியானவே. (கக)

கார்முழுக்கவெழுங்கனற்கற்றைபோய்
ஊர்முழுக்கவெதுப்பவுருகின
சோரொழுக்கமறுமையிற்றுன்றுபொன்
வேர்விடப்பதுபோன்றனவிண்ணெலாம். (உ0)

நெருக்கமீதிசையொக்கநெருப்பெழச்
செருக்குவெண்கதிர்த்திங்களைச்சென்றுற
உருக்குமெய்யினமுதமுகுத்தலால்
அரக்கருஞ்சிலராவிபெற்றாரரோ. (உக)

பருதிபற்றிநிமிர்ந்தெழுபைங்கனல்
கருகிமுற்றுமெரிந்தெழுகார்மழை
அருகுசுற்றுமிருந்தையதாயதின்
உருகுபொற்றிரளொத்தனவெண்கதிர். (உஉ)

தளைகொளுத்தியதாவெரிதாமணி
முளைகொளுத்திமுகத்திடைமொய்த்தபேர்
உளைகொளுத்தவுலந்துலைவுற்றன
வளைகுளப்பின்மணிநிறவாசியே. (உங)

எழுந்துபொற்றலத்தேரவினீள்புகைக்
கொழுந்துசுற்றவுயிர்ப்பிலர்கோளுமுற்
றழுந்துபட்டெளரொத்தயர்ந்தாரழல்
விழுந்துமுற்றினர்கூற்றைவிழுங்குவார். (உச)

* கோசிகத்துகிலுற்றகொழுங்கனல்
தூசினுத்தரிகத்தொடுசுற்றுறு
வாசமைக்குழல்பற்றமயங்கினார்
பாசிழைப்பரவைப்படரல்குலார். (உரு)

வேறு.

நிலவிளங்கியதுகிலினைநெருப்புணநிருதர்
இலவினுஞ்சிலமுத்துளவெனுநகையனையார்
புலவியின்கரைகண்டவராமுதுகப்புணரும்
கலவியின்கரைகண்டிலர்மண்டினர்கடன்மேல். (உசு)

பஞ்சரத்தொடுபசுநிறக்கிளிவெந்துபதைப்ப
அஞ்சனக்கணினருவிநீர்முலைமுன்றினலைப்பக்

* கோசிகத்துயில்-பட்டுச்சீலை.

குஞ்சரத்தனகொழுநரைத்தழுவுறுங்கொதிப்பால்
மஞ்சுறப்புகுமின்னெனப்புகையிடைமறைந்தார். (௨௭)

வரையினைப்புரைமாடங்களெரிபுகமகளிர்
புரையில்பொற்கலன்விசும்பிடைவில்லிடப்போவார்
கரையினுட்புகைப்படலையிற்கரிந்தனர்கலங்கித்
திரையினுட்பொலிசித்திரப்பாவையின்செயலார். (௨௮)

அகருமஞ்சனுஞ்சாந்தமுமுதலியவநேகம்
புகரினன்மரத்துறுவெறியுலகெலாம்போர்ப்பப்
பகருமூழியிற்காலவெங்கடுங்கனல்பருகும்
மகரவேலையின்வெந்தனநந்தனவனங்கள். (௨௯)

மினைப்பரந்தெழுதொழுஞ்சுடருலகெலாம்விழுங்க
கிளைப்பரும்பெருந்திசையுறவிங்கின்றநிலையால்
சினைப்பரந்தெரிசேர்ந்திலநின்றவுஞ்சிலவும்
கனற்பரந்தவுந்தெரிகிலகற்பகக்கானம். (௩௦)

மூளும்வெம்புகைவிழுங்கலிற்சுற்றுறமுழுநீர்
மாளும்வண்ணமாமலைநெடுந்தலைதொறுமயங்கிப்
பூளைவீயன்னபோவனபுணரியிற்புனன்மீன்
மீளயாவையுந்தெரிந்திலமுகிற்கணமிசைய. (௩௧)

மிக்கவெம்புகைவிழுங்கலின்வெள்ளியங்கிரியும்
ஒக்கவெற்பினோடன்னமுங்காக்கையினுருவ
பக்கவேலையின்படியதுபாற்கடன்முடிவில்
திக்கயங்களுங்கயங்களும்வேற்றுமைதெரியா. (௩௨)

கரிந்துசிந்திடக்கடுங்கனறொடர்ந்துடல்கதுவ
உரிந்தமெய்யினரோடினர்நீரிடையொளிப்பார்
விரிந்தகூந்தலுங்குஞ்சியுமிடைதலிற்றுழும்
எரிந்துவேகின்றவொத்தனவெறிதிரைப்பறவை. (௩௩)

மருங்கின்மேலொருமகவுகொண்டொரு * தனிமகவை
அருங்கையாற்பற்றிமற்றொருமகவுபின்னரற்ற
நெருங்கினரொடுநெறிகுழல்சுறுக்கொளநீக்கிச்
சுருங்கடற்றலைவீழ்ந்தனரரக்கியர்கதறி. (௩௪)

வில்லும்வேலும்வெங்குந்தமுமுதலியவிறகாய்
எல்லுடைச்சுடரெனப்புகரெஃகெலாமுருகித்
தொல்லைநன்னிலைதொடர்ந்துபேருணர்வன்னதொழிலால்
சல்லியுண்டையிற்றிரண்டனபடைக்கலச்சாலை. (௩௫)

---

* தனி-(கைப்பிள்ளையை) நோக்காது.

செய்தொடர்க்கழல்வல்லியும்புரசையுஞ்சிந்தி
நொய்தினிட்டவன்றறிபறித்துடலெரிநுழைய
மொய்தடச்செவிநிறத்திவான்முதுகினின்முறுக்கிக்
கய்யெடுத்தழைத்தோடினவோடைவெங்களிமா. (கசு)

வெருளும்வெம்புலகப்படலையின்மேற்செலவெருவி
இருளுமவெங்கடல்விழுந்தனவெழுந்திலபறவை
மருளின்மீன்கணமவிழுங்கிடவுலந்தனமனத்தோர்
அருளில்வஞ்சரைத்தஞ்சமென்றடைந்தவரனைய. (கஎ)

நீரைவற்றிடப்பருகிமாநெடுநிலந்தடவித்
தாருவைச்சுட்டுமலைகளைத்தழற்செய்துதனிமா
மேருவைப்பற்றியெரிகின்றகாலவெங்கனல்போல
ஊரைமுற்றுவித்திராவணன்மனைபுக்கதுயர்தீ. (கஅ)

வானமாதருமற்றுளமகளிருமறுகிப்
* போனபோனதிக்கறிகிலரனைவரும்போனார்
ஏனைநின்றவரெங்கணுமிரிந்தனரிலங்கைக்
கோனவானவர்பதிகொண்டநாளெனக்குலைந்தார். (கக)

நாவியுந் † நறுங்கலவையுங்கற்பகநக்கப்
பூவுமாரமுமகிலுமென்றினையனபுகையத்
தேவுதேன்மழைசெறிபெருங்குலமெனத்திசையிற்
பாவைமார்நறுங்குழல்களும்பரிமளங்கமழ்ந்த. (உ௦)

சூழும்வெஞ்சுடர்தொடர்ந்திடயாவருந்தொடரா
வாழிவெஞ்சினத்தாண்டொழிலிராவணன்மனையின்
ஊழிவெங்கனலுணடிடவுலகமென்றுயர்ந்த
ஏழும்வெந்தனவெரிந்தனநெடுநிலையேழும். (உக)

பொன்றிருத்தியதாயதாலிராவணன்புனைதீர்
குன்றமொத்துயர்தடநெடுமாநிலைக்கோயில்
நின்றதுற்றெரிபருகிடதெரிவுறவுருவித்
தென்றிசைகருமோர்மேருவுண்டாமெனத்தெரிந்த (உஉ)

அனையகாலியனரக்கனுமரிவையர்குழுவும்
புனைமணிப்பொலிபுட்பகவிமானத்துப்போனார்
வினையுமாத்திரையாவருநீங்கினர்வினையும்
வினையிலாமையில்வெந்ததவ்விலங்கன்மேலிலங்கை. (உந)

ஆழித்தேரவனரக்கரையழலெழநோக்கி
ஏழுக்கேழெனவடுக்கியவுலகங்களெரியும்

---

* போனபோன திக்கறிகிலர்—போனபோன ஒவ்வொருத்தியும் ஒவ்வொரு திசைகளிலேபோய்ப் புகைக்கம்மலாலே இன்னதிசை வந்தோமென்றறிந்திலர். † நறுங்குழல்—இயற்கைமணமுள்ள கூந்தல்.

ஊழிக்காலம்வந்துற்றதோபிறிதுவேறுண்டோ
பாழித்தீச்சுடவந்ததென்னகரெனப்பகர்ந்தான். (௬௪)

காங்கன்கூப்பினர்தங்கிளைதிருவொடுங்காணூர்
இரங்குகின்றவல்லரக்கரீதியம்பினரிறையோய்
தரங்கவேலையினெடியதன்வாலிட்டசழலால்
குரங்குசுட்டதீதென்றலுமிராவணன்கொதித்தான். (௬௫)

என்றுகொல்குரங்கன்னதிவ்வலியுளதிலங்கை
நின்றுவெந்துமாநீறெழுகின்றதுநெருப்புத்
தின்றுதேக்கிடுகின்றதுதேவர்கள்சிரிப்பார்
நன்றுநன்றுபோர்வலியெனவிராவணனக்கான். (௬௬)

வேறு.

உண்டநெருப்பைக்
கண்டனர்பற்றிக்
கொண்டணைகென்றான்
அண்டரைவென்றான். (௬௭)

உற்றகலாமுன்
கற்றகுரங்கைப்
பற்றுமினென்றான்
முற்றுமுனிந்தான். (௬௮)

சாரயனின்றார்
வீரர்விரைந்தார்
நேருதுமென்றார்
தேரினர்சென்றார். (௬௯)

எல்லையிகந்தார்
வில்லர்வெகுண்டார்
பல்லதிகாரத்
தொல்லர்தொடர்ந்தார். (௭௦)

வேறு.

நீர்கெழுவேலையிமிர்ந்தார்
தார்கெழுதானைசமைந்தார்
போர்கெழுமாலைபுனைந்தார்
ஓரொழுவீருயர்ந்தார். (௭௧)

விண்ணினைவேலைவிளிம்பார்
மண்ணினையோடிவளைந்தார்
அண்ணலைநாடியணைந்தார்
கண்ணினின்வேறயல்கண்டார். (௭௨)

பற்றுதிர்பற்றுதிரென்பார்
எற்றுதிரெற்றுதிரென்பார்
முற்றினர்முற்றுமுனிந்தார்
கற்றுணர்மாருதிகண்டான். (௫௩)

எல்கொடுவெஞ்சரெதிர்ந்தார்
கால்கொடுகைகொடுகார்போல்
வேல்கொடுகோலினர்வெந்தீ
வால்கொடுதானும்வளைந்தான். (௫௪)

பாதவமொன்றுபகுத்தான்
மாதிரவாலின்வளைத்தான்
மோதினன்மோதமுனிந்தார்
ஏதியுநாளுமிழந்தார். (௫௫)

தூறிடமாருதிநொந்தார்
ஊறிடவூனிடுபுண்ணீர்
சேறிடவூரடுசெந்தீ
ஆறிடவோடினதாறாய். (௫௬)

தோற்றினர்துஞ்சினரல்லார்
ஏற்றிகல்வீரரெதிர்ந்தார்
காற்றின்மகன்கலைகற்றான்
கூற்றினுமும்மடிகொன்றான். (௫௭)

மஞ்சுறழ்மேனியர்வன்றாள்
மொய்ம்பினவீரர்முடிந்தார்
ஐம்பதினாயிரரல்லார்
பைம்புனல்வேலைபடிந்தார். (௫௮)

தோய்ச்சனன்வாலதுதோயாக்
காய்ச்சினவேலைகலந்தார்
போய்ச்சிலர்பொன்றினர்போனார்
ஏச்செனமைந்தரெதிர்ந்தார். (௫௯)

சுற்றினதேரினர்தோலா
விற்றொழில்வீரர்விளைத்தார்
எற்றினன்மாருதியெற்ற
உற்றெழுவோருமுலந்தார். (௬௦)

* விட்டியர்விஞ்சையர்வெந்தீ
வட்டமுலைத்தருவைகும
புட்டிரளச்சோலைபுறத்தும
சுட்டிலமென்பதுமசொன்னார். (௬௧)

* விண்டுவிட்டு எனவலித்தல்.

வந்தவர்சொல்மகிழ்ந்தான்
வெந்திறல்வீரன்வியந்தான்
உய்ந்தனனென்னவுயர்ந்தான்
பைந்தொடிதாள்கள்பணிந்தான். (சுஉ)

பார்த்தனள்சானகிபாரா
வேர்த்தெரிமேனிகுளிர்ந்தாள்
வார்த்தையென்வந்தனையென்றுப்
போர்த்தொழின்மாருதிபோனான். (சுரு)

தெள்ளியமாருதிசென்றான்
கள்ளவரக்கர்கள்கண்டால்
எள்ளுவர்பற்றுவரென்று
ஒள்ளொளிரியோனுமொளித்தான். (சுச)

கசு-வது-இலங்கையெரியூட்டுப்படலம்-முற்றிற்று.

(ஆக திருவிருத்தம்-கஉருக.)

---

## கரு-வது. திருவடிதொழுதபடலம்.

நீங்குவென்விரைவினென்னுநினைவினன்மருங்குநின்ற
தாங்கொருகுமிக்குன்றையருக்கனினணைந்தவையன்
வீங்கினனுலகையெல்லாம்விழுங்கினனென்னவீரன்
பூங்கழலிருமுதுவாழ்த்திவிசும்பிடைக்கடிதுபோனான். (க)

* மைந்நாகமென்னநின்றகுன்றையுமரபினெய்திக்
† கைந்நாகமனையோனுற்றதுணர்த்தினன்கணத்தின்காலைப்
‡ பைந்நாகநிற்கும்வீரர்தன்னெடுவரவுபார்க்கும்
$ கொய்ந்நாகநுங்தேன்சிந்துங்குன்றிடைக்குதியுங்கொண்டான் (உ)

போய்வருங்கருமமுற்றிற்றென்பதோர்பொம்மல்பொங்க
வாய்வெரீஇநின்றவென்றிவானரவீரர்மன்னோ
பாய்வருநீளத்தாங்கணிருந்தனபறவைப்பார்ப்புத்
தாய்வரக்கண்டதன்னவுவகையிற்றளிர்த்தாரம்மா. (௩)

அழுதனர்சிலவர்முன்னின்றார்த்தனர்சிலவரண்மித்
தொழுதனர்சிலவராடித்துள்ளினர்சிலவரள்ளி
முழுதுறவிழுங்குவார்போன்மொய்த்தனர்சிலவர்சுற்றும்
தழுவினர்சிலவர்கொண்டுசுமந்தனர்சிலவர்தாங்கி. (ச)

---

* மைந்நாகம்—மைந்நாகமலை. † கைந்நாகம்-யானை, ‡ பைந்நாகம் - படமுள்ள பாம்பு. $: கொய்ந்நாகம்-(மலர்) பறிக்கும் புன்னைமரம்.

தேனொடுகிழங்குகாயுநறியனவரிதிற்றேடி
மேன்முறைவைத்தேமன்னனுகர்ந்தனைமெலிவுதீர்தி
மானவாண்முகமேநங்கட்குரைத்ததுமாற்றமென்று
தானுயர்சாகமெல்லாமுறைமுறைசிலவர்தந்தார். (ரு)

தாள்களின்மார்பிற்றோளிற்றலைகளிற்றடைக்கைதம்மின்
வாள்களின்வேலிற்கோலின்மழையினின்வகுத்தபுண்கள்
நாள்கண்மேலுலகிற்சென்றவெண்ணனநம்பிகண்ண
ஊழ்கொளநோக்கிநோக்கியுயிருகவுளந்துயிர்த்தார். (சு)

வாலிகாதலனைமுந்தைவணங்கினனெண்கின்வேந்தைக்
காலுறப்பணிந்துபின்னைக்கடன்முறைகடவோர்க்கெல்லாம்
மேலுறவியற்றிபாங்கணிருந்திவணிருந்தோர்க்கெல்லாம்
ஞாலநாயகன்றன்றேவிசொல்லினனன்மையென்றான். (எ)

என்றலுங்கரங்கள்கூப்பியெழுந்தனரிறைஞ்சித்தாழா
நின்றனருவகைபொங்கவிம்மலானிமிர்ந்தநெஞ்சர்
சென்றதுமுதலாவந்ததிறுதியாச்செப்பற்பாலை
வன்றிறலூரவோயென்னச்சொல்லினன்மருத்தின்மைந்தன். (அ)

ஆண்டகைதேவியுள்ளத்தருந்தவமமையச்சொல்லிப்
பூண்டபேரடையாளங்கைக்கொண்டதும்புகன்றுபோரில்
நீண்டவாளரக்கரோடிகழ்ந்ததுநெருப்புச்சிந்தி
மீண்டதும்விளம்பான்றன்றன்வென்றியையுரைப்பவெள்கி (கு)

பொருதமைபுண்ணேசொல்லவென்றமைபோந்ததன்மை
உரைசெயவூர்தீயிட்டதோங்கிரும்புகையேயோதக்
கருதலர்பெருமைதேவிமீண்டிலாச்செயலேகாட்டத்
தெரிதரவுணர்ந்தேம்பின்னரென்னினிசெய்துமென்றார். (க0)

யாவையுமினிவேறெண்ணல்வேண்டுவதிறையுயில்லை
சேவகன்றேவிதன்னைக்கண்டமைவிரைவிற்செப்பி
ஆவதவ்வண்ணலுள்ளத்தருந்துயராற்றலேயாம்
போவதுபுலமையென்னுப்பொருக்கெனவெழுந்துபோனார். (கக)

போயினர்களிப்பினோடும்புங்கவன்சிலையினின்றும்
ஏயினபகழியன்னவெழுந்தவிண்படர்ந்துதாவிக்
காய்கதிர்க்கடவுள்வானத்துச்சிசென்றிறுக்குங்காலத்
தாயனவீரரும்போய்மதுவனமதிலிறுத்தார். (கஉ)

ஏதுநாளிறந்தசாலவென்பதோர்வருத்தநெஞ்சத்
தாதலா * னுணர்வுதீர்ந்துவருந்தினமளியமெம்மைச்

---

* உணர்வுதீர்ந்தென்றல்-பொசிப்பில்லாமலென்க.

தீர்த்தளித்தவீரதந்தருளுணவுமென்னப்
போதுநாம்வாலிசேய்பாலென்றுடனெழுந்துபோனார். (கஙு)

அங்கதன்றன்னையண்மியனைவருமிருகைகூப்பிக்
கொங்குதங்கலங்கன்மார்பநின்னுடைக்குரக்குச்சேனை
வெங்கதமொழிந்துசாலவருந்தினவேடையோடி
இங்கிதற்களித்தல்வேண்டுமிருலுமிழ்பிரசமென்றார். (கச)

நன்றெனவவனுநேர்ந்தானாலையுநடுங்கவார்த்துச்
சென்றுறுபிரசந்தூங்குஞ்செழுவனமதனினூடே
ஒன்றின்முன்னென்றுபாயுமொடிக்குமென்பிரசமெல்லாம்
தின்றுதின்றுவகைகூருந்தேனுகாளியின்மொய்த்தே. (கரு)

ஒருவர்வாய்க்கொள்ளுந்தேனையொருவருண்டெளிதிற்போவார்
ஒருவர்கைக்கொள்ளுந்தேனைஒருவர்கொண்டோடிப்போவார்
ஒருவரோடொருவரொன்றத்தழுவுவர்விழுவரோடி
ஒருவர்மேலொருவரேறியோகையென்றுவகைகூர்வார். (கசு)

இன்னணங்கழுங்காலையெரிவிழித்தெரிந்துசீறி
அன்னெடுஞ்சோலைகாக்கும்வானராவவைநோக்கி
மன்னெடுங்கதிரோன்மைந்தனுணையைமறுத்துநீயிர்
என்னினைந்தென்செய்தீர்மன்னும்முயிர்க்கிறுதியென்ன. (கள)

முனியுமாலெம்மையெங்கோனென்றவர்மொழிந்துபோந்து
கனியுமாமதுவனத்தைக்கட்டழித்திட்டதின்று
நனிதருகவியின்றானைநண்ணலார்செய்கைநாண
இனியெம்மாற்செயலின்றென்னுத்ததிமுகற்கியம்பினாரே. (கஅ)

கேட்டவன்யாவரேயம்மதுவனங்கேடுசூழ்ந்தார்
காட்டிரென்றெழுந்தானன்னார்வாலிசேய்முதலகற்றோர்
ஈட்டம்வந்திறுத்ததாகவங்கதனேவறன்னால்
மாட்டினகவியின்றானைமதுவளருலவையீட்டம். (கக)

உரங்கிளர்மதுகையான்றனுணையாலுறுதிகொண்டே
குரங்கினந்தம்மையெல்லாம்விலக்கினங்கொடுமைகூறிக்
கரங்களாலெற்றநொந்தேங்காவலோயென்னவோடும்
தரங்கிளர்தாதைபட்டதறிந்திலன்றயன்போலும். (உ0)

எனவுரைத்தனவிற்பொங்கியெழுந்திரைத்திரண்டுகோடி
கனைகழற்கவியின்சேனைக்கல்லெனக்கலந்துபுல்லப்
புனைமதுச்சோலைபுக்கான்மதுநுகர்புனிதச்சேனை
அனகனைவாழ்த்தியோடியங்கதனடியின்வீழ்ந்த. (உக)

இந்திரன்வாலிக்கீந்தவின்சுவைமதுவின்கானம்
அந்தரத்தவர்க்குமேர்க்கற்கரியதென்றுணர்தன்னைச்.

சிந்தினைகதிரோன்மைந்தன்றிறலினையறிதியன்றே
மந்தரமனையதோளாயிற்றதுன்வாழ்க்கையின்றே. (உ0)

மதுவனந்தன்னையின்னேமாட்டுவித்தனைநீயென்னக்
கதுமெனவாலிசேய்மேலெறிந்தனன்கருங்கற்பாறை
அதுதனைப்புறங்கையாலேயகற்றியங்கதனுஞ்சீறித்
ததிமுகன்றன்னைப்பற்றிக்குத்தினன்றடக்கைதன்னால். (உக)

வாய்வழிகுருதிசோரமணிக்கையான்மலங்கமோதிப்
பேய்மொழிகதிரோன்மைந்தற்கென்றவன்றன்னைப்போக்கித்
தீயெழும்வெகுளிபொங்கமற்றவன்சேனைதன்னைக்
காய்கனல்பொழியுங்கையாற்குத்துதிர்கட்டியென்றான். (உஉ)

பிடித்தனர்கொடிகடம்மாற்பிணித்தனர்பின்னுமுன்னும்
இடித்தனரசனியஞ்சவெறழ்வலிக்கரங்களோச்சித்
துடித்தனருடலஞ்சோர்ந்தார்சொல்லும்போய்நீருமென்னப்
படித்தனன்வாலிமைந்தன்பயத்துடனவரும்போனார். (உ௩)

அலைபுனல்குடையுமாபோன்மதுக்குடைந்தாடித்தத்தம்
தலைவர்கட்கினியதேனிங்கனிகளும்பிறவுந்தந்தே
உலைவுறுவருத்தந்தீர்ந்திட்டுபவனத்திருந்தாரப்பால்
சிலைவலைத்தலவுந்தேரோன்றெறும்வெயிறணிவுபார்த்தே. (உ௪)

முத்தலையெடகினாற்குமுடிப்பருங்கருமமுற்றி
வித்தகன்றூதமீண்டதிறுதியாய்விளைந்ததன்மை.
அத்தலையறிந்தவெல்லாமறைந்தனமாழியான்மாட்
டித்தலைகிழ்ந்தவெல்லாமியம்புவானெடுத்துக்கொண்டாம். (உ௫)

## வேறு.

சேற்றிளமரைமலர்த்திருவைத்தேர்கெனக்
காற்றின்மாமகன்முதற்கவியின்சேனையை
நாற்றிசைமருங்கினுமேவிநாயகற்
றேற்றினனிருந்தனன்கவியின்செம்மலே. (உ௬)

கார்வரையிருந்தனன்கதிரின்காதலன்
சீரியசொற்களிற்றெருட்டச்செங்கணான்
ஆருயிராயிரமுடையனுமெனச்
சோர்தொறுஞ்சோர்தொறுமுயிர்த்துத்தோன்றினான். (உ௭)

தண்டலிசெகோந்திசைமூன்றுந்தாயினர்
கண்டிலர்மடக்கைதயையென்னுங்கட்டுரை
உண்டியிரகத்தெனவொறுக்கவும்முனன்
திண்டிறலநுமனைநினையுஞ்சிந்தையான். (௩0)

ஆரியனருந்துயர்க்கடலினாழ்பவன்
சீரியதன்றாநஞ்செய்கைதீர்வரும்
பூரியவெம்பழிபொடித்ததாமெனச்
சூரியன்சிறுவனைநோக்கிச்சொல்லினான். (௩௧)

குறித்தகாளிகத்தன்குன்றத்தென்றிசை
வெறிக்கருங்குழலியைநாடன்மேயினார்
மறித்திவண்வந்திலர்மாண்டுளார்கொலோ
பிறித்தவர்க்குற்றுளதென்னைபெற்றியோ. (௩௨)

மாண்டனளவளிவண்மாண்டவார்த்தையை
மீண்டவர்க்குரைத்தலின்விளிதனன்றெனாப்
பூண்டதோர்துயர்கொடுபொன்றினார்கொலோ
தேண்டினரின்னமுந்திரிகின்றார்கொலோ. (௩௩)

கண்டனராரக்கரைக்கறுவுகைமிக
மண்டமர்தொடங்கினார்வஞ்சர்மாயையால்
விண்டலமதனின்மேயினர்கொல்வேறிலாத்
தண்டவினெடுஞ்சிறைதளைபட்டார்கொலோ. (௩௪)

கூறினகாலவரிருக்கைகூடலம்
எறலஞ்சுதுமெனவின்பதுன்பங்கள்
ஆறினாருந்தவமயர்கின்றார்கொலோ
வேறவர்க்குற்றதென்விளம்புவாயென்றான். (௩௫)

என்றுரைத்திடருழந்திருக்கும்வேலையில்
வன்றிறற்றதிமுகன்வானரேசன்முன்
தன்றலைப்பொழிதருகுருதிதன்னொடும்
குன்றெனப்பணிந்தனனிருகைகூப்பியே. (௩௬)

எழுந்துநின்றையகேளின்றுநாளையோ
டழிந்ததுமதுவனமடையவென்றனும்
வழிந்திடுகுருதியின்வதனநோக்கியே
மொழிந்திடங்கியாதுமுடித்தளோரென. (௩௭)

நீலனுங்குமுதனுநெடியகுன்றமே
போலுயர்சாம்பனும்புனரிபோர்த்தென
மேலெழுசேனையும்விரைவின்வந்துறச்
சால்புடைமதுவனந்தனையழிப்பவே. (௩௮)

தகைத்தவச்சேனையைத்தன்னிகின்னையும்
இகழ்ந்துரைத்திவைந்தனன்வாலிசேயெமக்
குகந்தனபுகன்றவவ்வுரைபொறுமையே
புகைந்தொருபாறையின்புனர்ப்புநீக்கியே. (௩௯)

இமைத்தன்முன்வாலிசேயெழில்கொள்யாக்கையைச்
சமைத்தியென்றெறிதரப்புறங்கையாற்றகைத்
தமைத்தருகனலெனவழன்றெற்பற்றியே
குமைத்துயிர்பதைப்பநீகூறுபோயென்முன். (சய0)

எம்பலொடெழுந்துநின்றிரவிகான்முளை
பாம்பணையமலனைவணங்கிப்பைந்தொடி
மேம்படுகற்பினளென்னுமெய்ம்மையைத்
தாம்புகன்றிட்டதிச்சலமெனமுேதினன். (சயக)

பண்டருகிளவியாடன்னைப்பாங்குறக்
கண்டனரன்னதோர்களிபபினலவர்
வண்டுறைமதுவனமழித்துமாந்திய
தண்டநாயகவிளியவலந்தீர்கெனு. (சயஉ)

வந்தனர்தென்றிசைவானுெனப்
புந்திநொந்தென்னைகொல்புகலற்பாலரென்
றெந்தையுமிருந்தனனிரவிகான்முளை
நொந்தவத்ததிமுகன்றன்னைநோக்கியே. (சயந)

யாரவணிறுத்தவரியம்புவாயென
மாருதிவாலிசேய்மயிந்தன்சாமபவன்
சோர்வறுபதினெழுவோர்கடென்னினர்
* ஆர்கலிநாணவந்தார்க்குஞ்சேனையார். (சயச)

என்றவனுரைத்தபோதிரவிகாதலன்
வன்திறற்றதிமுகன்வதனநோக்கியே
ஒன்றுனக்குணர்த்துவதுளதுவாலிசேய்
புன்றொழிற்செய்கைசேர்புணர்ப்பனல்லனல். (சயரு)

கொற்றவன்பணிதலைக்கொண்டுதெண்டிரை
சுற்றியதிசையெலாந்துருவித்தோகையைப்
பற்றியபகைஞரைக்கடிந்துபாங்கர்வந்
துற்றனரவரையாமுரைப்பதென்னையே. (சயசு)

அன்றியும்வாலிசேயரசதாதலின்
பின்றுதலரிதரோபிணங்குஞ்சிந்தையாய்
ஒன்றுநீயுணரலையுறுதிவேண்டுமேல்
சென்றவன்றனைச்சரண்சேர்தியீண்டென. (சயஎ)

வணங்கியசென்னியன்மனறத்தவாயினன்
உணங்கியசிந்தையனெடுங்குமேனியன்

* ஆர்கலி—சமுத்திரம்.

ணங்களோடேகியக்கானநண்ணினன்
மணங்கிளர்தாரினன்மறித்தும்வந்தரோ. (சுஅ)

கண்டனன்வாலிசெய்கறுவுகைமிக
விண்டவனம்மெதிர்மீண்டுளானெனின்
உண்டிடுகுஞ்சுழுயிரென்னவுன்னினன்
தொண்டெனத்ததிமுகன்றொழுதுதோன்றினன். (சுக)

போழ்ந்தனயான்செய்தகுறைபொறுக்கென
வீழ்ந்தனனடிமிசைவீழவாலிசெய்
தாழ்ந்துகைபற்றிமெய்தழீஇக்கொண்டும்மையான்
சூழ்ந்ததும்பொறுக்கெனுமுதன்மைசொல்லினன். (ருo)

யாமுதற்குளித்தநாளிறத்தலெண்ணியே
ஏமுறத்துயர்துடைத்தளித்தவேற்றம்போல்
தாமரைக்கண்ணவன்றுயரந்தள்ளநீர்
போமெனத்தொழுதுமுன்னநுமன்போயினன். (ருக)

வன்றிறற்குரிசிலுமுனிவுமாறினன்
வென்றிகொள்கதிருந்தன்வெண்மையாறினன்
என்றுகொண்டியாவருமெழுந்துபோதலே
நன்றெனவேகினர்நவைக்கணீங்கினர். (ருஉ)

இப்புறத்திராமனுமிரவிசேயினை
ஒப்புறநோக்கிவந்துற்றதானையந்
தப்பறக்கண்டனமென்பரோதகா
தப்புறத்தென்பரோவறைதியாலென்றான். (ருங)

என்புழியநுமனுமிரவியென்பவன்
தென்புறத்துளனெனத்தெரிவதாயினன்
பொன்பொழிதடக்கையப்பொருவிலவீரனும்
அன்புறுசிந்தையனமையநோக்கினன். (ருச)

எய்தினனநுமனுமெய்தியேந்தறன்
மொய்கழறொழுகிலன்முனர்நீங்கிய
தையலைநோக்கியதலையன்கையினன்
வையகந்தழீஇநெடிதிறைஞ்சிவாழ்த்தினன். (ருரு)

திண்டிறலவன்செயறெரியநோக்கினன்
வண்டிறலோதியும்வலியமைற்றிவன்
கண்டதுமுண்டவள்கற்புநன்றெனக்
கொண்டனன்குறிப்பினலுணருங்கொள்கையான். (ருசு)

---

* அமைய என்பது குறிப்புத்தோன்றவெணக்கொள்க.

ஆங்கவன்செய்கையையவ வையாமெனு
ஒங்கியவுணர்விஞல்விளேந்ததுன்னிஞன்
* வீங்கினன்ருேள்புனல்கண்கள்விம்மினன்
நீங்கியதருந்துயர்காதனீண்டதே. (இஎ)

கண்டனென்கற்பினுக்கனியைக்கண்களால்
தெண்டிரையலேகடலிலங்கைத்தென்னகர்
அண்டர்நாயகவினித்துறத்திியையமும்
பண்டுள துயருமென்றநுமன்பன்னுவான். (இஅ)

வேறு.

உன்பெருந்தேவியென்னுமுரிமைக்குமுன்னேப்பெற்ற
மன்பெருமருகியென்னும்வாய்மைக்குமிதிலேமன்னன்
தன்பெருந்தனயையென்னுந்தகைமைக்குந்தலேமைசான்ருள்
என்பெருந்தெய்வமையாவின்னமுங்கேட்டியென்பான். (ருகு)

பொன்னலதில்லேப்பொன்னேயொப்பெனப்பொறையினின்ருள்
தன்னலதில்லேத்தன்னேயொப்பெனத்தனக்குவந்த
நின்னலதில்லேநின்னேயொப்பெனநினக்குநேர்ந்தாள்
என்னலதில்லேயென்னேயொப்பெனவெனக்குமீந்தாள். (சு௦)

† உன்குலமுன்னதாக்கியுயர்புகழ்க்கொருத்தியாய
தன்குலந்தன்னதாக்கித்தன்னேயித்தனிமைசெய்தான்
வன்குலங்கூற்றுக்கீந்தவ்வானவர்குலத்தைவாழ்வித்
தென்குலமெனக்குத்தந்தாளென்னினிச்செய்வதெம்மோய். (சுக)

விற்பெருந்தடந்தோள்வீரவீங்குநீரிலங்கைவெற்பின்
நற்பெருந்தவத்தளாயநங்கையைக்கண்டேனல்லேன்
இற்பிறப்பென்பதொன்றுமிரும்பொறையென்பதொன்றும்
கற்பெனும்பெயரதொன்றுங்களிநடம்புரியக்கண்டேன். (சுஉ)

‡ கண்ணினுமுளேநீதையல்கருத்திினுமுளேநீவாயின்
ஆண்ணினுமுளேநீகொங்கையிணேக்குவைதன்னிஞெவ்வா
திண்ணல்வெங்காமனெய்தவலரம்புதொளேத்தவாருப்
புண்ணினுமுளேநீநன்னேப்பிரிந்தமைபொருந்திற்ருமோ. (சுஙு)

வேலேயுளிலங்கையென்னும்விரிநகரொருசார்விண்டோய்
காலேயுமாலேதானுமில்லதோர்கனகக்கற்பச்
சோலேயங்கதனினும்பிபுல்லினுற்ருெடுத்ததூய
சாலேயினிருந்தாளேயதவஞ்செய்ததவமாந்தையல். (சுச)

---

* தோள்வீங்கினன்-புஜங்கள் பூரித்தார். †பிராட்டியினுடைய கலங்காரிலேயினுலே ராட்சதர்களுக்கழிவும் மற்றெல்லாருக்கு நன்மையுமே உண்டாயிற்றென்றகருத்து. ‡ இதன் கருத்து பிராட்டி உம்மைப் பிரியவில்லேயென்பதாம்.

...றங்கொண்டுபோனன்வானுயர்கற்பினுடன்
...ரியமேனிதீண்டவஞ்சுவானுலகம்பூத்த
கண்ணகன்கமலத்தண்ணல்கருத்திலாட்டொடுதல்கண்ணின்
எண்ணருங்கூறுய்மாய்தியென்றதோர்மொழியுண்டென்பான். (சுரு)

தீண்டிலனென்னும்வாய்மைதிசைமுகன்செய்தமுட்டை
கீண்டிலதநந்தனுச்சிகிழிந்திலதெழுந்துவேலை
மீண்டிலசுடர்கள்யாவும்விழுந்திலவேதஞ்செய்கை
மாண்டிலதென்னுந்தன்மைவாய்மையானுணர்திமன்னே. (சுசு)

சோகத்தாளாயநங்கைகற்பினுற்றொழுதற்கொத்த
மாகத்தார்தேவிமாரும்வான்சிறப்புற்றார்மற்றைப்
பாகத்தாளிப்போதீசன்மகுடத்தாள்பதுமத்தாளும்
ஆகத்தாளல்லண்மாயனுயிரமௌலிமேலாள். (சுஎ)

இலங்கையைமுழுதுநாடியிராவணனிருக்கையெய்திப்
பொலங்குழையவரையெல்லாம்பொதுவுறநோக்கிப்போந்தேன்
அலங்குதண்சோலைபுக்கேனவ்வழியணங்கனுளைக்
கலங்குதெண்டிரையிற்றூயகண்ணீர்க்கடலிற்கண்டேன். (சுஅ)

அரக்கியரளவற்றுருமலகையின்முழுவுமஞ்சச்
செருக்கினல்கண்டுசெய்யமெய்க்கனநீக்கச்சேர்த்த
இரக்கமென்றொன்றுதானேயேந்திழைவடிவமெய்தித்
தருக்கியசிறையுற்றன்னதகையளத்தமியளம்மா. (சுக)

மாண்பிறந்தமைந்தகற்பின்வானுதனின்பால்வைத்த
சேண்பிறந்தமைந்தகாதல்கண்களிற்றெறவிட்டித்தீராக்
காண்பிறந்தமையானீயேகண்ணகன்ஞாலந்தன்னுள்
ஆண்பிறந்தமைந்தசெல்வமுண்டனையாதியன்றே. (எ0)

அயிர்ப்பிலர்காண்பார்முன்னுமறிந்திலரெனினுமைய
வெயிற்புனையிலங்கைமூதூ * ரிந்திரன்யாக்கைக்கேற்ற
மயிற்புனையியலினுருமைந்தருநாளுமாங்கே
உயிர்ப்பொடுமுயிரிஞேடுமூசனின்றுவொரும். (எக)

தையலைவணங்கற்கொத்தவிடைபெறுந்தன்மைநோக்கி
ஐயயானிருந்தகாலையலங்கல்வேலிலங்கைவேந்தன்
எய்தினனிரந்துகூறியிரைஞ்சினனிருந்துநங்கை
வெய்துரைசொல்லச்சீறிக்கோறன்மேற்கொண்டுவிட்டான். (எஉ)

* இந்திராணியற்கைக்கென்றும் பாடம்.

ஆயிடையணங்கின்கற்புமையநின்னருளுஞ்செய்ய
தூயநல்லறனுமென்றிங்கிணையனதொடர்ந்துகாப்பப்
போயினனரக்கிமாரைச்சொல்லுமின்பொதுவினென்றுங்
கேயினனவரெலாமென்மந்திரத்துறங்கியிறனூர். (எகூ)

அன்னதோர்பொழுதினங்கையாருயிர்துறப்பதாக
உன்னினள்கொடியொன்றேந்திக்கொம்பொமுன்றிப்பச்சுற்றித்
தன்மணிக்கழுத்திற்சார்த்துமளவையிற்றுமுத்துநாயேன்
பொன்னடிவணங்கிநின்றுநின்பெயர்புகன்றபோழ்தில். (எச)

வஞ்சனையரக்கர்செய்கையிதுவெனமனக்கொண்டேயும்
அஞ்சனவண்ணத்தான்றன்பெயருரைத்தளியையென்பால்
துஞ்சுறுபொழுதிற்றந்தாய்துறக்கலென்றுவந்துசொன்னள்
மஞ்செனவனமென்கொங்கைவழிநின்றமழைக்கணீராள். (எரு)

அறிவினிற்றேறிச்சொன்னபேரடையாளம்யாவும்
செறிவுறநோக்கிநாயேன்சிந்தையிற்றிருக்கமின்மை
முறிவறவெண்ணிவண்ணமோதிரங்காட்டக்கண்டாள்
இறுதியினுயிர்தந்தீயுமருந்தொத்தனையதெந்தாய். (எசு)

ஒருகணத்திரண்டுகண்டேனெளிமணியாழியான்ற
திருமுலைத்தடத்துவைத்தாள்வைத்தலுஞ் * செல்வநின்பால்
விரகமென்பதனின்வந்தவெங்கொழுந்தீயினல்வெந்
துருகியதுடனேயாறிவலித்ததுகுளிர்ப்புளூற. (எஎ)

வாங்கியவாழிதன்னைவஞ்சளூர்வந்ததாமென்
றூங்குயர்மழைக்கணீராலாயிரங்கலசமாட்டி
ஏங்கினளிருந்ததல்லால்யம்பலவெய்ததமேனி
வீங்கினள்வியந்ததல்லாலிமைத்திலளுயிர்ப்புவிண்டாள். (எஅ)

அன்னவர்க்கடியனேனிற்பிரிந்தபினடுத்தவெல்லாம்
சொன்முறையறியச்சொல்லித்தோகைநீயிருந்தசூழல்
இன்னதென்றறிகிலாமேயித்தனைதாழ்த்ததென்றே
மன்னநின்வருத்தப்பாடுமுணர்த்தினெனுயிர்ப்புவந்தாள். (எகூ)

இங்குளதன்மையெல்லா † மியைபுளியியையக்கேட்டாள்
அங்குளதன்மையெல்லாமடியனுக்கறியச்சொன்னள்
திங்களொன்றிருப்பெனின்னேதிருவுளந்தீர்ந்தபின்னை
மங்குவெனுயிரோடென்றுன்குரைகழற்றலைக்கண்வைத்தாள். (அ0)

* செல்வ—ஓம்ஹப்பிரபு. † இயைபுளி—கிரமப்படியே.

ன்றுகிலின்வைத்தமா *மணிக்கரசைவாங்கிக்
லத்தினிதினீந்தாடாமரைக்கண்களார
விழுந்தகாண்டியென்றுகொடுத்தனன்வேதநன்னூல்
உய்த்துளகாலமெல்லாம்புகழொடுமொக்கநிற்பான். (அக)

பைப்பையப்பயந்[illegible]ாமம்பரிணமித்துயர்ந்துபொங்கி
மெய்யுறவெதும்பியுள்ளமெலிவுறுநிலையைவிட்டான்
ஐயனுக்கங்கிமுன்னராங்கையாற்பற்றுநங்கை
கையெனலாயிற்றன்றேகைபுக்கமணியின்காட்சி. (அஉ)

பொடித்தனவுரோமம்போந்துபொழிந்தனகண்ணீர்பொங்கித்
துடித்தனமார்புந்தோளுந்தோன்றினவியர்வின்றுள்ளி
மடித்ததுமணிவாயாவிவருவதுபோவதாகித்
தடித்ததுமேனியென்னேயாருளார்தன்மைதேர்வார். (அங)

ஆயிடைக்கவிகளோடுமங்கதன்முதலினாயோர்
மேயினர்வணங்கிப்புக்கார்வீரனைக்கவியினவேந்தைப்
போயினகருமமுற்றிப்புகுந்ததோர்பொம்மறன்னால்
சேயிருமதியமென்னத்திகழ்தருமுகத்தரானார். (அச)

ஆண்டையினருக்கன்மைந்தனையகேளிவைநம்பால்
காண்டலுக்கெளியளானாளென்றலுங்காலந்தாழ
ஈண்டினுமிருத்திபோலாமென்றனனென்றலோடும்
தூண்டிரண்டனையதோளான்பொருக்கெனவெழுந்துசொன்னான். (அரு)

எழுகவெம்படைகளென்றானேயெனுமளவினெங்கும்
முழுமுரசெற்றிக்கொற்றவள்ளுவர்முடுக்கமுந்திப்
பொழிதிரையன்னவேலைபுடைபரந்தென்னப்பொங்கி
வழுவலில்வெள்ளத்தானைதென்றிசைவளர்ந்ததன்றே. (அ௬)

நீலனைநெடிதுநோக்கிநேமியோன்பணிப்பானந்தம்
பால்வருஞ்சேனைதன்னைப்பகைஞர்வந்தடாவண்ணம்
சால்புறமுன்னர்ச்சென்றுசரிநெறிதுருவிப்போதி
மால்தறுகளிறுபோலும்படைஞர்பின்மறுங்குசூழ. (அஎ)

என்றுரைத்தெழுந்தவேலைமாருதியிருகைகூப்பிப்
புன்றொழிற்குரங்கெனாயென்றோளிடைப்புகுதியென்னாத்
தன்றலைப்படியிற்றாழ்ந்தானண்ணலுஞ்சரணம்வைத்தான்
வன்றிறல்வாலிசேயுமிளவலைவணங்கிச்சொன்னான். (அஅ)

---

* மணிக்கரசை—சூடாமணியை.

நீயினியென்றன்றோண்மேலேறுதிநிமலவென்ன
வாய்புதைத்திறைஞ்சிநின்றவாலிகாதலனேநோக்கி
நாயகற்கிளேயகோவுநன்றெனவவன்றன்றோண்மேல்
பாய்தலுந்தகைப்பிருளேப்படர்நெறிபடர்ந்ததன்றே. (அக)

கருடனில்விண்டியிற்றோன்றுமிருவருங்கடுப்பக்காலின்
அருடருகுமரன்றோண்மேலங்கதனலங்கற்றோண்மேல்
பொருடரும்வீரர்போகப்பொங்கொளிவிசும்பிற்றங்கும்
தெருடரும்புலவர்வாழ்த்திச்சிந்தினர்தெய்வப்பொற்பூ. (க0)

வய்யகமதனின்மாக்கண்மயங்குவர்வயவெஞ்சேனே
எய்திடினென்பதுன்னியிராகவனினிதினேவப்
பெய்கனிகிழங்குதேனென்றினேயனபெறுதற்கொத்த
செய்யமால்வரையேயாறுச்சென்றனதகைப்பில்சேனே. (கக)

வீரரும்விரைவிற்போனர்விலங்கன்மேலிலங்கைவெய்யோர்
சோர்விலாக்காவற்பாடும்பெருமையுமாறுங்கொற்றக்
கார்நிறத்தரக்கரென்போர்முதலியகணிப்பிலாத
வார்கழலநுமன்சொல்லவழிநெடிதெளிதிற்போனர். (கஉ)

அந்நெறிநெடிதுசெல்லவரிக்குலத்தரசனேடு
நன்னெறிக்குமரர்போகநயந்துடன்புணர்ந்தசேனே
இன்னெடும்பவழக்குன்றிற்பகலெலாமிறுத்தபின்னர்
பன்னிருபகலிற்சென்றுதென்றிசைப்பறவைகண்டார். (கஙு)

கடு-வது. திருவடிதொழுதபடலம்-முற்றிற்று.

(ஆக திருவிருத்தங்கள்-கஙசச.)

கம்பநாட்டாழ்வார் திருவடிகளேசரணம்.

ஆஞ்சநேயர் திருவடிகளேசரணம்.

சுந்தரகாண்டம் முற்றிற்று.

---

# உத்தரகாண்டம்.

## படலங்களின் அட்டவணை.





